# முகவுரை.

மஹாராஷ்ட்ர தேசத்தில், பூர்வகாலத்தில் அவதரித்து, பகவத்பக்தி செய்து முக்தியடைந்த பரமபாகவதர்கள் அநேகராயினும், அவர்களுள் மிகச் சிறந்து விளங்குகிற துக்காராம ஸ்வாமிகள் முதலான இரண்டு மூன்று பக்தர்களுடைய சரித்திரங்கள் மாத்திரம் தமிழில் வசனரூபமாகவும், ஐம்பத்திரண்டு பக்தர்களுடைய சரித்திரங்கள் மாத்திரம் தெலுங்கில் வசனரூபமாகவும் எழுதி அச்சிடப்பட்டு வழங்கி வருகின்றது யாவரு மறிந்தவிஷயமே. இப்படியிருக்க, சற்றேறக்குறைய இருபது வருடத்துக்குமுன், தஞ்சைமாநகரத்திலிருந்த புலவர் திலகரும், ஸ்ரீமானும், ஸ்ரீபகவத் பக்த சிரோமணியு மாகிய ராஜாராம கோவிந்தராவ் சூரியவம்சியவர்கள், மஹாராஷ்ட்ரதேசத்தில் ப்ராக்ருத பாஷையிலிருந்த மேற்படி பக்தருடைய சரித்திர புத்தகங்களெல்லாவற்றையும் வருவித்து ஆராய்ந்து, பெருமை வாய்ந்த புண்டரீகர் முதலாகத் துக்காராம ஸ்வாமிகளீறாக வுள்ள எண்பத் திரண்டு பக்தர்களுடைய சரித்திரங்களைச் செந்தமிழ்விருத்தப் பாக்கள் ஐயாயிரத்து நானூற்றி லடக்கிப் பாடியருளினர். அந்தக் கிரந்தம் "பக்தலீலாம்ருதம்" எனும் பெயர் பூண்டு விளங்குகின்றது. இது மேற்குறிக்கப்பட்ட தமிழ் தெலுங்கு வசனங்கள்போலாது, மஹாராஷ்டிரதேசத்திலிருந்து வருவிக்க மூல கிரந்தங்களைத் தழுவிச் செய்யப்பட்டதாகையாலும், அதிக சரித்திரங்களைக் கொண்டிருந்ததாலும், இதைத் தழுவி ஒரு வசனரூபமான கிரந்தம் எழுதி யச்சிட்டால் லோகோபகாரமாயிருக்குமென்று, சென்னையிலுள்ள பல பக்திமான்கள் தமது கருத்தை வெளியிட, அதுவே பற்றுக்கோடாகக் கொண்டு, மேற்படி பக்தலீலாம்ருதாதிகளை யநுசரித்து இந்த 'பக்தலீலாம்ருதவசநம்" எனும் கிரந்தம் எழுதி முடித்தேன். இது ஸ்ரீயப்பதியாய், அவாப்த ஸமஸ்தகாமனாய், அகிலஹேயப்ரத்யநீகனாய், ஸ்ரீவைகுண்ட நிகேதனாய், நித்ய முக்தாநுபாவ்யனாய், நிரதிசயாநந்த யுக்தனாய், நிரங்குச ஸ்வதந்த்ரனாயிருக்கிற ஸர்வேச்வரனைத் தமது பக்திவலையாற் பிணித்துத் தமக்குக் கையாளாய்ப் பரிமாறுவித்துக்கொண்ட பரமபாகவத சரித்ராலயமாதலாலும், இலக்கிய விலக்கணங்கள் குடியிருந்த ஊரிலு மிருந்தறியாத சிற்றறிவினேனா லெழுதப்பட்டதாதலாலும் இதிற் குற்றங்களுளவேனும் அவற்றைக் குணமாகக் கொண்டாதரிப்பது, முத்தமிழ்த் துறையின் முறைபோகிய வுத்தமரும், சாந்த சீலருமாகிய பெரியோர்களுக்குக் கடமையாகும்.

இங்ஙனம்:

காஞ்சீபுரம் - ராமஸ்வாமி நாயடு

# இப்புஸ்தகம்

மதராசு கவர்னமெண்டிலும்,

புதுச்சேரி கவர்னமெண்டிலும்

ரிஜிஸ்டர் செய்யப்பட்டது.

---

இப்புஸ்தகத்தின் விலை ரூபா 3—0—0

வி. பி. போஸ்டில் அனுப்ப ,, 3—6—0

வேண்டுவோர் சென்னை முத்தியாலுப்பேட்டைத் தம்புசெட்டிவீதிக் கிழண்டவாடை 273 - வது கதவிலக்கமுள்ள மதராசு ரிப்பன் அச்சுக்கூடத்திலும்,

ஷை சென்னைப் பெத்துநாயகன்பேட்டைக் குஜிலிக்கடுத்த தேவராய முதலிவீதி 234 - வது வீட்டின் மெத்தையில் ஜவுளிக்கடை சை. இரத்தின செட்டி கம்பெனியிலும் வாங்கிக்கொள்ளலாம்.

# ஸ்ரீ பக்தலீலாம்ருத பக்தர்களின்
## சரித்திர அட்டவணை

# ஸ்ரீ பக்தலீலாம்ருத பக்தர்களின்
# சரித்திர அட்டவணை.

ஓம்.

பரப்ரஹ்மணே நம:.

# ஸ்ரீபக்தலீலாம்ருதவசநம்.

## கடவுள் வாழ்த்து.

உலகம்பூத்தவொருமலருந்தியான்
திலகமேற்றநுதற்றிருச்சேர்ந்தெழில்
மலரமாலைவனந்திகழ்மார்பினான்
சலசமாமலர்த்தாளுளஞ்சார்த்துவாம். (௧)

பத்தர்காதைப்பரப்பினைப்பாடுதற்
கொத்தஞானமுதவியருளுமே
நித்தன்பூவைநிறத்திருமாலடி
கைத்தலங்கொளநுமன்கழல்களே. (௨)

மாணிபாய்நிலம்வாங்கினவன்றொண்டர்
கோணிலாக்கதைகூறக்குழலிருள்
நீணிலாவிணிலாநிறத்தொண்கலை
வாணிதன்னைவணங்கிவழுத்துவாம். (௩)

மருத்துமாமகனாரருள்வாய்ந்துசீர்
திருத்தவந்தருள்செய்யுஞ்சமர்த்தராம்
ஒருத்தருத்தமவாரியரொண்கழல்
கருத்துங்கண்ணுங்கொண்டிக்கதைகூறுவாம். (௪)

## வணக்கம்.

இல்லாதவர்க்குத்தமரில்லைமற்றேதுநாளும்
செல்லாதவர்க்கத்திறமபோல்வணக்கஞ்சிறக்கச்
சொல்லாதவர்க்கத்தொகைநூனகைதோற்றுவிக்குங்
கல்லாதவர்க்குக்கரையில்லையென்கற்றுளோர்க்கே. (௫)

நன்றாவலர்க்குநகைதோன்றுதற்கேநயந்திங்
கென்னாவியற்றப்படுநூலிதிலேதுகுற்றம்
சொன்னாலமையாதரிபேர்சொலுந்தூய்மையொன்று
தன்னாலலவோநமனுங்கடைசாரவஞ்சும். (௬)

## வருபொருளுரைத்தல்.

எனப்பண்டரியின்வரலாறுமங்கேய்ந்தகண்ணன்
தனக்கன்புறுதாசர்கடம்வரலாறும்ராமன்
மனத்தின்புறவாழ்த்துநர்தம்வரலாறுமற்றும்
துனத்தண்டமிழ்ச்செஞ்சொலினாங்கவிசொல்லலுற்றேன். (௭)

நூற்பயன்.

அரிநாமமகிமையைச்சற்றேனுந்தேரா
　　அஜாமீளனொருவிதஞ்சொல்லியதனாலே
விரிசோதிப்பரமபதமேவலானன்
　　விமலநாமந்தெரிந்துவிடாமலோதித்
தெரிசிதரன் றனைத்தம்வசஞ்செய்துற்ற
　　தேசிகர்தஞ்சரித்திரத்தைப்படிப்போர்கேட்போர்
பெரிதாகவவர்களிடத்தன்புசெய்வோர்
　　பெறும்பலனையினைத்தெனயாம்பேசலாமோ. (அ)

நூல்.

# முதலாவது - புண்டலீகர்சரித்திரம்.

உலகத்தாரெல்லாரும் புகழ்கின்ற பெருமைபெற்ற பதுமபுராணத்தில் உமாதேவியின் அறிவு பிரகாசிக்கும் பொருட்டுத் திரிபுராநாசகனாகிய சிவ பெருமான் சொல்லியருளினதை, கல்வியறிவொழுக்கங்களிற்சிறந்த ஸ்ரீதரர் விஸ்தரித்த இக்கதையைச் சிரத்தையோடு யாவரும் கேட்டு உஜ்ஜீவிக்கவேண்டும். கதையின் வரலாறு யாதெனின், மலைகளெல்லாவற்றுள்ளும் மேன்மை பெற்று விளங்குகின்ற ஸ்ரீ கைலாசபர்வதத்தில் நிலைபெற்று விளங்குகின்ற மாணிக்க மணிமண்டபத்தில் ஸ்ரீசிவபெருமான் திருவோலக்கமா யெழுந்தருளியிருந்த வோர்காலத்தில், உமாதேவியார் தமதுபிராணநாயகராகிய சிவபெருமானை நோக்கி, நிலவுலகத்தில் நிலைபெற்றுப் பிரகாசிக்கிற பண்டரிபுரத்தில், ஸ்ரீலக்ஷ்மீநாதனாகிய திருமால் நித்தியவாசம் செய்வது யாது காரணத்தால், அதை யெனக்கு விவரமாய்ச் சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அந்தக் கைலாசபதியாகிய சிவபெருமான், உமாதேவியாரை நோக்கி, அலங்கரிக்கப்பட்ட பொற்கொடிபோல்பவளே, திருத்துழாய்மாலையை யணிந்த திருமாலானவர், ஸ்ரீவைகுந்தத்தில் வீற்றிருந்த திருக்கோலமா யெழுந்தருளி யிருக்குங்காலத்தில், யாவரும் வியந்து துதிசெய்தற்குரிய கட்டழகியாகிய இந்திராணி, அவ்விடத்திற்கு வந்தாள். வந்தவள், ஸ்ரீமந் நாராயணனைக் கண்களிகூரக் கண்டு, சேவித்து மிகுதியாகிய அன்போடு பல வகையான தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டு நின்று, அந்தத்திருமாலின் பேரழகாகிய கடலில் மூழ்கி, அவனது திருவடிகளை வணங்கிநின்று ஒருவார்த்தையைச் சொல்லலுற்றாள். அதென்னென்றால், இறைவனாகிய உனது மடியின்மே லிருக்கவேண்டுமென்று அபேக்ஷித்தேன்; ஆதலால் அப்படியே எனக்குத் தயை செய்யவேண்டும்; பெருங் கருணைக்கடலே யென்று தோத்திரம்பண்ணிக்கொண்டு நின்றாள். இவ்வாறு தோத்திரம்பண்ணுகிற இந்திராணியின் பிரார்த்தனையின்படியே திருமாலானவர் அவளிடத்தில் மிகவும் இரக்கமடைந்தவராய்ச் சிறுநகை செய்து, அவ்விந்திராணியை நோக்கி, வாராய், சசி தே[illegible], நீ பூலோகத்திற்போய். [illegible]

தீரியானுல், நான் ஸ்ரீதுவாரகாபுரியில் க்ருஷ்ணுவதாரம் செய்து உன் விருப்பத்தின்படியே உன்னை என் மடியின்மேல் வைத்துக்கொள்வேன் என்றருளிச் செய்தார், அதைக்கேட்ட இந்திராணியானவள், இறைவன் திருவடியை வணங்கி, தேவரீர் ஆஜ்ஞாபித்தபடியே செய்கிறேனென்று சொல்லி விடைபெற்றுக்கொண்டுபோய், நிலவுலகத்தில் ஒரு பரிசுத்தமான இடத்தில் சேர்ந்து, மனம் முதலாகிய திரிகரணங்களையும் அசையாமலிருத்தி, அறுபதினுயிர வருஷம் அருந்தவம் செய்யவே, அந்தத் தவத்தின் பலன் அவளைக் கோகுலத்தில் ராதையாய்ப் பிறக்கச்செய்தது. அவ்வாறு அவள் பிறந்து இளமைப் பருவமா யிருக்குங் காலத்தில், ஸ்ரீ கண்ணபிரானேடு கூடி விளையாடிக் கொண்டிருக்கையில், ஸ்ரீகண்ணபிரான் அந்தக்கோகுலத்தைப் பிரிந்தபிறகு இந்த ராதையானவள் அவனது பிரிவினுல் மனமயங்கி உடலும் மெலிந்தாள். இப்படி அநேக காலங்கழிந்த பிறகு,ஸ்ரீகண்ணபிரானை நினைத்துப் பூர்வகாலத்தில் தனக்கு அவர் கொடுத்திருந்த வரமானது தன்னை விரைவாய் நடத்த நடந்துபோய்த் துவாரகாபுரியை அடைந்து வேற்றுருக்கொண்டு அந்த மேகவண்ணனுகிய ஸ்ரீகண்ணபிரான் எழுந்தருளியிருக்கும் கோயிலிற் பிரவேசித்து, அவனது பேரழகின் பொலிவை நோக்கி, சந்நிதிக்கெதிரேநின்று வணங்கின மாத்திரத்தில், அந்தமேகவண்ணனுகிய பகவான் அந்தக்ஷணமே அவளைத் தன்கிருபைநிறைந்ததிருக்கண்களால் குளிரக்கடாக்ஷித்துப் பூர்வரூபம் மாறியிருக்கிற ராதையைவாரி யெடுத்துத் தன் மடியின்மேல் நிலைபெற்றிருக்கும்படி வைத்துக்கொண்டான். அதைக்கண்ட ஸ்ரீருக்மிணீ பிராட்டியானவள், தன் மனம்பொறுக்காதவளாகி, ஸ்ரீகண்ணபிரான்மேல் மிகவும் கோபங் கொண்டு, நிஷ்டுர வார்த்தைகள்சொல்லி, இறைவன் எவ்வளவு தாழ்ந்துசமாதம் செய்தும் கோபம் நீங்காதவளா யிருக்க, இதைக் கண்ட ராதையானவள் ஸ்ரீகண்ணபிரானை விட்டு நீங்கி, லோகதண்டம் என்று சொல்லப்படுகிற திண்டீரவனத்தில், ஒப்பற்றவனுகிய ஸ்ரீகண்ணபிரானைத் தன் மனத்தி லிருத்தி, எல்லாத் துன்பங்களும் நீங்குதற்கேதுவாகிய அருந்தவம் செய்துகொண்டிருக்கையில், துவாரகா நகரத்திலிருந்த ஸ்ரீகண்ணபிரான் ஸ்ரீருக்மிணீ பிராட்டியைவிட்டு நீங்கி,ராதையின் பிரிவைப்பொறுக்காதவனுய்,அவள் எவ்விடத்தில் இருக்கிருளோவென்று, மரங்கள் நெருங்கின காடுகளிலெல்லாந் தேடிக் காணுமல், மறுபடியும், கோகுலத்தை யடைந்து, பசுவர்க்கத்தை யோட்டுகிற கோலேதண்டமாகவும், சங்கமே கமண்டலமாகவும் கையிற்கொண்டு, திருத்துழாய் மாலையைக் கழுத்திலணிந்து,குண்டலத்தைக் காதில் தரித்து ஒரு துறவிபோல வெளிப்பட்டு, எவ்விடத்திலும் தேடி, திண்டீரவனத்தை யடைந்து, அந்தவனத்தில் மலர்களின் அழகையும், இனிய கனி காய்களின் கூட்டம் தழைத்திருப்பதையும், மயில், குயில், கிளி, நாகணவாய்ப்புள் முதலான பறவைக்கூட்டங்களின் அழகையும், தடாகங்களின் அழகையும்; அந்தத் தடாகங்களிலுள்ள தாமரை மலர்களின்மீது அன்னங்கள் அழ

காயமர்ந்திருப்பதையும் நோக்கி, அதிசயித்து, இவ்விடத்தில் கமலாசனையா னவள் தங்கியிருந்தாலும் இருக்கலாம் என்று நினைத்து, என் பிராணநாயகி யே என்று பலகாற் கூவிக்கொண்டே சண்பகம், புன்னை, அசோகு முதலான மரங்கள் நெருங்கின சோலையையடைந்து, அவ்விடத்தில் தவஞ் செய்துகொ ண்டிருந்த ராதையைக்கண்டு, அவளுக்கெதிரில் வந்துநின்று, கமலாலயத்தி லுள்ள பொன்னே, என் அரியவுயிரே, என் மார்பைவிட்டு நீங்கி என்னை வெற்றுடம்பாக்கி, இவ்விடத்தில்வந்து வீற்றிருந்ததற்குக் காரணமென்னே? மநுஷ்ய சஞ்சாரமில்லாததாய், துஷ்ட மிருக சமூகங்களுக்கிடமாயிருக்கிற இந்தக் கானகத்தில் எவ்வாறு பிரவேசித்தாய்? இப்படிப்பட்ட வனத்தில் பிர வேசிப்பதற்கு உன் மனம் எவ்வாறு துணிந்தது ? நீ தனியே தைரியங்கொ ண்டெவ்வாறுவந்தனை? எனவினவ, அந்த ராதையானவள், ஸ்ரீகண்ணபிரானை நோக்கி, நீயாவன்? கோலைக் கைக்கொண்டு இவ்விடத்தில் யாது செய்ய வந் தாய்? என்று வினவக்கேட்ட ஸ்ரீகண்ணபிரான், அவளை நோக்கி, சேல்போ ன்ற கண்களையுடையாளே! நான் உன்னைத் தேடிக்கொண்டே இங்கு வந்தே னன்றி வேறொரு காரணமுமில்லை. நீ யாவன் என்று என்னை வினவினையல் லவா? நான் உனக்குக் கணவன் என்று சொல்லியருளினன். அதைக்கேட்ட ராதையானவள்,ஸ்ரீகண்ணபிரானை நோக்கி, என் கணவனுக்கு அநேகம் தேவி யர் உளர்; அவர்களை விட்டு என்னிடத்துக்கு வரமாட்டாரென்று துணி ந்து நான் தனியே வந்து அருமையாகிய தவஞ்செய்யாநின்றேன்; இவ்விடத் தில் நீ உன் உருமாறி என் கணவனென்று சொல்லிக்கொண்டு வந்தாய்; உன்னை மதித்துப் பார்க்குங்காலத்தில் வஞ்சகனென்று தோன்றுகின்றது; அதன்றியும் மாதர்தனியேயிருக்கிறவிடத்து அச்சமில்லாமல் நீவந்தது தகாத காரியமாகும்; ஆதலால் சற்றுயினும் இங்கு நில்லாமல்உன்னிடத்திற்குப்போ வென்று சொல்ல, மேகவண்ணனுன ஸ்ரீகண்ணபிரான் மதிமயங்கிக் கண்களை யிமைக்காமல் தன் கையிலிருந்த தடியைத் தன் முழங்கால்களினுல் இடுக்கி க்கொண்டு, இடுப்பில் கையைவைத்து, நாசிமுனையில் தன் பார்வையைவை த்து, விருப்பத்தோடு இக்காலத்தளவும் ராதையின்முன் நிற்கின்றுன். அப் படிநின்ற காலத்தின் அளவு எவ்வளவென்றுல், இருபத்தெட்டு துவாபரயுக மாகும் என்று சொல்லக்கேட்ட பார்வதீ தேவியானவள், தன் கணவனுகிய சிவபெருமானை நோக்கி, என் பிராணநாதா! அதன்பின் நடந்த செய்தியை அன்போடு எனக்குச்சொல்லியருளவேண்டுமென்று திருவடியை வணங்கிப் பிரார்த்திக்கச் சிவபெருமான் சொல்லத் தொடங்கினுர்.

ஓ என் பிராணநாயகீ ! அசுரனுகிய திண்டூரனென்றுசொல்லப்படுவோன் மிருந்த அந்தகாரத்தை நீக்கி உலகத்தை ரக்ஷிக்கின்ற சூரியன் தன்தேர்மீது ஏறிச் செல்லவொட்டாமல் அவனைக்கட்டி உலகத்திலுள்ளபிராணிகளெல் லாவற்றையும் பிடித்துக்கொண்டிருந்தான்.அப்படி யிருந்தகாலத்தில்,அரிய தபோதநர்களும் தேவர்களும்ஒன்றுக்கூடித் திருமாலின்திருவடியை யடை

ந்து, இந்தச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, அந்தக்கண்ணபிரான், திருவருள் சுரந்து, அவர்களை நோக்கி, நான் "மல்லிகார்ஜுநன்" என்னும் பேருடையவனாக அவதரித்து உங்களுக்குள்ள துன்பத்தை நீக்குவேன் என்று வரந்தந்தருளினன். இது பூர்வகாலத்தில் நடந்தசெய்தி. இப்படியிருக்கையில், ஸ்ரீசந்த்ரன் என்னும் பெயருள்ள ஓரரசன் என்னை நோக்கிப் பெருந்தவம் செய்தான்; நான் அவனுக்கு ப்ரத்யக்ஷமாகி, உன் விருப்பம் என்னவென்று கேட்டேன்; அவன் திருமாலை நிகர்த்த ஓர் புத்திரன்வேண்டுமென்ருன். அதற்கு நான், ஸ்ரீ கண்ணபிரானே உனக்குச் சிறந்த புதல்வனாய்ப் பிறப்பான் என்று விருப்பத்தோடு வரம் தந்தேன். அவ்வாறாகவே ஸ்ரீ லக்ஷ்மீபதியானவன் ஸ்ரீ சந்த்ரன் என்னும் அரசனிடத்தில் அவதரித்தான். மேலும் அப் புதல்வன் மல்லிகார்ஜுநன் என்னும் பெயரைப்பெற்ருன். அவன் ஒரு காலத்தில் வேட்டையாடும்பொருட்டுத் திண்டீரவனஞ் சேர்ந்தான். அந்த ராஜகுமாரனை அந்த அசுரவேந்தனாகிய திண்டீரன் பார்த்து,நான் இருக்கிறவனத்தில் நீ வேட்டையாடும்பொருட்டு வரலாமோ? நான் உண்ணும் உணவுக்குச் சமானமானவனேஎன்று கடுஞ்சொற் கூறிவந்து போர்செய்யத் தொடங்கி, ஆயிர வருஷத்தளவும் தமது சரீரத்திலுள்ள தசைகள் சிந்தும்படி போர்செய்தார்கள். அப்படி போர்செய்த காலத்தில், ஒருவருக்கொருவர் தோற்காமலிருக்க, மல்லிகார்ஜுநன் என்பவன், இவன் பலநாள் யுத்தம்செய்தும் தோற்காமலிருக்கிறுன், இவன் உயிர் நீங்குவது எப்படி? நாம்என்செய்வோமென்றுஆலோசித்து, லோகதண்டமென்று சொல்லப்படுகிற கதாயுதத்தைக் கைக்கொண்டு அந்த அசுரனை யடித்து, அவனுடைய உயிரைவாங்கி, அவனுடம்பைப் பூமியில்வீழ்த்தினன். அந்த அசுரன் உயிர்விடும்போது "ஸ்ரீஹரீ" யென்று உச்சரிக்க, அதனைக் குற்றமற்ற நெறியில் ஒழுகாநின்ற மல்லிகார்ஜுநன் தெரிந்து பிரகாசம் பொருந்திய தன் திருமேனியோடு அவனுக்கெதிரே தோன்றி அசுரவேந்தனே, உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்டுக்கொள்ளென்று நியமிக்க, அந்த அசுரன், உன் கையிலுள்ள கதாயுதத்தால் யான் உயிர்விட்டேன்; ஆகையாலே,நீ கைக்கொண்ட கதையின்பேர்கொண்டு இந்த வனமானது லோகதண்டமென்று விளங்கும்படி செய்து, அழகிய நகரொன்றையுமுண்டாக்கி, அந்த நகரத்தில் நீயும் நித்தியவாசம் செய்துகொண்டிருக்கவும், உன்னை அவ்விடத்தில் வந்து தரிசித்தோர்களுடைய சகலபாபங்களையும் போக்கி விளங்காநின்ற பானுதீர்த்தத்தை யடைந்து, இவ்வுலகத்தில் பெருமைபெற்று விளங்குகிறதாய், நானிறந்த இடத்தில் என்பேரால் ஒருதீர்த்தமுண்டாக்கி,அதனிடத்தில் உன் கதாயுதத்தை நிறுத்தவும்வேண்டும்; அந்தத் தீர்த்தத்தில் முழுகிவந்து இந்தக் கதாயுதத்தை ஆலிங்கநம் செய்வோர்களுடைய சகல பாபங்களும் நிவர்த்தியாகக் கிருபைசெய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, திருமாலானவர் அந்த வரத்தை அன்போடு கொடுத்து, தனது வைகுண்ட லோகத்தை அந்த

ன்று நினைத்து மனத்தில் அச்சங்கொண்டனர். அப்படியிருக்க, வந்த மூவரும் அந்த ஆசிரமத்திலுள்ள குப்பைகளைச் சீத்து நீக்கி, தரையை மெழுகி, கோலமிட்டு, அலங்கரித்து, ஒரு க்ஷணகாலத்தில் தாம் அடைந்துவந்த கோர ரூபம் நீங்கி, சௌந்தரிய வதிகளாயும் ஒளியுருக்கொண்டும் ஆசிரமத்தினின்றும் வெளியே வரக்கண்ட புண்டலீகர், பயந்து, ஆச்சரிய மடைந்து, அம் மாதர்களிடத்து வந்து, மலிநரூபமாய் ஆசிரமத்தில் நுழைந்த நீங்கள் ஒளியுருவாய்ப் புறப்பட்டீர்கள்; இப்படிப்பட்ட இருள் மிகுந்த இராக்காலத்தில் இங்குவந்த நீங்கள் யாவர்? சொல்லுங்கள் என்று கேட்க, அவர்களுள் கங்கையானவள் மறுமொழி சொல்லலுற்றாள். எக்காலத்திலும் தொலைக்கக் கூடாத பாவத்தைச் செய்த பதிதனாகிய துராத்மாவே, நீ, குற்றமற்ற எங்கள் முன்னே வரவுந் தகுமோ? இவ்விடம் விட்டு விலகிப்போடாவென்று கோபித்துக் கொண்டாள். கங்கையானவள் இப்படி கோபித்துக்கொண்டதைப் பார்த்த புண்டலீகர், அந்தக் கங்காதேவியின் பாதத்தைக் கிட்டி, தமது இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு, என் தாயே, என் பாவங்களை நீயே நீக்கியருள வேண்டும் என்று பிரார்த்திக்க, அவரைநோக்கி, கங்கையானவள் சொல்லுவாள்:—அடா பாவீ, என் காலைவிட்டு எழுந்திரு, நீ இப்பிறப்பிலே மிகவும் தீவினைகளையே செய்திருக்கிறாய், ஆனாலும் முற்பிறவிகளில் நீ செய்த நல்வினைப் பயனே உன்னை இந்தக் குக்குடமுனிவரிடத்துக்குக் கொண்டு வந்து விட்டது; அவரைக் கண்ட புண்ணியத்தால் எங்களையும் கண்டாய், ஆகையால் இனி நீ எந்தப்பாவமும் தொடரப் பெறாதவனாய்ப் பரிசுத்தனாகக் கடவை, நான் கங்கை, இவள் காளிந்தி, அவள் சரசுவதி. எங்களை விரும்பிப் பரிசித்தும் எம்மிடத்தில் மூழ்கியும் மூவுலகத்தாரும் பிறவி நீங்கிப் பேரின்ப வாழ்வைப் பெறுகின்றார்கள்; அப்படி வந்து மூழ்குவோருடைய பாவங்களையெல்லாம் நாங்கள் ஏற்று, அதனால் மலிநரூபங்கொண்டு, அந்த ரூபத்தை, இந்தப் பரிசுத்தாத் மாவாகிய குக்குட முனிவருக்கு ஊழியஞ்செய்து மாற்றி, நல்ல புதுமையான ரூபங்கொண்டு போகிறோம். இப்படியே தினந்தோறும் செய்து வருகிறோம்; எதிர்ப்பட்ட நம்முடைய பாவங்களை ஒரு நிமிஷகாலத்தில் போக்கத்தகுந்த சிறப்பையுடைய இந்த முனிவருடைய பெருமையைச் சொல்ல வல்லவர் யாருளர் என்று சொல்லுதலும், புண்டலீகர் எழுந்து நின்று, கங்கை முதலானவர்களை நோக்கி, உங்களுடைய பாவங்கள் யாவையும் நசிக்கச் செய்கிற புண்ணியத்தை இவர் எப்படி செய்தார் என்று வினவ, கங்கையானவள் புண்டலீகரை நோக்கி, இவர், தமது தந்தை தாயரை வழிபடுகிற புண்ணியமே யன்றி வேறில்லை. கோடி யாகங்களைச் செய்த பலனும், பூவலஞ் செய்தும் புண்ணிய நதிகளில் மூழ்கியும் பெறுகின்ற பலனும், ஒப்பற்ற காசி க்ஷேத்ரத்தை இரண்டுலக்ஷம் தரம் வலம் வந்து பெறும் பலனும், தாயை நமஸ்கரித்தலாகிய ஒன்றினாலே சித்திக்கும். தந்தையை ஒருதரம் வணங்கினால், மேன்மையாகிய ஞான முண்டாகும். இந்தத்

தாய் தந்தையரது வழிபாட்டினாலே ஸ்ரீமந் நாராயணனும் ப்ரத்யக்ஷமாவார் என்று பெரியோர் சொல்லுவர். இந்தக் கருத்தை இந்த முனிவர் தமது மனத்திற்கொண்டு, தந்தை தாயரையன்றி வேறு தெய்வ மில்லையென்று துணிந்து, இரவும் பகலும் அவர்கள் சேவையைச் செய்கிறார். நாள்தோறும் தன் தாய் தந்தையரை நிந்திப்பவன் தீயொழுக்கத்திற் சேரும் புலையனாவான்; கற்ப முடிவிலும் மீள வொண்ணாத கோர நரகத்தில் அழுந்தி வருந்துவான்; எத்தனை ஜந்மங்கள் எடுத்தாலும் பெரிய வியாதிகளால் பீடிக்கப்படுவான். அவனைக் கண்டவர்களும் மிக்க பாவிகளாவார்கள் என்று சொன்னமாத்திரத்தில், புண்டலீகர் பயந்து, ஆ ஐயோ என்றிரங்கி, மிகவும் துன்பமடைந்து, எல்லாப் பாவங்களையும் ஒழித்து ஈடேறத் தகுந்த இந்த நர ஜந்மமாய்த் தோன்றியும் இதை வீணாக்கிப் புண்ணியத்தைக் கைக்கொள்ளாமல் பாவத்தைக் கைக்கொண்டேன்; இதற்கு நான் என்ன வுபாயம் செய்வேன் என்றேங்கி யிருந்தார். மேலும், தாய் தந்தையருடைய பணிவிடை செய்வதையும் நீங்கி, அவர்களை மனம் வருந்தவும் செய்தே னல்லவா? இந்தப் பெரும் பாவத்தை எப்படி நீக்கிக்கொள்வேன் என்று பலவாறாகப் புலம்பிக்கொண்டு, அந்த மாதர்களுடைய பாதங்களில் விழுந்து அழுதார். இப்படி இவர் அழுவதைக் கங்கையானவள் நோக்கி, மனமிரங்கிப் பாவீ! இனியாகிலும் மனந் தெளிந்து, உன் தந்தையும் தாயுமே பெருந் தெய்வங்களென்று நம்பி, அவர்களுக்கு ஊழியம் செய்வாயானால், உன்னைச் சேர்ந்த பழிபாவங்களும் கழியும்; மூவுலகத்திலும் உள்ளவர் வந்து நிறைந்து சூழ்ந்திருப்பார்; விளங்குகின்ற பெருங் கீர்த்தியும் உண்டாகும்; சக்ரபாணியாகிய திருமாலின் இனிய அருளும் உன்னிடத் துண்டாகும் என்று தாய் தந்தையரை வழிபடுதலால் உண்டாகிற பயனை விஸ்தரித்துச் சொல்லிக் காளிந்தி, வாணி என்னும் இருவரோடும் கூடிச் சென்றாள். பின்பு, புண்டலீகர், இந்தக் கங்கை சொன்ன புத்தி மிகவும் நன்றேயாமென்று அன்புடன் போய், குக்குடர் பாதத்தைச் சேவித்து, பிறகு தமது தாய் தந்தையரைத் தேடினார். தேடிக் கண்டு, அவர்களைக் குதிரைமே லேற்றிக்கொண்டு காசிக்குப்போய்க் கயை பிரயாகைமுதலான புண்ணியதீர்த்தங்களில் மூழ்குவித்து, அவர்கள் செய்யுங் கர்மங்களெல்லாவற்றையும் செய்வித்து, தமது மனைவியும் தாமுமாகச் சிறிதும் சோர்வில்லாமல் அவர்களுடைய பணிவிடைகளைச் செய்துகொண்டு தம் ஊர்க்குவந்து, அந்தத் தாய் தந்தையரைத் தமது வீட்டிலிருத்திக்கொண்டு, நாள் தோறும் அவர்களுக்கு எந்தச் சமயத்தில் எந்தப் பொருள் வேண்டுமோ, அந்தச் சமயத்தில் அந்தப் பொருளைத் தருவித்துக்கொடுத்து, பரிசுத்தராகிய குக்குடர்போலப் பணிவிடை செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்க,

பூர்வயுகத்தில், விருத்திரன் என்பவன் தேவராஜனாகிய இந்திரனைப் பகைத்து அவனைக்கொல்ல நினைத்து, பாதாளலோகத்தை யடைந்து, ஓரிட

த்திலிருந்துகொண்டு அருமையாகிய தவத்தைச் செய்தான்; அந்தச் செய்தியை இந்திரன் கேட்டறிந்து அவ்விருத்திரன் இருக்குமிடத்திற்போய் அவன் தலையைத் தன் வச்சிராயுதத்தால் சேதித்து வீழ்த்தினான். அப்பொழுது அந்த விருத்திரன் இந்திரனை நோக்கி, நான் தவஞ் செய்யுங் காலத்தில் என் தலையை அறுத்தபாவத்தால், நீ செங்கல்லாய்ப் பூமியில் விழக்கடவை என்றான். அவன் தந்த சாபத்தினால் இந்திரன் செங்கல்லாகி விழுமுன்னே, லக்ஷ்மீநாதனாகிய திருமால் திருவுள்ளம் மகிழும்படி பற்பல தோத்திரம் செய்ய, ஸ்ரீமந் நாராயணன் அவனெதிரே யெழுந்தருளி, வாராய் தேவராஜனே, நான் புண்டரீகாசிரமத்தில் வந்து, செங்கல்லுருவாய்க் கிடக்கிற உன்மேல் அடிவைத்து, உன்னைப் பூர்வ ரூபமாகச் செய்து, என் பாதத்தின்கீழே கிடக்கும்படி செய்கிறேன், நீ அஞ்சவேண்டாம் என்றனன். அப்படியே அன்று முதல் இந்திரன் செங்கல்லுருவாய்த் திண்டீரவனத்தில் கிடக்கிறான். கிடத்தலால் அந்த வனம் திண்டீர நகராக, அதில் புண்டரீகர்க்கும் ஒரு திருமாளிகை அமைந்தது. அதில் புண்டரீகர் இனிதாக வாழுங் காலத்தில், அவரிடத்திற்கு எழுந்தருளவேண்டுமென்று எண்ணி, தன் தேவியைத் திருத்துதற்பொருட்டு அவளுக்கெதிரே நிற்கிற ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளும் விதத்தைச் சொல்லுவோம். திருவடியில் நூபுரம் தழைத்தொலிக்கவும், சிற்றிடையில் கிண்கிணிகள் கலகலவென்று சத்திக்கவும, இரண்டு தோள்களிலும் கங்கணங்கள் விளங்கவும், இரண்டு கைகளிலும சங்க சக்ரங்கள் மிகவும் ஜொலிக்கவும், திருமார்பில் நவரத்நஹாரம் பிரகாசிக்கவும், திருச்செவியில் குண்டலங்கள் மின்னவும், நெற்றியில் நெறிகுழல் அசைந்து தோன்றவும், ரத்நச் சுட்டியும் பட்டமும் விளங்கவும், சிங்கம், இடபம், யானைக் கன்று, இம்மூன்றின் நடைபோல நடந்து, நீலரத்நகிரி வருவதுபோல வழியில் பூமியெல்லாம் ஸ்ரீ பாதத்திலுள்ள சங்க சக்ர ரேகைகள் அழுந்தித் தோன்றவும் எழுந்தருளி, புண்டரீகர், தமது தந்தை தாயரை வழிபடுஞ் சமயத்தில், அவர் பார்க்கும்படி அவர்க்குப் பின்புறத்தே வந்து நின்றார். அப்படி வந்து நின்றபோது ஸ்ரீ கண்ணபிரானது பசுமையாகிய ஒளியை, தந்தையின் பாதங்களைத் தீண்டி நமஸ்கரித்துக் கொண்டிருந்த புண்டரீகர் கண்டு, இந்த ஒளியாதென்று முகத்தைத் திருப்பி, ஸ்ரீ கண்ணபிரான் அருகில் நிற்பதைப் பார்த்து, கங்காதேவி நமக்குக் கொடுத்த வரம் இன்றுதானே வாய்த்ததென்று மிகவும் மனமகிழ்ந்து, தலைவணங்கி, தமக்கு அருகில் கிடக்கிற செங்கல்லை எடுத்தெறிந்து, இதன்மீது சற்று நேரம் நிற்பாயானால், என் வேலையை முடித்துவருகிறேன் என்று சொல்லிவிட்டுத் தமது தாய் தந்தையரது பணிவிடையைச் செய்துகொண்டிருக்க, ஸ்ரீ கண்ணபிரானானவர், இங்கிரானகிய செங்கல்லின்மீது ஏறி, இரண்டுகைகளையும் இடுப்பில் வைத்துக்கொண்டு, புண்டரீகர் தாய் தந்தையருடைய சேவை செய்துகொண்டிருப்பதை நோக்கிக்கொண்டே நின்றருளினார், புண்டரீகர், தமது தாய் தந்

தையர் சேவைசெய்து முடித்தபிறகு, பீதாம்பரம் மிகவும் ஒளியை வீச ம்படி, பசுக்களை யோட்டுங் கோலைத் தோளினிடையில் வைத்துக்கொண்டு நிற்பவனாகிய ஸ்ரீ க்ருஷ்ண பகவானிடத்திற்கு வந்து, செங்கல்லின்மேல் சம சரணமாய் நிற்கிற அழகைக் கண்டு சாஷ்டாங்கமாகப் பணிந்து பேரானந்தக் கடலில் மூழ்கினார். சற்றுநேரங் கழிந்த பிறகு எழுந்துநின்று பலவகையாய்த் தோத்திரம் செய்துகொண்டு நிற்கிறதை, கருணைக் கடலாகிய பகவான் நோக்கி, புண்டலீகனே, உன்னைப்போன்ற பத்திமான்கள் இவ்வுலகத்திற் கண்டதில்லை; நீ வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளக் கடவா யென்று நியமிக்க, புண்டலீகர், பகவானை நோக்கி, தாமரைக் கண்ணனாகிய சுவாமீ! மும்மூர்த்தி யுருவங்களும் நீயேயாகி விளங்குவதனாலும, மூடர்களைக் கடைத்தேற்றுகிற ஸௌலப்ய குணத்தாலும், தேவரீர் விட்டலன் என்னுந் திருநாமம பூண்டு, எக்காலத்திலும் இவ்வண்ணமாகவே எழுந்தருளியிருந்து, உன்னை வந்தடைந்து வணங்குவோர் யாவரும் சர்வ பாப விமோசகராகச் செய்து, என் பெயர்ச்சார்பினால் இந்த க்ஷேத்ரம் பண்டரிபுரமென்னும் பெயரையுடையதாகச் செய்து, இந்தத் தலச்சார்பினால் தேவரீரும் பாண்டுரங்கன் என்னுந் திருநாமத்தையேற்று நித்யவாசம பண்ணவேண்டும். மேலும் இந்தத் தலத்தில், எல்லாத் தீர்த்தங்களிலும் சிறந்த தீர்த்தமொன்றை உண்டாக்கி, அதில் மூழ்கினோர் யாவரும் பரிசுத்த ராகும்படி அமைத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, பகவானும, புண்டலீகரை நோக்கி, உத்தமனாகிய புண்டலீகா, நீ விரும்பினபடியே எல்லாம் அமையும், த்ரிலோகங்களிலுள்ள தீர்த்தங்கள் எல்லாம இன்று நடுப்பகலிலே வரும் என்றருளிச் செய்தார். அப்படியே எல்லாத் தீர்த்தங்களும் அன்று மத்தியானத்திலே வந்து அந்தத் தலத்தில் புதிதாயுண்டாக்கப்பட்ட தீர்த்தத்திற் சேர்ந்தன. மேலும் ஹே பார்வதீ, நான் பூர்வகாலத்தில் திரிபுரதகனஞ் செய்ததனால் மிகவும் வருந்தின வருத்தம் நீங்கும்பொருட்டுப் பீமாசங்கரித்தலத்தில் தவஞ் செய்து கொண்டிருந்தபோது, என் உடம்பில் வேர்வை யுண்டாகிப் பெருகி, பீமா என்னும் பேர் பூண்டு விளங்கிக்கொண்டிருந்தது. அது என் ஞான சக்தியைக்கொண்டு, பேரொலியுடையதாய், புண்டலீகர் மனைவரையும் வந்து அலையெறிவதாயிருந்ததை அத்தலத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருந்த பீமசேனபைரவன் இந்தப் பேரொலியைக்கேட்டு மனம் பொறுக்காதவனாய் ஸ்ரீகண்ணபிரான் இங்கு எழுந்தருளி யிருக்கக் கண்டும், இந்த நதியானது சற்றும் அஞ்சாமல் இத்தனை வேகங்கொண்டு வருதல் தகுதியாகுமோவென்று, தன் கையிலுள்ள கதாயுதத்தை யெறிந்து, ஓ நதியே! இந்தத் தலத்தில் உன் வேகத்தை யடக்கிக்கொண்டு வரவேண்டும் என்று சொல்ல, அந்த நதியானது அப்படியே தன் வேகத்தையடக்கி ஊமைபோல இரைச்ச லில்லாமல் தன்னைக் கண்டவர்களுடைய பாவங்களையெல்லாம நீக்கிக் கங்கா நதிபோல வந்து, ஸ்ரீ கண்ணபிரானைக் கிட்டி இடதுபக்கமாகச் சூழ்ந்து பிறைபோலத்

தென்றிசையிற் பொருந்திக் கிழ்த்திசையை யடைந்து செல்லுதலால், சந்திரபாகையென்னும் பெயரை யுடையதாகி, முற்காலத்தில் சந்திரனனவன், தனக்கு வியாழபகவானல் கொடுக்கப்பட்ட சாபம் நீங்கும்பொருட்டு மூழ்கிச் சாபவிமோசநத்தையடைந்ததாகிய பாநுதீர்த்தத்துக்கெதிரில், புண்டலீகர் இட்ட செங்கல்லின்மேல் நின்றருளின ஸ்ரீ கண்ணபிரானது திருவடித் தாமரையைத் தரிசித்து வணங்கிப் பரிசுத்த மடையலாமென்று மனத்திற்கொண்டு, இப்போதும் பிரவாகிக்கின்றது. அந்த நதியில் எவர்களாகிலும் ஸ்நாநம் செய்து, பகவானுகிய விட்டலனைத் தரிசித்த மாத்திரத்தில், அவர்கள் பூர்வ ஜந்மங்களில் செய்த அநேக பாவங்களினின்று நீங்கி, அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு அடிமையாகப் பெறுவார்கள். இந்தச் செய்தி நிற்க;

கமலாசநத்தை யுடையவளாகிய திருமகள், தனக் கெதிரே நின்றிருந்த கண்ணபிரான், உன் கண்ணுக் கெதிரே, புண்டரீகர்முன் சேர்வேன் என்று சொல்லிப் பிரிய, அதற் குடம்படாதவளாய்த் தன்னியற்கையாகிய அவயவ சௌந்தரியத்தோடும், சர்வாபரண தாரணத்தா லுண்டாகிய செயற்கை யழகோடும் கூடி, ஒரு களிற்றியானையைப் பிடியானை தொடர்ந்து வருவதுபோல, விட்டலனைப் பின்தொடர்ந்து வந்து, கற்பக மரத்தின்மீது படர்ந்த ஒப்பற்ற காமர்வல்லிக் கொடிபோல அவனைப்பற்றி, முல்லையரும்புபோன்ற நகை யரும்பும்படி அவனது இடது பக்கத்தில் நின்றனள். அப்போது, நற்பதவியடைந்துயர்ந்த இந்திரனனவன், தெய்வத் தச்சனை நோக்கி, குவலயாபீடம் என்னும் யானையின்கொம்பை முறித்தவனுகிய ஸ்ரீகண்ணபிரானுடைய அருளினல், ஒளி நிறைந்த சக்ரத்தின்மேல் பண்டரியின் அழகையும், அதனிடையில் பிந்துதீர்த்தம் என்று பெயருள்ள தீர்த்தத்தின் நடுவில் முந்துகின்றதாகிய திரிகூட ரூபமாய்ச் சொல்லப்பட்டதில், அர்த்தமாத்திராவென்று சொல்லுதற்குரிய, வலிமைபெற்ற ஒப்பில்லாத பீடத்தின்மேலிட்ட செங்கல்லின்மீது விளங்குகிற விட்டலனை மகிழ்விக்கத் தகுந்த ஒருவிமாநத்தையும், விளங்கும்படி அமைத்து, பொற்கோபுரம் மதில் முதலாகிய பிறவற்றையும் அழகுபெறச் செய்து, ஒரு பட்டணம் உண்டாக்கக்கடவாயென்று கட்டளையிட,அந்தப் பிரகாரமாகவே அந்தத் தெய்வத் தச்சன் மதில், கோபுரம், விமாநம் முதலிய யாவும் பொன்னினுலும் நவமணிகளாலும் அழகுபெறச் செய்து, இப்படி எங்கும் இல்லையென்னும்படி ஒருபட்டணமும் நியமித்து ஸ்ரீ கண்ணபிரான் திருவுளமுவக்குமாறு செய்தான். அந்தப் பட்டணம் தேவலோகத்தினுஞ் சிறந்து விளங்கிற்று. அந்தப் பண்டரி நகரமானது க்ருஷ்ணு நதிக்கும் கோதவரி நதிக்கும் மத்தியில் இருக்கின்றது. அதின் நடுவில், ஜயவிஜயர்கள் காக்கும்படி கோயில் விளங்கிக்கொண்டிருக்கும். அதில் முநிவர், தேவர் முதலியோர் பகவானுடைய சேவைக்கு முற்பட்டுவந்து நன்ருகச் சேவிக்கத் தகுந்த சமயம் பார்த்துக்கொண்டிருப்பார்கள். தும்புரு நாரதர்கள் வீணுகாநம் செய்துகொ

ண்டிருப்பார்கள். யக்ஷகாந்தருவர்கள் பலவகையாகிய வாத்தியங்களைமுழக்கிக்கொண்டிருப்பார்கள். அரம்பை, மேனகை, திலோத்தமை முதலிய தெய்வப் பெண்கள் வகை வகையாய் நாட்டியம் செய்துகொண்டிருப்பார்கள். பரம பாகவதர்கள் நெடிதாகிய கருட ஸ்தம்பத்தினருகிலிருந்து அன்போடு ஹரிபஜனை செய்வார்கள் என்று கைலாசபதியாகிய சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லியருளினர். இதனைப் பரிசுத்தாத்மாக்கள் அறிவதன்றி, மற்றையோருடைய மனோவாக்குகளால் அறியப்படாது. திருமகளே இந்தப்பண்டரிபுரத்தில் ருக்குமாயியாய் வந்து, ஸ்ரீகண்ணபிரானோடு அமர்ந்து களித்துக்கொண்டிருக்கிருள்.

கேசியென்னும் அசுரனைக் கொன்றவனும், பதின்மராழ்வார்களும், மங்களா சாசனம் செய்யப்பெற்றவனும், தேவர்களெல்லாரும் நாள்தோறும் வந்து சேவிக்கும்படியான பெருமையுள்ளவனும், பாண்டுரங்கன் என்னுந் திருநாமத்தை யுடையவனும், பழமையாகிய வேதங்களாலும் அறியவொண்ணுதவனும், முற்காலத்தில் வேய்ங்குழலை ஊதினவனும், செங்கல்லின்மேல் நில்லென்றவுடனே நின்றவனும்ஆகிய ஸ்ரீகண்ணபிரானுக்கு நித்யவாஸஸ்தானமாயிருக்கிற இந்தப் பண்டரிபுரத்துக்கு நிகராகிய பட்டணம் வேறொன்றுமில்லை.இந்த நகரத்தின் ஒரு பக்கத்தில் சந்திரபாகையென்னும்நதி,தன்னிடத்தில் வந்து மூழ்குவோருடைய பாவங்களையெல்லாம் நிவர்த்திசெய்துகொண்டு விளங்காநிற்கும். இத்தலத்தில் திருமகளாகிய ருக்குமாயிக்கும் பொன்மயமான ஒரு கோயி லுண்டு. இதிலுள்ள பாண்டுரங்கப் பெருமானுடைய கோயிலின் சிறப்பை வருணித்துச் சொல்வதற்கு ஆதிசேஷனும் முடியாது. இதில் எழுந்தருளியிருக்கிற விட்டலப்பெருமான், தம்மைச் சேவிக்க வருவோரெல்லாரும் தம்மைத் தழுவிக்கொண்டு, சகல பாவங்களையும் நிவர்த்தித்து மோக்ஷலாபத்தை யடையும்படி கோயிலின் முகப்பில் எழுந்தருளியிருப்பார். இந்த நகரத்திலுள்ளோரெல்லாரும், தத்தம் வர்ணுசிரம தருமங்களில் வழுவாமல் பகவத்ஸேவையில் நிரந்தரமான விருப்பமுள்ளவர்களாய், விட்டலனுடைய திவ்ய விக்ரஹத்தின் திவ்ய ஸௌந்தர்யத்தைப் பாதாதிகேசமாக அநுபவித்துக்கொண்டிருப்பார்கள்.இதில் வேதப்ரதிபாத்யனை பகவான் திருமகள்கண்டு களிக்கும்படி இடையிற் சேர்த்த இரண்டு திருக்கரங்களோடு, ஒரு மரகத மலைபோல, உலகத்துயிர்களெல்லாம் உஜ்ஜீவிக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கிறார். இந்த நகரத்தின் பெருமையும், இதில் எழுந்தருளியிருக்கிற விட்டலப் பெருமானுடைய ப்ரபாவத்தையும் இன்னும் விஸ்தரித்துச் சொல்ல என்றால் முடியாதென்று ஸ்ரீபார்வதிதேவியாருக்குக் கைலாசபதியாகிய சிவபெருமான் சொல்லி, மேலே ஜயதேவர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

புண்டலீகர் சரித்திரம் முற்றிற்று.

# உ-வது ஜயதேவர் சரித்திரம்.

ஸ்ரீவேதநாயகராகிய பிரமதேவரானவர், ஸ்ரீவேதவியாசமுநிவரை நோக்கி, ஓ முநிசிரேஷ்டரே, நீர் பூலோகத்தில் பிறந்து அங்குள்ளாரெல்லார்க்கும் ஸ்ரீ ஹரி பக்தி யுண்டாகும்படி போதிக்க வேண்டுமென்று நியமிக்க, வியாசமுநிவரும் அவ்வாறே செய்கிறேனென்று அவரை வணங்கி விடைபெற்றுவந்து ஆகாயத்தையளாவிய சோலைசூழ்ந்த ஜகந்நாதக்ஷேத்திரத்திற்குப் பக்கத்திலுள்ள, திந்துபில்வவூர் என்னும் நகரத்தில் குற்றமற்ற வேதியர் குலத்தில் அவதரித்து ஜயதேவர் என்னும் பெயர் சூடப்பெற்று விளங்கினர். இவர்க்குத் தாய்தந்தையர், அன்போடு உபநயந முடித்து வைத்தலும் வேதசாஸ்திர புராணாதிகளைத் தாமாகவே கற்று, அந்தக் கல்விக்குப் பயனாகிய ஹரிபக்தியைப் பெற்று, உடுக்கூட்டத்தில் சந்திரனும், படைத்தொழிலில் பீஷ்மாசாரியும், முனிவர்களில் சிவனும், ஆகாயத்தில் சூரியனும் சிறந்து விளங்குதல்போல, வேதியர் குலத்தில் சிறந்து விளங்கினர். இப்படியிருக்குங்காலத்தில், பதுமபுராணத்திலும் பாரதமாகிய இதிஹாசத்திலும் சொல்லப்பட்ட மேன்மைபொருந்திய, ராதாவிலாசம் என்கிற பழையகதையைக் கோவிந்தகீதம் என்னும் பெயர் பூண்டு விளங்கும்படி செய்து போதிக்க, எல்லாரும் இது மிகவும் புதுமையாகிய நூலென்று கற்றுப் புகழ்ந்து கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில், ஸ்ரீ க்ருஷ்ணபகவான் நித்யவாசம்பண்ணிக்கொண்டிருந்த ஸ்ரீஜகந்நாதம் என்னும் நகரத்தை ஆண்டு, நான்கு வேதங்களையும ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த ஸாத்விகராஜன் என்பவன், ஒரு அலங்கார சாஸ்திரத்தைச் செய்து, அந்த நாட்டிலுள்ளவர் யாவர்க்கும் அதைப்போதிக்க வேண்டுமென்றுஎண்ணி, அறிஞரை அழைத்து, நான் செய்த நூலும், ஜயதேவர் பாடின இனிதாகிய கீதமும் சமானமாகும் ஆதலால், என்னால் செய்யப்பட்ட நூலை நீங்கள்எல்லோரும் படிப்பீர்களாகவென்றுசொல்ல, அந்தச்சொல்லைக் கேட்ட மாத்திரத்தில் அறிஞர்கள், யானென்கிற அகங்காரத்தோடு நீர்செய்தநூல் பரமசாத்விகராகிய ஜயதேவர் நூலோடிணையாகுமென்று சொல்லுதல் அன்றியும் என் நூலை எல்லாரும் ஓதக்கடவீர் என்று நீர் சொல்லுவதை ஆலோசிக்கும்போது, எக்காலத்திலும் எப்பொருளையாயினும வலாத்காரமாய்க் கொடுத்தால் கொடுக்கப்படுகிற அந்தப் பொருளின் பெருமை குறையுமென்று பெரியோர் சொல்லுவார். உன் கவியும், உன் சொல்லும் உனக்கு எதிரே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீகண்ணபிரானுக்கு ஏற்குமா என்று சொன்ன மாத்திரத்தில், அரசன் இரண்டு நூல்களில் திருமால் ஏற்றுக் கொள்வது எதுவோ, அதுவே சிறந்த நூல் என்று சொல்லி, அந்த அறிஞர் கூட்டத்துடனே அரசனானவன் ஸ்ரீ கண்ணபிரானது ஆலயத்தில் பிரவேசித்து, பகவான் இந்த இரண்டுநூல்களுள் முக்கிய

மான நூலை யேற்றுக்கொண்டு, மற்றதைப் பக்கத்தில் ஒதுக்கிவிடக் கடவ ரென்று சொல்லிக் கோயிலை மூடினார்கள். மறுநாள் காலையில் கோயிலுக் குரிய அர்ச்சகர் முதலியோர் வந்து கோயிலைத் திறந்து பார்த்து, ஜயதேவர் செய்தகீதம் உள்ளிலும் அரசன்செய்த அணிநூல் புறத்திலுமிருக்கக் கண்டு அரசனிடத்துக்குச் சென்று, அந்தப் பரம பாகவதராகிய ஜயதேவர் நூலு க்கு உமது நூல் இணையாகுமா? அவர் நூலுக்கு எதிரே உமது நூல் சூரியனு க்கெதிரே மின்மினி போன்றதே யன்றி வேறன்று. ஆகையாலேயே உமது நூலைக் கைக்கொள்ளாமல் பகவானவர் புறத்தே ஒதுக்கிவிட்டனரென்று சொன்னார்கள். அதைக் கேட்ட அரசனானவன் பகவானுடைய சந்நிதியை யடைந்து, ஓ கருணாநிதியே! புலியும், பசுவும் ஒருதுறையில் நீருண்ணும்படி செய்யத் தகுந்த சர்வ சக்தனாகிய நீ, இப்போது ஜயதேவர் நூலை யேற்றுக் கொண்டு அடியேனது நூலை இகழ்ந்தது உன்னுடைய பேரருளுக்குத் தகுதி யாகுமோ! இப்படி நீயே செய்தால் யான் என்செய்வேன்! இவ்வாறு வருந்து தலைப்பார்க்கிலும் உயிரைவிட்டு எனது அகங்காரத்தை விடுவேனே நன்மையா மென்று துணிந்து சொன்னமாத்திரத்தில், பிரமதேவன் தலையிலும் எழுதத் தகுந்த திருக்கையையுடைய ஸ்ரீமந்நாராயணன், அரசனது நூலினில், ஜய தேவர் கீதங்களின் தாத்பர்யமும் அமைந்திருக்க எழுதினார்; இதைக் கண்ட அரசன் ஸ்ரீஜகந்நாதனைப் புகழ்ந்து வாழ்ந்திருந்தான். இப்படி யிருக்குங் காலத்தில், அந்த ஜகந்நாத க்ஷேத்ரத்தில் அக்நி கார்யங்களைச் செய்கிற ஒரு வேதியனிடத்தில் ஒரு கன்னிகை அவதரித்தாள். அவளுடைய சவு ந்தரியத்தைக் கண்டு அவளுக்குப் பத்மாவதியென்று பெயரிட்டு அதிக பிரீதியோடு வளர்க்க, அவளுக்குத் தகுதியாகிய பருவம் நேர்ந்தமையால் முன்னிலும அதிக சௌந்தரியவதியாய்ப் பிரகாசிப்பதை நோக்கி, அவளை ஸ்ரீஜகந்நாதப் பெருமானுக்கே மணமுடித்துக்கொடுக்க வேண்டுமென்று நிச்சயித்திருக்குங் காலத்தில், சுற்றத்தா ரெல்லாரும் அப்பெண்ணின் அழகு, குணம், ஒழுக்கம் முதலியவற்றையறிந்து, அவளைத் தமக்கு மண முடித்துக் கொடுக்கவேண்டுமென்று வினவ, அவளது தகப்பனாகிய அந்த வேதியன், என் பெண்ணை ஸ்ரீஜகந்நாதப் பெருமானுக்கன்றி அயலாருக்கு மணமுடித்துக் கொடுக்கமாட்டேனென்று மறுத்துச் சொல்லி, பெண்ணை மிகுந்த அன்போடு பாதுகாத்து வருநாளில், ஸ்ரீஜகந்நாதப்பெருமான் அவ் வேதியனுடைய கனவில்வந்து உன் பெண்ணுக்குத் தகுந்த கணவன் ஜயதே வனே யாவன்; ஆதலால் உன் அருமைத் திருமகளை அவனுக்கே மணமுடித் துக்கொடுத்தால் நன்மையாமென்று அருளிச்செய்ய, வேதியன் விழித்தெழு ந்து மிகுமகிழ்ச்சியோடு ஜயதேவரை நாடிப்போய் அழைத்துவந்து அவருக் கே மணமுடித்துக் கொடுத்தான். ஸ்ரீஜகந்நாதப்பெருமானது திருவுருவாகிய ஜயதேவர், பத்மாவதியுடனே கூடி அந்த ஜகந்நாதக்ஷேத்திரத்திலே ஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு சுகமாகவாழ்ந்திருந்தார். அக்காலத்தில், சூரிய

ஹையே விரும்பும் தாமரைமலர்போலஇறைவனது திருவடியையே விரும்பும் கருத்தை யுடையககாரவிந்தன் என்னும்வணிகனொருவன்வந்து,ஜயதேவரை மிக்க அன்போடு வழிபடக்கண்டு, ஜயதேவர் இவன் பரிசுத்தமான மனத்தை யுடையவன்என்று அறிந்து, அவனுக்கு நன்மையாகிய ஹரிதோபதேசங்களைச் செய்து,தவஞ்செய்வோரைப்பார்க்கிலும்மேலானசிறப்படைந்திருந்தார்.குரு சேவையில் திரிகரணங்களையும்உபயோகப்படுத்தி நாளுக்குநாள்அன்புமிகுதி யாகச் செய்கின்ற அவ்வணிகனானவன், ஒருநாள் ஜயதேவரை வணங்கி, எனது வீட்டிற்குத் தேவரீர் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, ஜய தேவரும் அப்படியே வருகிறேன் என்று சொல்ல, இவரை வணிகனானவன் தேர்மேலேற்றிக்கொண்டு போய்த் தன்னூரை யடைந்து, தன் வீட்டில் பிர வேசித்து, இவரைப் பரிசுத்தமான ஆசனத்தின்மேலிருத்தி,ஷோடசோபசார ங்களையுஞ் செய்து ஆதரித்து, அவரது அருளினால் சமதமாதி ஆத்மகுணங்க ளைப்பெற்று, நாள்தோறும் ஹரிநாமசங்கீர்த்தநஞ் செய்துகொண்டு இருக்க, ஒருமாதமளவும் ஜயதேவரானவர் அவ்வூரில் அவ்வணிகன் பணிவிடையை யேற்று, அவ்விடத்தில் வாசஞ்செய்து, அவனைநோக்கி, அன்புருவமாகிய கக நாரவிந்தனே, யாம் இனி இங்கிருக்கவொண்ணாது, ஸ்ரீஜகந்நாதப்பெருமானை ச்சேவிக்கவேண்டுமென்னும் ஆசை அதிகரித்திருக்கிறது. ஆதலால் நீ இவ்வி டத்திலேயே யிருக்கக்கடவாய் என்று பிரயாணசித்தமாக, அவ்வணிகன் இவ ரை நோக்கி, ஜ்ஞாந ப்ரதாநம்பண்ணுகிற சிறந்த கற்பகத்தருவே, தேவரீரு டையதிருவடிகளை மறவாமையாகிய பெருமையை அடியேனுக்குப் பிரசாதி க்கவேண்டுமென்று பிரார்த்திக்க, ஜயதேவரானவர் தமது தாமரைமலர்போ ன்ற திருக்கரத்தை அவன் தலைமேல் வைத்தருள, அவ்வணிகனானவன் இவர் விரக்தராதலால் நாம் சமர்ப்பிக்கும் தக்ஷிணையை யேற்றுக்கொள்ளமாட்டா ரென்று அறிந்து, அவர் காணாதபடி ஆடையாபரணாதிகளை விசேஷமாக ஒரு வனிடத்திற் கொடுத்துத் தேரிலேற்றி, இவைகளைக்கொண்டுபோய் எனது குருவின் மனைவியினிடத்திற்கொடுத்து, எனது நமஸ்காரமும் சொல்லுவா யாகவென்று சொல்லி, அத்திசையைநோக்கிப் பணிந்துவிடுக்க,அவனும் அப் படியே இவரைத் தொடர்ந்துவர, இருவருமாக வரும்போது அந்த வணிகனா லிவருக்கு வழித்துணையா யனுப்பப்பட்டவன், இவரை வணங்கி, ஸ்வாமீ! அடியேன் வீட்டில் சில முக்கியமான காரியங்கள் நேர்ந்திருக்கின்றன; ஆதலால் அடியேனுக்கு விடை கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தி க்க, ஜயதேவரானவர், அவனது பிரார்த்தனைக்கிரங்கி அப்படியே போய்வா வென்று அனுப்பி, தாம் தனியாகச் சென்றனர். அப்போது கங்காநதியைத் தரிசிக்கச் சென்ற கொக்குப்போலக் கொடிய துஷ்டராகிய இருவர், விசுவாஸ முடையவர்கள்போலத் தேரின் இருபுறத்திலும் தொடர்ந்து வருவதை ஜய தேவரானவர் கண்டு சந்தேகித்து இவர்கள் வருவதை நோக்குமிடத்து நம க்கு ஏதாகிலும் துன்பஞ் செய்வார்களென்று தோன்றுகிறது. ஆதையால்

இவர்களுக்கு இந்தத் திரவியத்தைக் கொடுத்துவிடுவதே நலமென்று நிச்சயித்து, அந்தச் சோரர்களைப் பார்த்து, தேரிலுள்ள பொருள்களையெல்லாம் நீங்கள் கைக்கொள்ளலாமென்றுசொல்லி, தேரைவிட்டிறங்கி, பூமியிலே தனியாய் நடந்து போவதைப்பார்த்து, அந்தத்திருடர்கள் சற்றும் இரக்கமில்லாமல், இவரைப் போகவிட்டால் இவர்போய் அவ்வணிகனிடத்துச்சொல்லுவர், அதனால் பெரிய கலகமுண்டாகுமென்று ஆலோசித்து, இவரைத்தொடர்ந்து வந்து கொலைசெய்ய மனந்துணியாமல் கால் கைகளை மாத்திரம் சேதித்து, அங்கு படர்ந்திருந்த ஓர் புதரில் கிடத்திவிட்டுத் தேரைக்கொண்டு போனார்கள். பிறகு, ஜயதேவரானவர் பூமி நடுங்கும்படி வீழ்ந்து இடைவிடாமல் ஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு சரீரத்தை வெறுத்து ஸ்ரீ கண்ணபிரானது திருவுருவத்தைத் தமது மனதிற்கொண்டு ஞானானந்தானுபவத்தில் அசைவற இருந்தனர். அந்தத் தினத்தில், கிரௌஞ்சனென்னுமரசன் அந்த வனத்தில் வேட்டையாடவந்து, சூரியன் அஸ்தமித்து இருள் மூடிக்கொள்ளவே, தன் ஊருக்குப்போகக் கூடாமல் அன்றிரவில் அவ்வனத்திலேயே தங்கியிருக்கும்படி நேர்ந்ததினால் அவ்விடத்திறங்கி, புதரில் ஒளியுருவாய்க் காணப்படுகிற ஜயதேவரைக் கண்டு அவ்விடத்திற் போய், இப்புதரில் இவ்வொளியுண்டாயிருக்கக் காரணமென்னவென்று ஆச்சரியப்பட்டு உற்றுநோக்கி, ஜயதேவர் ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டிருப்பதைக் கண்டு, இவரைப் பேரன்போடு வணங்கித்துதித்து, இவரது கால் கைகள் சேதிக்கப்பட்டிருப்பதையும், அதனால் அவர் ஒருதுன்பமில்லாமலிருப்பதையும் அறிந்து, ஓஸ்வாமீ! தேவரீரை இவ்வாறு வருந்தச் செய்தவர் யாவரென்று வினவ, ஜயதேவர் எனக்கு வருத்தத்தை ஒருவருஞ் செய்யவில்லை, என் தீவினையே செய்தது என்று மறுமொழி சொல்லக் கேட்ட அரசன், மனமிரங்கி, இவரைத் தன்சிவிகைமேல் ஏற்றிக்கொண்டு தன் ஊருக்குப்போய், நவமணிகள்பதித்த பொன்னாசனத்தில் இருத்தித் திரிகரணங்களாலும் வழிபட்டு, அன்போடு, ஓ ஞானசூரியனே என்று துதித்து வலம் வந்து, அவரது அருள்பெற்று, ஆதிசேஷன்மீது அறிதுயிலமர்ந்த பரஞ்சோதியாகிய எம்பெருமானைத் தோத்திரஞ்செய்து, தன் பரிஜனங்களைப்பார்த்து, நீங்கள் இவரது திருவடித்தொண்டு சற்றும் வழுவாது செய்துகொண்டிருங்களென்று நியமிக்க, அவர்களும் அரசனது கட்டளையின்படியே நாம் பெரும்பாக்கியத்தை யடைந்தோமென்று மனமகிழ்ச்சியோடு இவரது திருத்தொண்டினைச்செய்துகொண்டு வருநாளில், அந்த அரசன் வந்து, ஜயதேவருடைய திருவடியை வணங்கி, தேவரீரது திருவடியைப் பூசிப்பதிலும் சிறந்தபொருள் வேறொன்றில்லையெனத் தெளிந்திருந்தேனாயினும் தேவரீரது திருவுள்ளத்துக்கு ஏற்பதாகிய வேறொரு கைங்கரியத்தைச் செய்யவேண்டுமென்று விரும்பினேன். ஆதலால் அப்படியே தேவரீர் கிருபை செய்யவேண்டுமென்று இனியசொற்களால் பிரார்த்திக்க, ஜயதேவரானவர், அவ்வரசனை நோக்கி, அன்பனே! நீ திருமாலடியாரது திருவடி

யை வணங்கிப்பூசிப்பதே எனக்கு விருப்பம் என்று அருளிச்செய்ய, அவ்வ ரசன் எழுந்து அவரது திருவடியைவணங்கி, அவ்வாறே செய்கிறேன், ஆனால் திருமாலடியாரை அடியேன் அறிந்துகொள்ளுதற்குரிய அடையாளங்களைத் தேவரீர் சொல்லி யருளவேண்டுமென்று பிரார்த்திக்க, ஜயதேவரானவர், அருளிச் செய்வாராயினர்.

எப்படி யென்றால், துளவமணி மாலையையும், தாமரைமணி மாலையை யும் கழுத்திற் பூண்டு, நன்மையைத் தருவதாகிய கோபீசந்தனத்தோடு துவா தச நாமங்களையும் நெற்றி முதலாகிய இடங்களில் தரித்து, அல்லும் பகலும் ஸ்ரீ ஹரியின் திருநாமங்களையே உச்சரித்துக்கொண்டிருப்பவர்கள் எவர்க ளோ, அவர்களே திருமால் அடியாரென்று சொல்லப்படுவார்கள். அவர்களைக் கண்டு அவர்கள் திருவடிகளை ஆசிரயித்து பரிசுத்தமாகிய பூசனையைச் செய் வாயானால் வேதநாயகனாகிய திருமாலுக்கு ஸ்ரீபெரிய பிராட்டியின் மீதுள்ள விருப்பத்தினும் அதிகமான விருப்பம் உன்மீது உண்டாகும் என்று அருளி ச்செய்ய, அரசனும் அதற்கிசைந்து, ஜயதேவருடைய கட்டளையைச் சிரசா வஹித்து, திருமாலடியார்களாகிய சாதுஜநங்களை எப்பொழுதும் தரிசிப்பதும் பூசிப்பதுமே நமக்கு உறுதிப்பொருளென்று நிச்சயித்து அவ்வாறே நடத்தி வருங் காலத்தில், அரசனானவன், திருமா லடியாரைப் பூசிக்கின்ற அற்புதத் தைக் காணவேண்டுமென்று ஜயதேவர் எழுந்தருள, அவரது ஆத்ம குண பூர்த்தியைப் புகழ்ந்து, பூஜித்துப் பலவகையாக அவ்வரசன் வழிபட்டு அவரு க்கு விசேஷமான திரவியங்களைச் சமர்ப்பிக்க, ஜயதேவர் அத்திரவியத்தைக் கொண்டு தமது வறுமைதீர்ந்து சுகமாக வாழ்ந்திருந்தனர். இவ்விடத்தில் இவ்வாறு நடவாநிற்க; முன்னே, ஜயதேவரிடத்தில் திரவியத்தைக் களவு செய்துகொண்டுபோன இரண்டு திருடர்களும் இந்தச் செய்தியை யறிந்து, அரசனானவன் நமக்கும் மிகுதியாகிய திரவியத்தைக் கொடுக்கும்படி நாமும் அவனிடத்திற்குப் போவோம் எனத் துணிந்து, கபட வைஷ்ணவ வேஷம் பூண்டு, தம்மால் கைகால்கள் அறுபட்ட ஜயதேவரானவர் திருமால் அருள் பெற்று அவ்வரசனது நகரத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருப்பதை யறியா மல், மீனைக் கருதிக்கொண்டு அசையா நிலையாய் நிற்கிற கொக்குப்போலத் தம் கையில் ஜபமாலையைத் தரித்துக்கொண்டு விரைந்து நடந்து தம் மனத் தில் உள்ள ஜ்ஞாநக் கருத்தை வெளியிட்டுக்கொண்டு, அரசனது அரண்மனை யில் பிரவேசித்து, அறுபட்ட கை கால்களோடு சிம்மாசநத்தின்மீது இருப்ப வராகிய ஜயதேவரைக்கண்டு, பசுவானது புல்லுள்ள இடத்தில்போக, அதன் மீது பாய்கின்ற புலிபோலக் கொலைசெய்ய எண்ணித் தமக்குள்ளே ஒருவர் க்கொருவர் செய்யத் தகாத ஜாடைகளைச் செய்துகொண்டார்கள். அப்பொ ழுது அந்த நீசர்களை ஜயதேவரானவர் அறிந்து, குற்றமற்ற உபசாரங்களைச் செய்யும் பொருட்டு, சிம்மாசநத்தை விட்டு நிலத்தில் இழிந்துவந்து, அவர் களை வணங்கி, முன்னேவந்து, அன்போடு தழுவிக்கொண்டு, அருகே நின்று

சொன்னதைத் தடுக்காமல் செய்கின்ற நற்குணமுடைய சிலரை நோக்கி, இவர்களை அரசனிடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், அவர்கள் விரும்பிக் கேட்கின்ற பொருளைத் தரும்படியாக யான் சொன்னேனென்று அரசனுக்குச் சொல்லுவீராகவென்று அனுப்பினார், அந்த ஏவலாளர்கள் ஜயதேவர் சொன்னபடியே அந்தத் திருடர்களை அரசனிடத்திற்கு அழைத்துக்கொண்டு போய், அவர்கள் வந்தகாரியத்தைச் சொல்ல, அரசன் அவர்களை வணங்கி அநேக வகையாகத் துதித்து, அர்க்யமுதலாகிய பல உபசாரங்களையுஞ் செய்து, அத்திருடர்களைநோக்கி, நீங்கள் இருக்க மனமுள்ளளவும் என்னிடத்திலிருக்கலாம் என்று சொல்ல, அந்தக் கொடியோர்கள் அப்படியே செய்யச் சம்மதித்து, அவ்வரசன் தமக்குச் செய்யும் பெருமை முழுதையும் விரும்பாதவர்களாய், இவன் இப்படிச்செய்ய நாம் இங்கிருப்பது வதைசெய்பவன் வீட்டில் அறியாமையுள்ள ஆடுகள் சேர்ந்து வாழ்வதுபோன்றிருக்கின்றது என்று நினைத்தார்கள். அப்படி நினைத்தது மல்லாமல் அரசன் அறியும்படி ஜயதேவர் நமது உண்மையைச் சொன்னால் அவரது சொல்லை ஏற்றுக்கொண்டு, நம்முயிரை நீக்கிவிடுவன், அதனை நம்மால் தடுக்க முடியாது என்று ஆலோசித்து, அஞ்சி, மிகுந்த துன்பங்கொண்டு, மனஞ் சோர்ந்திருந்தார்கள். பிறகு உண்பதும் உறங்குவதும் மனத் தெளிவும் இல்லாமல் தினந்தோறும் இவர்கள் வருந்துகின்ற நிலைமையை அங்குள்ளவர்கள் அறிந்து அரசனாற் பூஜிக்கப்பட்டு அங்கு வாசஞ்செய்கிற ஜயதேவரிடத்து விண்ணப்பஞ்செய்ய, அவர் அவர்களை நோக்கி, இச்செய்தியை அரசனுக்கு அறிவித்து, அவர்களுக்கு வேண்டும் பொருளுதவிசெய்து, அவர்கள் விருப்பத்தின்படி போக விடைகொடுத் தனுப்பினால் நன்மையாமென்று சொல்லுங்களென்று நியமிக்க, அவர்க ளவ்வாறே சென்று அரசனுக்குச் சொல்ல, அதைக்கேட்ட அரசன் அந்தச் சோரர்களிடத்துக்குப்போய், நீங்கள் சுகமாய் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்களோ என்று வினவ, அவர்கள் அரசனே, நீ எங்களை மிகவும் உபசரித்து வைத்திருந்தாலும் எங்களுடைய மனமானது பல புண்ணிய தீர்த்தங்களின் மேலே செல்லாநின்றது, ஆதலால் நீ எமக்கு விடை தருவாயானால் யாம் போவோம் என்று சொல்லுதலும், அரசன், அவர்களை நோக்கி, நீங்கள் அவ்வாறு தீர்த்தயாத்திரை செய்வதற்கு வேண்டியது யாதோ அதனைச் சொல்லுங்களென, அவர்கள் இரண்டு தேர்கள் நிரம்பும்படியான திரவியம் தந்து எங்களை யனுப்பவேண்டும் என்று சொல்லுதலும், அவ்வாறே அரசனும் அவ்விருவருக்கும் ஆடையாபரணாதிகள் வேண்டியவளவுந் தந்து இரண்டு தேரிலும் பொருளை நிரப்பி, அவர்களையும் ஏற்றி, தேர் நடத்தும் பாகர்களையும் அமைத்து அனுப்பினான். அவர்கள் அரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஜயதேவரிடத்திற்குப்போய் அவரை வணங்கி விடைகேட்க, அவரும் போய் வாருங்களென்று சொல்லியருளத் திருடர்கள் சென்றார்கள். செல்லும்போது பாகர்கள் அவர்களை நோக்கி, எங்கள் அரசனிடத்தில் வந்த பேர் அநேகருள்

ரும் ஜயதேவர் உங்களைப் புகழ்ந்து மிகுந்த உபசாரஞ் செய்ததற்குக் காரணம் யாதென்று வினவ, அத்திருடரும் அந்தப் பாகருக்குச் சொல்லலுற்றார்கள்:—துஷ்டகர்மா என்று சொல்லப்படுகிற ஓரரசன் இருந்தான்; அவனிடத்தில் இந்த ஜயதேவன் பிரதானியாயும் இஷ்டனாயும் இருந்தான். யாமும் அந்த அரசனது ஏவற் பணிவிடைசெய்துகொண்டிருந்தோம். இந்த ஜயதேவன் அரசனுக்கு அதிகஷ்டத்தையுண்டாக்கினதனால், இவனைச் சிரச்சேதம் பண்ணும்படி அரசன் எமக்குக் கட்டளையிட, நாங்கள் அப்படி செய்யாமல் கால்கைகளை மாத்திரம் சேதித்துக் காட்டில் ஒரு புதலினிடையிலே கிடத்திவிட்டு, அந்த அரசனது ஏவற்றொழிலுக்கு உடம்படாமல் மனவெறுப்போடு வந்தோம். இப்பொழுது உங்களூரில் வர, தன் உயிருக்கு உதவிசெய்த நல்லவர்களென்று எங்களை உபசரித்து மிகுதியாகிய ராஜ சன்மானமும் செய்வித்தான் என்று சொன்னவுடனே, அசத்தியமல்லாமல் கொடிதாகிய பாவம் வேறொன்றுளதோ? இல்லையாதலால் இவர்கள்சொன்ன பொய்வார்த்தையைப் பூமிதேவியானவள் பொறுக்காமல் படீலென்று வெடிக்க, அந்த வெடிப்பில் இந்தத் திருட்டு வஞ்சகர்கள் ஏறியிருந்த தேரோடு வீழ்ந்து அழுந்திவிடக் கண்ட தேர்ப்பாகர்கள், தாமும் அவர்களோடு வீழ்ந்து இறக்காமல் மெல்லத் தேரினின்றுங் குதித்து, உயிர்பிழைத்து, இனி யாதுசெய்வோமென்று மனமயங்கி, இந்தத் தீமை சம்பவித்தது தெய்வச்செயலல்லவா? இந்தச்செய்தியை அரசனுக்குச் சொல்லுவோமென்று எண்ணி மீண்டு வந்தவர்கள் அரசனிடத்துள்ள பெரியோர்களை வணங்கிச் சொல்லினர். இதனைக் கேட்ட சாந்தமூர்த்தியாகிய ஜயதேவர், தமது கண்களில் நீர் ததும்பும்படி துக்கித்து, மாயனே! பாண்டவசகாயனே! சத்தியபாமைக்கு நேயனே! உலக முண்டசெவ்வாயனே என்று தோத்திரஞ்செய்து, உனக்குப் பகைவராகிய கஞ்சன் முதலான அநேக துஷ்டர்கள் மேற்கதியடையச் செய்து எனக்குப் பகைவரான திருடர்களை கீழ்க்கதி யடையச்செய்தது உன்னுடைய கிருபைக்குத் தகுதியோ! ஆதிமூலமேயென்று அழைத்த கஜேந்திராழ்வானுக்கு முன்னே அபயங் கொடுத்து நற்கதி யடையச் செய்ததுபோல அவருக்குப் பகையாகிய கொடிய முதலைக்கும் அந்த நற்கதியைக் கொடுத்தாய்; அவ்வாறு யான், அன்பனென்றிருக்க, என்பகைவர், நற்கதியை யடையும்படி செய்யாமல் இப்படி கவிழ்த்து விட்டது உனக்கு நீதியாமோ? என் ஐயனே என்று நைந்து வருந்தும்போது, திருமாலானவர் திருவுளமிரங்கித் தமது சகுண ரூபங்கொண்டு இவருக் கெதிரே யெழுந்தருளினர். அப்படி எழுந்தருளின மாத்திரத்தில், அவரது கடாக்ஷவீக்ஷணத்தால் இவரது அறுபட்ட கை கால்கள் பருத்து நீண்டுவளர்ந்தன. நஞ்சுபோன்ற கொடியவரான அந்தத் திருடரும் சொர்ணவிமானத்தின்மே லேறி விண்ணாட்டை யடைந்தனர். அப்பொழுது உலக முண்ட பெருவாயனாகிய இறைவன், ஜயதேவரைத் தழுவிக்கொண்டு உன்னுடைய அன்புக்கு அளவில்லை; என் மனம் மிகுதியும் களிப்படைந்தது

என்று அருளிச்செய்து பரமபதத்துக் கெழுந்தருளினன். பிறகு பெருந்தகைமையுள்ள அந்த அரசன், அந்த ஜயதேவரை வணங்கித் தேவரீருடைய கால் கைகள் வளர்ந்ததெப்படி, சொல்லவேண்டுமென்று கேட்க, ஜயதேவரும் தமது வரலாற்றையெல்லாம் தவறாமல் சொல்ல, அரசன்கேட்டுச் சந்தோஷித்து, பத்மாவதியாரை நம்மூருக்கு அழைத்துக்கொண்டு வாருங்களென்று சிலர்க்குச்சொல்லி, சிவிகையையுமனுப்பினன். அரசனது ஏவலால் வந்த சிவிகைமேல் பத்மாவதியார் ஏறி, தமமுடைய பிராணநாதனை வணங்குவதற்குரிய நல்லநாள் இதுவேயாமென்று விரைந்து சென்று, ஜயதேவருடைய திருவடியை வணங்கும்போது, அந்த அரசன் அவ்விடத்துக்குத் தன் மனைவியோடு வந்து தன் மனைவியை நோக்கி, உத்தமியாகிய பத்மாவதிக்குத் தினந்தோறும் ஏவல் செய்வாயாக என்று கட்டளையிட்டான். அவ்வாறே ராஜ பத்தினியானவள், பத்மாவதியாரை அழைத்துக்கொண்டுபோய், சொர்ணமயமான அரண்மனையிற் பிரவேசித்துப் பொற்பீடத்திலிருத்தி, அவரது மலரடியை வணங்கினாள். அப்படி ராஜபத்தினியால் வணங்கப்பெற்ற பத்மாவதியார், நதிகளில் கங்காநதிபோலவும், கற்பில் சாவித்திரிதேவிபோலவும், வேதத்தில் காயத்திரி மந்திரம் போலவும், ஆபரணங்களில் மங்கல சூத்திரம்போலவும், மாதர்களுக்குள் சிறந்து விளங்கினாள். இப்படி ராஜபத்தினி ஏவற் பணிவிடை செய்யப் பத்மாவதியார், சுகமாக வாழ்ந்திருக்கு நாளில், ஒரு தூதன்வந்து, ராஜபத்தினியை நோக்கி, உன் தமபியாகிய சுஜாணன் என்பவன் மரணமடைந்தான் என்று சொன்னான். அந்தச் சொல்லானது ராஜகிருகத்திலிருந்த சுஜாணன் மனைவிகேட்டு, அவனோடு உடன்கட்டையேறத் துணிந்து, புறப்பட்டதை அறிந்தவர்கள் இது மிகுந்த ஆச்சரியமென்று மனம் வருந்தினார்கள். பத்மாவதியார் மாத்திரம் சொர்ணாசனத்தின்மேல் வருத்தமின்றி வீற்றிருக்க, துன்பக்கடலிலழுந்தினவர்கள், இது என்னவென்று பணிவாய்க்கேட்க, ராஜபத்தினியானவள், பத்மாவதியாருக் கெதிரில் நின்று இந்தச் செய்தியைச் சொல்லக்கேட்ட பத்மாவதியார், ராஜபத்தினியை நோக்கி, சுஜாணன் மனைவி இப்படிப்பட்ட அற்புதமான செய்கைக்கு உடன் பட்டது ஏழு பிறவியிலும் தன் பிராணநாதனை இடையறாமல் தழுவிக்கொண்டிருப்பதற்கே யாகும். ஆயினும் சூரியனிடத்தில் கிரணங்கள் அடங்குவதுபோல, கணவனது மரணத்தைக் கேட்டபொழுதே உயிர்விடாமல் இவள் இங்கு வாழ்ந்திருக்கின்றனள். கற்புக்கழகு இதுதானோ என்று பத்மாவதியார் சொன்னமாத்திரத்தில், கேட்ட சுஜாணன் மனைவியானவள் விரைந்து சென்று, கணவனோடு உடன்கட்டையேறினபிறகு, ராஜபத்தினி, இதனைப் பத்மாவதியாரிடத்தில் பரிசோதனை செய்வோமென் றெண்ணி, மந்திரியை யழைத்து, ஒரு பொய்சொல்லும்படி கற்பித்தாள். மந்திரியும் ஜயதேவர், அரசனோடுகூடி வனத்திற் பிரவேசிக்கச்செய்து அங்கிருந்துவந்து ஜயதேவர் மரணமடைந்தாரென்று சொன்னான். அதைக்கேட்ட பத்மாவதியார் அவர் புலியினால் மரணமடைந்தாரென்

பது உண்மைதானே என்று கேட்க, இந்தப் பொய்யை மந்திரிசொல்லும்படி கற்பித்த ராஜபத்தினியானவள், மெய்தான் என்று சொன்னாள். இப்படிசொல்லுவதற்கு முன்பே, பத்மாவதியார், தன் உயிர் நீங்கினாள். இதைக்கண்ட வேந்தன் மனைவி, தனக்கெதிரில் வணங்கி நிற்பவரை நோக்கி, நான் பொய்யாய் விளையாட அவ் விளையாட்டு மரணவிளையாட்டாயிற்றே யென்று துக்கக்கடலில் அழுந்தினாள். அதைக்கண்டு அவ்விடத்துள்ள யாவரும் இரக்கமுற்றார்கள். இப்படியிருக்க, வேட்டையாடச்சென்ற அரசனும் கூடப்போனவர்களும் மீண்டுவந்தார்கள். அப்பொழுது அரசன் இந்தத் துன்பத்தின் காரணம் யாதென்று விசாரித்துத் தன்தேவியால் நிகழ்ந்த வரலாற்றை மந்திரி சொல்லக்கேட்டு இதற்கு நான் என்னசெய்வேனென்று, கூக்குரலிட்டு நடுநடுங்கி அழுதான். இப்படியழுது இவள் என்னகாரியஞ் செய்தாள்? இவளை உயிர்வாங்குவேனாயின் பெண்கொலைப்பாவம நேரிடும்; ஆதலால், விரைவில், என்னுயிர் நீங்கும்படி செய்துகொள்வேனென்று துணிந்து, தன்னகரின் பக்கத்தில் அக்கினிகுண்டமொன்று ஏற்படுத்தும்படி மந்திரிக்கு நியமித்துப் பத்மாவதியார் மரணமானதையறிந்த ஜயதேவர்க் கெதிரில் வந்து அவரை வணங்கி, தேவரீரது மனைவியார் என்னால் உயிர் நீங்கினாரென்று அறிவித்தனன். அதைக்கேட்ட ஜயதேவர், மிக்க அன்போடு அரசனைத்தழுவிக்கொண்டு என்மனைவி இறந்தது உம்மாலன்று, நீர்போம் என்று சொல்லித் தம்முடைய தேவியாராகிய பத்மாவதியாரிடத்துக்குப்போய் அவரைக்கண்டு, ஸ்ரீகண்ணபிரானைத் தமது கண்களுக்குச் சாக்ஷாத்காரமாக்கிக்கொண்டு, தாளத்தையும் வீணையையும் கைகளிற்பற்றி, பூர்வத்தில் ஸாத்வீகராஜன் சொன்ன அறுபத்து நான்கு பாடலாகிய அஷ்டபதியைக்கொண்டு வாழ்த்தி, ராதா விலாசத்தை ஸ்ரீ ஹரிகீர்த்தநத்தோடு சேர்த்துப் பாடுதலும், அந்தப்பாட்டினோசை எம்பெருமானாகிய ஸ்ரீஹரியின் திருச்செவிகளில் சென்று நுழைந்தவுடன், அன்பராகிய ஜயதேவருக்கெதிரில் எழுந்தருளி, அவரைத் தழுவி, இந்த அஷ்டபதியைப் பாராயணம் பண்ணுவோரும், நல்லதென்று சொல்லிக் கேட்போரும் எல்லாத் துன்பங்களினின்றும் நீங்கும்படி அவரிடத்தில் அல்லும் பகலும் போய் தங்கியிருப்பேன் என்று அருளிச்செய்து, பத்மாவதியார் உயிர்பெற்று எழுந்திருக்கும்படி தம்முடைய கிருபா திருஷ்டியை அவர்மீது செலுத்தினமாத்திரத்தில், அந்தப்பத்மாவதியார், தேவர்கள் பூமழைசொரிய எழுந்து, தமது பிராணநாதராகிய ஜயதேவரை யெதிரே யிருக்கக் கண்டார்; இந்த அதிசயத்தைக் கண்ட வைஷ்ணவர்கள் யாவரும் வாழிகூறி, சக்ரபாணியாகிய ஸ்ரீஹரியின் திருவடியை வணங்கித் துதித்தார்கள். வேந்தனும் தன் பரிஜநங்களோடு கூடி, ஜயதேவரது திருவடியின்கீழ் நின்று வணங்கிப் புகழ்பெற்று விளங்கினான் என்று சொல்லி முடித்து, மேலே துளசிதாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஜயதேவர்சரித்திரம் முற்றிற்று.

# ௩-வது துளசிதாசர் சரித்திரம்.

ஸ்ரீ லக்ஷ்மீ நாதனாகிய பகவான், பரிசுத்தராகிய வால்மீகி முனிவரை நோக்கி, உலகத்தில் பாவமாகிய நெருப்பு மூண்டெரியாநின்றது; ஆகையால் அந்த நெருப்பை, நீர் அந்த உலகத்தில் அவதரித்து, ஸ்ரீஹரி பக்தியாகிய நீரினாலே தணிவிப்பீராக என்று அருளிச் செய்தலும், அம்முனிவர், இறைவனது திருவடித்தாமரை மலரைத் தமது சிரமானது நிலத்திற் படும்படி சாஷ்டாங்க தெண்டனிட்டுப் பூலோகத்துக்குப் போனார்; போய் அத்திராபுரத்தில் வாசம் பண்ணுகிற கனோஜா என்னும் பெயர் பூண்ட உத்தம குலத்தினராகிய ஆத்மாராமர் என்பவருக்குப் புதல்வராய் அவதரிக்க, தந்தையாராகிய ஆத்மாராமரும் அவர் மனைவியாரும் மிகவும் களிப்பை யடைந்து, தமது புதல்வருக்குத் துளசிதாசர் என்று பெயரிட்டு அன்போடு வளர்த்து, ஏழாம் வயதில் உபநயநம் செய்து, பன்னிரண்டு வயதுக்குள்ளே, லௌகிகவைதிக கர்மங்களையும் தமக்குரிய வேத சாகையையும் கற்பித்த பிறகு, மமதா என்னும் கந்நிகையை மணம்புணர்வித்தார்கள். பிறகு துளசிதாசர் தமதுமனைவியாராகிய மமதையோடு கூடி இல்லறம் நடத்தி, அந்த நகரத்துக்கு அரசனாகிய அகபரன் கட்டளையி லமைந்து, பெருஞ் செல்வராகி, சகல போகங்களையும் அநுபவித்துக்கொண்டிருக்கும் நாளில், மேகம்போல முழங்குகின்ற பெருஞ் சேனையையுடைய அரசனுடனே காட்டுக்குப் போகும்படி நேரிட்டது. அப்போது ஒரு தூதன் வந்து மமதையை நோக்கி, அம்மா, உமது தாயார் உம்மைப் பார்க்கவேண்டு மென்னும் விருப்பத்தால் உம்மை யழைத்து வரும்படி என்னை யனுப்பினார் என்று சொல்ல, மமதையும் தமது மாமியாரிடத்திற் போய், நான் என் தாய்வீட்டுக்குப் போய் வருகிறேனென்று சொல்லி வணங்கி விடைபெற்றுப் போய், க்ஷேம லாபங்களை விசாரித்து அங்கேயிருக்க, அரசனுடனே சென்ற துளசிதாசர் மீண்டும் வீட்டுக்கு வந்து, தமது மனைவியைக் காணாதவராய், தமது தாயாரை வினவித் தெரிந்துகொண்டு, மனம் வாடி, அஞ்சாமல் இராக்காலத்தில் போய், மாமியார் இருக்கிற ஊரை யடைந்து, அவர் வீட்டுக்கதவடைத்திருப்பதைக் கண்டு, வீட்டின் மேல்முகட்டிலிருந்து இழிந்துவருகிற பாம்பைப் பற்றி, அதையே கயிறாகக்கொண்டு வீட்டின்மேல் ஏறி, வீட்டு முற்றத்தில் விரைந்து பாய்ந்தவுடனே, இவர் பாய்ந்த வொலியினால் யாவரும் பயந்து, விழித்து வெளியே வர, மமதையும் வெளியில் வந்து, மதிமயங்கித் தெளி வடைந்து, இவரைக் கண்டு, என் பிராணநாதரே, நீர் இந்த இருள் செறிந்த இரவில் எவ்வாறு வந்தீர், வீட்டின்மேல் எப்படி யேறினீர் என்று வினவ, நான் வருவதற்கு நீ விட்ட கயிற்றைப் பிடித்துக்கொண்டு ஏறினேனென்று தாசர் சொல்ல, மனைவி அந்தக் கயிற்றைக் காட்டுமென்று கூட வந்து, அவர் சொன்ன கயிறு பாம்பாயிருக்கக் கண்டு, ஐயோ, இதைக் கையாற் பிடித்தகாலத்

திலும் உமது காமமயக்கத்தால் பரம்பொருளை அறியவில்லையே, இந்திரனும் இராவணனும் காமக்கடலில் அழுந்தி வருந்தினதை அறிந்திலீர் போலும்; இப்படி செய்யலாமாவென்று கையைப்பற்றி, வாருமென் றழைத்துப்போய், தமது விடுதியிலுள்ள ஆசநத்திலிருத்தி, மமதையானவள் இன்சொற்கள் கூறி மாதராசையாகிய கடலில் முழுகினவர்கள் மிகவும் கண்கலங்குவார்கள்; ஆகையால் ஸ்ரீராமபிரானுடைய திருவடியின்மேல் அன்புசெய்து, பேரின்பக் கடலில் இறங்கி, அவரது நாமசங்கீர்த்தநம் என்னும் அமிர்தத்தை யுண்ணக் கடவீர் என்று இவ்வாறு சொன்ன மமதையின் வார்த்தையைக் கேட்ட துளசிதாசர், இவள் சொல்லுவது உண்மைதானென்று மதித்து, பரிசுத்த ராகிய இறைவனது திருவடியை மனத்திற் பதித்து, சந்த்ரபிம்பம்போன்ற முகத்தையுடைய மமதையை நோக்கி, நெருப்பில் விழுகின்ற குழந்தை யைத் தாயானவள்பார்த்து அதின் ஆபத்தைத் தீர்ப்பதுபோல, நீ என் காமத் துன்பத்தை நீக்கினையாகையால், நீ எனக்கு மனைவியல்ல, எனக்குத் தாயே யாவாய் என்று சொல்லி, அந்த மமதையின் பாதங்களில் விழுந்தெழுந்து, நன்று சொன்னை யென்று கொண்டாடி, நீ செய்த நன்றிக்கு ஒப்பாகிய பொ ருளானது இவ்வுலகத்தில் ஒன்றுமில்லை யென்று சொல்லி, இல்வாழ்க்கையை யொழித்துக் காட்டிற்போய், திவ்யமான கங்காநதியின் நீரில்முழுகி, கொடிய குணம் நீங்கப் பெற்று, நான் வால்மீகன் அல்லவா, நான் யாதுகாரணமாக இவ்வாறாயினேன் என்று தெளிவடைந்து, சர்வேசுவரன் இவ்வுலகிலுள்ள பத்தாத்மாக்களைத் திருத்துமபொருட்டு நம்மை நியமித்தனுப்ப, அதை விட்டு, பாசக்கடலில் அழுந்திப் பரிதபிக்கிறேன், இனியாயினும் இதுதீரும் வகைசெய்வேன் என்றெண்ணி, நல்லவுணவுகளை யொழித்து, உதயகாலத்தி லே யெழுந்து, புண்ய நதிகளில் மூழ்கி, நாள்தோறும் செய்யவேண்டிய கர்மங்களை விரைவாய் முடித்து, உதிர்ந்த காட்டுச் சருகை யுண்டு, அளவு படாத அரியதவஞ் செய்துகொண்டிருந்தார். இப்படி அருந்தவம் செய்வோ ராகிய துளசிதாசர், தினந்தோறும் தமது கையிலுள்ள கமண்டல நீரைக் கொண்டு, கைகால் முதலியவற்றைச் சுத்திசெய்து, மிச்சமான நீரை அங் குள்ள ஒருமரத்தடியில் கவிழ்த்துவிடுவார். இப்படி, ஸ்ரீராமநாமஸ்மரணையை ஒருபோதும் மறவாத துளசிதாசர் பன்னிரண்டு வருடம் வரையில் நடத்தி வருகையில், ஒருநாள், அந்த மரத்தில் வாழ்ந்திருந்த பேயானது இவருக் கெதிரில் வந்து நின்று, தனது கோரரூபத்துடனே கைகுவித்து வணங்கி, தாசரே, நீர் பரமபாகவதராகையால் உம்மைக் காணவேண்டுமென்று வந் தேன், உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளலாம் என்றுசொல்ல, துளசிதாசரானவர் அந்தப் பேயை நோக்கி, நீ யார், உன் பேர் என்ன, எனக் கெதிரில் வந்தகாரணம் யாது, சொல்லென்று கேட்க, பேயானது நான் அலகை, இந்த மரத்தில் நெடுநாளாயிருந்தேன். நான் ஆறு, கிணறு, ஏரி முதலியவற்றில் நீருண்ணும் வழக்கமில்லாமையால், மிகுதியாகிய தாகத்தி

ளுல் வருத்த மடைந்திருந்தேன், அப்படி யிருந்த எனக்குப் புண்ணியவசமே வருடகாலமாய் நீர் வார்த்துக் காப்பாற்றி வருகிறீர், ஆதலால் எனக்கு உம் மீது கருணை உண்டாயிற்று, நீர் விரும்பின வரத்தைக் கேட்கலாமென்று சொல்லக் கேட்ட துளசிதாசர், அப்படி வரங்கேட்க விருப்பமில்லாதவராய் இது என்ன, கருடனைத் தேடும்போது காகம் எதிர்ப்பட்டதுபோலவும், கற்பக மரத்தை விரும்பக் கள்ளிமரம் எதிர்ப்பட்டதுபோலவும், புண்ணியத்தை விரும்பி யொரு காரியத்தைச் செய்ய, அது பாவமாய் முடிந்தது போலவும் யான் அழிவற்றவனாகிய பகவானை நினைந்தபோது ஒரு அலகை யெதிர்ப்பட்டது, இனி என்செய்வேன் என்று மனந் தளருங் காலத்தில், பேயானது இவர் நம்மை வெறுத்தது யாதுக்கோவென்று, மறுபடியும் இவரை நோக்கி, நீர் சிறந்த புத்திமானென்று நினைந்தேன், இனி என் தகுதிக்கேற்ற வரமொன்றை உமக்குத் தர விரும்பினேன் என்று சொல்ல, தாசரானவர், பேயை நோக்கி, அப்படி உனக்கு விருப்பமிருந்தால், திருத்துழாய் மாலையை அணிந்த ஸ்ரீராமமூர்த்தியானவர் எனக்கெதிரே யெழுந்தருளும்படியான வரம் தரக்கூடுமானால் தரலாம், அந்த வரத்திலல்லாமல் வேறொன்றிலும் எனக்கு விருப்பமில்லை யென்று சொல்ல, பேயானது பயந்து, தான்நின்ற நிலை விட்டுத் தூரமாய் விலகி, தாசரே, நீர் விரும்பும் சுவாமியைக் காட்ட எனக்குச் சக்தி யில்லை. ஆயினும் காட்ட வல்ல பரிசுத்தாத்மாவை உமக்கு அறிவிக்கிறேன், அவரால் உமது மனோரதம் நிறைவேறும் என்றுசொல்ல, தாசர் அவரைக் காட்டவேண்டுமென்ன, பேய், அவர் வாயுபுத்ரராகிய அநுமான் என்று சொல்ல, அவர் எங்கே யிருப்பார் என்று தாசர் கேட்க, நீர் தினந்தோறும் விளுவும் பெருங் கதையைச் சிரவணஞ் செய்ய வந்து சேர்பவர்களுக்கு முந்திவந்து சிரவணஞ் செய்வதும், அவர்கள் போகும்போது அவர்களுக்குப் பின் தொடர்ந்துபோவதும ஆகிய தொழிலை யுடையவராய், தலையில் அணிந்த குல்லாவோடு, கிழிந்த வஸ்திரத்தையும், கையில் ஒரு தடியையும், அழகாகிய கோவணத்தையும் கொண்டு விளங்குவார். அன்றியும் வேதியரில் மூப்படைந்தவர் போலத் தோன்றுவார். அவர்தான் மாருதியென்று பேயானது சொல்லி நீங்கினவுடனே, ஸ்ரீ ஹரி பக்தியிற் சிறந்த தாசர், மறுநாள் வழக்கம்போலவே ஸ்ரீ விஷ்ணு புராண காலக்ஷேபத்தைத் தொடங்கு முன்னமே, மாருதியானவர் காலக்ஷேபங் கேட்க வருகிற மற்றையவரைப் பார்க்கிலும் முந்திவந்து காலக்ஷேப கோஷ்டியில் எழுந்தருளியிருந்தார். அங்குப் புராண காலக்ஷேபம் முடிந்தவுடனே, மெய்த் தவத்தையுடையோராகிய தாசர்கள் தமது இருப்பிடம் போகாநிற்க, மாருதியும் அவரைப் பின்தொடர்ந்து போவதைக் கண்ட துளசிதாசர், சுவாமீ! எனக்கு அருள்புரியவேண்டும் என்று மாருதியாகிய வயோதிக வேதியரை வணங்க, மூதியராயிருக்கிற மாருதியானவர் நீர்என்பாதத்தைத் தீண்டுதல் தகுதியல்லவேயென, ராம தூதராகிய உமது பாதங்களை வணங்குதல் தகுதியேயாமென்று துளசிதாசர் வணங்குதலும், மாருதியானவர், இவர் சதாகாலமும்

ஸ்ரீராமநாமஸ்மரணையை விடாத பரமபாகவதர், அன்றியும், இவர் வால்மீகி முனிவரே யாமென்று நினைத்து, உள்ளன்போடு துதித்து, அவரைத் தழுவி, தாசரை நோக்கி, உமக்கு வேண்டியதைச் சொல்லுமென்று கேட்க, ஸ்ரீதுளசிதாசர், நீர் சதாகாலமும் சேவை செய்கிற ஸ்ரீ ராமபிரான் எனக்குச் சேவை தந்தருளும்படி செய்யவேண்டும் என்று சொல்ல, மாருதியானவர் அப்படியே செய்கிறேனென்று சொல்லி, மறைந்திருந்த ஸ்ரீ ராமபிரானை நோக்கி, வந்தனை வழிபாடுகள் செய்து, சுவாமீ! உன் திருவடிக் கன்பனான வால்மீகியானவன் உன்னைச்சேவிக்க, மிகு விருப்பங்கொண்டிருக்கிறான், ஆகையால் அவனுக்கு அருள்செய்வது உனக்குக் கடமையாகும் என்று மாருதிசொல்ல, ஸ்ரீராமபிரான் அந்தச் சொல்லைக் கேட்டு, நல்லது அப்படியே யாகட்டும் என்று, வானரங்கள் தம்மைத் தொடர்ந்து வர, தமது கோதண்டம் என்னும வில்லுடனே, துளசிதாசருடைய ஆசிரமத்தின் வழியாய்ச் செல்ல, தாசர் பார்த்து, இவன் யாரோ துலுக்கனென்று நினைத்து, அவருக்கு வந்தனை வழிபாடுகள் செய்யாமலிருக்க, மாருதியானவர் தாசரிடத்திற்கு வந்து, ஸ்ரீராமபிரானைத் தரிசனம் செய்தீரோவென்ன, தாசரானவர், இவ்வழியாக ஒரு துலுக்கன் சில வானரங்களோடு போனான், அவனையன்றி வேறொருவரையும நான் கண்டிலேன் என்று சொல்ல, அநுமானனவர் ஆச்சரியப்பட்டு, இவர் சொல்லுவதை யோசித்தால், வலியவந்த காமதேனுவை ஒரு சாதாரண ஆடென்று நினைத்தாற்போலவே யாயிற்று என்று சொல்லுதலும, அயோத்யா நகரத்தை யாளுகின்ற சக்ரவர்த்தித் திருமகனார், முனிவர் சொன்னபடி, கோதண்டத்தை யேந்திவாராமைக்கும், இலக்குவரோடு கூடிவாராமைக்கும் காரணம் யாதோ அறிகிலேன்; அதுநிற்க, என் சந்தேஹம் தீரும்படி இப்பொழுது சீதாபிராட்டியோடு எழுந்தருளப்பண்ணினால் உனக்குப் பெரும்புகழுண்டாகும் என்று சொன்ன தாசரது சொல்லைக்கேட்டு, மாருதியானவர், உன் மனோரதத்தை ஸ்ரீராமபிரான் முடிப்பாரென்று சொல்லித் தேற்றி, மறைவாய் ஆசிரமத்துள்ளேபோய், ஸ்ரீராமபிரானை அன்போடு தோத்திரஞ்செய்ய, பகவானாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர், ப்ரத்யக்ஷமாகி, நீ என்னை நினைத்துப் பலவகையாய்த்தோத்திரம்பண்ணினதற்கு மிகவும் சந்தோஷமடைந்தேன்; உன் கருத்தென்ன சொல்லென்று கேட்க, மாருதியானவர், சுவாமீ! தேவரீரைத் தரிசிக்க விரும்புகிற துளசிதாசருக்கெதிரே, ஸ்ரீஜாநகிபிராட்டியோடு கூடிச் சேவை சாதிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, பகவானனவர், அநுமானை நோக்கி, அநுமானே! இது கலிகால மாகையால் அப்படி எனது நிஜரூபத்தோடு காணப்படுதல் கூடாதென்றுசொல்ல, அநுமானனவர், உன் தொண்டராகிய துளசிதாசருக் கெதிரே சேவைசாதிப்பதனால் உமக்கு என்ன குறையுண்டாகும் என்று கேட்க, பகவானனவர், அநுமானே, உன் விருப்பத்தின்படியே செய்கிறேனென் றருளிச்செய்ய, மாருதியானவர் இந்தச் செய்தியைத் துளசிதாசருக்கறிவித்தார். உடனே பகவானும் சீதாசமேதராய் எழுந்தருளக்கண்ட துளசிதாசர், சுவாமியைப் பலவகையாய்த் தோத்திரஞ்செய்து

வணங்கினவுடனே, ஸ்ரீராமபிரான், அந்தத் துளசிதாசரை நன்றாய்த் தழுவிக் கொள்ள, மாருதி, தாசனை நோக்கி, பகவானுடைய குணநுபவத்தை இடைவிடாமல் செய்துகொண்டிருந்ததனால் உனக்கெதிரில் பகவான் ப்ரத்யக்ஷமானர், இனி இந்தப் பூலோகத்தில் ஸ்ரீராம சரிதாம்ருதமேஉமக்குத் தாரகமென்று சொல்லி, பிறகு ஸ்ரீராமமூர்த்தியை நோக்கி, தாசரதீ, இந்தமெய்யன்பராகிய துளசிதாசருக்குத் தேவரீர் பூர்ணக்ருபைசெய்யவேண்டும் என்று வேண்ட, அந்த வேண்டுகோளுக்குப் பகவானுனவர் இரங்கி, துளசிதாசருடையதலையின்மேல் தமது திருக்கரம் வைத்து உண்மைப்பொருளை உபதேசித்து மறைந்தார். பிறகு பகவானுடைய நியமனப்படியே அநுமான் சொன்னதையே நிர்மலரான துளசிதாசர் மேற்கொண்டு, பரிசுத்த க்ஷேத்ரமாகிய காசிக்குப்போய், ஸ்ரீவிஷ்ணுகதாப்ரவசநம் செய்துகொண்டு, அநேகம் பாகவத கோஷ்டியோடு அவ்விடத்திலேயே எழுந்தருளியிருந்தார். இப்படியிருக்கும் நாளில், காசீ க்ஷேத்ரத்திலுள்ளவர் இவர்மீது மிகவும் அன்பு பாராட்டி, ஒருமடம் கட்டுவித்து, அதில் இவர்வசிக்கும்படியான ஏற்பாடுசெய்து யாவரும அங்கு வந்து பிக்ஷைசெய்யும்படியாகவும் அமைத்தார்கள். பொன்னினுலும் வெள்ளியினுலும் பாத்திரங்கள் அமைத்து, அங்கு வருவோரெல்லாருக்கும் சகலமான இனிய உணவுகளுண்பிக்கத் தகுந்தபரிசாரகர் முதலியோரையும் அமைக்க, தாசரும் தினந்தோறும் அநேக பாகவதரோடு கூடி உண்டு சுகமாய் வாழ்ந்திருந்தார். இப்படி இவரிருக்குங்காலத்தில், இவரது கீர்த்தியானது உலகெல்லாம் பரவுதலால், யாவரும், தத்தமக்கிசைந்த பண்டங்களை அந்த மடத்துக்கு அனுப்ப, ததீயாராதநம் குறைவுபடாமல் நாளுக்குநாள் அபிவ்ருத்தியடைநதுவந்தது. இந்தமடத்தில் வேதியர் இடையறுமல் வருவதும் போவதுமாயிருக்கையால், இந்தமடத்தின் வாயில்கள் இரவினும் பகலினும் மூடாமலிருப்பது வழக்கம். இதில் நுழைந்து திருடிக்கொண்டுபோகிறவர்கள் இல்லாத குறையேயன்றி வேறொன்று மில்லை. இப்படியிருக்கையில்,ஒருநாளிரவில் இரண்டு திருடர்கள் உள்ளே நுழைந்து எல்லாரும் உறங்குவதைக் கண்டு, தமக்கு விருப்பமுள்ளளவும் அங்குள்ளபொருள்களை வாரிக்கட்டிக்கொண்டு போகும்போது, வாயிலில் இரண்டு காவற்சேவகர்கள் காணப்பட்டார்கள். அவர்களைக் கண்டவுடனே திருடர்கள், இங்கே காவற்சேவகர்கள் இருக்கிறுர்கள் என்று வேறொரு வாயிலின் வழியாய்ப் போக, அங்கு இரண்டு வில்வீரர்கள்தோன்றினுர்கள். இங்கும் காவலிருக்கிறதென்று வேறொரு வாயிலின் வழியாய்ப்போய் அங்கும் காவல்வீரரைக்கண்டு திரும்பி அந்த ராத்திரி முழுதும் மடத்தினுள்ளே மறைந்திருந்து காவல் வீரருக்கு அஞ்சி, தாம் எடுத்த பொருள்களையெல்லாம் மடத்திலே வைத்துவிட்டு வெளியே வர, அப்பொழுதும் காவல்வீரர் அதட்டக்கண்டு, திரும்பி உள்ளே யிருந்து, எந்த வழியாற் போகலாமென்றாலும் சரிப்படவில்லையே, என்ன செய்வோமென்று மனந்தளர்ந்திருக்கையில், இரவும்விடிந்தது. விடிந்தவுடனே, பாகவதரெல்லாரும் ராமநாமசங்கீர்த்தநம் செய்துகொண்டே

யெழுந்திருந்தார்கள். துளசிதாசரும் எழுந்திருந்து பாகவதரிடையிலே வர, திருடர்கள் கண்டு அவர் திருவடியில் வீழ்ந்து வணங்க, தாசர் நீங்கள் யாரென்றுவினவ, திருடர்கள், சுவாமீ, வாயில்கள் கதவடையாமலிருந்ததனுல் உள்ளே நுழைந்துவேண்டுமளவும் பொருள்களைக் கவர்ந்துபோகப்பார்த்தபோது, நாங்கள் வருங்காலத்தில் இல்லாத காவல் வீரர்களும் வில்வீரர்களும் வாயில்கள்தோறும் இருக்கக் கண்டு திரும்பிவந்து மடத்துக்குள்ளே யிருந்தோம், பொழுதும் விடிந்தது, இதுதான் நடந்த செய்தியென்று சொல்லி வணங்கினுர்கள்; இவர்களைக் கண்டு உண்மையான செய்தியைத் தெரிந்துகொண்ட தாசரானவர், தமது சீடர் எல்லாரையும்அழைத்து, இதுவரையில் நமது மடத்தின் வாயிலில் போவதும் வருவதுமாகியசெய்கைக்கு யாருந்தடைசெய்வாரில்லையே, இப்போது தடைசெய்த காவல்வீரர் யார் என்றுவினுவ, சீடர்கள், சுவாமீ, நமது வாயில் காவற்காரரை யாம் நியமிக்கவில்லையென்று சொல்ல, தாசர், அந்தத் திருடர் ஒவ்வொரு வாயிலிலும் காவல்வீரரும், வில்வீரரும் இருந்ததாகச் சொல்லுகிறுர்களே, நான்கு வாயில்களிலும் போய்விசாரியுங்களென்றுசொல்ல, சீடர்கள்போய் விசாரித்து வந்து, அப்படிப்பட்ட சங்கதி ஒன்றுமில்லை யென்று சொல்ல, தாசரும சீடரும் ஏங்கியிருந்தார்கள். அப்போது, தாசரானவர், பகவானைக் குறித்து, சுவாமீ, திருடர்வந்து களவுசெய்தார்களென்று தேவரீர் திருத்தமபியாரோடும் எழுந்தருளினுல், தேவரீர் முற்காலத்தில் திருவாய்ப்பாடியில் வெண்ணெய்திருடினீர் என்றுநினைக்கவுங் கூடுமோ? வேதமும் தீண்டுதற்கு நாணுகின்ற உம்முடைய பாதாரவிந்தத்தை இத்தலைவாயில் தீண்டப்பெற்றதோ? தலைவாயிலில் எழுந்தருளின தேவரீருடைய திருவடிக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன் என்று சொல்லி அவ்விடத்திலிருந்த திருடர்மேல் சிறிதும் கோபங்கொள்ளாமல் அந்தத் திருடர்களை நோக்கி, உம்முடைய மனம் விரும்பின அளவு திரவியம் எடுத்துக்கொண்டு நாணமில்லாமல் போகலாம் என்று சொல்லினுர். அதைக் கேட்ட திருடர்கள் தாசரை நோக்கி, சாதுக்களுக்குத் தலைவராயிருப்பவரே, உம்மால் பகவானுடைய திருவடியை யாம் காணப்பெற்ருேம், பரிசவேதியானது படுமிடந்தோறும் பொன்னுக்குதல் போலவும்,சூரியன்தோன்றுமுன்னே இருள் விலகுவதுபோலவும், உமது திருவடியை யடைதலால், எங்களுடைய தீவினையும் அஜ்ஞாநமும் நீங்கப்பெற்ருேம்; இனி உமது திருவடித் தாமரையை வணங்கும்படி செய்வதே எமது வேண்டுகோள் என்று சொன்னுர்கள். சொல்லிப்பணிதலைக்கண்டு, நீங்கள் பகவானைச் சேவிக்கும்படியான பாக்கியம் பெற்றிருக்கிறீர்கள், ஆதலால் எப்போதும் உங்களோடுகூடியிருப்பதே என் துணிவென்று சொல்லி, அந்தத் திருடர்களை அவ்விடத்திலே யிருக்கச் செய்தார். இப்படி இவர் பாகவதகோஷ்டியோடுகூடி ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநத்தாலே காலங்கழிக்கையில், ஒருநாள் ஒருவேதியன் இவரது மடத்தின்வாயிலில் உட்கார்ந்து, ஸ்ரீஜாநகீராமா என்று உச்சரித்து,அங்குள்ளாரை நோக்கி, நான் ப்ரஹ்மஹத்யை செய்தவன், எனக்குக் கொஞ்சம் பிரசாதம் தரவேண்டும்

என்று கேட்க, அந்தச் சமயம் வேதியர் யாவரும் ஔபாசநம்முடித்து, க்ருஷ்ணார்ப்பணஞ் செய்து, போஜநஞ் செய்யப்போகிற சமயமாயிருந்ததனால் இவரது சத்தத்தைக் கேட்டவுடனே தாசரானவர் வெளியேவந்து, அங்கிருந்த வேதியனை அன்போடு தழுவிக் கைப்பற்றி, அழைத்துவந்து, தாம் உண்ணும் பந்தியில் உட்காரவைத்து, வேதியரே, நீர் ஜாநகீராமா என்று உச்சரித்ததனால், நீர் செய்த ப்ரஹ்மஹத்யை முதலான பாவங்கள்வெந்து நீறாய்விட்டன; இந்த வேதியரோடிருந்து அமுது செய்வீராகவென்று சொல்ல, அந்தப் பந்தியிலிருந்த வேதியர் தாசரை நோக்கி, இவரது வினைகள் தீர்ந்தது எப்படியென்று வினவ, தாசர் பூர்வம் நடந்த வேடன் கதை முதலானவைகளைச் சொல்ல, அவ்வேதியர், எங்களுக்குக் கதைகள் அவசியமில்லை, இந்த க்ஷேத்ரத்தில் விசுவநாதஸ்வாமி சந்நிதியிலிருக்கிற கல்நந்தியானது இந்த வேதியன் முன்வைத்த அந்நத்தைப் புசிக்குமானால் நாங்கள் இவனோடிருந்து புசிப்போம் என்றார்கள். அவர்கள் சொன்ன சொல்லைத் தாசர் கேட்டு, அவ்வேதியனுக்குப் படைத்த அந்நத்தைக் கல்நந்திக்கெதிரில் வைத்து, விசுவநாதா! தேவரீர் ஆதியில் தேவர்களைக் காக்கும் பொருட்டு நஞ்சுண்ட வேகத்தை, ஸ்ரீராமநாமாம்ருதத்தால் தணிவித்தீர் என்பது உண்மையானால், ஸ்ரீராமநாமத்தை உச்சரித்த இந்தவேதியனது ப்ரஹ்மஹத்யையாலுண்டான பாவம் நீங்கினதென்பதற்குச் சாக்ஷியாக இந்தக் கல்நந்தியானது இந்த அன்னத்தைப் புசிக்கச்செய்தருளவேண்டும் என்று துதிக்க, அந்தக் கல் நந்தியானது, வாலை யசைத்தெழுந்து, காதாட்டி, எதிரே நிற்போருடைய முகங்களைப் பார்த்து, சுவாசம்விட்டுக்கொண்டே, தாசர் தந்த அந்நத்தைப் புசித்துவிட்டு, முன்போலவே கல்நந்தியாகி நின்றது. இந்த அற்புதத்தைக் கண்ட வேதியர் யாவருங் களித்து, ஸ்ரீ ஹரிதாசர் கொண்ட பக்தியின் பெருமை எம்மால் அளவிடப்படாது என்று, துளசிதாசருடைய திருவடியை வணங்கி, ஜயஜய வென்று ஆநந்தக் கூத்தாடி, ஸ்ரீ ஹரியின் திருநாமத்தை நினைந்து, நக்ஷத்ர சமூஹத்தி னிடையே பிரகாசிக்கிற பூர்ண சந்திரன்போலத் துளசிதாசர் விளங்கும்படி அவரைச் சூழ்ந்து துதித்து, அவரைப் பின்தொடர்ந்து மடத்துக்கு வந்து, முன்னே தம்மால் மறுக்கப்பட்ட வேதியனோடிருந்து அமுதுண்டு, சலநமில்லாமல் ஸ்ரீராமருடைய கல்யாண குணங்களாகிய அகாதமான கடலில் ஆடினார்கள். இப்படி இவர்கள் ஸ்ரீராமநாமாம்ருத பாநஞ் செய்து பரமத்ருப்தர்களாய் வாழ்ந்திருக்கையில், ஜயத்து பாலன் என்னும் பெயரையுடைய ஒரு வணிகனானவன், தனது ஆயுள் நிரம்பி மரணத்தை யடைந்தான். அவன் மனைவியானவள் அருந்ததிபோன்ற கற்புடையளாதலால், தன்கணவனோடு உடன்கட்டை யேற நினைந்து, கங்காநதிக் கரையில் தீமூட்டி, அதிலிறங்கவேண்டுமென்று போகிறவள், அந்த வழியிலுள்ள துளசிதாசருடைய மடத்தைக் கண்டு, இதில் வசிப்பவராகிய பெரியோரை வணங்கிச் செல்லுவோமென்று உள்ளே நுழைந்து, அங்குள்ள தாசரைச் சாஷ்டாங்கமாக வணங்க, துளசிதாசரும், அந்தக் கந்நிகையை நோக்கி, உன

க்கு அஷ்ட புத்ரர்கள் உண்டாவார்கள், அந்தப் புத்ரபாக்கியத்தால், இவ்வுலகத்தில் சிரஞ்ஜீவியாய் மகிழ்ச்சியோடு கூடி வாழக்கடவாயென்று ஆசீர்வதிக்க, அவள், தாசரை நோக்கி, என் கணவரானவர் பரமபத மடைந்தார், அவருடைய பிரிவுக்கு ஆற்றுதவளாய், அவரோடு உடன்கட்டை யேறப்போகிறேன், இந்தமடத்தைப் பார்த்து, இதில் வாசம் செய்வோர்களாகிய பெரியோர்களைக் கண்டு வணங்கிச் செல்லுவோமென்று நினைந்து உட்புகுந்து தேவரீருடைய திருவடியை வணங்கினேன், எனக்குப் புதல்வருண்டாகும்படி ஆசீர்வதித்தருளினீர், அது பொய்யாகுமா, இந்த ஆசீர்வாதத்தின் பயன் எப்படியாகுமோ அறிகிலேன் என்றுசொல்ல, தாசரானவர், பெண்ணே, உன் கணவன் மரணமடைந்த செய்தி எனக்குத் தெரியாமல் இப்படி ஆசீர்வதித்தேன், ஆனாலும் ஸ்ரீஹரியானவர் இந்த ஆசீர்வாதத்தைப் பலிக்கச் செய்தருளுவார் என்று சொல்லக் கேட்ட கந்நிகையானவள், பின்னும் சாஷ்டாங்கமாய்ப் பணிந்து, தீமூண்டெரியுமிடத்தில் பிரேதத்தைக் கண்டு அதனருகே வந்து நின்றவுடனே, பிரேதமாயிருந்த தன்கணவன் பிழைத்து எழுந்து நிற்கக் கண்டு மகிழ்ந்தாள்; கூட வந்தவர்களும் பார்த்து அதிசயித்தார்கள்; பிறகு கந்நிகையானவள், கணவன் கையைப் பிடித்தழைத்துக்கொண்டு மடத்திற்குப் போய்த் துளசிதாசருடைய திருவடியை வணங்க, அவரும், ஸ்ரீஹரியானவர் க்ருபைசெய்தாரென்று மிகவும் சந்தோஷித்து, இருவரையும் வாழ்த்தினார். அவ்வாழ்த்துதலைப் பெற்றுத் தம்பதிகள் தமது வீட்டுக்கு வந்து சுகமாய் வாழ்ந்திருக்குங் காலத்தில், துளசிதாசருடைய ஆசீர்வாதம் வீணாகாமல் அஷ்ட புத்ரரைப் பெற்றுச் சுகித்திருக்க, இந்தச் செய்தியை அந்த ஊரிலுள்ளோர் யாவரும் அறிந்து, திருடவந்த கள்ளர் அகப்பட்டுக்கொண்டதும், கல் நந்தி சோறுண்டதும், பிணம் உயிர்பெற்றெழுந்ததும், இந்த விஷ்ணு பக்தருடைய ஆணையினாலே யன்றோவென்று புகழ்ந்திருந்தார்கள். இந்தச் செய்திகளை யெல்லாம், சிலர் சொல்லக் கேட்ட ஹஸ்திநாபுரத்தை யாளுகின்ற அரசனாகிய அக்பர் என்பவன், தன் மந்திரியை நோக்கி, அந்தப் பரம பாகவதராகிய துளசிதாசரை வரவழைக்கவேண்டுமென்று நியமிக்க, மந்திரியும் அப்படியே சிவிகை, தேர், யானை முதலியவைகளோடு காசியைக் குறித்துப் போய்த் துளசிதாசருடைய மடத்தை யடைந்து, தாசரை வணங்கி, சுவாமீ, எங்கள் அரசன் தேவரீருடைய பெருமையைக் கேட்டு, தேவரீரைத் தேர்மேலேற்றிக்கொண்டு வரும்படி எனக்குக் கட்டளையிட்டான், ஆதலால் தேவரீர் எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, துளசிதாசர், எமக்கு அரசனிடத்துக்குப் போகவேண்டிய காரியம் ஒன்றுமில்லையாயினும், அவனை வைஷ்ணவனுக்கலாமென்று நினைத்து, அந்த மந்திரியோடு தேர்மேலேறி, ஹஸ்திநாபுரத்தை யடைந்து, அரசன் எதிர்கொண்டு வந்து அழைத்துப் போகப்போய், அவனிட்ட சிங்காதநத்தில் எழுந்தருளினார். இவருக்கு ஷோடசோபசாரங்களும் செய்து கைகூப்பி வணங்கித் தோத்திரஞ்செய்து, ஸ்வாமீ, நீர் செய்த அற்புதங்களைக் கேட்டு இவ்வுலக முழுதும் புகழ்கின்றது. ஆகை

யால் நான் உம்மையன்றி வேறொரு தெய்வ மிருப்பதாக மதித்திலேன் ஆனால், இந்தஅற்புதங்களை எனக்கெதிரே செய்யவேண்டுமென்று சொல்ல தாசரானவர், எனக்கொரு சக்தியுமில்லை, ஸ்ரீராம நாமமே பல அற்புதங்களை யும் செய்யுமென்றருளிச்செய்ய,அரசனானவன்,ஸ்ரீராமமூர்த்தியைக் காட்ட மற் போனீரானால் உம்மை விடமாட்டேனென்று சொல்லி, அருகிலிருப்பவ ராகிய சிலரை யழைத்து, இந்தத் தாசரை விடாதேயுங்களென்று கட்டளை யிட்டு, மேல்மாளிகையை யடைந்தான். பிறகு தாசரை அரசன் ஆஜ்ஞையின் படி காவல்செய்துவைத்தார்கள். அப்போது தாசரானவர் ஸ்ரீ ஹரிபக்தியிற் சிறந்தவராகிய ஸ்ரீ ஆஞ்சநேயரை நினைத்துத் தோத்திரம்பண்ண,மாருதியான வர் இவருக்கு ப்ரத்யக்ஷமாகி நின்றார். அவரைத் தாசர் நோக்கி, ஐயனே உன்னிடத்தில் அன்பில்லாதவனாகிய அரசன், ஸ்ரீ ராமபிரானைக் காட்டுவா யாகவென்று என்னைக் காவற்படுத்தி மிகவும் துன்பம் விளைத்தான், ஆகை யால், இப்பொழுதே என் துன்பத்தை யொழித்தருளவேண்டுமென்று பிரா ர்த்திக்க, மாருதியானவர் தமதிடத்துக்கு வந்து, தமது சேனையை நினைத்த மாத்திரத்தில், பதினாயிரம் வாநரவீரர் அந்த க்ஷணமே வந்து நிற்க, மாருதி யானவர் அவர்களை நோக்கி, இந்தவூரைச் சற்றுநேரத்தில் அதம் பண்ணுங்க ளென்று கட்டளையிட, உடனே அவர்களும் கட்டளையிட்டதே போதுமெ ன்று மரங்களாலும், கற்களாலும் அடித்தும் எறிந்தும் வீடுகளைப் பொடி செய்து, அரசன் மாளிகையைப் பேர்த்துக் கடலிலெறிந்து, வீதிகளில் நகர ஜநங்கள் சஞ்சரிக்க இடமில்லாமல் கல்லாலும், மரத்தாலும் வழியடைத்து ஊராரையும் பலவகையாய்க் கொல்ல, ஊர்முழுதும் கோவென்றலறி யழுங் கூக்குரல் அதிகரிக்க, ஸ்திரீ புருஷர்கள் யாவரும் அரசனிடத்திற்போய் நிக ழ்ந்த செய்தியைச் சொல்லிப் புலம்பினார்கள். அங்கும் வாநரங்கள் வந்து அநர்த்தம் செய்வதைக் கண்டு, அரசன் முதலான யாவரும் கலங்குங் காலத் தில், தாசரை அழைத்துக்கொண்டு வந்தவன் முதலான ராஜபரிசாரகர்கள் அரசனைநோக்கி, ஐயனே, இங்கே வந்துதங்கியிருக்கிற சாதுவான தாசருக்கு த் தேவரீர் செய்த துன்பத்தினால் இவ்வாறு நேரிட்டது போலும் என்று சொல்ல,அரசனும் அப்படியிருக்கலாமென்று ஆலோசித்து, இன்னம் சிறிது நேரத்தில், இந்த வாநரப்படைகள் இவ்வூரைத் தலைகீழாகச் செய்வதற்குச் சந்தேக மில்லையென்று சொல்லி, காசியில் வாழ்வோராகிய தாசரை இங்கே வரவழைத்தது நமக்கு அடாதகாரியம் என்று தன்னை நொந்துகொண்டு மனந்தளர்ந்து, உடல்நடுங்கி, அச்சத்தால் நாவுலர்ந்து,மெய்த்தவத்தையுடை யவராகிய துளசிதாசரைப் பிரார்த்திக்கும் பொருட்டு வந்தான்; வந்து ஆதி காலத்தில் துரியோதநன் துரௌபதிக்குச் செய்த தீமையும், துர்வாச ரிஷி அம்பரீஷ ராஜனுக்குச் செய்த தீமையும், ஸ்ரீஹரி பஜநத்தாலல்லவோ நீங்கி னது என்று அவர்களுடைய புகழையெடுத்துப் பேசி, அத்தன்மைபோலவே அடியேன் செய்த தீமையையும் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தி க்க, அவர் மாருதியைப் பிரார்த்திக்க, அவர் வாநரவீரர்களை நியமிக்க, வாநர

வீரர்கள் மறைந்தார்கள்; மறைந்ததைப் பார்த்து வேந்தனானவன் பயபக்தியோடு வணங்கி, அந்த நகரில் வாழ்வோராகிய ஜடமூடர் என்பவரைத் தொண்டராக்கி, ஒருவருஷகாலம் அவ்விடத்தில்தங்கியிருந்தார். பிறகு உச்சயினிபுரத்தில் போய்த் தங்கியிருக்குங் காலத்தில், அங்கே ஒரு தநவானாகிய செளதாகிரி யென்னும் வணிகன் இருந்தான்; அவனுக்கு ஒரு மகளிருந்தாள்; அவள் அதிரூபவதியாய் வளரும் நாளில், தாய்தந்தையர் அவளுக்குத் தகுந்த கணவனைத் தேடி மணம்புரியத் தம் உறவினரோடு உசாவி, அந்தப் பெண்ணினுருவத்தை ஒரு படத்திலெழுதி, அதைத் தகுதியானவரிடத்திற் கொடுத்து, நமது குலத்துக்கேற்ற புருஷன் எந்தத்தேசத்திலிருந்தாலும், உமது மனத்துக்குச் சம்மதியானால் கொண்டுவாருங்களென்று சொல்லியனுப்பினான்; அனுப்பப்பட்டவர்கள் ஆறுமாசகாலம் அநேக தேசங்களில் தேடியும் தகுதியாகிய கணவன் கிடைக்காமல், எமது வணிகனுக்குச் செளந்தர்யவதியாகிய ஒரு பெண் பிறந்ததனால் எமக்கு இந்தத் துன்பம் நேரிட்டது என்று மனஞ் சலித்து, பரணபூரில் வாசம் செய்வோனாகிய ஒரு செளதாகிரிக்கு மக்களாகப் பிறந்தவர்களுள்ளே, ஒரு கண்ணில்லாத ஒரு மகனும் ஒரு மகளும் பிறந்திருந்தார்கள். அப்போது மணமகனைத் தேடிவந்தவர்கள் அந்த வணிகன் வீட்டையடைந்து, அவன் மக்களுடைய குணமும் நல்ல அழகும் பார்த்து, அவன் பார்க்கத் தான் கொண்டுவந்த படத்தை அவன் கையில் கொடுக்க, அழகுமிகுந்த அந்தப் படத்தை நோக்கி, அதில் எழுதப்பட்டிருந்த பெண்ணினது அழகைப் பார்த்து மதித்து, மணமகனைத் தேடி வந்த பெரியோர்களே, என் மகனுக் கொரு கண்ணில்லை, அவனுக்குப் பெண் கொடுக்க உங்கள் வணிகனுக்குச் சமமதியாகுமா, விசாரித்து அபிப்பிராயம் சொல்லுங்கள் என்று சொல்ல, அவர்கள் வணிகனை நோக்கி, உமது பெண்ணுக்கு ஆணுடை யுடுத்து அவ்வூருக்கு அழைத்துக்கொண்டுபோய்அங்குள்ளவர்களுக்குக் காட்டி, அவர்கள் சம்மதித்து மணஞ்செய்கிற காலத்தில் ஆணும் பெண்ணுமாக நெருங்கிக் கூடுங்கூட்டத்தில், ஒருவர்க்கும் தெரியாமல் உமது புதல்வனைக்கொண்டு மங்கலியம் பூட்டுவிக்கிறோமென்று சொல்ல, அப்படியே செளதாகிரி சம்மதித்து தன்மகளை ஆணுடை யுடுக்கச் செய்து, சுற்றத்தாருடன் உச்சயினிபுரத்துக்குப் போய், பெண்ணினுடைய சுற்றத்தாரால் அமைக்கப்பட்டிருந்த விடுதியில் இறங்கியிருக்க, பெண்ணின் தாய் தந்தையரும் சுற்றத்தாரும் அங்குவந்து மணமகனது அழகைப்பார்த்து மனமகிழ்ந்து, நமதுபெண்ணுக்குத் தகுந்தகணவன் கிடைத்தானென்று மணத்துக்கு வேண்டும் பொருள்கள் யாவும் சேகரித்து, சுப முகூர்த்தம் பார்த்து, மங்கலியம் பூட்டுதற்குரிய மங்கல ஹோரை வந்தவுடனே, பலவகையாகிய வாத்தியங்கள் முழங்கவும், சுமங்கலிகள் மங்கலவாழ்த்துப் பாடவும், நன்மையாகிய வேதியரும், சுற்றத்தாரும், அவ்வூரிலுள்ள மற்றையோரும் அந்த மணப்பந்தலில்வந்து நெருங்கியிருக்க, மாப்பிள்ளையின் தந்தையானவன் அந்தக்கூட்டத்தில் தன் புத்ரனால் தாலிகட்டுவிக்கக்கூடாமல்என்செய்வோமென்று

சும்மாவிருந்தான். அப்படியிருக்க, முன் வந்த மாப்பிள்ளையை யழைத்துப போனவர்கள் வேடங்கொண்ட மாப்பிள்ளையைக்கொண்டு மங்கலநாண் தரிப்பித்தார்கள். அதன்பிறகு செய்யவேண்டிய சடங்குகள் யாவும் குறைவறச் செய்து மணமுடிவுபெற்றபின்பு மங்கலஸ்நாநம் செய்விக்கும்போது, வேஷ மாப்பிள்ளையைப் பெற்றவன், தனது வஞ்சகவியாபாரம் வெளிப்படுமென்று பயந்து பெண் வீட்டாரை நோக்கி, என் புதல்வனுக்குச் சரீர சௌக்கிய மில்லை யாகையால் இன்று நிறுத்தி நாளையத்தினம் மங்களஸ்நாநம் செய்விக்கலாமென்று சொல்ல, பெண்வீட்டா ரெல்லாரும் அப்படியே யாகட்டுமென்று இசைந்திருந்தார்கள். இதையறிந்து, மாப்பிள்ளை வீட்டாரெல்லாரும் ஒருவருக்கும் தெரியாமல் ஒளித்துப்போய்விட்டவுடனே, பெண்வீட்டார், வந்த மாப்பிள்ளைவீட்டாரைக் காணாதவர்களாய், மாப்பிள்ளைவீட்டார் ஒளித்துக்கொண்டுபோவதற்குக் காரணம் யாது என்று ஆலோசித்து, ஒன்றும் தோன்றாமல், வேஷம் பூண்பித்து அழைத்துக்கொண்டுவந்த மாப்பிள்ளைக்கு ஸ்நாநம் செய்விப்பதற்காக, பூண்டிருந்த ஆடை யாபரணங்களைக் கழற்றிப் பெண்ணென்றறிந்து நாணமடைந்து மிகவுந் துக்கித்து, நீ யவ்வாறு பெண்ணாயிருக்க, உன்னை மணமகனாக அலங்கரித்து அழைத்துக்கொண்டு வர நீயும் சம்மதித்து இங்குவந்து, எம்மை யெல்லாரும் பரிஹஸித்து நகைக்கும்படி அவமாநம் செய்யலாமா என்று கேட்க, அவள் பேசாமல் மௌநமாயிருக்கக்கண்டு, எல்லாரும் அவளை யடித்துத் துன்பப்படுத்தி, பஹிரங்கமாகக் கொண்டுவந்து கழுதைமேலேற்றி ராஜக்ருஹத்தைப் பிரதக்ஷிணம் செய்வித்து, நெடிய மூளையையுடைய கழுவிலேற்றத் துணிந்து, அரசனது கட்டளையை மேற்கொண்டு விரைந்து வரும்போது, அந்தப் பெண்ணானவள், என் தந்தையிப்படிச் செய்தானேயென்றும் நடுவுநிலைமையையுடைய தெய்வமே யென்றும் அழுதுகொண்டு வரும்போது, அந்த வழியில் துளசிதாசர் வரக் கண்டு, அவர் சிறந்த பாகவதர் என்று தெரிந்து, இவர் திருவடியை வணங்கினால் நமது துன்பமுழுதும் நீக்குவாரென்று, விரைந்து அவ்விடத்தில் இறங்கி அந்தத் தாசருடைய திருவடியை வணங்க, அவர் இவளை மாப்பிள்ளையென்றெண்ணி, நீயும் உன் மனைவியுமாக நெடுநாள் வாழ்ந்திருக்கக் கடவீர்கள் என்று வாழ்த்த, அவளோடுகூடி வந்தவரெல்லாரும் மிகவும் நகைக்க, இவர்கள் நகைப்பதற்குக் காரணம் என் னென்று தாசர் வினவ, அந்தப் பெண்ணானவள் தன் வரலாற்றையெல்லாம் சொல்லி, தான் பெண்ணென்பதை வெளிப்படுத்தினாள். வெளிப்படுத்தித் தாசரை வணங்கின மாத்ரத்தில், மெய்த்தவத்தினராகிய தாசரானவர் இது என்னபுதுமையாயிருக்கிறதென்று ஆலோசித்து, பெண்ணே, நீ அஞ்சவேண்டியதில்லை, நான் சொன்னபடியே விட்டலன் உன்னை ஆண்மகனாகவே செய்வா னென்று சொல்ல, தக்ஷணமே அந்தப் பெண்ணானவள் ஆணுருவம்கொண்டு விளங்கக்கண்டோ ரெல்லாரும் அதிசயித்தார்கள். இந்தப் புதுமையை அந்த நகர்க்கு அரசனானவன் கேள்விப்பட்டு, தாசர் சரித்திரம் மிகவும் நன்றாயிருக்கிறதென்று

வந்து அவர் திருவடியை வணங்கிப் புகழ்ந்து, அவ்விதமாகப் பெண்ணாயிருந்து பிறகு ஆண்மகனாகிய மாப்பிள்ளையை அழைத்துப்போய், தன் அரண்மனையில் கலியாணப்பெண்ணை முன்போலவே மணமுடித்த பிறகு, நல்லோர் யாவரும், அவ்வேந்தன்செய்த பூஜையையேற்று, அன்போடு கோகுலத்தை யடைந்து, யமுநாநதியில் மூழ்கி, ஸ்ரீ கண்ணபிரானைச் சேவித்து, பிருந்தாவனத்துக்கு வந்து, சார்ங்கபாணி ஸ்வாமியைத் தரிசித்து, ஒரு மாதம் அங்கு வாசம்செய்து, மதுராபுரிக்கு வந்து, யமுனையில் மூழ்கி, அங்குள்ள ஸ்ரீ கண்ணபிரானை வணங்கி அவ்விடத்தில் தங்கியிருந்தார். இருந்தவர், நான்கு யுகங்களிலும் அடியார் புகழையே பேசி நின்ற புண்ணியத்தால், புண்யாத்மாவாயிருக்கிற "பிரியர்" என்னுந் தாசர் வாழ்கிற வீட்டில் வந்து, நீர் விரும்பிச் செய்யும் புத்தகம் வேண்டுமென்று கேட்க, இவர் வைபவம் அதில் இல்லாமையால், துளசிமாலையைத் தரித்த ஸ்ரீ கண்ணபிரான், ஒருவருக்குந் தெரியாமல் வந்து, அதுவும் செய்திருப்பதாக அமைத்துவைத்தார். புதிதாய்ப் புனைந்துவைத்த புத்தகத்தைக் கொண்டுபோய், ஆலயத்தில் ஓதி முடித்து, நான் அறிந்து எழுதாததை ஆலோசித்து, ஸ்ரீராமபிரான் இன்று தானே யெழுதினதைப் பாருங்களென்று சொல்ல, பெரியோர்கள் அதை ஆராய்ந்து பார்த்து, மேல், நாம் சொல்லத் தகுந்ததுண்டோவென்று மெச்சுகின்றவர்களானார்கள், ஸ்ரீராமபிரான் எழுதத் தகுந்த சிறப்புப்பெற்ற நாதரைத் தரிசிப்போரும், இவரது வைபவத்தைஅலங்கரித்துத் தோத்திரஞ்செய்வோரும், இவ்வுலகத்தில் சகல பாக்யங்களையும் பெற்று வாழ்ந்து, பிறகு ஸ்ரீ ஹரிபக்தியைப்பெற்றுப் பகவத்குணாநுபவமாகிய இன்பத்தை அநுபவித்து, சரீர நீக்கத்தில் எக்காலத்தும் அழியாததாகிய பரம பதத்தையும் அடைவார்கள் என்று சொல்லி, மேலே நாமதேவர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

துளசிதாசர் சரித்திரம் முற்றிற்று.

## ௪-வது நாமதேவர் சரித்திரம்.

ஸ்ரீ லக்ஷ்மீநாதராகிய பகவான் உத்தவரையும், சுகரையும் நோக்கி, நீங்கள் இருவரும் பூலோகத்தில், மாநுஷ புத்ரர்களாகப் பிறக்கக் கடவீர்களென்று நியமிக்க, அவர்கள் பகவானைநோக்கி, க்ஷீராப்திநாதனே, உமது திருவுளப்படியே செய்கிறோம், எங்களை அயோநிஜர்களாய்ப் பிறக்கும்படி அருள் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, கருணைக்கடலாகிய பகவானும் அவர்களைப் பாலகர்களாக்கி, கிளிஞ்சிலினுள்ளே யமைத்து, மேகமானது கங்காநதியிலும் பீமாநதியிலும் விளங்குவதாக மழைத்துளிகளுடன் விழுவிக்க நியமித்தார். அப்போது பீமாநதியில் தோன்றி, மேன்மேலும் வளர்கின்ற பெருக்கிலே மிதந்து கிளிஞ்சில்கள் வர, அவற்றினுள்ளே வாழ்கின்ற மெய்யன்பர்,

விட்டலனுடைய நாம ஸ்மரணை செய்துகொண்டு சந்தோஷமிருந்திருந்தார்கள். இப்படி யிருக்கையில், ஞானத்தினால் உயர்ந்து, பண்டரிபுரத்தில் குணாயி என்கிற மனைவியோடு கூடி வாழ்கின்ற தாமாஜிச் செட்டியானவன் தினந்தோறும் பீமாநதியில் மூழ்கி, ஸ்ரீ ஹரியாகிய விட்டலனைச் சேவித்து வருகிற நியதியில் மாறுபடாமல், இல்லற நடத்தி வருநாளில், ஒருநாள் அவன் மனைவி, கணவனைநோக்கி ஒரு வார்த்தை சொல்லுகிறாள்; என்னென்றால், உயிர்த்துணைவரே, நமக்குப் புத்திர லாபம் உண்டாகவேண்டுமென்று விட்டலனை வணங்கி வரம்பெறக் கடவீரென்று சொல்ல, செட்டியானவன் மனைவியைநோக்கி, வயதுமுதிர்ந்த வுன் கர்ப்பத்தில் இனிப பிள்ளைபிறக்குமோ, உனக்குச் சற்றாயினும அறிவில்லையென்றுசொல்ல, மனைவியானவள் கணவனைநோக்கி, சிருஷ்டிகர்த்தாவாகிய பாஹ்மதேவனும் ஒருகாலத்தில் கன்றாடு காளையரை மறைக்கும்பொருட்டுச் சேயாகவும கன்றாகவும் தோன்றினான். இந்தச் செய்தியை நீர் அறியாமல் பேசுகின்றீர் என்று சொன்ன பிறகு, தாமாஜியானவன், திருமாலின் கோயிலுக்குப்போய், உன் வேண்டுகோளைப் பகவானுக்கு விண்ணப்பஞ்செய்கிறேன். அவர் அருள் செய்வாராயின், பெற்றுக்கொள்வாயாகவென்று கோயிலுக்குப் போய், பகவானை வணங்கித் தன் மனைவியின் கருத்தை நிறைவேற்றவேண்டுமென்று பிரார்த்திக்க, பகவானானவர் அந்தக்ஷணமே நித்திரை வருமபடி பண்ணி, அவர் கனவிலெழுந்தருளி, பீமாநதியில் கிளிஞ்சில் வயிற்றில் அமைந்திருக்கிற குழந்தையை நாளைக்காலையில்போய் எடுத்துக்கொள்ளலாமென்று அருளிச்செய்ய, செட்டியார் தமது மனைவியிடத்தில் வந்து இந்தச் செய்தியைச் சொல்லி, மறுநாள் உதயத்தில் நதிக்குச் சென்று மூழ்கும்போது, கிளிஞ்சில் மிதக்கக் கண்டு, அதை யெடுத்துவந்து திறந்து, அதற்குள்ளே குழந்தை யிருப்பதைப்பார்த்து, அந்தக் குழந்தையை அன்போடு கொண்டுவந்து மனைவியிடத்தில் கொடுக்க, அவள் விருப்பத்துடன் வாங்கினவுடனே, தனங்களில் பால் மிகுதியாகச் சுரக்கவே, அந்தக் குழந்தைக்கு மனமகிழ்ச்சியோடு ஊட்டினாள். குழந்தைகள் இல்லாத காலத்திலே புதல்வனைத் தந்து, ஊட்டப் பாலும் தந்தருள்செய்த பகவானுடைய கருணையை மிகவும் கொண்டாடி, அந்தக் குழந்தைக்கு விட்டலனுடைய பெயர் விளங்கும்படி நாமதேவர் என்று பெயரிட்டு, நாளொருவண்ணம் பொழுதொருமேனியாய் வளர்த்துவரும் நாளில் ஒருநாள் தந்தையாகிய செட்டியார் சந்தைக்குப்போயிருந்ததனால், தாயானவள் இந்தப் புதல்வரை நோக்கி, இந்தப் பிரசாதத்தைக் கோயிலுக்குக் கொண்டுபோய்ப் பகவானாகிய விட்டலனுக்கு நிவேதித்துக்கொண்டுவாவென்றனுப்ப, நாமதேவரானவர் அப்படியே கோயிலுக்குப்போய்ப் பகவானுக்குத் திருமஞ்சனம் சமர்ப்பித்து, பீதாம்பரம் உடுத்தி, புஷ்பமாலைசூட்டி, திருவாபரணங்கள் சமர்ப்பித்து, தூபதீபாராதனம் செய்து, மற்றுமுள்ள உபசாரங்கள் யாவும் செய்து, வணங்கிநின்று, இந்தப் பிரசாதத்தை அமுது செய்தருளவேண்டுமென்று விட்டலபகவானைப் பிரார்த்தித்து, அர்ச்சாரூபமா யெழுந்தருளி

யிருக்கிற பகவானானவர் அமுது செய்தருளாதிருக்கக் கண்டு, என் தந்தை யானவர் தினந்தோறும் கொண்டுவந்து நிவேதிக்கிற பிரசாதத்தை அமுது செய்கிற தேவரீர், இன்று அவர் சந்தைக்குப்போனதனால் அடியேன்கொண்டு வந்த பிரசாதத்தை, அமுது செய்யாமலிருப்பதை நோக்கினால் என்னிடத்தில் ஏதாயினும் குற்றமிருக்கலாமென்று தோன்றுகின்றது; அடியேன் என் செய்வேனென்று மனம் வருந்தி, அர்ச்சாவிக்ரஹங்கள் அமுது செய்யுமென்கிற எண்ணமுள்ளவராதலால், மறுபடியும், சுவாமீ, அடியேன் இப்படி பிரார்த்தித்தும் தேவரீர் அமுது செய்யாதிருக்கிறீர், இந்தச் செய்தியை என் தாயினிடத்தில் சொல்லுவேனானால், நீ யென்ன குற்றஞ் செய்தாயென்று என்னை அடிப்பாளே, இதற்கு அடியேன் என்செய்வேன், என்ன பிழை செய்திருந்தாலும் பொறுத்துக்கொண்டு இந்தப் பிரசாதத்தை அமுது செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, விட்டலப்பெருமான் திருவுளம் இரங்கி, நிஜரூபமாய் எதிரே எழுந்தருளி, இவர் அழுதகண்ணீரைத் தமது திருக்கரத்தால் துடைத்து, முகவாட்டத்தை நீக்கி, இவரைத் தழுவிக்கொள்ள, இவர் பிரசாதத்தை யெதிரே வைக்க, பெருமானும் திருவுள மகிழ்ச்சியோடு அமுதுசெய்து, இந்தச் செய்தியை ஒருவரிடத்திலும் சொல்லவேண்டாமென்று நியமிக்க, நாமதேவரும் பெருமானை வணங்கி விடைபெற்று வீட்டுக்கு வந்தவுடனே, தாயானவள் இவர் வெறுங்கையோடு வந்ததை நோக்கி, அப்பா, பிரசாதத்தை யாருக்குக் கொடுத்துவிட்டு வந்தாயென்று கேட்க, ஒருவருக்கும் கொடுக்கவில்லை, விட்டலப்பெருமானே அமுது செய்தார் என்றனர். இதைக்கேட்ட தாயானவள் அதிசயித்து, செட்டியார் வந்த பிறகு உண்மையை யறியலாமென்றிருந்து, வந்தவுடனே அறிவிக்க, அவரும் ஆச்சரிய மடைந்து, இதன் உண்மையை அறியவேண்டுமென்று மனத்தில் யோசித்து, நாமதேவரை நோக்கி, நமது பிரசாதத்தை நேற்று அமுது செய்த விட்டலப்பெருமான் இன்றும் அப்படி செய்யக் காட்டு என்று, பிரசாதத்தை யேந்திக்கொண்டு கோயிலில்போய், தாம் பக்கத்திலே நின்று, நாமதேவரை நோக்கி, நீ போ யிந்தப் பிரசாதத்தை நிவேதிக்க வேண்டுமென்று கையிற் கொடுக்க, இவர் பகவானுக்குச் செய்யவேண்டிய உபசாரங்கள் யாவும் செய்து முடிந்தவுடனே, அமுது செய்தருளவேண்டுமென்று பிரசாதத்தைக் காட்ட, விட்டலப் பெருமான் சந்தோஷித்து, உன் தந்தைக்குத் தெரியும்படி நான் வெளியாகமாட்டேனென் றருளிச்செய்ய, நாமதேவர், பின்னும் கைகூப்பி, நீயோ கபடன், என் தந்தைக்கு உன்னுருவை விளங்கக் காட்டி இந்தப் பிரசாதத்தையும் அமுது செய்யாவிடில், உன்னை விடமாட்டேன் என்றார். இதைக் கேட்ட பகவானானவர் மகிழ்ந்து நகைத்து, அன்போடு பிரசாதத்தை அமுதுசெய்து, விடைகொடுக்க, தாமாஜிச்செட்டியார் அதிசயித்து, இவரிடத்தில் அன்பைப் பெருகச் செய்து, நீ எனக்குப் புதல்வனாக வந்தமையால் பகவானை ப்ரத்யக்ஷமாகக் கண்டேன், பேசினோம் வாவென் றழைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்து, நடந்த சங்கதிகள் எல்லாம்

மனைவிக்குச் சொல்ல, மனைவியானவள் கணவனைநோக்கி, இந்தச் சிறுவனை நாம் தேவனென்று நினைக்கவேண்டுமே யன்றிப் புதல்வனென்று நினைக்க லாகாது, இவன் அயோநிஜன், ஆகையால் பகவானுக்கு மெய்யன்பனுவான் என்று தினந்தோறும் பூஜித்து வந்து தகுந்த பருவம் வாய்த்தவுடனே மணஞ் செய்வித்துச் சில நாளின் பின்னே இவர்க்கு ஒரு புதல்வன் மிகுந்த அழகுள்ளவனாய்த் தோன்ற, அச் சிறுவனைப் பார்த்து மகிழ்ந்து, சௌளஞ் செய்யவேண்டிய காலத்தில் செய்ய, அப்பொழுது நரசிங்கப்பெருமான் வரிசைகொண்டுவரக் கண்டு, பேரனுக்குச் சிறந்த பெயரிடவேண்டுமென்று சொல்ல, நாராயணன் என்று பெயரிட்டான். பின்பு, மருமகளை மகனோடு சேர்த்து, செய்யவேண்டியவற்றை விதிப்படியே செய்து, பகவான் அருள் செய்த ஆடை ஆபரணாதிகளையும் தரிப்பித்து, நரசிங்கன் போய்விட, குணாயியானவள், மகனை நோக்கி, ஐயனே, உன் தாய்தந்தையாராகிய நாங்கள் இருவரும் மூப்புப் பருவத்தை யடைந்தோம், நீயோ சதாகாலமும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு விட்டலப் பெருமானையே ஆசிரயித்திருக்கிறாய், நாங்கள் உன் மனைவி மகன் என்பவர்களுடன் வறுமையால் வருந்துவதைப் பார்த்து, அயலாரெல்லாரும் நகைக்கிறார்களே, என் செய்வோம், சொல் என்று கேட்க, நாமதேவருக்கு அநுதாப முண்டாகி, கோயிலுக்குப் போய், அங்கே எழுந்தருளியிருக்கிற பகவானை நோக்கி, பாண்டுரங்கா, ஏன் என்னைக் குடும்பத்தி லிருத்தினாய், உனக்கு இரக்கமில்லையா, எங்கள் துயரத்தை அறிந்திலையோ என்று சொல்லி, மனம் கலங்கிக் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றார். இவரை ஸ்ரீ லக்ஷ்மீநாதன் நோக்கி, இன்று உனக்குத் துன்ப முண்டாக்கினவர் யாரென்று கேட்டு, கண்ணீர் துடைத்து மார்போடு அணைத்துக்கொள்ள, நாமதேவர் சொல்லுகின்றார்:—வேதப்ரதிபாத்யனே, உன் திருவடியை என் மனமானது மறவாதிருப்பதைக் குறித்து, என் தாயானவள் குறை கூறுகின்றாள். அந்தக் குறையை உன் திருவருளைக்கொண்டு களைந்தருளவேண்டுமெ என்று பிரார்த்திக்க, பகவானவர் கேட்டு, நாமதேவா, நீ என் பக்கத்தில் அமர்ந்திரு, இருப்பாயானால், பவவினையானது இனி உன்னைத் தொடராது என்றருள்செய்ய, பகவானுடைய திருவடியைத் தொழுதுகொண்டு இங்கே யிருப்பது நன்மையென்று நினைத்திருப்பவராகிய நாமதேவர், கருணாநிதியாகிய பகவானுடைய கிருபை பெருகும்படி வணங்கி, நிர்மலனே, உனது அருள்வடிவம என் மனத்தில் விளங்கும்படி செய்வதுமல்லாமல், நான் எந்தப் பிறவி பிறந்தாலும் உன்பெயரை மறவாமல் உச்சரிக்கும்படி எனக்குக் கிருபை செய்ய வேண்டும் என்று சொன்னவுடனே, அன்பர்க்கு அருள்செய்பவனாகிய விட்டலப் பெருமான், திருமகளை நோக்கி, நீ இவனது நிலைமையை நன்றாயறிந்துகொள்வாயாக என்றருள்செய்தவுடனே, பிராட்டியானவள் நாமதேவரை நோக்கி, உன் வீட்டின் நிலைமையைச் சொல்லென்று கேட்க, இவர், எம்பிராட்டி, என் வீட்டினது நிலைமையை, எல்லாம் அறிந்த நீ அறிந்திலையோ, என்னைக்கேட்க

வேண்டுமோவென்று சொல்ல, இவர் சொன்னசொல்லை எம்பிராட்டிகேட்டு, பின்னும் நகைத்து, நீ இவ்விடத்தே தங்கியிருப்பாயானால், மனைவி மக்கள் தாய் தந்தையர் ஆகிய எல்லாரும் வெறுப்படைந்து பலவகையாய் நிந்திப்பார்கள் என்று சொல்ல, பண்டரிபுரத்திறைவனாகிய விட்டலப்பெருமான் நகைத்து, கருடவாஹநாரூடராய் நாமதேவர் மனைக்கு எழுந்தருளத் திருவுளங்கொண்டும் அவர் மனை முழுதும பொன்மணி முதலியவை நிறைந்திருக்கத் திருவுளங் கொண்டும, வருகிற பகவானானவர், நாமதேவர் வீடு எங்கேயென்று வினவ, எதிர் வருவோர், அடையாளஞ் சொல்ல, வாஹநத்தை விரைவாய்ச் செலுத்தி, இவர் மனைக்கு எழுந்தருளி, அங்குள்ள நாமதேவர் மனைவியை நோக்கி, நீர் யார், நான் புதியவன், ஆசநம கொடுமென்று கேட்க, மனைவியானவள், இங்கே பெரியோரில்லை, நீர் திரும்பிப போய்விடும என்று சொல்ல, பின்னும் பகவானானவர், அவளை நோக்கி, நான், நாமதேவனுக்கு உறவினன், அந்த நாமதேவனுக்கு வேண்டிய பொருள்களைக் கொண்டுவந்தேன் என்று சொன்னவுடனே, முன்னேபோவென்று சொன்னவள் ஆசநமிட்டு இதில் எழுந்தருளும் என்று சொன்னாள். அப்போது பகவானானவர் அவளை நோக்கி, நான் புதியனென்று சொன்னவுடனே போவென்று சொன்ன நீ, இப்போது பொருள் கொண்டு வந்தேனென்று சொன்ன வுடனே, ஆசநம் கொடுத்து உபசரித்தனை. இது நிறக; நாமதேவன், எனனிடத்தில் அன்புள்ளவன், பொருளின் மேல் விருப்பமிலலாதவன், ஹரிபஜனையில் விருப்பமுள்ளவன், ஆகையால் அவனை நீ வருத்தவேண்டாம், இது அவன செல்வமாகும் என்று பொருட் பொதியைக் கொடுத்து இது செலவாகிவிட்டால் இன்னமும் கொடுப்பேன் என்று சொல்லுதலும, அவள் சொல்லுகிறாள்:—ஐயனே, உன் மனதில் கோபமுண்டாகுமபடி முனனே சொன்ன கடுஞ் சொற்களைப பொறுக்கவேண்டும, கோவிக்க வொண்ணாது, இங்கே யெழுந்தருளினையாதலால், அமுதுசெய்து போவென்று பிரார்த்திக்க, அந்த நாமதேவனில்லாத காலமாதலால் அமுதுசெய்ய மாட்டேனென்று சொல்லி, பகவான் அவ்விடத்திலிருந்து எழுந்தருளி, குன்றுகள்போலே யுயர்ந்து தோன்றுகின்ற கோபுரநிலை, மதில் இவைகளையுடைய கோயிலிற் போய், திருமகளோடு நடந்தசெய்தியைச்சொல்லி, அவ்விடத்தே இனிதாகத் தங்கியிருக்க, நாமதேவருடைய மனைவியானவள், இங்கே, பெருமகிழ்ச்சியோடு, என் கணவரானவர், திருமாலிடத்தில் செலுத்துகின்ற பக்தி அதிகரிக்க, அந்தப் பக்தியின் பயன இப்பொழுது கிடைத்தது என்று, அஞ்சலிசெய்து அந்தப் பொதியை அவிழ்த்து, அதிலே சில பொன்னை மாத்திரம் கைக்கொண்டு, மனிதர் நிறைந்திருக்கிற கடைத்தெருவில்சென்று, தனக்கு வேண்டிய பல பொருள்களை வணிகனிடத்தில் பெற்றுத் தன்வீட்டுக்குச் சுகமாய்வந்து, அறுசுவையோடு கூடிய போஜநத்தை அமைத்து வெளிப்பட்டவளாகிய குணாயி, தன் மைந்தனது அன்புக்கு, லக்ஷ்மீநாதன் மகிழ்ந்து இந்த அற்புதங்களைச் செய்ததையறியாமல் விரைந்து, அந்த நாளின் உணவுக்காகவேண்டியவற்றை

ஆராய்ந்து வரும்போதே தன் மகனை நினைத்தாள்; நினைத்து, மைந்தனைநோக்கி, பொருள் சம்பாதிக்காமல் இருக்கிறாயே என்று கோபித்துக்கொண்டதை நினைத்து, மனம் வாடிப் போனவர் கோயிலில் தங்கி யிருப்பதைக் கேள்விப்பட்டு, கோயில் வாயிலிலுள்ள கோபுரத்தருகில்வந்து, சேவித்துக் கைகூப்பி, கோயில் வாயிலிற் போகும்போது, அவள் வருவதை யறிந்த பகவான், அன்புள்ள புதல்வனைத் தமக்குப் பின்புறத்தில் நிறுத்தி யிருந்தபோது, வந்த தாயானவள், பகவானே, என் மகன் உன்னிடத்தில் எக்காலும் அன்பு மிகுந்தவனாய், குடும்ப வாழ்க்கையை வெறுத்து, உன் கோயிலிலே வந்து, துன்பம என்பது இன்னதென் றறியாமல், நெடுங் காலமாக உன்னையே ஆசிரயமாய்ப் பற்றி நின்றால், வறுமையால் உண்டாகிற துன்பத்தால் மெலிந்து யாம் ஆற்றாதவர்களாய் வருந்துகிறோம், யாம் தளர்வடையும்படி இப்படிச் செய்வது தகுதியாகுமோ, இவனை அன்புமிகுதியோடு வளர்த்தது இப்படி யிவன் செய்வதற்கல்லவே, எம்மைக் காப்பாற்றுவானென்று நினைத்துத் தானே வளர்த்தோம், உன்னால் எங்கள் குடி கெடலாகுமோ, உன்னை நம்பின அன்பரிடத்தில் நீ பெறவேண்டுமென்ற எண்ணமே உனக்குள்ளது. பருக்கை, நொய், அவல் முதலான பொருள்களை யேற்றுக்கொண்டு அதற்குப் பதிலாகப் பேரின்ப வாழ்வைத் தருகிறாய், அப்படிச் செய்வதற்கும் எமக்குச் சக்தி யில்லையே, எம்மிடத்தில் வறுமையே யன்றி வேறு பொருளில்லையே, மாவலியினிடத்திலே மண்ணை யாசித்தாய், நீ யெப்பொழுதும் ஒன்றைப் பெறுவதற்கே இசைந்திருக்கிறாய், உன்னிடத்தில் கொடைத்தன்மை எப்படியுண்டாகும்? ஆதிசேஷனாலும் உன்செய்கையைச் சொல்ல முடியாது. நான் உன்னைத் தெய்வமென் றெண்ணி நிற்பதனால், உனக்குத் தெய்வத்தன்மை யுண்டாயிருக்கின்றது, இல்லாவிட்டால் உன் ஒளி குறையும், என்னைக் கண்டமாத்திரத்தில் என்மகனை உன் பின்புறத்தில் ஒளித்து வைத்தாய், இது உனக்கு இஷ்டமோ! பகவானே சொல்லுவாயாக வென்று கேட்க, பகவான் அவளைநோக்கி, உன் மகனை நான் கெடுக்க விரும்பமாட்டேன், மரத்திலிருக்கிற கனியானது மிகுதியாய்க் கனிந்தால் விழுவது ஒரு புதுமையோ! அதுபோலவே, உலகமென்னும் மரமாயமைந்த என் பாதங்களில் விழுந்து வணங்குகின்ற இவனை உன் மகனென்று சொல்லுகிறாய், அவன்பொருட்டே நானும் நாமரூபங்களோடு விளங்கி, நாமதேவன் என்னிடத்துக்கு வரும்படி இங்கு வாழ்கிறேன், அவன் என்னிடத்திற்கு வருவதை விலக்குவது உனக்குத் தகாதகாரியம், மகனை அழைத்துக்கொண்டே போகவேண்டும் என்கிற நினைப்பு உனக்கு உண்டாயிருந்தால், என் மனம் மிகவும் வருந்தும் என்று சொல்ல, குணாயி சொல்லுவாள்:—நிலத்தை உழுது பயிர்செய்த உழவனை வருத்தி, அரசன் கப்பம் வாங்குவதுபோல, நான் வளர்த்த மைந்தனை நீ உன் பொருளென்று எழுதுவது உனக்கு நீதியாகுமோ என்று சொன்னபோது, பரமகாருணிகனாகிய சர்வேசுவரன் அவள்மீது இரக்கங்கொண்டு, பெண்ணே, உனக்குச் சமானமானவர்கள் உலகத்தில் ஒரு

வருமில்லை; நீ செய்த தவத்தின் பெருமையைச் சொல்லுதற்கு ஒருவருக்கும் முடியாது; ப்ரஹ்மதேவனிடத்தில் நாரதமுனிவரும், அஞ்சநாதேவியினிடத்தில் அநுமானும், உத்தாநபாதனிடத்தில் துருவனும், அத்திரிமுனிவரிடத்தில் தத்தாத்திரேயரும் அவதரித்ததுபோல, உன்னிடத்தில் இந்த நாமதேவன் தோன்றினான் என்றருளிச்செய்ய, குணாயியானவள் பகவானை நோக்கி, மாயனே, என் மகனாகிய நாமதேவன் உன் திருவடியை விடானாயினும், தாயாகிய என்னையும் என் குடும்பத்தையும் காப்பாற்றும்படியாய்ப் போதித்து என்னிடத்துக்கு வரும்படி செய்யவேண்டும் என்று சொல்ல, எமபெருமானுக்கு அப்படி செய்யத் திருவுள மில்லாமையால் திருமகள் முதலானோராகிய தமது மனைவியரை நோக்கி, நீங்களாயினும் இந்தக்குணாயியைத் தேற்றி வீட்டுக்குப் போகும்படி செய்யுங்கள் என்று நியமிக்க, அவர்களும் அப்படியே குணாயிக்கு அநேக விதமாகச் சொல்லியும் கேளாமல் அந்தத் திருமகள் முதலானோரை நோக்கிச் சொல்லுகிறாள். உமக்குத் தலைவராகிய பகவானை வேதங்களும் தீநதயாளன் என்று சொல்லாநின்றன. அந்தத் தீநதயாளத்வம் தீநராகிய எம்மிடத்தில் இல்லாமற்போகுமா, வறுமையால் வருந்துகிற நாங்கள் இந்த மைந்தனால் சௌக்கியத்தை அடையலாமென்று அன்போடுவளர்க்க வளர்ந்து பிரயோஜனப்படப்போகிற சமயத்தில் எங்களுக்கு உதவவொட்டாமல் அவன் மனதைத் தன்னிடத்தில் பதியச்செய்த இந்த விட்டலனுடையசெய்கையை நீங்களும் கண்ணால் பார்க்கிறீர்களல்லவா? உங்களுக்கும் இரக்கமில்லையா? உலகமுழுதுமதெய்வங்கள்உண்டு. அந்தத்தெய்வங்கள் தம்மை வழிபடுவோர்க்குச் சுகங் கொடுப்பதுண்டு. இந்த விட்டலன் போல நிவேதநமுங்கொண்டு, என் மகனைத் தனக்குப் பின்புறத்தில் ஒளிப்பதும் இல்லறத்துக்கு உதவாமற் செய்வதும் ஆகிய செயல்கள் ஒருதெய்வத்தினிடத்துங் கண்டதில்லை; ஆதலால், விட்டலன் திருத்தேவிமாரே, நீங்கள் அருள்செய்து உமது ஆசைநாயகனுக்குத் திருவுள மிரங்கும்படி சொல்லி என்புதல்வனை என்னிடத்துக்குவரச்செய்யுங்கள், நான் போகிறேன் என்று சொல்லி, புதல்வனை நோக்கி, உலகத்தை யெல்லாம் மோஹிக்கச் செய்பவனாய்ச் சம்ஸாரத்தை யொழித்தற்காகவே எழுந்தருளி யிருப்பவனிடத்தில் நீ எந்நேரமும் இருத்தற்குக் காரணம் என்ன, நமதுகுடும்பம் வறுமையால் படுகிறதுன்பத்தையும் பாராதிருக்கிறாய், இனிநான்பலவார்த்தைகள் சொல்லமாட்டேன், நீ என்னோடு வராமற்போனால் இவர்கள் எல்லாரும் பார்த்திருக்க, உன்னை வலித்திழுத்துக்கொண்டு போவேன், அப்படி நான் உன்னை வருத்தப்படுத்துவதற்கு முன்னே நீ யெழுந்து வாவென்று சொல்லி, விட்டலனை நோக்கி, ஐயா, நான் சொல்லுஞ் சொற்களுக்குச் சிறிதும் மறுமொழிசொல்லாதிருக்கிறாய், நீ எமதுகுடியைக்கெடுத்தற்பொருட்டே தோன்றியிருக்கிறாய் என்று சொன்னதைக்கேட்ட பாண்டுரங்கன், குணாயியை நோக்கி, உன் மகனையழைத்துக்கொண்டு போ, என்னை வெறுக்கவேண்டாம் என்றுசொல்லி நாமதேவரை நோக்கி, நீ உன் தாயுடன் வீட்டுக்குப் போவென்று சொல்லி,

அவள் கையிற்கொடுத்தார், அவளும் புதல்வனையழைத்துக்கொண்டு போகிற போது அவனை நோக்கிச் சொல்லுகிறாள்:—நாமதேவா, இந்தப் பண்டரிநாதரை விரும்பி மனைவாழ்வை வெறுத்தாய், நீயிப்படிச் செய்தற்காகவோ நாங்கள் உன்னை வளர்த்தது என்று கடிந்து பேச, நாமதேவர் மறுமொழி சொல்லாமல், விட்டலனைப் பிரிந்ததற்காக மனந்தளர்ந்து அழுதுகொண்டே வர, அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். அப்போது, நாமதேவர் தன் மனைவியால் அமைக்கப்பட்ட போஜன வகைகளையும், பாத்திர வகைகளையும், செல்வத்தையும் பார்த்து, பிரமித்து, தாயே, இவ்வகையான பல வளங்களும் நமது வீட்டில் எப்படி அமைந்தன என்றுகேட்க, தாயானவள், அமைந்தவிதம் எனக்குத் தெரியாதென்று சொல்ல, நாமதேவர் மனைவியாகிய ராஜாயி, தன் கணவனை நோக்கி, நீபோய் நீராடிவாரும் என்று சொல்ல, இவள் நம்மிடத்தில் வெறுப்பில்லாமற் பேசுகிறது ஆச்சரியமாயிருக்கின்றது என்றெண்ணி, மனைவியை நோக்கி, இந்தச் செல்வம் நமது வீட்டில் நிறைந்ததெப்படி யென்று கேட்க, மனைவியானவள் இவர் செல்வத்தை விரும்பமாட்டாரென்று நினைத்து, மறுமொழி சொல்லாமலிருக்க, அதைக்கண்ட ஜநாயி, ஐயனே, கேசவசெட்டியார் உன்னிடத் தன்புகொண்டு ஒரு பொதி நிறைந்த செல்வத்தைக் கொண்டுவந்து நமது வீட்டில் நிறைத்தார், அவரை உன் மனைவியானவள் நோக்கி, செட்டியாரே, இந்தப்பொதி யேதென்றுகேட்க, அவர் பெண்ணே, உன் கணவன் எனக்கு மனங்கலந்த நண்பன் ஆகையால் அவனுடைய வறுமை நீங்கும்பொருட்டுப் பொதி நிறையப் பொருள் கொண்டுவந்தேன், இந்தப்பொருள் செலவானபிறகு வேண்டுமானால் இன்னமும் கொடுப்பேன், இனி உன் கணவனை வருத்தவேண்டாம், அவனை அன்போடு உபசரித்து வாவென்று சொல்லி இப்பொழுதுதான் போனார் என்று சொல்லித் தனக்கு ஊழியஞ் செய்துகொண்டிருப்பவள் சொல்லுவதைக்கேட்டு, பரிசுத்தமான மனத்தையுடையவராகிய நாமதேவர், நன்றுநன்று, இது செய்தவன் விட்டலப்பெருமானே யாவன்என்று துணிந்து, அருவிநீர்போலக் கண்ணீர் ஒழுக மனம் வருந்தி, ஓ மாயவனே, இந்தப் பொருளால் என்னை மயக்கி, இந்த உலகவாழ்க்கையில் அழுத்தத் திருவுளங்கொண்டோ இச்செல்வத்தைத் தந்தாய், ஓய் சுவாமி! பல யாகங்கள் செய்தும், தவங்கள்செய்தும் யோகஞ்செய்தும் உன்னைப் பெறமாட்டாமல அநேகர் அலைந்துகொண்டிருக்க, அடியேனுக்குப் பொருள் தரும் பொருட்டு நீ வந்தருளினை, இதற்கு அடியேன் என்ன தவஞ்செய்திருந்தேனோ ஸ்ரீவைகுண்டநாதனே, உன்னையன்றி வேறொருபொருளையும் மதிக்கமாட்டேன், இப்படி நீசெய்தது தகுதியல்ல என்று பகவானைவெறுத்துக்கொண்டு, திரவியம் எல்லாம் வைதிகருக்குக்கொடுத்து, துன்பஞ்செய்கிற பிணியை நீங்கப்பெற்றவர்போல மகிழ்ந்து வீட்டுக்குள்ளே போய், அமுதுசெய்து சுகமாயிருந்தார். இந்தப்பிரகாரமாகச் செய்து நாமதேவர் முன்போலவே, விட்டலப்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலில்போய் அந்தப் பகவானை பஜனைசெய்துகொண்டிருந்தார். இட்

படியிருக்குங்காலத்தில், பெருமான் ஒருநாள் அவரைக் கிட்ட அழைத்து, நாமதேவா, எல்லாப் பொருள்களுள்ளும் நான் நிறைந்திருக்கிறேன் என்பதை அறிந்திருக்கிறாயல்லவா? ஆகையால் என்னிடத்தில அன்பு செய்வதுபோல, எல்லாவுயிர்களின்மேலும் நீ அன்புசெய்யவேண்டுமென்று நியமித்தவுடனே, நாமதேவர், தேவரீர் சொல்லவேண்டியதில்லை, உயிர்களின்மேல் மிகுதியாகியஅருளுடையேன் என்றார். அவரது கருத்தை உலகத்தார் அறியும்படி செய்யவேண்டுமென்னும் திருவுள்ளமுடைய பகவான், அப்பொழுது, நேரிட்ட துவாதசியில் யாத்திரையாய் வந்தவர் போஜனம் செய்யும்போது அங்கே ஒரு நாய்போலத்தோன்றி, சோற்றை விரும்பி உலாவுமகாலத்தில், அந்த யாத்திரைக்காரர் மாறுகொண்டு அடித்து வெருட்ட, மற்றொருவனுடையகட்டமுதையெடுத்துக்கொண்டோட, அவன் அடித்துமறுபடியும் அதை பறித்துக்கொண்டான். உடனே அங்கே நீராடுவோருடைய மடியைத் தீண்டின மாத்திரத்தில் அவர்கள் அதட்ட அஞ்சி ஒருபக்கத்தில் சோர்ந்துநிற்க, யாத்திரை செய்வோர் இதைக்கண்டு நாம இதற்குச் சோறிட்டால் நம்மோடு தொடர்ந்துவரும் என்றுகோபித்து அதட்ட, இங்குள்ளவர்களில் ஒருவர்க்காயினும் கருணையில்லையென்று, தன்னிடத்தில் அன்புள்ளோர் தங்கியிருக்கும் இடத்தில்வந்து, அவர்கள் உண்ணுகின்ற அப்பத்தை வாயிற் கவ்விக்கொண்டு எல்லாருங்காணும்படி வெளியேவர, நாமதேவர் அதைத்தொடர்ந்து, ஓசுணங்கனே! நெய்யில்லாத அப்பத்தை நீ யுண்ணவேண்டாம், நான்பாத்திரத்திலே கொண்டுவருகிற நெய்யில் தோய்த்துத் தருகிறேன், கண்டத்தில்விக்கிக்கொள்ளாமல் உண்பாயாகவென்று சொல்லி, நாயின் சமீபத்தில் போக, அதுவும் நின்றது; இவர் விரைந்துபோய் அப்பத்தைநெய்யில்தோய்த்து வயிறுநிறைய வூட்ட, அந்த நாய் மென்று உண்ணக்கண்ட மற்றையோர், நாமதேவருக்குப் பித்துப் பிடித்தது என்று பேசிக்கொண்டார்கள். அன்றியும் இவர் ஜீவகாருண்யத்தில் தவறாதவராயிருக்கிறார், இவர் சிறந்த ஞானவான் என்று சிலர் பேசுந்தருணத்தில், நாயுருவங்கொண்டுவந்த ஸ்ரீமந் நாராயணன் நகைக்க, நாமதேவர், நீ நாயுருவங்கொண்டோவந்தாய், பகவானேயென்றுசொல்ல, பகவான் நாமதேவரை நோக்கி, என்னை யெப்படி கண்டுகொண்டாய் என்றவுடனே, கோபாலா, உன்னை யறிந்த விசோபாகேசரர் சொல்லத் தெரிந்துகொண்டேன் என்று சொல்ல, ஸ்ரீ ஹரியானவர் மனமகிழ்ந்து சென்றனர். அதன்பிறகு சிலநாள் கழிய, திருமகள் நாயகனாகிய பகவான், ஏகாதசியில் அமுதுசெய்ய வரவேண்டுமென்று சொல்ல, நாமதேவர், ஏகாதசி ஹரிதினமாகையாலுண்ணத்தகாதென்றுசொல்ல, பகவான், நீ ஹரிதினத்தைத் தகாத நாளென்றாய், முற்காலத்தில், ருக்மாங்கதன் அம்பரீடன் முதலியோர்விரதங்காத்தநாளாதலால் இது சிறந்தநாளென்றருளிச்செய்ய, நாமதேவர் சொல்லுகிறார், தெய்வநாயகனே! உன்னருளுக்கு விரோதமான காரியத்தை என்றுஞ் செய்யமாட்டேன் என்றார் இதைக்கேட்ட பகவானவர், இவரைச்சோதனை செய்யநினைத்து, முதுமைப் பருவமுள்ள ஒருவேதியனாகப்போய், நாமதேவ

ரைச் சோறிடவேண்டுமென்றுகேட்க, இது ஹரி திசமாகையால் சோறுண்ணவொண்ணாதென்று சொல்லி, கந்த மூலாதிகள் வேண்டுமானால் உன் பசி தீரத் தருவேன் என்றார். அதைக்கேட்ட வேதியர் அன்னமில்லாவிடில் என் உயிர் நீங்கும் என்றார்; அதுவன்றியும் நாமதேவா, நீ பூலோகத்திலுள்ள ஜீவராசிகளுக் கெல்லாம் அவ்வவைகளுக் கேற்றபடி அன்பு செய்கிற அன்பனென்றுஉலகத்தார் சொல்லக்கேட்டு,உன்னிடத்துக்கு வந்தேன், நீ விரோதமாகச் சொல்லுதல் நியாயமாகுமோவென்று சொல்ல, இவர் இதனால் எனக்குப் பாவம் நேரிடாதென்ன, மறையோன் தரைமீது விழுந்து, நான் இறப்பது மெய்யென்று சொல்ல, நீ செத்தால் உன்னோடு நானும் சாவது நிச்சயம என்றவுடனே, வேதியன் உயிர் நீங்கினான். அங்குள்ள பெரியோர்கள் இறந்த வேதியனைச் சந்திரபாகை நதியின் கரையில் சேர்த்தார்கள். அவ்விடத்தில் பலருங்கூடி, நாமதேவா! நீ நல்லவனென்று பேரெடுத்து, இப்போது சோறிடாதவன் என்கிற கெட்ட பெயரெடுத்தாய் என்று நிந்தித்துப் பேசவும், தாம் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்து, அவ்வேதியன் சவத்தைச் சுடத்தகுந்த விறகு அமைத்து தாமும் அதனோடு படுத்து நெருப்பையும் தாமே மூட்டினார். ஊரிலுள்ளோர் பார்த்து யாவரும் இப்படிச் செய்யமாட்டாரென்று வியப்படைய, பகவான் மூண்டெரிகின்ற நெருப்பில் கிடந்த வேதியன் முன்னே எழுந்தருளி, அம்பரமாத் தீண்டியெடுத்து, உன்னை நிகர்த்தவர் மூன்றுலகத்திலும் இல்லையென்று நாமதேவரைப் புகழ்ந்து சென்றனர். பிறகு, ஒருநாள் தன்னிடத்தில் அன்புள்ள ருக்மிணியைப் பாண்டுரங்கர் பார்த்துச் சொல்லுகிறார், எலும்போடுகூடிய சரீரமுழுதும் நோவாநின்றது, ஆகையாலே, உன் கையினால் நீ பிடிக்கவேண்டுமென்று சொல்லக் கேட்ட ருக்மிணி பிராட்டி லக்ஷ்மீநாதனை, உனக்கு உடம்பு நோவதற்கு நீ யென்ன கஷ்டமான வேலை செய்தாய் சொல்லென்று கேட்க, பகவானானவர், பெண்ணே, நாமதேவர் வீட்டுக்குச் சில சாதுக்கள் வந்தார்கள், அவர்களெல்லார்க்கும வஸ்திரம் தோய்த்துத் தந்தும், அவர் தாகத்துக்குண்ண நீர் மொண்டுகொடுத்தும்,வேறு பல வூழியங்கள் செய்தும்,தாசிக்கு மாவரைத்துத் தந்தும் என்னுடம்பு அயர்வடைந்தது என்று சொல்லக் கேட்ட இந்திரை நகைத்து, தன் நாயகனை மெல்லிய சயனத்தின்மேல் சாயப் படுக்க வைத்துத் தன்மலர்க்கையால் பிடித்து, பகவானுக்குச் சந்தோஷம் உண்டாக்கினாள். அதன் பிறகு மற்றொரு நாள் மாதவனுக்கு அன்பரானவர் பஜனை செய்பவராய்த் தனியேயாடக்கண்ட பகவான், அவர்பின்னே நின்று, தாளங் கொட்டுவதைத் தொண்டரெல்லாரும் பார்த்து, ஆநந்தக் கடலில் மூழ்கினார்கள். தேவரெல்லாரும் பூ மழை பொழிந்தார்கள். பின்னும், பாண்டுரங்கன் மிகவும் மனமகிழ்ந்து, தனது அரைக்கிசைந்த பீதாம்பரம் அவிழ்ந்து தொங்குவதையும் அறியாமல் கூத்தாடத் தொடங்கினார். இப்படிப் பகவான் கூத்தாடுவதை ஞானதேவர் கண்டு, தோத்திரம்பண்ணிக் கையைப் பிடித்துக் கொண்டு, சர்வஜ்ஞனை பரந்தாமனே, தாமரைக்கண்ணனே, தேகப்பற்றும்

அபிமானமு மில்லாமல் இப்படிக் கூத்தாடுவதற்குக் காரண மென்ன வென்று வினவ, பகவான் அவரை நோக்கி, அருள்செய்கிறார். பற்றொன்று மில்லாதவனானும், நாமதேவனுடைய பஜனையால் அவசமடைந்தேன் என்று அருளிச்செய்ய, ஞானதேவர், பீதாம்பரத்தை யெடுத்து இடையிற் சுற்றினார். அப்போது கபீர் தாசர் அங்கே வர, எல்லாரும் அவரைத் தழுவிக்கொண்டு மனமகிழ்ந்தார்கள். அந்தச்சமயத்தில் திருமகள் ஆலாத்தி யேந்திவர, அதை நாமதேவர் வாங்கி, பகவானுடைய திருமுகத்தைச் சுற்ற, பாண்டுரங்கன் அன்போடு ஒன்றைச் சொல்லுகிறார்:—ஞானதேவா, இன்று இங்கே நடந்த பஜனை நன்றாயிருந்தது என்று சொன்னபோது, ஞானதேவர், சுவாமியை நோக்கி, தேவரீர் தாளங்கொட்டி யாடினால் அந்தப்பஜனை நன்றாயிருக்காதா, நான் சொல்லவேண்டியதென்ன என்றார். பகவானும் மகிழ்ந்து, அங்கே வந்திருந்தவர்களுக்கெல்லாம் தன் பிரசாதம் தர, எல்லாரும் பெற்றுச் சந்தோஷித்துப் பகவானைப் பலவகையாய்த் தோத்திரம் பண்ணித் தத்தம் இடங்களுக்குப் போனார்கள். நாமதேவர் ஒரு தொழிலு மில்லாமல் ஸ்ரீ ஹரிநாமஸ்மரணை செய்துகொண்டிருந்தபோது, குணாயி அதைத் தெரிந்துகொண்டு, மகனே, நமக்குச் சுகமுண்டாகும் பொருட்டுப் பொருள் சம்பாதிக்காமலிருந்தால், எப்படி இல்லறம் இனிதாய் நடக்கும் என்று சொல்ல, நாமதேவர், பொருளில்லாமல் தொழில்செய்வது எப்படியென்று கேட்க, குணாயியானவள், உடனே பண்டரிபுரத்துக்குப்போய், சற்றும் இரக்கமில்லாதவனும், மலிந்த தானியத்தை வாங்கிச் சமைத்து, ஒரேவேளை அரைவயிற்றுப் போஜனம்பண்ணிப்,பொருள் சேர்த்து, அதிகவட்டிக்குக் கொடுத்து அளவற்றபொருள் சேர்த்துவைத்துக்கொண்டிருக்கிறவனுமாகிய தாதா என்னும் பெயரையுடையவனிடத்திற் போய், என் புதல்வன் ஒரு ப்ரயோஜநமும் இல்லாமல் திரிகிறான், தொழில்செய்யப் பொருளுமில்லை,ஈடுமில்லை, ஆகையால் இந்தத் தருணத்தில் ஆயிரம் விராகன் உதவி செய்தால் நன்மையாமென்று வேண்டிக்கொள்ள, விட்டலப் பெருமான், அவன் மனத்திற் பிரவேசித்திருந்து பொருள் தருவதற்குச்சம்மதிக்கும்படிசெய்தார். அவனும்ஆறுமாச காலத்துக்குள் பொருள் சேர்ப்பதாக இவர்கள் கைப்படக் கடன் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டு கொடுத்தான்; அந்த ஆயிரம் விராகனை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து, புதல்வனாகிய நாமதேவரிடத்தில், நடந்த செய்தியைச் சொல்லிப் பொருளைக் கொடுத்து, இந்தப் பொருளைக்கொண்டு வியாபாரம் செய்து அதிக லாபம் பெற்று இல்லறத்தை நடத்தக்கடவா யென்றாள். அந்தப்பொருளைப் பெற்றுக்கொண்ட நாமதேவர்,சிலவேதியரோடுகூடிஆலோசித்து, எந்த வியாபாரம் செய்தாலும் குற்றமே யுண்டாகின்றது, ஆதலால் பகவத் பாகவத சமாராதநத் தொழிலே உத்தமமானது, இது இக பர பலன்களைத்தரும் என்று துணிந்து,காசிப்பட்டணத்துக்குப்போய்,கங்காநதிக்கரையிலுள்ள ஒருமடத்தில் தங்கி,சூரியோதயமுதல் அஸ்தமநம்வரைக்கும் அந்நதாநம் செய்வதும்,இராக்காலமுழுதும் ஹரிநாம பஜனை செய்துகொண்டிருப்

பதுமாகிய தொழிலை மேற்கொண்டு நடத்திவருவதைக் கேள்விப்பட்டு, அநேகம் வேதியர்கள் தங்கள்மனைவிமக்களோடு இவரிடத்துக்கு வந்தார்கள். நாமதேவருடையபுகழ் எங்கும் பரவினதனால் பண்டரிபுரத்திலுள்ள வேதியர்கள் பலரும கூட்டமாய் வந்து இவர் கொடுக்கும் உணவையுண்டு, தக்ஷிணை வாங்கிக்கொண்டுபோவதைக் கண்ட தாதா என்னும் சாவகார் அவ்வேதியரை வினவி அறிந்துகொண்டு, துன்பமடைந்து, ஏழையாகிய நாமதேவருக்கு இந்த அந்நதாநம்முதலாகிய ஆடம்பரம் செய்வதற்கு என்னுடைய பொருள் காரணமாயிருந்தது என்று அதிக ஆத்திரத்துடன் விரைந்துபோய்க் காசியையடைந்து இவர் செய்யும் அந்நதாந முதலியவற்றைக் கண்டு, மனம் நொந்து, உண்மையாக இவர் வர்த்தகத்தொழில் செய்வாரென்று நம்பிக்கொடுத்த, அந்தப் பொருளை யெல்லாம் இப்படிச் செலவுசெய்கிறாரே, இனி நமக்குப் பொருள் சேர்வது அருமையென்று மனம் வருந்தி, கடனுக்கீடான காணி பூமிகளுமில்லை, வீடில்லை, உடைமையில்லை, கடனை யேற்றுக்கொள்ளத் தகுந்த சுற்றத்தாருமில்லை, இத்தோடே என் குடி முழுகிப்போயிற்று என்று எண்ணி அயர்வதை நாமதேவர் பார்த்து, துன்பங்கொண்டு வந்து, சாவ்காருடைய பாதத்தில் விழுந்து தோத்திரம் செய்தார். அப்போது இவரை வந்து சூழ்ந்துகொண்ட வேதியரை நோக்கி, இவர் பெருமை பொருந்திய வள்ளல், நீங்கள் உண்ணுங் காலத்தில் இவருடைய திருக்கரத்தால் க்ருஷ்ணார்ப்பணமென்று விடுகிற நீரை யேற்று உண்ணுங்கள், நல்ல சமயத்தில் இவர் வந்தாரென்றும் இவர் பெருமையைச் சொல்லுவதற்கு நமக்கு முடியாதென்றும் புகழ்ந்து சொல்லி, சங்கற்பம் கூறி, நீர் வார்த்தருள்வீர் என்று சொன்ன சொல், வர்த்தகருடைய காதில் நுழைந்தவுடனே, மிகவும் கோபித்து, நாம தேவரை நோக்கி, வர்த்தகம் செய்வதற்கென்று என்னை மயக்கி வாங்கிவந்த பொருளை இப்படிச் செலவு செய்யலாமா, படுபாவி, உன் மனம் கல்லா, மரமா, இப்படிச் செய்ததன்றி என்னைத் தத்த நீரும வார்த்துக்கொடுக்கச் சொல்லுகிறாயே, உன்னைப்போன்ற திருடரை நான் எங்கும் கண்டிலேன், நான் உனக்குக் கொடுத்த பொருளை மறுபடியும் கேட்காதிருக்கவேண்டி என்னை நீர் வார்த்துக் கொடுக்கச் சொன்ன சூதை நான் அறிந்துகொண்டேன், பட்டுப்போன மரம் மறுபடியும் தளிர்க்கக் கண்டாலும் நான் தத்தநீர் வார்த்துக் கொடுக்கக் காணமாட்டாய் என்று வணிகன் சொன்னபோது, நாமதேவர் வேதியரை நோக்கி, நீர் வார்ப்பதற்கு இவ்வணிகருக்கேயன்றி எனக்கு அதிகாரமில்லை, ஆகையால் அவரைப் பிரார்த்தித்து நீர் வார்ப்பித்து உண்ணுங்கள், என்னாலொரு தடையுமில்லையென்று சொல்ல, வேதியரெல்லாரும் சாவகாராகிய வணிகரைச் சூழ்ந்துகொண்டு, ஐயா, தாங்கள் நீர் வார்த்தால் நாங்கள் உண்டு பசியாறுவோம், நெடுந்தூரத்திலிருந்து இந்த அன்னத்தின் பொருட்டாகவும் தக்ஷிணையின் பொருட்டாகவும் வந்தோம், எங்கள் பசியை நீக்காமற் போவீரானால் உமக்கு நரகலோகப்ராப்தி யுண்டாகும் என்று பலவகையாய் நிந்திக்கக் கேட்ட வணிகன் துக்கித்து, நான் தாந தர்மம் செய்யா

மலும் நல்லவுணவை யுண்ணுமலும், தெய்வவிஷயத்தில் உபயோகிக்காமலும், தாய் தந்தையருக்குச் சிரார்த்தம்முதலியவற்றைச் செய்யாமலும் சேகரித்த பொருளை இவனுக்குக் கொடுத்ததுமல்லாமல்இந்த வேதியரெல்லாரும் நிந்திக்கவும் உடம்படுத்தேனே, தென்னமரத்தின் அடியில் நீர்வார்த்தால், அது அந்த நீரைத் தலையிற் சுமந்து தருவதுபோல, இவர்க்குப் பொருளுதவி செய்தால்இவர் நன்றியறிதலோடு செலுத்திவிடுவார்,அதனால் என் பொக்கசக்குறை தீருமென்றெண்ணிப் பொருள் கொடுத்தேன், அது பாலைநிலத்திற் பெய்த மழைபோலாயிற்றே, வேதியர்கூட்டமோ நம்மைவிட்டுநீங்குவதில்லை, நிந்தனையோ ஒழிவதில்லை, அவர்கள் உணவையோ உண்பதில்லை, நீர் வார்க்காமற்போனால் அவர்கள் நம்மை விடுவதில்லை என்று பலவகையாய் ஆலோசித்து, இவர்கள் புசித்தால் என்னைச சேர்வது என்ன குறை யென்று தனக்குள்ளே ஒருஆலோசனை செய்துகொண்டு, வணிகன் சொல்லுகிறான், வாரும் வேதியரே, என்மேல் பழிசொல்லுதல் நீங்கும்படி நீர் வார்க்கிறேன், ஏற்றுக் கொள்ளுங்கள் என்று சொன்னவுடனே, வேதியர் அப்படியே செய்யவேண்டுமென, வணிகன் இதனால் உண்டாகும் லாப நஷ்டங்களெல்லாம் நாமதேவரைச் சேருமேயன்றி எனக்கு ஒன்றுமில்லை யென்று தத்த நீர் வார்க்க, வேதியர்கள் ஏற்றுக்கொண்டார்கள். ஏற்றுக்கொண்டு நகைத்து, வேதியர் கூட்டம் உண்டபிறகு, புஷ்ப சந்தந தாம்பூலாதிகளும் தக்ஷிணையும் பெற்று ஆசீர்வதித்துப் போனபிறகு, வணிகன் செய்த செய்தி யென்னவென்றால், நான் கடன் கொடுத்த பொருளை இப்பொழுதே தரவேண்டும், கொடுக்குமளவும் உன்னை வேறொரு காரியத்தில் பிரவேசிக்க வொட்டேன், இல்லை யென்பாயானால் உயிர்விடுவேன் என்றுசொல்ல, நாமதேவர் காளியமர்த்தனாகிய க்ருஷ்ணபகவானை நினைத்துப் பல வகையாகத் தோத்திரஞ் செய்து, வணிகன் செய்யுந் துன்பத்தை நீக்கியருளவேண்டுமென்று பிரார்த்திக்க, பகவானவர் இவர்க்கெதிரே யெழுந்தருளி, அந்த வணிகன் இங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கினால், அந்த க்ஷணமே அவன் கடன் தீரும்படி செய்கிறேன் என்று கருணையுடனே சொல்ல, நாமதேவர் ஜ்ஞாநத்ருஷ்டியால் நோக்கி, மாநஸத் தொண்டுசெய்ய, பகவான் உடனே மறைந்தருளினார். உடனே நாமதேவர் வணிகனை நோக்கி, இங்குள்ள இத்தீர்த்தத்தில் மூழ்கிவந்தீரானால் உமது கடன் முழுதும் கொடுத்துவிடுகிறேனென்று சொல்ல, வணிகன், நீரில் அமிழ்த்திக் கொல்லவோ இந்த வுபாய மெடுத்தாய், நான் மூழ்கமாட்டேனென்று வாதுசெய்ய, அவ்வணிகனை நாமதேவர் மறுபடியும் தோத்திரம்பண்ணி, ஐயனே, உன்னைப் போலப் புகழுடைந்தவர் இவ் வுலகத்தில் யாவர்? என்னாலே செய்யப்படுகிற இந்த அந்நதாநபலன் உன்னதேயாம்; தவப்பயன் முழுதும் இதனால்கிடைக்கும்;இதைப்பார்க்கிலும் சிறந்த வர்த்தகம் வேறொன்றுமில்லை; யுகாந்தகாலம் வரைக்கும் செலவு செய்தாலும் பொருள் குறைவு படாது. நற்குணமுள்ளவனே! துன்பத்தை யொழிப்பாயாக என்று நாமதேவர் சொல்லக்கேட்ட வணிகன், நீயென்ன தந்திரஞ் செய்தாலும் உன்னை விடமாட்டேன்; நான்

கொடுத்த பொருளைக் கொடுத்தே தீரவேண்டும் என்று சொல்ல, நாமதேவர் அப்படி நீர் பிடிவாதம் செய்தால் கங்கா ஸ்நானம் செய்து வாரும், உடனே உமது பொருளைக் கொடுத்துவிடுகிறேனென்று சொல்ல, வணிகன், நாமதேவர், என்னைக் கங்கையிலமிழ்த்திக் கொல்வதற்கோ இந்த ஏற்பாடு செய்தாய்; நான் மூழ்கமாட்டேன், பொருளைக் கொடுத்துவிடு என்று சொல்ல, நாமதேவர் மறுபடியும் அப்படியே சொல்ல, வணிகன்சம்மதித்து, அரையளவு நீரில் மூழ்கினவுடனே, துளசிமாலையை யணிந்த ஸ்ரீமந் நாராயணனுடைய மாயையினால் பாதாளலோகத்தை யடைந்தான். அவ்விடத்தில் நவரத்னமயமான மண்டபத்தில், சிம்ஹாஸனத்தின்மேல் கருடக்கொடியையுடைய விஷ்ணுமூர்த்தியானவர் துருக்க வேந்தன்போல எழுந்தருளியிருந்தார்; அவரை நாரதாதி முனிவர் யாவரும் மிலேச்ச வுருவமாய்ச் சூழ்ந்திருந்தார்கள். அவ்விடத்தில் பலா, மா, தெங்கு முதலான மரங்களும, மல்லிகை முல்லை முதலான கொடிகளும் நெருங்கி மிகவுஞ்சிறப்புப்பெற்றிருந்தன. கிளி, மயில், சாதகம், புறா முதலியவைகள் பாடுதலும் ஆடுதலும குறையாதிருக்கும் எக்காலத்திலும காணாத காட்சியை இன்று கண்டோமே யென்று, வணிகன் மனமகிழ்ந்து உடல் புளகித்து நிற்கையில், அந்த மண்டபத்திலிருந்தவர்கள் இவனையழைத்து, நீ இங்கு வந்த வரலாறென்னவென்று கேட்க, இவனும் தன் வரலாறு முழுதுஞ் சொல்ல, எங்கள் அரசன் உன்னைப் போஜநத்துக்கழைத்தாரென்று சொல்லி, கொழுத்த மாமிசத்தைச் சமமாகக்கூட்டிய முல்லையரும்பு போன்ற சோறும், நெய்யில் தோய்த்தெடுத்த முக்கனி முதலியவும், பாலும் இருக்கின்றன, வருவாயாகவென்று அழைக்கவே, வணிகன் திகைத்து, நமது பொருளும போயிற்று, சாதியும் ப்ரஷ்டமாவதற்குரிய காலமும் நேரிட்டது, துருக்கரோடிருந்துண்ணப் பிடித்திழுக்கிறார்கள், உண்ணமாட்டேனென்றால் என்ன தீங்கு செய்வார்களோ என்று மனங் கலங்கி, நாமதேவரை மனத்தில் நினைத்து, இவ்விடத்தில் என்னைக்காப்பதற்கு ஒருவருமில்லை, அங்கே உமக்குக் கடன் கொடுத்து, லாப மடையும்பொருட்டு இங்கே வந்து துருக்கரோடுண்ணவும் நேர்ந்திருக்கின்றது, இந்தச் சமயத்தில் என்னைக் காப்பதற்கு உம்மையன்றி வேறொருவரு மில்லையென்று சொல்ல, நாமதேவர் இதையறிந்து, தாய்போல் அங்கே வந்து, விசனமடைவது தகுதி யன்று, எல்லார்க்கும் பிறவா முத்தி தருவோன் இந்தப் பாண்டுரங்கனே யன்றி வேறொருவரு மல்லர், இவரோ பரமபாகவதர், இவர்களோடு கூடியிருந்து உண்பதைப் பார்க்கினும் வேறு ப்ரயோஜநம் வேண்டுவதில்லை, பிரமன் முதலிய தேவர்களுக்கும் கிடைத்தற்கரிய ப்ரஸாதம், ப்ரபலமாகிய இந்தச்சமாராதனை செய்கையால் உமக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் கிடைத்தது; அதை விலக்குவீராஞல் இதற்கு மேற்பட்ட பொருள் ஒன்றுமில்லையென்று மதித்து உண்ணக்கடவீர் என்று சொன்னார். அதைக்கேட்ட வணிகன் வேதியரை நோக்கி, யாவரையும் மயக்கத்தகுந்த மோஹநமந்திரத்தால் என்னை வசியம்பண்ணிக் கொண்டீர்; கடனென்று பெரும்பொருள் வாங்கிக்கொண்டு வெள்ளோலை

யொன்றெழுதி என்னிடத்திற் கொடுத்து, அநநதாநஞ்செய்து பொருள் முழுதும் பாழாக்கினீர்; அன்றியும் மிலேச்சரோடுகூடி உண்ணச்சொல்லி என் குலமுழுதும் தாழ்வடையும்படி செய்யத்துணிந்தீர்; இது உமக்குத்தகுமோ, என் சொல்லைத் தடுக்காமல் இக்ஷணமே இந்த எல்லையைத் தாண்டுவித்து என்னை என் ஊரில் கொண்டுபோய் விட்டுவிடும், இனி உம்மைப் பொருள் கேட்கமாட்டேன், இது உண்மையாகுமென்று நாமதேவரை நோக்கிச் சொல்ல, நாமதேவர் வணிகனை நோக்கி, ஐயா, இந்த வேதியரோடிருந் துண்ணுதற்கு நீர் மயங்கவேண்டியதில்லை, தடுக்காமல் உண்பீரானால், பகவான் அருள்செய்வார், பொறுக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, வணிகன், நாமதேவரை நோக்கி, நீர் அடம்செய்ய வேண்டாம், அரிசியும் பருப்பும் என்னிடத்திற் கொடுத்தால், நானே சமையல்செய்து உண்டு செல்லுவேன் என்று சொல்ல, நாமதேவர் சந்தோஷித்து, அப்படியே கொடுத்துச் சமையல் செய்வதற்கு நான்கு எருமுட்டையும் கொடுத்தார். அவற்றைப் பெற்றுக்கொண்ட வணிகன், நாமதேவரே, இந்த யவனரை வெளிப்படுத்த வேண்டுமென்று சொல்ல, நாமதேவர் வணிகனை நோக்கி, ஐயா, நீர் சற்றுநேரம் கண்மூடிக் கொண்டிரும் என்றவுடனே, வணிகன் அப்படியே மூடிக்கொண்டிருந்தான். அப்போது, பண்டரிபுரத்திலுள்ள பெரியதாகிய சந்திரபாகை நதியில் மூழ்கி யெழுந்தவன்போல ஈரவஸ்திரத்தோடே எழுந்தனன். அங்கே வேதியர்கூட்டமும், அன்போடு பகவானை பஜநம்செய்வோரும் கூடி, விட்டலப்பெருமானைத் துதிப்பதை வணிகன் கண்டு சொல்லுகிறான்: காசியில் கங்கைக்கரையிலிருந்த நான் சந்திரபாகையை அடைவதற்குச் சொப்பநங் கண்டேனே, அப்படிச் சொப்பநங் கண்டிருப்பேனானால், நாமதேவர் கொடுத்த பதார்த்தங்கள் இருக்கின்றனவே, இது என்ன அதிசயம் என்று நாமதேவரைப் புகழ்ந்து, அந்த நதிக்கரையில் வரும்போது, வஸ்திரத்தில் முடிந்த எருமுட்டையைமாத்திரம அவிழ்த்து அந்த நதியில் விழும்படி உதறிவிட்டு, நனைந்த வஸ்திரத்துடன் வீட்டுக்கு வர, மனைவி கண்டு, நாமதேவருக்குக் கொடுத்த பண முழுதும வாங்கிக்கொண்டு வந்தீரோவென்று கேட்க, வணிகன், தன் மனைவியை நோக்கி, என் உயிர் பிழைத்து வந்ததே பெரிதாயிற்றென்று சொல்லி, ஈரவஸ்திரத்தைப் பிழியும்போது ஒருஎருமுட்டை அந்த வஸ்திரத்தில் ஒட்டிக்கொண்டிருக்கக் கண்டு, அதை உற்றுப் பார்க்கும்போது, அது உயர்ந்த தங்கமாயிருக்கக் கண்டு, சரீரம புளகித்து, நாமதேவர் இந்த லோகத்திலுள்ள நரர் அல்லர் என்றும, தேவரேயென்றும மதிந்து, விட்டலப்பெருமான், நாமதேவர் பொருட்டு எனக்குக் கொடுத்த மிகுந்த திரவியத்தையெல்லாம் நதியில் போட்டுவிட்டேன், அதுவும் என் அத்ருஷ்டமே யாகுமென்று மனம் வருந்தி, நாமதேவரை நான் வீணாய் நிந்தித்தேன், பாகவதரை நிந்தித்த அபராதத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று பகவானைப் பிரார்த்தித்து, அது முதல் இரவும் பகலும் விட்டலபகவானைத் தோத்திரம்செய்வதும் ஏழைகளுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பதும் ஆகிய செயல்களை மேற்கொண்டு சுக

மாய் வாழ்ந்திருந்தான். நாமதேவரும் பகவானை வணங்கிக்கொண்டும், தோத்திரஞ் செய்துகொண்டும் நிற்க, விட்டலப்பெருமான், நாமதேவரை இருகரத்தாலும் எடுத்து மார்போடு தழுவி, உச்சிமோந்து பல இன்சொற்களைச் சொல்லி, பண்டராபுரத்தில் நாமதேவரோடு எழுந்தருளியிருந்தார். இந்த நாமதேவர் சரித்திரத்தைச் சொல்லுவோரும், கேட்பவரும், நியமமாய்ப் புத்தகம் வைத்துப் பூசிப்போரும், இம்மையில் தர்மார்த்தகாமங்களை யடைந்து புகழையும் பெற்று, மறுமையில் ஸ்ரீவைகுண்டநாதனது திருவடியை யடைந்து நித்தியராய் வாழ்வார்கள். என்று சொல்லி, மேலே கபீர்தாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

நாமதேவர் சரித்திரம் முற்றிற்று

# ௫-வது கபீர்தாசர் சரித்திரம்.

புண்ணியநதிகளிற் சிறந்ததென்று எல்லாராலும் புகழ்பெற்ற கங்காநதியில், மேகம் நீரைப்பொழிய, ஒருமஹான் அதின் வழியாயிறங்கிவந்த ஒரு கிளிஞ்சிலில், பகவானது அநுக்ரஹத்தினால் அமைக்கப்பட்டு அயோநிஜராய்க் கிளிஞ்சிலோடு மிதந்துகொண்டு, நன்மையைத் தருவதாகிய ஸ்ரீராமஜபத்தை விடாதவராய்த் தியானஞ் செய்துகொண்டிருந்தார். அப்போது அங்கே, துணிகளை நெய்பவனாகிய நமாலமோமி யென்பவன், கையிலே நூலை யேந்தி வந்து அந்த நதியில் துவைத்துக்கொண்டிருக்கையில், இந்தக் கிளிஞ்சில் மிதந்து வருவதைக் கண்டு, நீரி லிறங்கி அதை யெடுத்துக்கொண்டு கரையில் வந்து வகிர்ந்து அதனுள்ளேயிருந்த குழந்தையை மிக்க அன்போடு தன் கையிலேந்தி, வறுமையால் வருந்தினவனுக்குப் பெருந் தனம் கிடைத்தாற்போல மகிழ்ந்து, தன் வீட்டுக்குவந்து மனைவிகையிற் கொடுத்துக் குழந்தை கிடைத்த வரலாற்றையுஞ் சொல்ல, அவள் ஆசையோடு வாங்கித் தன் இரண்டு தனங்களிலுஞ் சுரக்கிற பாலை யூட்டி, பகவானைத் தியானம் பண்ணி, அந்தக் குழந்தைக்குக் கபீர்தாசர் என்று பெயரிட்டு வளர்த்தாள், அது நன்றாய் வளர்ந்து, ஸ்ரீராம நாமத்தை இடைவிடாமல் உச்சரிப்பதைக் கண்டு, காசியிலுள்ளோர், துருக்கனுக்கு இப்படிப்பட்ட நன்மகன் பிறந்தானே, இந்தத் துருக்கன் செய்த புண்ணியமே புண்ணியம் என்று புகழ்ந்து கொண்டாடினார்கள். பிறகு, தாசருக்கு வயது வந்தவுடனே, தாய் தந்தையர் இவர்க்குத் தகுதியாகிய பெண்ணை மணஞ் செய்வித்தார்கள். மணஞ் செய்துகொண்ட கபீர் தாசரானவர், இந்தப் பிரபஞ்சவாழ்க்கையில் சிறிதும் மனம் பற்றாதவராய், ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனத்திலேயே மனஞ் செலுத்துகிறவரா யிருப்பதைக் கண்ட தந்தையானவர் துன்பமடைந்து, வாழைத்தோட்டத்தில் ஒரு இலந்தைமரம் நின்று தழைப்பதுபோல, நீரில் மிதந்தவன் நமது குலத்தில்வந்து சேர்ந்துபிரகாசித்துக்கொண்டிருக்கிறானென்று சிந்தி

த்திருக்க, தாயானவள் இவரை நோக்கி, அப்பா, நீ இவ்வாறு ராம பஜனை செய்துகொண்டே திரிந்தால் நமது இல்லறம் எப்படி நடக்கும், தறியைத் தொட்டுத் துணிகளை நெய் யென்று சொல்ல, அச்சொல்லைக் கேளாதவராய் பகவானைத் தியானித்துக் கொண்டிருந்தார். தன்னை மறந்து தியானத்தி லிருப்பவரைத் தாயானவள் அதட்டி, என்னடா, மரம்போ லிருக்கிறாய் என்று கோபித்து, இனி அடிக்க வருவாள்போ லிருப்பதைத் தாசர் தெரிந்துகொண்டு, மன மஞ்சி எழுந்து, ஒரு முழத் துணியை நெய்து முன் போலவே தியானத்தி லிருக்க, இவருடைய மனத்தில் அமர்ந்திருக்கிற பகவான், இவர் நெய்யாம லிருந்தால் தாய் கோபிப்பாளென்று தறியினிடத்தில்வந்து, இவர் நெய்வதுபோல நெய்துகொண்டும், இவர் விழித்து நெய்யும்போது தாம் சும்மா இருந்தும் இப்படி ஒரு புடவை நெய்து முடிந்தவுடனே, தாசர் அதை மடித்தெடுத்துவந்து தாயினிடத்திற் கொடுக்க, அவள், அப்பா நீ இதைக் கடையிற் கொண்டுபோய் விற்றுப் பணம் கொண்டுவா வென்றாள். இவர் அவ்வாறே கடை வீதியிற் போய்த் தியானத்தில் அழுந்தின மனத்துடன் ஓரிடத்தில் அசைவற்று நின்றார். வஸ்திரம் வாங்க வந்தவர்கள் இவர் கையி லிருப்பது அதிக விலையுள்ளது என்று விலகிப்போக, சூரியன் அஸ்தமித்தபிறகு எல்லாரும் நீங்கினார்கள். தாசரும் விழித்து, அங்குள்ளாரைக் கேட்டு ஒருவரும் அந்த வஸ்திரத்தைக் கொள்ளாமையைக் கண்டு, இதை விற்காமல் நாம் போனால் தாய் கோபிப்பாளென்று துன்பமடைந்து, சற்று நேரம் அங்கே நின்று மனது சலித்து, ஒரு பாழ் வீட்டைக் கண்டு அதில் தங்கினார். அப்போது பகவான் அவர் மனத்தை யறியவேண்டுமென்று ஒரு முதுவேதியனாகிவந்து, தாசரைநோக்கி, அப்பா, எனக்கு அதிக குளிராயிருக்கின்றது, எனக்குக் குளிர் தீரும்படி ஒரு வஸ்திரம் கொடு என்று கேட்க, தாசர் தமது கையிலிருந்த வஸ்திரத்தை இரண்டுதுண்டாக்கி, ஒரு துண்டத்தைக் கொடுக்க வாங்கிக் கொண்டுபோய், மறுபடியும் ஒரு பக்கிரி வேடங் கொண்டுவந்து இவரைக் கிட்டிநின்று, இது என்ன, நீ குதாவின்மீது நினைவில்லாமல், ராமா வென்று சொல்லிக்கொண்டிருக்கிறாய், உனக்கு நான் சொல்லவேண்டிய தொன்றுமில்லை, எனக்கொரு வஸ்திரம் கொடு என்று கேட்க, நீர் சொல்லுகிற குதாவே இந்த ஸ்ரீஹரி யென்று சொல்லி, மற்றொரு துண்டு வஸ்திரத்தைக் கொடுக்க, வாங்கிக் கொண்டு போன பகவானானவர், பக்கிரி வேஷத்தை விட்டு, வேதிய வேஷம் கொண்டு, தாயினிடத்தில் வந்து, உன் மகன் ஆடையை விற்காமல், ஒரு பாழ் வீட்டுக்குள்ளே இருந்துகொண்டு ஸ்ரீராமநாம பஜனை செய்துகொண் டிருக்கிறான். நீ விற்கச்சொல்லி யனுப்பின ஆடையை விற்காமல், வேதியனுக்கும் பக்கிரிக்கும் பாகித்துக் கொடுத்துவிட்டான் என்று சொல்லக்கேட்ட தாயானவள், அவன் வரட்டும் தண்டிக்கிறேனென்று சொல்ல, வேதிய வேஷம் பூண்ட பகவானானவர், உனக்கு அவன் அகப்படமாட்டான், துன்பஞ்செய்கிற தேள் வெளிப்படுமோ, நான் அவனைக் காட்டுகிறேன், என்பின்னே வாவென் றழைத்து

ப்போய்த் தாசரிருக்கும் வீட்டைக் காட்டித் தாம் வெளியே நிற்கத் தாயான வள் உள்ளே போய்த் தன் மகனைக் கண்டு, சேலை எங்கே காட்டு, இந்த இருட்டில் ஏன் வந்து நிற்கிறாய் என்று கேட்க, தாசர் மறுமொழி சொல்லாம லிருக்க, தாய், என்னடா நான் கேட்டதற்கு மாறுத்தரம் சொல்லாம லிருக்கிறாய் என்றாள். அப்போது வெளியேநின்ற வேதியன், ஓ அம்மே, இப்படிக் கேட்டால் அவன் வழிக்கு வரமாட்டான், நன்றாய்த் தண்டித்தால் உண்மை சொல்லுவானென்று சொல்லக்கேட்டு, அடிக்கக் கோல் தேடுகையில், வேதியன் ஒரு கோலைக் கையிற்கொடுத்து அடியென, அவள் அடிக்க, அந்த அடிதனது முதுகிற்பட்டு வேதனை யுண்டாக, அவளைநோக்கி, நீ அவனை அடித்த அடி என் முதுகிற்பட்டு வேதனையுண்டாயிற்று, அவனை யடிக்கவேண்டாம், விட்டுவிடு என்று சொல்லக் கேட்டும அவள் விடாமல் மோதிமோதி யடிக்க, பகவானானவர் ஸ்ரீ ஜானகி பிராட்டியாரோடுகூடி,கையிற் கோதண்டம் தாங்கி வந்து எதிரே நின்றருளினார். ஸ்ரீ பகவான் எழுந்தருளினதைக் கபீர்தாசர் அறிந்து, அன்போடும அவருடைய திருவடியில் வீழ்ந்து வணங்க, இறைவன், அன்பனே உன்னை விடேனென்றார். தைக்கண்ட தாயும் பகவானை வணங்க, அவளைநோக்கி நீ இந்தப் புதல்வனைப்பெற்றதனால், உன் புண்ணியத்துக்கு நிகரான புண்ணியம வேறொன்றுமில்லை யென்று சொல்லி மறைந்தவுடனே தாயானவள், தன்மகனை மார்போடணைத்துக்கொண்டு,என் அருமை மகனே, உன்னால் ஸ்ரீ ராமபிரானைத் தரிசிக்க நேர்ந்தது என்று மிகு மகிழ்ச்சியோடு அழைத்துக்கொண்டு போனாள். போனபிறகு முன்போலப் புதல்வனைக் கோபிக்காமல் ஹரிபஜனையை விரும்பித் தானும இனிதாயிருக்குங் காலத்தில்,கபீர்தாசர் மனைவிக்குக் கர்ப்பமுண்டாகி, ஒரு புதல்வனைப் பெற்றாள். அவனுக்குக் கமால்தாசர் என்று பெயரிட்டு வளர்த்துவர, அவனுக்கு ஏழாவது வயது நிரம்பினவுடனே, அவர், தந்தையைநோக்கி ஐயனே, அடியேனுக்குத் துவாரகையைக் காணவேண்டுமென்கிற ஆசை மிகுதியாயிருப்பதனால், எனக்கு விடை கொடுக்கவேணடுமென்று கேட்க, கபீர்தாசர் குமாரனைநோக்கி, இந்த வயதில் உனக்குக் கோபால ஸ்வாமி திருவடியில் விருப்பமுண்டானதற்குக் காரணம யாதோ அறிகிலேன் என்று சொல்லி, சுமந்தனுக்கு உத்திரவு கொடுத்தார். விடை பெற்றுக்கொண்ட கமால் தாசர், தந்தையின் இரண்டு திருவடிகளையும வணங்கி, தாம் செல்லும் வழிகளெல்லாம் ராமநாமத்தை மிகவும் கொண்டாடுதலை நோக்கி, வழியிலுள்ள ஊர்களில் இருப்பவர்கள் இவர் செய்யும் ராமநாம சங்கீர்த்தனத்தைக் கேட்டு மகிழ்ந்திருக்க, விரைந்துபோய்த் திருத்துழாய் மாலையை யணிந்த ஸ்ரீகண்ணபிரான் வாழ்கின்ற திருத் துவாரகையை அடைந்து கோமதி நதியைக்கண்டு வணங்கி அதில் மூழ்கி ஸ்ரீ கோபீ சந்தனத்தை நெற்றியில் தரித்து ராமநாமத்தை உச்சரித்துக்கொண்டு, கையில் ஜபமாலையைத் தரித்துப் பத்மநாபனாகிய பகவானைத் தமது மனத்தில் நிறுத்தி, ஆலயத்தினுள்ளே பிரவேசித்து அர்ச்சாவிக்ரஹத்தைச்சேவித்து,பலவகையாய்த் தோத்திரஞ்செய்து,நான்கு

காலம் அவ்வூரில் தங்கியிருந்தார். பின்பு ஒருநாள் ஸ்ரீ கண்ணபிரா னுடைய ஆலயத்திற்போய் வணங்கி, ஓ பகவானே, என் மனமானது என்றும் உன்னுடைய திவ்ய சௌந்தரிய விக்ரஹத்தை மறவாதிருக்கும்படி அமைத் தருளவேண்டும் என்று பிரார்த்தித்துப் புறப்பட்டுச்சித்ரகூடத்தைச் சேர்ந்தார். இவர் அவ்விடத்தில் வந்திருப்பதைக் கேட்ட விஷ்ணுதாசர் எதிர் கொண்டுவந்து தோத்திரம் செய்து வணங்கி, இவரைத் தமது வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய், பாத பூஜை செய்து, உபசார வார்த்தைகளைப் பேசி, போஜனம் செய்வித்து, அன்றிரவில் இவர் ஹரிபஜனை செய்யக்கேட்டு விஷ்ணுதாசர் முதலிய எல்லோரும் அன்போடு இந்தக் குழந்தையின் செய்கை மிகவும் புதுமையாயிருக்கின்றதென்று சொல்லிக் களிக்க, விஷ்ணு தாசரானவர் இவருக்கு எவ்வளவு பொருள் கொடுத்தாலும் சிறந்து விளங் காது என்று நினைத்து ஒரு மாணிக்கத்தைக் கொண்டுவந்து இவர் சந்நிதி யில் வைத்து இந்த மாணிக்கம் இராக்காலத்தில் இருளை நீக்கும் ஆகையால் இதனைக் கொண்டுபோம் என்று சொல்ல, கமால்தாசரானவர் இதை என் தந்தையானவர் விரும்பமாட்டார் என்று சொல்லிப் பின்னும் சொல்லுகின்றார். நீர் தந்த மாணிக்கமும் கல்லும் எங்களுக்குச் சரிதான். வேதியர்களுக்குத் தன மும், வேந்தனுக்கு மாணிக்கமும், வறியோர்க்கு அன்னமும், வித்வான்களுக்கு வஸ்திரமும் யாத்திரை செய்பவர்க்கு உணவும் கொடுக்கவேண்டும். சுத்த வைஷ்ணவர்கள் எதனையும் விரும்பமாட்டார்கள் என்று சொல்ல, விஷ்ணு தாசரானவர் எழுந்து இவரை வணங்கி, இவர் அறியாமல் இவரது வஸ்திரத் தில் அந்த மாணிக்கத்தை முடிந்து வைத்தார். பிறகு கமால்தாசர் அங்கே இருந்து புறப்பட்டுத் தம் ஊர்க்குவந்து தந்தையாருடைய பாதத்தை வண ங்கி நிற்க, தந்தையாராகிய கபீர்தாசர் இவரது வஸ்திரத்தில் உள்ள முடியை நோக்கி அவிழ்த்து, மாணிக்கத்தைப்பார்த்து, இதைக்கொடுத்தவர் யாரென்று கேட்க, இவர் என்னையறியாமல் விஷ்ணுதாசர் முடிந்துவைத்தார் என்று சொ ன்னார். அதுகேட்டு கபீர்தாசர் மிகவும் துன்பமடைந்து அழத்தொடங்கினார். அவர் அழுமோசையை மனைவி கேட்டு, வந்து நீர் அழுதற்குக்காரணம் யா தென்று வினவ, மனைவியைநோக்கி, நமது சிறுவன் கமால்செய்த காரியத்தை என்னவென்று சொல்லுவேன், நமதுகுடிக்குப் பழியுண்டாகும்படி ஹரிநாம த்தை விற்று மாணிக்கத்தைக் கொண்டுவந்தான் என்று சொல்ல, அதைக் கேட்ட கமால்தாசர், அவ்விடம் விட்டுநீங்கி, சித்ரக்கூடத்தையடைந்து மாணி க்கத்தைக்கொடுத்தவர்கையில் தாம்கொண்டுவந்துகொடுத்து தம்மிடத்துக்கு வந்து, தாய்தந்தையரை வணங்கி, தாம் முன்போய்ச் சஞ்சரித்த இடங்களில் நிகழ்ந்த செய்தியெல்லாம் சொல்லக்கேட்டுத்தந்தையானவன் பெருமகிழ்ச்சி யடைந்தான். மகிழ்ச்சி யடைந்ததேயன்றிக் கமால்தாசரைத் தழுவிக்கொண்டு அன்பு பாராட்ட, இவரும் தம் பிதாவின் பாதங்களைச்சேவித்துத் தோத்திரஞ் செய்து ஹரிபஜனைசெய்திருந்தகாலத்தில், ஒருநாள் அஸ்தமன காலத்தில், தீர் த்த யாத்திரையாய்வந்த மூவர், இவருடைய வீட்டுக்குவர, கபீர்தாசரும் சந

தோஷத்துடன் அவர்களைக்கண்டு, ஆதரித்து ஆசனம் கொடுத்து உபசரிக்க, தீர்த்தவாசிகளும் மகிழ்ந்திருந்தார்கள். சனகாதிகளைப் பார்த்து ஸ்ரீராமபிரான் சந்தோஷித்ததுபோல, கபீர்தாசர் அன்புமிகுந்து, தமது மனைவியை யழைத்து, மூவர்வந்தும் நமது வீட்டிலுண்ணாதிருப்பது கூடாது, ஆகையால் அவர்களுக்கு அமுதூட்டி மகிழ்விக்கக்கடவை யென்று சொல்ல, மனைவியானவள் இப்போது அன்னமில்லை, அயல்வீட்டில் கேட்டாலும் இல்லையென்பார்களே, விலைகொடுத்து வாங்குவதற்கும் ஒருகாசும் கையில் இல்லையே யென்று சொல்லி, தன் மகனை யழைத்து, வருந்தப்படுத்திக் களவு செய்யும்பொருட்டு, ஒரு கடையின் சுவரைத் தொளைத்து அதனுள்ளேபோகவிட, கமால்தாசரானவர் தமக்கு வேண்டுவனவாகிய அரிசிமுதலிய பொருள்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு, வேறுபொருள்களைத் தொடாமல், தீமக்கள்போலத் திருடுதல் குற்றமென்றெண்ணி, வணிகனுக்குச் சொல்லிப் பின்தொடர்ந்து வரச்செய்து, விரைந்து வெளியில்வர, வணிகன் இவர்காலைப் பிடிக்க, தொளைக்கு வெளியில் வருந்தி நிற்கும் தந்தையை நோக்கி, கொண்டுவந்த பொருள்களைக் கொடுத்து, செட்டியின் பொருள்களை வலிமையாய்க் கவர்ந்ததனால், அடையாளந் தெரியாமல் என்தலையை அறுத்துக்கொண்டு வீட்டுக்குப்போவென்று சொல்ல, கபீர்தாசர் கொஞ்சமும் இரக்கமில்லாமல், தலையை யறுத்துக்கொண்டுவந்து, இந்தச்செய்தியை மனைவிக்குச் சொல்ல, மனைவியானவள், மகனை யிழந்ததற்கும் மனமிரங்கி, வந்தவர்களுக்கும் உணவை யுண்பித்துத் தூங்குவிக்கத் தூங்கி, மறுநாள் காலையில் நீராடப்போனார்கள். அப்போது செட்டியானவன் இங்கும் அங்குமாக வோடிக் கூக்குரலிடக் கேட்டு வந்து கூடினவரெல்லாரும் அடையாளம் தெரியாமல் தலையை அறுத்துக்கொண்டு போனதிருடர் அருகிலிருந்த வுன்னைத் தலையை யறுக்காமலும், மற்றப்பொருள்களை யெடுத்துக்கொண்டு போகாமலும்போனது உன்தவமே யென்று சொல்ல, நன்றாய் விடிந்தவுடனே வணிகன் வேந்தனிடம் போய் இந்தச் செய்தியைச் சொல்ல, அரசனானவன், அருகில் நிற்பவரை நோக்கி, அந்தத் திருடரைத் தேடிக்கண்டு பிடித்துக் கழுவேற்றுங்கள் என்றான். அப்படியே அந்தக்கொலையாளிகள் விசாரித்துத் திருடினவன் தலையில்லாதிருக்கக் கண்டு, உடலைமாத்திரம் கழுவேற்றினார்கள். இந்த அநர்த்தத்துக்குஹேதுவாக வந்த மூவரும நீராடிவந்து, விடைபெற்றுப் போகும்போது, சலனமில்லாத மனத்தையுடைய கபீர்தாசரானவர், மனைவியும் தானுமாக அவர்களை உபசரித்து, பெரியோராகிய அவர்களுடனே நகர்ப்புறத்தே வந்து, கழுமரத்தில் முண்டம் நிற்கக் கண்டு, தீர்த்தவாசிகள் தலையற்ற முண்டத்தைக் கழுவில் ஏற்றுவார்களோ வென்று வியந்துநிற்க, அவர்களைக் கண்டு சவமானது கைகுவித்து வணங்கக் கண்டு சவம வணங்குகிற அதிசயமென்னவென்று தீர்த்தவாசிகள் கேட்க, கபீர்தாசர், அவர்களை நோக்கி பகவத்தாசர்களே! சவம் உம்மைக் கண்டு வணங்குதலாலே, இவன் ஹரிதாசனாகவேண்டும என்று தோற்றுகின்றதுஎன்றுசொல்ல அவர்களும பகவானுடைய தாசனாகிய இவன்

யாரென்று கேட்க, கபீர்தாசர் நடந்த செய்தியெல்லாம் சொன்னார். அவர்கள் கபீர்தாசரைப் பிரார்த்தித்து, எமக்கு அமுதூட்டும்பொருட்டு மகனை உயிரிழக்கும்படி செய்தாயே யென்று இரங்கிநிற்க, கபீர்தாசர் அவர்களைப் பார்த்து ஐயரே! எவராகிலும் ஹரிதாசர் பொருட்டு உயிரிழந்தால் அது நன்றேயாகுமென்றார். அதைக்கேட்ட மூவரும் கபீர்தாசருடைய மனைவியை நோக்கி, உன் மகன் தலையைக் கொண்டுவந்து எமக் கெதிரே வையென்று சொல்ல, அப்படியே அவள் கொண்டுவந்து வைத்தவுடனே, அந்தத் தலைமேல் தமது தண்டத்தை வைத்து, உடம்பின்மேல்படும்படி பரிசித்து, எழுந்திரு என்று சொன்னவுடனே, கமால்தாசர் தூங்கி விழித்தவர்போல் எழுந்து எதிரே நின்ற மூவரையும் வணங்கி நிற்கக்கண்டு, அவ்வூரி லுள்ளோர் யாவரும் ஆச்சரியமடைந்து, பகவத் பக்தர்களாகிய மூவரையும் வணங்கித் தோத்திரம் செய்ய, அவர்கள் விடை பெற்றுக்கொண்டு போனபிறகு, கபீர்தாசர் தமது வீட்டையடைந்து சுகமாக வாழ்ந்திருந்தார்.

அப்படியிருக்கையில் ஓர்நாள் ஹரிபஜனைசெய்துகொண்டு கடைத்தெருவின் வழியாகப் போகும்போது, அவ்விடத்தில் ஒருமாதானவள் திரிகையில் அரிசியைப்பெய்து மாவாகஅரைத்துக்கொண்டு இருக்கப்பார்த்து, தமது பிறவித்துன்பத்தை நினைந்து அழத்தொடங்கினார். அப்போது எதிரில் உள்ள ஜனங்கள் நீர் அழுதற்குக் காரணம் யாதென்று வினவ, அவர்களுக்கு மறுமொழி சொல்லாதிருந்த தாசரிடத்தில் சில தபோதனர்கள் வந்து வினவ, பரிசுத்த மனத்தினையுடைய தாசரானவர் அவர்களை நோக்கி, திரிகையினால் அரைபட்டு அரிசி சிந்துவதுபோல் பிறவித் துன்பமாகிய திரிகையில் அகப்பட்டு இந்த உயிர் வருந்துகின்றதே என்பதை நினைத்து அழத் தொடங்கினேன் என்றுசொல்ல அத்தபோதனர்கள் தாசரை நோக்கி ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் பண்ணுகிற வைஷ்ணவர்கள திரிகையின் முளையை அடுத்துச சேர்ந்துகிற அரிசிக்குநிகராக துன்பத்தில்நின்று நீங்குவார்கள் என்று சொல்லக்கேட்ட தாசரானவர்மனமகிழ்ந்து அவர்களைத் தழுவிக்கொண்டு தமதுவீட்டுக்கு அழைத்துவந்து சகலமான உபசாரங்களையும செய்து வாழ்ந்தனர். அப்படி வாழுங்காலத்தில்ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம செய்வதிலேயே மிகவும் விருப்பமுள்ளவராய்ப் பகவத்விஷயமாகிய பிரபந்தங்கள் பலவற்றைச் செய்து, கருணாநிதியாகிய சர்வேசுவரனது நாமஸ்மரணையே நமது பிறவித்துன்பங்களை நீக்குமென்னும் ஞாநம் பெருகப்பெற்றவராய், உத்தமராகிய ஆசாரியரிடத்தில்போய் ஞாநோபதேசம் பெறவேண்டுமென்று எண்ணி, பரிசுத்தராகிய ராமாநந்தர் என்னும் பரமபாகவருடைய திருமாளிகையிற்போய், அவரைச் சேவித்து, துறவிகளெல்லாருக்கும் தெய்வமபோல் விளங்குகின்றவரே! அடியேனுக்கு ஞானநிலையைஉபதேசித்துஅடியேனைக் காத்தருளவேண்டுமென்றுஅவரதுதிருவடியவணங்கி நிற்க,அந்த ராமாநந்தர் கபீர்தாசரை நோக்கி,இழிந்தத் துருக்கருக்கு வேதியர் ஞாநோபதேசம் செய்வது தகுதியல்லவென்று சொல்லக் கேட்ட தாசரானவர், திரிகரணசுத்தியை யடைந்து உம்மாலே ஞாநத்தைப்

பெற விரும்பி வந்தேன், அருள்சுரக்கவேண்டும் என்று சொல்ல, அதைக் கேட்ட ராமாநந்தர், நான் உனக்குஞானோபதேசம் செய்யவேமாட்டேனென்றார். பிறகு தாசர் நாம் என்செய்வோமென்றுமனம்வருந்தி வீட்டிற்குவந்து ராமாநந்தருடைய திருவடிகளுக்கு அடிமையாவதற்கும், அவர் திருவாயால் ஸ்ரீராமநாம மந்திரோபதேசத்தைப் பெறுவதற்கும் தகுந்த உபாயத்தை ஆலோசித்து, ராமாநந்தர் தீர்த்தமாடப்போகும் வழியில் ஒருகுழிதோண்டி அதில் இறங்கி இருக்க, அந்தராமாநந்தர், சூர்யோதயத்திற்கு முன்னே எழுந்து அந்த வழியாய்ப்போகும்போது, தமது பாதம் குழியில் இருக்கிற கபீர்தாசருடைய சிரத்தில்படவே, ஐயோ, நமது பாதம் யார்தலையின்மீதோ பட்டது என்றுபயந்து "ராமா" என்று உச்சரித்தார். உடனே கபீர்தாசரானவர் ஐயா! ஸதாசாரியரே, தேவரீருடைய திருவடி என்தலைமீது படப்பெற்றேன்; ஸ்ரீராம மந்திரத்தையும்உமதுதிருவாக்கால்உபதேசிக்கப்பெற்றேன்; அடியேனுக்கு ஈடேறுங்காலம் நேர்ந்தது என்று சொல்லி ஆனந்த பரவசராய்ப்பள்ளத்தில் நின்றும்எழுந்துநின்று பலவகையாய்த் தோத்திரம்செய்ய ராமாநந்தர் இந்தத்துருக்கனுக்கு இன்னும் சில நாள் தாமதித்து, வருத்தம் மிகச்செய்து, பிறகு உண்மை நிலையை உபதேசிக்கவேண்டுமென்று எண்ணி, ஒன்றும் சொல்லாமல் நீராடப்போய்விட்டார்; கபீர்தாசரும் தமது வீட்டிற்கு வந்து ஹரிபஜனைக்குரிய கீர்த்தனங்கள் பலவற்றைச் செய்து ஒவ்வொரு கீர்த்தனத்தின் முடிவிலும் ராமாநந்தருடைய தாசன் என்று அங்கிதம் அமைத்து அவற்றை எவ்விடத்திலும் பாடிக்கொண்டு திரிகிற நிலையைக் கண்ட ராமாநந்தர் எழுந்தருளி, தாசருடைய சிரத்தின்மீது தமது பாதுகையினால் மோதி, நான் உனக்கு உபதேசம் செய்யாமலிருக்க, நீ பாடின பாடல்களில் என் தாசனென்று அமைத்துப் பாடத்தகுமோ என்று கேட்க, கபீர்தாசரும் அவரை நோக்கி, ஸ்வாமி! தேவரீருடைய திருவடி என் தலையில் பட்டதுண்டு; அதன்மேல ராமாஎன்னும் மொழியை தேவரீர்உச்சரிக்கஎன் செவியில் பட்டதுமுண்டு. அதுவுமன்றி உமது ஸ்ரீபாதத்தைத் தாங்குகிற மரவடியை எல்லாரும் காணும்படி மோதுதல்போல என் சிரத்தில் ஏற்றினீர். அப்படியிருக்க, என் பாடலில் உமது தாசனென்று அமைத்துக்கொள்வதற்கு எனக்கு என்ன பயம என்றுசொல்லி தலையில் நின்றும் உதிரம் ஒழுகிக்கொண்டிருக்க வீழ்ந்துவணங்கிநின்றார். அப்படி வணங்குவதைக்கண்ட ராமாநந்தர், தாசருடைய சிரசின்மேல் தமதுதிருக்கையை வைத்து, உன்னைப்போல் ஞானபக்திகளை யுடையவர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லையென்று சொல்லி, இவர் செவியில் ஸ்ரீ க்ருஷ்ண நாமத்தைப் பொருந்தச் சொல்லி, ராமாநந்தர் தமது வீட்டுக்குப்போனார்; தாசரும் தாம்வாழ்கின்ற இடத்துக்குப்போனார். இவரைச் சில நல்லோர்மாத்திரம் துதிக்க, மற்றைத் தீயோரெல்லாரும் சேர்ந்து பிள்ளையைக்கொன்ற பாவியாகிய இவன், நல்லவன்போல ஸ்ரீஹரி நாமஜபம் பண்ணுகிறான், இவன் இப்படிவேஷம்பூண்டு வாழ்வது வஞ்சகமேயாகுமென்று, பல வகையான நிந்தனை வார்த்தைகள் சொல்லிப்பழித்து அவமா

ஙஞ்செய்ய, பகவானானவர் ஆலோசித்து நான்கு திக்கிலும் நிறைந்திருக்கிற சாதுக்களெல்லாரும வந்துகூடி, என்வீட்டில் ஒரு பந்தியாயிருந்து புசிக்க வேண்டுமென்று கபீர்தாசரே எழுதினதாக, எவ்விடத்திலும் ஓலையெழுதிவிட்டார். அந்த ஓலைகளைப் பார்த்த சாதுக்களெல்லாரும, அவர் நியமித்த தினத்திலே வந்து சேர்ந்தார்கள். அவர்களைக் கபீர்தாசர் கண்டு, இப்படிச் சாதுக்கள் யாவரும நமது வீட்டில் ஒருமிக்க வந்து சேருமபடி நாம்செய்த புண்ணியம யாதோவென்று மிகவும மனமகிழ்ந்து, ஒவ்வொருவரையும் தனித்தனியே சேவித்துத் தோத்திரஞ்செய்ய, திருமகள் கொழுநனாகிய பகவான், இங்கே உண்மையாய் விருந்தென்று நம்பிவந்தவர்களுக்கு விருந்திடாதிருந்தால் நிந்தையுண்டாகும என்று கபீர்தாசருடைய உருவங் கொண்டுவந்து, ஒவ்வொரு சாதுவுக்கும் ஒவ்வொரு கபீர்தாசர்போலத் தோன்றி அவர்களுக்குவேண்டிய ஊழியங்கள் எல்லாவற்றையுஞ்செய்து, அவர்களுக்கு அமுதூட்டும்போது அங்கே கூடியிருந்த நீசர்கள் கண்டு, அநேக கபீர்தாசர்கள் காணப்படுகிறார்களே! இது என்ன அதிசயம் என்று களிப்படைந்து நிற்க, தாசரூபங்கொண்ட பகவான் மூன்று நாளளவும, வந்த சாதுக்களுக்கு நல்லவுபசாரஞ்செய்து அவர்களைக் களிப்புடையபண்ணி, பொன், ஆபரணம், ஆடை முதலானவற்றைக் கொடுத்துத் தோத்திரம செய்ய, சாதுக்கள யாவரும் பெற்றுக்கொண்டு விடைபெற்றுத் தமது இருப்பிடங்களைபோய்ச்சேர்ந்தார்கள். பகவானும் போனார். பலவகையாயிசமூத்த நீசரெல்லாரும அஞ்சிவந்து,மெய்யன்பராகிய கபீர்தாசர ஸ்ரீபாதங்களைத்தாழ்ந்துவணங்கிசசொல்லுகின்றார்கள்! எப்படியென்றால், ஐயா கபீர்தாசரே! தேவரீருடைய பரிசுத்தமான மனத்தை நாங்கள் அறியாமல் செய்த பிழையைப பொறுக்கவேண்டுமென்று பிரார்த்தித்துப் பலவிதமாகத் தோத்திரம்பண்ணித் தமது இருப்பிடம் போனார்கள் கபீர்தாசரும மேகவண்ணனாகிய ஸ்ரீகண்ணபிரானை நினைத்து, ஓபகவானே! என்னை அவமானஞ்செய்யவேண்டுமென்றெண்ணி வந்த துஷ்டர்கள் நாணும்படியாக, வந்த சாதுக்களெல்லாருக்கும எல்லாப்பொருள்களையும அமைத்து அவர்களை மகிழ்வித்தாய், உன் பெருங் கருணையை என்னென்று புகழ்வேன் என்று வாழ்த்திச சிலநாள் கழிந்த பிறகு, ஸ்ரீபண்டரிபுரத்தை யடைந்து அந்தத் திவ்ய தேசத் தெம்பெருமானைப புகழ்ந்து வாழ்த்தி, சேதுவுக்குப்போக நினைத்து, விட்டலனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு, வழிநடந்து போகும்போது, வழியிலுள்ள ஓரூரில் ஒரு ராத்திரி ஹரிபஜனைசெய்ததை எல்லாரும் அறிந்து, மிகவும மனமகிழ்ந்தார்கள். அவ்விடத்தில் ஜீவா, தத்துவா என்னும இரண்டு பக்தர்கள்வந்து இவர் ஸ்ரீபாதத்தைவணங்கி, தோத்திரம செய்து எங்களுக்கு ஞானோபதேசம செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, கபீர்தாசர் அவர்கள் மனக்கருத்தை யறிந்து கொண்டு, அவர்கள் சிரத்தில் தமது கையைவைத்து உபதேசமும் செய்து, சேது முதலாகிய ஸ்தலங்களைச் சேவித்து, காசிக்ஷேத்ரத்தை யடைந்தார். இவர்உபதேசிக்கப்பெற்ற இருவருடைய ஊரிலுள்ள வேதியர் பலரும்,இவர்

மனைவி மக்கள் தமையன் தம்பிமார் முதலாகிய எல்லாரையு மிகழ்ந்து, ஒரு
துருக்கனை யடைந்தார் என்று நிந்தித்துப்பேசிச் செய்யும் நிந்தையை யெண்
ணாமல், இவ்விருவரும் பெற்ற மக்களுக்குத் தகுந்த பெண்ணும் பிள்ளையும்
வாய்க்காமல், மிகவும் மனம் வருந்திக் காசியை யடைந்து, கபீர்தாசரை வண
ங்கி, ஐயனே! எம்மூரிலுள்ள அந்தணர்கள் யாவரும் பரிசுத்தராகிய வும்மை
யாம் அடிதொழுதற்கு மனமிசையாமல் எமதுமனம்நோயும்படி நிந்தித்தார்க
ளென்று சொல்ல, உண்மை நிலையை யறிந்த கபீர்தாசர், அவர்களை நோக்கி,
மறுமொழி சொல்லுகின்றார். உன் மகளை உன் மகனுக்கு மணஞ்செய்வித்து
க்கொள்ளுமென்று சொல்ல, அப்படியே செய்யத்துணிந்து, தமது ஊருக்கு
வந்து மண முகூர்த்தமிட , அதை யறிந்த அவ்வூர் வேதியர் யாவரும் வந்து,
நீங்கள் மிருக சாதியின் முறைபோலச் செய்கிற மணம் நன்றா யிருக்க
வில்லை யென்று சொல்லி, அவர்களுக்குப் பிராயச்சித்தம் செய்வித்து, உற
வாக்கிக்கொண்டு, நீங்கள் துருக்கனைக் குருவென்று ஆசிரயித்ததற்கு ஸ்ரீ
லக்ஷ்மீநாதன் திருவுள்ளமுவப்படையமாட்டார் என்று சொல்லி, மகனுக்கு
த்தகுந்த மகளையும், மகளுக்குத் தகுந்த மகனையும் தமக்குள்ளே யமைத்து
மணப்பித்தார்கள்; பிறகு இந்த இருவரும் போய்க் கபீர்தாசரை வணங்கி,
மணச்செய்தியையுஞ் சொல்ல, கபீர்தாசரும் மகிழ்ந்தார். இவ்விருவரும் அவ
ரை வணங்கிச் சென்று தமது ஊரையடைந்தார்கள். இப்படியிருக்க, ஒரு
நாள் துளசிமணிமாலையையும் துவாதசநாமங்களையும் உடையவர்களாகிய
வைஷ்ணவர்கள் பதினாயிரம்பேர் ஒருமிக்கக் காசிக்ஷேத்ரத்தை யடைந்து,
இங்கு வந்தவர்களுக்கு உணவாதிகளைக் கொடுத்து உபசரிப்பவர்களாகிய
உத்தமர்கள் இருக்கிறார்களோவென்று விசாரிக்க, அங்குள்ளவர்கள் கபீர்
தாசரென்றவொருதுருக்க வைஷ்ணவர் இருக்கிறார். அவர் அந்நதானஞ் செய்
கிறாரென்று சொல்ல, அவரிடத்திற்போய், சீதா ராமாவென்று உச்சரிக்க,
வீட்டுக்குள்ளே யிருந்த தாசர் வெளியே வந்து, இந்தப் பெருங்கூட்டமாகிய
பாகவதரைக் கண்டு அடிவணங்கினார். வந்தவர்கள் இவரை நோக்கி, எமக்கு
உணவமைக்க வேண்டுமென்று சொல்ல, கபீர்தாசரும் அப்படியே யாகட்டு
மென்று, அவர்களை யழைத்துக்கொண்டு துளசிதாசன் என்னும் ஓர் வணிக
னிடத்திற்போய், ஐயா வணிகசிரேஷ்டரே! என்னை நாடிவந்த இந்தப் பதினா
யிரம பேருக்கும் மனமகிழும்படி உணவாதிகளைக் கொடுத்து உபசரிப்பீரா
னால் உமக்குப் பெரும் புண்ணிய முண்டாகும் என்று சொல்ல, மேல்விளை
வதையறியாத அவ்வணிகன், தாசரை நோக்கி, நீ கேட்டுக்கொண்டபடியே
நான்நடத்தினால், உன்மனைவியை ஒருநாளிராமுழுதும் என்னைக் கூடி யநுப
விக்கும்படி அனுப்புவாயோவென்று கேட்க, தாசரும் அப்படியேசெய்கிறே
னென்று உறுதி கூறினார். இவ்வுறுதி மொழியைக் கேட்டு வணிகன், இவர்
வேண்டுகோளின்படி பதினாயிரம் பேருக்கும் வேண்டிய உணவு முதலியவற்
றைக் கொடுத்து மகிழ்வித்த பிறகு, தாசரானவர் தமது மனைவியைநோக்கி,
வணிகனுக்குத் தாம் சொன்னவுறுதிமொழியைச் சொல்லி, அவ்வாறுநடந்து

கொண்டால் நன்மையாமென்று சொல்ல,அதற்குமனைவியும் சம்மதித்ததின் பேரில், அவளை யழைத்துக்கொண்டு போய், வணிகன் வீட்டின் வாசற்படியில் விடுக்க, வணிகனும் செய்தியை யறிந்துகொண்டு, வெளியே வந்து பார்த்து மனமகிழ்ந்து நெருங்கும்போது, ஸ்ரீ பகவானானவர் அந்த நகர்க்கு அதிகாரியின் உருவங்கொண்டுவந்து வில்வளைத்துக்கொண்டு,வணிகனுக்கெதிரில் நின்று, தந மதம் மிகுந்த புலையனே, என் தங்கையானவள் உன்னை யணைய விரும்பினாயாதலால் உன்னை ஒரு அம்பைக்கொண்டு தலையை யறுப்பேனென்று அதட்டிச் சொல்ல, வணிகன் பயந்துஅடிவணங்கி, சுவாமீ! என் குற்றத்தைப் பொறுத்து என் உயிருக்கு அபயங்கொடுத்தால் என் பொருள் எல்லாம் தருவேன் என்று சொல்ல, அதிகாரி வேஷம்பூண்ட பகவான் வணிகனை நோக்கி, இனி இப்படிப்பட்ட காரியங்களைச் செய்வாயானால், உன்தலையைத் தப்பாமல் அறுப்பேன் என்று சொல்லி, வணிகனே! இந்தக் கற்புடையாளையும் வணங்கென்று சொல்ல, அப்படியே வணங்கின பிறகு, அவளை யழைத்து வந்து, தாசர் மனையில் விடுத்து மறைந்து போனார். பிறகு கபீர் தாசரானவர் தமது மனைவியை நோக்கி, பெண்ணே! என் பேச்சைக் கடந்து இவ்விரவில் அங்கே யிருக்காமல் வந்துவிட்டாயே, இது உனக்கு நன்மையோவென்று கேட்க, மனைவியானவள் தாசரை நோக்கி, உம்முடைய வார்த்தையின்படியே நான்அந்த வணிகன் வாசற்படியில் நிற்கும்போது, வணிகன் வெளியேவந்து என்னைநெருங்கினான்;அப்போது, இவ்வூர்க்கு அதிகாரியென்பவன் கையில் வில்லும் அம்புமாக வந்து, வணிகனைத் தலையறுப்பேனென்று பயமுறுத்தி என்னையழைத்து வந்து இவ்விடத்தில் விட்டுப்போனான் என்று சொல்ல, தாசரானவர் ஊர்க்கதிகாரியா யிருப்பவன் வீட்டிற்குப்போய்க் கதவைத்தட்டி, தூங்குகிறவனை யெழுப்பி, ஏன் இப்படிச் செய்தாயென்று வினவ, அவன் எனக்கு இந்தச் செய்தி யாதொன்றுந் தெரியாதென்றான். அவன் சொன்ன சொல்வன்மையால், இப்படிச் செய்தவன் ஸ்ரீமந் நாராயணனேயென்று துணிந்து, வணிகனிடத்திற் போய், வணிகோத்தமனே! வேதங்கள், வேதியர்கள், முனிவர்கள் ஆகிய எல்லாராலும் அறிய வொண்ணாத ஸ்ரீமந் நாராயணனே ஊரதிகாரிபோல வேஷம பூண்டு உனக்கு ப்ரத்யக்ஷமானார் என்று சொல்ல, வணிகன் தாசரைவணங்கி, பாகவதோத்தமரே! உம்முடைய பெருங்கருணையாலல்லவோ எனக்குப் பகவானுடையசேவை கிடைத்தது என்று சொல்லி, அன்றுமுதல் ஹரிநாமசங்கீர்த்தநம் பண்ணிக் கொண்டிருந்தான். தாசரும் தாம்இருக்குமிடத்தையடைந்து ஸ்ரீஹரிபஜநம்செய்து கொண் டிருந்தார் என்று சொல்லி மேலே ஞாநதேவர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

கபீர்தாசர்சரித்திரம் முற்றிற்று.

# ௯-வது ஞாநதேவர் சரித்திரம்.

கங்காநதிக்கரையில் ஆப்கா என்னும் ஊரில் கருணிககுலத்தில், விஷ்ணு பக்தராகிய கோவிந்த பண்டிதர் என்பவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவருடைய பத்நியாகிய நிருபாயி என்பவள் கற்பிற் சிறந்தவளா யிருந்தாள். இவ்விருவருக்கும் நெடுநாளாய்ப் புதல்வர் இல்லாமலிருந்து, பிறகு, பகவானுடைய பேரருளால் ஒரு புதல்வர் அவதரித்தார்; அந்தப் புதல்வருக்கு விடோபாஎன்று பெயரிட்டுஅன்போடு வளர்த்துவந்தார்கள். அப்படிஅந்தப் புதல்வர் வளர்ந்துவரும்போது, பருவங்கண்டு உபநயநஞ்செய்து கல்வி கற்பிக்க, அந்தப் புதல்வர் சகலகலைகளையும் கற்று அறிவிற் சிறந்தவராயிருந்தார். அப்படி யிருக்கும்போது, ஒருநாள் பகவதநுக்ரஹத்தால் அவருக்குத் தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்கிற விருப்பமுண்டாக, தாய்தந்தையரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, அவ்வூரைவிட்டு, ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தநம் செய்துகொண்டேபோய்த் துவாரகாபுரியை யடைந்து, கோமதி நதியில் முழுகி, ஸ்ரீ கண்ணபிரான் எழுந்தருளியிருக்கிற கோயிலுக்குப் போய், அவரை வணங்கி, அவ்வூரைவிட்டு, முற்காலத்தில் மச்சரூபியாய்ச் சங்காசுரனுக்கு மோக்ஷத்தைக்கொடுத்த எம்பெருமானிடத்திற்போய், அவரை வணங்கி, தர்மபுரியைக் கண்டு, மூலமாதவமடைந்து, அப்பால் பாநுகாதீர்த்தம், சோமநாதம், தவளபுரி என்னும் க்ஷேத்ரங்களெல்லாம சேவித்து, அவ்வழியிலுள்ள தீர்த்தங்களிலெல்லாம் நீராடி, அளகாவதியென்னும் ஊரைச்சேர்ந்து சக்ரதீர்த்தத்தில்முழுகி, அந்தத் தீர்த்தக்கரையி லெழுந்தருளியிருக்கிற பகவானைவணங்கி அங்கே வாசம்பண்ணுங்காலத்தில், அவ்வூரில் வாழ்வோராகிய சித்தோ பண்டிதர் என்னும் வேதியர், இந்த விடோபாவைக் கண்டு, உமது பேர் யாது? எங்கேயிருந்து வந்தீர்? என்றுவினவ, இவர், எம்மூர் ஆப்காமூர், என் பெயர், விருத்தாசாரிகருக்குப் பிறந்த விடோபா, நான் இந்தத்திசையிலுள்ள நதிகளில் முழ்கவேண்டுமென்கிற விருப்பமுடையவனாய் வந்தேன் என்று சொல்ல, சித்தோபண்டிதர் கேட்டு மனமகிழ்ந்து, இதுசுதிநமென்று இவரைக் கொண்டாடித் தமது மனைக்கு அழைத்துக்கொண்டு போய், அறுசுவைப் பதார்த்தங்களோடு கூடின உணவை யுண்பித்து, பிறகு, இருவரும் கண்ணுறங்கும்போது, சித்தோபண்டிதர்கனவில், பாண்டுரங்கன் எழுந்தருளி, பண்டிதரே! உமது புதல்வியை இந்த ப்ரஹ்மசாரிக்கு மணம் புணர்வித்தால் உமக்கு நன்மையுண்டாகுமென்று சொல்ல, சித்தோபண்டிதர் உடனே விழித்தெழுந்து விடோபாவுக்கு இந்தச் செய்தியைச் சொல்ல, விடோபாவானவர், உமக்குக் கனவில் வந்து சொன்ன பாண்டுரங்கன் என் கனவில் வந்து சொல்லலாகாதோ வென்ன, பண்டிதர் விடோபாவை நோக்கி, இன்றிரவும் இவ்விடத்தில் தங்குவீரானால் அப்படியே பகவான் க்ருபை செய்வாரென்று சொல்ல, அப்படியே தங்கி யிருந்து உறங்கும்போது, பண்டரி நாதன் இவர்

கனவிலெழுந்தருளி நீர் இந்தப் பண்டிதருடைய புதல்வியை மணம்புரிந்து கொண்டால், அவள்வயிற்றில் நன்மக்கள்நால்வர் பிறப்பாரென்று சொன்னது கேட்டு, விழித்தெழுந்து பண்டிதருக்குத் தமது கனவின் செய்தியைச் சொல்ல, பண்டிதர் புரோகிதரை யழைப்பித்து, சுபமுஹூர்த்தத்தை ஆராய்ந்தமைத்து, அந்தச் சுபமுஹூர்த்தத்தில் தமது புதல்வியை மணம்புணர்வித்து, நான்கு நாள் கழிந்த பிறகு, விடோபாவானவர் பண்டிதரை நோக்கி, இது கடகமாச மாதலால், பண்டரிபுரத்துக்குப் போய், பகவானைச் சேவிக்க வேண்டும் என்று சொல்ல, பண்டிதரும் அப்படியே செய்யலாம்; உமது மனைவியையும் அழைத்துக் கொண்டு போமென்று சொல்ல, அழைத்துக் கொண்டு பண்டரிபுரத்தையடைந்து, அங்குள்ள சந்திரபாகைநதியில் நீராடிப் பண்டரிநாதன் கோயிலிற்போய் வணங்கி ப்ரதக்ஷிணம்செய்து, கருடஸ்தம்பத்தையடைந்து சேவித்து, எம்பெருமானாகிய ஸ்ரீ கண்ணபிரானை நின்றும் விழுந்துந்தொழுதுநிற்க, சித்தோபண்டிதரும்அவ்விடத்துக்கு வந்தார். வந்தவரை வணங்கி, நான் சேதுவுக்குப் போய்வரவேண்டுமென்று சொல்ல, இவருடையமனநிலையைக்கண்டுஅப்படியே போய்வாருமென்று சொல்லி பண்டிதர் அளகாபுரியைச் சேர்ந்தார். விடோபாவானவர் பண்டரிநாதனிடத்தில் விடைபெற்றுப்போய், ஸ்ரீசைலம், மல்லிகார்ஜுநம் முதலாகிய ஊர்களைக் கண்டு சேவித்து, சேது ஸ்நாநமும்செய்து, பிறகு அளகாபதியையடைந்து மாமனாரை வணங்கி, நான்குநாள் கழிந்த பிறகு மாமனாரை நோக்கி, என் தந்தை தாயரைக் கண்டு வணங்கி வரவேண்டும், ஆகையால் விடை தரவேண்டுமென்று கேட்க, பண்டிதர் நானும் உமது தந்தை தாயரைக் காணவேண்டுமென்று சொல்லிப் பிரயாணமாகித் தம்பதிகளோடுவந்து, தந்தை தாயாருக்குத் தண்டம் சமர்ப்பித்து, எம்பெருமான் நியமித்தபடியே மணமுடிந்ததென்று விண்ணப்பஞ் செய்ய, அவர்களும் மகிழ்ந்தார்கள். பிறகு தம்மகளையும் மருமகனையும் அங்கேவிட்டுப் பண்டிதர், தம்மூருக்குப் போய்விட்டார். பிறகு விடோபாவின் தாய் தந்தையர்க்கு மரணம்சம்பவிக்க, அவர்களுக்குச் செய்ய வேண்டிய க்ரியைகளெல்லாவற்றையும் செய்து, சற்றும் மனம் வருந்தாமலும் குடும்பத்தில் பற்றில்லாமலும் இருப்பதைப் பண்டிதர் கேள்விப்பட்டுப் புறப்பட்டு வந்து, மருமகனுக்கு ப்ரியவசநங்கள் சொல்லி, குடும்பத்தில் மனமில்லாமலும் பொருள் தேடாமலும் இருப்பீரானால் இல்வாழ்க்கை நடவாது, ஆகையால் எம்மூர்க்கு வாரும் என்று அழைத்துக்கொண்டுபோய், எல்லாரும் ஒருமித்து வாழ்ந்திருந்தார்கள்.

இப்படி யிருக்கும் நாளில், அவ்வூரில் பஜநம செய்துகொண்டும், ஆடிமாசஏகாதசியில்தவறாமல் விட்டலனைச் சேவித்துக்கொண்டும் தங்கியிருந்து, சிலநாள் கழிந்த பிறகு, ஒருநாள் மனைவியைநோக்கி, பெண்ணே! இந்த இல்வாழ்க்கையில் எனக்கு மிகவும் வெறுப்புண்டா யிருக்கின்றது, ஆகையால் நான் காசிக்குப் போய்ச் சந்நியாசம் பெற்றுக்கொள்ளுகிறேன் என்று சொ

ல்லி, நீ விடைகொடுத்தனுப்பவேண்டுமென்று கேட்க, மனைவியானவள் மறு மொழி கொடாமல் சென்று இந்தச் செய்தியைத் தாய் தந்தையருக்குச் சொல்ல, சித்தோபண்டிதர், தம்மகளைப் பார்த்து, புத்திரனில்லாதவர் சந்நியாசம் பெறுதல் விதியல்லவென்று சொல்ல, மனைவியானவள் விடைகொடுக்காதிருக்க, தாசரானவர் யாம் கங்கா ஸ்நானத்துக்குப் போய்வருவோமென்று சொல்லிப் போனார். வலையில் நின்றும் விடுபட்ட மான்போலத் திரிவேணி சங்கமம் போய், பிரயாகையில் நீராடி, விஷ்ணு பத்தர் சொல்லும் புராணங் கேட்டு, நிலையில்லாத சம்சாரமானது ஜநந மரணங்களைக் கொடுக்குமென்றறிந்து, ஸ்ரீபாதர் என்னும் தபோதநரைச் சத்பாவத்துடன் வணங்கி, உன்னை நாடிவந்த எனக்குத் துறவில் விருப்பமுள்ளது, அதனை அடியேனுக்கு க்ருபை செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அந்த ஸ்ரீபாதர் இவரை நோக்கி உனக்கு, மனைவி மக்கள் உளரோவென்று வினவ, இல்லை, நானொருவனாகவே யிருக்கிறேன் என்று சொல்ல, ஸ்ரீபாதர் இவர்க்கு, தீக்ஷை செய்து ஸந்யாஸ ஆசிரமத்தையும் கொடுத்தார். பிறகு விடோபாவானவர் காசி க்ஷேத்ரத்தில் நான்காம் ஆசிரமத்தை யடைந்திருப்பதை அறிந்து, சித்தோ பண்டிதரானவர், பிள்ளை பெறாதவர்க்குத் துறவு கொடுப்பது நன்மையல்லவென்று சொல்லி, அதனாலே துயரத்தை யடைய, மனைவியுங்கேட்டுத் துன்பமடைந்து, தெளிந்து, அரசமரத்தை நாள்தோறும் வலம் வருதலையே வ்ரதமாகக் கொண்டு, நடத்திவருங்காலத்தில், ஒருநாள் தன் கணவனுக்குத் துறவுகொடுத்த ஸ்ரீபாதர் அந்த அரசமரத் தடியில் வந்திருப்பதை விடோபாவின் மனைவி பார்த்து, அவரை வணங்க, ஸ்ரீபாதர் அவளை நோக்கி, நீ நான்கு மக்களைப் பெறுவா யென்று ஆசீர்வதிக்க, அந்தப் பெண்ணானவள் நகைத்தாள்; நகைத்தலும் ஸ்ரீபாதர் அவளை நோக்கி, ஏன் சிரிக்கிறாயென்ன, அவள் சுவாமீ, என் கணவன் காசியிற்போய்த் துறவுபெற்றுக் கொண்டார்; அப்படியிருக்கக் கணவ னில்லாமல் புத்திரப்பேறுண்டோ வென்று கேட்க, அந்தக் குருவும், பிள்ளை யில்லாதவர்கள் துறவு பெறுதல் பாவம், அவர்களுக்குத் துறவு கொடுக்கும் குருவுக்கும் பாவமே யென்று அடையாளங் கேட்டுத் தெரிந்துகொண்டு, பெண்ணே, உன் தந்தையை யழைத்து வரவேண்டுமென, விரைந்துபோய்த் தந்தைக்குச் சொல்ல, உடனே அவர் வந்து ஸ்ரீபாதரை வணங்க, ஸ்ரீபாதர் சொல்லுகின்றார். உன்மகளை ஒரு வாஹநத்தி லேற்றிக்கொண்டு நீகாசிக்கு வாவென்றுதுறவினரை யழைத்துக்கொண்டு மகிழ்ச்சியுடனே விரைந்துபோனார். போனபின்பு, ஸ்ரீபாதர், சைதந்யர் என்னும் பெயர்பூண்ட சீடருடைய முகத்தைநோக்கி, உனக்கு மனைவி யுண்டோ இல்லையோ வென்று வினவ, ஞான குருவின் அடியை வணங்கி, விடோபா, உள்ள சங்கதியைச் சொல்ல, நல்லதென்று நீ மனைவியோடு போய் ஊரில் வாழக்கடவா யென்று சொல்ல, அப்படியே அவரும் போய் மனைவியோடு சேர்ந்தபிறகு,ஊரிலுள்ளோர்,துறவுபூண்டவன்மறுபடியும் இல்வாழ்க்கைக்கு வரலாமோவென்று பழித்துக்கூற,விடோபாவானவர்,

திருமாலின் திருநாமங்களை உச்சரித்துக் கொண்டிருக்க, அவ்வூரிலுள்ள வேதியரெல்லாரும் தம் குலத்தினின்றும் விலக்கிவிட, ஊரைவிட்டு நீங்கி, காட்டிற்போய் ஒரு குடிசை யேற்படுத்திக்கொண்டு அதில் தமது பத்தினியோடு வாழ்ந்திருந்தார். இப்படிப் பன்னிரண்டு வருஷகாலம், யாசித்துக் காலங் கழித்துக் கொண்டிருக்கையில், இவர்க்கு மூன்று ஆண்குழந்தையும், ஒரு பெண்குழந்தையும் பிறக்க, அவர்களுள் முதற் குழந்தைக்கு நிவர்த்தி என்றும், இரண்டாங் குழந்தைக்கு ஞானதேவென்றும், மூன்றாங் குழந்தைக்குச் சோபாநர் என்றும், பெண்ணாகிய நான்காங்குழந்தைக்கு முத்தாயி என்றும் பெயரிட்டு வளர்க்க, அவகுலத்திற் பிறந்த மக்களாகையால் இவர்கள் முகத்தையும் பார்க்கலாகாதென்று யாரும் பழித்துச் சொல்லக் குழந்தைகள் வளர்ந்துவரும்நாளில் உபநயநம்செய்யத்தகுந்த பருவம் வந்தவுடனே மனைவியானவள் கணவனைநோக்கி, நமது புதல்வருக்கு உபநயநம் நடத்தவேண்டுமென்று சொல்ல, அதைக்கேட்ட ஞானவானாகிய விடோபாவானவர், வேதியரை வரவழைத்து, நான்செய்த பிழைகளைப் பொறுத்து, ப்ராயச்சித்தநூல்களில் விதித்தபடி ப்ராயசசித்தம்செய்து,உபநயநச்சடங்குசெய்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கும்போது, மூத்த பிள்ளையானவன் வந்து, பெரியோர்களே, உங்களுடைய முகங்களைக் கண்டபோதே நாங்கள் பரிசுத்தராய் விட்டோம், ஆகையால் நாங்கள் ஆறுபேருக்கும் ப்ராயச்சித்தம செய்தருள்வீரென்று ப்ரார்த்தித்து நிற்க, வேதியர், உங்களுடைய உடம்பை நீறாக்குதலே யன்றி வேறு ப்ராயச்சித்தமும் உபாயமு மில்லையென்று சொல்ல, ஞானதேவர் அவ் வேதியரை வணங்கித் திரும்பிப்பாராமல் காட்டுக்குப் போய்த் தனியே யிருந்தார். இப்படிப் போனவரைக் கண்டு அநுதாப மிகுந்த வேதியர்கள், நீங்கள் எங்கள் அநுதாபமாகிய நெருப்பினால் சுடப்பட்டீர்கள், இது வேபோதும், வேறு நெருப்பினால் சுடவேண்டுவ தில்லை என்றார்கள். அப்போது நிவர்த்தியென்கிற பெரியபிள்ளை வந்து, வேதியரே, எங்களுக்கு எப்படி விதிக்கிறீர்களோ, அப்படிச் செய்வோமென்று சொல்ல, அந்த வேதியர்கள், இவர்களைநோக்கி, நீங்கள் உங்களுடைய ஊருக்குப்போய், உங்களுடைய சுற்றத்தாரைக்கொண்டு உங்கள் குல முறையைத் தெரிந்தெழுதிக் கொண்டு வாருங்களென்றுசொல்ல, நிவர்த்திதேவரானவர், நமது குலம் நமக்கு நன்றாய்த் தோன்றும்போது நாம் ஒருவரைக் கேட்கவேண்டிய தென்னவென்றார்.ஞானதேவரானவர்,ஜீவந்முத்தபதம்தோன்றினாலும்ஸ்வதர்மத்தை விடலாகாதென்று சொன்னார். இப்படி இவர் சொன்னபோது, சோபாநர் வந்து, சாதியினால் ஒரு ப்ரயோஜநமுமில்லை, யாராயிருந்தாலும் பக்தியில்லாமல் ஸ்ரீஹரி பாதத்தை அடையமாட்டார்கள், வசிஷ்டர் முதலானவருடைய பிறபபின் வகையென்ன, ஆலோசிக்குமிடத்தில் தாழ்ந்த குலத்தினனாயிருந்தபோதிலும் கடவுளிடத்தில் அன்புடையனாயிருந்தால், அவனுடைய தீமைகள் யாவும் நசித்துப்போகும் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட வில்லையாவென்று சொல்லி நின்றார். அப்போது அந்த வேதியர் இவர்களுடைய

குல முறைமைய எழுதித் தந்தாரே யன்றிப் பிராயச்சித்தம் நியமிக்கவில்லை. அதைக் கண்டு, இவர்கள் கோதாவிரி நதியில் நீராடி, அப்பாற்போய்ப் பிரம புரத்தை யடைந்து, அங்கிருக்கும் வேதியரைச்சேர்த்து, பொறுமையுடைய வர்களே என்று வணங்கிப் பத்திரத்தையுங் கொடுத்து, உள்ள சங்கதியை யும் சொல்லி நின்றார்கள். அவர்களும ப்ராயச்சித்த மில்லையென்று சொல்ல, அவர்களிற் சிலர் உங்களுக்குத் திருமாலிடத்தில் அன்புண்டானால் அதுவே போதும், வேறொன்றும் வேண்டியதில்லை என்று சொல்ல, இவர்களும், ஐய ரே, நாங்கள் நினைத்தபடியே சொன்னீர்களென்ன, அவ் வேதியர் ஞானதே வரை நோக்கி, உமக்குத் தெரியாதது என்ன இருக்கின்றது, நீர் ஞானதேவர் என்கிற பெயரையும் படைத்திருக்கிறீர் என்று சிலர் சொல்லும்போது, அங்கேயிருந்த ஒருவன், இந்தப் பொதி யெருதுக்கும் ஞானதேவென்னும் பெயருண்டு, இதனால் என்ன ப்ரயோஜநம என்று சொல்ல, ஞானதேவர் அறிந்து, நல்ல வார்த்தைசொன்னாய், நானும அதுவும் சரியே என்று சொ ல்ல, அவன் நீயும் அதுவும் சமமானால், அதற்கு நேரிட்டதெல்லாம் உனக் கும் நேரிடுமோ வென்ன, அப்படியே நேரிடும் என்றார். அவன் அதைப் பார்க்கிறேனென்று அந்தக் கடாவைத் தடியா லடித்தான், அந்த அடி ஞான தேவர் முதுகிற்பட்டுத் தடித்ததை வேதியர் பார்த்து, இந்தக் கடா உன்னைப் போல நான்கு வேதங்களையும ஓதுமோ வென்ன, ஞானதேவர் எழுந்து இந்த க்ஷணமே பாருங்கள் என்று கடாவின் தலைமேல் கையைவைத்து, வேத த்தை ஓதுவாயாக வென்று சொல்ல, அந்தக் கடாவானது வேத வ்யாஸரை ப்போல நான்கு வேதங்களையும ஓத, வேதியரெல்லாரும் கண்டு, அதிசயி த்து, ப்ரஹ்மதேவன் முதலானோர் செய்தற் கரிதான செயலை இவர் செய்த லால், இவர் நரர் அலலர், அவதார புருஷரே யாவர், இவர்க்கு எவர்களை இணையாகச் சொல்லலாம், பொருளாசை யுடையோமா யிருக்கிறநாம்வேதிய ராய்ப் பிறந்ததன்றி, நல்லொழுக்கம், பக்தி, பரிசுத்தமனம் என்கிற இவற் றுள் ஒன்றையாயினும் உடையோ மல்லோம், ஆகையால் இவரைப்போல் வாராகிய வேதியர் இவ்வுலகி லில்லை, இவரை ஈன்றவர்கள் என்னதவஞ் செய் தார்களோ என்று சொல்லிப் புகழ; இவர்களும் அவ்வேதியரைப் புகழ்ந்து தோத்திரம்பண்ணி, எல்லாம் உமமுடைய பெருமையே யாகுமென்று சொ ல்ல, அவ்வூரிலுள்ளவ ரெல்லாரும் இவர்கள் மிகவும் நல்லோர்களும் ஹரி பக்தர்களுமா யிருக்கிறார்களென்று பேசிக்கொள்ள, நால்வரும் போய் ஒரு வேதியன் வீட்டி லிறங்கி, புராண சிரவணஞ் செய்துகொண்டும, ஹரிநாம ஸங்கீர்த்தநம செய்துகொண்டும், தங்கி யிருக்குங் காலத்தில், இவர் தங்கி யிருந்தவீட்டுக் குடையவனாகிய வேதியன், தன் பித்ருசிரார்த்தம் வந்ததெ ன்று, சூழ்ந்திருக்கிற வேதியரை போஜநத்துக் கழைக்க, அவர்கள், இவ்வே தியனைநோக்கி, நீ துறவியின் மக்களை உன்வீட்டில் சேர்த்துவைத்திருக்கிறா யாதலால், உன் வீட்டில் நாங்கள் போஜநம் செய்யமாட்டோம் என்றார்கள். அதைக் கேட்ட ப்ராஹ்மணன், இதற் கென்ன செய்வோமென்று எண்ண

பிட்டுக் கொண்டிருக்கையில், அவனை ஞாநதேவர் பார்த்து, நீ மனம் வாடியிருப்பதற்குக் காரணம் என்னவென்று கேட்க, அவ்வேதியன், இன்று என் பிதுருக்குச் சிராத்ததிந மாதலால் சில ப்ராஹ்மணரை போஜநத்துக் கழைத்தேன், அவர்கள் உன்வீட்டில் துறவி மக்களை வைத்துக் கொண்டிருப்பதனால் நாங்கள் உன்வீட்டில் போஜநம செய்யமாட்டோமென்றார்கள், இது தான் என் வாட்டத்துக்குக் காரணம என்றான். ஞானதேவர் அவனைநோக்கி, நீ அஞ்சவேண்டாம், அறுசுவைப் பதார்த்தங்களோடுகூடிய போஜநம் அமைத்து வை, உன் பிதுர்க்கள் நேரேவந்து உண்ணும்படி செய்கிறேனென்று சொல்லக்கேட்ட வேதியன் அதிசயங்கொண்டு, நீராடி வந்து எல்லா உணவுகளையும் சித்தப்படுத்தி, வாழை இலையிற் பரிமாறி, உண்பதற்குப் பிதிரரை அழையுமென்று சொல்ல, ஞானதேவர் அக்ஷதையை இலைமேல் பெய்தமாத்திரத்தில் பிதிரரெல்லாரும் வர, அவர்களுக்கு அர்க்கிய பாத்யாதி உபசாரங்கள்செய்து, ஆசநம தந்து, ஆடை ஆபரணங்களோடு தக்ஷிணையும் தந்தான். பிறகு தூபதீபங்களோடு, பித்ருரூப ஜநார்த்தந வாசுதேவ மூர்த்திக்கே ப்ரீதியாகக் கடவதுஎன்று சொன்னவுடனே பிதிரரெல்லாரும் அமுது செய்தார்கள். அவ்வேதியன் இந்த அதிசயத்தைப் பார்த்து, மஹாநந்தத்தை அடைந்தான். இந்த அற்புதத்தை அவ்வூரிலுள்ள வேதியரெல்லாரும் சாளரங்களிலும இறப்புக்களிலும் பதுங்கிப் பார்த்தார்கள். பிதிரரெல்லாரும் போஜநம செய்தானவுடனே, ஞாநதேவர் அவர்களைநோக்கி, பாபராசியைக் கடந்தவர்களே, நீங்கள் போகலாம் என்று சொல்லவே மறைந்துவிட்டார்கள். அதைக்கண்ட மறையோரெல்லாரும், இது என்ன புதுமை, பிதிரரை வரவழைத்ததை நோக்கினால் இவர்கள் நரர்களேயல்லர் என்றும், த்ரிமூர்த்தி ஸ்வரூபிகளென்றும தோன்றுகின்றது, இவர்களுடைய மகிமையை அறியாமல் நாம் இவர்களை வீணாக இகழ்ந்தோம், அப்படி நமது குலமதத்தால் இகழ்ந்தது நமக்கு நன்மை யல்லவென்று சொல்லிக்கொண்டு போனார்கள். பிறகு, பகடானது வேதாபிப்ராயத்தை யாவரும் அறியும்படி சொல்லுவதை ஞாநதேவர் அறிந்து, வியாசமுனிவர் சொன்னமுறை தவறாகுமென்று பகட்டைப்பார்க்க, அது முன்போலப் பிரகாசித்தது. தமக்கு ஹிதஞ் செய்து நின்ற வேதியனைப்பார்த்து வணங்கி, எமக்கு இனி விடை தர வேண்டுமென்றுகேட்டு விடைபெற்றுக்கொண்டு, அவ்வூரைவிட்டு மஹாலயம் என்னும் ஊரை நால்வரும் வந்தடைந்து, பிரவரா என்னும் தீர்த்தத்தில் மூழ்கி, அங்கே தங்கியிருக்க, ஞானதேவர் த்ருடதர ப்ரமாணமாகிய கீதைக்கு, யாவரும் எளிதில் உணருமபடி வியாக்கியாநம் செய்ய, அதனைச் சோபாநதேவர் எல்லாருக்கும் போதித்துக் கொண்டிருக்குங் காலத்தில், இவர்கள் செய்தியைக் கைனியர் வேந்தன் கேட்டு வந்து, நீங்கள் சுவாநுபவத்தை யடைய வேண்டும் என்று சொன்னவுடனே, கேட்ட நால்வரும் திருவடியில் விழுந்து, நாதனே, எமக்கு நீரே ஞானத்தை உபதேசிக்கத் தகுந்த சற்குருவாயிருக்கிறீர். இப்போது எங்களுக்கு உபதேசஞ் செய்யவேண்டும் என்று

ப்ரார்த்தித்தவுடனே, கைனியர் வேந்தனும் உபதேசஞ் செய்ய, இவர்கள் பெற்றுக்கொண்டபிறகு, சாதுவாகிய சற்குருவே சொல்ல, ஞானதேவர் அம்ருதாநுபவம் என்னும் நூலைச் செய்தனர். பிறகு, மாளசாதேவியின் ஆலயத்தில் நமஸ்காரம் என்று சொல்லி, ஸ்ரீ ஹரிநாமத்தை உச்சரித்துக்கொண்டேபோய், ஓர் ஆலயத்தினருகே இறந்துகிடந்த கரும் பகட்டைச் சமாதி செய்ய, அந்த இடம் மைசோபா என்னும் பெயர்கொண்டு விளங்குகின்றது. முத்தாயி சொன்ன சொல்லின்படி முன்னே இவர் வாழ்ந்திருந்த இடமாகிய அளகாபுரியை அன்போடு சேர்ந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். அந்த வூரிலுள்ளார் யாவரும் அவருடைய சத்திய வசனத்தையும், செய்கிற அற்புதச் செயல்களையும நன்றாகக் கேள்விப்பட்டு வந்து இவரைத் தழுவிக்கொண்டார்கள். தழுவி இவரால் நமக்குண்டாயிருக்கிற பாவங்களெல்லாந் தீரும் என்றெண்ணி வசிக்கும்போது, விசோபன் என்னும் ஒரு ப்ராஹ்மணன்மாத்திரம் வராமல் வேறுபட்டிருந்து, துறவடைந்தவனுக்கு இவர்கள் மக்களாகி முறைதப்பியிருக்கிறார்கள், இவர்கள் முகத்தையும பார்க்கலாகாது, பார்த்தால் மஹா பாபம நேரிடும் என்று அநேகமான பழிமொழிகள் சொல்லிநிந்தித்தான். இப்படியிருக்கையில் ஒருநாள் நிவர்த்தியென்பவர் தனக்கிளையவளை நோக்கி, தங்கையே! எனக்கு மதுரமாகிய அப்பமுண்ணவேண்டுமென்கிற ஆசையுண்டாயிருக்கின்றது, ஆகையால் எனக்கு அப்பஞ் சுட்டுத் தரவேண்டுமென்று கேட்க, அவள் அதற் கிசைந்து, அப்படியே சுட்டுத் தருகிறேனென்று சொல்லி, மா முதலிய யாவும் சேகரித்து வைத்துக்கொண்டு, அப்பம சுடுதற்குத் தகுந்த ஓடு வாங்கிவரும்பொருட்டுக் குயவன் வீட்டுக்குப் போகும்போது, அந்த வழியில் விசோபன் எதிர்ப்பட்டான். இவள் அவனைக் காண விருப்பமில்லாதவளாய், ஒரு பக்கத்தி லொதுங்கக் கண்ட விசோபன், இவளை நோக்கி, எதிரே வராமல் ஒரு பக்கமாக ஏன் விலகினாய், நீ எங்கே போகிறாய் சொல்லென்று கேட்க, அடை சுடுதற்குத் தகுதியான ஒரு ஓடு வாங்கிவரும்பொருட்டுக் குயவன் வீட்டுக்குப் போகிறேனென்றாள். அதைக் கேட்ட விசோபன், நீ யெனக்கெதிரே வந்ததனால் நான் நீராடாமல் ஒரு காரியத்தையும் செய்யமாட்டேனென்று கோவத்தோடு சொன்னான். அன்றியும், இனி யெனக்கெதிரே வரவேண்டாமென்று சொல்லி, இவளை யெற்றிவிட்டு, விரைவாகக் குயவனிடத்திற் போய், இவளுக்கு என் உத்திரவில்லாமல் ஓடு கொடுப்பாயானால், உன்னை நன்றாய்ச் சிக்ஷிப்பேன் என்று சொல்ல, குயவன் மனம் வருந்தியிருக்க, இவளும் போய் ஓடு வேண்டுமென்று கேட்க, அவன் கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட்டான். பிறகு இந்தப் பெண் தன் வீட்டுக்கு வந்து அழுதுகொண்டிருந்தாள். அப்போது நீராடி வந்த ஞானதேவர், இவளை நோக்கி, நீ அழுதற்குக் காரணம் யாதென்று வினவ, இவளும் நடந்த செய்தியைச் சொல்ல, இவை யாவும் சாளர வாயில்வழியாய்ப் பதுங்கியிருந்து விசோபன் கேட்டுக்கொண்டிருந்தான். ஞானதேவர், விசோபன் இப்படிச் செய்வது அவ

னுக்கு இயற்கையென்று சொல்லி, தமது முதுகை அப்பஞ் சுடுஞ் சட்டியாகவும், உதராக்கினியைப் புறத்தே வரும்படிசெய்து அதை நெருப்பாகவும் அமைத்து, அந்தப் பெண்ணைப்பார்த்து, இதில் அப்பம் சுட்டுக்கொள் என்று சொன்னார். அவளும் அப்படியே ஞானதேவர் முதுகிலே அப்பம் சுட்டுத் தன் தமையனோடிருந்து உண்ணும்போது, பார்த்திருந்த விசோபன், இவர் மனிதர் அல்லர், தேவரேயாவர் என்று அதிசயப்பட்டு, இப்படிப்பட்டவர்களை அறியாமல் நாம் வீணாகவே தூஷித்தோம், அந்தப் பாவத்தை எப்படித் தொலைக்கப்போகிறோம் என்று எண்ணி, இவரையே சரணமடைவோமென்று போகும்போது இவன் வருவதையறிந்த ஞானதேவர், தாம் அமுதுசெய்த இலைக்கலத்தை வீட்டின் புறத்தே யெறிய, விசோபன் அதைப்பற்றிப் பிடிசோறு அதிலிருந்தெடுத்துண்டான். அதைப் பார்த்த ஞானதேவர், அடா விசோபா, நீ பருந்துபோல இச்சோற்றையுண்டாயாதலால் நீ கழுதையை நிகர்த்திருக்கிறாய் என்று கடிந்து சொல்ல, விசோபன் பயந்து அவர்பாதத்தில் விழுந்து வணங்கி, எனது அஜ்ஞானம் நீங்கும்படி அருள் செய்யவேண்டும் என்று ப்ரார்த்திக்க, ஞானதேவரும் இவனுடைய பரிபக்குவத்தை யறிந்து, இவனுக்கு ஞானோபதேசம் செய்தார். இப்படியிருக்குங்காலத்தில், ஞானதேவர் பண்டரிபுரத்துக்குப் போய், பாண்டுரங்கனைச் சேவித்து வணங்கின பிறகு, நாமதேவர் வீட்டுக்கு வரும்வழியில் நாமதேவர் எதிர்ப்பட்டு, கைகுவித்து வணங்கி, எல்லாரையும் உய்விக்கும்பொருட்டு அவதரித்த தேவரீரைத் தரிசநம் செய்வதற்கு நான் என்ன தவம் செய்தேனோ என்றுபுகழ, ஞானதேவர், நாமதேவரை நோக்கி, நன்று சொன்னீர், உம்மை நிகர்ப்பவர் இவ்வுலகத்தில் யாரிருக்கிறார், ஒருவருமில்லை, ஞானத்தால் ஜீவன் முக்திபதம் கிடைத்திருந்தாலும் உலகத்திலுள்ள புண்ய தீர்த்தங்களிலெல்லாம நீராடிப் புண்ய க்ஷேத்ரங்களெல்லாவற்றையும் தரிசிக்கவேண்டும்; ஆதலால் உம்மோடுகூடித தீர்த்தயாத்ரை க்ஷேத்ர யாத்ரைகளைச் செய்யவேண்டுமென்கிற ஆசையால் வந்தேன், நீர் இதற்கிசையவேண்டுமென்று ப்ரார்த்திக்க, நாமதேவர் நான் என் அதீநத்தி லிருக்கவில்லை, பாண்டுரங்கனுடைய அதீநத்தி லிருக்கிறேன் என்றார். அதைக்கேட்ட ஞான தேவர், பாண்டுரங்கனைக் கேட்டே அவர் தர உம்மைப் பெற்றுக்கொள்ளுகிறே னென்று நாம தேவரையும் அழைத்துக் கொண்டு, பகவானுடைய சந்நிதியையடைந்து, திருவடியை வணங்கிநின்று சுவாமீ! அடியேன் இந்த நாமதேவரோடு கூடிச்சென்று தீர்த்தயாத்ரை செய்துவரவேண்டும, ஆதலால் இவர் என்னோடு வரும்படி இவர்க்கு விடைதரவேண்டுமென்று ப்ரார்த்திக்க, பாண்டுரங்கன், ஞானதேவா, நாமதேவன் எல்லாத் தீர்த்தங்களும் நானேயென்றுறுதிகொண்டிருக்கிறான், நான்சொன்னாலும் அவன் உன்னோடு வரமாட்டான், ஆனாலும் உனக்குத் தீர்த்தமாடவேண்டுமென்கிற அவசரமென்னவென்று கேட்க, ஞான தேவர், இவர் நிர்மலராயிருத்தலால் இவரோடுகூடிச் சஞ்சரிக்கவேண்டுமென்றும், அவசியம் தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்றும் மிகுந்த ஆசையுண்டாயிருக்கை

யால் இவரைத் தந்தருளவேண்டுமென்றார். பாண்டுரங்கபகவானவர் ஞான தேவர்! என் ப்ராண நாயகியாகிய திருமகளை விட்டாலும் நாமதேவனை விட மாட்டேன், உன் மநோரதத்தையும் பூர்த்திசெய்ய வேண்டியிருப்பதனால் என்னைவிட வேறொரு திக்கில்லாத நாமதேவனை யழைத்துக்கொண்டுபோய் மறுபடியும் விரைந்துகொண்டுவந்து என்னிடத்தில்சேர்க்கவேண்டும் என்று சொல்லி, நாமதேவனை நோக்கி நீர் என்னை மறவாமல் மனத்தில் நினைத்துக் கொண்டேபோய்த்தீர்த்தயாத்ரைசெய்துவாருமென்றுசொல்லி,நாமதேவரைத்தமது திருக்கையாலே பிடித்து ஞானதேவர்கையிற் கொடுத்து நாமதேவருடைய பிரிவுக்குச்சகியாதவராய்த் தமது திருக்கண்களில் நீர்ததும்ப இரங்கி, திருவுள்ளம்நைந்து புலம்பினார்;பிறகு ஞானதேவர் பகவானைவணங்கி, சந்த்ரபாகா நதியில் ஸ்நாநம்செய்து வநது தாமும் நாமதேவருமாக இருவரும் பகவானை வணங்க, பகவானும் இவர்களை வழிவிடப்போய், விடுத்தபிறகு மீண்டு வந்துகோயிலையடைநதார். அடைந்தபகவானுடைய திருவடிமுழுதும்செந்தூள் படிந்து,திருமேனிவாடி, கண்களில் நீர்ததும்ப,தாமரைமலர்போன்ற திருமுகம்வாட்டமடைந்திருப்பதைக் கமலாஸநையாகிய பெரியபிராட்டிநோக்கி, ஸ்வாமீ! தேவரீர் இவ்வாறிருத்தற்குக் காரணம் யாதென்று வினவ, பகவானாகிய பாண்டுரங்கர் சொல்லுகிறார். பெண்ணே! என் உயிர்போல என்னைச் சேர்ந்திருந்த நாமதேவனுடைய பிரிவென்கிற பாணம் தாக்குதலால் இப்படி வருந்தலாயிற்றென்று சொல்லி, திருமகள்முதலானோர் காணும்படி நிலத்தில் மூர்ச்சித்துவிழக்கண்டு, இதென்ன ஆச்சர்யம் என்று எல்லாருங்கூடிப் பகவானுக்குச் செய்யவேண்டிய வுபசாரங்கள் யாவும் செய்து தேற்ற, ஒருவாறு தேறிவரும்போது பக்தரெல்லாரும் இறைவனை நோக்கி, தேவரீருக்கு இவ்வளவு வருத்தம் வந்ததற்குக் காரணம் யாதென்றுகேட்க, பகவான் ஓ அன்பர்களே! நாமதேவன் பிறந்த நாள்முதல் என்னிடத்தில் மிகுந்த அன்புள்ளவனாயிருந்து பிரிந்ததனால், அவனது பிரிவு எனக்கு இவ்வளவு வருத்தத்துக்கு ஹேதுவாயிற்று, அன்றியும் பசிதாகங்கள் உண்டாகிறபோது அவன் என்னசெய்வான் என்றும், என் மனம் பதைக்கின்றது என்றுஞ் சொல்லி, அடியார்கள் தேற்றிக்கொண்டிருக்க எழுந்தருளி யிருந்தார். இப்படி யிருக்க, ஞான தேவருடன் போன நாமதேவர், பின்னே திரும்பிப் பார்த்துப்பார்த்து, தாயைப்பிரிந்த குழந்தைபோல மனங்கரைந்துருகி வணங்கி, என் குலதெய்வமே! என் உயிர்த்துணையே, ஆநந்த ரூபமே, என்னைப் பிரிந்து எழுந்தருளியிருக்கிறாயோ என்று மனத்தளர்ச்சியோடு ஞான தேவரை நோக்கி, பாண்டுரங்க பகவானுடைய பிரிவைச் சகிக்கமுடியவில்லை; ஆதலால் இப்பொழுது அடியேன் பாண்டுரங்கனைச் சேவிக்கும்படிசெய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, ஞானதேவர் பகவானை நாம் மனத்தினால்நினைக்கலாமேயன்றிச் சேவித்தல் கூடாதே, இவ்விடத்தில் எழுந்தருளி யிருக்கவில்லையே, ஆதலால் மனத்தினால் நினைத்துக் கொண்டே வாரும் என்றார். அதைக் கேட்ட நாமதேவர் இறைவனைச் சகுணமாக நாடுதலேயன்றி வேறுவிதமாக

நாமதேவர்க்கு என் மனமிசையவில்லை என்று சொல்ல, ஞானதேவர் அப்படியானால் பாண்டுரங்கனை நீர் வசியஞ்செய்து வைத்திருப்பதுபோலச் செய்யுமுபாயத்தை எனக்கும் உபதேசித் தருளவேண்டும் என்ன, நாமதேவர், ஞானதேவரை நோக்கி, ஸ்வாமீ, தேவரீர் என்னைக் கேட்பது, கற்பக மாமானது ஒரு லோபியை ப்ரார்த்திப்பதுபோ லிருக்கின்றது. ஆனாலும் தேவரீர் கேட்க அடியேன் சொல்லாதிருத்தல் தகுதி யன்று, ஆகையால் அறிந்த மட்டும் சொல்லுகிறேன் கேளும், உலகத்தில் மானுடப்பிறவியாய்ப் பிறந்தவன், தன் சரீரத்தில் வெறுப்பும் அந்ய சரீரங்களில் விருப்பமும் உள்ளவனாய், நான் என்னும் அஹங்காரத்தை முழுதும் நீக்கி, ப்ரபஞ்சத்திலிருந்தும் ப்ரபஞ்ச வாசனை சிறிதும் தாக்காமல், திருமாலினிடத்தில் அன்பு செய்தலே பரிசுத்தமான பஜனையாகும், அந்தப் பகவான் விஷயமாகிய பாடலைக் கேட்பதே சிரவணமாகும், அவனை நெஞ்சில் உறுதியா யிருத்திக்கொள்வதே மநநமாகும்,அவனன்றி வேறு தெய்வமில்லையென்று விரும்புவதே தெளிவாகும், அவனது திருநாமத்தை உச்சரிப்பதோடு அவனது திருவடியை யடைவதே பேரானந்தமாகும். இந்தச் செய்கைகளை யன்றி வேறு செய்கைகளைச் செய்வதெல்லாம் பந்த ஹேதுவாகும் என்று இவ்வாறு சொல்லி, ஞானதேவர் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். அம்ருதவர்ஷம்போல நாமதேவர் சொன்னவற்றை யெல்லாம் ஞானதேவர் கேட்டு, மூன்று லோகத்திலும இந்த நாமதேவரைப்போன்ற ஹரிபக்தியுள்ளோர்ஒருவருமில்லை. இவருடையபக்தியின் ப்ரபாவத்தைப் பகவானே யறியவேண்டு மல்லது எம்போல்வார் அறியவொண்ணாது என்று பலவாறாகப் புகழ்ந்து பேசின பிறகு, இருவரும் சேர்ந்து, தீர்த்தங்கள்தோறும், அன்போடு மூழ்கி, அஸ்திநாபுரியில் வந்து தங்கின பிறகு நாமதேவர்ஹரிபஜனைசெய்யத்தொடங்கினார். இவரை அவ்வூரிலுள்ளபக்தரெல்லாரும்வந்து மொய்த்துக்கொண்டார்கள். இந்தச்செய்தியைஅவ்வூரையாளுகின்ற துருக்க அரசன் கேள்விப்பட்டு இவரிடத்துக்கு வந்து, என்ன பாட்டுப் பாடுகிறாயென்று கேட்க, நாமதேவர், நான் திருமகள் நாயகனாகிய பகவானைப் பஜனை செய்கிறேனென்று சொல்ல, அவ்வரசன், இறந்துபோன பசுவுக்கு உயிர் வரும்படி செய்வாயானால் நீ ஹரிபஜனை செய்தல் உண்மை, அதைப் பிழைப்பிக்காத பக்ஷத்தில் உன்னை உயிர் வாங்குவேன், நீ அந்தப் பசுவைப் பிழைப்பிப்பதற்கு எத்தனை நாள் செல்லும், ஆராய்ந்து சொல்லென்று கேட்க, நாமதேவர் நாலுநாள் செல்லுமென்று சொல்ல, அரசன் கேட்டுத் தன் அரண்மனையிற் புகுதலும், நாமதேவரானவர், ஸ்ரீஹரியை த்யானித்துப் பலபடியாகத் தோத்திரஞ் செய்துகொண்டிருந்தார். இவர் இப்படி நாலு நாளாகப் பசுவின் தலையைத் தமது தொடையின்மேல் வைத்துக் கொண்டு துன்பப்படுவதைப் பாண்டுரங்கன் அறிந்து, நாமதேவர் மனத்தில் தோன்றி, நீ பசுவுக்காக வருந்தவேண்டாம், பசுவானது உயிர்பெற்றெழுந்து நிற்கின்றது, பார்க்கக் கடவாயென்று சொல்ல, நாமதேவர், பிழைத்து நிற்கும் பசுவைப் பார்த்து வியந்து, பகவானை நோக்கி, இந்த நாலு நாளாய்

நான் துன்பப்படுவதைப் பார்த்திருந்தும் சற்றும் இரக்கமில்லாமல் என்னை மறந்தேயிருந்துவிட்டீரே யென்று சொல்ல, பகவானுனவர், நாமதேவா, நான் மறந்திருக்கவில்லை, இந்தப் பசுவை அந்த க்ஷணமே பிழைக்கச் செய்வேன், நீ நாலு நாள் செல்லுமென்று அரசனுக்குச் சொன்னதனுல், உன் வார்த்தை பொய்யாகாமல் நாலுநாளும் கழிந்த பிறகு பிழைக்கச் செய்தேனென்று சொல்லி, இதுபற்றி என்னை நிந்திக்கவொண்ணுதென்றும், நீ சந்தோஷத்துடன் இருப்பாயாகவென்றும் கூறி, மறைந்தவுடனே, நாமதேவர் தமக்கெதிரே நிற்கிற பசுவைப் பார்த்தார். இவர் பார்த்துச் சந்தோஷித்தது போலவே அவ்வூராரும் பார்த்துச் சந்தோஷித்து, அரசனிடத்தில் இந்த அத்புதத்தைச் சொல்ல, அரசனும், அறுபட்டுத் துண்டாய்க் கிடந்த பசுவின் தலை உயிர் பெறுவது உலகத்திலுண்டோ, இது என்ன அதிசயமாயிருக்கிறதென்று புகழ்ந்து, இதைப் போய்ப் பார்ப்போமென்று விரைந்து வந்து, உயிர்பெற்று நிற்கிற பசுவைக்கண்டு, இவர் தெய்வமேயென்று நிச்சயித்து, இவருடைய திருவடியில் தாழ்ந்து வணங்கி வாழ்த்துதலும், அவ்வூரிலுள்ளாரெல்லாரும் நாமதேவருடைய ப்ரபாவத்தைக் குறித்து மிகவும் கொண்டாடினூர்கள். பிறகு நாமதேவரும் சிலநாள் ஹரிபஜனை செய்துகொண்டிருந்து, அவ்வூரை விட்டு, அங்கங்கே ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டும், அவ்வவ்வூர்களின் பாஷைகளில் கீர்த்தநங்கள் பாடிக்கொண்டும், வழியில் உள்ள தீர்த்தங்களிலெல்லாம் மூழ்கியும், காசிக்ஷேத்ரத்தை யடைந்து, கங்கா ஸ்நாநம் செய்து, ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன் விஷயமாய்க் கீர்த்தநங்கள் பாடிக்கொண்டிருக்கிற விசுவநாத ஸ்வாமியையும் ப்ரார்த்தித்து, நாலுமாச காலம் அங்கே தங்கியிருந்தார். அப்போது, அவ்வூரில் தங்கியிருக்கிற கபீர் தாசர்வீட்டில் ஒருநாளிரவில், ஹரிதாசர்கள் மிகுதியாய்வந்துசேர்ந்தார்கள். அவர்களுக்கு அந்நமிடவேண்டுமென்கிற அன்புடையவளான கபீர்தாசர் மனைவியானவள், கடைத் தெருவெல்லாம் திரிந்தும் எல்லாக் கடைகளும் மூடப்பட்டிருந்ததைக் கண்டு, மனவருத்தத்துடன் வருகையில், ஒரு வணிகன் கடைமாத்திரம் மூடாமலிருப்பதைக் கண்டு, அந்த வணிகனிடத்திற் போய், எங்கள் வீட்டுக்குச் சில ஹரிதாசர்கள் வந்திருக்கிறூர்கள், அவர்களுக்கு அந்நமிடவேண்டியிருக்கிறது, அதற்கு வேண்டிய அரிசி பருப்பு முதலிய பொருள்களைத் தடையில்லாமல் கொடுப்பாயானுல் அந்தப் பொருள்களின் கிரயத்தை நாளை யுதயத்தில் தருகிறேனென்று சொல்ல, அந்த வணிகன், பெண்ணே, நீ என் இஷ்டத்தை நிறைவேற்றினுல் நீ விரும்பும் பொருள்களெல்லாம் தருகிறேன் என்றுன். அதைக்கேட்ட தாசர் மனைவியானவள், பகவானிருக்கிறூர் என்று தன் மனத்தில் நினைத்துக்கொண்டு, அப்படியே செய்கிறேனென்று வணிகனுக்கு உறுதிமொழி சொல்லி, அவனுல் தரப்பட்ட பொருள்களைப் பெற்றுத் தன் வீட்டுக்கு வந்து, சமையல் செய்வோரிடத்தில் கொடுத்து, தன் கணவரிடத்தில் வந்து, வணிகனிடத்திற்குப் போனபோது நடந்த செய்திகளைச் சொல்லி, அவனிடத்திற்கு நான் போக

வேண்டும், எனக்கு விடை தருவீராக என்று கேட்க, தாசர், மனைவியை நோக்கி, ஹரிதாசர் பொருட்டு நீ யிவ்வாறு செய்ததைக் குறித்து மிகவும் சந்தோஷமடைந்தேன் என்று சொல்லி, இந்த இருள் மிகுந்த ராத்திரி கால த்தில் நீ தனியே போகமாட்டாய், நான் உன்னைக் கொண்டுபோய் அந்த வணிகனிடத்தில் விடுகிறேன் என்று தமது தோளின்மேலேற்றிக்கொண்டு, மனைவியை நோக்கி, பெண்ணே, நமக்கு இப்படிப்பட்ட சமயத்தில் உதவி செய்த அந்த வணிகனிஷ்டம்போல நீ நடந்துகொள்வதே தர்மம், ஆகையால் அவனைச் சந்தோஷப்படுத்திவாவென்று சொல்லிக்கொண்டே போய், வணி கன் கடையில் நிறுத்திமீண்டார். வணிகன், எப்போது காண்போமென்னும் ஆவலோடு எதிர்பார்த்திருந்தவனாதலால், தாசர்விட்டு மீண்டவுடனே வந்து தன் கடையில நிற்கிற தாசர் மனைவியைக் கண்டு, பெண்ணே, நீ சொன்ன சொல் தவறாமல் வந்தாய், ஆனால் இந்த மழைத் தூறலில் காலில் சேறு படாமல் எப்படி வந்தாய் என்று மகிழ்ச்சியோடு வினவ, ஐயா, நீர் செய்த உதவிக்காக என் நாயகர் மகிழ்ந்து தமது தோளின்மேல் என்னை யேற்றிக் கொண்டு வந்து இவ்விடத்தில் விட்டுப்போனார் என்று தாசர் மனைவி சொ ல்ல, இது மிகவும் ஆழகாயிருக்கிறது என்று அதிசயித்து, பயந்து, அநுதபி த்து, வருந்தி, ஐயோ, அளவற்ற பிறவிகளாய்ப் பிறந்து வீணாகக் காலங் கழித்ததுமல்லாமல், கிடைத்தற்கரிதாகிய இந்த மநுஷ்ய ஜந்மமெடுத்தும் உஜ்ஜீவிக்க வழிதேடாமல் இப்படிப்பட்ட கொடுமையாகிய பாவஞ் செய்ய மனந்துணிந்தேனே, இந்த வுலக முழுவதும் தேடினாலும் என்னைப்போன்ற பாவிகளும் கிடைப்பார்களா, இப்படிப்பட்ட பரமசாந்த மூர்த்தியாகிய தாச ருக்கு நான்செய்த அபராதத்தால் நேரிட்ட பாவத்தை எவ்வாறு நீக்கிக்கொ ள்வேன் என்று மிகவும் மனம் பதைத்து, அம்மா, நீ தெய்வமென்றே நினை க்கிறேன். நீயெனக்குத்தாய், உன்நாயகராகிய தாசரது திருவடியில் என்னை வீழ்த்தி, அவர் என்னைக்கடாக்ஷித்து எனக்கு அபயங்கொடுக்கும்படி செய்ய வேண்டுமென்று மிகவும் ப்ரார்த்தித்து வணங்க, தாசர் மனைவி வணிகனை நோக்கி, ஐயா, நீ செய்த பிழையை நீயே யறிந்து அநுதாபப்பட்டபோதே உன் பாவமெல்லாம் தொலைந்தன; ஆயினும், தாசரும உன்மீது அன்புசெய் யும்படி செய்கிறேனென்று அழைத்துக்கொண்டுபோய்த் தாசருக் கெதிரே விட, வணிகனும் தாசரை அடி வணங்கி, ஸ்வாமீ, அடியேன் செய்த பிழை யைப் பொறுத்தருளவேண்டும் என்று பலவகையாய்த் தோத்திரம்பண்ண, தாசரும், வணிகன் மனத்தைத் தெரிந்துகொண்டு, அவனை அன்போடு தழுவி, தாமரை மலர்போன்ற தமது திருக்கையைஅவன் தலைமேல் வைத்து க் கருணையோடு உபதேசம்செய்தருளினார். வணிகனும்அன்றுமுதலாக ஹரி பஜனைசெய்வதில் மிகவும்ஆவலுள்ளவனாய்ச் செய்துவந்தான். இந்தச்செய்திக ளெல்லாவற்றையும் நாமதேவர்கேட்டு, ஞானதேவரிடத்திற்குப்போய், கபீர் தாசருடையபரமபக்தியையும்வைபவத்தையும்சொல்லி, தாமும்ஞானதேவரு மாகக் கபீர்தாசர் இருக்குமிடத்திற்கு வந்து அவரைக் கண்டவுடனே, கபீர்

தாசர் அவ்விருவரையும் வணங்கித் தோத்திரம்பண்ணி, ஆசனத்திலிருந்தி னார். அப்போது, ஞானதேவர், கபீர்தாசரை நோக்கி, இவ்வுலகத்தில் நிறை ந்திருக்கிற பாவ முழுதும் நீங்கும்படி சுகரும், உத்தவரும் ஆகிய இருவ ருடைய அமிசமாக நீங்களிருவரும் அவதரித்தீர்களல்லவா என்று புகழ் ந்து சொல்லக் கேட்டு மனமகிழ்ந்த கபீர் தாசரும் நாமதேவரும் ஞானதேவ ரை வணங்கி நிற்க, ஞானதேவர் கபீர்தாசருடைய திருமுகத்தை நோக்கி, பண்டரிபுரத்தில் பாண்டுரங்கப் பெருமான், புண்டலீகரிடத்தில் அன்பு வைத்து, அவர் சொன்னபடியே செங்கல்லின்மேல் திருவடியைப் பதித்து நிற்பதை ஒருதரம்போய்க் கண்டு வணங்கி வாரும் என்றுசொல்ல,கபீர்தாச ரும் அப்படியே கார்த்திகை மாசம் ஏகாதசி தினத்தில் போய்ச் சேவித்து வருகிறேன் என்றார். பிறகு கபீர்தாசரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு நாமதேவரும் ஞானதேவரும் ஆகிய இருவரும்போய்க் கயை பிரயாகை என் னும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, ஸ்ரீ ராமபிரான் எழுந்தருளியிருக்கிற திருவயோத்யை, வடமதுரை, கோகுலம் என்னும் திவ்ய க்ஷேத்திரங்களை யடைந்து அவ்விடங்களிலுள்ள எம்பெருமான்களையும் சேவித்துத், திருத் துவாரகையை யடைந்து ஸ்ரீ கண்ணபிரானைச்சேவித்து மீண்டுவரும்போது, மிக்க செல்வம நிறைந்து விளங்குகின்ற மார்வாடர் வசிக்கிற தேசத்தை யடைந்தபோது, இருவரும் அதிக தாகத்தால் ஒருகிணற்றினருகே சென்று, இறங்கி நீருண்பதற்கு வழிகிடைக்காமல் மனமவாடிக் களைத்திருக்குங் கால த்தில், ஞானதேவர், நாமதேவரை நோக்கி, லகிமாவென்னும் சித்தியை நான் பெற்றிருக்கிறேனாகையால் இக்கிணற்றில் இலேசாக இறங்கி நீருண்பேன், நீர் அறிகின்றிலீராதலால், இதற்கு என்செய்வேன் என்று பரிதபித்த போது, நாமதேவர் பண்டரிநாதனுடைய திருவடிகளைத் தமது கருத்தி லிரு த்தி, ஹே மதுசூதனா! ஹே ராமா! ஹே தீநதயாநிதி! எனக்கு அருள்செய் யும சர்வேசுவரா! தேவரீர் விரைந்து எழுந்தருளி எனது தாஹத்தைத் தீர் த்தருளவேண்டும் என்று பலவாறு தோத்திரமபண்ணி நிற்க, எல்லாச் சீவ ராசிகளிலும் அந்தர்யாமியாய் வியாபித்து நின்று எல்லாவற்றையும் அறிய வல்ல பண்டரிநாதன், தமது திருத்தேவியாராகிய பெரிய பிராட்டியார்மேல் திருநோக்கம் வைத்து, பெண்ணே! ஒப்பற்ற பரமபாகவதனாகிய நாமதேவ னைக்காணாமையால் இன்று எனது இடத்தோளானது துடிக்கின்றது; ஆகை யால் அவனுக்கு அவ்விடத்தில் என்ன துன்பம் நேரிட்டதோவென்று வினவ, பிராட்டியார் அந்தநாமதேவன், தாகத்தால் வருந்துகிறான் என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே அவருக்கு எதிரில் பெரு வெள்ளமான நீர் உண்டாகிப் பொங்கி வழிந் தோடக் கண்ட நாமதேவர், தமது தாஹம் முழுதும் நீங்கும்படி அப்பெருக்கில் நீருண்டு மகிழ்ந்திருந்தார். இதைக் கண்ட ஞானதேவர், நாமதேவர் முகத்தை நோக்கி உம்மை விட்டலப் பெரு மான், ஒரு சிறிதும் நீங்காதிருக்கிறார். ஆதலால் உமது மகிமைக்கு உலக முழுதும் புகழ்ந்தாலும் ஒரு முடி வுண்டாகாது என்று புகழ்ந்தார். அந்த

நீர்ப்பெருக்கு அன்றுமுதல் இன்றளவும் அப்படியே பெருகி வழிந்தோடா நின்றது. அதில் தநுர் மாசத்தில் போய் நீராடுவோர் தாம் விரும்பின மனோ ரதங்களெல்லாம் சித்திக்கப் பெறுவார்கள். அந்தத் தீர்த்தத்தைவிட்டு ஞான தேவரும் நாமதேவரும அவ்விடஙகளிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நா நஞ் செய்து பதரிகாசிரமத்தை யடைந்து, அதன்பிறகு ஜகந்நாத க்ஷேத்திர த்தை யடைந்து, அங்கெழுந்தருளியிருக்கும ஸ்ரீகண்ணபிரானைச் சேவித்து இனிதாகிய பேரானந்தக்கடலில் மூழ்கினவராய், அங்குநின்றும் புறப்பட்டுப் பூர்வகாலத்தில் ஸ்ரீராமபிரானால் சிறை செய்யப்பட்ட சேது தீர்த்தத்தில் மூழ்கி, பிறகு சிவராத்திரி காலத்தில் நாகேசுவரத்தில வந்தடைந்து ஹரிபஜ நம் செய்துகொண்டிருக்க, எல்லாரும வந்து அந்த ஹரிபஜநத்தைக் கேட்டு ப் பேராநந்த மடையுங் காலத்தில், அங்கே சிவபூசை செய்கிற வேதியர்கள் வநது போக வழி யிலலாமல் பாகவதர் நிறைநதிருக்கிறதைக் கண்டு, மனம் வருந்தி, அநதப் பாகவதர் எல்லாரும பக்கத்தில் விலகிபபோகுமபடி அதட்டினார்கள். அப்படி அதட்டின சொல்லைச் செவியேற்காமல் ஸ்ரீஹரி பஜநஞ் செய்துகொண்டிருக்க, அவ் வேதியர்கள், மறுபடியும் வநது சூத்திர ராகிய நீங்கள், இவ்வாறுமிகப பலராகி வநது இவ்விடத்தில் கூக்குரலிடுவது தகாதகாரியமென்றும், பிராமணராகிய எஙகளைத் தீண்டாதீர்களென்றும், இவ்விடம் விட்டு இப்போழுதே போய்விடுங்களென்றும் பல கடுஞ் சொற்க ளைச் சொல்ல, வாயில் காப்பாளர் ஐயரே! ஆலயத்துள்ளே தீண்டுதலால் ஒரு தீங்கு மில்லை என்று சொல்ல, வேதியர், நாமதேவருக் கெதிரில் வநது நீங்கள் பின்னே போங்கள் என்று சொல்ல, அப்படியே இவர்களும் போய் ஸ்ரீ ஹரிநாமஸ்மரணம் செய்துகொண்டிருக்க, அவ்விடத்தில் நிறைநதிருக் கிற பாகவதரெல்லாரும் காணுமபடி அவ்வாலயத்தில் ஒன்பதுலக்ஷம கருட க்கொடிகள் காணப்பட்டு பூமியில் அழுந்திவிட்டன. இநத அற்புதத்தைக் கண்டு நாமதேவர் முதலாயினோர் ஸ்ரீ லக்ஷ்மீ நாதனை ஸர்வேசுவரனை ஸ்தோத்திரஞ் செய்யக் கண்ட தேவர்கள் யாவரும் புஷ்பமாரி பொழிநதார் கள். நாமதேவரும், எனக்கு ஒப்பற்ற பகவான் இருக்கிறபோது, ஒரு தீங் கும் என்னை யணுகமாட்டாது என்று சொல்லிச் சுடலையே தமக்கு நடந ஸ்தாநமாகக் கொண்டிருக்கிற சிவபிரான் சநநிதியில் நின்று பின்னே போம படி சொல்லி நமமை ஸ்ரீஹரிபஜநம செய்ய நியமித்தனர், இதுவும பகவா னுக்குத் திருவுள்ளம்போலும என்று பிரஸ்தாபித்துக்கொண்டிருக்க, அப் போது நாகேசன் பெருமையமைநத தமது கோயிலில் எழுந்தருளியிருக்கிற திசையை விட்டு, நாமதேவருக்கு எதிராகத் திரும்பி, மேற்குத் திசையில் முகம்மாறி, ஸ்ரீஹரிபஜந சந்தோஷத்தால் நர்த்தநஞ்செய்துகொண்டிருக்கிற நாமதேவரை மிகவும புகழ்ந்து நிற்பதை அவ்வூரிலுள்ள சாதுஜநங்களெல் லாருங் கண்டு நாமதேவரைச் சூழ்ந்து புகழ்கின்றவராயினர். அப்போது நாமதேவர், அடியேன் விரும்புவன எல்லாவற்றையும் விட்டலப் பெரு மான் அருள் செய்கிறார், இதற்கு யான் செய்யும் கைம்மாறு யாதுளது

என்று மிகவும் மனமகிழ்ந்து, பொழுது விடியுமளவும், மனோடுடனிரு ந்து ஸ்ரீஹரியை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருந்தனர். விடிந்த பிறகு, சிவபிரானை வழிபட்டுக் கொண்டிருந்த வேதியர்கள் வெளியே வந்தார்கள். அப்படி வந்தவர்கள், சூரியன் மேற்றிசையிலும் உதிப்பானோ, அன்றி இரா த்திரி முழுதும் நாம் கண் விழித்திருந்ததனால் உண்டாகிய மயக்கம் நமது அறிவை மயக்குகின்றதோ, அன்றி நாம் ஒதின மந்திரங்களெல்லாம் நாம தேவன் பொருட்டு மாறுபட்டனவோ என்று மயங்கி, நான்கு திசைகளிலும் கண் வைத்து, நோக்கிக்கொண் டிருந்தார்கள். அப்படி யிருக்கும் போது தேஜோமயமான ஒன்பது லக்ஷம் கொடிகள் மேலே காணப்பட்டுப் பிறகு மறைந்தன. இதைக் கண்டு வேதியர் முதலான எல்லோரும் அதிசயித்து, இந்த நாம தேவரைப் புகழ்ந்து ஸ்தோத்திரம் பண்ணுவதற்குப் பிரமதேவ னுக்கும் முடியாது என்று பயந்து, இவரது திருவடியை வணங்கி, நாங்கள் செய்த பிழைகளெல்லாவற்றையும் க்ஷமித்தருளவேண்டுமென்று பிரார்த்தி க்க, நாம தேவர் அவர்களுக்குத் தக்க உபசாரங்கள் செய்து நமஸ்கரித்து அவர்களிடத்தில் விடை பெற்று, நாக நாதனைப் பிரார்த்தித்து, அவ்விடம் விட்டுப் போகின்றவர்களாகிய இருவரும தாயை நினைத்துச் செல்லுகின்ற கன்றுபோல அதிக விரைவோடு சென்று பண்டரிநாதனுடைய திருக்கோ யிற் கோபுரத்தின் சிகரம் தோன்றக் கண்டு நமஸ்கரித்து வாழ்த்தி, அதன் பிறகு திருக்கோயில் முன்னே சென்று நின்று, பண்டரிநாதனைப் புகழ்ந்து நிற்கும்போது, நாமதேவர், தமது மெய்மறந்து பூமியில் விழக்கண்ட ஞான தேவர், உபசரித்து அவருக்குத் தெளிவு வரப் பண்ணித் தழுவிக்கொண்டு பகவானுடைய சந்நிதிக்குக் கொண்டுவந்தார். வருதலும் நாம தேவரானவர் பண்டரி நாதனை அன்போடு வணங்க, பண்டரி நாதர், எழுந்து எதிர்கொ ண்டுவந்து மிகுந்த அன்போடு நாமதேவரை இறுகக்கட்டித் தழுவிக்கொண் டார்; அப்போது நாமதேவர்வணங்குந்தோறும் பகவானுடைய தாமரைமலர் போன்ற திருவடியின்மீது தமது கண்ணீர் மழையைச சொரிந்து, ஸ்வாமீ! இனிமேல் அடியேன் தேவரீரைப் பிரியும்படியான காலம் நேரிடச் செய்யா தேயும என்று பிரார்த்திக்க, விட்டலப் பெருமான் இவரை நோக்கி, நாம தேவா! உன்னைப் பிரிந்தநாள் முதல் இதுவரைக்கும் எனக்கு அதிக மன வருத்தமாகவே யிருந்தது. அந்த வருத்தம் இப்பொழுது உன்னைக் கண்ட பிறகு தொலைந்தது. ஆகையால் இனி எக்காலத்தும் என்னைப் பிரியாமல் இவ்விடத்திற்றானே தங்கியிரு என்று அருள்செய்து, தமது திருத்தோளில் விளங்குகின்ற குளிர்ச்சி பொருந்திய திருத்துழாய் மாலையைக்கழற்றி, அவர் தோளில் அணிந்து, அவரது கண்ணீரைத் துடைத்து, தமது திருக்கைக ளால் அவரது மேனியைத் தடவி, அவர்மீது மிகுந்த க்ருபாதிருஷ்டியைத் தருளினர். இப்படி யிருக்க, மேன்மை பொருந்திய நிவர்த்தி யென்பவரோடு விசோபாவும், பண்டரிநாதர் தமது திருக்கோயிலினுள்ளே நாம தேவரிடத் தில் செய்த அற்புதமான காரியங்களை யெல்லாம் தெரிந்து, அந்தப்பகவானை

த் துதித்து நாமதேவரையும் ஸ்தோத்திரம் பண்ணினார்கள். அப்போது
ஸ்ரீருக்மிணிபிராட்டி திருவாலாத்தி யேந்திக்கொண்டு வந்து நாமதேவருக்கு
ச் சுற்றினாள். தேவர்கள் பூ மழை பொழிந்து ஆசீர்வதித்தார்கள். பிறகு
நீலமேகவண்ணனாகிய பகவான் நாமதேவரை நோக்கிச் சொல்லலுற்றனர்.
நீ தீர்த்தயாத்திரைசெய்து வந்தாய், அந்தத்தீர்த்த யாத்திரைக்கு முடிவான
காரியம் யாதோ அதனைச்செய்ய முயலுவாயாகவென்று நியமிக்க, நாமதேவ
ரும் அப்படியே செய்கிறேன் என, விட்டல பகவானனவர், இவரையழைத்து
க்கொண்டு பிராட்டியிடஞ் சேர்ந்து இச் செய்தியைச் சொல்லலுற்றார்.
அதாவது நாம தேவன் செய்த தீர்த்த யாத்திரையாகிய நல்ல விரதத்தை
முடிவுசெய்தல் நன்றாகுமென்றுசொல்ல, பிராட்டியானவள், எனது பிராண
நாதா! பரிசுத்த மனத்தையுடையவனாகி ஸர்வசங்க பரித்தியாகஞ் செய்து
உம்மையே ஆசிரயித்து இருப்பவனாகிய நாமதேவன் யாது செய்வன், நீரே
அதனை முடித்தருளவேண்டும், ஆதலால் பெருமை பொருந்திய வேதாத்தி
யயனஞ் செய்த மறையோர்கள் வந்து உண்ணும்படி ததீயாராதநத்துக்கு
வேண்டிய பொருள்களை யெல்லாம் அமைத் தருள்வீராக என்று பிரார்த்தி
க்க, விட்டலப் பெருமானனவர், நாமதேவருடைய திருவடியை யாசிரயித்த
சில பாகவதர்களுக்குப் பின்னே ஒரு வேதிய ருபங்கொண்டுபோய், சந்திர
பாகா நதியின் கரைமேல் விளங்குகின்ற வேதியரிடத்தில் வந்து, அவர்களை
வணங்கி நிற்க, அந்த வேதியர்கள், நீ வந்த காரியம் யாதென்று வினவ, நான்
நாமதேவரிடத்தில் அன்புள்ளவன்; அவர் செய்விக்கிற போஜனத்தை நீங்க
ளெல்லோரும் வந்து புசிக்கவேண்டு மென்று சொல்ல, அந்த வேதியரெல்
லாரும் நாம் முந்திச் செல்வோமென்று மறுமொழி சொல்ல, அம் மொழி
யைக் கேட்ட பகவானனவர், தமது திருக் கோயிலை யடைந்தனர். இப்படி
பகவான்போய் வேதியர்களைப் போஜநத்துக்கு வரும்படி சொல்லிவந்தசெய்தி
யைப் பிராட்டியார் கண்டு, அஷ்டமா சித்திகளையும வரும்படி நியமிக்க,
அவைகள், எட்டும் ஒன்றுபட்டு வந்து ததீயாராதநத்துக்கு வேண்டிய பொ
ருள்களை யெல்லாம் அமைத்த பின்பு, அஷ்டலக்ஷ்மிகளும் நாம தேவருக்கு
முந்திச் செய்யவேண்டியதாகிய மங்களஸ்நாநம் செய்வித்து, வேத சாகைக
ளால் சொல்லப்பட்டமந்திரங்களையோதி, மற்றவரிசைகளையும் செய்தார்கள்.
அதன்பிறகு, பகவானனவர் பூஷணம், ஆடை, சுகந்தம், புஷ்பம் ஆகிய இவை
களைக்கொண்டு அலங்கரித்தார். பிராட்டியார் இந்த அலங்காரத்தைக் கண்டு
நாமதேவருக்கு எல்லாராலும் நேரிட்ட திருஷ்டிதோஷம் கழியும்படி ஆலா
த்திசுற்றினள். பிறகு, பகவான், நாம தேவரைத் தழுவிக்கொண்டு நின்றார்.
இப்படி யிருக்கையில் ஞான தேவரோடு நிவர்த்தி முதலிய நால்வரும் மற்று
முள்ளநல்லோர்களும்கருணாநிதியாகியபகவான்செய்யும்செய்கைகளைக்கண்டு
மகாமகிமையுள்ள நாமதேவரைநோக்கி, உம்மைப்போன்ற ஹரிதாசர்கள் இவ்
வுலகத்தில் யாருளர்? ஒருவருமில்லையென மிகவும்புகழ்ந்துரைத்தார். பிறகு
வேதியவுருவங்கொண்ட திருமாலானவர், மறையோரெல்லாரையும் ஒருமிக்க

அழைத்து, ஒளிமிகுந்த ஆசநங்களில் இருத்தி, அவர்களுடைய பாதங்களை விளக்கிப் பூஜைசெய்து, ஸ்ரீ பாத தீர்த்தங்கொண்டு, அழகு மிகுந்து விளங்குகின்ற பட்டாடையால் நன்றாகத்துடைத்து, நல்ல ஆசநங்களில் ஏற்றி, அதிக மதுரம்பொருந்திய முக்கனி, சர்க்கரை, அப்பம், மிகுசுவையமைந்தகறிவகைகள், நெய், தயிர், பால் இவைகளால் நிறைந்த அன்னம் ஆகிய எல்லாவற்றையும் முறைதவறாமற்படைத்து அவ்வேதியர் உண்பதைநோக்கி, ஆசையோடு நாமதேவர் சங்கல்ப ஜலத்தைத் தெளிக்கும்படி நியமித்து, அவர்கள் யாவரும் அமுது செய்யும்படி பிரார்த்தித்து, அவ்வேதியர் யாவரும் அமுது செய்து திருப்தியடைந்தபிறகு, அவர்களுக்குச் சந்தந புஷ்பதாம்பூலங்களைக் கொடுத்துபசரித்து, அவர் யாவரும் முன்னேயிருக்கச்செய்து, உங்களுக்கு முன்னே நான் அமுதுசெய்து உங்களுக்குத் தக்ஷிணைகொடுக்கிறேன் என்று சொல்லி, திருமகள் கொண்டுவந்து கொடுத்த ப்ரஸாதத்தை விருந்தோடிருந்து உண்ணும்பொருட்டு விருந்தினனைத் தேடிவந்து, வாசற்படியில் வந்திருக்கிற வசநதன் என்பவனைக் கண்டு அழைத்து வந்து ஆசநத்தில் இருத்தி, அவருடைய திரைப்பை நீக்கினவுடனே, அதைக் கண்டு அவர் அழும்போது பகவானும குற்றமற்ற பகவத் தாசரே! அமுதுசெய் தருள்கவென்று ப்ரார்த்தித்து, அறு சுவையோடு கூடின அந்நத்தை வாயி லூட்டி, நாம தேவா! நீ ஏன் அழுகிறாய் என்று கேட்க, அவர், ஸ்வாமீ! அடியேன் எந்தப்பிறவியாய்ப்பிறந்தாலும், உன் திருவடிக்கன்பு செய்தலில் வழுவாமலிருக்கும்படி எனக்கு அருள்புரியவேண்டும் என்று ப்ரார்த்திக்க, திருமாலானவர் மகிழ்ந்து, உன்னை யெக்காலத்திலும மறவேன் என்று சொல்லி அமுதுண்பிக்க உண்டு, நாமதேவர் மகிழ்ந்தபிறகு, பகவானும்நாமதேவருக்கு அமுதுண்பித்தகலத்திலே அமுது செய்தருளினார். இதைக்கண்ட வேதியர்கள், சூத்திரன் உண்ட கலத்தில் வேதியனும் அநநம் உண்பது தகுதியோ? இவன் வேதியனே? இவன் தந்த அந்நத்தையுண்டு நாமும் இழிவடைந்தோம்; இந்தத்தோஷத்தை என்ன ப்ராயச்சித்தஞ் செய்து தொலைப்போமென்று ஆலோசித்திருந்தார்கள். அப்போது நாமதேவரது பரிகலசேஷத்தை அமுதுசெய்தருளின பகவானானவர், நாமதேவரை யழைத்துக்கொண்டு, பகவந்நாம ஸ்மரணைசெய்து கொண்டிருக்கிற வேதியர்க்கருகே வந்து, அவர்களுக்குத் தக்ஷிணை கொடுக்கும்போது, அவர்களுடைய முகவாட்டத்தைக் கண்டு, இதற்குக் காரணம் யாதென்று வினவ, அந்த மறையோர்கள், வேதியனாகிய நீ, ஒரு சூத்திரனுண்ட சேஷத்தையுண்டாய், ஆதலால், இழிந்த வுன்னால்தரப்பட்ட அந்நத்தையுண்ட எங்களுக்கு நேரிட்ட தோஷத்தை எப்படி நீக்கிக்கொள்வோமென்று விசநப்படுகிறோம் என்றார்கள். அதைக்கேட்ட பகவான், பொய், களவு, கள்ளுண்டல், காமம், கொலை என்பவையாகிய பஞ்சமஹாபாதகங்களை ஒருவன் செய்தாலும் அவன் பகவந்நாம ஸ்மரணை செய்வானானால் அவன் புனிதனென்று சொல்லப்படுவான்; அவனுண்ட சேஷம் கிடைப்பது அருமையல்லவா? அதையால் சூத்திரன் உண்ட சேஷத்தை நான் அன்போடுஉண்டேனென்றார்

அதற்கு வேதியர், பகவானை நோக்கி, நீ என்ன சமாதாநம் சொன்னாலும் நாங்கள் கேட்கமாட்டோம்; ப்ராஹ்மண க்ருத்யங்க ளெல்லாவற்றையும் விட்டு, ஹரிநாமஸ்மரணை செய்பவனாகிய ஒரு சூத்திரனுடைய எச்சிலைப் புசித்த உன் தோஷம் நிவர்த்தியாகும்படி சந்த்ரபாகா நதிக்குப் போய் ஸ்நாநம் செய்துவா வென்றார்கள். அதுகேட்ட எம்பெருமான், வேதியரே! எவர்களாயினும் பரிசுத்தமான ஹ்ருதயத்தை யுடையவர்களாகி, வைராக்யம், சாது சங்கம் என்பவற்றோடுகூடி, பக்தியுடனே ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்தால் அவர்களுடைய ஜந்மாந்தரபாபங்களெல்லாம் ஒருமிக்க நசிக்கும், ஆகையால், அது முதன்மையாகிய ஸ்நாநம் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன், ஆனாலும் நீங்கள் சொன்ன சொல்லையும தடுக்கமாட்டேன் என்று சொல்லி, நாமதேவர் கையைப் பிடித்துக் கொண்டுபோய்ச் சந்திரபாகாநதியில் மூழ்கிச் செய்யவேண்டிய க்ரியைகளெல்லாவற்றையும் செய்து, பிறகு அரையிலே பீதாம்பரத்தையுடுத்து, மிகுந்த அன்போடு அவ்வேதியர்க்குத் தாநம் செய்யவேண்டியவற்றைத் தாநம்செய்து, ஐயரே! என்னைப் பரிசுத்தனாகச் செய்துவிட்டீர்கள் என்று புகழ்ந்து வணங்கி, விடை பெற்றுத் தமதன்பரோடு கோயிலிலே ப்ரவேசித்து, அமுது செய்தபிறகு, அன்பர்க்கு விடைதந்தனுப்பினார். அப்போது நாரதமுனிவர் வீணையைக் கையிலேந்திக் கொண்டு, அவ்விடம்வந்து பகவானுடைய திருவடியைக் கும்பிட்டுப்புகழ்ந்து நிற்க, இறைவர் திருவுளமகிழ்ந்து, தமது திருத்தோளி லணிந்திருந்த மாலையைக் கழற்றி முனிவருக்குக்கொடுத்து, தமது திருமார்பிலுள்ள கௌஸ்துப மணி முதலானவை முனிவர் மார்பில் அழுந்தும்படியாகத் தழுவிக்கொண்டார். பிறகு முனிவர் விடைபெற்றுப் போய்ச் சத்திய பாமையைக்கண்ட போது, சத்தியபாமையார் முனிவரைவணங்கிஆசநங்கொடுத்து, அவர் இருந்தபிறகு, அவரை நோக்கி, இந்தவிட்டலப்பெருமான் தனக்கன்பராயிருப்பவர்கள் எந்தச்சாதியாயிருந்தாலும் அவர்களுடைய எச்சிலுக்குத்திரிகிறார், இது நன்றோவென்றுகேட்க, முனிவா, சத்தியபாமையை நோக்கி, உன் ப்ராணநாயகர் நிர்நாமராயும் அரூபியாயும இருப்பவராயினும், இவ்வுலகத்தார் உஜ்ஜீவிக்கும் பொருட்டு நாமரூபங்களோடு எழுந்தருளி இப்படி நடிக்கின்றார். ஆதலால் அவருக்கு ஒரு தோஷமும அணுகாது, நீ ஆலோசித்துப்பார் என்று சொல்லிப்போன பிறகு, சத்தியபாமையார் இறைவனை நோக்கி, நீர் இப்படி எச்சிலை அருந்துதல் உனக்குத் தகுதியாகுமோ வென்று கேட்க, பெண்ணே! என்னிடத்து அன்புள்ளவர்கள், தந்தை தாய் மனைவி மக்கள் முதலானோரை விட்டு எல்லாம் நானேயென்று என்னைப்பற்றிக்கொண்டு இகலோக பரலோக சுகங்களையும் வெறுத்திருப்பவர்களாகையால், நான் மன மகிழ்ந்து அவர் பெயரைச் சொல்லுதல் அவர் உருவத்தைச் சிந்தித்தல் அவர் இட்ட வேலைகளைச் செய்தல், இவையாவும் எனக்கு மிகவும் இஷ்டமான தொழில்களாயிருக்கின்றன. இதுவே யென்துணிவென்று பகவான் அருளிச்செய்த காலத்தில், சூரியோதயமாகவே, தொண்டரெல்லாரும் வந்து கோயிற்குள்ளே புகு

க்து, ஹரிபஜனை செய்து, விட்டலப்பெருமானுடைய திருவடியை வணங்க, பகவான் அவர்களைத் தம் பக்கத்தில் இருத்திக்கொண்டு பிராட்டியை நோக்கி, பெண்ணே! நேற்று நான் தோஷ நிவர்த்தியின்பொருட்டு ஸ்நாநத்துக்குப் போனபோது, இன்று வேதியருக்கெல்லாம் அமுது படைப்பேனென்று நேர்ந்துகொண்டேன், ஆகையால் அந்தக்காரியத்தை நடத்தவேண்டுமென்று சொல்ல, அது கேட்ட பிராட்டியும் இசையவே, பகவான் வேதியரிடத்திற் போய், ஐயரே! நீங்கள் இன்றும் அமுது செய்ய வாருங்களென்று ப்ரார்த்திக்க, வேதியரும் அப்படியே வருவோமென்ன, பெருமானும் கோயிலைச்சேர்ந்தார். உடனே வேதியர் யாவரும் தீர்த்தமாடி வந்து கோயிலிற் பிரவேசிக்க, பகவானவர் ஒருப்ராஹ்மணவுருவங்கொண்டுவந்து அவ்வேதியரைவணங்கி, அழைத்துவந்து பொற்பீடத்தி லேற்றி, அடியேன் உய்ந்தேனென்று உபசார வசநங்கள் கூறி, அறுசுவை யுண்டி படைத்து, அவர்கள் உண்ணும்போது, ஒவ்வொரு பிடிசோற்றை யுண்ணுந்தோறும் ஸ்ரீ ஹரிநாமத்தை யுச்சரித்துக்கொண்டே உண்ணுங்களென்று சொல்லி, அவர்களும் அப்படியே யுண்ட பிறகு, சுத்தஞ்செய்து, சுகந்த புஷ்ப தாம்பூலங்கள் கொடுக்கப்பெற்று அவர்களிருக்க, பெருமானனவர் வேதியரை நோக்கி, ஐயரே! உங்களைக் கண்டதனால் இது சுப திநமாகும்; உங்களைச் சேவிதது நான் உஜ்ஜீவித்தேன் என்று பேராநந்தக்கடலில் மூழ்கி, அடியாரோடிருநது யான் உண்ணுமளவும் நீங்கள் இவ்விடத்தில் எழுந்தருளி யிருக்கவேண்டும் என்று சொல்லி, அடியார்களுக்குப் பாதபூஜை செய்யத் தொடங்குதலும், நாமதேவர், ஸ்வாமீ! தேவரீர் எங்களைப் பூசித்தல் நன்றோவென்ன, பகவான் நகைத்து அன்பர்களே! எனக்கு உங்களையன்றி வேறொரு பெருமையுண்டோவென்று சொல்ல, தொண்டர்கள் கேட்டு மகிழ்ந்து உண்ணும்போது, தமது திருக்கையால் ஊட்டி, எச்சில் தமதுமடியின்மேல்தெறிக்க, அவ்வெச்சிலை யுதறிவிட்டு, மறுபடியும் ஊட்டித் தெறித்த எச்சிலைத் துடைத்து, உபசரிப்பதைக் கண்ட சில வேதியர், இவர் நைஷ்டிகரு மல்லர், தபோநிஷ்டரு மல்லர், வேதியரு மல்லர் என்றும், வேறு சில வேதியர் சர்வாந்தர்யாமியாய் எங்கும் நிறைந்திருக்கிற விடோபாவாகிய பரம்பொருளே இவ்வாறு அடியார் பொருட்டு மாநுஷ வேஷம் பூண்டு பலவகையாய் நடிக்கின்றதன்றி வேறல்லவெனறும் பேசிக்கொள்வதைக்கேட்ட பண்டரிநாதர், மிகவும நகைத்து, ஒளிவீசுகின்ற கிரீடமும், குண்டலங்களும், நான்கு திருத்தோள்களும், பஞ்சாயுதங்களும், பெரிய பிராட்டியும் கௌஸ்துபமணியும பொலிந்துவிளங்குகின்ற திருமார்பும், திருமுகமண்டலமும், பீதாம்பரமும் தேஜோமயமாய் விளங்கும்படி எழுந்தருளி நிற்க, அந்தத் திவ்ய ரூபத்தைக்கண்ட வேதியரும் அன்பரும் பெருமகிழ்ச்சியடைந்து, வணங்கி, ஆநந்தக் கூத்தாடத் தொடங்கினார்கள். அவர்களைப் பகவான் பார்த்து! ஓ பாகவதர்களே! இந்த உலகமாயையை வென்று, தேஹாபிமாநத்தைவிட்டு, என்னையே பற்றாக அடைந்தவர்கள், தமது அன்பாகிய கயிற்றினாற் கட்ட, அந்தக்கட்டிலகப்பட்டு நான் அவர்கள் வசப்பட்டவனும்

இருக்கிறேன். எனக்கு ஸ்வாதீநம் ஒன்றுமில்லையென்றருளிச் செய்ய, வேதியர், ஸ்வாமீ! வேதங்களெல்லாம், உன்னைப் பதிதபாவநன் என்று முறையிடுவதை இன்று கண்டோம் என்றார்கள். மேலும், பரமபாவநனே! உன்னை இன்று கண்டுசேவித்ததுபோல என்றும் கண்டுசேவிக்கவும், தேவரீருடைய திருநாமத்தை உச்சரிக்கவும் எங்களுக்கு வரம் கொடுத்தருளவேண்டும் என்றும் ப்ரார்த்தித்தார்கள். அவர்களை விட்டலரானவர் நோக்கி நகைத்து, மார்பழுந்தத்தழுவிக்கொண்டு, ஞானதேவருடைய திருவடியை ஆஸ்ரயித்து நீங்கள் உஜ்ஜீவிக்கக் கடவீர்களென் றருளிச்செய்ய, அப்படியே செய்கிறோமென்று, வேதியர் மேலுமேலும் வணங்கினார்கள். அப்போது ஸ்ரீ ஹரியானவர் ஞானதேவரை நோக்கி, நீர் இந்த மறையவர் எல்லாருக்கும் ஞாநோபதேசம் செய்தருள்வீராக என்று நியமிக்க, அப்படியே ஞான தேவரும் பகவானை வணங்கி, அவர் கட்டளையின்படியே வேதியரெல்லாருக்கும் ஸ்வரூபஸாக்ஷாத்காரத்தை உபதேசரூபமாக அருளிச் செய்து, நீங்கள் நாள்தோறும் ஹரிபஜனைசெய்து, நிர்மலராகிய பகவானைச்சேவித்து, உங்கள் மநோரதங்களெல்லாம் நிறைவேறப் பெறுவீர்களாகவென்று ஆசிர்வதித்தருளினர். சில நாள் கழிந்தபிறகு, ஞானதேவர் விட்டலபகவானிடத்திற்போய் வணங்கி ஸ்வாமீ! எனக்குச் சமாதியை யருள் செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, பகவானும் அப்படியே செய்கிறேனென்று சொல்லி, நல்லசுபதிநத்தில் தமது அன்பரையெல்லாம் வரவழைத்து, அநேக ஸ்தோத்தரங்களைப் பாடும்படி பெரியதிருவிழாவுண்டாக்கி, ததீயாராதநமுதலியவுமசெய்து, சாதுக்களெல்லாருமவநஞானதேவரைச் சூழ்ந்திருக்கும்படி நியமித்து, அவர்களோடு தாமும எழுந்தருளி, இந்திராயணி நதிக்கரையில் அளிந்தியென்கிற வூரில் வந்து சேர்ந்து, சித்தேசுவரர் எழுந்தருளியிருக்குங்கோயிலின்பக்கத்தில, அஜாநுவ்ருக்ஷத்தினடியில் நின்று, ஸ்ரீ லக்ஷ்மீ நாதராகிய பகவான் எல்லாரும அறியுமபடி சொல்லுகிறார்; கார்த்திகைமாசம க்ருஷ்ணபக்ஷத்தில் என் திநமாகிய திருவோணநாளில் வருஷந்தோறும இவ்விடத்தில் நான் வருவேன்; அன்று இவ்விடத்தில் பெரிய தீர்த்தோத்ஸவ முண்டாகும் என்றருளிச்செய்ய, ஸநகாதி முனிவரோடு ஹரி பக்தரும் சூழ்ந்து, ஹரி நாம சங்கீர்த்தநம் செய்யவும், பலவகையாகிய வாத்யஙகள் முழங்கவும, தேவர்கள் பூமழை பொழியவும ஸ்ரீக்ருஷ்ண பகவானுனவர் ஞானதேவர்க்குச் சமாதிதந்து, நாலுநாள் அங்கே தங்கியிருந்து, பிறகு பண்டரிபுரத்தை யடைந்தார். சிலநாள் சென்றபின்பு நாமதேவர் ஞானதேவரது பிரிவினல் அல்லும பகலும் துக்கித்துக்கொண்டிருப்பதை ஞானதேவ ரறிந்து, ஒப்பற்றவிமாநத்தில் ஏறிவந்து, விட்டலனை நேரேவணங்கி, நாமதேவரைக்கண்டு, அவர் மனவருத்தத்தைநீக்கி, ஆறுமாசகாலம அங்கே தங்கி, அளவில்லாத பக்தருக்கு ஞாநோபதேசஞ் செய்துகொண்டிருந்து மறைந்தார். இவ்விதமாகவே நிவர்த்தி தேவர்க்கு த்ரியம்பகம் என்னும் ஊரிலும், சோபாந தேவர்க்கு ஸமவத்ஸரம என்னும் ஊரிலும் பாண்டுரங்க பகவான் சமாதிதந்தருளினர் என்று சொல்லி, மேலே கூர்மதாசர் வைபவத்தைச் சிவபெருமானுனவர் பார்வதி தேவியார்க்குச் சொல்லத் தொடங்கினர்.

ஞானதேவர் சரித்திரம் முற்றிற்று.

# ௭-வது கூர்மதாசர் சரித்திரம்.

சூரியரதத்தைச் செலுத்துகிற அருணவம்சத்தரும், நிகரற்ற ஸ்ரீ ஹரி நாம த்யானத்தில் விருப்பமுள்ளவரும், ப்ரதிஷ்டானம் என்கிற ஊரில் வேதியர்குலத்தில் அவதாரகாலத்திலேயே கால்களில்லாமல் அவதரித்தவரும் ஆகிய கூர்மதாசர், தாய்தந்தையர் அன்போடு வளர்க்க வளர்ந்து வருங்காலத்தில், அந்தவூரில் ஹரிநாம சங்கீர்த்தனம் செய்வோரிடத்துக்குத் தவழ்ந்துசென்று, உத்தமமாகிய ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனத்தில் மிகவும் அன்புள்ளவராய்க் கேட்டுவந்தார். அப்படி கேட்குங்காலத்தில் பண்டரிபுரத்தின் மாஹாத்ம்யத்தைச் சொல்லுவோர்களால் கேள்விப்பட்டு, ஆநந்தக்கடலி லாழ்ந்து, அந்தப் பண்டரிபுரமிருக்குந் திசைநோக்கிக் கைகூப்பிச் சொல்லுகின்றார். ஹரிபஜனை செய்கின்ற தாசர்களே! முடவனாகிய நான் பண்டரிபுரத்துக்குப் போக முடியுமோ? முடியாதே; இதற் கென்செய்வேன் என்று கேட்க, ஸ்ரீ ஹரிதாசர்கள், இவரை நோக்கிச் சரீரத்துடன் உள்ள நாங்கள் போவதே அருமை. நீ போவது எப்படிசாத்தியப்படுமே என்று நகைத்தார்கள். அதைக் கண்ட கூர்மதாசர் பண்டரிநாதனைத் தொழவேண்டுமென்கிற ஆசைமிகுதியால் மெல்ல நகர்ந்துபோய், ஆஞ்சநேயர் சந்நிதியை யடைந்து, பசி தாகங்களால் மனம் வருந்தி வீழ்ந்தார். வீழ்ந்து, பண்டரிநாதனைக் குறித்து, ஸ்வாமீ! என்னைக் காப்பாற்றுவோர் உன்னையன்றி வேறொருவரும் இல்லை; ஆகையால் என்னை யன்போடு காப்பாற்றியருளவேண்டும் என்று தோத்திரம் பண்ணி வணங்குதலும், பண்டரிநாதன் மகிழ்ந்து, ஒரு ப்ராம்மண வேஷங்கொண்டு எழுந்தருளி, கூர்மதாசரை நோக்கி, நீர் எங்கே போகிறீர் என்று வினவ, கூர்மதாசர் அடியேன் பண்டரிபுரத்துக்குப் போகவேண்டுமென்னுங் கருத்துடையவன், ஆதலால் பண்டரிபுரம் போகாநின்றேன் என்று சொன்னவுடனே, மேகவண்ணனாகிய பகவானும் நல்ல வழித்துணை நேரிட்டதென்று மகிழ்ந்து, காலில்லாத என் வழித்துணைவனே, உனக்குக் கிடைக்காத பொருள் ஒன்றுமில்லையென்றுசொல்ல, கூர்மதாசர் வேதியரை நோக்கி உமது பெயர் என்னென்று கேட்க, என் பெயர் விட்டலன் என்று பகவான் சொல்லியருளினார். மேலும் இன்னமும் பண்டரிபுரத்தில் கடைவைத்திருக்கிறேன், நான்மெல்லநடப்பவன், ஆகையால் பண்டரிபுரம் போய்ச்சேருமளவும் போஜனம்சமைத்து உமக்கு ஊட்டிப்பிறகு நானுண்டு என்னிடம்சேர்கிறேன் என்றுசொல்லி, அன்றிரவில் கூர்மதாசரோடு தங்கியிருந்து, மறுநாள் சூர்யோதயத்தில், தாசரே! இதுதான் பண்டரி புரத்துக்குப் போகும் வழி யென்று சொல்லி, விட்டலப் பெருமாள் மறைந்தார். தாசரும் தவழ்ந்துகொண்டே போய்ஓரிடத்தில் தங்கினார், அது அஸ்தமனகாலமாதலால் பகவான்வந்து தாசருக்கு இனிய உணவை யுண்பித்தார். இந்தப்படியே பகவான் இரவும் பகலும் தாசருக்குவேண்டிய

உபசாரங்களைச் செய்துகொண்டும், பகவானும் நான்குமாசகாலத்தளவும் அவரோடு கூடவேயிருந்து தொண்டுசெய்தும், லகுளையை யடைந்தார். அடைந்த அந்நாள் கார்த்திகைநக்ஷத்ரத்தோடுகூடிய தசமிதிதியாகையால் இந்தவழிச் செல்வோரெல்லோரும் நாளை ஏகாதசிக்குப் பண்டரிபுரத்தையடைவார்களே, நான்போய்ச் சேர்வதெப்படியென்று மனங்கலங்கி, பண்டரிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் விட்டலப்பெருமானே ! நாளைக்கும் உன்சேவை கிடையாது என்றுதோன்றுகின்றதே, என்செய்வேன் என்று இரண்டுகைகளையுங்குவித்து வணங்கி தமக்கெதிரே போகிறவர்களைப்பார்த்து, புண்யாத்மாக்களே! நீங்கள் முன்னேபோகிறவர்களாகையால் என்னுடையநிலைமையைஎம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்து இங்கே யெழுந்தருளியாகிலும் அடியேனுக்குச் சேவை தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து என் மனோரதத்தை நிறைவேற்றுவீர்களாக என்று மிகவும் ப்ரார்த்திக்க, அவர்களும் அப்படியே யாகட்டுமென்றுபோனார்கள். ஞானதேவர் முதலிய நால்வரோடு நாமதேவரும், விசோபரும், சங்கீதத்தோடு ஹரி பஜனை செய்தார்கள். அப்போது பாண்டு ரங்கன் அவர்களை நோக்கி, எனக்கு மிகுந்த அன்புள்ள பக்தர்கள் இந்த ஞானதேவர் முதலானோர்களேயென்று அருள்செய்தார். எனது நாமத்தைப் படனம் பண்ணுகிறவர்களுக்குள்ளே, நாமதேவர் சிறந்தவரென்றும் அருள்செய்தார். அப்போது அன்பரெல்லாரும அவரைத் தழுவிக்கொண்டு, லகுளையிற்றங்கி, அங்கிருந்து ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம செய்துகொண்டே கோயிலுக்குப்போனார்கள். போய்ப் பகவானுடைய திருவடியைவணங்கி, அன்போடுதுதித்து, கூர்மதாசர் முன்னே சொன்னதைப பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்தார்கள். அதைக்கேட்ட பகவான், தமதிடத்தில் நின்ற நாம தேவரையும் அன்போடு கடாக்ஷித்து அருள்செய்கிறார். கூர்மதாசன் என்னைக் காணவேண்டுமென்று மிகுந்த ஆசையுள்ளவனாயிருக்கிறான், ஆகையால் நீங்களும் வாருங்கள்என்று சொல்லிக் கூடவேயழைத்துக்கொண்டு நாமதேவரைச்சேர்ந்து ஒரு விளையாடலைச் செய்யநினைத்து, அந்த இருவரையும நோக்கி, எனக்கு அதிக தாகமாயிருக்கின்றது, நான் போய் நீருண்டு வருமளவும் நீங்கள் இங்கே நில்லுங்களென்றுசொல்லி, ஒருகொடிவழியாகப்போய், சாவநதியாமேளதாசர் ஸ்ரீஹரி நாம ஸ்மரணையோடு கண்களை மூடிக்கொண்டு, மெய்மறந்திருக்கிற அவ்விடத்திற்குப் போய், அவரை யெழுப்ப, அவர் விழித்து நோக்கி, பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தைச் சேவித்து, ஸ்வாமீ! தேவரீர் அடியேனிடத்துக்கு எழுந்தருளுதற்கு அடியேன் என்ன தவம்செய்தேனோ என்றுசொல்லித் தழுவிக்கொண்டு திருவடியைவணங்கி, மெய்யன்பாகியகடலில்அழுந்திநிற்பவராகிய அந்தத்தாசருடைய முகத்தைநோக்கிப் பகவான்சொல்லுகின்றார். தாசரே! நான் வரும் வழியில் இரண்டு திருடர்கள் என்னைத் தொடர்ந்தார்கள், அவர்களுக்கஞ்சி உன்னிடம்வந்தடைந்தேன், நீ என்னை அவர்களுக்குக் காட்டாமல் மறைத்துவைக்கவேண்டும்என்றுசொல்ல, தாசரானவர் சிறிதுநேரம் ஆலோசித்து, ஸ்வாமீ ! சூரியனை எங்கே யொளித்து வைக்கிறது, ஒளித்து

வைக்கமுடியாதே, அதுபோல அண்டகோடிக ளெல்லாவற்றையும் திருவயிற்றிலடக்கியிருக்கிற தேவரீரை அடியேன் எங்கேமறைத்துவைப்பேன் என்றார். அப்போது பகவானானவர் தாசரை நோக்கி, தாசரே! இப்படிப்பட்ட ஆபத் காலத்திலேதானோ ஞானம் பேசுகிறது? அதை நிறுத்தி, விரைவாக என்னை மறைக்கவேண்டு மென்றார். அதைக்கேட்ட தாசரானவர், இவரை மறைக்கத்தகுந்த இட மில்லையென்று தமது மார்பையே பிளந்தார்; பிளந்தவுடனே பகவானானவர், அந்தப் பிளப்பில் நுழைந்து மறைந்திருந்தார். உடனே தாசரானவர் சிலகொடிகளைக்கொண்டு மார்பைச்சுற்றிவரிந்துகட்டினார். உள்ளே மறைந்திருக்கும் பகவானானவர், தாசரே! இந்த ஆபத்காலத்திலே நீர் செய்த இந்த வுதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன் என்றார். அதற்குத் தாசர்எங்கும்நிறைந்திருக்கிற தயாநிதியே! என் உயிருக்கு ஆதாரமாயிருக்கும் பரம்பொருளே! என்மார்பை யிடமாகக்கொண்டு எழுந்தருளினதற்கு அடியேன் என்ன கைம்மாறு செய்வேன் என்று தியானித்துக்கொண்டிருந்தார். இப்படியிருக்கும்போது, அங்கேயிருந்த நாமதேவர், எம்பெருமான் எங்கேபோயினரோ! போய் நெடுநேரமாயிற்றே யென்று அவர் நடந்த அடிச்சுவட்டைப்பற்றிக் கொண்டேபோய், சாவந்தியாமேளதாசர் இருக்குமிடத்தை யடைந்து, பகவான் இங்குவரக்கண்டீரோவென்று கேட்க, தாசர் ஒன்றும பேசாமல் மௌனமாயிருக்க, வந்த பகவானை இவர் விழுங்கிவிட்டார்போலத் தோன்றுகின்றது, ஆனாலும நீரை விரும்பிவந்தவரை இவர் எப்படி விழுங்கினரோ அறியேனென்று, எம்பெருமானே, எனக்குத் தோன்றாமல் மறைந்திருப்பீரானால், என்னுயிரை இப்பொழுதே விட்டுவிடுவேன் என்று சொல்லுதலும், பகவானானவர், நான் இந்தத்தாசருடைய மார்பினுள்ளேயிருக்கிறேன், எப்படி வெளியே வருவேன் என்றார். அது கேட்ட நாமதேவர், மனம் புழுங்கிக் கதறி யழுதார். அப்போது பகவானானவர் தம்மை மார்பினுள்ளே மறைத்துவைத்திருக்கிற தாசரைநோக்கி, நாமதேவன் என்னைக் காணாமல் துன்பப்படுகிறான், ஆதலால் என்னை அவனுக்குக் காட்டினால் அவன் துன்பம் நீங்கும் என்று சொல்ல, தாசரானவர் நாமதேவரை நோக்கி, நீர் வருந்தவேண்டாம்என்று சொல்லி, தமது மார்பிற் சுற்றிக் கட்டியிருந்த கொடிகளை அவிழ்த்தார். அவிழ்த்தவுடனே, பகவானானவர் வெளியேவந்தார். அவரை நாமதேவர் கண்டு, மனக் கனிவோடு அவர் திருவடியைப் பற்றிக்கொண்டு நிற்க, பகவான் அவரைத் தழுவிக்கொண்டு, கண்ணீர் துடைத்து அருகில் இருத்திக்கொண்டார். அப்போது சாவந்தியாமேளதாசரோடு, ஞானதேவரும், நாமதேவரும்கூட லகுளையில் எழுந்தருளியிருக்கும் பகவானானவர் இவர்கள் எல்லாரையும கொண்டு கூர்மதாசர் திருமாளிகைக்குப் போக, அவர் எதிர்கொண்டுவந்து பணிந்து, அன்பு மிகுந்த தோத்திரங்கள் பலவும் செய்து கொண்டாடினார். அப்போது பகவானானவர் அவரைத் தமது நான்கு திருக்கைகளாலும், அணைத்துக்கொண்டு உமக்குவேண்டிய வரங்களைக்கேளுமென்று சொல்ல, தாசர் மகிழ்ந்து, ஸ்வாமி! தேவரீர் எந்நாளும் இவ்விடத்

தில் எழுந்தருளியிருக்கவேண்டும், அதுதான் எனக்குத் தேவரீர் கொடுக்க வேண்டிய நல்ல வரம் என்றார். அதற்குப் பகவானுனவர் இசைந்து, தாசரே! அப்படியே செய்கிறேனென்று சொல்லி, அன்றுமுதல் பண்டரிபுரத்தில் எழுந்தருளி யிருப்பதுபோலவே இந்த க்ஷேத்ரத்திலும் எழுந்தருளியிருந்தார். வருஷந்தோறும் கார்த்திகை மாசம் ஏகாதசியில் இந்த ஸ்தலத்திலும் அன்பரெல்லாரும் கூடிப் பாண்டுரங்கப் பெருமானை வணங்கித் தோத்திரம் பண்ணி, ஆநந்தக் கூத்தாடிக்கொண் டிருப்பார்கள். இதுதான் கூர்மதாசர் வைபவமென்று சொல்லி மேலே ராகாகும்பார் வைபவத்தைச் சிவபெருமானுனவர் பார்வதிதேவியார்க்குச் சொல்லத்தொடங்கினுர்.

கூர்மதாசர் சரித்திரம் முற்றிற்று.

# அ-வது ராகாகும்பார் சரித்திரம்.

வைராக்கியத்திற் சிறந்தவராகிய ராகாகும்பார் என்பவர், கூர்ஜா தேசத்தில், குயவர் குலத்தில் அவதரித்து, தமது குலத்தில், பாங்காபாய் என்பவளை மணம் புணர்ந்து இல்லறம் வழுவாமல் நடத்திவருங் காலத்தில், இவர் மனைவி வயிற்றில் வங்கா என்றொரு புதல்வி அவதரித்தாள். இம்மூவருமாக பண்டரிபுரத்தில், மட்கலங்கள் செய்துவிற்று ஜீவனம் செய்துகொண்டு, ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநத்தை மறவாமல் நெடுநாள் வாழ்ந்திருந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் இந்த ராகாகும்பார் செய்து காயவைத்த மட்பாண்டத்தில், ஒரு பூனையானது மூன்று குட்டிகளை யீன்று, இரவும் பகலுமாக அந்தக் குட்டிகளை அதிக ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தது. ஒருநாள் அது, குட்டிகளுக்கு இரை கொண்டு வரும்பொருட்டுப் பிரிந்த காலத்தில், அந்த மட் பாண்டத்தோடு மற்றைய மட்பாண்டங்களையும் சேர்த்து ஒருமிக்கச் சூளையிலிட்டுச் சுடும்படி நேர்ந்தது. அப்படி நெருப்பிட்டு வேகும்போது, தாய்ப்பூனை வந்து, தன்குட்டிகளிருந்த பாண்டம் காணுமையால் மிகவும் துன்பமடைந்து, உரத்த சத்தத்தோடு அழத்தொடங்கினது. இது அழுகின்ற சப்தமானது சூளையில் பாண்டத்துக்குள்ளே யகப்பட்டிருக்கிற குட்டிகளின் காதுகளில் பிரவேசிக்க, அவைகளும் கதறியழத் தொடங்கின. இப்படி தாய்ப்பூனையும் குட்டிப்பூனைகளும் அழுது கூக்குரலிடுவதைச் சூளைக்குத் தீமூட்டின ராகாகும்பார் அறிந்து, வயிற்றிலும் முகத்திலும் அறைந்துகொண்டு, மனைவியின் முகத்தைப் பார்த்து, பாண்டத்தில் குட்டிகளிருப்பதை அறியாமல் நான் தீமூட்டினேன். தாய்ப் பூனையும் குட்டிப் பூனைகளும் படுந்துயரத்தைப் பாண்டுரங்கப்பெருமான்தான் நீக்கி ரக்ஷிக்கவேண்டும் என்று சொல்லித் துக்கிக்கவே, எரிகிறசூளையைச் சுற்றிசுற்றி அழுகின்ற தாய்ப் பூனையின் சத்தத்தையும், சூளையினுள்ளே பாண்டத்திலிருந்து அழுகிற

குட்டிப்பூனைகளின் சப்தத்தையும் கேட்டும், தன் கணவன் படுகிற துயரத்தை நோக்கியும், பாங்காபாயியானவள் நெருப்பில் விழுந்து கரிந்துபோன பூங்கொடிபோலக் கதறி யழுதுகொண்டே நிலத்தின்மேல் விழுந்து, பாண்டுரங்கன் திருவடியை நினைந்து அழுதாள். அப்போது ராகாகும்பாரும், பண்டரிநாதா! பக்தபாலனா! ருக்மிணீரமணா! அக்காலத்தில் பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் அகப்பட்டு இறவாமலும், ப்ரஹ்லாதாழ்வான் தன் தந்தையாகிய ஹிரண்யகசிபு மூட்டின தீயிலகப்பட்டு இறவாதிருக்கவும் அருள் செய்த செந்தாமரைக் கண்ணனாகிய பகவானே! இங்கே இந்தத் தீயில் ஆகப்பட்டு வருந்துகிற பூனைக்குட்டிகளையும் காத்தருளவேண்டும். அப்படிக் காத்தருள்வாயானால், இனி இந்தக் கடுந் தொழிலாகிய சூடுந் தொழிலை விட்டுவிடுகிறேன் என்று தோத்திரம்பண்ணி, மனைவியும் தாமுமாகத் துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தார்கள். இந்தப்ரகாரம் துக்கிக்கிற காலத்திலும் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்ததனால், மூன்றாவது நாள் நெருப்பாறிக் குளிர்ந்தபிறகு குட்டிகள் கண்ணுக்குத் தெரியாமலிருந்து கத்துவதையும், தாய்ப்பூனை சூளையைச் சுற்றிச்சுற்றிக் கதறுவதையும் நோக்கி, ராகாகும்பாரும் மனைவியும் ஓடி, விரைவாகச் சூளையைக் கலைத்துப் பார்க்க, அதில் ஒரு பாண்டம் மாத்திரம் வேகாமல் பச்சையாயிருக்கக் கண்டு, அதை யெடுக்கும்போது, அதற்குள்ளே குட்டிகள் இறவாமலிருக்கக்கண்டு, மிகவும் மனமகிழ்ந்து, மூன்றுநாளாகப் பாலுண்ணக் கிடையாமல் வருந்தின குட்டிகளை நோக்கிப் பரிதபித்து, பாண்டுரங்கப்பெருமான் விசேஷ க்ருபை செய்ததையும் நினைந்து, தமது துன்ப மொழிந்தார்கள். இந்த அதிசயத்தை அந்த ஊரிலுள்ளாரெல்லாரும் கண்டு, இவர்களுடைய பரமபக்தியைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். பிறகு, ராகாகும்பார், நாம், பாண்டுரங்கப் பெருமானறிய இந்தத் தொழிலை விட்டுவிடுவதாகச் சொன்னபடியே, விட்டுவிடுவதே நலமென்று, குயத்தொழிலைவிட்டு, காட்டுக்குப்போய், உலர்ந்துகிடக்கிற விறகுகளைக் கட்டிக்கொண்டுவந்து ஊரில்விற்று, அதனால் கிடைக்கும் பொருளைக் கொண்டு ஜீவநம்செய்துகொண்டும், தம்மை நாடிவருகிற அதிதிகளை ஆதரித்தும், பண்டரிநாதனது திருநாமத்தை மறவாமல் உச்சரித்துக்கொண்டும், கிழிந்து குப்பையிற் கிடக்கிற துணிகளால் தமது மானத்தைக் காப்பாற்றிக்கொண்டும் வருவதை உலகத்தார் பார்த்து, இவர்கள் ஒரு உயிரின் பொருட்டுத் தமது குலத்தொழிலை விடுத்து வேறு தொழில் செய்து ஜீவிக்கிறார்கள். இவர்களுடைய ஜீவகாருண்யமும் பக்தி வைராக்யங்களும் ஆலோசிக்குமிடத்து, மிகவும் ஆச்சர்ய ஹேதுக்களாயிருக்கின்றன என்று மிகவும் புகழ்ந்து கொண்டாடிக்கொண் டிருந்தார்கள். இப்படியிருக்க, ஒருநாள் இந்த ராகாகும்பார் புதல்வியாகிய, வங்கா, பீமாநதிக்கரையை யடைந்து, அந்த நதியில் ஸ்நாநம் செய்து பூஜைசெய்துகொண் டிருக்கும்போது, அந்த நதியில் வஸ்திரம் தோய்த்துக்கொண்டு போகவந்த நாமதேவர் மகள் அவசரமாய்த் தப்பும்போது தெறித்த நீர்த்துளிகளிற் சில, இந்த வங்காமேல் தெறிக்க,

இவள், நாமதேவர் மகளை நோக்கி, இப்படி நீ துணி தப்புவது உனக்குத் தகுதியோ என்று கேட்க, அவள் வங்காவை நோக்கி, பாண்டுரங்கனை ப்ரார்த்தித்துக் காமியத்தில் மனம் வைத்து, குலத் தொழிலை விட்டு, நெறிதப்பி, அலைகிற குயச்சாதியார்க்கும் பூசைசெய்யுந் தொழில் தகுதியாமோ என்று கடுஞ் சொற்களைக் கூற, வங்கா, அந்த நாமதேவர் மகளை நோக்கி, உன் தந்தை அழுது, விட்டலப் பெருமானைப் பிரார்த்தித்து, இறந்த பசுவைப் பிழைக்கச்செய்தது காமிய மல்லவோ? ஆலோசித்துச் சொல்லென்று கூற, இப்படி ஒருவரோடொருவர் வாதுசெய்து, மிகவுங் கோபங்கொண்டு, தமது வீட்டுக்குப் போய்விட்டார்கள். பிறகு நாமதேவர் பகவத் ஸந்நிதியிலிருந்து தமது திரு மாளிகைக்கு வந்தவுடனே, அவர் மகள் அவரை நோக்கி, ராகா கும்பார் புதல்வியாகிய வங்காஎன்பவள், உம்மை மிகவும் தூஷித்தாளென்று சொல்ல, நாமதேவர் சற்றுநேரம் யோசித்து, மேகவண்ணனாகிய பகவான் சந்நிதிக்கு மீண்டும் வந்து, ஸ்வாமீ, உன் அடியவராகிய ராகாகும்பார் உன்னிடத்தில் காம்யரோ, நிஷ்காமயரோ, அவர் கருத்தை எனக்குத் தெரியச் சொல்லவேண்டுமென்று கேட்க, பாண்டுரங்கபகவான், அவன் நிஷ்காமயனே என்று நகைத்துக்கொண்டே சொல்லி யருள, தாசர், அவர் பெருமையை அடியேனுக்குக் காட்டவேண்டுமென்று கேட்க, பகவான் ருக்மிணீ தேவியோடு இவரை யழைத்துக்கொண்டு, ராகாகும்பார் விறகொடிக்குங் காட்டிற்கு வந்து, அவரும் அவர் தேவியும் விறகொடிப்பதையும் கட்டுவதையும் காட்ட, தேவரும், இவரைச் சோதனை செய்யவேண்டுமென்று சொல்ல, அப்படியே சோதனை செய்கிறேனென்று, பிராட்டியாருடைய கையிலுள்ள சங்கணத்தைக் கழற்றி ஒருபக்கத்தில் போட்டு, அதன்மேல் உலர்ந்த விறகை வைத்து மூடி, தூரத்தில் மறைந்திருந்து பார்க்க, ராகாகும்பாரும், விறகு தேடி வரும்போது இந்தக் கங்கணத்தைக் கண்டு அஞ்சி விலகி நின்று, சங்கணத்தையும அதனை மறைத்திருந்த விறகையும தமது மனைவிக்குக் காட்ட, அவளும் ஏதோ தீமை யுண்டாயிற்று என்று மிகவும் அஞ்சி நெடுந்தூரம் விலகிப்போக, அதைக்கண்ட நாமதேவர், பகவானைப் பணிந்து, கருணை நிறைந்து வழிந்தொழுகும் திருக்கண்களையுடையவனே! காகுத்தனே! ராகா கும்பார், உண்மையாகிய பக்தியுள்ளவரே; சந்தேகமில்லை. அதுநிற்க, தேவரீருடைய சகுண ரூபத்தைக் காட்டி யருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, ஸ்ரீ லக்ஷ்மீநாதன், நகைத்து, இந்த ராகாகும்பார் நடத்தையை இன்னமும காணவிரும்புகிறாயோ! இப்போது காட்டின சோதனையே போதுமோ என்று கேட்க, தாசர், இனி யொருசோதனையும செய்யவேண்டியதில்லை, இவருக்கு நிகரான பக்திமான்கள் உலகத்தில் ஒருவரு மில்லை யென்று சொல்லவே, பாண்டுரங்கப்பெருமானனவர், ருக்மிணீ பிராட்டியோடும் நாமதேவரோடும் கூடி, மூவருமாக, ராகாகும்பாருக்கு எதிரே வந்து அருள்செய்து நிற்க, ராகாகும்பார் தமது மனைவியோடும் வந்து அன்போடு இவர்களை அடிவணங்கித் தோத்திரஞ்செய்தார்.

ராகாகும்பார் சரித்திரம் முற்றிற்று.

# கூ-வது கோராகும்பார் சரித்திரம்.

எல்லாவூர்களிலும் சிறந்து விளங்குகின்ற தேரடோகி யென்னும் ஊரில் கோராகும்பார் என்பவர் ஒருவரிருந்தார். அவர் இல்வாழ்க்கை பூண்டு இனி தாய் நடத்திவருங் காலத்தில், அவருக்குப் பகவத்பக்தி அதிகரித்தலால், உண்ணும்போதும், நடக்கும்போதும், இருக்கும்போதும், எழுந்திருக்கும்போதும், லோகவிவகாரங்களை நடத்தும்போதும், மட்கலங்கள் வனையும்போதும், ஆயாசந் தீரும்போதும், பாண்டுரங்கப்பெருமானை மறவாமல் மனத்திலிருத்தி, பஜனையுஞ் செய்து வாழ்ந்திருந்தார். இப்படியிருக்கும்போது ஒருநாள், இவர் மனைவியானவள், தவழ்கின்ற தனது இளங் குழந்தையை, இவர்க்கெதிரே விட்டுத் தாக நீர்கொண்டு வரப்போனாள். அந்தக் குழந்தையானது இவர் மண் மிதித்துக்கொண்டிருந்த இடத்திற்குத் தவழ்ந்து கொண்டு வந்தது. இவர் ஸ்ரீ ஹரிபாதத்தில் மனம் பதிந்திருப்பவராதலால் இந்தக் குழந்தை வந்ததை யறியாதவராய் மண் மிதித்துக்கொண்டேயிருந்தார். இந்தக் குழந்தை யையத் தவழ்ந்துபோய், மண் மிதித்துக்கொண்டிருக்கிற இவருடைய காலின் கீழ் அகப்பட்டது; இவர் மண்ணோடு சேர்த்து மிதித்துக் குழைத்துவிட்டார். தண்ணீர்க்குப்போன இவர் மனைவிவந்து நீர்க்குடத்தை யிறக்கிவிட்டு, குழந்தையெங்கே யென்று கேட்டு, இவர் வாய்பேசாமலிருப்பதைக் கண்டு, இங்கே நமது குழந்தைக்கு ஏதோ தீங்கு நேரிட்டதாய்த் தோன்றுகின்றதென்று சற்று நிதானித்து, இவர் மிதிக்கிற மண்ணைப் பார்த்து, அது உதிரத்தோடுகூடிச் சிவந்திருப்பதையும், குழந்தையின் சரீரத் துண்டையும் கண்டு, பயந்து, மார்பில் அறைந்துகொண்டு, பூமியின்மேல் விழுந்து, புரண்டு அழுது, ஐயோ, குழந்தாய், மண்ணிற் சிக்கி மடிந்தாயோ! கொஞ்சமேனும் இரக்கமில்லாமல் உன் தந்தை உன்னைக்கொன்றாரோ என்று சொல்லிப் புலம்பிப் பின்பு, கணவனை நோக்கி, கொஞ்சமும் நினைப்பில்லாமல் குழந்தையை மண்ணோடு சேர்த்து மிதித்துக் கொன்றீர்! நீர் இவ்விடம் விட்டு எங்கேயாகிலும் போய் இறந் தொழிவீராக வென்று கடுஞ் சொற்களைச் சொல்ல, இவர்க்குச் சற்றே நினைவு வந்து விழித்துக்கொண்டு, எதிரே நிற்கிற மனைவியை நோக்கி, என் மனத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ வைகுண்ட நாதனை நீ விலகும்படி செய்தாயே! என்னடி பேதாய் என்று கோபங் கொண்டு, தம்கையிலிருந்த தடியாலடிக்கக் கிட்டி வரும்போது, மனைவியார், இவரை நோக்கி, விட்டலப்பெருமான் ஆணை என்னை நீர் தீண்டாதிருக்கக் கடவீர் என்ற வார்த்தையைக் கேட்டு, அவசரப்படாமல் பொறுத்திருந்தார். இந்தச் செய்தியை ஊராரெல்லாரும் கேட்டுத் திரண்டுவந்து, இங்கே நடந்த விருத்தாந்த முழுதும் தெரிந்துகொண்டு, இவருக்கு இப்படிப்பட்ட வெறிக்

குணம் எப்படி உண்டாயிற்றென்று சிலர் பேசிக்கொண்டார்கள். மனைவியை நோக்கி, உனக்கு நல்ல கணவன் வாய்த்தானென்று சிலர் சொன்னார்கள். ஸ்ரீஹரிபக்தி ஒருவனுக்குண்டானால் அந்த பக்தி ஒன்றையும் அறியாதிருக்கச் செய்யுமோ வென்று சிலர் சொன்னார்கள். இப்படிப் பலபல வகையாய்ப் பேசுவதை இவர் செவியிலேற்காமல்;ஸ்ரீபாண்டுரங்கப்பெருமானைச் சிந்தித்துப் பஜனை செய்துகொண்டிருந்தார், மறுநாள் அந்த மனைவியாரே, தாம் பேசின கடுஞ் சொற்களை நினைத்து மனமிரங்கிக் கணவனைத் திருவடி விளக்க நீர் கொண்டுவந்தாள். கோராகும்பார் அதை நோக்கி, பெண்ணே, நீ பண்டரி நாதன்மேல் ஆணையிட்டு நேற்றுச் சொன்ன வார்த்தையை மறந்து, இப்பொழுது என் என்னைத் தீண்ட வருகிறாய் என்று கோபித்துக்கொண்டார். கிட்டி வந்த மனைவியாரும் குழந்தை மீதுள்ள ஆசையாலே, நமது கணவனுக்கு மற்றொரு விவாஹமாகிலும் செய்து அந்த மனைவி வயிற்றிலே ஒரு குழந்தை யுண்டாகப்பெறுவோமென்று நினைத்து, தமது தந்தைதாயர் வாழ்கின்ற வீட்டுக்குப் போய் அவர்களை வணங்கி, என்னை என் கணவன் மறுத்ததனால் அவருக்கு என் தங்கையை மணமுடித்துக் கொடுக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அந்தத் தாய் தந்தையரும் அதற்கிசைந்து நல்லசுபமுஹூர்த்தத்தில்பெண்ணை விவாஹஞ்செய்துகொடுக்கும்போது எதிரேநின்ற கோராகும்பாரை நோக்கி, மூத்தபாரியாளைக் காப்பாற்றினதுபோல இந்த இளையபாரியாளையும் காப்பாற்றவேண்டுமென்று மணப்பந்தலிலிருந்த தாய் தந்தையர்முதலானோர் சொல்லிவிடுக்க, இவர் தம்வீட்டிற்கு அழைத்துவந்து அவரைத் தீண்டாமல் முன்போல விரதம் பூண்டிருக்க, அந்த இளைய பாரியையானவர், மூத்தாளைநோக்கி, உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும் முடிந்தது என்றார். பிறகு, பெரிய மனைவியார் இளைய மனைவியாரைத் தேற்றி, இருவருஞ்சென்று கணவன்தூங்குகிறபடுக்கையில் தாமும் இருபுறத்தும் படுத்து, கணவனது இரண்டு கைகளையுந் தூக்கித் தங்கள் மார்பின் மேல் வைத்துக்கொண்டு உறங்கினார்கள். அப்போது கோராகும்பார் விழித்துப் பார்த்து, நமது விரதத்துக்குக் கெடுதி நேரிட்டதேயென்று அருவருத்து வாளால் ஒரு மனைவி கையை அறுத்து, பிறகு மற்றொரு மனைவிகையையும் அறுத்தபோது, மனைவியர் இருவரும் மனம் வருந்தி, நாம் இவரை மணஞ் செய்துகொண்டது குழந்தையின் பொருட்டோ! அதற்கு விரோதமாய்க் கையை யிழந்துபோதற்கோ! இனி யாம் செய்யத் தகுந்தது யாதோவென்று அலறியழுதுகொண்டிருப்பதை, அன்பரையர்தரிப்பவனாகிய பாண்டுரங்கன் இனிமையாய் உதவி செய்வோனாயிருக்க, நீங்கள் துன்பப்படுவது யாதுக்கு என்று கோராகும்பார் சொல்லி, மேலும் விட்டலன் திருநாமத்தை யுச்சரித்தால் எவ்வகையாகிய நோய்களும் நீங்கும் என்று அவரைத் தேற்றி, ஹரி பஜனை செய்துகொண்டிருந்தகாலத்தில் ஆடிமாசம் ஏகாதசி நேர்ந்தது. அப்போது கோராகும்பார் தம்மனைவியரோடு வந்து பாண்டுரங்கனைத் தரிசித்து, பேரானந்தங்கொண்டு, சந்திரபாகா நதியில் மூழ்கி, முன்னே புண்டலீகரைத்

தொழுது வாழ்த்தி, பண்டரிநாதன் எழுந்தருளியிருக்கிற கோயிலை வலம் வந்து, பெருமானையுஞ் சேவித்துத் தோத்திரம்பண்ணித் தழுவிநிற்க, நாமதேவர் தமதுகோஷ்டியோடு தாளம், தம்புரு, மிருதங்கம் முதலிய வாத்யங்கள் முழங்க, கையில் கருடக்கொடியையேந்தி, பாண்டுரங்கனுடைய நாமஸங்கீர்த்தனம் பாடி ஆநந்தக்கூத்தாடினார்; அவர்களோடு கோராகும்பாரும் கூடியாடினார். அப்போதுமனைவியர் இருவரும்கைத்தாளம்போட விருப்பமுள்ளவராயிருந்தும முன் கைகளில்லாமையால் மனம் வாடி ஸ்ரீ ஹரி நாமத்தையுச்சரித்துக் கைகளை மூடிக்கொண்டு நாணிநின்றார்கள். அப்போது இவர்களுடைய எண்ணத்தைப் பாண்டுரங்கன் அறிந்து கைகள்முன்போலவே வளரச்செய்ய, அவர்களும் அன்போடு கைகள் கொட்டிப் பாடித்தொழுது ஆடிமகிழ்வதை எல்லாரும அறிந்து அதிசயித்து நோக்கி, பரவசமடைந்து, இந்தக் கோராகும்பார்தொண்டர்களிற்சிறந்தவரென்று பலவகையாய்த் தோத்திரஞ் செய்து, நெருங்கியிருக்கக்கண்டு, மூத்த மனைவியார், கைகூப்பிநின்று, பண்டரிநாதனே! பக்தபாலனே! பத்மநாபனே! திருத்துழாய்மாலையை யணிந்த தாமோதரனே என்று வாழ்த்தித் தொழுது, அன்பருக்குக் கைகள் வளரும்படி அருள்செய்த கமலக்கண்ணனே! நீலமேகவண்ணனே! மாயவனே! குழந்தையில்லாமல் வருந்துகின்றோம்! நாங்கள் வருந்துவது தேவரீர் திருவுளம் அறியாதோ! எங்கள்மீது கருணை யில்லையோ! ஸ்ரீ லக்ஷ்மீ நாதனே என்று இவ்வாறு தோத்திரம் செய்ததற்குப் பகவான் திருவுளமிரங்கி அருள்செய்ய, உடனே முன்னே இறந்த குழந்தையானது தவழ்ந்துகொண்டு எதிரே வருவதைக்கண்டமூத்தமனைவியார், விரைந்துபோய்க் குழந்தையை எடுத்து மார்பிலணைத்துக்கொண்டு உச்சிமோந்து முத்தமிட்டு மனமகிழ்ந்திருக்கும்போது, பகவானனவர் ப்ரத்யக்ஷமாகி, கோராகும்பாரை நோக்கி, இன்றுமுதல் உம்முடையமனைவியர் இருவரோடுங்கூடி இனிதாகவாழ்ந்துகொண்டிருக்கக்கடவீரென்றருளிச் செய்தனர்; இந்த அதிசயங்களைக் கண்டஅன்பரெல்லாரும் பலவிதமாய்த் தோத்திரம் பண்ணி வணங்கிப் பாடியாடி மங்கள ஆலாத்தி சுழற்றி, மகிழ்ந்திருக்க, கோராகும்பார், அந்தத்தொண்டர்களை நோக்கி, நீங்களெல்லீரும் அடியேனுடைய குடிலுக்கு எழுந்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அவர்களும் அப்படியே இவரைத் தொடர்ந்து போய் இவருடைய வீட்டையடைந்து நிற்க, கோராகும்பார் அந்த அன்பர்கள் யாவர்க்கும் பாதபூஜைசெய்து, ஆசநங்கொடுத்து, எல்லாரும் அமைந்திருந்த பிறகு, அவர்களுக்கு அறுசுவையோடுகூடின உணவை யுண்பித்து, மற்றும் செய்யவேண்டிய வுபசாரங்களெல்லாம செய்து முடிந்தபிறகு, ஞானதேவர், கோராகும்பாரை நோக்கி, நீர் இங்கே யழைத்துக்கொண்டுவந்த அன்பராகிய பாண்டங்களில், சுட்டபாண்டம் இதுவென்றும், சுடாதபாண்டம் இதுவென்றும் பிரித்தறியவேண்டுமென்கிற விருப்பம் எனக்கிருக்கின்றது என்று சொல்லுதலும், கோராகும்பார் எழுந்து தமது கையிலிருந்த தடியினால் ஒவ்வொருவரையும் தட்டினார். அவர்களெல்லாரும் மௌநமாயிருந்தார்கள்; பிறகு நாம

தேவர் தலையில் தட்டவரும்போது அவர் தடுத்தார். அப்போது இவர்பச்சைப் பாண்டமென்று சொல்லவே, முக்தாபாயியும் உமக்கு எவ்வாறு உண்மை தோன்றிற்றென்றும் நீர் மிகவும் சமர்த்தர் என்றும் சொல்லக் கேட்டவர் எல்லாரும் நகைக்க, நாமதேவர் நாணத்தோடுமெழுந்து, பகவான் சந்நிதியிற் போய்ச் சேவித்துக் கண்களில் நீரொழுக நின்று, எனக்கு இன்று அவமானம் நேரிட்டதனால் மிகவும் மனம் வருந்தினேன் என்று விண்ணப்பஞ் செய்யக் கேட்ட எம்பெருமான் இவரைத் தழுவிக்கொண்டு, உனக்கு யார் என்னசெய் தார்? நடந்த செய்தியைச் சொல்லும் என்று வினவ, நின்று கோராகும்பார் தமதுவீட்டுக்கு எங்களையழைத்துக்கொண்டுபோய்நல்லவுணவையுண்பித்து, நாங்கள் மகிழ்ந்திருக்கும்போது, தமது கைத்தண்டத்தால் ஒவ்வொருவரை யும் தட்டிக்கொண்டேவர,அவர்கள் சும்மாவிருந்தார்கள்; என் தலையில் தட்ட வரும்போது நான் கையினால் தண்டத்தைத் தடுத்தேன்; அப்போது இது பச்சைப்பாண்டமென்றார்; எல்லாரும் சிரித்தார்கள், முக்தாபாயியும் அதிக மாய்ப் பரிகஸித்தாள். இந்தச் செய்தியைத் தேவரீருக்குவிண்ணப்பஞ்செய்ய வந்தேன் என்றார். இதை ஸ்ரீலக்ஷ்மீ நாதனாகிய பகவான் கேட்டுச் சிரித்து, நீ குருமுகமாக உபதேசம் பெறாமையால் உனக்கு இப்படிப்பட்ட அவமா னம் உண்டாயிற்று. கோராகும்பார்சொன்னது உண்மையாமென்று சொல்ல, நாமதேவர் சொல்லுகிறார். பண்டரிநாதனே! என் துயரமெல்லாம் உன்னிட த்தில் விண்ணப்பஞ் செய்தால் அதைத் தீர்த்தருளாமல், நீயும் உன் அன்பர் சொன்னதுபோலவே சொல்வது தகுதி யாகுமோ என்று சொல்லிக் கண் ணீர் ததும்பநின்றார். அதைக்கண்ட பண்டரிநாதர் நாமதேவா, உன்னை என் உயிர்க்குயிரா யெண்ணியிருக்க நீ யிப்படி வன்சொல்வழங்குவது தகுதியல்ல, உன்னுடைய துவிதபாவம் நீங்கும்படி குருவின் அருளைப்பெற்று, அதன் பிறகு என்னை யடையவேண்டும் என்று சொன்னவுடனே, நாமதேவர், குருக்களுக்கெல்லாம் பரம குருவாயிருக்கிற தேவரீரை யாசிரயித்த நான் வேறுகுருவைத்தேடுவது உசிதமல்லவேயென்றார்; அதற்குப் பகவான், நாம தேவா! நான் ஸ்ரீராமாவதாரத்தில் வஸிஷ்டரிடத்திலும், க்ருஷ்ணாவதாரத்தில் சாந்தீபரிடத்திலும் உபதேசம் பெற்றே ஆத்ம ஞானத்தை யடைந்தேன்; ஆகையால், நீ இப்போதே உபதேசம் பெற்று வருவாயானால், சாது ஜநங்க ளால் மதிக்கப்பெறுவாய்; தத்துவஞானமார்க்கமும் தோன்றும், போவென்று நியமிக்க, நாமதேவர் பகவானுடையதிருவடியை வணங்கி, நான் எங்கேபோய் எந்தக் குருவைத்தேடி அடைவேனென்று கேட்க, மேகவண்ணராகிய பண் டரிநாதர், குளிர்ந்த கங்கையைச் சடையில் தரித்திருக்கிற ஸ்ரீநாகைநாதர் எழுந்தருளியிருக்குங் கோயிலில், அறிவுருவாகிய விசோபாகேசரர் என்பவர் கண்வளர்ந்துகொண்டிருக்கிறார், அவரையடைவாயாகவென்று அருளிச்செய் தார். அப்படியே நாமதேவர் பகவானுடைய பிரிவை நினைத்து நினைத்து, மனத்தளர்ச்சியோடு நடந்துபோய்க் கோயிலை யடைந்து உள்ளேபிரவேசித்த வுடனே விசோபாகேசரர் தமதுசெருப்புக்காலைச்சிவலிங்கத்தின்மேல்நீட்டிக்

கொண்டு உறங்கக்கண்டு, திகைத்து, பகவானுனவர் எனக்கென்று தெரித் தெடுத்துச் சொன்ன ஆசான் இவர்தானோ? இப்படிப்பட்ட பித்தரைக்காணவி லும கண்டறியேனேயென்று நினைத்துக்கொண்டே, அந்த விசோபாகேசர ருக்கெதிரேபோய் நின்று, ஐயரே! உமது ப்ரபாவத்தைக்கேட்டு உம்மையாசி ரயித்து உஜ்ஜீவிக்கலாமென் றெண்ணி வந்தேன்; நீர் செய்த செய்கையை நோக்கினல் தகாத செய்கையா யிருக்கின்றது. இதனாலேயே உம்முடைய பரிசுத்தஞானமும வெளியாகின்றது என்று சொல்லக்கேட்ட விசோபாகேச ரர், அடடா, என்னையறியாமல் தூக்கத்தில் கால் தவறிச் சிவலிங்கத்தின்மேல் விழுந்ததுபோ லிருக்கிறது; என்னுடமபு மிகவும் அயர்ந்திருப்பதனால், அவ யவங்களைப்பேர்த்து வேறொரு இடத்தில் வைப்பதற்கும் சக்தி யில்லாதவனு யிருக்கிறேன்; ஆதலால் சிவலிங்கத்தின்மேலிருக்கிற காலைத்தூக்கி வேறிடத் தில் வைப்பாயானால் மிகுந்தவுபகாரமாகுமென்றார்; அதைக்கேட்டநாமதேவர் விசோபாகேசரர் எனனும் அந்த மெய் ஞஞானியின் திருவடியைத் தமது கை யால் தூக்கிப் பக்கத்தில் வைக்க, அங்குமொரு சிவலிங்கம் இருக்கப்பார்த்து, வேறோரிடத்தில் வைக்கப்போய் அங்கும் சிவலிங்கம் இருக்கப்பார்த்தார். இப் படி எங்கேவைக்கப்போனாலும் அங்கே சிவலிங்கமிருப்பதைப்பார்த்து, இது என்ன புதுமை! எங்குமசிவலிங்கமா யிருக்கிறதேயென்று ஆச்சரியப்பட்டுத் தளர்ந்திருப்பவரை, விசோபாகேசரர் நோக்கி, நாம தேவரே! நீர் நெடு நேரம் என் காலைத் தாங்கி நின்றதனால் எனக்கு மிகவும் விசனமாயிருக்கின் றது! ஆகையால் என் காலை வெற்றிடத்தில் வைத்துவிட்டு; நீர் கையாறுவீர் என்று சொல்ல, நாம தேவர், ஞானியாரை வணங்கி, ஐயரே, பார்க்கிற இட ங்களெல்லாம் சிவலிங்கமயமா யிருப்பதனால் அடியேன் தேவரீருடைய திரு வடியை எந்த வெற்றிடத்தில் வைப்பேன் என்று தோத்திரம் செய்து நிற் கும்போது, ஞானியார், என் காலை விடுமென்று எழுந்திருந்து, தமது திருக் கையை நாமதேவர் சிரசின்மேல் வைத்து, காதில் உபதேச மொழியாகிய ஞானமிர்தத்தைப் புகட்டினவுடனே, ஸ்ரீலக்ஷ்மீ நாதனாகிய பகவான் அவரது இதயகமலத்தில் எழுந்தருளினார். அப்போது நாமதேவர், கரைகடந்த ஆநந்த சாகரத்தில் மூழ்கிப பரவசராய், குருமூர்த்தியை வணங்கித் தெளிவடைந் திருந்தார். பிறகுஒருநாள், பண்டரிபுரத்திற் போய், பாண்டுரங்கனுக்கெதிரே, தொண்டரோடு கூடி ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தநம் செய்துகொண்டிருக்கும் போது, பாண்டுரங்கன் எழுந்தருளி இவரைத் தழுவிக்கொண்டு, எதிரே யிரு க்கிற வைஷ்ணவர்களை நோக்கி, இனி இந்த நாமதேவரை, சுடாத பாண்ட மென்று சொல்லுவீர்களாவென்று வினவ, ஹரிநாம சங்கீர்த்தநம் செய்து கொண்டிருந்த தாசரெல்லாருமை இனி அப்படிச் சொல்லுதல் தகாத காரிய மென்று சொலவி, ஆசிரயிப்பவர் எல்லாருக்கும் பேரின்ப வாழ்வை யருள் செய்கிற பகவானுடைய திருவடியைத்தொழுது வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலும் பரிசாபாகவதர் வைபவத்தைச் சொல்லுகிறேன் கேளெ னறு, பார்வதி தேவியாருக்குச் சிவபெருமான் சொல்லத்தொடங்கினார்.

**கோராகும்பார் சரித்திரம் முற்றிற்று.**

## ௪௦-வது பரிசாபாகவதர் சரித்திரம்.

பண்டரிபுரத்தில், பத்மாஸனையாகிய பெரிய பிராட்டியினிடத்தில் மிகவும் அன்புசெய்வோராகியபரிசாபாகவதர்என்பவர்ஒருவரிருந்தார். அவர் ஒருநாள் கோயிலுக்குப் போய்ப் பிராட்டியை வணங்கி நிற்கும்போது, இவரது அன்புக்குத் திருவுள மகிழ்ச்சி யடைந்த ருக்மிணீ தேவியார் எதிரே வந்து, க்ருபா த்ருஷ்டியால் நோக்கி, அப்பா குழந்தாய், உனக் கென்னவேண்டுமென்றுகேட்க, பாகவதர், பிராட்டியை நோக்கி, தாயே, நான் குடும்ப துக்கங்கள் ஒன்றுமில்லாமல், எப்போதும் உன்னையே மனமொழி மெய்களால் வழிபட்டிருத்தலாகிய நெறியை எனக்கு அருள் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, பிராட்டியார் தக்ஷணமே ஒரு ஸ்பரிச வேதிக் கல்லை இவர் கையிற் கொடுத்து, இந்தக் கல்லை எந்த லோகத்தில் தடவினாலும் அவைகள் பொன்னாகும், அந்தப் பொன்னைக்கொண்டு உன் குடும்ப துக்கம் தோன்றாமல் இல்வாழ்க்கையை நடத்திவரலாம், இந்தக் கல்லை அதிக ஜாக்கிரதையாய்க் காப்பாற்றிக்கொள் என்று நியமிக்க, அப்படியே அந்தக் கல்லைப் பெற்றுக்கொண்டு வந்த பாகவதர் தமது மனைவியாரிடத்தில் கொடுத்து, அதின் வரலாறு முழுதும் சொல்ல, அந்த மனைவியும், பரிசக் கல்லினால் இரும்பு முதலானவைகளைப் பொன்னாக்கி, அதைக்கொண்டு தமது இல்வாழ்க்கையை இனிதாய் நடத்திவந்தார். இப்படி இந்தச் செய்தி ஒருவர்க்கும் தெரியாமல் இருவரும் மனமகிழ்ச்சியோடும் கூடிச் சுகமாய் வாழ்ந்திருக்குங் காலத்தில், ஒருநாள் இவர் மனைவியாராகிய கமலஜா என்பவள் சந்திரபாகா நதியில் போய் நீர்முகந்துகொண்டு மீண்டுவரும்போது, நாமதேவர் மனைவியாராகிய ராசாயி என்பவள் எதிர்ப்பட்டு, ஒ கமலஜா, நானும் நீர்முகந்து வருமளவும் இங்கே நிற்கக் கடவை யென்று இன்சொற் சொல்லி நிறுத்திவிட்டுப் போய் நீர்முகந்து வந்தாள்; அப்படி விரைந்துவந்த ராசாயியை, கமலஜா அன்போடு நோக்கி, என் அன்புக்குரிய சகியே, உன் வாழ்க்கை வளத்தைச் சொல்லுவாயானால் கேட்டு மகிழ்வேன் என்றாள், அதுகேட்ட ராசாயி, தனது சிறு வாழ்க்கையைச் சொல்ல நாணி நிற்க, கமலஜா அறிந்துகொண்டு, மனங்கலந்த ஸ்நேஹரிடத்தில் சொல்வதற்கு நாணவேண்டியதில்லை, உனக்குள்ள வுண்மையை எனக்கு மறைக்காமல் சொல்லலாம், ஆதலால், சொல்லென்று கேட்க, ராசாயி சொல்லுகிறாள் எப்படியென்றால், என் கணவரானவர், நாணத்தையும் மானத்தையும் விட்டு, குடும்பத்தைக் காப்பாற்றவேண்டுமென்கிற நினைவு சிறிதுமில்லாமல், வறுமையால் உண்டான துன்பத்தையும் நோக்காமல், ஸ்ரீபாண்டுரங்க பகவானுடைய திருவடி ஸ்மரணமாகிய கடலி லழுந்தி, அங்கவஸ்திரங்களையும் விரும்பாதவராய், ஹரிபஜனை செய்வதிலேயே விருப்பங்கொண்டு திரிகிறார். அவரது நடக்கையை என்னென்று சொல்வேன் என்று சொல்லக் கேட்ட கமலஜாவானவள், ராசாயி முகத்தை நோக்கி, இர

க்கத்தோடு சொல்லுகிறாள். உன் கணவனுடைய பசிக்கு, அந்தப் பகவான் க்ருபை செய்து, வறுமை தீரும்படி பொன் கொடுக்கவில்லையோ என்று கேட்க, அவள் இல்லையென்று சொல்ல, கமலஜா, அப்படிப்பட்ட கடவுளைப் பஜனைசெய்து என்ன ப்ரயோஜநம், என்கணவர், தாயான ருக்மாயியை வணங்கி வாழ்த்த, அதற்காக அந்த ருக்மிணித் தாயார், ஒரு ஸ்பரிசவேதிக்கல்லைத் தந்து எங்களுடைய மிடியைத் தீர்த்தருளினாள். காயாத மரத்துக்கு நீர் வார்த்து என்னபயன் அடையலாம் என்று சொல்ல, ராசாயி, கமலஜாவை நோக்கி, உமக்கு ருக்மிணீ தேவியார் தந்த கல்லை நான் பார்க்க வேண்டும் என்று ப்ரார்த்திக்க, அப்படியே உனக்குக் காட்டுகிறேன், எங்கள் வீட்டுக்கு வாவென்று அழைத்துக்கொண்டுபோய், அந்தக் கல்லைக் காட்டி, இதைக் கொண்டுபோய், உன்வீட்டிலுள்ள இரும்புகளிலெல்லாம் பரிசித்துப் பொன்னுக்கிக்கொண்டு, இந்தக் கல்லைக் கொண்டுவந்து ஒருவருக்குந் தெரியாமல் என்னிடத்தில் கொடுத்துவிடு என்று சொல்லித் தந்து அனுப்ப, ராசாயி அதனை வாங்கி வந்து, தமது வீட்டில் தேடி இரும்புத்துண்டுகள் கிடையாமையால், தாம் தொழில் செய்கிற ஊசி, கத்தரி, இவற்றில் பரிசித்துப் பொன்னுக்கி, அதை விற்றுப் பெற்ற பொருளைக் கொடுத்து, அரிசி முதலியவற்றைத் தருவித்துச் சமையல் செய்துகொண்டிருக்கும்போது, நாமதேவர் வந்து, தமது தேவியார் செய்யுஞ் சமையல் முதலியவற்றைக் கண்டு, எப்போது மில்லாத ஆடம்பரம் செய்கின்றாயே, இதற்குக் காரணம் யாதென்று வினவ, ராசாயியார் உண்மையைச் சொன்னால் இவர் கோபிப்பாரென்று நினைத்து, அஞ்சி, கணவரை நோக்கி, உண்மையாக இந்தக் காரியத்தை விசாரித்தறிந்து கொள்வதனால் உமக்கு என்ன ப்ரயோஜநம்! நாள்தோறும் இந்தப்படியே நீர் அமுதுசெய்து, ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநம் செய்துகொண்டிரும் என்று சொல்லக்கேட்ட நாமதேவர், அதற்கு மன மகிழாமல், உள்ளபடி சொன்னு லல்லது நான் போஜநம் செய்யமாட்டேன் என்று சொல்ல, தேவியார் இவருடைய பிடிவாதத்துக் கஞ்சி, உள்ளபடி சொன்னாள், அப்போது நாமதேவர் அந்தக் கல்லை நான் பார்க்கவேண்டும், தடுக்காமல் காட்டுவாயாகவென்றார். தேவியார் அவர் சொல்லைத் தடுக்க அஞ்சி, அவர் காணும்படி காட்ட, அதை நாமதேவர் தமது கையில் வாங்கிப் பார்த்து, அதைச் சந்திரபாகாநதி ப்ரவாஹத்திலே எறிந்துவிட்டு, அந்த நதிக்கரைமேல் நின்று ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநம் செய்தார். அதைக்கண்ட கமலஜாவானவர், ராசாயியை நோக்கி, நீ கேட்டதற்குத் தடைசொல்லாமல் நான் கொடுத்த கல்லை இப்படி நதிநீரில் எறியும்படி உன் கணவன் கையிற் கொடுத்தது சரிதானோவென்று கோபித்துக்கொள்ள, அவரை அழைத்து வந்து தம் கணவரைக் காட்ட, பரிசாபாகவதரும் வந்து கேட்டு, இந்தக் காரியத்தை எப்படிச் செய்தீர் என்று சொல்லி வருத்தப்படுத்தி, ராசாயியையும் கடிந்துகொண்டார்கள். இப்படியிருக்க, கமலஜாவை வழியிலே எதிர்ப்பட்டவர்களுடைய முகத்தை நோக்கி, நான் கொடுத்த வொரு பொருளை என்கையிற் கொடுக்காமல் நதிப்

பெருக்கில் எறிந்துவிடுவது நன்மைதானோ என்று கேட்க, அவர்களிற் சிலர், ஸ்ரீஹரிபக்தருக்குப் பொன்னும் கல்லும் சமானமேயாமென்றார்கள். சிலர் எப்படியிருந்தாலும் இது நீதியல்லவென்றார்கள். ஒருவர் பொருளை வாங்கிவந்து நதியிலெறிந்துவிடுவதுதானோ தருமநீதியென்று சிலர் பேசிக்கொண்டார்கள். இவ்வாறு பலவகையாய்ப் பேசிக்கொள்ள, பரிசாபாகவதர் நாமதேவரை நோக்கி, எங்கள் பாக்கியமாயிருந்த கல்லை நீரிலெறிந்துவிடுவது தருமமோ வென்று கேட்டதுமன்றி, உம்மை இவ்வுலகத்தார் யாவரும் விரக்தர் என்கிறார்களே, விரக்தரானவர்களெல்லாம் இப்படிப்பட்ட அநியாயம் செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றதோ என்று இப்படி பலவாறு நிர்ப்பந்திக்க, நாமதேவர்,பாகவதர் முகத்தைப்பார்த்து,பிராட்டியார்க்கு அன்பராயிருப்பவரே, உமதுமனம்அந்தக் கல்லை விரும்புமானால், இதோ இந்தமடுவில் அநேகங் கற்கள் கிடக்கின்றன, முழுகியெடுத்துக்கொள்ளும்என்றுசொல்லக் கேட்டவர்களெல்லாரும், ஆற்றின்மடுவிலே கிடக்கிற கற்களெல்லாம் பரிசக் கற்களோ என்று சொல்லிச் சிரித்தார்கள். அதைக்கண்ட நாமதேவர், ஆற்று நீரில் முழுகி, அங்குக் கிடைத்த கற்களையெல்லாம் கைநிறைய வாரியெடுத்து வந்து, உம்முடைய சிறந்த பரிசக் கல்லைச் சோதித்து எடுத்துக்கொள்ளுங்கள் என்றார். அப்போது பரிசாபாகவதர் அந்தக் கற்களைச் சோதித்து, எல்லாம் பரிசக் கற்களா யிருக்கக் கண்டு, பாகவதர் முதலிய யாவரும் அதிசயித்து, நாமதேவரை வாழ்த்தி வணங்கினார்கள். பிராட்டிக்கு அன்பராகிய பரிசாபாகவதர், ஹரிதாசராகிய நாமதேவரைத் துதித்து வணங்கிச் சொல்லுகிறார். ஸ்ரீஹரிபக்தியிற்சிறந்த நாமதேவரே! உமது மஹிமையை நான் அறியவல்லேனல்லேன், பெரிய பிராட்டியாரைப் போற்றி ஒரு பரிசக் கல்லைப் பெற்றேன், அந்தக்கல்லைப்பெற்ற பெருமையால் உமது க்ருபைக்குப் பாத்ரனல்லாமற் போனேன்; ஆனாலும், இப்போது என் அபராதங்களையெல்லாம் மன்னித்து எனக்கு ஞானோபதேசம் செய்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, நாமதேவர் அவர் ப்ரார்த்தனைக் கிரங்கி,அவர் கையிலிருந்த கற்களை நதியிலெறிந்துவிட்டு, அவர் சிரசின்மீது கையை வைத்து ஞானோபதேசம் செய்தருள, பரிசாபாகவதரும் அவ்வுபதேசத்தைப் பெற்று, நாமதேவருடைய அடியார்களில் ஒருவராய்ச் சிறந்து விளங்கினார் என்று சிவபெருமான் பார்வதி தேவியார்க்குச் சொல்லி, மேலே ஜகமித்திரர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பரிசாபாகவதர் சரித்திரம் முற்றிற்று.

# கக-வது ஜகமித்திரர் சரித்திரம்.



பரளி யென்னும் ஊரில், வேதியர் குலத்தில் ஜகமித்திரர் என்றொருவர் அவதரித்தார். அவர் வைஷ்ணவராகி, யாசித்துத் தானியங்களைச் சேகரித்து, அதைக் கொண்டு நாள்தோறும் குடும்ப ரக்ஷணஞ் செய்து வருங் காலத்தில், பொருளில் விருப்ப மில்லாதவராய், ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம செய்தலையே பரம புருஷார்த்தமாய்க்கொண்டு ஒழுகும் நாளிலே, அந்த வூரிலுள்ளவர்கள் இவருடைய மஹிமையைத் தெரிந்துகொண்டு, இவர் இந்த மானுட ஜாதியிற் சேர்ந்தவரல்லர்; எந்தத் தேவர் இந்த அவதாரம் செய்தனரோவென்று புகழ, சிலர் இவர் சாது சர்ஜனரோ, அப்படியானால் இவரது சாமர்த்தியத்தையும், சாந்தகுணத்தையும யாம் காண்போமென்று வாதுசெய்யவந்து, தாம் கற்ற வற்றைச் சொல்லி, இவரை வருத்தி மானபங்கம் செய்தும, அதைச் சற்றும் மதிக்காதவராய், ஞான வைராக்கியங்களால் விளங்குகின்றவரா யிருப்பதை, அவிவேகிகளாகிய சிலர் கண்டு, பொறாமை யுள்ளவர்களாய், இவருடைய மனம் நிலை கலங்குதற் குரிய காரியங்களைச் செய்ய நினைத்து, ஒருநாள் இவர் தமது திரு மாளிகையில் மனைவி மக்கள் முதலானோரோடு கண் ணுறங்கும் போது, அந்தத் திருமாளிகையில் தீமூட்டி விட்டார்கள். அந்தத் தீயானது வீடு முழுதும் எரிக்க, படுத்துக் கண்ணுறங்கின தாசர் கண் விழித்துப் பார்த்து, அந்தத் தீயை யவிப்பதற்கு ஒரு உபாயமுந் தோன்றாமல், பண்டரிநாதனைத் தோத்திரம் செய்தார். இப்படித் தோத்திரம் செய்கிற ஜகமித்திருடைய துன்பத்தைத் தணிக்கும பொருட்டு, பகவானானவர், திரு வாழியை யேந்திவந்து உறங்குகிறவர்களைத் தீ வருத்தாமல் முன்னேசக்கரத்தால் தடுத்துக் காத்தருளினார். அன்று இராக்காலத்தில் தீயானதுகொழுந்துவிட்டெரிவதனால் அந்த வெளிச்சத்தை ஊராரெல்லாருங்கண்டு எழுந்து அவ்விடத்திற்கு வந்தார்கள். வந்து ஜகமித்திரர் குடும்பமுழுதும நெருப்புக்கு இரையாயிற்றே யென்று ஒருவரோடொருவர்சொல்லிக்கொண்டு துக்கித்திருக்க சூரியோதயமாகி, தீயும் தணிந்து, வீட்டுக்குள்ளே தூஙகிக்கொண்டிருந்த குடும்பமும் விழித்து, திருப்பாற்கடலில் அறிதுயிலமர்ந்த ஸ்ரீஹரியின் திருநாமஸங்கீர்த்தனம்செய்து கொண்டிருக்க, ஊரிலுள்ளவர் யாவரும் வந்து, இந்தக் குடும்ப முழுதும் தீயிலகப்பட்டும் வெந்துபோகாமலிருப்பதைக்கண்டு, இப்படியிவர்கள் இந்தப் பெரு நெருப்பில் வேகாதிருப்பதை நோக்குமிடத்தில், அன்று அரக்கு மாளிகையில் தீப்பட்டபோது பாண்டவர் இறவாமல் காத்தருளின ஸ்ரீகண்ணபிரானே இன்று இவர்களைக் காத்தருளினார் என்று துதித்து, வணங்கி, பிறகு எல்லாரும்கூடி, இவருடைய பெருமைக்கு என்ன எல்லைகுறிக்கலாம். இவர் குடும்பத்தை நாம் காப்பாற்றுவதே நமக்கு நன்மையாகும் என்று நினைத்தவனாகிய வைத்தியநாதனிடத்தில் பலரும் வந்துசேர்ந்து, இவ

ரது குடும்பப்பாதுகாப்பின்பொருட்டுச்சிறிதுநிலந்தருவோமென்று சொல்லி யாவரும் ஒருங்கு கூடி, தாசர் திருமாளிகையை யடைந்து, இந்தச் செய்தியைச் சொல்லக்கேட்ட தாசர்,இந்தஉலகங்களெல்லாவற்றையும் தன்குடும்பமாகப்பெற்றவனுகிய பகவான் ஒருவ னிருக்கும்போதுனைக்கு ஒருகுறையுமில்லையென்று சொல்லி, யாதொருபந்த மில்லாத என்னைப் பந்தத்தில அகப்படுத்தும் பொருட்டு, நீங்கள் சொல்லுகின்றீர்கள் என்று சொல்ல, அவர்களெல்லாரும் நல்லது நல்லது என்று, பலாத்கரித்து, அவர் பேரால் ஒரு ஆறையெழுதிக் கொடுத்தார்கள். தாங்களே அந்த நிலத்தினில் பயிர் செய்து கொடுக்கவும் இசைந்தார்கள்; அப்படியே சிலகாலங்கழிந்த பிறகு, அரசனால் ஒரு துருக்கன் அவ்விடத்துக்கு வந்து அதிகாரியாய் நியமிக்கப்பட்டான். அப்படி நியமிக்கப்பட்டவன் வந்து எல்லாவற்றையும் விசாரித்து, வயித்தியநாதனுடைய சொந்த நிலமானது, ஊரிலுள்ள ஜக மித்திரருக்கு எவ்வாறு சொந்தமாயிற்று என்று,அரசனுக்கிசையும்படி சொல்ல, அவனும் முன்னே தந்தவரை யெல்லாம் தடுக்க, அவர்களெல்லாரும் முற் காலத்தில் நாங்கள் ஜகமித்திரர் என்னும் தபோதநர்க்குக் கொடுத்த தர்ம நிலத்தைத் தடுத்து, அரசனுக்கு உரியதாக்குதல் பொருத்த மல்லவென்று சொல்ல, அவ்வரசன் அடங்காமல் உலோபகுணத்தையே மேற்கொண்டிருந்தான். பின்னும அந்த ஜகமித்திரர் பெருமையைக்கேட்டு வந்து அவர் வீட்டைச் சோதிக்கத்தொடங்கி, அவரை நோக்க, நீர் ஜகமித்திரரானால், இவ்வுலகத்தில் உமக்குப் பகையானவர் ஒருவருமில்லையோ? அப்படி இவ்வுலகத்தார் பகை யில்லையானால் என் மகளுக்கு மணம் நேரிட்டது; அதற்கேறக, பரிசுத்தமான தேவபூஜை செய்யவேண்டும்; அதற்கு ஒரு புலி வேண்டும்; அதனை நீர் சேகரித்தருளுவீராக என்று ப்ரார்த்திக்க, அப்படியே யாகட்டுமென்று தாசருமெழுந்து, காட்டுக்குப்போய், ஒரு இடத்திலிருந்துகொண்டு, பண்டரிநாதனை நினைத்து அவரதுதிருநாமங்கள் பலவற்றையும் உச்சரித்து, பகவானே நீர் இன்றுபுலியுருவங்கொண்டு எழுந்தருளவேண்டுமென்றுவேண்டிக்கொள்ள, அப்படியே பண்டரிநாதரும் புலியுருவாயெழுந்தருளி, தாசரே! உமக்கு என்ன தீமை நேரிட்டது சொல்லுவீரானால், அந்தத் தீமை செய்தவனைக்கொன்று புசித்து விடுவேனென்று சொல்ல, ஜகமித்திரர், நல்ல புலியுருவாய்வருகிற என் தலைவனே! உன்னையல்லாமல் எனக்கு வேறொரு ஆதரவுண்டோ என்று இவ்வாறு பலவிதமாகத் தோத்திரம்பண்ணி, ஓ பத்மநாபா! எம்மூரில் ஒரு அதிகாரி, தன்மகளுடைய விவாஹத்துக்கு அநுகூலமாக, தேவதாபூஜைக்கு ஒரு புலி வேண்டியதாயிருக்கின்றது; தவறாமல் அதைக்கொண்டு வாரும் என்றெனக்கு நியமித்தான். ஆதலால் இந்தக் காட்டில்வந் திருந்துகொண்டு தேவரீரை யழைத்தேன். நீர் அன்போடு வரவேண்டுமென்று சொல்லிப் புலியுருவான அந்தக் கண்ணபிரானது கழுத்தில் தமது உத்தரியத்தை முறுக்கிக் கட்டி இழுத்துக்கொண்டு தாம் இருக்கும் ஊர்க்குள் பிரவேசித்தார். இவர் புலியைக் கைக்கொண்டு வருவதைக்கண்ட யாவரும்எதிரேநிற்கப்பயந்து ஓடி

இவரை ஊர்க்குள் வரவொட்டாமல், அரண்மனை வாசற்கதவை அடைத்தார்கள். அப்போதுஜகமித்திரருக்குச் சினேகராய் இருப்பவராகிய பலரும் உயர்ந்த மரங்களின்மேலேறிப் பார்த்து, தாமரைக் கண்ணனுகிய பகவானுக்கு தாசராயுள்ளவரே! நீர் புலியைக்கொண்டு இங்குள்ளவரையெல்லாங் கொலைசெய்யவோ வருகிறீர் என்று கேட்டார்கள். அதற்குத் தாசரானவர் அவர்களை நோக்கி, நீங்கள் அஞ்சவேண்டாம்; இது புலியல்ல. பாண்டுரங்கப்பெருமானே இவ்வாறு புலி யுருக்கொண்டு எழுந்தருளினர். இவ்வூர் அதிகாரியை மெய்ப்பிக்கவேண்டி இங்குவந்தேன் என்று சொல்ல, அதைக் கேட்டவர்கள் போய், விஷம்போன்ற கொடுமையையுடைய துருக்கனுக்கு இந்தச் செய்தியைச் சொன்னார்கள். கேட்ட அந்தத் துருக்கன், நடுங்கித் தன் வீட்டுக் கதவை மூடிக்கொள்ள, புலியைக்கொண்டுவந்ததாசர், மதிற்கதவடைத்திருப்பதை நோக்கி மயங்கி நிற்க, புலி வடிவாய் வந்த பகவானனவர், தமது கையால் அந்தக் கதவை யுடைத்து வழி யுண்டாக்கிக் கொடுக்க, அவ்வழியாகத் தாசர், உள்ளே நுழைந்து, அந்தத் துஷ்டன் வாழ்கின்ற வீட்டு வாசல் முன்னே நின்று நோக்கி, அந்த வீட்டுக் கதவும் மூடப்பட்டிருப்பதைப் பார்த்து, இதென்ன விபரீதம் என்று ஆலோசித்து, பின் சினேகனே! நீ முன்னே சொன்னபடிக்குப் புலியைக்கொண்டுவந்தேன் என்று சொல்லுமுன்னே, அப்புலியானது உறுமிக்கொண்டுவாலைநிலத்திலறைந்து ஆரவாரஞ்செய்ய, இத்தச்சத்தத்தைத் துருக்கன் கேட்டுப் பயந்து, பெண்டுபிள்ளைகளைத் தழுவிக்கொண்டு அழத் தொடங்கினன். அப்போது அவன் மனைவியானவள், அவனை நோக்கி, என் பிராணநாதா! நீ மிகவும் வயது சென்றவனுகையால் உன் மரணத்துக்குத்துக்கிப்பவர் இங்கே ஒருவருமில்லை; ஆதலால் நீவெளிப்பட்டு அந்தப்புலிக்கு இரையாய்விடுவாயானுல் நாங்களெல்லாரும் பிழைப்போம் என்று சொல்ல, அந்தப் புலிக்குப்பயந்து ஒளித்துக்கொண்டதுஷ்டனுகிய அந்தத்துருக்கன் அதற்கு உடன்படாமல் அழுதுகொண்டிருக்க, இவன் அழுகிற ஓசையை அவ்வூரிலுள்ளார்கேட்டு மனங்களித்துநகைக்கத் துருக்கன் மனங்கலங்கி, தாசரே! என்னை இந்த ஆபத்தில் நின்றும நீக்கி ரக்ஷித்தருளவேண்டும், நீர் ஜகமித்திரர் என்பதை நான் அவிவேகத்தால் அறியாதவனுகி இப்படிப்பட்ட அபராதத்தைச்செய்தேன், க்ஷமித்தருளவேணடும என்று ஸ்தோத்திரம் பண்ணி, கைகுவித்து அஞ்சலிசெய்து நிற்க, ஜகமித்திரரானவர், அவன்மீது அருள்கூர்ந்து, ஒப்பற்றதாகிய அந்தப் புலியைக்கொண்டு ஊரைக் கடந்து சென்று காட்டிற்பிரவேசித்துஒருதனியிடத்தை யடைந்தவுடனே, ஸ்ரீகண்ணபிரான் நான்கு திருக்கைகளோடு திருவுருவங்கொண்டு பிரத்தியக்ஷமாக ஜகமித்திரரானவர், அந்த பகவானுடைய பொன் னடியை வணங்குதலும், தேன் துளிக்கின்ற திருத்துழாய்மாலையையணிந்த ஸ்ரீகண்ணபிரான் இவரைத் தழுவிக்கொண்டு பரிபூரண கடாக்ஷம் செய்தருளினன் என்று சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லி, மேலே ஜனாபாயமாநந்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

ஜகமித்திரர் சரித்திரம் முற்றிற்று.

# ௧௨-வது ஜோகாபரமாநந்தர் சரித்திரம்.

சர்வாலங்காரங்களும் அமைந்த பாரசி என்னும் ஊரில் அவதரித்த ஜோகாபரமாநந்தர் என்கிற திருநாம முள்ளவர் ஒருவர் இருந்தார். அவர் பரம பாகவதரும், சிறிதுநேரமும சோர்வில்லாமல் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநஞ்செய்பவரும், ராம நாமாம்ருத பாநம் செய்கின்ற திருநாவை யுடையவரும், குற்றமற்றசற்குணங்களை யுடையவருமாய், யாசகஞ்செய்து தமதுகுடும்பபரிபாலநம் செய்துகொண்டு, எந்நாளும் ஸ்ரீஹரியின் திருவடிகளுக்கு ஷோடசோபசாரங்களும் செய்து, முறைமையாய்ப் பூஜிக்கவேண்டிய நெறியோடு பூஜித்து அதன்பிறகு, எழுநூறு நமஸ்காரம செய்து, ஸ்ரீகண்ணபிரான் திருவாய்மலர்ந்தருளின ஸ்ரீபகவத்கீதையின் ஒரு சுலோகத்தை பாராயணஞ்செய்து அதன் பின்பு வந்து அமுது செய்வார் இப்படியே இவர் நாள்தோறும் செய்து வருவது வழக்கமாயிருந்தது. இப்படிச் செய்து வருவதில் ஏதாகிலும் பிசகு நேரிட்டால் அந்தத் தின முழுதும உபவாசமா யிருந்துவிடுவார். இவரைப் பார்த்து அருகே குடி யிருப்பவர் இரக்க மடைவார்கள். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள் மழைபெய்து இவர் வாசல் முழுதும சேறுகிக்குழம்பாயிருக்க, இவர் தமது வழக்கம்போலத் தாம நமஸ்கரிக்கும் கொள்கையில் தவறுதவராய், சக்ரபாணியாகிய பகவானைத்தம மனதிலிருத்திக்கொண்டு நின்றனர். இவ்வாறு ஸ்ரீ ஹரிபாததாசராகிய ஜோகாபரமாநந்தர் செய்யும்செயல்களெல்லாவற்றையும் அக்குடியானவர் அறிந்து, ஸ்ரீலக்ஷ்மீ நாதனே இவர் என்று மதித்து, அவர்களுள் ஒருவன் விரைந்து கடை வீதிக்குப்போய், ஒரு பொன்னுடையை வாங்கிவந்து தாசர்கண்ணுற நோக்கும்படிகாட்டி, நீர் இந்தப் பொன்னுடையைக் கைக்கொள்வீராக என்று பிரார்த்தித்தான். இந்தப் பகவத்தாசரானவர், அந்தப் பொன்னுடையை விரும்பாதவராகி, இது அதிக விலையுள்ளது, வேறே பழைதாகிய துணியிருந்தால் எனக்குக் கொடும் என்று சொல்ல, அவன் மிகவும ஆச்சரியமும் இவர்மீது அன்புங்கொண்டவனாய், இவரது அரையில் அந்தப் பொன்னுடையை அழகாக உடுத்திவிட்டுப் போயினான். அப்பால் மேகவண்ணனாகிய பகவானது இரண்டு திருவடிகளையும் எக்காலத்தும் மறவாதவராகிய தாசரானவர், தாம் தடுத்தும கேளாமல் தமது அரையில் பொன்னுடையை உடுத்திவிட்டுப் போனவனது நற்குணத்தை நினைந்து, அந்த ஆடையை மிகவும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றி, அதில் சேறுபட்டால் பழுதாகுமென்று நீழே தொங்காமல் அரையில் உடுத்திக்கொண்டு, ஸ்ரீகண்ணபிரானைத் தேகாபிமாநத்தைவிட்டு முன்புவணங்குவதுபோல வணங்காமல் ஆடைமேல் மிகுதியாகிய அபிமாநம்வைத்து நமஸ்கரித்தலால் சூரியாஸ்தமனம் ஆகியும எழுநூறு நமஸ்காரங்கள் முடியாமையால் மனத்தில் வருத்தமடைந்துபகவானைப் பூஜிக்குங்காலம் அதிகரித்ததற்குக்காரணம் இந்த ஆடையல்லவோஎன்று மனத்தில் ஆலோசித்து, இந்த அநர்த்த ஹேது

வான அபராதம் நீங்குவதற்கு இந்தச் சரீரத்தை வாளினால் பிளப்போமா, அன்றித் தீயில் அமிழ்த்தி விடுவோமா என்று பலவாறு நினைந்து அழுது செய்யாமல் தமது மனைவியைவிட்டு நீங்கி, மனத்துக்கிசைந்த வேறோரிடத்தில்போய்த் தங்கியிருக்கும்போது, அவ் வழியாக ஒரு உழவன் பெரிதாகிய ஒரு நுகத்தடியைக் கைக்கொண்டு இரண்டு காளைகளையும் ஓட்டிக்கொண்டு போனான். அப்படி நிலத்தை உழுதற்பொருட்டுக் காளைகளை ஓட்டிக்கொண்டு போகிற உழவனைத் தாசரானவர் பார்த்து, துன்பத்தோடு, ஓ உழவனே! உன்னுடைய இரண்டு காளைகளையும் எனக்குக் கொடுத்து அவற்றிற்கு உரிய விலைப்பொருளாக இந்தப் பீதாம்பரத்தை நீ கைக்கொண்டுபோ என்றார். அதைக் கேட்டவுடனே அவ்வுழவன் மனமகிழ்ந்து, மாடுகளிரண்டையும் கொடுத்தான். அப்படிக் கொடுத்தவுடனே தாசரானவர் அவ்வுழவனைநோக்கி, என் கால்களிரண்டையும் கயிற்றாற் கட்டி நுகத்தில் ஏர்க்காலுக்கு நிகராக அநேக கயிறுகளைச் சுற்றிக்கட்டி, மாடுகளை ஓட்டிக்கொண்டு போவாயாக என்று சொன்னார். அதைக்கேட்ட உழவன் இது செய்தற்கரிய செய்கையாயிருக்கிறதேயென்று அறியாதவனாதலால் இவர் தந்த பொன்னாடையைக் கைக்கொண்டு, இவர்சொன்னபடியேசெய்ய, அவ்வெருதுகளிரண்டும் இழுத்துக்கொண்டு போகிற வழியில் உள்ள கல்லும் முள்ளுமபட்டு, உடம்பிலுள்ள சதை முழுதும் தேய்ந்து நரம்பும் எலும்பும் வெளிப்பட்டுத் தோன்றச் சரீர முழுதும் உதிரம் பெருகிவழிய, தாசரானவர் இன்று நாம் செய்த பெரிய அபசாரம் தீரும்படி நேரிட்டது என்று, தமக்கு நேர்ந்த துன்பத்தை எள்ளளவும் மனத்திற்கொள்ளாமலும் ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணையை மறவாமலும் இருந்துகொண்டு மிகுதியாய் நிலத்தில் தேய்க்கப்பட்டு உயிர் நீங்கும்படியான நிலையையடைந்தார். அப்போது கஜேந்திராழ்வானுடைய மிக்க துன்பத்தை நீக்கியருளின கருணைக் கடலாகிய ஸ்ரீபகவான், விரைவாக ஓடிவந்து, எருதுகளை நிறுத்தி, கட்டுகளை யவிழ்த்துவிட்டு, தாசருடைய சரீர முழுதும் தமது திருக்கரத்தால் தீண்டித்தடவுதலும், தாசரானவர் துன்பமெல்லாம் தீர்ந்து சரீரம் முன்போலத் தேஜோமயமாய்ப் பிரகாசிக்க நின்றார். அப்படி நின்றவரைப் பகவானானவர் கடாக்ஷித்து, பேரறிவையுடைய தாசரே! உம்மிடத்தில் சிறிதும் குற்றம் இல்லாமலிருக்க உமது சரீரத்தை இப்படி ஏன் வருத்தினீர், என்னடியார்கள் உண்பதே எனக்குக் கொடுக்கப்படுகிற நல்ல அவியுணவாகும், அவர்கள் பேசும்பேச்செல்லாம் எனது ஸ்தோத்திரங்களேயாகும், அவர்கள்செய்யும் கைத்தொழில்களெல்லாம் சிருமுத்திரையேயாகும், அவர்கள் நடப்பதெல்லாம் என்னை வலம்வருவதேயாகும், அவர்கள் படுத்துறங்குவதெல்லாம் என்னை அன்போடு வணங்குதலேயாகும், அவர்கள் களிப்படைவது எனது இன்ப வுருவாகும், இப்படி அவர்கள் சம்பந்தமானவை யெல்லாவற்றையும் போக்கியமாகக்கொண்டு மகிழ்ந்திருப்பவனாதலால் அவ்வடியார்களுள் ஒருவராகிய உம்மை நான் நோக்கிநிற்க, நீர் ஏன் இப்படிச்செய்தீர் என்று இவ்வாறு அன்புருவமாய் எதிரே நிற்கிற பாண்டுரங்கப்பெருமானது நிஜ

ரூபத்தைத் தாசரானவர் கண்டு, அவரது திருவடியில் வீழ்ந்தும், பலவாறு ஸ்தோத்திரம்பண்ணியும், ஒப்பற்ற கருணைக்கடலே இன்று அடியேனுக்குக் கிருபை செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தவுடனே, சார்ங்கபாணியான பகவான் அப்படியே அருள் செய்து, தமது திருக்கோயிலை யடைந்து, தாசர் செய்த செய்கையைத் தமது அன்பரெல்லாருக்கும் சொல்லக் கேட்டுநின்ற ஞானதேவர், பகவானை நோக்கி, ஸ்வாமீ! உமது அடியார்கள் செய்கை எக்காலத்தும் யாவராலும் சொல்லுதற்கு எளிதாகுமோ என்று புகழ்ந்து நின்றார் என்று சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லி, மேலே நரஹரி பக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஜோகாபரமாநந்தர் சரித்திரம் முற்றிற்று.

---

## ௧௩-வது நரஹரிபக்தர் சரித்திரம்.

பரம்பொருளாகியதிருமால் நித்திய வாசம்பண்ணுகிற பண்டரிபுரத்தில் அவதரித்து, நரஹரியென்னும் பெயர்பூண்ட பொற்கொல்லர் ஒருவர் இருந்தார். அவர் சிவபெருமானாகிய மல்லிகார்ஜுநனை அன்பின் மிகுதியால் என்றும் மறவாமல் பூஜைசெய்து ஒழுகுவார். இவர் குடக்கூத்தனாகிய ஸ்ரீகண்ணபிரானது திருக்கோயிலுக்குச் சமீபமாயிருந்தாலும் அவ்வழியாக நடந்தாலும் சர்ப்ப சயநனாகிய பகவானைக் கண்ணெடுத்துப் பாராமல் அடத்துடன் வாழ்ந்துவரும் நாளிலே மிகுந்தபொருளுடையவனாகிய ஒருவணிகன், தேவர்களெல்லாருக்கும் ஒரு நிட்சேபம்போல விளங்குகின்றவனும் திருத்துழாய் மாலையையணிந்தவனுமாகிய ஸ்ரீமந் நாராயணனது திருக்கோயிலில் வந்து தோத்திரஞ்செய்து, லோகநாதனே! அடியேனுக்கு ஒரு சற்புத்திரனைக் கிருபை செய்தருளவேண்டுமென்று சொல்லி, வணங்கித் தன்மனைக்குப் போயினன். போனபிறகு, சிலநாள்கழிய ஸ்ரீலக்ஷ்மீநாயகனென பகவானது கிருபாவிசேஷத்தால் ஒரு புதல்வன் தோன்றினன். அவனது சௌந்தரிய விசேஷத்தைக்கண்டு, அவ்வணிகன், திருமறுமார்பனாகிய ஸ்ரீகண்ணபிரானது கிருபையை மிகவும் வியந்து கொண்டாடி, பெருங்களிப்போடு அந்தக்கண்ணபிரானுக்கு நவரத்தினங்களிழைத்த அரைஞாண் ஒன்றுசெய்து சாத்தவேண்டுமென்கிற ஆசையுடன் கோயிலைச் சேர்ந்து எம்பெருமானைத் தொழுது, தோத்திரஞ்செய்து நின்று, அங்குள்ள அர்ச்சகரை நோக்கி, இவ்வூரில் நற்குணமுள்ளவனும் பொன்னரைஞாண் செய்யத் தகுந்தவனும் ஆகிய ஒருபொற்கொல்லன் இருந்தால் அவன் இன்னானென்றும், இன்ன இடத்தி லிருக்கிறானென்றும் எனக்குத் தெரிவிப்பீர்களானால், அவனைக்கொண்டு நவரத்தின கசிதமாகிய ஒரு பொன்னரைஞாண்செய்து இந்தக்கண்ணபிரானுக்குச் சமர்ப்பிக்கிறேன் என்று கேட்க, அவர்கள் இந்தக் கோயிலின் அருகே எல்லாரும் மெச்சத்

தகுந்த சமர்த்தனாகிய ஒரு பொற்கொல்லன் இருக்கிறான், நாம் விரும்பின படியே செய்வதற்கு அவனைப்போல வேறொருவருமில்லை என்று சொல்லக் கேட்ட வணிகன், அந்தக் கம்மியனைக்கண்டு, லக்ஷ்மீநாதனுக்கு ரமணீயமான ரத்நகடி சூத்திரம் ஒன்று செய்து தரவேண்டும் என்று சொல்லுதலும், அக்கம்மியன், அந்தப் பகவானுடைய திருவரையின் அளவினை அறிந்துவந்து சொல்லும் என்றான். வணிகன் அப்படியே அளவெடுத்துத் தர, கம்மியன் வணிகன் விரும்பினபடியே கண்டோர் அதிசயிக்கும்படியான விசித்திரமான வேலைப்பாடமைந்த நவரத்நமயமான பொன்னரைஞாண் செய்துகொடுத்தான். வணிகன் அதனைவாங்கிக்கொண்டுவந்து, எம்பெருமானை அர்ச்சித்துத் தோத்திரம்பண்ணி வணங்கித் திருவரையில் சமர்ப்பிக்க, அது எம்பெருமானது திருவரைக்குச் சிறிது பற்றாமலிருக்கக்கண்டு, கம்மியனிடத்திற்குக் கொண்டுபோய், அவனை மனமகிழும்படி இன்சொற் சொல்லிச் சரிப்படுத்திக் கொடுக்கவேண்டுமென்றுவேண்ட, அவன் அப்படியே சரிப்படுத்தித்தந்தான். அதனைக் கொண்டுவந்து பெருமானுக்குச் சமர்ப்பிக்க, அது அதிக நீளமாயிருந்ததனால் மீண்டுமெடுத்துக்கொண்டு கம்மியனிடத்துக்குப்போய், இந்தச் செய்தியைச் சொல்ல, அவன் அதைச் சிறிது குறைத்துக் கொடுக்க, வாங்கி வந்து சமர்ப்பித்தபொழுது பற்றாதிருப்பதைக் கண்டு, அழுதுகொண்டே மீண்டு, நீட்டினால் குறைவதும் குறைத்தால் நீளுவதுமாயிருக்கிற இந்த அதிசயத்தை நோக்கி, நான் எவ்வளவோ பொன்போடு மிகுதியாகிய பொருள் செலவு செய்து சமர்த்தனாகிய கம்மியனைக்கொண்டு செய்வித்தும், இவ்வரைஞாண் ஸ்ரீகண்ணபிரானுக்குச் சாத்தத் தகாததாய்ப்போவது என்னகாரணத்தினாலேயோ! பகவானுக்கு இதனிடத்தில் விருப்பமில்லையோ! அடியேனிடத்தில் ஏதேனும் அபராதம் நிகழ்ந்ததுண்டோ! அறிந்திலேன் என்று மனம்வருந்தி மீளவும் வந்து கம்மியனைப் பிரார்த்தித்து, நீயே அத்திருவரையின் அளவெடுத்துவந்து செய்வாயானால் சரியாகமுடியும் என்றுசொல்ல, அந்தக்கம்மியன், நீண்ட ஜடாபாரத்தையுடைய நிர்மலராகிய சிவபெருமான் சந்நிதிக்கேயன்றி சேஷசாயியாகிய ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியின் சந்நிதிக்கு நான் வரமாட்டேன் என்று சொல்லினான். சொன்னவுடன், வணிகன் மிகுந்த துன்பத்தையடைந்து, கம்மியனை நோக்கி, ஐயா! நீ தயைசெய்து என்ஆசையை நிறைவேற்ற வேண்டும், நிறைவேற்றினால் உனக்குப் பெரும்புண்ணியமுண்டு என்று வாழ்த்தி வாவென்றழைத்துக்கொண்டு கோயிலையடைந்தனன். அடைதலும், வந்த கம்மியன், தன் கண்கள் மறையும்படி வஸ்திரத்தால் கட்டிக்கொண்டு அளவு பார்க்கத் தொடங்க, முன்னிற்பவனாகிய வணிகன், அவனது கையைப் பிடித்துத் திருவரையைத் தீண்டுதலும், அங்கிருந்து பார்த்தவர்களாகிய அர்ச்சகர் முதலாயினோர், எல்லாப்பொருள்களிலும் சிறந்த பரஞ்சோதி சொரூபராகிய பகவானை உற்று நோக்குதற்கு ஆயிரங்கண்கள் வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். அப்படியிருக்க, இக்கம்மியன், தனது இரண்டு கண்களையும் மூடிக் கட்டிக்கொண்டு வந்தது யாது காரணமோ என்று கோபித்து, கண்க

ளில் நெருப்புப் பொறிசிதறநின்று, சாஸ்வதமாகிய பரமபதப்பிரதாநம் செய்கிற கற்பகத் தருவென்று சொல்லும்படி எழுந்தருளி யிருக்கிற ஸ்ரீ கண்ணபிரானது கட்டழகு இவன் கட்புலத்தால் தரிசிக்கத் தகாததே யாதலாலும் அவரது ஜ்ஞாநாநந்தமயமாகிய ஸ்வரூபம் கட்புலனால் அறியப்படாததேயாதலாலும் நாம் பலபல வார்த்தைகளைச் சொல்லி என்ன பிரயோசநம் என்று கம்பியனை வைதுகொண்டிருந்தார்கள். அப்போது கம்பியன்வந்து நிர்மலராகிய பகவானுடைய திருமேனியைத் தீண்டுதலும், புலித்தோலும், யானைத்தோலும், நீண்டசடையும், நெருப்புருவமாகிய நெற்றிக்கண்ணும், மழுவும், துடியும், மானும் விளங்கித்தோன்ற, இவன் துணுக்கென்றஞ்சி, கண்களைத் திறந்து பார்த்து, தனக்கு எதிரே காணப்படுகிற திருத்துழாய் மாலையையும், திருவரையில் வைத்த திருக்கைகளையும், செங்கல்லின்மீது அமர்ந்து விளங்குகின்ற திருவடிகளையும், நீலமணிபோலும் திருநிறத்தையுடைய திருமாலின் உருவத்தையும் கண்டான். கண்டவுடனே முன்போலவே கண்களைமூடினான். அப்போது தீண்டின இவனது கைகளுக்கு அந்தச் சிவபெருமானது அவயவங்களாகவே காணப்பட, மறுபடியும் தன் கண்களைத் திறந்து, மாகதமலையை நிகர்த்த பசும்பொன்மயமான சோதி சொரூபனாகிய பகவானைக் கண்டு இதென்ன அதிசயம்! கண்களை மூடினால் சிவரூபமாயும், திறந்தால் விஷ்ணுரூபமாயும் காணப்படுகின்றதே என்று மிகவும் மயக்க மடைந்து, எதிர்நிற்க அஞ்சி, தனது இரண்டு கண்களிலும் ஆநந்தக் கண்ணீர் ததும்ப நோக்கி, திருத்துழாய் மணங் கமழ்கின்ற திருவடிகளை வணங்கி, அநேகவிதமாய் மனவுருக்கத்தோடு தோத்திரஞ்செய்து, சிவபெருமான் உன்னைவிட வேறானவனென்று நான் நினைத்திருந்த நினைப்பானது பொய்யாகி, நீயே அவனாகவும் அவனே நீயாகவும் பிரத்தியக்ஷமாகக் காணப்பட்டதனால் என் மனத்தில் நிலைபெற்றிருந்த சந்தேகமுழுதும் இன்று நீங்கிவிட்டது; ஆதலால், அவனே நீ, நீயே அவன் என்பதற்குச் சந்தேகமில்லை. ஸ்ரீமகாலக்ஷ்மியைத் திருமார்பிலேயுடைய பகவானே, சிவரூபம என்னுள்ளே அடங்கச் செய்வாயானால் இந்தப் புவநங்களெல்லாவற்றையும் உனது திருநாபீகமலமானது தந்ததென்பதற்குச் சந்தேகமே யில்லை யென்று சொல்லித் தாழ்ந்து வணங்கினான். அப்போது பகவானனவர் அவன் முகத்தை நோக்கி, ஓ அன்பனே! சிவபெருமான் என்னைவிடவேறானவனென்று நீஎண்ணவேண்டாம், உன்னால் தொழப்படுவோனாகிய சதாசிவமூர்த்தி என்னிடத்தில் காணப்படுவான், அவனை நீ கண்டு வணங்குவாயாக என்று சொல்ல, அப்படியே கம்பியன் உற்றுப் பார்த்துக் கண்ணபிரானது சிரத்தின்மீது சிவலிங்கங்கள் விளங்கக் கண்டு, பூமியின்மேல் விழுந்து வணங்கி, க்ஷீராப்திநாதனாகிய அந்தப் பகவானுடைய திருவடியை அன்று முதல் விடாமல் ஆசிரயித்து, உலையில் வைத்துருக்கப்பட்ட பொன்போல மனமுருகி, பகவத் விஷயத்தில் பற்றுள்ளவனாய் இருந்தான். அப்படியிருந்தவனை நோக்கி, குற்றமற்ற ததீயாராதநபரராகிய நாமதேவர், அந்தத் ததீயரோடு நீயும்வந்து உண்ணக் கடவையென்று நியமிக்க, அவன், கற்றையாகிய

ஜடாபாரத்தையும் நெற்றிக்கண்ணையு முடைய சிவபெருமானோடும் வந்து அடியார்களோடு கூடியிருந்து அமுதுசெய்த பிறகு, சந்திர சேகரராகிய சிவபெருமான், பொற்கொல்லனை நோக்கி, நீ பதுமநாபனுகிய பகவானுடைய தாசர்களோடு கூடி வாழ்வதே எனக்கு இஷ்டம் என்று சொல்லக் கேட்ட அந்தக் கம்மியனும், சிவபெருமானை நோக்கி, இன்றுதொட்டு உன் இஷ்டம் போலவே அடியேன் நடந்துகொள்வேன் என்றுசொல்லக் கேட்ட சிவபெருமானும், மற்றஅடியார்களும் ஓ நாஹரிதாசரே! நீர் நீடூழியாய் வாழக்கடவீரென்று சொல்லித் தத்தம் இடங்களுக்குப் போய்விட்டார்கள் என்று சிவபெருமான் ஸ்ரீபார்வதி தேவியார்க்குச் சொல்லி, மேலே, ஜநாபாயி வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

நரஹரிபக்தர் சரித்திரம் முற்றிற்று.

## கச-வது ஜநாபாயி சரித்திரம்.

முன்னொருகாலத்தில், உலகத்திலுள்ள எல்லாரும் நினைத்துப் புகழும் படியான பெருமைபொருந்திய ஸ்ரீபண்டரிபுரத்தில், கார்த்திகை மாசம் ஏகாதசி திதியில், யாத்திரைக்காரர் பலரும வந்து சேர்ந்தார்கள். அதில் ஒரு கன்னிகையானவள், தன்னைப் பெற்ற தாய்தந்தையரோடு வந்து, ஸ்ரீபண்டரிநாதனைச் சேவித்து, அப்பண்டரியின் மகிமையைப் புகழ்ந்து உரைத்து மனமகிழ்ந்து, தந்தைதாயரை நோக்கி, நான் இவ்விடத்தில் நிரந்தரவாசம் செய்ய விரும்பினேன், உங்களிடத்தில் விருப்பமில்லேன், ஆதலால், உங்களோடு வரமாட்டேன் என்றுசொன்னாள். அதை அந்தத் தாய்தந்தையர் கேட்டு, இவளுக்கு இந்தச் சிறுவயதில் ஸ்ரீஹரிபக்தி யுண்டானது எப்படி யென்று அதிசயித்து, இந்தக் கன்னிகையைத் தனியே விட்டுப் போவதற்குச் சம்மத மில்லாமல், மனவருத்தத்தோடு, மீண்டும் இவளைப் பலவிதமான இனிய சொற்களைச் சொல்லி அழைத்தும், அதற்கு உடன்படாமல் ஸ்ரீ ஹரியின் சரணாரவிந்த மதுவைப் பருகி மிகவுங் களித்து நிச்சலமாய் இருப்பதை நன்குணர்ந்து, அந்தக் கன்னிகையைத் திருமகள் கேள்வனுகிய ஸ்ரீபண்டரிநாதன் சந்நிதியில் விட்டுத் தமது ஊரை யடைந்தார்கள். பின்பு ஒருநாள், நாமதேவர், திரிவிக்கிரமனுகிய அந்தப் பகவானைச் சேவிப்பதற்குச் சந்நிதியை யடைந்து அவ்விடத்தில் உலாவிக்கொண்டிருந்த இக்கன்னிகையைக்கண்டு, அவள்மீது மிகுந்த கருணையுடையராய், அவளை நோக்கி, குழந்தாய்! தாய் தந்தையரை விட்டு நீ தனியாய் வந்திருக்கின்றனையே; நீ யார்? உன்பெயர் யாது? எனக்குத் தெரியச்சொல்லவேண்டும் என்று கேட்க, அந்தக்கன்னிகை, நாமதேவரை நோக்கி, என் பெயர் ஜநாபாயி, கருங் கடல் வண்ணனுகிய கண்ணபிரானே எனக்குத் தந்தை, அவன் தேவியாராகிய ரகுமாயியே எனக்குத் தாய், இந்தத் தாய் தந்தையரையன்றி எனக்கு வேறொரு தாய் தந்தையர் இல்லை. ஆத

லால், இவ்விடத்தில் இருக்கிறேன் என்று சொல்லக் கேட்ட நாமதேவர் தமது இருதயத்தில் மிகவும் அன்புடையவராய் இந்தக் கன்னிகையை யழைத்துக்கொண்டு தமது திருமாளிகைக்குப் போய், குணாயியை நோக்கி, இச்சிறுமியின் வரலாறு முழுதும் அறிவித்து, இவள் ஸ்ரீ கண்ணபிரானுடைய தாசியாகிய ஒருகூனி, இவள் இக்கலியுகத்தில் அவதரித்து, பண்டரிபுரத்தில் எழுந்தருளியிருக்கிற கருணரூபியாகிய ஸ்ரீபகவானுடைய திருநாமஸங்கீர்த்தனத்தால் மகிழ்கின்ற மனத்தையுடையவள் என்று சொல்லுதலும், அதைக் கேட்ட குணாயியானவள், இச்சிறுமியை மிகுந்த அன்போடு வளர்க்க, வளர்ந்து, பெரியவளாகியிருக்க, அயலார் நீயார் என்று இவளை நோக்கிக் கேட்குந்தோறும், நான் இந்திர குமாரனாகிய அர்ச்சுனனது தேர்ப்பாகனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருவடியை எந்நாளும் இடைவிடாமல் ஸ்மரித்துக் கொண்டிருக்கிற ஸ்ரீ நாமதேவருக்கு அடிமைக் குடியாகிய தாசி என்று சொல்லுவாள். இப்படி நாமதேவர் திருமாளிகையில் பல ஊழியங்கள் செய்துகொண்டு, மேகவண்ணனாகிய பகவானை நாமதேவர் வாழ்த்துந்தோறும் கேட்டு மனமகிழ்ச்சி யடைந்து கொண்டிருப்பாள். இப்படி யிருக்கிற காலத்தில், ஒருநா ளிரவில், ஐந்து நாழிகைக்குமேல், மெய்யன்பராகிய நாமதேவர் முதலானவர்கள் நித்திரை செய்ய, அப்போது காற்றுமழை யடித்து, அதனால் அநேகம் வீடுகள், மாடமாளிகைகள், யாவும் பலவகையாய்ச் சிதைந்து அழிந்தன. அப்பொழுது பகவானானவர் நாமதேவர் திருமாளிகையும் அழிவு பெறுமாயின் இவன் மனைவி மக்களோடு துன்பப்படுவானே, இதை நாம எப்படிப் பார்த்திருப்போம் என்று விரைந்து எழுந்தருளி, தமது சக்ராயுதத்தால் அந்தக் காற்று மழையைத் தடுத்து, நாமதேவர் திருமாளிகை மாத்திரம் விழாதிருக்கும்படி செய்ததுமன்றி, காற்று மழையின் மிகுதியால் திருமாளிகையின் ஒவ்வொரு பக்கத்தின் சுவர் முதலானவை சரிந்திருக்கக் கண்டு மண் குழைத்து அந்தச்சுவர் முதலியவற்றை முன்போலத் திருத்திக்கொண்டிருக்கும்போது, நாமதேவர் விழித்து வெளியே வந்து, நிர்மலமாகிய பீதாம்பர ஹார கேயூர குண்டல மகுட கங்கண பாதஹம்ஸவலயங்களோடு கூடி விளங்குகின்ற ஸ்ரீகண்ணபிரானுடைய திவ்ய சௌந்தர்ய விக்கிரகத்தைக்கண்டு வணங்கி, வாழ்த்தி, திருவடியைப்பற்றிக்கொண்டு, ஸ்வாமீ! இந்த இரவில் தேவரீர் இவ்விடத்திலெழுந்தருளிச் செய்யுங் காரியம யாது என்று வினவ, பக்தபரிபாலகனாகிய பகவான், நாமதேவரை நோக்கி, அடிக்கின்ற காற்று மழையால் உன்வீடு அழிந்து விழாமல் செவ்வை செய்தேன், நீ உனது குடும்ப சம்ரக்ஷணத்தைவிட்டு என்னையே சரணடைந்திருக்கிறு யாதலால இப்படிப்பட்ட காலங்களில் உதவிசெய்வது என் கடமையா யிருக்கின்றது. இப்படி நான் செய்யாத பக்ஷத்தில், உன்னைப் பெற்ற தாயானவள் என்னை வைவாள். அந்தச் செய்தியை நீயும் அறிவா யல்லவா என்று பகவான் சொல்லிக்கொண்டிருக்கும்போது, குணாயியானவள் வந்து, பகவானது திவ்ய ரூபத்தைக் கண்டு, திருவடியை வணங்கி, ஸ்தோத்ரம் பண்ணின பிறகு, மூவரும கூடி,

வீட்டிற்குள்ளே பிரவேசித்துத் தங்கியிருக்கும்போது, ஜநாபாயி வந்து, மேகவண்ணனாகிய ஸ்ரீகண்ணபிரானுடைய திருவடியை வருடிப் பல உபசாரங்களையுஞ் செய்துகொண்டிருக்க, நாமதேவர், வந்து வணங்கி, ஓ ஸ்வாமீ! எம்மையடிமைகொண்டவனே! எம்மோடு கூடியிருந்து அமுதுசெய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துச் சொல்ல, அதற்குப்பகவான் இசைந்து, கோவிந்தன், விட்டலன், நாரணன், மகாதேவன் என்பவர்களாகிய நான்கு பிள்ளைகளும நாமதேவரும், தாயாகிய குணாயியாரும, அவர் தேவியாரும் கூடி, ஓர் கலத்தில் அமுது செய்யும்போது, ஜநாபாயி பார்த்து, மிகவும் மனவருத்த மடைந்து, பண்டரிநாதனே! என்னைமாத்திரம விட்டுவிட்டாயே, என்னை இப்படிக் கைவிடுதல் உனக்குத் தகுதியாமோ? என்னைப பரதேசியாக எணணினையே என்று பலவகையாய்ப் பிரலாபிக்கும் போது, நிர்மலனாகிய விட்டலப்பெருமான், நாமதேவரை நோக்கி, நீ எனக்கு ஊட்டுகின்ற இவ்வமுது நன்றாயிருக்கவில்லையென்று சொல்லுதலும, நாமதேவர், விட்டலப் பெருமானை நோக்கித் தேவரீரை எப்பொழுதும் ஸ்மரித்துக்கொண்டிருக்கிற ஜநாபாயியும்கூட இருந்து உண்ணாமையால இந்த அமுது உமக்கு ருசிக்கவில்லையென்றார், என்று சொல்லுதலும், அமுது செய்துகொணடிருந்த பகவான், தமது கைகளை யுதறிகொண்டு எழுந்திருப்பதைக் கண்ட, ஜநாயி பண்டரிநாதனுடைய திருக்கைகளையும், திருவடிகளையும் சுத்திசெய்த பிறகு ஸ்வாமியானவர் ஒரு சயனத்தின்மீது சயனித்துக்கொண்டிருந்தார். அதன்பிறகு குணாயியார், ஜநாயியையழைத்து இதை வாங்கிக்கொள் ளென்று தாங்கள் அமுது செய்து மீதியாயிருந்த எச்சிலைக் கொடுக்க, அவள் இது பிரமருத்திராதிகளுக்கும் கிடைத்தற்கரிய மஹாபிரசாதமென்று மனமகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு, அதனைத். தனது சிறு குடிலில் வைத்துவிட்டு, கமலாசனையாகிய பெரிய பிராட்டியாருக்கு நாயகனே! உன்னை யாசிரயித்த எனது குடிசைக்கு எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, பகவான் துயிலுணர்ந்து எழுந்து நாமதேவரோடுவந்து, அந்த ஜநாயியை நோக்கி, பெண்ணே! உண்ணும்போது நீ யில்லாமையால், நன்றாய் உண்ணவில்லை. இப்போது பசியெடுக்கின்றது, ஆகையால் எனக்குச் சிறிது அன்ன மிடவேண்டுமென்று சொல்ல, ஜநாயி ஓ பகவானே! குணாயி எனக்குச் சிறிது மீதி அன்னத்தைத்தந்தாள், அது உனக்கு ஏற்குமோ என்று கேட்க, ஸ்ரீகண்ணபிரான், பெண்ணே! அந்த மிச்சிலானால் எனக்கு மிகவும் பிரியமாயுண்டோனா, அதைத் தருவாயாக என்று சொல்ல, ஜநாயி அப்படியே தருதலும், பகவான் வாங்கி, அவளோடு கூடியிருந்து உண்டு திருவுள்ளமகிழ்ந்தார். பிறகு திருக்கைகளையும் சுத்திசெய்துகொண்டு இருவரும நித்திரை செய்யும்போது குணாயியார் விழித்து வெளியே வந்து தன் புதல்வராகிய நாமதேவரை யழைத்து, நீயும் நானும் நித்திரை செய்த பின்பு ஸ்ரீகண்ணபிரான் ஜநாயி இடத்திற்குப்போய் மிச்சிலன்னத்தையுண்டு அங்கேயே சயனித்துக்கொண்டார் என்றாள். அதைக்கேட்ட நாமதேவர், தாயே, யாருடைய மனமானது பரிசுத்தமாயிருக்கிறதோ, அவ்விடத்தில் பக

வான் எழுந்தருளுவதற்கு ஒரு காலநியதியில்லை, நினைத்தபோதே எழுந்தருளுதல் அவருக்கு இயற்கை, மிச்சி லுண்பதும் அவருக்கு இயற்கையே. என்று சொல்லக் கேட்டு, நித்திரைசெய்கிற பகவானுனவர், ஒரு ஜாம நேரம் இருக்க விடியற்காலத்தே யெழுந்து ஜநாயியை யெழுப்பி உன்வரவை யான் விரும்பி யெதிர்பார்த்திருக்கிறேன் என்று சொல்லவும், அவள் விழித்துக் கொள்ளாதிருக்க, எம்பெருமான் அவள் விழித்துக்கொள்ளும்படி அவளைத் தூக்கியெடுத்து நன்றாக உட்காரச்செய்து, ஒப்பற்றதிருக்கரத்தால் அவளது கூந்தலைச் சிக்கறத் திருத்தி உட்காரவைத்துவிட்டுத், தமது முன்றானை முனையைச் சுற்றிச் சுமமாடாகத் தலை மீது அமைத்துத் தாமே ஒரு கூடையில் அரிசியைக் கொண்டுவந்து, நான் அரிசியை யரைத்து மா வாகருகிறேன். நீ உனது அழகிய கையினுலே யந்திரத்தின் முளையைத் தீண்டிக்கொண்டு மதுரமான பாடல்களைப் பாடிக்கொண்டிருவென்று சொல்ல, ஜநாயி அப்படியே யந்திரத்தின் அச்சுமுளையைத்தீண்டிக்கொண்டும்மதுரமாகப்பாடிக்கொண்டிருந்தாள். அப்படி யிருக்கும்போது பகவான், அந்த மதுரமான பாடல்களைக்கேட்டுத் தலையசைத்துக்கொண்டு, பரவசனுகி, அரிசியரைக்கிற நிலையை யறிந்த குணுபியார், ஜநாயி பீடத்தில் வந்து, அரைப்பதற்கு உன்னிடத்தில் அரிசிவந்த விதம் எப்படிச் சொல்லக்கடவாயென்று வினவி, இவள் பேசாதிருப்பதைக் கண்டு கோபித்துப், பிரம்பைக் கையிற் கொண்டு, ஜநாயி வருந்தும்படி அடித்து, இப்பொழுது நீ யாரோடு பேசியிருந்துவந்தாய் சொல்லென்று வற்புறுத்திநிற்க, அவளடித்த அடி லக்ஷ்மீ நாதனுடைய திருமுடியில் பட்டவுடனே, பகவான், நான் விடோபா, பேரன்புடையவளாகிய இந்த ஜநாயியாரிடத்திற்கு அரிசி யரைக்கும் பொருட்டு வந்தேன், என்னை அடிக்க வேண்டாம் என்று சொல்ல, நாமதேவா தமது தாய்முகம் நோக்கி, இவர் திருத்துழாய்மாலையை யணிந்த ஸ்ரீகண்ணபிரான் என்று நீ அறிந்திலை, ஆதலால் வருவாயாக என்று அழைக்க, குணுயியாரும் மயங்கி, நாணமுடையவளாய், லோகநாதனுகிய பகவானை அடித்தேனே யென்று மனத்துயரத்தோடு தலைவளைத்துக்கொண்டு நின்று, ஜநாயியானவள், ஸ்ரீமந் நாராயணனை ஸ்மரித்துத் தன் வசப்படுத்திக்கொண்டாள், எனக்கு இவ்விடத்தில் யாதொருபெருமையுமில்லை என்று மௌனமா யிருத்தலும், ஜநாயியானவள் எம்பெருமானிடத்தில் தான் செய்த மிக்க அன்பென்கிற அச்சாணியைத் தீண்டிக்கொண்டு, வைராக்கியமென்கிறதிரிகையில், சஞ்சிதமென்கிற அரிசியைப்பெய்து அரைத்தாள். அப்படி அவ்யக்தமாகிய தத்வத்தில் வெளிப்படையாய் அரைத்த அந்த மாவை யெல்லாம் ஸ்ரீ லக்ஷ்மீ நாதன் அன்போடு கூடையில் நிறைத்து வைத்து நித்திரை செய்ய, ஜநாயியார், விடியுமுன்னே துயிலுணர்ந்தெழுந்து, மாதவனையும் துயிலெழுப்பி, இவ்விடம் விட்டு உன் கோயிலை யடையாமல் இருப்பாயாகுல் கலகம் உண்டாகு மென்றாள். என்று சொல்லுதலும், நித்திரைசெய்துகொண்டிருந்த ஸ்ரீகண்ணபிரான், பொழுதுவிடிந்துபோயிற்றே என்று அவசரமாய் எழுந்திருந்து, நித்திரை மயக்கத்தால் தனது பீதாம்பரத்

தையும், பதக்கத்தையும் அவ்விடத்தில் போட்டுவிட்டு, ஜநாயியாருடைய துணியைத் தான்உடுத்து, கோயிலுள்ளேபிரவேசித்து எழுந்தருளியிருந்தார். பொழுதுவிடிந்தபிறகு, கோயில் அர்ச்சகர்வந்து கதவைத்திறந்து கந்தையை ப்போர்த்துக்கொண்டு செங்கல்மேல்நிற்கின்ற கருணைக்கடலாகிய ஸ்ரீகண்ண பிரானைக் கண்டு, எந்தையே! உனது பீதாம்பரத்தை எவர்க்குக் கொடுத் தாய்? இந்தக் கந்தைத்துணியை எங்கே தேடிப்பெற்றாய்? அதிக சௌந்தரிய விக்கிரகமாகிய உன் திருமேனிக்கு இந்தக் கந்தைத் துணி தகுவதோஎன்று சொல்லி, அதைநெகிழ்த்துப் பதக்கத்தையும் திருமார்பில்இருக்கக்காணாதவர் களாய் வெருண்டு அதிசயித்து, கதவு மூடினபடியே யிருக்க இந்தக்காரியம் எப்படி நிகழ்ந்தது என்று சொல்லிக்கொண்டு, கதவு மூடினபடியே யிருக்க வும் இந்தப் பண்டரிநாதன் போகக் கூடுமானாலும் போவது யாரிடத்திற்கு என்று சொல்லி, இக்கந்தைத் துணி, நாமதேவர், தேடியமைத்துக்கொண்ட அடிமைக்காரியின் துணிபோலக் காணப்படுகின்றது, இதனுண்மையை அறிவோம் என்று நாமதேவர் வீட்டுக்கு வந்து, அவ்விடத்தில் ஜநாயியைக் கண்டு, உன்னிடத்துக்கு ஸ்ரீ கண்ணபிரான் வந்ததனால், இந்தப்பொன்னுடை கிடைத்தது, ஆதலால், அவன் திருமார்பில் அணிந்திருந்த பதக்கமும் உன் னிடத்தில் இருக்கலாம, அதைக்கொடுப்பாயாகஎன்று கேட்டவுடனே,ஜநாயி என்னிடத்தில இல்லையென்று சொல்லுதலும், அர்ச்சகர், நீ அக்கண்ணனை இங்கே யாது காரணமாகத் தங்கும்படி செய்தாய் என்று சொல்லி, அவள் வஸ்திரத்தைச்சோதித்துப்பார்க்கும்போது, பதக்கம் அவளிடத்தில் இருக்கக் கண்டு, அவளை வெருட்டி வற்புறுத்தும்போது, ஊரிலுள்ளார் யாவருங் கூடி நாமதேவர் வீடு முன்போலக் காணப்படவில்லை, நேற்று அடித்த பெருங் காற்றினால் பறந்துபோன நமதுவீட்டின் கூரைகளெல்லாம் நம்மால் மூடப் படவில்லை, நமது வீடுகளோ புதுக்கப்படவில்லை, இப்படியிருக்க, பொழுது விடியு முன்னே நேற்று நம்முடைய வீடுகள்போல நிலைகுலைந்த இவர் வீடு மாத்திரம் புதிதாய்ச் சமைக்கப்பட்டிருப்பது என்ன அதிசயம்! இந்த நாம தேவர்க்கு ஸ்ரீகண்ணபிரானே இவ்வாறு அமையும்படி திருவருள் சுரந்திருக்க லாம் என்று சொல்லுவதைக் கேட்டோர்களிற் சிலர், அப்படியே ஸ்ரீகண்ண பிரானே அருள் செய்ததனால் பெரிய திருமாளிகையையும் பெரிய திரவியத் தையும் அமைத்துக் கொடுக்க அசக்தனோ என்று சொல்லுவார்கள்; வேறு சிலர், செல்வம் அதிகமாகக் கொடுத்தால் செருக்கு மிகுந்து தன்னிடத்து அன்பு இல்லாதவ ராவார், ஆதலால் பகவான், தன் அன்பருக்குப் பெருஞ் செல்வத்தைக் கிருபை செய்யார்என்றுசொல்லுவார்கள். இப்படியே பேசிக் கொண்டிருக்க, முன்னே சோதித்தவர்கள் ஜநாயியானவள் மோசக்காரி யென்று கோபித்து, இவள் சுவாமித் துரோகி யாதலால் இவளைக் கழுவி லேற்றுவோம் என்று தீர்மானித்து அவளை அழைத்துக்கொண்டு சந்திரபாகா நதியைச் சமீபித்தவுடனே, ஜநாயியானவள், அமலனே! செங்கல்லின்மேல் நின்ற திருக்கோலமாயெழுந்தருளியிருக்கிற ஸ்ரீதரனே! இப்படிகடுங்கொலை

புரிதற்கு அடியேன் என்ன குற்றஞ் செய்தேன் என்றுசொல்லி, கைகளைத் தலைமேல் கூப்பிநின்று புலம்ப, அநாதரக்ஷகனுகிய ஸ்ரீகண்ணபிரானது திரு வருளால் கழுமரமானது நீராய்க் கரைந்துபோய்விட்டது. ஜநாபியாருடைய துன்பத்தை நீக்கி ரக்ஷிக்கும் பொருட்டு நிர்மல ராகிய பகவான் விரைந்து ஓடிவந்தார். இதைக்கண்ட உலகத்தாரெல்லாரும் மனமகிழ்ந்து ஒருமிக்கக் கூடிநின்று பகவானை ஸ்தோத்திரஞ்செய்ய, ஜநாபியைப் பிடித்துச் சோதிக்க வந்த அர்ச்சகர்கள், அவளை நோக்கி, தாயே! உன் பொருட்டு பகவான், இவ் விடத்தில் எழுந்தருளினுராதலால் நீயே தங்கை யென்று புகழ்ந்து அவளை நீங்கிப்போயினர். போனபின்பு, ஜநாபி தன் வீட்டிற்கு வந்த விமலனுகிய பகவானை முன்போல் பிரார்த்தித்து, அபங்கக் கவிகளை ஆரம்பித்துச்செய்து கொண்டிருக்கும் நாளில், திருத்துழாய் மாலையை யணிந்த திருத்தோள்களை யுடைய ஸ்ரீகண்ண பிரான், மைக்கூட்டையும், எழுது கோலையும், காயிதத் தையும் கைக்கொண்டு அவள் சொல்லுமவற்றை யெல்லாம் எழுதும்பொரு ட்டுத் திருக்கோயிலில்வந்து எழுந்தருளியிருக்க, ஞானதேவரும் அவ்விடத் திற்கு வந்தார். அவரைக் கண்டவுடனே ஸ்ரீ கண்ணபிரான் எழுதுவதற்குத் திருவுள்ளம் நாணி, மைக்கூடு முதலியவற்றை மறைத்து இருந்தபோது, அவர் வணங்கி, ஓ தேவகிநந்தனு! ஏகாந்தமாயிருந்து நீ எழுதினது யாது சொல்லியருளவேண்டும் என்று கேட்க, ஸ்ரீ பண்டரிநாதன் கிருபையோடு அவரை நோக்கி, ஜநாபி சொன்ன அபங்கக் கவிகளை யெழுதினேன் என்று சொல்லக் கேட்ட ஞானதேவர் சிரித்து, அமலனே! இந்த ஜநாபி யானவள் சொல்லுவதெல்லாமஉன்மகிமையேயன்றி வேறல்ல,அதுபிறராலே விரும்ப த்தக்கதன்றி உன் புகழை நீயே யெழுதிக்கொள்வது சிறந்த காரிய மல்ல என்றுசொல்ல, ஸ்ரீலக்ஷ்மீநாதன் ஜநாபி சொல்லுவது என்செவிக்கு மிகவும் இனிமையாய் இருக்கையால் அதைக் கேட்க விரும்பினேன்; அன்றியும், அதை யெழுதிக்கொள்ளவும் விருப்பங்கொண்டேன் என்றருளிச்செய்தனர். அப்போது முன்போலவே எழுதத் தொடங்கின பகவானுனவர் ஞான தேவரை நோக்கி, அன்பனே, நான் எழுதுவதை மறைத்தேனென்பது பிரம தேவனுக்குந்தெரியாது,அப்படியிருக்க, உனக்கு எப்படித்தெரிந்ததுஎன்று கேட்க, ஞானதேவர் பெருமானை நோக்கி, ஐயனே! உன் பெருமையானது உன் அடியார்களுக்கு மிகவும் எளிதேயாகும் என்று சொன்னுர். அதைக் கேட்டவிட்டலப்பெருமான் சிரித்துக்கொண்டிருக்க, ஞானதேவர்,அப்பெரு மானை நோக்கி, பரிசுத்தனுன பகவானே! நாமதேவரைக் காணும்பொருட்டு நீர்எழுந்தருளும்என்று பிரார்த்திக்க, அப்படியே இறைவனும் ஞானதேவர் கையைப் பிடித்துக்கொண்டு நாமதேவர் இடத்திற்கு எழுந்தருளுதலும், அவர் எதிர்கொண்டு வந்து மார்போடு அணைத்து மன மகிழ்ந்தார். பிறகு வந்த இருவரையும் ஆசனத்தில் எழுந்தருளச் செய்ய, அப்போது அன்பர் எல்லோரும் வந்து சேர, அவர்கள் யாவரையும் பகவான் தழுவிக்கொண்டு உட்காரும்படிசெய்து, நாமதேவரை நோக்கித்,திருமாலடியார்களைச் சேவிக்

கும்பொருட்டு ஜனாயியை இங்கேயழைத்துக்கொண்டு வாருமென்றுசொல்ல, அந்தச் சொல்லை அடியார்கள் கேட்டுத் தாய்க்குச் சொல்ல, அவள் மருமகளுக்குச் சொல்ல, அவள்வீட்டின் புறத்தில் சாணம் மிதித்துக்கொண்டிருக்கிற ஜனாயிக்குச்சொல்ல, ஜனாயியானவர், கால்கைகள் சுத்திசெய்துகொண்டு விரைந்து வந்து அவ்விடத்தில் அமர்ந்திருந்த அன்பர் கூட்டத்தின் நடுவில் எழுந்தருளியிருந்த பகவானைத் தரிசித்து வாழ்த்தி வணங்கினார். அப்படிப் பணிந்து நின்றபோது, ஞானதேவர், சம தமாதிகளான ஆத்மகுண பூர்த்தியுள்ள நாமதேவரைநோக்கி, இன்று உண்டான ஓரதிசயத்தைக்கேட்பீராக, அதுஎன்னென்றால், ஜனாயிபாடுவதை எமபெருமான் தானே எழுதிக்கொள்ளுகிறார், அதை நான் பிரத்தியக்ஷமாகக் கண்டுவந்தேன் என்று சொல்ல திருத் துழாய்மாலையை யணிந்த விட்டலப்பெருமான், நான் எழுதுவதனால் உண்டான குறை யாது என்றார். அன்றியும ஜனாயி சொல்வ தெல்லாம் எனக்குப் பேரின்பத்தைத் தருதலால், அப்படி எழுதலாயினேன், அதைச் சொல்லுவோர்களும, கேட்போர்களும் ஆகிய அவர்களின்மீது முன்னே அன்புடையேனாகிப பின்னே மோக்ஷலாபத்தையும் தருவேன்என்றுசொல்லக்கேட்டு அருகேயிருந்த தொண்டரெல்லாரும் தனித்தனியே நகைத்தார்கள். அப்போது ஞானதேவர், ஜனாயியை நோக்கி, இந்த நாமதேவர் முற்காலத்தில் இரணியனுக்குப் புதல்வராய்ப் பிறந்து, பிறகு, வாலிக்கு மகனாகி, அதன்பின்னே உத்தவராகஅவதரித்து, இப்போது பாண்டுரங்கப்பெருமானுக்குப் பெரிய அன்பராயினர். நீ இந்தப் பெருமானிடத்தில் மிக்க அன்புடையவளாய் இருப்பதற்குக் காரணம் யாது? நீ ஆதியில் இன்னாள் என்று சொல்லக் கடவாய் என்று வினவினர். அதுகேட்ட ஜனாயி ஞானதேவரை நோக்கி, தசாவதாரஞ் செய்தவரான பகவான் தாம்கொண்ட அர்ச்சாவதாரத்திலும சிறந்தவராகி யெழுந்தருளியிருத்தலால், நானும் அவரோடு கூடவே பிறந்து அவரையடைந்தேன். இதுதான உண்மையானசெய்தி என்று சொல்லுதலும், ஞான தேவர், அதைக் கேட்டு மன மகிழ்ந்தார். அதன் பின்னே பாண்டுரங்கப் பெருமானானவர் தமது மெய்யன்பருக்குச் சொல்லுகின்றார். எப்படியென்றால். நீங்கள் யாவரும் பாடுகிற கவிகளை எழுதுவதற்குச் சமர்த்தரானவர்களை நான் வகுத்துச் சொல்லுகிறேன் கேளுங்கள். ஞானதேவர் சொல்லும்கவிகளைச் சச்சிதானந்தரும், நிவர்த்தி என்பவர் பாடும்பாட்டினைச் சோபானதேவரும், முக்தாபாயி கவிகளை ஞானதேவரும் எழுதும்படி விதித்து, பரமானந்தர் பாடலை விசோபாகேசரும, சாவந்தியாமேளர் கவிகளைச் சிவாகுராவரும், கூர்மதாசர் கவிகளைச் சுதேவரும், சோகாமேளர் பாட்டினை அநந்தபட்டரும் எழுதுமபடி நியமித்து, நாமதேவருடைய சிறந்த கவிகளையும் ஜனாயியுடையகவிகளையும் யானே எழுதுகிறேன் என்றருளிச்செய்தார். அப்போது அங்குள்ளவர்களான அன்பரெல்லாரும் ஜனாயியைப் புகழ்ந்து நிற்க, மிக்க பெருங்களிப்பைக் கொண்ட நாம தேவர் அடியார்களைப் பூஜை செய்து, பாண்டுரங்கப் பெருமானுக்கும் மங்களம்பாட, அந்தப் பெருமான் கோயிலுக் கெழுந்தருளி, ருக்மிணீபிராட்டியாருக்கு இங்கே நடந்த செய்தியெல்லாம் சவிஸ்தாரமாகச் சொல்லி மகிழ்ந்திருக்க, ஸ்ரீஹரிதாசர் எல்லாரும் தத்தம்இடங்களையடைந்து, ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தந பரராய் வாழ்ந்திருந்தனர் என்று சிவபெருமான் ஸ்ரீபார்வதீதேவியாருக்குச் சொல்லி, மேலே மச்சேந்திரநாதர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஜநாபாயிசரித்திரம் முற்றிற்று.

# கரு-வது மச்சேந்திரநாதர் சரித்திரம்.

கைலாசபதியாகிய ஸ்ரீ சிவபெருமான், ஒருநாள், திருப்பாற் கடற்கரையில் தேவியாரோடு கூடி மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ ராமபிரானது திவ்விய ரூபத்தைத் தனது இருதயத்தில் அமைத்து, அந்தப் பெருமானுடைய திருநாமங்களை உச்சரித்துக்கொண்டிருந்தார். அதை அறிந்த உமாதேவியார் தமது நாயகராகிய சந்திர சேகரரைப் பிரார்த்தித்து, தேவரீரைப் பார்க்கிலும் மேலான தெய்வம் யாது என்று வினவுதலும், அந்தச் சிவபெருமான், விரைவாக, ஸ்ரீரகுநந்தனருடைய ஜகத்காரணத்வத்தைச் சொல்லத் தொடங்கினர். எப்படியென்றால், பிரமதேவன் முதலாகச் சொல்லப்பட்ட தேவர்களோடு ஹரன் என்று சொல்லப்பட்டுள்ள நானும் உண்டாவதும் அவனாலே, நாங்கள் நிலைபெற்றிருப்பதும் அவனாலே, ஆதலால், அந்த ஸ்ரீஹரியின் திருநாமத்தைஉச்சரிப்பேன், அவனது நீலமேக சாமள விக்கிரகத்தையும் என் மனத்தில் இருத்திக்கொள்வேன் என்று சொல்லக் கேட்ட பார்வதி தேவியார், ஆலோசித்து, அப்படிப்பட்ட மேலான தெய்வம் உமது மனத்தில் எழுந்தருளி யிருக்க, இதுவரைக்கும் அந்த ரகசியம் எனக்குத் தெரியாமல் மறைத்து வைப்பது உமக்குத் தகுதியாமோ? அதனை இன்று எனக்கு அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, கைலாசபதியாகிய சிவபெருமான், தம்மைப் பணிந்து எதிரேநிற்கிற பார்வதி தேவியாருடைய சிரத்தின்மீது, தமதுதிருக்கையை யமைத்து, உபதேசம் செய்யும்போது, இந்த உபதேசத்தில் மனமில்லாமல் மறந்து நித்திரையை யடைய, மணிகளைக் கொழிக்கின்ற கடலிலுள்ள மீன்களுள் ஒருமீன் குட்டியானது, சிவபெருமானருள் செய்கிற உபதேசமொழியை உம் என்று செவி கொடுத்துக் கேட்டு, அந்தப்புண்ணியத்தால், புதுமையான நர ரூபங்கொண்டு வந்தடைந்ததைப் பார்த்து, அதற்கு மச்சேந்திரன் என்கிற பெயர் சூட்டி யருளி, சிவ பெருமான் பார்வதி தேவியாரோடு தமது திருக்கைலாயத்துக்கு எழுந்தருளினர். அந்தக் குழந்தையானவர், சிவபெருமானது திருவருளால், வைராக்ய குணம் மேன்மேல் வளரப்பெற்று, ப்ரபஞ்சப்பற்றாகிய மயக்கம்நீங்கி, தமது திருநாவானது, ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தநம் செய்யா நிற்க, தாம் ஒருவராய்த் திரியத் தொடங்கினர். தாய் வயிற்றை விட்டு நில வுலகத்தில் அவதரிக்கும்போதே, "ஹம்ஸோஹம்" என்கிற மந்த்ரத்தை விடுகின்றிலர்; ஆதலாலே, முக்கால வர்த்தமாநத்தையும் அறியத் தகுந்தவரானர். இப்படியிருக்குங் காலத்தில், இவருக்குத் தீர்த்த யாத்திரையில் விருப்பம் அதிகரித்து, தாம் போகும் ஊர்தோறும் இரவில் மாத்திரம் உண்டு, ஆரண்யவாசமே தவமாகக் கொண்டு, பன்னிரண்டு வயது நிரம்பு மளவும், காலங் கழித்துக்கொண்டு வரும்போது, ஒருநாள், ஓரூரில், ஒரு தந வணிகன் வாழ்கின்ற வீட்டுக்கெதிரே நின்று, ஆலக்கென்று சொல்ல, அந்த அருமையாகிய ஒலியைக்

கேட்டு, அந்த வீட்டில் வாழ்கின்றவள், இரண்டு கையாலும் பிக்ஷை யேந்திக்கொண்டு எதிரே வந்தாள். வந்தவள், தனக்கெதிரே நிற்கிற மாதவரை நோக்கி, பலவகையான உபசாரங்களைச் செய்து, அஞ்சலி பண்ணி, பழிக்கப்படாத உருவத்தை யுடையவரே, நீர் இவ்விடத்திற்கு வரும்படி, நான் எப்படிப்பட்ட தவத்தைச் செய்தேனோ என்று சொல்லி, அன்பு மிகுதியால் மன முருகினாள். அப்படி மன முருகி, அன்பு மிகும்படி யெதிரே நிற்கிறீராதலால் அடியேனுக்கு ஒரு துன்ப மில்லை, ஆனால் குழந்தை யில்லை யென்கிற ஒரு துன்ப மாத்திரம் உண்டு, அத்துன்பம் நிவர்த்தியாக, ஒரு புதல்வன் உண்டாகும்படி க்ருபை செய்யவேண்டுமென்று அக்ஷயபாத்திரம் இட்டாள். அப்பொழுது அவள் சொன்ன அன்புமிகுந்த வார்த்தையைக் கேட்டு, நிலைபெற்ற தவத்தையுடையவராகிய மச்சேந்திரநாதர் அவள் முகத்தைப் பார்த்து, உன்னிடத்தில் ஒரு புதல்வன் உண்டாவான், நீ யிந்த வரத்தைப் பெற்றுக்கொள் என்று விபூதி கொடுத்துச் சொல்லுகின்றார். எப்படியென்றால், நீ இதை உட்கொள்வாயானால், ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அம்சத்தால் உன்னிடத்தில் ஒரு புதல்வன் உண்டாவான் என்று சொல்லி, அவர் நீங்கின பின்பு, அந்த மாதானவள், அயல் வீட்டிற்குப் போய், அவ்வீட்டுக்காரியைத் தன்வீட்டுக்கு அழைத்துவந்தாள். வருகின்ற அவளை நோக்கி, மான்போன்ற மருண்ட பார்வையை யுடையவளே, ஒரு துறவியானவர் இங்கே வந்தார், அவருக்குப் பிக்ஷை யிட்டு, ஒரு புதல்வன் உண்டாகும்படி தயை செய்ய வேண்டுமென்று ப்ரார்த்தித்தேன், அவர் திரு நீறு கொடுத்து, இதை உட்கொண்டால் புதல்வன் உண்டாவானென்று சொல்லிப்போனார், அந்தத் திருநீற்றை நான் உட்கொள்ள விரும்புகிறேன், இந்த விஷயத்தில் உன் அபிப்பிராய மென்னவென்று கேட்க, அயல்வீட்டுக்காரி சொல்லுகிறாள். நீ திருநீற்றை யுட்கொள்ளவேண்டாம், இப்படிப் பரதேசிகளால் திருநீறு கொடுக்கப்பெற்று, தம் நினைவு மாறி, அந்தப் பரதேசிகளின் வசப்பட்ட மாதர் அநேகருளர், இந்தச்செய்தியை நீயும்அறிந்திருக்கலாம், உன் இஷ்டம்போலச் செய்வாயென்றாள். அதைக் கேட்டவள், அயல்வீட்டுக்காரி சொன்னபடியே திருநீற்றை யுண்ணாமல் தீயில் இட்டு எரித்து, ஒரு மூன்று வருஷம் கழிய, மச்சேந்திரநாதர், அவ்விடத்திற்கு வந்து, எல்லா வீடுகளிலும் பிக்ஷாந்நத்தைப் பெற்று, இவள் வீட்டிலும் வந்து பிக்ஷை யிடவேண்டுமென்று எதிரே நின்றார். அப்படியே அவளும பிக்ஷாந்நம எநதிவா, அவள்மு[illegible]க நோக்கி, பூர்வ நினைப்புண்டாகி, பெண்ணே, உன புதல்வன் எங்கே, எனக்குக் காட்டவேண்டு மென்று சொல்ல, அவள் அஞ்சி, மறுமொழி சொல்லாமல் நின்றாள். அவளை மச்சேந்திரநாதர் நோக்கி, உண்மையைச் சொல் என்றார். அதற்கு அந்த மாது சொல்லுகிறாள். ஓ மாதவரே, நீர் கொடுத்த திருநீற்றை உட்கொள்ள வில்லை, அயல்வீட்டுக்காரியின் வார்த்தையைக் கேட்டு, அதைத் தீயிலிட்டேன், அடியேன்மீது கோபங் கொள்ளவேண்டாம், அடியேன் செய்த பிழை இதுவே யென்றாள். அதைக் கேட்ட துறவி சொல்ல

னுற்றூர். எப்படி யென்றால், நீ இந்தத் திருநீற்றையிட்ட சாம்பலை எங்கே கொட்டிவிட்டாய், அந்த இடத்தைக் காட்டென்று சொல்லி யழைக்க, அவள் பன்னிரண்டு வருஷகாலமாகத் தான் சாம்பல்கொட்டுகிற இடத்தைக் காட்ட, மச்சேந்திரநாதர், அந்தச் சாம்பற் குழிக் கெதிரே நின்று, உரத்த சத்தத் துடன் ஆலக்கென்றூர். அந்தச் சத்தத்தைக் கேட்ட வுடனே, முன்னே யிவர் கொடுத்த திருநீறுனது என் குருஸ்வாமீ என்று எதிரொலி கொடுத் தது. இதைக் கண்டு அவ்வூரிலுள்ள யாவரும் அதிசயித்தார்கள். அப்போது மச்சேந்திரநாதர், அந்த வணிகன் மனைவியை நோக்கி, இந்தச் சாம்பற் குப் பையை ஆள்விட்டு எடுப்பியும் என்று சொல்ல, அப்படியே அவளும் ஆட்க ளை விட்டு அந்தச் சாம்பற் குப்பையைக் கிளறி யெடுப்பிக்கவே, அடியில் ஒரு குழந்தையானது திவ்ய சௌந்தர்யத்தோடிருக்கக் கண்டார்கள். அது பன்னிரண்டு வயதுள்ளதாய், சிக்முததிரை முதலான யோக சிந்நங்களோடுகூடி, பாதம் பூமியில் படாதிருக்கக் கண்டு, மச்சேந்திரநாதர் அந்தச் சிறு வரை வணங்க, அந்தச் சிறுமுநிவரும் குழியிலிருந்தெழுந்து வந்து மச்சேந் திரநாதரை வணங்கினுர். அப்போது மச்சேந்திரநாதர் அந்தச் சிறுமுனிவர் சாம்பலிற் பிறந்ததனுலே அவருக்குக் கோரக்கர் என்று பெயரிட்டார். அதன் பிறகு அந்தக் கோரக்கநாதரை மச்சேந்த்ரநாதர் அழைத்துக்கொண்டு போகும்போது, பார்த்த வணிகன், தன் மனைவியை நோக்கி, நீ இந்த மச்சேந்த்ர நாதருடைய சொல்லைக் கடந்து, இப்படிச்செய்துகொண்டாயே, தௌர்ப்பாக்கிய முள்ளவளே என்று வெறுத்துக்கொள்ள, இதைக் கண்ட மச்சேந்த்ரநாதர், வணிகனையும், அவன் மனைவியையும் நோக்கி, நீங்கள் மனம் வருந்தவேண்டியதில்லை, உங்களுக்குக் குழந்தை யுண்டாகுமென்று, ஆசிர்வதித்துப்போனுர். போகும்போது, கோரக்கநாதர், மச்சேந்த்ரநாதரை வணங்கி, ஸ்வாமீ, என் சிரசின்மேல் தேவரீர் திருக்கையை வைத்து, தாரக மந்த்ரத்தை உபதேசித் தருளி, அடியேனை உஜ்ஜீவிககச் செய்ய வேண்டும் என்று ப்ரார்த்திக்க, மச்சேந்த்ரநாதர், உடனே, மறுமொழி கொடாதிருந்து, பிறகு, அப்பா, நீ குருகுலவாசம் செய்து வருவாயானுல், அந்தச் சற்குரு நாதர், உன் பரிபக்குவமறிந்து உபதேசித்தருளுவார், அப்படிப் பெறவேண் டிய முறைப்படியே பெற்றுக்கொள்ளக் கடவையென்றருளினர். அதைக் கேட்ட கோரக்கநாதரும் அப்படியே செய்கிறேனென்று, மச்சேந்த்ர நாத ராகிய குருவின் திருவடியை வணங்கி, அவருக்கு வேண்டிய ஊழியங்கள் செய்து கொண்டு, தேச சஞ்சாரஞ் செய்கிற காலத்தில், ஒரு நாள், ஒரு நகர்ப் புறத்திலே, மச்சேந்த்ர நாதர் இருந்து கொண்டு, அப்பா, கோர க்கா, நீ போய்ப் பிக்ஷையேற்றுக்கொண்டுவாவென்று நியமிக்க, அப்படியே கோரக்கரும் அந்த நகருக்குள்ளே பிரவேசித்து, வீடுகள்தோறும், பிக்ஷாந்த த்தை யாசித்துக்கொண்டு, பிராமண போஜநம் நடந்துகொண்டிருக்கிற ஒரு வீட்டுக் கெதிரே போய் ஆலக்கு என்று சொல்லிநின்றூர். அந்த வீட்டுக்கு உடையவளாகிய பார்ப்பினி அந்த ஆலக்கு என்னும் சொல்லைக் கேட்ட

வுடனே, வடை, போளி, அதிரசம் முதலிய சிறந்த வுணவுகளை, இவரது சோளிப்பை நிரம்பும்படி கொடுக்க, வாங்கிக்கொண்டுபோய், நகர்ப்புறத்தி லிருக்கிற தமது சற்குருநாதருக் கெதிரேவைக்க, அவர் உண்டு, சேஷத்தைக் கோரக்கருக்குக்கொடுக்க இவரும்உண்டு, இருவரும் சந்தோஷமடைந்திருந் தார்கள். இப்படி யிருக்கும்போது, மச்சேந்த்ரநாதர் கோரக்கநாதரைப் பார்த்து, அப்பா, இந்த வடை மிகவும இனிமையாயிருந்தது, ஆகையால், எனக்கு நாளையத்தினமும் போய்க் கொண்டுவநது கொடுக்கவேண்டும் என்றார். அப்படியே கோரக்கர்போய், அந்தப் பார்ப்பினியைக் கேட்க, அவள், இன்றைக்கு வடையேது? கிடைக்கமாட்டாது, அரிசிவாங்கிக்கொண்டுபோவென்றாள். கோரக்கர், எங்கள் குருவுக்கு அந்த வடையே இஷ்டமாயிருக்கின்றது, ஆகையால் அதையே நீ தரவேண்டுமென்றார். பார்ப்பினி, அதையொழிய வேறெந்தப்பதார்த்தம் வேண்டுமாயினும் தருகிறேனென்றாள். இவரும் நான் எதையும் விரும்பிலேன், வடை கொடுத்தாலன்றிப் போகமாட்டேனென்று சொல்ல, பார்ப்பினி தவவேஷம பூண்டு வருவோருக்கு இது தெரியாதா? இல்லாத வொரு பொருள் எங்கே யிருந்து வரும் என்று கோவித்து, கோரக்கரை நோக்கி, உன் கண்ணை உன் குருவானவர் கேட்டால் தருவாயோ? அப்படி தருவது உண்மையானல் நானும இப்போது வடை தரத்தகுந்தவளாவேன் என்று சொல்ல, அதுகேட்ட கோரக்கர், உடனே தமது கண்களிரணடில் ஒரு கண்ணைப்பறித்து, குருவுக்குக் கொடுப்பதை உனக்குக் கொடுக்கிறேனென்று கொடுக்க, அவள் பயநது, இவர் கண்ணிலொழுகுகிற உதிரத்தைத் துடைத்து நின்றாள். அப்போது, தயை, சாந்தி, வைராக்கியம் முதலிய சிறந்த குணங்களை யுடைய கோரக்கர், அச்சத்தோடு தமக்கெதிரே நிற்கிற பார்ப்பினியை நோக்கி, நீ அஞ்சவேண்டாம், வடையை மாத்திரம் செய்து கொடுத்தாயானல் கொண்டு போய் எமது குருவுக்குத் தருவேன் என்றார். அப்படியேஅநதப்பார்ப்பினி விரைவாகச்செய்துகொடுக்க, வாங்கிக்கொண்டு போய், மச்சேந்த்ர நாதருக் கெதிரே வைத்து வணங்கி நின்றார். அப்போது மச்சேந்த்ரநாதர் இவரைநோக்கி, உன் கண போனவிதம் யாதென்றுகேட்க, இவரும் உண்மையைச் சொல்லக்கேட்டு, இப்படிப்பட்ட தைரியகுணம் எனக்கில்லை, மற்றொரு கண்ணை எனக்குத் தாவென்றுகேட்டார்; அப்படியே கோரக்கர் மற்றொரு கணணையும் பறித்து எதிரே வைக்க, மச்சேந்த்ரநாதர் அதிசயித்து, தமதுதிருக்கையால் இவரைத்தடவி, இருகண்ணும் தந்தருளி, ஆத்மஞானத்தைஉபதேசித்த பிறகு, அமுதுசெய்து, மீதியைக் கோரக்கருக்குக் கொடுத்து, உன்னைப்போன்ற சீடர்கள் இவ்வுலகத்தில் இல்லையென்றார். அதன்பிறகு, கோரக்கர், சாம்பவர், அத்துவயர், பிரபாவர், கைநியர், நிவர்த்தர், ஞானதேவர், விசோபர், நாமதேவர், ஜநாயி இவர்கள் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்யப்பெற்று, ஆத்மஞானமானது பூலோகத்தில் நிலைபெற்று விளங்கியது என்று சிவ பெருமான் உமாதேவியாருக்குச் சொல்லி, மேலே கோபீசந்த்ராஜனது வைபத்தைச் சொல்லத்தொடங்கினார்.

மச்சேந்த்ரநாதர் சரித்திரம் முற்றிற்று.

## கரு-வது கோபிசந்தராஜன் சரித்திரம்.

உத்தரகண்டத்தில், கௌடபங்கால் என்னும் ராஜ்யத்தில், சித்திரகாஞ்சநபுரி என்னும் பட்டணத்துக்கு அரசனாகிய திரிலோகசந்தன் என்பவன், மிகவும் ப்ரதாபசாலியாய் அந்த நகரத்தை ஆண்டுவந்தான். அவன் அப்படி ஆண்டுவருங் காலத்தில், அவன் மனைவியாகிய மைநாவதியின் கர்ப்பத்தில், அதிக ரூபலாவண்யங்களோடுகூடின புதல்வர் ஒருவர்பிறந்தார்; அவருக்குக் கோபிசந்தன் எனப் பெயரிட்டு அன்போடு வளர்க்க, வளர்ந்து பருவம் கிரம் பினகாலத்தில், இவர் தந்தையாகிய திரிலோகசந்தன் தேஹவியோகமடைந்தான். அடைதலும் இந்தக்கோபிசந்தராஜனும் முடிசூட்டப்பெற்று அரசாட்சியை நடத்திவருங்காலத்தில், ஆயிரத்திருநூறுமனைவியரை விவாஹம்செய்தும், ஆயிரத் தறுநூறு நாடகக் கணிகையரையும் அமைத்துக்கொண்டு, அல்லும் பகலும் விஷயாநந்தசாகரத்தில் மூழ்கியிருக்குங்காலத்தில், இவர் தாயாராகிய மைநாவதியார், தமது நாயக வியோகத்தால் மிகுந்த வைராக்யத்தையுடையவராய்,ஒருநாள் மேல்மாடத்திலேறி,நான்கு திசைகளையும் நோக்கும் போது, சகல சித்திகளையும்பெற்று, ஆசாபாசங்களைக் கனவிலும் நினைக்காத ஆத்மஞானியாயும், இடைவிடாத ஹரிநாமஸங்கீர்த்தநபரராயும்,பிக்ஷாந்நத்தால் தேஹயாத்ரையை நடத்துவோராயும், தயை, சாந்தி முதலாகிய ஆத்மகுண பூர்த்தியுள்ளவராயும் இருக்கிற ஜாலந்தரர் என்பவர், குளிர் காய்வதற்காகக், காட்டுக்குப்போய், உலர்ந்த விறகுகளைக் கட்டாகக் கட்டித் தலைமேல் வைத்துக்கொண்டு விரைந்து வருவதையும், அந்த விறகுக்கட்டானது அவர் தலைமேல் படாமல் ஒரு முழத்துக்கு மேலே அந்தரமாய் வருவதையும் நோக்கி, இது என்ன புதுமையாயிருக்கிறதென்று திகைத்து, இவர் மனிதர் அல்லர், தெய்வமே யென்று நினைத்து, இவராலே என் பவரோகம் நீங்குமென்று மன வுறுதிகொண்டு, மாந வெட்கங்களை விட்டு, அவர் திருவடியை யடைந்து வணங்கி, உஜ்ஜீவிக்கலாம் என்னும் எண்ணத்துடனே, அவர்க்கு உபசாரஞ் செய்வதற்குரிய வஸ்துக்களை யெல்லாம் சேகரித்துக் கொண்டு அவரிருக்கும் மடத்துக்குப்போய், சதாகாலமும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநபரராய்ப்பரமாநந்தபரித ஹ்ருதயராயிருக்கிற அந்தஜாலந்தரருக்கெதிரே நின்று, கை கூப்பி வணங்கி, ஸ்வாமீ! அடியேனுக்கு ஞாநோபதேசம் செய்து அடியேனை உஜ்ஜீவிக்கச் செய்ய வேண்டும் என்று ப்ரார்த்திக்க, இதனைக்கேட்ட ஜாலந்தரர், அவளை நோக்கி நான் எளியவன், எங்குந் திரிந்துகொண்டிருப்பவன், நீயோ அரசனுக்குத் தாயாயிருப்பவள், உனக்குத் தகுந்த ஆசாரியரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்வது நன்மையாகுமென்று சொல்ல, மைநாவதியார், ஸ்வாமீ! உம்மிலுஞ் சிறந்த ஆசாரியரை எங்கே தேடுவேன்? உம்மைச் சரணமடைந்த அடியேனை எப்படியாகிலும் கடைத்தேற்றவேண்டும் என்று பலமுறை வணங்கிப் பிரார்த்திக்க, தபசியானவர், அவளுடைய

சித்தசுத்தியை யறிந்துகொண்டு சந்தோஷித்து, அவளைச் சமீபத்தில் அழைத்து, அவள் தலைமேல் கையைவைத்து ஞானோபதேசம் செய்தருள, அவள் உபதேசம் பெற்ற வுடனே தன் மமதை முழுதும் நீங்கிப் பகவானை மனோ சாக்ஷாத்காரமாகக் கண்டு, குருமூர்த்தியைத் தொழுது பேரானந்தக் களிப்பை யடைந்து, விடை பெற்றுத் தமது அரண்மனைக்குப் போய், அவகாசம் நேரிட்ட காலங்களிலெல்லாம் சற்குருநாதரிடத்திற்கு வந்து வணங்கி, ஆத்மாநுபவத்தைப் பேசிக்கொண்டு, மனைக்குப் போய்க்கொண்டிருந்தார். இப்படி மைநாவதியார், ஆத்மாநுபவம் செய்து கொண்டு ஸ்ரீ ஹரிபக்தியிற் சிறந்து விளங்குகிற காலத்தில், இவர் புதல்வராகிய கோபிசந்தராஜர், ஒருநாள் தம் மீது அன்பிற்சிறந்தவளாகிய மூத்தமனைவியிடத்திற்கு வந்தார்; வந்தபோது அவள், கணவனுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து, சயநத்திற் பொருந்தியிருந்து, தாமபூலங் கொடுத்து, என் ப்ராணநாதனே! நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன், அதைக் கேட்டு அப்படியே எனக்குத் தயை செய்யவேண்டுமென்றுவேண்ட, அரசன் அது என்ன சொல்லென்றுகேட்க, உமது தாயார், யாரோ ஒருபரதேசியின்மடத்துக்குப்போய்உபதேசம்பெற்றுக்கொண்டு வந்தார். அப்படி வந்த நாள் முதல் அடிக்கடி அவரிடத்துக்குப் போவதும் வருவதுமாயிருப்பதைக் குறித்து நமது குடிக்குப் பழியுண்டாயிருக்கிறது என்றுசொல்ல, அரசன்கேட்டுக் கோபங்கொண்டு,நீசொல்வதை நாளை உதயத்தில் அறிகிறேன் என்று சொல்லி, மறுநாள் உதயத்தில், தன் சபைக்குவந்த மந்திரியை நோக்கி, நமது நகர்ப்புறத்தில் நெடுநாளாய் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிற, ஜாலந்தர் என்னும் ஸந்யாசியை நான் சேவிக்க விரும்புகிறேன், ஆகையால் அவரை இங்கேயழைத்து வாருமென்று சொல்ல, மந்திரியும் அப்படியே அவரை யழைத்து வருதலும், அரசன் எதிர்கொண்டு போய் அவரை வணங்கியழைத்து ஆசநந் தந்து, இன்று நீர் எழுந்தருளினதனால் நான் புநிதன் ஆய்விட்டேன் என்று இன்சொற் கூறி உபசரித்து, அன்றிரவிலும் அரசன் தன்னிடத்திலேயே தங்கியிருக்கும்படி ப்ரார்த்தித்து, அவரும் அப்படியே தங்கி நித்திரை செய்யும்போது, அரசன் சிலரை யேவி அவரைக் கிணற்றில் தள்ளி விடும்படி செய்தான்; அவர்களும் அப்படியே செய்தார்கள். செய்தாலும், ஜாலந்தர் அந்தக் கிணற்றில் அழுந்திப்போகாமல் நீரின்மேல் மிதந்துகொண்டு, ஸ்ரீ ஹரி நாமஸங்கீர்த்தநபரராயிருந்தார். இப்படி யிருக்க, சூரியோதயமானவுடனே, அரசன் தாயாராகிய மைநாவதியார் தமது குருமூர்த்தியை அவர் மடத்திற்சென்று தேடிக்காணாமல் திகைத்து, நீரில்லாமல் மயங்குகிற மீனைப்போலவும், தாயில்லாமல் தவிக்கிற குழந்தையைப்போலவும் தத்தளித்துப்புலம்பி, சற்குருநாதர் எங்கேபோனாரோவென்று மனம்வருந்தியிருக்கையில், ஜாலந்தர் சீடர்களில்சிறந்த கானேபா என்பவர், பவ நோயை யறுத்தவராகிய எழுநூறு பேருடன் உலகமுழுதும் தேடிக்கொண்டிருக்க, அரசன் ஒருநாள் தன் அரண்மனை முற்றத்தில்

அநேகமாதர் பரிமளம் பூசிச் சிகையை வாரியலங்கரித்து உபசரிக்க உலாவிக் கொண்டிருந்தான். அப்போது மேல் வீட்டி விருந்து கீழே நோக்கித் தன் புதல்வனைக் கண்ட மைநாவதியார், இப்படிப்பட்ட பேரழகுள்ள நமது புதல்வன் கடைசியில் ஒருநாளில் யமன்கையிற் சிக்கி வருந்துவானல்லவா? வினை வசத்தால் நேரிடுகிற மரணத்தையும் யம பாதையையும் நீக்க நம்மால் முடியாதே, என்ன செய்வோமென்று கண்ணீர் சிந்தி யழுதாள்; அந்தக் கண்ணீரானது அரசன்மேல் விழ, அரசன் இந்த நீரை, மேலேயிருந்து யாரோ தெளித்தார்களென்று நினைத்து மேலே நிமிர்ந்து, பார்த்து, அழுதுகொண்டிருக்கிற தாயாரைப் பார்த்து, நீர் அழுதற்குக் காரணம் யாதென்று கேட்க, அவள் உண்மையான செய்தியைச் சொல்ல, அவன் கேட்டு வருந்துகையில் தாயார், அப்பா மைந்தனே, இவ்வுலகத்தில் காணப்படுவன யாவும் அழிந்து போவனவே யன்றி இருப்பன ஒன்று மில்லை; ஆகையால் நீ சற் குருவை யடைந்து அவரது அருள்பெற்று, உன்சரீரத்தைத் தெய்விகமாக்கிக்கொண்டால் நன்மையாமென்று சொல்ல, அரசன், அப்படிப்பட்ட சற்குரு நாதர் எங்கே கிடைப்பாரென்று கேட்க, மைநாவதியார், அப்பா, ஜாலந்தரர் என்பவர் ஒருவரிருந்தார், அவர் ஆசாரியலக்ஷணங்கள்யாவும்அமையப்பெற்றவர், அவரைப் பன்னிரண்டு வருஷமாகக் கண்டிலேன் என்று சொல்ல, அரசன் கேட்டு, ஒன்றும்சொல்லாமல்போய், ஸ்நாநமசெய்துபோஜநஞ்செய்தபிறகு, அநுதாபத்தோடு தாயாரிடம் வந்து நடந்த செய்தியைச் சொல்லி வருந்தினன். இப்படியிருக்க, காநேபா எழுநூறு சீடரோடு பல இடங்களில தேடியுங்காணமல், பரததேசத்தையடைநதார். அங்கே, மச்சேந்திரரைத்தேடிவந்த கோரக்கர் காநேபாவைக் கண்டு, காடாலிங்கநம் செய்துகொண்டு, அங்கே தங்கியிருக்குங்காலத்தில், வந்த கோரக்கர், அவர்களை நோக்கி, கோபிசந்தன், ஜாலந்தரரைக் கிணற்றிலே தள்ளிவிட்டான், இதனையறியாமல் ஏன் வருந்துகின்றீர்கள், வருந்தித்தேடினல் என்னப்ரயோஜநம் என்றார். அதைக் கேட்ட காநேபா, குருவிருப்பிடம் தெரிந்துகொண்டு, கோரக்கரை நோக்கி, கோரக்கரே! மலையாளத்தில் உமமால் சந்நியாசம் பெற்ற குருக்களில் எத்தனைபேர் பெண்ணுசைகொண்டு குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு, அந்த மனைவி மக்களை நீங்காதிருக்கிறார்கள் என்றும், அதை யறியாமல் எம்மை யிகழ்ந்தீர் என்றும் விளையாட்டாய்ப் பேசிக்கொண்டு, எழுந்திருந்து, இருவருமாகப் போய், காஞ்சநபுரிச்சோலையில் மைநாவதியாரைக்கண்டு இந்த செய்தியைச் சொல்லவேண்டுமென்றெண்ணிக் காத்திருந்து, பிறகு மைநாவதியார்க்குக் காநேபா, தாம் வருவதைத் தெரிவிக்கும்பொருட்டு முன்னே சிலரை யனுப்ப, அவர்களால் காநேபா வரவைக்கேட்ட மைநாவதியார் மகிழ்ந்தார். அப்போது காநேபா வந்து, மைநாவதியாரை நோக்கி, நீர் மனம் வருந்த வேண்டாம், இன்னம் ஏழுநாளில் ஜாலந்தரரைக் காண்பீர் என்று சொல்லக் கேட்ட மைநாவதியார், மனக் களிப்பு மிகுந்து, தமது புதல்வராகிய கோபி

சந்தராஜரிடத்திற்குப்போய், அவரை நித்திரை விட்டெழுந்திருக்கச்செய்து, தூக்கமயக்கத்தைத் தெளிவித்து, இன்று நம்முடைய குருநாதருடைய சிடராகிய கானேபா என்பவர் வந்து சோலையிலிறங்கியிருக்கிறார், அவர் திருவடியைக்கண்டு சேவித்தால் நீ எல்லாப்பாவங்களினின்றும் விடுபடுவாய், அன்றியும் எல்லாப் பதங்களிலும் மேலான மோக்ஷபதத்தையும் அடைவாய்என்று சொல்லுதலும்,அரசன் என் தாயானவள் நான் நன்மையையடையச்சொன்ன வார்த்தையை நான் நெகிழவிடேன் என்று தாயார் திருவடியை வணங்கித் தமது சபையைச்சேர்ந்து, மந்திரியையும் சதுரங்கசேனையையும் அழைத்துக்கொண்டுபோய்க் கானேபாவைக் கண்டு, அன்போடு அவரது திருவடியைப்பணிந்து தோத்திரஞ்செய்துநிற்க,அவர் நீயாரென்றுகேட்க அடியேன் கோபிசந்த ராஜன் என்று சொல்ல, அவர் இவனே இன்னானென்றறிந்துகொண்டு, அடாமூடா! கள்ளை அமுதென்றும்,கழுதையைக்குதிரையென்றும் சொல்லுவதுபோல, உனக்கு இந்தப் பெயரிட்டவர் யாரோ அறிந்திலேன்! நீ பரமதுஷ்டன், அவிவேகியாகிய நீ மனையாள் வார்த்தையைக் கேட்டு, குருநாதரைக் கிணற்றில் தள்ளினாய், தினையளவுஞ் சிந்திக்காமல் இப்படிப்பட்ட மஹா பாதகம் செய்தாய், ஆதலால் உனக்கு ஆசந்த்ர தாரார்க்கமாகிய கோர நரகப்ராப்தியுண்டு, இப்படியுஞ் செய்யலாமா என்று கோவித்துச் சொல்ல, கோபிசந்தராஜர் வெருவி, கால் கைகள் நடுக்க மடைந்து, அடியேன் செய்த பெரும்பிழையை மனது கொள்ளாமல் பொறுத்து அடியேனை ரக்ஷித்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, அந்தச்சமயத்தில் மைநாவதியார் எதிரேவந்து கானேபாவுக்கு ஆதேசு சொல்ல, அவர் மனமகிழ்தலும், தம் புதல்வராகிய கோபிசந்தராஜரைப் பிடித்து அந்தக் கானேபா கையில் கொடுத்து, இவன் என் புதல்வனே, இவனுடைய பிழையைப்பொறுத்து ரக்ஷித்தருளவேண்டும் என்று வணங்க, கானேபா அது கேட்டு மன மகிழ்ந்திருக்க, மைநாவதியார் அவரை நோக்கி, ஸ்வாமீ! தேவரீர் எங்கள் நகரத்தில் வந்து எங்களுக்கு அபயம் தந்தருளவேண்டுமென்று வேண்ட, அந்தக் கானேபா முதலான எல்லாரும் வருதலும், அவர்களைக் கோபிசநதராஜர் எதிர்கொண்டு பணிந்து, அழைத்து வந்து, ஆசநம் தந்து, பாதபூஜை செய்து, அமுது செய்தருளப் பண்ணி, புஷ்ப சந்தன தாம்பூலங்களையும் கொடுத்தபிறகு, கானேபா, அரசரை நோக்கி, சற்குருநாதரை எந்தக் கிணற்றில் தள்ளினாய், உண்மையாய்ச் சொல்லென்று கேட்க, கிணற்றைச் சுட்டிக் காட்டி, இந்தக் கிணற்றிலே வீழ்த்தினேன் என்று பயந்துசொல்ல, கானேபா, அரசரைநோக்கி, நீகடைத்தேறும் வழியிருக்கின்றது அஞ்சவேண்டாம்; இரும்பினாலும், செம்பினாலும், வெள்ளியினாலும், பொன்னினாலும் உன்னைப்போன்ற உருவங்கள் தனித் தனியாய்ச் செய்விப்பாயாகவென்று நியமிக்க, அரசனும் அப்படியே செய்வித்து, கிணற்றருகே வந்து, குருநாதர்மேல் மூடியிருந்த இலத்தியை யெடுப்பிக்கவே, சற்குருநாதரானவர், பூர்ணசந்திரன்போல விளங்கினார். எல்

யாவரும் கண்டு சந்தோஷித்து அதிசயித்தார்கள். அப்போது காமேனபா, சற்குருநாதர் திருவடிகளை மனத்திலிருத்தி, ஸ்வாமீ! இவ்வரசனுக்கு அடியேன் அபயங் கொடுத்திருக்கிறேனாதலால், தேவரீர் இவன்செய்தபிழையைக் குறித்துச் சபிப்பதாயிருந்தால், அந்தச்சாபம் இவனுருவம்போலச்செய்யப்பட்ட பிரதிமைகள்மேல் வ்யாபிக்கும்படி க்ருபைசெய்து ரக்ஷிக்கவேண்டும் என்று மனத்தில் சிந்தித்து, கோபிசந்தனை நோக்கி, இரும்பு முதலிய லோஹங்களால் செய்யப்பட்ட பிரதிமைகளை இந்தக் கிணற்றில்விட்டு, ஸ்வாமிக்கு ஆதேசு சொல்லக் கடவையென்று சொல்ல, அரசன் அப்படியே செய்ய, கிணற்றுக்குள்ளேயிருக்கிற குருநாதர், நீ யாரென்று அரசனைக்கேட்க, அடியேன் கோபிசந்தனென்று அரசன்சொல்ல, நீசாமபலாகக் கடவையென்று குருநாதர் சபிக்க, அந்தச் சாபம் அரசனிடத்தில் அணுகாமல் பிரதிமைகள் மேலேவியாபிக்கவே, அவை நீறாயின; அப்போது காமேனபா, அரசனை நோக்கி, நீ கிணற்றருகேயிருந்து குருவுக்கு ஆதேசு சொல், பயம் வேண்டாமென்று சொல்ல, அரசன், ஸ்வாமீ! இனிமேலும் என்ன விளையுமோவென்று அஞ்சுகிறேன்; ஆதலால் நீரே கதி யென்று ஆதேசு சொல்லக் கேணியிலிருந்து கேட்டோராகிய குருநாதர், நீ யாரென்று கேட்க, அடியேன் மைநாவதியார் மைந்தனென்று சொல்ல, நீ அமரமாகக் கடவையென்று குருநாதர் வாழ்த்த, கேட்டவர் யாவரும் கை கொட்டி, ஆநந்த பரவசரானார்கள். பிறகு அந்தக் குருநாதரை வெளியே வரச்செய்து, மைநாவதியார் அவர் திருவடியைப்பற்றிக்கொண்டு, கடல்போலக் கண்ணீர் பெருக அவர்பாதங்களைக்கழுவிப் பாதபூஜையும் செய்து முடிந்தபிறகு, கோபிசந்தரும பாதபூஜை முதலானவைகளைச் செய்து வணங்கித் தன் மந்திரிகளைப் பார்த்து, எனது அரசாட்சியை என் புதல்வனுக்குக் கொடுத்துவிடுங்களென்று சொல்லி, சற்குருநாதனை நோக்கி, ஸ்வாமீ! அடியேனுக்குத் தேவரீருடையதுறவறதர்மத்தைத்தந்தருள வேண்டும் என்று பிரார்த்திக்க, குருநாதர், ஓகோபிசந்தனே, நான் உனக்கு அமரமாக ஆசீர்வதித்திருக்கிறேன், அதைப்பெற்று அரசாட்சியை நடத்திப் போகசுகத்தை அநுபவியாமலவிட்டு, வைராக்யத்தை யடைந்து வீணாக உடம்பை வருத்துவதனால் என்ன ப்ரயோஜநம்? உலகத்தில் வைராக்கியம் பெறுவதினும நஞ்சுண்ணலாம், ஆகாயத்தில் உலாவலாம், சப்தசமுத்திரங்களையும் நீந்தலாம், மற்றுமுள்ள அருமையான காரியங்களையுஞ் செய்யலாம், வைராக்யத்தைக் காப்பாற்றுதல் மிகவும் அருமையென்று சொல்ல, கோபீசந்தன் சற்குருநாதருடைய திருவடியைத் தாழ்ந்து வணங்கி, ஸ்வாமீ! இதுவரைக்கும் அடியேன் அநுபவித்த விஷயாநந்தம்போதும், ஆகையால் தேவரீர் கட்டளைக்கேற்கும்படி செய்தருள வேண்டும் என்று ப்ரார்த்திக்க, குரு நாதர் அரசன்விரும்பினபடியே துறவாசிரமத்தை அருள்செய்தார். செய்தவுடனே அரசன் ஸந்யாசி வேஷம் பூண்டு சோளிகையைத் தாங்கி, எல்லா வீடுகளிலும் பிச்சையேற்று வரும்போது, தம் வீட்டின் வாசற்படியில்வந்து நின்று

சற்றும் மனவருத்தமில்லாமல், ஆலக் தாயே என்றவுடனே, அந்தச் சத்தத்தைக் கேட்ட மனைவியானவள் விரைவாய் வெளியே வந்து, தன் கணவரை நோக்கி அந்தோ, என் ப்ராணநாதரே! நீர் இந்தக் காரியம் செய்தது தகுதியாமோ? என்னிடத்தில் ஏதோ குற்றங்கண்டு இப்படிச் செய்தீர்போலும் என்று சொல்லி, நாயகர் இந்தக் கோலங்கொண்டதைப் பார்த்தால் இவ்வுலகத்தில் எந்த மாதர்களாயினும் பொறுப்பார்களா என்று புலம்பி அழுது ப்ரலாபிப்பதை அரசன்நோக்கி, அவளுக்குவேண்டிய புத்திமதிகளைச்சொல்லித் தேற்றி, மற்றவருடைய துக்கத்தையுமநீக்கி, தன் தாயினிடத்துக்குப்போய்க் கும்பிட்டு நிற்க, அந்தத் தாயாகிய மைநாவதியார் புதல்வனை அன்போடு அணைத்து, உச்சிமோந்து ஆதரிக்க, அவரை நோக்கி, தாயே! உன் கையால் பாற்சோறிடவேண்டும் என்றார். அப்படியேயிட்டு, அமுது செய்யும்போது, மைந்தனை நோக்கி, என் வயிற்றிற்பிறந்த நீ இப்படிப்பட்ட வைராக்யத்தையடைந்து, என் குலமுழுதும் ஈடேறச் செய்தாய், இந்த ஆசிரமம் பூண்ட உன்னைப் பார்த்த என் மனத்துக்குண்டாயிருக்கிற பெரு மகிழ்ச்சிக்கு ஒரு அளவுண்டோ, இல்லை என்று வாழ்த்தி, குழந்தாய்! நீ உன் விருப்பத்தின்படியே திவ்ய தேசயாத்திரை செய்துகொண்டு, பன்னிரண்டு வருஷத்துக்கொருதரம் இங்கு வந்து நான் தருகிற பாற்சோற்றை யுண்டு என் மனத்தை மகிழச் செய்து போவென்று சொல்லவே, கோபிசந்தர், அப்படியே செய்கிறேனென்று தாயினிடத்தில் விடைபெற்றுப் போய், புண்ய தீர்த்தயாத்ரையும், புண்ய க்ஷேத்ரயாத்ரையும் செய்துகொண்டு பத்ராவதிநகரத்துக்குப்போய், அந்தப் பட்டணத்தில் சம்பாவதி என்னும் பெயரையுடைய தன் தங்கையிருப்பதை நினைத்து, அவள் வீட்டுவாசற்படியில் போய்நின்று ஆலக் என்று பிக்ஷை கேட்க, அவள் வீட்டு வேலைக்காரி யோடிவந்து இவரைப் பார்த்து ஆச்சரியப்பட்டு, வீட்டுக் குள்ளே வந்து, அம்மா! இங்கே பிக்ஷையேற்க வந்தவரை நோக்கினல், கோபிசந்தர் என்று எனக்குத் தோன்றுகின்றது, நீயும் வந்து பார்த்துநிதானித்தறியவேண்டும் என்றுசொல்ல, உடனே விரைந்து வந்து இவரைப் பார்த்து, தன் தமையனென்றறிந்து, இடி வீழ்ந்த மரம்போல் நிலத்தில் விழுந்து, அழுது தேமபிக் கதறி, அண்ணரே! அரம்பையர்போன்ற பேரழகையுடைய அநேக மாதரையும், குபேரன் பட்டணமாகிய அளகை போன்ற பட்டணத்தையும், இந்திரனுடைய அந்தப்புரம் போன்ற அந்தப்புரத்தையும், அவனிடத்திலுள்ள நவநிதிகள்போன்ற செல்வங்களையும்விட்டு, இந்தக்கோலமாய் வரக் காரணம் யாதென்றுகேட்க, இவர், தங்கையை நோக்கி, தங்காய், நான் சற்குரு கடாக்ஷம் பெற்ற பிறகு, என் மனமானது, ஸ்ரீஹரியின் திருவடி த்யாநத்திலன்றி, வேறொன்றிலும் செல்லவில்லை, ஆதலால், வெளிப்பட்டு வந்துவிட்டேன், அதைக்குறித்து நீ துக்கிக்கவேண்டாம் என்று சொல்லி, அவளிடத்தில் விடை பெற்றுத் தீர்த்தயாத்ரை செய்துகொண்டு, பன்னிரண்டு வருடங்கள் கழியவே, தம் தாயினி

டத்திற்குவந்து, அவரைச் சேவித்து, அவர் தந்தபாற்சோற்றை யமுது செய்துபோயினர்.

அதன் பிறகு, மங்கையர்க்கரசியாகிய ப்ரேமளா என்பவள், அரசாட்சி செய்கிற மலையாள தேசத்துக்கு மச்சேந்திரநாதர் ஒருகாலத்தில் போக, அம் மங்கையர்க்கரசியானவள், இவருடையகட்டழகைக்கண்டு மயங்கினாள். அவள் அழகைக்கண்டு இவரும் மயங்கினார். இப்படி ஒருவரிடத்தில் ஒருவர் மோகங்கொண்டு, இருவருங் கூடி, விஷய போக சாகரத்தில் மூழ்கி யழுந்திக் கிடக்குங்காலத்தில், இந்த ப்ரேமளாவயிற்றில் ஒரு ஆண்குழந்தை பிறந்தது, அந்தக் குழந்தைக்கு மீநநாதன் என்று பெயரிட்டு, மிகுதியாகிய அன்போடு வளர்த்துவருங் காலத்தில், ஒரு நாள், ப்ரேமளாதேவியின் முகத்தை நோக்கி, பெண்ணே, தீர்த்தயாத்திரை செய்யவந்து, உன்னுடைய மிக்ககாமத் தீயிற் சிக்கி, உன்னைப் பிரியமாட்டாமல் பரிதபிக்கிற என்னை அழைத்துப் போவதற்குக் கோரக்க நாதன் வருவான், அவன் என் மாணாக்கன், என்று சொல்லக்கேட்டு, அவள் மனவருத்தத்தோடு மந்திரிகளை நோக்கி, நம்முடைய நகரைச் சுற்றிலும் காவல் வீரரை அமைத்து, துறவிகள் யாவராயினும் வந்தால், நிர்த்தாக்ஷண்யமாய், அவர்களைச் சிரச் சேதம் செய்யும்படி கட்டளை பிறப்பியுங்கள் என்றாள். அவர்களும்அப்படியே நகரைச்சுற்றிலும் காவல்வீரரை யேற்படுத்தி இந்த ஏற்பாட்டையும் அவர்களுக்குச் சொல்லி வைத்தார்கள். இப்படி யிருக்க, கோரக்கர், தமது குருவாகிய மச்சேந்த்ர நாதரைத் தேடிக்கொண்டுவந்து, இந்த நகரத்தில் ப்ரவேசித்து, ஒரு வீட்டு வாசற்படியில் நின்று ஆலக் என்று சொல்ல, அந்த வீட்டுக்காரி வெளியே வந்து, இவருடைய வயது அழகு முதலியவற்றைக்கண்டு, இரக்கங் கொண்டு, நகரைச் சுற்றிலுங் காவல்வீர ரிருக்கிறார்கள், அவர்கள் துறவியாகிய உம்மைப்பார்த்தால் கொலை செய்வார்கள், இந்த ஊரையாள்கின்றவளாகிய ப்ரேமளா தேவியின் கட்டளை இப்படி யுண்டாயிருக்கின்றது, ஆகையால், நீர் இந்த நகரிலிருக்க வேண்டாம், தக்ஷணமே அவர்கள் கண்ணுக்குப் புலப்படாமல் வேறோரிடத்துக்குப் போய் விடும் என்றாள். அதைக் கேட்ட கோரக்கநாதர், அச்ச மடைந்து, நமது சற்குரு நாதரை எப்படித் தேடிக்காண்பது என்று மனத் துயரத்தோடு, ஒரு மரநிழலில் உட்கார்ந்திருந்தார். அப்போது அந்த வழியாகச் சில வேஷதாரிகள் வந்தார்கள். அவர்களை கோரக்கர் நோக்கி, நீங்கள் துன்பத்தோடு இங்கே வந்ததற்குக் காரணம் யாதென்றுகேட்க, அவர்கள் கோரக்கரை நோக்கி, ஸ்வாமீ! இந்த நகரத்தை யாள்பவரிடத்திற்குப் போய், எங்கள் கூத்தாட்டின் விநோதங்களைக்காட்டி, ஏதாயினும் லாபமடையலா மென்று எண்ணி வந்தோம், வரும்போது வழியில், மிருதங்கக்காரன் நோயாளியாகி விட்டான். இனி நாம் செய்வது என்ன வென்று எண்ணித் துன்ப மடைந்தோம் என்று சொல்ல, கோரக்க நாதர் அவர்களைப் பார்த்து, நான் மிருதங்கம் நன்றாய் வாசிப்பேன், என்னை அழைத்துக்கொண்டு போ

ங்கள் என்று சொல்லினர். அதனைக் கேட்டு அந்த வேஷதாரிகள் மனமகிழ்ந்து இவரையும்அழைத்துக்கொண்டு நகரத்தினுள்ளே போய், மச்சேந்திரநாதரும், ப்ரேமளாவும் சேர்ந்து ஒரே ஆசனத்தில் வீற்றிருக்கக்கண்டு, அவர்களுக்கெதிரே, விசித்திரமாய் நடனஞ் செய்ய, கோரக்கரும் அந்த நடனத்துக்கிணங்க மத்தளங் கொட்டினர். அப்போது, கோரக்கர், தாம் வந்ததைச் சற்குருநாதர் அறியும்படி, அந்த மத்தள வோசையால் தெரிவித்தார். உடனே மச்சேந்திரர் அறிந்துகொள்ளுவதற்கு முன்பே ப்ரேமளா அறிந்து, மனம் அஞ்சி, கையைநெரித்து, கோரக்கர்வந்துவிட்டாரென்றுமச்சேந்திரநாதருக்குத் தெரிவிக்கத் தெரிந்து கொண்டு, ஆசனம்விட் டெழுந்து வந்து, சீடனை அணைத்து, இன்சொற்கள் பேசியிருக்கும்போது, ப்ரேமளாவானவள், வேஷதாரிகளுக்கு வேண்டியபொருள்களைக் கொடுத்தனுப்பினபிறகு, தனது நாயகரைக் கோரக்கர் அழைத்துக்கொண்டு போய் விடுவாரேயென்கிற ஏக்கத்தால், அந்பாநாதிகளையும் வெறுத்து, அல்லும் பகலும துக்கித்துக்கொண்டிருக்க, கோரக்கர், தகுதியான சமயம் பார்த்துக்கொண்டே யிருந்து, ஒருநாள், ஸ்வாமீ, தேவரீர் அடியேனொடு எழுந்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, மச்சேந்திரநாதர், தமது ப்ரேமாதிசயத்தையுடைய நாயகியைப் பிரியமாட்டாதவராய், கோரக்கரை நோக்கி, அப்பா, நீர்வள முதலிய பல வளங்களும் அமைந்த இந்த நகரம்போல, உடலுயிர்களுக்கு இன்பஞ் செய்வதாகிய நல்ல நகரம் வேறொன்றில்லாமையாலும, பிறந்த புதல்வன் மிகவும் பிரியமுள்ளவன் ஆகையாலும, இவ்விடம் விட்டு வருவதற்கு வாய்ப் பில்லாமல் இருக்கின்றது, நீ வாவென்று உன்னை யனுப்புவதும் குற்றமாயிருக்கின்றது, ஆதலால் நான் ஒன்றுஞ் சொல்ல மாட்டேன் என்று மனம் வருந்துகிற சற்குருநாதருடைய துன்பத்தைக் கோரக்கர் பார்த்து, இதற்கு யாம் என்ன செய்வோமென்று, நினைத்துச் சிலநாள் அங்கேயிருக்க, ஒருநாள் ராத்திரியில், மனைவியோடு சயனித்துக்கொண்டிருக்கிற மச்சேந்திரருடைய குழந்தை, மென்மையாகிய சயநத்தின்மேல் ஜலமலங்களைவிட, அதனை யறிந்த மச்சேந்திரர், தமது யாளுக்காரகிய கோரக்கரை யழைத்து, இந்தக் குழந்தையை நீ கழுவிக்கொண்டு வாவென்று சொன்னவுடனே, எடுத்துக்கொண்டு போய், உதயகாலத்தில் ஆற்றிற்கழுவிக் கல்லின்மேல் மோதி, உடம்புமுழுதும்சிதைந்து துண்டுதுண்டாய்த் தெறிக்கும்படி துவைத்து வெயிலில் உலர்த்தினர். மச்சேந்திரர், கோரக்கரை நோக்கி, எங்கே குழந்தையென்று வினவ, அவர் நீரில் துவைத்து, வெய்யிலில் உலர வைத்தேன் என்று சொன்ன வுடனே, மச்சேந்திரர், இவன் குழந்தையைக் கொலைசெய்தானென்றறிந்து, நிலத்தின்மேல் வீழ்ந்தலறி, மூர்ச்சித்தார். அப்போது, அவர் மனைவியாகிய ப்ரேமளா, வயிற்றிலும், மார்பிலும், முகத்திலும், தலையிலும் அறைந்துகொண்டு, கோவென்றலறிப் புரண்டு விழுந்தாள். குருநாதராகிய மச்சேந்திரர் மயக்கந்தெளிந்து கோரக்கரை நோக்கி, என் குழந்தையைக் கொன்றது உனக்கு அழகோ! அந்தக் குழந்தையாகிய மீநநாதனை, இந்த க்ஷணத்தில்,

நான்பார்க்கும்படி வரவழைக்காமற் போனாயானால், நீ நல்லமாணாக்க னல்லேயென்று சொல்லுதற்குமுன்னே, நூற்றெட்டு மீநாதர்களை யுண்டுபண்ணிக்காட்ட, ப்ரேமளா, இதைக்கண்டு, மிகவும் ஆச்சரியப்பட்டு, என் வயிற்றிற் பிறந்த புத்திரன் இன்னானென்று காட்டவேண்டுமென்று வேண்ட, நூற்றேழு மீநாதர்களை மறைத்து, மீதியாயிருந்த ஒரு மீநாதனை, ப்ரேமளாவினிடத்திற் கொடுத்து, இதுதான் உன் குழந்தையென்று சொல்லி, பிறகு சற்குருநாதரை நோக்கி வணங்கி, ஸ்வாமீ! இவ்விடத்தில் நெடுநாளாயிருந்தீர், இப்போதாயினும் என்னோடு வாருமென்று சொல்ல, மச்சேந்திரர், இவன் சொன்னபடியே, இவனோடு போகாதிருந்தால், இன்னம் என்ன அநர்த்தம் நேரிடுமோவென் றெண்ணி, தமது நாயகியாகிய, ப்ரேமளாவின் முகத்தை நோக்கி, பெண்ணே, என் மாணாக்கராகிய கோரக்கர் அழைக்கிறதினால், நான் போய் வருகிறேனென்று சொல்ல, ப்ரேமளாவானவள், நமது நாயகர், போகத்தில் மிகவும் இச்சையுடையவர், ஆனாலும் இவரை நிறுத்தினால் இன்னம் என்ன விபரீதங்கள் உண்டாகுமோ வென்று, அவருக்கு வழிச் செலவுக்கு உதவவேண்டுமென்று ஒரு தங்கப்பாளத்தைக் கோரக்கருக்குத் தெரியாமல் சோளியில்வைத்துக் கண்ணீர்விட்டழுதாள். பிறகு, உம்மை நான் இனிமேல எப்போது காண்பேன் என்று சொல்லி அனுப்ப, சீடராகிய கோரக்கரோடு, நகரத்தை விட்டு, ஒரு அரண்யத்தில் போகும்போது, ஒருவரும் நடவாமல் இருக்கிற இடத்தைப்பார்த்து, சீடரை நோக்கி, இவ்வழியில் திருடர் பயம் உண்டோவென்று கேட்க, சீடர், ஸ்வாமீ! எல்லாவற்றையும் விட்டவுமக்குத்திருடர் பயமேனுண்டாயிற்றென்று கேட்க, இருவரும அங்குள்ள ஒரு தடாகக்கரையிற்போய்ச் சேர்ந்தார்கள். அப்போது குருநாதர் தமது சோளியைச் சீடரிடத்திற் கொடுத்துவிட்டு, சௌச விதி செய்யப் போனபோது, கோரக்கர் அந்தச்சோளியைப் பரிசோதித்துப்பார்த்து, அதனுள்ளே ஒரு தங்கப்பாள மிருக்கக் கண்டு, இதனாலல்லவோ நமது குருநாதர்க்கு அச்சமுண்டாயிற்று என்று ஆலோசித்து, அதை அந்தத் தடாகத்தில் எறிந்து விட்டு, பாளத்தின் பளு வெவ்வளவோ அவ்வளவு பளுவுள்ள கற்களைச் சோளியில் நிறைத்துவைக்க, குருநாதர் தமது அநுஷ்டாந முடித்து வந்து சோளியைத் தூக்கித் தோளில் மாட்டிக்கொண்டு, இருவருமாகக் கூடி வழி நடந்து போய், எதிரே ஒரு வனத்தைக்கண்டு, சீடர் முகத்தைநோக்கி, இந்தவழியில் கள்ளர் பய முண்டோவென்று கேட்க, சீடர், ஸ்வாமீ! திருடர்பயம முன்பே நீங்கிவிட்டது என்றார். குருநாதர் இவன் இப்படிச்சொன்னதற்குக் காரணமென்னவென்று அதிசயத்தோடு ஆலோசித்து, தமது சோளியிற் கையிட்டுப் பார்த்துத் தங்கப்பாளத்தைக் காணாமல் கற்கள் நிறைந்திருப்பதைக் கண்டு, அவற்றை யெடுத்தெறிந்துவிட்டு, கோரக்கா, என் பிரியநாயகியானவள், நமக்கு வழிச்செலவுக்குக் கொடுத்த தங்கப்பாளத்தை யெறிந்துவிட்டுச் சோளியில் கற்களை நிறைத்துவைத்தாய், நீ செய்தகாரியம் மிகவும் நன்றாயிருக்கின்றது, உலகத்தில், சீடர்கள் தமது ஆசாரியர்களுக்கு உடல், பொருள், ஆவி

இம்மூன்றையுங் கொடுப்பார்கள்; அப்படியிருக்க, நீ என் குழந்தை, பொன் எல்லாவற்றையும் நாசஞ் செய்தாய், ஆதலால், நீ யெனக்கு நற் சீடனல்ல, நீ என்னைவிட்டுப் போவென்று கடிந்துசொல்ல, சீடராகிய கோரக்கர், தாங்கள் போகும் வழியிலுள்ள மலையைப்பார்த்து,அதின்மேல் சிறுநீர்விட, அந்த மலை முழுதும் பொன்னாய்விட்டது,அப்போது குருநாதரைப்பார்த்து, தேவரீருக்கு வேண்டிய பொன்னை எடுத்துக்கொள்ளலாமென்று பொன்மலையைக் காட்ட, குருநாதர்,நான் மாயையால் அறிவழிந்தேன் என்றுசொல்லி, மனந் தெளிந்து ஆராய்ந்து கோரக்கா,தேவர்களுக்கு அமிர்தங்கொடுத்த திருமாலே நீ என்பதைத் தெரிந்துகொள்ளாமற்போனேன் என்று சொல்ல, கோரக்கரும் குருநாதரை நோக்கி, ஸ்வாமீ! தேவரீர், சாக்ஷாத் சிவபெருமானே யல்லவோ இப்படி அவதரித்து அடியேன் மஹிமை பெற்று விளங்கும் பொருட்டு, ப்ரபஞ்ச மாயையில் கட்டுப்பட்டு உழலுவோர்போல் நடிக்கிறீர் என்று பல தோத்திரம் பண்ணிக் கொண்டாடி வணங்க, எல்லா வுலகத்தாரும வணங்கத்தகுந்தவராகிய சற்குருநாதர் நகைத்து, பொன்மலையை முன்போலக் கல்மலையாகச்செய்து, இருவரும் வந்து, புட்கரதீர்த்தத்தைக் கண்டார்கள். அவ்விடத்தில் காமேனபாவுடனே ஜாலந்தரர் வந்து கண்டு, ஆலிங்கனஞ் செய்துகொண்ட பிறகு, இவர்களும் முகமன் வசனங்களைச் சொல்லி, ஆனந்தக்கடலில் ஆழ்ந்து, ஸ்ரீபகவத் குணநுபவஞ் செய்து சில நாள் கழிந்த பிறகு, ஒருவரிடத்தில் ஒருவர் விடைபெற்றுக்கொண்டு தத்தம் இடங்களுக்குப் போய்விட்டார்கள். இப்படிப்பட்ட பெருஞ்சிறப் பமைந்த இவர்களைத் தியானிப்பவர்களும், இவர்களுடைய வைபவத்தைக் கேட்பவர்களும் எல்லாச் சித்திகளையும் பெற்று, மெய்ஞ்ஞானத்தையும் அடைந்து, நித்திய வாழ்வினராய் உயர்வற வுயர்ந்த நிர்மலனாகிய பகவானுடைய ஸ்ரீ வைகுந்த பதவியையும் அடைவார்கள் என்று சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லி, மேலே சாங்கதேவரது வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

கோபிசந்தராஜன் சரித்திரம் முற்றிற்று.

---

## கஎ-வது சாங்கதேவர் சரித்திரம்.

ஒருநாள், ஞானதேவர், நிர்மலராகிய பகவத் சந்நிதி யடைந்து பகவானை வணங்கி, ஸ்ரீ லக்ஷ்மீநாதனே, அடியேன் அளகாபுரிக்குப் போகிறேன், விடை கொடுத் தருளவேண்டும் என்று ப்ரார்த்தித்து விடை பெற்றுப் போனார். போனவர், சர்ப்பாபரணனாகிய சிவபெருமானென்று சொல்லத் தகுந்த சித்தேசுவரனிடத்தில் வர, திருவாழியை யுடையவராகிய திருமாலின் உருவத்தையே கொண்ட ஞானதேவர் எழுந்தருளினதை, சாங்கதேவர் அறிந்து கொள்ள, அதற்குமேலே நடந்த செய்தியைச் சொல்லுவோம்; எப்படியென்

ருல், பிரமதேவனுடைய ஒரு திநத்தின் முதற்சாமத்துக்குள்ளே பதினுன்கு இந்திரர்கள் பிறந்து, மயக்கத்தோடுகூடிய கருமத்தின் வசப்பட்டவர்களாய், பயங்கரமாகிய சிறையில் முற்காலத்தில் அடைபட்டார்கள். அப்போது, நாரதமுனிவர் அவர்களுக் கெதிரே வர, அவர்கள் அம் முனிவரை வந்தனை வழிபாடுகள் செய்து வணங்கித் தோத்திரம் பண்ணுதலும், முனிவரும் மன மகிழ்ச்சியோடு அவ்விடத்தில் ஸ்ரீ ஹரி நாம ஸங்கீர்த்தநஞ் செய்துகொண்டு எழுந்தருளி யிருக்க, மேலே சொல்லப்பட்ட பதினுல்வரில் ஒருவராகிய சாங்கதேவர், நாரதமுனிவர் முகத்தைப் பார்த்து, ஸ்வாமீ, இந்தச் சிறையி னின்றும் நீங்கும்படி அடியேனுக்குக் கிருபை செய்யவேண்டுமென்று வண ங்க, நாரதமுனிவர் நோக்கி, சாங்கதேவா, உன் எண்ணமானது விண்ணுலக த்தில் முடிவு பெருது, மண்ணுலகத்தில், பண்டரி புரத்தில், போய்ச் சேர் வாயாஞல் உன் தீவினை தீரும். அந்தப் பண்டரிபுரம் என்பது இவ்வுலகத்தி லுள்ள ஒருவைகுந்தமென்று சொல்லத்தகுந்தது. அவ்விடத்தில் ஸ்ரீகண்ண பிராஞனவர், செங்கல்லின் மீது இடுப்பிற் கையை வைத்துக் கொண்டு, நின்ற திருக் கோலமாய்ப் புண்டலீகர்க்குச் சேவை சாதித்தருளின திவ்ய வேஷத்தைச் சாதுக்கள் அநேகர் வந்து தரிசித்து ஸ்ரீ ஹரி பஜனை செய்து கொண்டு தங்கி யிருக்கிறதஞலே, நீ அந்த க்ஷேத்ரத்தை அடையவேண்டும் என்று சொல்லக் கேட்டுச் சம்மதித்த சாங்கதேவர், ஸ்வாமீ, துக்கரூபமாகிய இந்தச் சரீரத்தை விட்டு, அங்கே போகும்படியான உபாயமொன்றை அருள் செய்ய வேண்டு மென்று ப்ரார்த்திக்க, முனிவர் த்வாதசாக்ஷரி மந்த்ரத்தை உபதேசித் தருளிஞர். உபதேசம்பெற்ற சாங்கதேவர் தக்ஷணமே முன்னைய சரீரத்தை விட்டு, கங்கைக் கரையில் உள்ள ஒரு விருத்த வேதியனிடத்தில் அவதரித்தார். அவதரித்தலும் அவரது சௌநதரியாதிகளைக் கண்ட தாய் தந்தையர் அளவற்ற மகிழ்ச்சியோடும் அன்போடும் வளர்க்க வளர்ந்து, எட்டு வயது நிரம்பின வுடனே உபநயநம் செய்வித்தார்கள். பிறகு, அவர் எங்கே போகவேண்டுமென்று நினைத்தாலும் அவ்விடத்துக்குப் போகும்படியான கமந சக்தியையும், சொன்ன சொற்க ளெல்லாம் சொன்ன வண்ணமாகவே பலிக்கும்படியான வல்லமையையும், சிறந்த அஷ்டமா சித்திகளையும், அறு பத்துநான்கு கலைஞாநத் தேர்ச்சியையும், அஷ்டாங்கயோகப் பயிற்சியையும் பெற்று, ஆயுளை வளர்த்துக்கொண்டு வாழ்ந்திருந்தார். இப்படி ஆயிரத்து நானூறு வருடத்தளவும் இறவாமலும், முதுமையை யடையாமலும், பெரி தாகிய இந்த ப்ரபஞ்சத்தில் மிகுந்த ப்ரதாபசாலியா யிருந்தார். பிறகு, கான தேசத்தில், ஒரு மடுவின் கரையில் உள்ள மடத்தில் வாசம் பண்ணுவோரா யிருந்தும், நாள்தோறும் கோதாவரி நதியில் வந்து மூழ்குவோரா யிருந்தார். இவர் ஆயிரத்து நானூறு சீடர்கள் சூழ்ந்து உபசரிக்க, யோகப் பயிற்சியிற் சிறந்தவராகி, இவருக்கு நிகராவார் இவ்வுலகத்தில் ஒருவருமில்லையென்னும் படி விளங்கிஞர். இப்படி யிருக்க, ஒருநாள், உன் ஆண்மையை அடக்கு தற்குரிய தத்துவ ஞாநியார் ஒருவர், அளகாபுரியில் வந்து தங்கி யிருக்கிருர்,

அவரிடத்தில் போய் அவருடைய அருள் பெறுவாயாக வென்று ஒரு அசரீரி உண்டாயிற்று. அந்த அசரீரி வார்த்தையைக் கேட்ட சாங்கதேவர், இது மிகவும் ஆச்சர்யமா யிருக்கிற தென்று நினைத்து, அந்த அசரீரியால் தெரிவிக்கப்பட்ட அவருக்கு, ஒரு கடிதத்தை முன்னே யெழுதித் தெரிந்து கொள்ளுவோமென்று நினைத்து, பிறகு எழுதாம லிருந்துவிட்டார். ஏனென்றால், ஆசீர்வதித்து எழுதினால் ஆசாரியருக்குத் தகாது, தேவரீர் என்று எழுதுவேனென்றால், நான் முதியவனாகையாலே அதுவும் தகாது என்று ஆலோசித்து, தம் சீடரில் ஒருவனை யழைத்து அவன் கையில் வெறுங் கடிதத்தைக் கொடுத்து இதை அந்த ஞானதேவருக்குச் சேர்த்துவிடு என்று அனுப்ப, அவன், நல்லதென்று கடிதத்தை வாங்கிக்கொண்டு ஆகாசமார்க்கமாகப் போய், பண்டரிபுரத்தில் சேர்ந்து, எப்பொழுதும் பண்டரிநாதனை ஸ்மரித்துக்கொண்டே யிருக்கிற ஞானதேவரைக் கண்டு கடிதத்தைக் கொடுக்குமுன்னே, ஞானதேவர், அந்தச் சீடனை நோக்கி, அப்பா, இது சாங்கதேவர் கொடுத்த கடித மல்லவா என்று கேட்க, அவன் ஆம் என்று எதிரே வைத்தான். அந்தக் கடிதத்தை ஞானதேவர் உடைத்துப் பிரித்துப் பார்த்து, எழுதாமல் வெறுங் கடிதமாயிருக்கக்கண்டு, நீர் வெறுங் கடிதம் அனுப்பினதை நோக்குமிடத்தில், ஆயிரத்து நானூறு வயதும் பயனில்லாமலே கழிந்துபோயின வென்பதை அறிவித்தாற்போலக் காணப்படுகின்றது. இத்தனை வயது கழிந்து, இன்னமும் உத்தமமாகிய ஞானநிலையை யறிந்தா யில்லையென்றும், சுத்த சைதந்யஸ்வரூபமான பரம்பொருள் எங்கும் வ்யாபித்து விளங்கும், அதற்குப்பெருமை சிறுமைகளும், இளமை முதுமைகளும், மற்றுமுள்ள விகாரங்களும் இல்லை, அது மாயாகாரியமாகிய இந்தச் சரீரத்திலுள்ளது, அதை இனியாகிலும் அறிந்துகொள்வாயாக என்றும் எழுதிக்கொடுத்தார். அதை வாங்கிக்கொண்ட சீடன் விரைந்து வந்து சாங்கதேவரிடத்தில் கொடுக்க, அவர் கடிதத்தைப்பிரித்துப் படித்துப்பார்த்து அதிலெழுதப்பட்டிருந்த செய்திகள் எல்லாவற்றையுமறிந்து ஐயோ! நமது வாணாள் வீணாளாகக்கழிந்துபோயினவே, இந்தக் கடிதத்தை யெழுதிவிடுத்த ஞானதேவரை இப்பொழுதே போய்த் தரிசிக்கவேண்டும் என்று ஒரு புலியின்மேல் ஏறிக்கொண்டு பாம்புசெலுத்தவந்தார். இவர் வருவதைச் சுவர்மீது உட்கார்ந்திருந்தவர் நோக்கி, சுவரைத்தெருவிற் போகக்கடவையென்றேவ, அந்தச்சுவரும் அப்படியே தெருவில் வரக்கண்ட சாங்கதேவர் விரைந்துகிட்டிவர, அவரை யெதிர்கொள்ளும்பொருட்டு ஞானதேவர் வந்தார். உயிரில்லாததாகிய சுவர்மீதேறி யிருந்தவரை, உயிருள்ளதாகிய புலிமீதேறிவந்தவர் கண்டு நாணி, புலியைவிட்டிறங்கி, அன்பு மிகுதியால் வணங்கி, அடியேனுக்கு ஞானத்தை அருள்புரியவேண்டுமென்று எதிரே நிற்க, இவர் பண்டரிநாதனுக்கு அடிமையாகிய என்னை நீரே யாண்டருளவேண்டுமென்று சொல்ல, ஆல நிழற்கீழே யெழுந்தருளியிருந்த தேசிகமூர்த்தியும் மூர்த்தி வந்து, இருவரும் ஒரு மனமாகிக் கூடினபிறகு, ஞானதேவர்

சாங்கரை வாழ்த்தி நல்ல ஞாநோபதேசம் செய் தருளினர். செய் தருளின பிறகு, இந்த ஆலமரத்தி னடியில் நின்றவர்கள் மோக்ஷத்தை யடைவார்கள் என்று சொல்லி, சாங்கரை விட்டிற்குப் போக விடைகொடுத்தனுப்ப, அவர் போனபோது, ஞாநசிரியர் தங்கை நிருவாணமாய் மங்கள நீராடிக்கொண் டிருக்கக்கண்டசாங்கதேவர் ஒளித்துக்கொண்டார். அதையறிந்த முக்தாபாயி, மெய்ஞ்ஞாந ரூபமாகிய பரம் பொருளை யடைந்தும், சுத்தமாகிய நல்லறிவு உனக்கு உதிக்கவில்லையே யென்று சொல்ல, சாங்கர் கேட்டு, உமது அறிவு இப்படி யிருக்குமென்று நானறிந்திலேன், அஞ்ஞாநாந்தகாரம் நீங்கப் பெற்ற தாயே என்று சொல்லிக்கொண்டுவந்து நமஸ்கரிக்க; ஞாநசிரியர், சாங்கரை நன்றாக ஆசீர்வதித்தார். சாங்கதேவரும் அவர் சொன்னபடியே, குற்ற மற்ற ஞாநம் வளர்ந் தோங்க, நீங்குதற் கருமையாகிய தேஹாபிமாநமும் நீங்கப் பெற்று, ஸ்ரீஹரிநாமஸ்மரணை செய்ய விரும்பினர். அன்றிரவில் ஞானதேவர் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்யத்தொடங்கி அந்தக்காலக்ஷேபகோஷ்டியில் கொடிதாகிய இந்தக் கலியுகத்தில், எல்லார்க்கும் ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணையை யொழிய வேறொரு தவமில்லையென்று ஸ்ரீ பாகவதத்தில் சுகப்ரஹ்ம ரிஷியா னவர் சொல்லியிருக்கிறார். ஆகையால் ஸ்ரீஹரியின் திருநாமங்களை உச்சரிப்ப வர்களுக்கு மோக்ஷசித்தியுண்டாகும். ஸ்ரீஹரிநாமத்தை உச்சரிப்பவருடைய ஸ்ரீ பாதரேணுவின் மஹிமையால் மூவுலகும் குற்றம் நீங்கி உஜ்ஜீவிக்கும். இந்த லக்ஷ்மீநாதனுடைய திருநாம மஹிமையை நாம் சொல்லி முடியுமோ என்று சொல்லி, உதயகாலத்தில் விட்டலப்பெருமானுக்கு ஹாரதி செய்து, வந்தவர்களுக்கெல்லாம் அவரவர்க ளிஷ்டப்பட்ட பிரசாதங்களையும் அருள் செய்து, சாங்கதேவரைநோக்கி, பண்டரிபுரத்தில்போய் மாதவனைத்தரிசியும் என்றார்; கேட்ட சாங்கதேவர் நன்று நன்றென்று சொல்லிப்போய்த் தரிசித் தவர்களுடைய பாவங்களை யெல்லாம் நீக்கி அவர்களைப் பரிசுத்தர்களாகச் செய்கிற பண்டரிபுரத்தில் வாழும் வாழ்வு மிகவும் சிறந்ததென்று, நால்வரு க்கும் வந்தநம் சொல்லி விடைபெற்று, தாளம், வீணை, மத்தளம் முதலான எல்லா வாத்யங்களும் முழங்க, ஸ்ரீஹரிநாமஸ்மரணை எல்லார்வாயிலும் நிறை ந்திருக்க, பாகவதகோஷ்டியோடு கூடி, ஆநந்தாவேசராய், பண்டரிபுரத்தைக் குறித்துப் போய், கோபுரத்தைப் பார்த்த மாத்திரத்தில், நமஸ்கரித்து, ஒரு வருக்கொருவர், இதினும் சிறந்த நகரம் ஒன்றுமில்லையென்று பேசிக்கொண் டார்கள். இந்தப்பிரகாரமாக, நகரிலேசென்று அங்குள்ள சாதுக்களைக்கண்டு சேவித்து, சரீரநடுக்கத்தோடு தழுவிக்கொண்டு, சந்த்ரபாகா நதியை யடை ந்து அதில் நீராடி, புண்டலீகரைச் சேர்ந்து பூசித்து, நகரத்தை வலம் வந்து கைகுவித்துக்கொண்டே கோபுரவாசலில் விழுந்து கும்பிட்டு, கருட கம்பத் தடியில் வீழ்ந்துவணங்கி, பாண்டுரங்கப்பெருமானைக்கண்டு வணங்கும்பொரு ட்டுக் கோயிலுக்குள்ளேபோய், பகவானைத்தழுவிக் கும்பிட்டு, தாயினும் மிகு ந்த அன்புள்ளவராகிய பெருமானுடைய நிஜரூபத்தை நேராகக்கண்டு, வாயார த்துதித்து, கண்ணீர் ததும்ப, வேதங்களாலும் அளவிடப்படாத பகவத்விஷய

த்தில் பற்பல தோத்திரங்கள்செய்து பிறகு திருமகள், சத்தியபாமை, ஆஞ்ச நேயர் என்னும் இவர்களுடைய கோயில்களிலும் போய்க் கண்டு சேவித்துத் தோத்திரஞ் செய்து, சபா மண்டப மடைந்து அநேக கீர்த்தனங்களைப் பாடி, சந்த்ரபாகா நதிக்கரையில், ஒரு புறத்தில், தபோசாலையொன் றேற்படுத்திக் கொண்டு, அதில் தவம் செய்துகொண்டிருந்தார். அப்படி யிருந்து பிறகு விட்டலப்பெருமானை நோக்கவேண்டுமெனுகிற பேரன்பால் ஆஹாரநித்திரை களை யொழித்து, மூன்றுநாள் வரைக்கும் திருத் துழாய் மாலையை யணிந்த பண்டரிநாதனை மறவாமலிருக்க, இவரது திட வைராக்யத்தைப் பெருமான் அறிந்து, நடு ராத்திரியில் தமது நிஜரூபத்தோடு எழுந்தருளுதலும், சாங்க தேவர் பேரன்போடு எழுந்து வணங்கி வாழ்த்திப் பற்பல தோத்திரங்களைச் செய்தார்; அப்படிச்செய்து நின்றவுடனே, ஸ்ரீகண்ணபிரான், சாங்கதேவர் கையைப் பிடித்துக்கொண்டு நதிக்குள்ளே போயினர். அப்போது அவ்விடத் தில் ஒரு மணிமயமான ஒரு மண்டபத்தையும், அதில் அகிலகாரணனாகிய பகவான் ஸ்ரீபூமிநீளாசமேதரா யெழுந்தருளியிருப்பதையும், நித்யமுக்தர்கள் கோஷ்டியாயச் சூழ்ந்துநின்று வாழ்த்துவதையும் கண்டு, ஆநந்தபரித ஹ்ரு தயராய், ஆடிப்பாடிப் பரவசங்கொண்டு, கண்களில் ஆநந்தபாஷ்பங்கள் சிந்த நிற்கிற சாங்கதேவரைப் பகவானவர் நோக்கி, நான் இந்தச் செங்கலின்மே லிருந்துகொண்டு அவரவர் வேண்டிய வரங்களைக் கொடுத்துவருகிறேன். அன்றியும் தீர்த்தரூபமாகவும், க்ஷேத்ரரூபமாகவும் இருக்கிறேன். உன் நல் லொழுக்கத்தையும் பக்தியையும் கண்டு மகிழ்ந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளென்று நியமிக்க, சாங்கதேவர், பகவானை நோக்கி, ஸ்வாமீ! எக்காலத்திலும் உமது திருவடியைத் தியானித்துக்கொண்டிருக்கும் படி அடியேனுக்குக் கிருபைசெய்வதே எனக்குச் சிறந்தவரத்தைத் தேவரீர் கொடுப்பதாகும்; அதுவேயன்றி வேறு வரத்தை அடியேன் விரும்பவில்லை யென்றார்; பகவானும் அப்படியே யாகட்டும் என்று அருளிச்செய்தவுடனே, கோயிலுக்குள்ளேபோய்ப் பாண்டுரங்கனைத் தரிசித்து, அதன்பிறகு திருநார ணபுரம் வந்து சேர்ந்து அங்கு வாசம் பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில ஒருநாள், இவருடைய தியானத்தில், செங்கலின்மேல் விளங்குகின்ற ஸ்ரீ பண் டரிநாதர் தோன்றினார். சாங்கதேவர், பகவானை நோக்கி, வணங்கி வாழ்த்தி நிற்க, பகவானும் இவரை நோக்கி, நீ போய்க் கோதாவரிநதிக்கரை யடைந்து கேசவமூர்த்திரூபமாய் விளங்குவதாகிய ஸ்ரீசாளக்கிராமத்தை வைத்துப் பூச னைசெய்து வாழ்வாயாகவென்று, சாளக்கிராமத்தையும் கொடுத்து மறைந்து போக, அதைப்பெற்றுக்கொண்ட சாங்கதேவர், கோதாவரிக்கரையை யடை ந்து அவ்விடத்திலுள்ள புண்ணிய தம்பம என்கிற ஊரில் எல்லாரும் வந்து சேரும்படியான மடமொன்றை யுண்டாக்கி, அதில் சாளக் கிராமப் பிரதி ஷ்டை செய்து, பூஜித்துக்கொண்டு, தமது சிடர்களுடனே கூடி வாழ்ந்து கொண்டிருந்தார். அப்படிப்பகவத்தியானபரராய்அவ்விடத்திலிருக்கும்போது, கல்யாணபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த செல்வத்திற் சிறந்த ப்ராஹ்மண

ணன் ஒருவன் இருந்தான்; அவன் பேர் சங்கரன், அவன் தனது ஆயுள் முடிவு பெற்றமையால் மரணமடைந்தான், விதவையாகிய அவன் மனைவி ருதுவானாள். அதனைக் கண்டு அந்த வேதியன்தாயானவள் அழுது சேர்ந்து தங்களிடத்திலிருக்கிற தனத்தை யெல்லாம் தான தர்மங்களில் செலவழித்து, புதல்வனுடைய எலும்பை யெடுத்துக்கொண்டு போய், கங்கா நதியில் விட நினைத்து, மருமகளோடு கூடிக் காசியாத்திரை போகிறவள், சாங்க தேவர் வாசஞ்செய்கிறவூரில் வந்து தங்கினாள். வந்து தங்கினவள், சாங்கதேவருடைய மஹிமையைக் கேட்டு, அவரைச் சேவிக்கவேண்டுமென்று மனதில் நினைத்து, மருமகளும் தானுமாகச் சென்று, தான் முந்தி வணங்க, பிறகு மருமகளும் வணங்கி நின்றாள். அப்போது சாங்க தேவர் அவளை நோக்கி, உனக்கு நற்புதல்வன் உண்டாவானென்று ஆசீர்வதித்தார்; அதைக் கேட்ட பெரிய சோணக்காள், ஸ்வாமீ! விதவைக்குப்பிள்ளையுண்டாவதும் உண்டோ? இவளை மணஞ்செய்துகொண்ட என்புதல்வன் இறந்துபோனான், அவன் எலும்பைக்காசிக்ஷேத்திரத்திற் கொண்டுபோய்க் கங்காநதியில் விடவேண்டுமென்றெண்ணி நாங்களிருவரும போகிறோம், வழியில் தேவரீரைக்கண்டுசேவிக்க, குழந்தையுண்டாக ஆசீர்வதித்தருளினீர். ஆனால் தேவரீருடைய ஆசீர்வாதம் பொய்த்துப்போகுமோ என்று சொல்லி அழுதுகொண்டு நின்றாள். நின்றவளைச் சாங்கதேவர் கடாக்ஷித்து, என்சொல் பொய்க்காது, உன் மருமகளுக்கு நற்புதல்வனுண்டாவான், அவனால் உங்கள் குலமுழுதும் பிரகாசமடையும் என்று சொல்லி, அவர்கள் கொண்டுவந்த எலும்பைத் தமக்கு எதிரே வைக்கச் சொல்லி, அதின்மீது தீர்த்தத்தை ப்ரோக்ஷித்து, அந்த எலும்பிற் பட்ட தீர்த்தத்தை, விதவையைப் பருகச்செய்தார். அந்தத்தீர்த்தமே அவள் வயிற்றில் கருவாயிருந்து பத்துமாத மானவுடனே குழந்தையைப் பெற்றாள். அந்தக் குழந்தைக்குப் பன்னிரண்டு நாள் கழிந்தவுடனே, சாங்க தேவர் பரிசுத்தஸ்நாநம் செய்வித்து விட்டலன் என்று பெயரிட்டு ஆசீர்வதித்தருளினார். இதைக் கண்ட அந்த வூரார் இகழ்வாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கக் குழந்தைக்கு ஐந்துவயது ஆனவுடனே, உபநயநம் செய்ய நிச்சயித்துப் பாண்டுரங்கன் சந்நிதிக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேவிக்கப்பண்ணின பிறகு, சுபமுகூர்த்தம் ஆராய்ந்து பார்த்து, வேதியரையழைக்க அவர்கள் அந்தக் குழந்தையின் பூர்வோத்தரமறிந்து, நாங்கள் வரமாட்டோம் என்றார்கள். அவர்களைச் சாங்க தேவர் நோக்கி, இந்தக் குழந்தை ஸ்ரீகண்ணபிரானுடைய திருவருளாலே பிறந்தவனாதலால் இதைக் குறித்து நீங்கள் சங்கிக்கலாகாது, அவசியம் நீங்கள் போய் உபநயனம் முடித்து வைக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அவ்வேதியர், சாங்கதேவரை நோக்கி, இந்தக் குழந்தை அந்தக் கண்ணபிரானது திருவருளால் பிறந்தது மெய்யானால், அந்தக் கண்ணபிரானும் இந்த உபநயனத்தைக் காண வருவாரோவென்று கேட்க, சாங்கதேவர், வேதியரை நோக்கி, பகவான் அவசியம் வருவாரென்று சொல்லி, சந்த்ரபாகா நதிக்கரையில் போய், உணவு முதலிய

வற்றை யமைத்து வைத்துக்கொண்டு வேதியர்களை அழைக்க, அவர்கள் கண்ணபிரான் வந்தாரோவென்றார்கள். சாங்கதேவர், ஆம், பகவான் வந்தார் என்றார். இதைக்கேட்ட வேதியர்கள் இது உண்மைதானோவென் றறியும் பொருட்டுக் கோயிலுக்குள்ளே போய்ப் பார்க்க, பகவான் இல்லாமையால் மிகவும் ஆச்சரிய மடைந்து, நதிக்கரையில் வந்து பார்த்து, அவ்விடத்தில் பகவான் வந்திருக்கக் கண்டார்கள். கண்டு பேரானந்தத்தை யடைந்து, சாங்கதேவரைப் புகழ்ந்து, உபநயன விவாஹத்தை முடித்து, போஜநம் செய்து போய்விட்டார்கள். சாங்கதேவர், பெரியசோனக்காள், அவள் மருமகள், குழந்தை என்கிறமூவரோடுகோயிலுக்குப்போய்ப்பகவானைத் தரிசித்து விடைபெற்றுப் போய்த் தம்முடைய ஊரை யடைந்து, சுகமாய் வாழ்ந்திருக்குங் காலத்தில், ஊரிலுள்ளார் யாவரும் இவருடைய ப்ரபாவத்தைக் கேட்டு வந்து வணங்கினார்கள். பிறகு அந்தப்புதல்வனுக்குமணமுடித்து வருடந்தோறும் ஆடிமாசம், கார்த்திகை மாசம் இவ்விரண்டு மாசங்களிலும் பண்டரிபுரத்துக்குப் போய், குடக் கூத்தனாகிய ஸ்ரீகண்ண பிரானைச் சேவித்து வாவென்று நியமித்து, தமது சீடரோடு துவாரகைக்குப் போய்விட்டார்.

அப்படிப் போகும் வழியிலுள்ள தாரூரில் வாழ்கின்ற யாதவ பண்டிதர், இவர் வருகிறாரென்று கேள்விப்பட்டு எதிர்கொண்டுவந்து திருவடிபணிந்து, இவரது அருளைப் பெற்று, வைராக்யத்தையும் ஞானத்தையும் அடைந்து, ஸ்ரீ ஹரி நாம சங்கீர்த்தநஞ் செய்துகொண்டு இவருடன் போக முயன்றார். இப்படி இவர் போவதை யறிந்த இவர் மனைவியானவள், எழுமாச கர்ப்பவதியாயிருந்தும், கணவர் வரவேண்டாமென்று சொல்லியும், உறவினர் போக வேண்டாமென்று தடை செய்தும், கணவரது பிரிவைச் சகியாதவளாய், அவர்முன்னேபோக, இவளும்பின்தொடர்ந்து அவரறியாமல் போய்க்கொண்டிருக்கையில், மாசங்கள் நிறைந்ததனால் நடக்கச்சக்தியற்றவளாய் அயர்ந்து, சந்திரபாகா நதிக்கரையில் உள்ளப்ரஹ்மாரண்யத்தில் கர்ப்பவேதனைமிகுந்து உளைந்து, ஐயோ, பேறு காலத்தில் என் கணவர் அருகிலில்லாமல் சாங்கதேவரைப் பின்தொடர்ந்து போய்விட்டாரே, இவ்விடத்தில் எனக்கு ஒரு உற்றதுணையாவா ரில்லையே, என் கணவருக்குக் குருவாகிய சாங்கதேவரே துணையாய் வந்து என் துயரை நீக்கவேண்டுமென்று தோத்திரஞ் செய்து அழுதாள். அந்த க்ஷணத்தில், துவாரகையில் எழுந்தருளியிருக்கிற கண்ணபிரான் ஒரு பெண்ணுருக்கொண்டு இவளுக் கெதிரே வர, இவள் அம்மா! நீயார், எங்கிருந்து வருகிறாய் என்று கேட்க, பெண்ணுருக் கொண்டுவந்த சக்ரபாணியார், தாயே! உன் கர்ப்ப வேதனையைத் தீர்த்து வரும்படி சாங்கதேவர் என்னை யனுப்பினார், என் பேர் க்ருஷ்ணபாய் என்று சொல்லி, அந்த அரண்யத்தில், ஒரு ஊரை யுண்டாக்கி, அந்த வூரிலுள்ள ஒரு வீட்டுக்குள்ளே யழைத்து வந்து, உபசாரஞ் செய்து, எளிதாகக் குழந்தை பெறும்படி செய்து, தாய்க்கும் குழந்தைக்கும் ஒரு துன்பமுமில்லாமல் உப

சாரஞ் செய்துகொண்டு ஒருமாத வரைக்கும் இருந்தார். இப்படி யிருக்கை யில், முன்னேபோன சாங்கதேவர் துவாரகையை யடைந்து, கோமதி நதி யில் மூழ்கி, ஸ்ரீகண்ணபிரானுடையசந்நிதிக்குப் போய், கை கூப்பி நமஸ் கரித்து, பிறகு சாஷ்டாங்கமாக நிலத்தில் விழ்ந்து வணங்கி, அந்தக் கண்ண பிரானே தமது மனத்தில் சாக்ஷாத்கரித்திருந்து அறிவிக்க, அவன் செய்கை யை யறிந்துகொண்டு, என் பொருட்டாகப் பகவானுக்குப் பிள்ளை பெறுவிக் குந் தொழில் வாய்த்ததே யென்று துக்கித்து, பிள்ளை பெறுவித்த வீட்டு க்கு விரைந்துபோய், அந்த வீட்டு வாசற் குப்பையை விளக்கிக்கொண்டிரு ந்த மாதவனாகிய மாதைக் கண்டார். கண்ட வுடனே அவள் கும்பிட்டாள். அவளை மாதவனென்றறியாமல், வீட்டுக்குள்ளே போய், மனைவியை நோ க்கி, உனக்கு இந்த ஆபத் காலத்தில் வந்து உதவி செய்த மாது எங்கே யென்று கேட்க, அவளும், வெளியில்வாசல் பெருக்கிக் கொண்டிருக்கிறவள் தான் என்று சொல்ல, உடனே வெளியே வந்து பார்த்து அங்கே யிருந்தவ ளைக் காணாமல் திகைத்து நின்றார். அப்போது மனைவியானவள், குழந்தை யைக் கொண்டு வந்து கணவருடைய திருவடியில் போட்டு வணங்கி நின்று, முன்னே நடந்த விருத்தாந்த முழுதும் சொல்லி, நீர் அனுப்பின க்ருஷ்ண பாய் வந்து எனக்குச் சகலவித வுபசாரங்களுஞ் செய்தாள் என்று சொல்ல, சாங்கதேவர் கேட்டு, ஸ்ரீகண்ணபிரானே யெழுந்தருளி உனக்கு உதவிசெய் தார், உன் புண்ணியமே புண்ணியம் என்றுபுகழ்ந்து, பிள்ளையையும் தாயை யும் அழைத்துக்கொண்டு, வழி முழுதும் கண்ணபிரானையே நினைத்துக் கொண்டு வந்து, துவாரகையைச் சேர்ந்து, கோயிலிற் போய், ஜநார்த்தந னைச் சேவித்து, அரவிந்தலோசநா, தீந தயாநிதி, ஸ்ரீலக்ஷ்மீநாதா, உன் அக டிதகடநா சாமர்த்தியங்களை மதித்தறிய வல்லவர் யார் என்று தோத்திரம் செய்து, யாதவ பண்டிதரிடத்தில் தாயையும் பிள்ளையையும் ஒப்பித்து, நீர் இவளிடத்தில் மிக்க அன்புடையவராய் வாழ்வீர், ஹரிபஜனை செய்துகொ ண்டு, உன் மனைவி மக்கள் முதலிய யாவரும் ஸ்ரீஹரி பக்தியுள்ளவர்களாய் த் தொண்டு செய்து கொண்டிருப்பார்கள் என்று ஆசீர்வதித்து ஊருக்கு அனுப்பிவிட்டார்.

அதன்பிறகு சாங்கதேவர் நான்குமாச காலம் அங்கே தங்கி, ஸ்ரீலக்ஷ்மீ நாதனாகிய பகவானுடைய திருவடியை வணங்கி, சீடர்களுடனே அவ்விட த்திலிருந்து புறப்பட்டு, முன்னே யிருந்த இடத்திற்கு வந்து வாழ்ந்திருந் தார். அப்படி யிருக்கும் போது, பேதரி நகரத்தை யாள்கின்ற துருக்க அரச னால் சிவாலயங்கள் விஷ்ணுஆலயங்கள் வேதியர் முதலானவர்கள் படுந் துன் பத்தை விட்டலப் பெருமான் அறிந்து இரக்கங்கொண்டு, சாங்கதேவரை நோக்கி, நீ பேதரி நகரத்துக்குப் போ வென்று சொல்லி விடை கொடுத்து அனுப்ப, அப்படியே சாங்கதேவரும் தமது சீடர்களோடு ஹரிநாமஸங்கீர் த்தனஞ் செய்து கொண்டு, பேதரி நகரத்துக்குப் போகும்போது, வழியில்

ஜங்கமர் தலைவனாகியும், குருவாகியும் இருக்கிற மல்லிகார்ஜுனன், தன் குருவருளால் சில மந்திரங்களைக் கற்றிருப்பவன், இவன் ஒரு ஆசநம் பெற்று அதில் வீற்றிருப்பான், தன்னிடத்திற்கு வருவோரை அந்த ஆசநத்திலிருத்தி, அதில் அவர்கள் இருந்தபோது அந்த ஆசநத்தின் மகிமையால் அவர்கள் தலை கீழாய் விழுவதைப் பார்த்து நகைத்து அவமானஞ் செய்வான். தன் சீடரோடு கூடிக்கொண்டு இப்படிச் செய்பவனாகிய அந்த மல்லிகார்ஜுனன் இந்தச் சாங்க தேவருடைய பெருமையை யறிந்து, மனம் பொறுக்காதவனாகி, தன்னிடத்தி லிருக்கிற நாய்க்கு இவர் பெயரை வைத்தான். அவனுடைய தீய செய்கைகளை இவர் அறிந்து அவனுடைய துராஹங்காரத்தை யடக்க வேண்டுமென் றெண்ணி, அவனது மடத்தில் நுழையவே, இதைக் கண்ட அந்த மல்லிகார்ஜுனன் எதிர்கொண்டு வந்து, இவரை ஆசநத்திலிருக்கும்படி ப்ரார்த்தித்தான். அந்த ஆசநத்தின் செய்கையை இவர் அறிந்துகொண்டு, அதை உற்றுப் பார்த்தவுடனே, அந்த ஆசநம் எரிந்து நீறாய்விட்டது. இந்த அற்புதத்தை அந்தக் கொடியோன் கண்டு மதி மயங்கி, வாய் பேசாமல், அச்சத்தோடிருந்து, சற்றுநேரங் கழித்து, இந்தச் சாங்கதேவரை நோக்கி, ஸ்வாமீ, இந்த ஆசநத்தால் மிகுந்த மகிமையை யடைந்த நான் தேவரீருடைய பெருமையை அறியாமல் செய்த பிழையைப் பொறுத்தாண்டருள வேண்டுமென்று திருவடியில் வீழ்ந்து வணங்கினான். அவனுடைய சீடர்கள், ஆசநம் எரிந்து நீறானதையும், தமது குருவாகிய மல்லிகார்ஜுனன் வணங்குவதையும் பார்த்து, இவர் யாரோ மஹாத்மாவாயிருக்கிறார், நம்முடைய குருவானவர் இவர் பெயரைத் தமது நாய்க்கு வைத்திருப்பதை இவர் அறிந்தால், என்ன அநர்த்தம் விளையுமோவென்று அஞ்சி, அந்த நாயை ஒரு சிறையில் அடைத்துவைத்துவிட்டு, ஐஞ்ஞூறுபேர்களும் அறுசுவையோடுகூடின அமுது ஆயத்தப்படுத்தி, உண்ணத்தொடங்கும்போது, சாங்க தேவரைத் துதிக்காமல், தாம் பூண்டிருக்கிற லிங்கங்களை ஆராதிக்க நினைத்து, அவைகளைக் கட்டியிருந்த துணிகளை அவிழ்த்துப் பார்த்து, எல்லாரிடத்திலும் லிங்கங்கள் இல்லாமலிருக்கக்கண்டு, சாங்கதேவரைத் துதிக்காமல் நாம் உண்ணத் தொடங்கினதனால் இந்தஆபத்து நேரிட்டதென் றறிந்து, அவரை வணங்கித் தோத்திரம்பண்ணி, எங்கள் குற்றத்தைப் பொறுத்து ரக்ஷிக்கவேண்டும், எம்மிடத்தில் முன்போலச் சிறப்பாக்குறியாகிய லிங்கங்கள் வரும்படி செய்யவேண்டும் என்று ப்ரார்த்தித்தார்கள். அப்போது சாங்கதேவர் அவர்களை நோக்கி, நீங்கள் உங்களை யடுத்திருந்த நாயைப் பட்டினியா யிறக்கும்படி சிறையிலடைத்து வைத்துவிட்டு, உண்ணத் தொடங்கினீர்கள், அந்த நாய் தன் பசி பொறுக்கமாட்டாமல் உங்களுடைய லிங்கங்களை விழுங்கிவிட்டது என்றார். அதைக்கேட்ட ஜங்கமர், நாய், லிங்கங்களை விழுங்குமோ, இது என்ன அதிசயமா யிருக்கின்றது, அப்படி அந்த நாய் விழுங்கினது உண்மையானால், அதின் வாயிலிருந்து அந்த லிங்கங்கள் வெளிப்படும்படி செய்யவேண்டுமென்று வணங்க, சாங்கதேவர் அந்தநாயை வெளியி

லழைத்து, அதை நோக்கி, நீ இரையாக விழுங்கின லிங்கங்களைக் கக்குவா யாக வென்று நியமிக்க, அப்படியே அது கக்கினதைக் கண்ட ஜங்கமர்கள் மிகவும் ஆச்சரியமும் அச்சமுங்கொண்டு, சாங்கதேவருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கி, எம்முடைய தீக்குணங்களை யொழித்து உம்மைச் சரண மடையும்படி செய்தீர், உமது பெருமையைச் சொல்ல வல்லவர் யாவர்? எங்களைக் கடைத் தேற்றும் பொருட்டு ஸ்ரீ பகவானே இப்படி யெழுந்தரு ளினதாகப் பாவிக்கிறோம் என்று புகழ்ந் துரைக்க, சாங்கதேவர், அவர்களை நோக்கி, நீங்கள் முன்போல இனி யாதொரு தீமையுஞ் செய்யாமல் ஸ்ரீஹரி பக்தி செய்து, அடியாரைப் பூஜித்துச் சுகமாய் வாழ்வீராக வென்று, ஆசீர்வதித்து, பேதரி நகரத்தை யடைந்தார். அடைந்து நீராடி, ஸ்ரீ ஹரி பூஜையும் செய்து, ஒரு ஏகாந்தமான இடத்திலிருந்து ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த் தநம் செய்துகொண் டிருக்குஞ் சமயத்தில், அந்த பேதரி நகரத்தை யாளு கின்ற துருக்க அரசனால் ஆதரிக்கப்படுவோனாகிய ஒரு வேதியன், ஸ்ரீ ஹரி பக்தியிற் சிறந்தவனாதலால், இவர் ஹரிநாமசங்கீர்த்தநம் செய்வதைக்கேட்டு மிகுந்த அன்போடு வந்து வணங்கி, எங்களை யாட்கொள்ள எழுந்தருளின ஸ்வாமீ, இந்நகர்க்கரசனாகிய துருக்கன் பரம துஷ்டன், வேதியர் முதலான வர்களுக்குத் துன்பத்தைச் செய்பவன், ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தநஞ் செய்ப வர்களைக் கண்டால் அவர்களுக்கு மிகுதியாகிய துன்பத்தைச் செய்வான், இப்போது தேவரீர் எழுந்தருளினதை அறிந்தால் அவசியம வந்து தீமை செய்வான், ஆனால் அவன் மனைவியானவள் பாம்புகடித் திறந்துபோனாள், ஆகையால் வரமாட்டான், ஆனாலும் தேவரீர் இங்கே தங்கி யிருப்பது தகா தென்று சொல்ல, சாஙகதேவர் அவ்வேதியனை நோக்கி, இரக்கத்தோடு, ஓ வேதியரே, அவன் மனைவியை எழுப்பித் தருகிறேன், இந்தச் செய்தியை அரசனுக்குத் தெரிவிக்கக் கடவீர் என்று சொன்னவுடனே, வேதியன் அரச னிடத்துக்கு விரைந்து போய்ச் சொல்ல, அரசன், அப்படி எழுப்புவது உண்மையானால் அவரை யிங்கே யழைத்துவாருமென்று சொல்ல, வேதியன் வந்து சாங்க தேவருககு அறிவிக்கவே, இவர் தமது சீடரோடு ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தநம் செய்து கொண்டு எழுநதருளினார். இவர் எழுநதருளுவதைக் கேட்ட அரசன் எதிர்கொண்டு வநது வணங்கி அழைத்துப் போய், ஒரு ஆச நம் தந்து, தோத்திரம்பண்ணி நின்று, ஸ்வாமீ, என் மனைவியானவள் பாம்பு கடித் திறந்துபோனாள், அவளைப் பிழைப்பிக்கும் பொருட்டு மஹா சமர்த் தர்களாகிய விஷ வைத்தியர் மாநதிரிகர் முதலானோர்களைக் கொண்டு செய்ய வேண்டிய உபாயங்களெல்லாம் செய்தும், அவள் பிழைக்கவில்லை, அவள் மரண மடைந்து நாலுநாளானதனால், இன்று வயிற்றைக் கீறி மணப்பொடி யை நிறைத்து வைத்தேன், நாளைக்கு மசீதில் கொண்டுபோய் வைக்க நினைக்கிறேன், இந்தச் சமயத்தில் தேவரீர் எழுந்தருளினீர், நீர் இவளைப் பிழைக்கச் செய்தீரானால், உமக்கு நிகரானவர் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை யென்று சொல்ல, சாங்கதேவர், ஒரு துளசி தளத்தை யெடுத்து அரசன்

கையிற் கொடுத்து, இதை அந்தப் பிணத்தின்மேல் வையென்று நியமிக்க, அப்படியே அரசனும் செய்ய, உடனே அவள் பிழைத்தெழுந்தாள். எழுந்து மிகவும் ஆரவாரம் செய்ததைக் கண்ட அரசன், இது என்ன, பிழைத்தெழுந்தும் இது ஒரு துன்பம் நேரிட்டிருக்கிறதேயென்று வெளியே வந்து சாங்க தேவரிடத்திற் சொல்ல, அவர், வேந்தனே, நீ அஞ்சவேண்டாம், போய் அவளுக்கு என்ன வேண்டுமென்று கேட்பாயானால், அவள் கருத்து வெளியாகும் என்று சொல்ல, அரசனும்அப்படியே போய்க் கேட்க, அவள், ஓ ப்ராண நாதா, என்னைப் பிழைப்பித்தவரிடத்தில் நானும் நீயுமாகப் போய், அவரைச்சரணாகதி செய்து நின்று, இன்னும அவர் நியமிக்கிற நியமப்படியே நடக்கவேண்டுமெ, இப்படிச் செய்யாவிட்டால் நான் பிழைக்கமாட்டேனென்று சொல்ல, அரசன், அப்படியே செய்வோமென்று இருவரும் போய்ச் சாங்க தேவரைப் பணிந்து நின்றார்கள். அப்போது சாங்க தேவரானவர், அரசனை நோக்கி, உன்னாலும் உன்னை யடுத்தோராலும், ஊரிலுள்ள பசுக்கள், வேதியர், சிவாலய விஷ்ணு ஆலயங்கள் என்பவைகளுக்கு ஒரு கெடுதியும் நேரிடாமல் நீதியோடிருந்து அரசு செலுத்துவது மல்லாமல், ஹரிதாசரை ஆராதித்துச் சுகஜீவியாய் வாழக்கடவாயென்று ஆசீர்வதிக்க, அரசன் அந்தக் கட்டளையைச் சிரசா வஹித்துத் தன் மந்திரிக்குச் சொல்லி அப்படியே நடத்தும படி கட்டளையிட்டான் சாங்க தேவரும் அந்தத் துருக்க வேந்தனைக் கர்வபங்கம் செய்து திருத்தி யாட்கொண்ட பிறகு, தமது சீடரோடு கூடிப் பண்டரிபுரத்துக்கு வந்து, விட்டலப் பெருமானைச் சேவித்து, ஓ பகவானே! அடியேன் சமாதியடைய விரும்பினேன், எந்த இடம் அதற்கிசைவானதோ, அதைத் தேவரீர் நியமிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய, பாண்டுரங்கப் பெருமானவர், சாங்கதேவா, நீ இப்போது தங்கியிருக்கிற புண்ணிய ஸ்தம்பத்தினிடத்திலேயே சமாதியடையக் கடவாய் என்று அருளிச் செய்தார். அன்றியும் ஆஷாட சுத்தத்தில் ஏகாதசிகள்தோறும நான் வருகிறேன் என்று வரமும் விடையுங் கொடுத்து நிற்க, சாங்கதேவரும் எம்பெருமானையும் எம்பெருமாட்டியையும் முறையே வணங்கிப் புண்டரிகரையும் வணங்கி, ஆநந்தக் கண்ணீரோடு அந்த ஊரை வலம் வந்து, புண்ணிய ஸ்தம்பத்தையடைந்து, மௌந நிலையையுடையவராய்ச் சமாதியடையத் தகுந்த சுப முகூர்த்தம் நோக்கி நிற்க, அப்போது இவர் புதல்வருள்ளே மூத்தவனாகிய கேசவனும், இளையவனாகிய விட்டலனும் வந்து வணங்கினார்கள், இவர் அவர்களுள் மூத்தவனுக்கு ஆறக்ஷர மந்த்ரத்தை யுபதேசித்து, நான் சமாதியடைகிறேனாகையாலே, சம்பிரதாயம் தவறாமல் என்னை யாராதித்து, கார்த்திகை மாசம் தோறும் பண்டரிபுரத்துக்குப் போய்ப் பண்டரிநாதனை வணங்கி வருவாயாகவென்று நியமித்து, சீடருக்கும் மற்றுமுள்ள யாவருக்கும் வேண்டிய புத்திமதிகளைச் சொல்லி, சகவருடம் ஆயிரத் திருநூற் றிருபத்தேழாவதாகிய குரோதந வருடம் ஆனிமாசம் சுத்த சப்தமி ஞாயிற்றுக்கிழமை இந்தச் சுபதினத்தில் சீடர் முதலிய எல்லாருங்கூடி ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம்செய்து

கொண்டிருக்க, அரசடியில் பத்மாசநத்தில் எழுந்தருளி யிருந்து, தம்மை த்தோத்திரம் செய்வோருக்கு முறைமையாய் ஆசீர்வாதம் செய்து, விட்டல ப் பெருமானை வணங்கி நினைக்கவே, ஸ்ரீ கண்ணபிரான் எழுந்தருளி, எல் லாரும் காணும்படி இவரைத் தமது சொரூபத்தில் ஐக்கியம் செய்துகொ ண்டு, எல்லாரும் துதித்துக்கொண்டிருக்க மறைந்துபோனார். அதன்பிறகு, சேவித்து நின்ற தொண்டர் எல்லாரும் ஜயஜய கோஷம் செய்து ஹரிநாமங்க ளைப் புகழ்ந் துரைத்து, சமாதி பூஜையை விதிப்படி செய்து தங்கள் தங்கள் இருப்பிடம் சேர்ந்தார்கள். பிறகு பன்னிரண்டு வருடம் சென்றவுடனே சாங்கதேவர் தமது இளையகுமாரனுக் கெதிரே வந்து பெறுதற்கரிய வுபதேச த்தை அவனுக்குச் செய்து, விட்டலப் பெருமானுக்குள்ளே கலந்து ஐக்ய மானார்.

சாங்கதேவர் சரித்திரம் முற்றிற்று.

## கஅ-வது சோகாமேளர் சரித்திரம்.

பூலோக வைகுண்டமாகிய பண்டரிபுரத்தில், பஞ்சமகுலத்தில் அவதரி த்து, சோகாமேளர் என்னும் பெயர்பூண்டு விளங்குவோராகிய ஒருவர் இரு ந்தார். அவர் நாள்தோறும் சந்த்ரபாகா நதியில் மூழ்குவதும, ஹரிநாமஸங் கீர்த்தநம் செய்வதும், அவ்வூரிலுள்ள பகவத்ஸந்நிதியிற்போய் வணங்கிப் பல முறை தோத்திரஞ் செய்வதும் ஆகிய தொழில்களை முன்னே முடித்து, பிறகு தமது குடும்ப வ்யாபாரத்தில் ப்ரவேசிப்பவரா யிருந்தார். அப்படி யிருக்க, ஒருநாள், ஞானசஞ்சீவியாகிய விடோபாவுக் கெதிரேபோன அன்ப ராகிய இவரை யெதிர்ப்பட்டவர் சிலர், கோயிலில் புகுதவும, மேகவண்ண னைக் கண்டு சேவிக்கவும் நீ தகுந்தவனல்லை, மாம்ஸத்தை விரும்புகிற நாய் போலப் பலமுறை கும்பிடுதலால் என்னபயன் என்று கேட்க, இவர் அவர் களைப் பணிந்து சொல்லுகின்றார். கோயிலிற் பிரவேசிக்கவும் பகவானைத் தரிசிக்கவும் உரிமையில்லாத இழி குலத்தை யுடையேனானாலும், சூரியன் நெடுந்தூரத்தி லிருந்தாலும் தாமரை மலரை மலர்விக்கும, சந்திரன் அந்தச் சூரியனைப் பார்க்கிலும அதிக தூரத்திலிருந்தாலும் சகோரப் பறவைக்கு இரைதரும். அதுபோல அடியேனுக்கும் பகவான் தமது திருவடியைத் தரு வர். ஆதலால், தூரமாய் நின்று கும்பிடுவது என் குலத்துக் கியற்கையே; அதைக் குறித்து நீங்கள் ப்ரஸ்தாபஞ் செய்வதில் ப்ரயோஜநமில்லை. போய் வாருங்களென்று சொல்லித் தமதிடத்தை யடைந்து, ஸ்ரீஹரிபாத த்யாநத் தை மறவாதிருந்தார். அன்றிரவில், பக்தபராதீநராகிய பகவானவர் வந்து இவரை யன்போடு கோயிலுக் குள்ளே யழைத்துப் போய், இரா முழுதும் உன்னை நாமதேவனுக்குச் சமாநமாக நான் நினைத்திருக்கிறேன். இன்று பக லிலும் உண்ணும்போது உன்னை நினைத்தேன் என்று இவ்வாறு பேசிக்கொ

ண்டிருந்து, பொழுது விடியுஞ் சமயத்தில், பகவான் தந்தருளின ப்ரஸாதத்தை அமுதுசெய்யும்போது, அர்ச்சகர் வந்து கதவைத் திறந்து உள்ளேயிருந்த இவரைக் கண்டு, இது என்ன புதுமையாயிருக்கிறது! கதவு மூடினபடியே யிருந்து இப்போது எம்மால் திறக்கப்பட்டதே! இவன் எப்படி உள்ளே வந்தான் என்று சந்தேஹித்து, இவர்க்கருகில் வந்து உற்றுப்பார்த்துப் பஞ்சமரென்று அறிந்து, அடா புலேயா! நீ எப்படி உள்ளே வந்தாயென்று அதட்டிக் கேட்க, இவர் எனக்கொன்றுந் தெரியாது, பகவான் என்னையுள்ளே கொண்டு வந்தார், நானென்ன செய்வேன் என்று சொல்ல, அந்த அர்ச்சகர்கள் இவரை நோக்கி, நீ இங்கிருக்கவேண்டாம், இவ்வூரைவிட்டு எங்கேயாகிலும் போய் விடு, இருந்தாயானால் உனக்குத் தண்டனை கிடைக்கும் என்றார்கள். அதைக் கேட்ட சோகாமேளர் போய்த் தம் மனைவியை யழைத்துக் கொண்டு, சந்த்ரபாகா நதிக்கரையில் ஒரு குடிசை யேற்படுத்திக்கொண்டு அதில் வாழ்ந்திருந்தார். இப்படியிருக்குங் காலத்தில் ஒருநாள், நாமதேவரைப்போலப் பாண்டுரங்கப்பெருமானை இடைவிடாமல் மனத்தி லிருத்திக்கொண்டு, வேப்பமர நிழலிலிருந்து உண்ணும் பொழுது, ஸ்ரீருக்மிணீநாதனே, எனக்கெதிரே வருகின்றிலை, என்மீது கோபமோ வென்று சொல்லு முன்னே, பகவானவர் எழுந்தருளிச் சோகாமேளரோடு அமுதுண்ண, உடல் புளகித்து ஆநந்தக் கடலில் முழுகி யிருந்தார். அப்போது, அர்ச்சகர்கள் அவ்விடத்தில் வந்து இந்தச் செய்தியைக் கண்டார்கள். அந்தச் சமயத்தில் பரிமாறுகின்ற தமது மனைவியை நோக்கி, பகவானுக்கு இந்தத் தயிரைப் பரிமாறக் கடவையென்று சொல்ல, அவளும் அப்படியே பரிமாறும்போது அது சிந்தி, பகவானுடைய திருவாடையின்மேல் தெறிக்கக்கண்டு, சோகாமேளர் தமது மனைவியை நோக்கி, பகவானுடைய ஆடையின்மீது தயிர்தெறித்து அந்த ஆடை நனைவது நன்றோ வென்று கோபிக்கும்போது, மனைவியானவர், கணவனை நோக்கி, பகவான்மீது எச்சமிட்ட காகத்தை நீர் என்செய்தீர் என்று கேட்க, உடனே அந்த மரத்தின்மேலிருந்த காகத்தை ஓட்டினார். இப்படி யிருக்கும் போது, அர்ச்சகர்கள் அங்கே வந்து, இப்படியுமுண்டோ? ஸ்ரீ கண்ணபிரான் காட்டில்வந்து உன்னோடிருந்து உண்பானோ? இது என்ன ஆச்சரியமென்று இவரைக் கன்னத்தின்மேல் அறைந்து, நீராடிக் கோயிலுக்குள்ளேபோய், பகவானது ஆடை முழுதும் தயிரா யிருப்பதையும், கன்னம் வீங்கி யிருப்பதையும், கண்கள் சிவந்திருப்பதையும் கண்டு அஞ்சி, ஒருவர்க் கொருவர் பேசிக்கொண்டு, வேப்ப மரத்தின் நிழலில் கண்டதெல்லாம் இங்கே காணப்படுவதனால், மனம் நடுங்கி, ஐயனே! ஸ்ரீலக்ஷ்மீநாதனே, புலையரும், நாங்களும் உனக்குச் சமானமென்பதை யாம் அறிந்திலேம், எங்கள் பிழையைப் பொறுத்தருளவேண்டு மென்று ப்ரார்த்தித்து, பகவானைக் கோயிலில் விட்டு, தாசரிடத்தில் விரைந்து ஓடிவந்து, இவரைக் கண்டு, நீர் பகவத் பக்தியிற் சிறந்தவர், ஆகையால் பகவானை உமது வசப்படுத்திக் கொண்டீர். பகவானிடத்துக்கு வாரும் என்று அழைத்துக்கொண்டு போய்க் கோயிலில் விட, சோகா

மேளர் பகவானைக் கண்டவுடனே, பகவானிடத்தில் முன்னே காணப்பட்ட குறிகளெல்லாம் மறைந்துபோயின. இந்த அற்புதமான செய்தியை எல்லாரும் அறிந்து, சோகாமேளரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். அன்றுமுதல் சோகா மேளரும் பகவத் ஸந்நிதியில் முந்தியிருப்பவரானார் என்று சொல்லி மேலே பத்மநாபவேதியர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சோகாமேளர் சரித்திரம் முற்றிற்று.

கபீர்தாசர் சீடராகிய

## கக-வது பத்மநாபவேதியர் சரித்திரம்.



காசீக்ஷேத்ரத்தில் செல்வத்தாற் சிறந்த ஒருவணிகனிருந்தான். அவன் தனது ஐந்து நன்மக்களோடும, அழகிற் சிறந்த மனைவியோடுங் கூடி, உற்றார் முதலிய எல்லாரும் கொண்டாடும்படி வாழ்ந்திருந்தான். அப்படி யிருக்குங் காலத்தில், அவனுக்குக் குஷ்டநோய் உண்டாகி, ரணமும துர்க்கந்தமுமா யிருந்ததலல், சமீபத்தில் வரத் தகுந்தவர்களும் வராதிருக்க, நெடுங்காலம் துன்பத்தை யநுபவித்துக்கொண்டிருந்தான். ஆனால், இவன் நற்குண நற்செய்கைகள் உள்ளவனானமையால், பல நல்லோர்கள் வந்து சொன்ன தான தர்மங்களைச் செய்தான். அதனால் அந்த நோய் நீங்கவில்லை; வைத்தியர்கள் வந்து உயர்ந்த ஔஷதங்களைப் பிரயோகித்தும ப்ரயோஜநப்படவில்லை. இப்படிப் பலவகையாகிய பரிஹாரங்களைச்செய்தும் பிணி மேன்மேலும் அதிகரித்ததனால் துன்பம் பொறுக்க மாட்டாதவனாய், சில பெரியோரை யழைத்து, ஐயரே! இந்தப் பிணியா லுண்டாகிற துயரத்தைச் சஹிக்க என்றால் முடியவில்லை, என்னைக் கொண்டுபோய்க் கங்கையில் விட்டு விடுங்கள் என்று ப்ரார்த்திக்க, அவர்கள் இவனது துன்பத்தையும் மனத்துணிவையும் ஆலோசித்து, இவன் விருமபினபடியே நாம் செய்யாமற்போனால் நமக்குப் பழி யுண்டாகுமென்று எண்ணி, இவனைக் கொண்டுபோய்க் கங்கைக் கரையில் வைத்து, நீரில் விட்டுவிட ஆயத்தப்படும்போது, ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தந பரராகிய பத்மநாபவேதியர் நீராட அவ்விடத்திற்கு வந்து, இந்தக் கூட்டத்தைப் பார்த்து, சமீபத்தில் வந்து, என்ன செய்தியென்று விசாரித்தார். அவர்கள், இவ்வணிகனுடைய வரலாறு முழுதும் சொன்னார்கள். அதைக்கேட்ட வேதியர், அவர்களை நோக்கி, அநேக ஜந்மங்களுள்ளும் இந்த நர ஜந்மம் சிறந்தது; இதைக்கொண்டு மோக்ஷலாபத்தை யடையலாம், அப்படி யிருக்க, அருமையான இந்த ஜந்மத்தை வீணாக்கி, நீரில் வீழ்ந்து இறந்தால் நரகம் சித்திக்கும், அப்படிச் செய்யவேண்டியதில்லை, நான் இந்தநோய் தீரும்படியான சிறந்த பரிஹாரமொன்றுண்டு, அதைச் சொல்லுகிறேன், அப்படிச் செய்தீர்களானால், நோயும் தீரும், மோக்ஷ லாபத்தையும் இவன் அடைவான் என்று சொல்ல,

அந்தக் கூட்டத்தா ரெல்லாரும் அந்தப் பரிஹாரத்தைச் சொல்ல வேண்டுமென்று ப்ரார்த்திக்க, வேதியர், நீலமேக வண்ணனாகிய பகவானது திருநாமமாகிய ராம என்னும் த்வயாக்ஷரமந்த்ரத்தை மூன்றுதரம் உச்சரித்தால், தக்ஷணமே நோய் தீரும், நீங்கள் விரைந்து இந்தப் பரிஹாரத்தைச் செய்யுங்கள் என்றார். அப்படியே அவர்க ளெல்லாரும மூன்றுதரஞ் சொல்லி, அவனைக்கொண்டும் சொல்லுவித்தார்கள். உடனே அந்தநோய் நீங்கின வணிகன் அதிக தேஜஸோடு விளங்கினான். பிறகு அவனும் அவனைக்கொண்டு வந்தவர்களும் பத்மநாபவேதியர் திருவடியில் வீழ்ந்து பணிந்து தோத்திரஞ் செய்து, காசிபட்டணத்துக்குப் போய்விட்டார்கள். அவர்களில் சிலர், கபீர்தாசர் திருமாளிகைக்கு வந்து அவரைப் பணிந்து, தேவரீருடைய சீடராகிய பத்மநாபவேதியர் தபோமஹிமையிற் சிறந்தவர், ராம என்னும் இரண்டெழுத்தினால் மஹா வ்யாதியைத் தீர்த்தருளினார். பிணியாளனையே யன்றி இவ்வூரிலுள்ளார் எல்லாரையும் அந்த ராம நாம ஸங்கீர்த்தநபர ராக்கினார் என்று சொல்ல, கபீர்தாசர் மிகவும மனமகிழ்ந்து, அந்த ராம என்னும இரண்டெழுத்தின் பெருமையை ஒருவராலுஞ் சொல்ல முடியாது, அந்த இரண்டெழுத்தாகிய தாரகமந்த்ரத்தை உச்சரித்து, முற்காலத்தில் சிவபெருமான் நஞ்சுண்டதனாலுண்டாகிய துன்பம நீங்கினார். ஆகையால் அதுபோலச் சிறந்த மந்த்ரம வேறொன்றுமில்லை, அதை ஒருதரம் சொன்னால் எல்லாவினைகளும ஒருமிக்க வொழியும், அப்படிப்பட்ட மந்த்ரத்தை மூன்றுதரம் சொன்னால் வணிகனுடைய நோய் நீங்காமலிருக்குமா ? அந்தப் பத்மநாபவேதியன், இந்த ராம மந்த்ரத்தின் அருமை பெருமைகளை அறியமாட்டான் என்று சொல்லுவதை பத்மநாப வேதியர் காதிற் கேட்டுக்கொண்டே வந்து தமது ஆசாரியராகிய கபீர்தாசருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, எந்நேரமும் ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு பேரானந்தத்தை யடைந்து வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ரோகிதாசர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

பத்மநாபவேதியர் சரித்திரம் முற்றிற்று.

# உ0-வது ரோகிதாசர் சரித்திரம்.

பூர்வகாலத்தில், ஒரூரில், சர்மகர்மஞ் செய்கிற சக்கிலியர்களுக்குள் உயர்ந்தவர் ஒருவர் இருந்தார். அவர் சமதமாதி ஆத்மகுணங்களுள்ளவர்; வைஷ்ணவத்தில் அதிக விருப்பமுள்ளவர்; பரோபகாரம செய்வதே ஸ்வபாவமாகவுடையவர்; திருமாலுக்கு உயிர்போல்பவர்; எல்லா வுயிர்களின் மேலும் அருளுடையவர்; திருமாலடியாரைக் கண்டால் சாஷ்டாங்கதண்டம் சமர்ப்பிப்பவர் ; திவ்யதேச யாத்திரையாய்ச் செல்லுவோர்களைத் தமக்கிசைந்த வழியே உபசரிப்பவர்; தினந்தோறும் விடியற்காலத்தி லெழுந்து முன்னே வயிற்றில் மூண்டெரிகிற உதராக்நியைத் தணித்து, பிறகு நீராடி, பகவதாராதநம் செய்

பவர். கலியுகத்தில் வருத்துகின்ற பசிரோய் அதிகரித்தால் மனம் சலிக்கும், அதனால் மெய்யுணர்வு கெடும, ஆகையால் இவர் முந்திப் பசியைத் தணித்துக் கொண்டு, பிறகு பகவதாராதநம் செய்வது வழக்கம். இவரை அவ்வூரார் யாவரும் ரோகிதாசர் என்று அழைப்பார்கள். இவர் ஒருநாள், துருத்தியில் நீரை நிறைத்துக்கொண்டு, மடி, ஆசநம் முதலிய யாவும் தோலினால் அமைத்துக் கொண்டு, பரிசுத்தமாகிய ப்ருந்தாவநத்திற்குப் போய், நான்கு வேதங்களாலும் அறியப்படாத திருமாலின் திருவடியைத் தோத்திரஞ்செய்துகொண்டிருந்தார். அப்போது, அவ்விடத்தில் ஒரு வேதியன்வர, அவனுக்குத் தம்மால் செய்யத் தகுந்த உபசாரங்களைச்செய்து, மிகவும் புகழ, அவன் இவரைநோக்கி, சாளக்ராம பூஜைசெய்தல் எல்லார்க்கும் மிகவுஞ் சிறந்தகாரியம், அப்படிப்பட்ட சாளக்ராமத்தைத் தோலின்மேல் வைத்துப் பூஜைசெய்வது நன்றோ? இப்படிச் செய்வது உனக்குத் தகுமோ? இந்தச் சாளக்ராமம் வேதியர் முதலானோர்களால் பூஜிக்கப்படுவதல்லவா என்று வினவ, இவர் அந்த வேதியனை நோக்கி, எப்போதும் எல்லாப் பொருள்களுள்ளும் நிறைந்திருக்கிற பகவானைத் தியாநமபண்ணுகிற மனம் இருப்பதற்கிடமாயிருப்பதுதோலே, அந்தப் பகவானைத் தோத்திரம் பண்ணுகிற நாவும் தோலே, பரிசுத்தமான ஆத்மா தங்கியிருப்பதும் தோலாற் செய்யப்பட்ட வையே என்று சொல்லக்கேட்ட வேதியன், முப்புரிநூலையணிந்த வேதியரே யன்றி மற்றவர்கள் பகவதாராதநம் செய்யத்தகுந்தவர்கள் ஆகமாட்டார்கள். ஆகையால் நீ இப்படிச் செய்ய வேண்டாம், உனக்குப் பாபம் சம்பவிக்கும் என்று சொல்ல, தாசர் வேதியனை நோக்கி, என்னிடத்தில் உபவீதமிருப்பதை நீ யறியமாட்டாய் என்று சொல்லித தமது நெஞ்சைப் பிளக்கவே, விளங்குகின்ற உபவீதம் வெளிப்பட்டது. அதைக் கண்ட வேதியன், இது என்ன ஆச்சரியம் என்று தாசரை வணங்கி, தாசரே, முப்புரி நூலால் என்ன ப்ரயோஜநம், பரிசுத்தமான மனத்தையுடையவர்கள் பகவதாராதநம் செய்யலாம், தடையில்லையென்று சொல்லித் தன் வீட்டுக்குப் போய்விட்டான். போனபிறகு, பகவதநுக்ரஹத்தாலே தாசருடைய மார்பு பிளப்புண்ட இடந்தெரியாமல் மறைந்து இருபிளவும் ஒன்றாய்ச்சேர்ந்துபோயின. தாசரும் பகவத்தியாநநிரதராய் எழுந்தருளியிருந்தார் என்று சொல்லி, மேலே பிம்பாஜிபக்தர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினர்.

ரோகிதாசர் சரித்திரம் முற்றிற்று.

---

## உக-வது பிம்பாஜிபக்தர் சரித்திரம்.

---

முற்காலத்தில், உலகத்தாரெல்லாரும் கடேமண்டலியென்று சொல்லுகின்ற சிறந்த நகரத்துக்குத் திலகம்போல் பவனாகியும், பரிசுத்தனாகியும், மேலான எல்லையில்லாத தர்மங்களையும் நடத்துவோனாகியும், சாதுஜநங்களு

க்குத் தாசனாகியும், சௌரியபராக்ரமங்களிற் சிறந்தவனாகியும், உதாரசீலனு
கியும், தைரியசாலியாகியும், புத்ர களத்ராதிகளாகிய செல்வத்தை யுடையவ
னாகியும், சக்தி யுபாசகனாகியும் இருந்த அரசனொருவன் பிம்பாஜி என்னும்
பெயர் பெற்று விளங்கிக்கொண் டிருந்தான். அவன் நாள்தோறும் விடியு
முன்னே எழுந்து, பெரியோரால் விதிக்கப்பட்டிருக்கிற நித்ய கர்மங்களை
முடித்து, நீராடி, பேரிகைமுழங்க, காளிகோயிலுக்குப்போய், ஷோடசோப
சாரங்களுஞ்செய்து, பூஜை முதலியவற்றை நிறைவேற்றி, தான் நிவேதிக்கிற
நைவேத்யத்தைக் காளி உண்ணும்படிசெய்து, தன் அரண்மனைக்குவருவான்.
அப்படி அவன் ஒழுகும் நாளில், ஒருநாள், வைஷ்ணவர்கள் தீர்த்த யாத்ரை
செய்வோர்களாய், அவ்வூருக்கு வந்தார்கள். இந்த அரசன் பூர்வ ஜன்மங்க
ளில் யஜ்ஞாதிகள், ஏகாதசி விரதம், மாத்ருசேவை, பித்ருசேவை, தீர்த்த
யாத்ரை, வாபீ கூப தடாக ஆலய ப்ரதிஷ்டை, அந்நதானம் முதலியவற்
றைச் செய்திருந்தானகையால், இவனுடைய நகரத்தில், ஸ்ரீ வைஷ்ணவர்கள்
வந்துசேரும்படிநேரிட்டது. அந்தச்செய்தியை அரசன் தனசேவகர்களாலறி
ந்து, அவர்களுக்கெல்லாம் வேண்டியவற்றை யமைத்து, தான் நீராடிக் காளி
கோயிலுக்குப்போய், பூஜை முதலியவற்றைச் செய்து ஸ்தோத்திரம் பண்ணி
நிற்க, காளி அவனுக்கு ப்ரத்யக்ஷமாகி, உள்ளன்போடு சொல்லுகிறாள். உன்
நகரத்துக்குவந்த சாதுக்களை உன் அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு
போய், அவர்களுக்கு அமுது உண்பித்து வருவாயானால், உன் பூஜையை
நான் ஏற்றுக்கொள்வேனென்றுசொல்லி, மேலுஞ்சொல்லுகிறாள். ஸ்ரீவைகு
ண்டநாதனாகிய திருமாலே இந்தச் சகலமான லோகங்களுக்கும், பிரம ருத்தி
ரேந்திராதி தேவர்களுக்கும், மற்றுமுள்ள முனி கணங்களுக்கும் தலைவனா
யிருப்பவன் என்று வேதங்கள் முறையிடுகின்றன. அப்படிப்பட்ட பகவானு
க்கு அன்பராகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் உன் நகரத்துக்கு எழுந்தருளினதனால்
உன்னைப்போலப் புண்யவான்கள் ஒருவருமில்லையென்று சொல்ல, அரசன்
காளியை நோக்கி, தாயே, திருமால் உன்னைப்பார்க்கிலும் சிறந்த தெய்வமெ
ன்பதை நீ சொல்ல அறிந்துகொண்டேன். ஆனால் அந்தத் தெய்வத்தை நான்
காணும்படி அருள்செய்யவேண்டுமென்று பணிந்து கேட்க, காளி அரசனை
நோக்கி, ஒப்பற்ற அந்தக்கடவுளை நான் காட்டவல்லேனோ, அவனடியாரைப்
பூஜித்தால் அவர்களே காட்டுவார்களென்று சொல்ல, அரசனும் அப்படியே
அவர்களை வணங்கி யழைத்துப்போய்த் தன் அரண்மனையில் அமுது செய்வி
த்து, சந்தன புஷ்ப தாம்பூலாதிகளையுங் கொடுத்து, தோத்திரம்பண்ணிநின்று
சொல்லுகிறான். ஸ்வாமிகளே, நீங்கள் ஸ்ரீ ராமபிரானை யறியும்படியான வழி
யை யெனக் கருள் செய்யவேண்டு மென்று ப்ரார்த்திக்க, அவர்கள் அரசனை
நோக்கி, ராமானந்த ஸ்வாமிகளிடத்தில்போய், அவரைச் சரணடைந்து, அவ
ருடைய அருள் பெறுவையானால், ஸ்ரீ ராமபிரானைக் காணலாம் என்றார்கள்.
அதைக்கேட்ட அரசன் மன மகிழ்ச்சியோடு வைராக்யத்தை மேற்கொண்டு,
தனது அரசாட்சிக்குத் தன் மந்திரியை உரியவனாக்கி, உள்ளபொருள்களைப்

பலவகையாய் வழங்கித் தானும் தன் மனைவியுமாக வெளிப்பட்டு வந்து, ராமாநந்த ஸ்வாமிகளுடைய திரு வடியை வணங்கி, உடல், பொருள், ஆவி என்கிற மூன்றையும் அவருக்குத் தத்தஞ்செய்ய, அவரும் ராமதாரக மந்த்ரத்தை உபதேசித்தருளினர். உபதேசிக்கப் பெற்ற இவர்கள் குரு வருளால் சிறப்படைந்து, சிரவண மநநாதிகளில் காலங் கழிப்பவர்களாய், ஹரி பஜநத்தில் விருப்பமுள்ளவரா யிருந்தார்கள். இப்படி யிருக்கையில் ஒருநாள் ஆசாரியர் திருவடியை வணங்கி, துவாரகா நகரத்திற்குப்போய்க் கண்ணபிரானைத் தரிசிக்க விரும்பினேம்; விடை தரவேண்டுமென்று கேட்க, அவரும் அப்படியே விடை கொடுக்க, விடை பெற்றுப் போய்த் துவாரகையை யடைந்து கண்ண பிரானைச் சேவித்து, முகுந்தா, அச்சுதா, அமலா, பக்தவத்ஸலா என்று அநேகவிதமாக ஸ்தோத்ரங்கள் செய்து நின்றபோது, அந்தப் பகவானவர், சங்கசக்ராதி திவ்யாயுதங்களோடும், கடக, கங்கண,கேயூர, குண்டல, கிரீட,நூபுராதிகளாகிய திவ்யாபரணங்களோடும், பீதாம்பரத்தோடும் இவர்களுக்கு ப்ரஸந்நமாய் எழுந்தருளி, அன்போடு தழுவிக்கொண்டு மகிழ்ச்சியடைந்திருக்க, இவர்களும் திருவடியை வணங்கி நின்றார்கள். பிறகு இவர்களுக்கு இன் சொற்களைச் சொல்லி, பகவான் மறைந்தருளினர். அதன் பின்னே, அரசனும் அரசன் மனைவியும் அங்கே நான்குமாசகாலம் தங்கியிருந்து, ஸ்ரீ ஹரி பஜனையால் மனமகிழ்ந்து, ஒருநாள் பகவானிடத்தில் விடைபெற்றுக் காட்டு வழியே போகும் போது, ஒரு புலியானது இவர்களுக் கெதிரில் விரைந்து வந்தது. அந்தப் புலியை அரசன் மனைவி கண்டு பயந்து, அரசனை நோக்கி, கோவத்தையுடைய புலியானது என்னைத்தின்னவருகின்றது என்று சொல்ல, அரசன், பெண்ணே, அந்தப் புலியினுள்ளும் பகவான் அமர்ந்திருக்கிறார், நீயேன் அஞ்சுகின்றாய், வாவென்று அருகே யழைத்துக் கொண்டு, அவளைத் தின்னவந்த புலியின் முகக்குறியை யறிந்து, தன் கழுத்திலிருந்த துளசிமாலையைக் கழற்றிப் புலியின் கழுத்தில் போய் விழும்படியாக எறிய, அது அப்படியே போய்ப் புலியின் கழுத்தில் விழுதலும், புலியானது தன் கொடுந் தொழிலை முழுதும் மறந்து எதிரேநின்றது; நின்ற அந்தப் புலியின் தலைமீது தமது கையை அமைத்து, ஸ்ரீ ராமநாமத்தை யுபதேசித்து, இன்று முதல் நீ கொலைத்தொழிலை யொழித்துவிடுவாயாகவென்றருளிச்செய்து, அவ்விடத்தைவிட்டு நீங்கினர். பிறகு புலியானது பேரருளை யுடையதாகிக் கொலைத்தொழிலைச் செய்து மாம்ஸாதிகளை யுண்கிற தனது பூர்வாசாரத்தை யொழித்து, அந்தக் காட்டில் உதிர்ந்து கிடக்கிற சருகுகளை யுண்டு, ஸ்ரீ ஹரிநாமத்யாநம் செய்துகொண்டு எழுநாளிருந்து, அவ்வுடம்பைவிட்டு வேறு சிறந்த வுடம்பிற் போய்ப் பிரவேசித்தது என்று சொல்லி, மேலே நரசிம்மமேதாவின் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினர்.

பீப்பாஜிபக்தர்சரித்திரம் முற்றிற்று.

# உஉ-வது நரசிம்மமேதா சரித்திரம்.

அழகிற் சிறந்ததாகிய கடேமண்டலியென்கிற வூரில் வாழ்கின்ற நாகர வேதியருக்குச் சிவபெருமானுடைய அமிசமாய் ஒரு புதல்வர் அவதரித்தார். அவருக்கு நரசிம்மமேதா என்று பெயரிட்டு, அன்போடு தாய்தந்தையரிருவரும் ஜாக்ரதையாய் வளர்க்க வளர்ந்து, தக்க பருவத்தில் உபநயநம் செய்யப்பெற்று, பிறகு தாய்தந்தையர் இருவரும் சுவர்க்கலோகத்தையடைய, தமது சிறிய தந்தையார் முதலானோருடைய ஆதரவிலிருந்து செழிப்பாய் வளர்ந்து வருகிற காலத்தில், அந்த வூரிலுள்ள சிறுவர்களோடு கூடி விளையாட்டில் விருப்பம் அதிகரித்ததனால், கல்வியில் மனம் பொருந்தாமல் விளையாட்டிலேயே காலங்கழித்துக்கொண்டிருந்தார். ஒருநாள் நெடுநேரம் விளையாடினதனால் மிகுதியான தாகத்தினால் வருந்தித் தமது வீட்டுக்கு வந்து, தமது தமையன் மனைவியைநோக்கி, எனக்கு விரைவாய்த் தாகத்துக்குக் கொடுக்க வேண்டுமென்றுகேட்க, அவள் கோவங்கொண்டு, இப்பொழுது என்ன வேலை செய்து இளைத்தாய்? நீ மூர்க்கனாகிச் சிறுவர்களோடு கூடிக்கொண்டு இரவும் பகலும் விளையாட்டிலேயே காலங் கழிக்கிறாயே; கல்வி யிருந்தா லல்லவா உலகத்தில் பிழைக்கலாம்? சோற்றையுண்ணவும் விளையாடவும் கற்றுக்கொண்டாய்; இப்படித் திரிகிற உனக்கு மனைவி வந்துவிட்டால் அவளை எவ்விதமாய் அந்த வஸ்திரங்கள்கொடுத்துக்காப்பாற்றுவாய் என்று சில கடுஞ் சொற்களைச்சொல்ல, இவர் கேட்டு, ஆலோசித்து, வீட்டை விட்டுக் காட்டுக்குப் போய் ஆலோசிக்கிறார். எப்படியென்றால், உலகத்தில் ஒருவன் பாலகனாயிருக்கும்போது, தந்தை தாயரை யிழப்பதும், யௌவந காலத்தில் மனைவியை இழப்பதும், முதுமைப் பருவத்தில் பிள்ளைகளை யிழப்பதும் ஆகிய இவையாவும் தீவினைப்பயனேயன்றி வேறல்ல; ஆதலால் என் தீவினை காரணமாக இளமையிலே என் தந்தை தாயரை யிழக்கும்படி நேரிட்டது என்று ஏங்கியழுதுகொண்டேபோய், அங்குள்ள ஒருசிவாலயத்தைக்கண்டு, உள்ளே போய்ச் சிவ பெருமானைத் தோத்திரம் செய்து, ஏழை பங்காளா! க்ருபை செய்து என்னை ஆண்டருளவேண்டும், எனக்கு உன்னையன்றி வேறொரு துணை யில்லையென்று சொல்லி, ஆவிடைமேல் சயனித்துக்கொண்டிருந்தார். இப்படியே உணவில்லாமல் ஏழுநாள் வரைக்கும் சயனித்திருக்கக்கண்ட சிவபெருமானானவர், இவ்வுலகில், என் அடியார் மனங்களித்து, புண்யதீர்த்தம், பஞ்ச கவ்வியம், தேன், இளநீர் முதலியவைகளால் திருமஞ்சனம் செய்து, சந்தநபுஷ்ப தாம்பூலாதிகள் கொடுத்து, ஆடையாபரணாதிகளா லலங்கரித்து, என்னைப் பலவகையாய்த் தோத்திரஞ்செய்து தங்கள் அபீஷ்டங்களைப் பெறுவார்கள். அப்படியிருக்க, இவன் என்மேல் சயனித்துக்கொண்டான். ஆனாலும், இவன் முற்பிறப்பில் புலியா யிருந்து, ராம நாம உபதேசத்தால் புலி

யுரு மாறினவனுதலால் அந்தப்புண்ய விசேஷத்தையாகிலும் பார்க்கவேண்டுமேயென்று இவர்மீது அருள் மிகுந்து, தமது ஐந்து முகம், பத்துக்கை, சர்ப்பாபரணம் முதலிய குறிகளோடு இவர்க் கெதிரே யெழுந்தருளி, தூக்கத்திலிருந்து எழுப்பி, அக்காலத்தில் பிம்பாஜியால், நான் செய்யும் ராமநாம ஜபத்தை நீபெற்றாய், ஆதலால் உனக்கெதிரே தோன்றினேன், உனக்கு வேண்டியதைக் கேட்டுக்கொள்வாயாக வென்றார். இதைக் கேட்ட நரசிங்கமேதா எழுந்து, சிவபெருமான் திருவடியில் வீழ்ந்து வணங்கித் தோத்திரம் செய்து, ஐயனே, நான் குழந்தையாகையால் சிறந்தபொருள் இன்னதென்று எனக்குத் தெரியாது, சிறந்த பொருள் எதுவோ அதனை நீயே யறிந்து அடியேனுக்கு அநுக்ரஹிக்கவேண்டும் என்று ப்ரார்த்திக்க, சிவ பெருமான் மகிழ்ந்து, தமக்கு விருப்பமுள்ள ஸ்ரீ கண்ணபிரானது திரு நாமத்தை உபதேசித்து, உனக்குக் கண்ணனைக் காட்டுகிறேன் என்று சொல்லி, வேண்டிய வுணவுகளைக் கொடுத் துண்ணச் செய்து, கண்ணபிரானுனவர் யமுநா நதிக்கரையில், கோபிகைகளோடு கூடி நடநம் செய்வார், அவர் நடநம் செய்யும்போது நான் அந்த நடநத்துக் கேற்ற மத்தளம் கொட்டுவேன், அந்தக் கண்ணபிரானது சேவையே எனக்கு இஷ்டமென்றார். இவர் அந்தச் செய்தி துவாபர யுகத்தில் நடந்த தல்லவா? இந்தக் கலியுகத்திலும் காணப்படுமோ வென்றுகேட்க, சிவபெருமானுனவர், அன்பர்களுடைய கண்ணுக்கு அந்த வைபவங்க ளெல்லாம் இந்தக் கலியுகத்திலும் காணப்படுமென்றருளிச் செய்தார். பிறகு இவரைக் கோபிகைவேஷம் பூண்பித்து அன்போடு அழைத்துக்கொண்டு, யமுநா நதியை யடைந்து, அந்த நதிக்கரையில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ கண்ணபிரானைக் கண்டு வணங்கி நிற்க, ஸ்ரீ கண்ணபிரான் இவ்விருவரையும் தழுவிக்கொண்டார். பிறகு அநேக கோபிகைகளின் இடையில் தங்கி, ஆபரணாலங்க்ருதராய், வேணு காநம் செய்து கொண்டு நிற்கிற கண்ண பிரானுடைய சௌந்தர்யத்தைக் கண்டு, சிலர் அதரத்தைச் சுவைக்க விரும்பவும், சிலர் தழுவுதற்கு அபேக்ஷிக்கவும், சிலர் கையைப்பிடிக்க விரும்பவும், சிலர் முத்தமிட விரும்பவும், இவ்வாறு பல வகையாய் விரும்பின கோபிகைகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கண்ணனாய் இடையிடையே அவரவர் விருப்பத்தின்படியே நின்று இன்பங் கொடுத்துக்கொண்டு, சிவபெருமானை நோக்கி, நீ பெண்ணுருவாக்கிக் கொண்டுவந்தது யாரையென்று கேட்க, சிவபெருமானுனவர் நகைத்து, நரசிங்கமேதாவுக்குக் கண்சாடைசெய்ய, அவரும் விரைவாய் ஓடிவந்து கண்ணபிரானை வணங்க, சிவ பெருமான் கண்ணனை நோக்கி, முற்பிறப்பில் இவன் புலியாய்ப் பிறந்து முடிவில் பிம்பாஜியின் அருளுக்குரியவனாய், எல்லாப்பாவங்களிலிருந்து விடுபட்டு வேதியர் குலத்தில் பிறந்தான். இளமையிலேயே தாய்தந்தையர் மரண மடைந்ததனால் என்னிடத்தில் வந்தடைந்து ஏழுநாள் உபவாசமாயிருந்து வருந்துவதைக்கண்டு, நான் இவனுக்கு ப்ரத்யக்ஷமாகி, உனக் கென்னவேண்டுமென்று கேட்டேன், நான் குழந்தையாகையால் எனக்கு ஒன்றுந் தெரியாது, சிறந்த பொருள் யாதோ அதனை

நீயே தெரிந்து எனக்கு அநுக்ரஹிக்கவேண்டு மென்றான், எனக்கு உன்னையன்றி வேறொருவரு மில்லை யாகையால் உன்னிடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தேன், இவனுக்கு நீயே அநுக்ரஹிக்கவேண்டும், ஸ்ரீகண்ணபிரானே யென்று ப்ரார்த்தித்து நிற்க, ஸ்ரீ கண்ண பிரான் மனமகிழ்ந்து, நரசிங்க மேதாவின் தலைமேற் கைவைத்து, உபதேசரூபமான அநுக்ரஹஞ்செய்து, நீயிந்த நதிக்கரையில் என்னைக் கோபிகைகளோடிருக்கக்கண்டாய், ஆகையால் இந்த விளையாட்டைப் பிரபந்தமாகச் செய்து, உலகத்தாரை மகிழ்விக்கக் கடவாய், அப்படிச்செய்வாயானால், உன் கண்களுக்கு எப்பொழுதும்இப்படியே சேவைதருவேன்,இதுதான் உனக்கு நான் கொடுக்கும்படியான சிறந்த வரம் என்று சொல்லிச் சிவ பெருமானுக்கும் விடை கொடுக்க, சிவ பெருமானும் கண்ணபிரானை வணங்கி நரசிங்கமேதாவோடு, தான்அமர்ந்திருக்கிற கோயிலை யடைந்து, நரசிங்கமேதாவுக்குச் சொல்லவேண்டியதைச் சொல்லியருள, நரசிங்கமேதாவும் பகவான் கட்டளையிட்டபடியே அமல லீலைகளைப் பாடலாகச் செய்து, ஞானச் சுடராகிய பகவானை மனக்கண்ணினால் கண்டு, ஆநந்தக்கூத்தாடிப்பாடி மகிழ்ந்திருந்தார். இப்படியிருக்க, இவர்வீட்டிலுள்ளவர்கள் இவரைக் காணாமல், பல இடங்களில் தேடி யலைந்து, சிலரால் இந்தச் சிவாலயத்தி லிருப்பதை யறிந்துவந்து, இவர் பாடுகிற குஜராத்திபாஷைப் பாடலையும் கேட்டுச் சந்தோஷித்து, அழைத்துப்போய் வீட்டிற் சேர்க்க, இவர் பகவத் தியாநபராயிருப்பதை யறிந்த ஒரு வேதியன், தன் மகளை இவர்க்கு விவாகஞ்செய்துகொடுக்க, அந்தப்பெண்ணோடுகூடிச் சுகித்து வாழுங்காலத்தில், ஒருமகளையும் மகனையும் பெற்று, ஊராரெல்லாரும் கொண்டாடும்படி ஸ்ரீகண்ணபிரானது அமல லீலைகளை மனக்கண்ணால் தினந்தோறுங் கண்டு சேவித்துப் பாடிக்கொண்டு, உஞ்ச வ்ருத்தி செய்து ஜீவநம் செய்து வருங்காலத்தில், அந்த வூருக்கருகிலுள்ள சாமபுரத்தில், திரிபுராந்தகன் என்னும் பெயரையுடைய ஒரு வேதியன் பெற்ற கந்நிகைக்குவிவாஹத்துக்குரிய பருவம் நேரிட்டிருப்பதைப் புரோஹிதர்க்குச் சொல்ல, க்ருஷ்ணபட்டரானவர் மணமகனைத் தேடிக்கொண்டுபோய், அடுத்தவூரை யடைந்து, நரசிங்கமேதாவென்கிற பரமபாகவதரைக்கண்டு, சுவாமீ! எங்கள் எஜமானுடைய பெண்ணைத்தேவரீருடைய புதல்வனுக்கு விவாஹஞ்செய்து கொடுக்கத் தீர்மானித்திருக்கிறோம்; தேவரீர் திருவுளத்தையறிய விரும்புகிறோமென்று சொல்ல, நரசிங்கமேதாவானவர், அப்படியேயாகலாம் என்றுசம்மதிவார்த்தைசொன்னவுடனே, கிருஷ்ணபட்டர் பொருத்த நிமித்தங்கள் முதலியவும் ஆராய்ந்து, முகூர்த்தநாள் நிச்சயித்துக்கொண்டு மீண்டு வந்து, தான்போய்வந்த செய்தியெல்லாம் திரிபுராந்தகருக்குச் சொன்னார். அந்தச் சொல்லைக்கேட்ட யாவரும் நகைத்து, ஐயரே! நீர் நல்ல மணமகனைத் தேடினீர், நரசிங்கமேதா என்பவன் தரித்திரத்தால் பிடிக்கப்பட்டுக்கொண்டிருப்பவன், அவன் மகனுக்கா நமது பெண்ணைக்கொடுக்க இசைந்துவந்தீர்! நன்றுநன்று என்று சொல்ல, கேட்ட க்ருஷ்ணபட்டர் சொல்லுகிறார். மலையரையன், தன் பெண்ணை, எ

நாளும் சுடலையிலாடிக்கொண்டிருக்கிறவனுக்குக் கொடுத்ததைத் தடுத்தவர் யார் என்று சொல்லி, மேலும் இந்த மணம் நிச்சயமானபின்பு, உமது குலத்து முன்னோர்கள்செய்த ஏற்பாட்டின்படி, உங்கள் கைவிரல்மோதிரத்தைக் கொடுக்கத் தக்கதாகும் என்ற மாத்திரத்தில், பெண்பெற்றவனாகிய திரிபுராந்தகன், பட்டரைநோக்கி, மணமகனானவன் எமது செல்வப் பெருக்கத்துக்குத் தகுதியாக ஐஞ்ஞூறு யானை, ஐயாயிரம் புரவி, ஆயிரம் தேர், ஸ்த்ரீ புருஷ ஸமூஹம், பொன், பூஷணம், ஆடை, பஞ்சவாத்யம் முதலாகிய ஆடம்பரத்தோடு வரவேண்டும், அப்படியில்லாத பக்ஷத்தில் வேண்டியதில்லை யென்று பெண்கொடுக்கமனமில்லாதவனாய்ப்பேசுகிற வார்த்தையைக்கேட்டு, வேதியர், அப்படியே மணமகன் நாளைக்குவரும்படி செய்கிறேன்என்றுசொல்லிவிட்டு, நரசிங்கமேதாவி னிடத்திற்குப் போய், நாளைக்குப் பகல் மண மாகையால் மிகுதியான ஆடம்பரத்துடன் வரவேண்டு மென்று சொல்லி, மீண்டு வந்து திரிபுராந்தகனுக்குச் செய்தியைத் தெரிவித்தார். அதைக்கேட்ட திரிபுராந்தகன் சிரித்து, நீ சொல்லுகிறவன் தரித்திரனென்பது ப்ரசித்தமாயிருக்க, அவனுக்கு நீபோய்ச்சொல்லி வந்தது புதுமையாயிருக்கிறதென்று சொல்லி, அவர்கள் எந்தவிதமாய்வருவார்களோ பார்ப்போம், போய் அழைத்துவாரும் என்று சொல்ல, பட்டரானவர் மிகவும் கோபங்கொண்டுபோனார். மறுநாள் உதயத்தில், நரசிங்கமேதா வானவர், எழுந்து, நித்திய கர்மங்களை முடித்து, ஸ்நாநம்செய்து, துவாதச நாமங்களும் தரித்து, துளசி மாலையைக் கழுத்திற் பூண்டு, வீரவைஷ்ணவர்களோடுகூடி, மனைவியும் மகனும் கூடவர, ஸ்ரீஹரி பஜனை செய்துகொண்டு விவாஹத்துக்குப் புறப்பட்டார்; அப்போது திருத்துவாரகையில் எழுந்தருளியிருக்கிற சக்ரபாணியாகிய பகவான் இவரது செய்தியை ஸ்ரீருக்மிணீபிராட்டிக்குத் தெரிவித்து, நீயே முன்னின்று இந்த விவாஹத்தை முடிக்கவேண்டுமாகையால் நீ உன் கூட்டத்தோடு வரவேண்டுமென்று சொல்லி, உத்தவர், அக்ரூரர், சுகர், ப்ரஹ்லாதர், நாரதர், வால்மீகர், தும்புரர், புண்டலீகர், பராசரர், சௌநகர், விபீஷணர், விதுரர், ஆஞ்சநேயர், வீமர், சுதாமர் என்பவர்களை நிகர்த்தவராகிய கோவலர், தமது கூட்டத்தோடு சேர்ந்துவரவும், நால்வகைச் சேனைகள் சூழ்ந்து வரவும், பலவகையான வாத்யவிசேஷங்கள் முழங்கவும் மணஞ்செய்யப்போகிற ஊருக்கு வந்தார்கள்; வந்தவர்கள் நகர்ப்புறத்தில் தங்கி, திரிபுராந்தகனுக்கு ஒற்றராலே செய்தியைத்தெரிவிக்கஅவனும்மனந்திகைத்து, கருடனுக்கு முன்னே கொசுகுபோல நமக்கெதிரேவரத்தகாதநிலையிலிருப்பவன், இவ்வளவுஆடம்பரத்தோடுவந்தது ஆச்சர்யம்! மணமகன் வந்த சம்ப்ரமமோ சொல்லமுடியாதென்று ஒற்றர் சொல்லுகிறார்கள். இது என்ன புதுமையென்று நாணமடைந்திருந்தான். க்ருஷ்ணபட்டர், இவைகள் யாவும் பகவானுடைய கருணாவிசேஷத்தாலே நிகழ்வதாகத் தோன்றுகின்றது என்று தமக்குள்ளே மகிழ்ச்சியடைந்திருந்தார். பிறகு விசுவகர்மாவந்து விவாஹமண்டபத்தை விநோதமாயலங்கரித்தான். அதில் ரம்பை மேநகை முதலான தெய்வகணிகைகள் வந்து நட

நஞ்செய்ய, தேவரும் முநிவரும் ஆகாயத்தில் நின்று வேடிக்கைபார்க்க, ருக்மிணீ தேவியார் முதலான ஸ்த்ரீ ஜநங்கள் விவாஹமண்டபத்தில் நிறைந்து சூழ்ந்திருக்க,ஸ்ரீகண்ணபிரானுேடுகோபாலரெல்லாரும்வந்துநெருங்கியிருக்க' இந்தச்சமயத்தில், பெண்ணைப்பெற்றவனாகிய திரிபுராந்தகன் தன் பெண்ணைச் சுற்றத்தாரோடு அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். அப்போது ஸ்ரீகண்ணபிரான் எழுந்து அவனை உபசரிக்க, அவன் அதிசயித்துக் கண்ணனை நோக்கி, உம்மை நான் இதுவரையில் கண்ட தில்லை, நீர் யார்? உமது பேர் யாது? உம்மூர் யாது? சொல்லவேண்டுமென்று கேட்க, ஸ்ரீகண்ணபிரான், எமது ஊர் துவாரகை, எமதுபேர் சாமளநம்பி, இந்த நரசிங்கமேதா எனக்குச் சிநேகிதன் என்று சொல்ல அந்தக்ஷணத்திலே மாப்பிள்ளையானவன் கோதூளி லக்ந முஹூர்த்தத்தில், பெண்ணுக்கு மங்கலநாண் பூட்டினான். உடனே வேதியர் ஆசீர்வதித்தார்கள். யஜ்ஞமுமசெய்து முடிந்தபிறகு, ஊர்க்கோலம் வந்து, பிறகு ஐந்து நாட்களும் செய்யவேண்டிய சடங்குகளெல்லாவற்றையும் முறையாய்ச் செய்து, இரவலர்க்கும் மறையோர்க்கும் தாநம் செய்து முடிந்தபிறகு, பந்துபோஜநமுஞ்செய்து தீர்ந்தது; பிறகு பெண்ணைப்பெற்றவனாகிய த்ரிபுராந்தகன், கண்ண பிரானை நோக்கி, என பொருள் முழுதும் இவரது பொருளுக்கு உறையிடவும பற்றாது என்று சொல்ல, கண்ணபிரான் அவனை நோக்கி, ஹரிதாசருக்கு உன் பெண்ணைக் கொடுத்ததனால் நீமிகவும் பாக்யவானென்றுபுகழ்ந்து, பிறகு நரசிங்கமேதாவை மணமகனோடும் மணப்பெண்ணோடும்அழைத்துக்கொண்டு புறப்பட த்ரிபுராந்தகன்வழியனுப்பினான். கண்ணபிரான் நரசிங்கமேதா முதலானோரை அவர்களுடையவூரில் கொண்டு போய்ச் சேர்த்து, நரசிங்கமேதாவை நோக்கி, நீ நினைக்கும்போது நான் வருகிறேன்என்றுசொல்லிவிட்டுத் துவாரகாநகரத்தையடைந்தார். இப்படிப் பகவான் போனபிறகு, நரசிங்கமேதாவானவர் அநதப் பகவானுடைய வைபவங்களெல்லாவற்றையும நினைந்து, நாள்தோறும் ஹரிபஜனை செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், துவாரகா யாத்திரை போவோர்களில் ஒருவராகிய கேசவபட்டர் என்பவர் அவ்வழியில் திருடர் பய முண்டென்று கேள்விப்பட்டு, நாம் போகிறவழியில் இந்தப் பொருளைத் திருடர் பறித்துக் கொண்டுபோனால் நாம் என்செய்வோம்! அங்கே போய், யாரிடத்தில் கேட்கிறது? ஆகையால் இங்கே நமதுபொருளை வாங்கிக்கொண்டு அங்கே நமக்குச் சேருமபடி செய்வோர் யாராகிலும கிடைத்தால் நன்மையாகுமென்று ப்ரஸ்தாபிக்க, அவருடைய மாணாக்கர் ஒருவர், சுவாமீ! இங்கே நரசிங்கமேதா என்பவர் இருக்கிறார். அவர் தேவரீருடைய விருப்பத்தின்படியே செய்வார் என்று சொல்ல, கேசவபட்டர் நரசிஙகமேதாவினிடத்திற்குப்போய், ஐயரே! நான் உம்மிடத்தில் அறுநூறுவிராகன் கொடுக்கிறேன், அந்தத் தொகை நான் துவாரகைபோய்ச் சேர்ந்தவுடனே எனக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டுமென்று சொல்ல, அப்படியே வாங்கிக்கொண்டு, துவாரகையிலுள்ள சாமளநம்பிக்குச் சீட்டுக்கொடுக்க, வாங்கிக்கொண்டு கேசவபட்டர் போய்விட்டார்.

அவர் தந்த பொருளைக்கொண்டு, ஹரிதாசராகிய நரசிங்கமேதாவானவர், தம்மிடத்திற்குவருகிற வைஷ்ணவர் மனமகிழும்படி தாநம்செய்து, ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இங்கே இவர் இப்படியிருக்க, துவாரகையை நோக்கிப்போகிற கேசவபட்டர், நாம் பொருள் கொடுக்க வாங்கிக் கொண்டவர் என்னசெய்வாரோவென்று ஆலோசித்துக்கொண்டே போய், வழியிலுள்ள கோமதிநதியில் முழுகிச்சென்று, துவாரகையை யடைந்து ஸ்ரீகண்ணபிரானது திருவடியை வணங்கிப் பலதோத்திரம் செய்து, அர்ச்சகர்களைநோக்கி, ஸ்வாமீ! இவ்வூரில் சாமளநம்பி யென்பவர் எங்கேயிருக்கிறார் என்று கேட்க, அவர்கள் இந்தப் பெயருள்ளவர் இவ்வூரில் இல்லை யென்றார்கள். கோயிலுக்கு வெளியே வந்து வேறு சிலரைக் கேட்க, அவர்களும் அப்படியே சொன்னார்கள். இதைக்கேட்ட கேசவபட்டர், நாம் இனி யென்ன செய்வோமென்று துக்கித்துக்கொண்டிருக்கும்போது, இவரைக்கண்ட சிலர், எதைக்குறித்து நீர் இப்படி துக்கிக்கிறீர் என்றுகேட்க, இவர் நடந்த செய்தியைச்சொன்னார். கேட்டவர்கள், நரசிங்கமேதா என்பவன் பரமதரித்திரனல்லவா? அவனிடத்தில் கொடுத்த பொருள் இனி வரப்போகிறதோ? என்றுதுக்கிக்கிறீர் என்று சொன்னார்கள். அதைக்கேட்ட கேசவபட்டர் மிகவும் துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தார். இப்படியிருக்கும்போது, சாமளநம்பியானவர் ஒருதேர்மேல் ஏறிக்கொண்டு இவரிருக்குமிடத்தில் வந்திறங்கி, நீர் யார்? என்ன காரியத்தைக் குறித்து இங்கேவந்தீர் என்று கேட்க, கேசவபட்டர், நடந்தசங்கதிகளையெல்லாம சொல்லி, நீர் எங்கிருந்து வந்தீர் என்றுகேட்க, பகவானனவர், சாமளநம்பியென்பவன் நான்தான். இனிஉமதுபொருள்முழுதும் நீர் பெற்றுக்கொள்ளலாம், சந்தேஹமில்லை, என்எஜமானன்கொடுத்தபொருளாதரவு எங்கே காட்டும்என்றுசொல்ல, பட்டர்சீட்டைக்காட்டினார், அந்தச்சீட்டைநம்பிபெற்று அருகிலிருந்த உத்தவர் முதலியோரைநோக்கி, இது என்எஜமானன்அனுப்பினது என்று சொல்லிக் கண்ணில் ஒற்றிக்கொண்டார். அதைக்கண்டவர்கள் உம்முடைய மாயாவிசித்திரத்தைக் கணிக்கவல்லவர் யாவர் எனக்கொண்டாடினார்கள். பிறகு கேசவபட்டருக்குச் சேரவேண்டிய தொகையாகிய அறுநூறு விராகனும் அவருக்குக் கொடுக்கப்பெற்றுக்கொண்டு, கண் இழந்தவன் மறுபடியும் கண் பெற்றதுபோல, மிகவும் மகிழ்ந்து, இதுசர்வேசுவரனுடைய க்ருபையேயன்றி வேறல்லவென்று நினைத்துச்சொல்லத்தொடங்கினார். உன் எஜமானனைப் பார்த்தால் மிடியிற்சிறந்தவனாயிருக்கிறான், உன்னைப்பார்த்தால் ராஜகுமாரன்போலிருக்கிறாய், இது புதுமையாயிருக்கிறதே என்று சொல்லினார். இதைக்கேட்ட சாமளநம்பியானவர், கேசவபட்டரை நோக்கி, என் எஜமானர் இந்தப் பொருளில் இச்சை யில்லாதவரும், ஸ்ரீஹரி பக்தியுள்ளவரும் ஆகையால் அவர் ஆடை முதலியவற்றால் ஏழைபோலக் காணப்படுகிறார். தந்தையானவன் குழந்தையை அலங்கரித்து வைப்பதுபோல, என்னை யலங்கரித்து இங்கே வைத்திருக்கிறார். அவருடைய தயையினாலேதான் இங்கே நான் சுகித்திருக்கிறேன் என்றுசொல்லி, தன்னோடு வந்தவர்களுடனே கூடிப்

போய்விட்டார். போனபிறகு, கேசவபட்டர், தமக்குக் கிடைத்த பொருளை யெண்ணிப்பார்த்து, அது தொலையாதிருக்கக்கண்டு, அந்தப்பொருளைத் தானம் செய்து, பிறகு கோயிலையடைந்து, பகவானை வணங்கி, மகிழ்ச்சியோடு மீண்டு வந்து, நரசிங்கமேதாவைக்கண்டு, அங்கே துவாரகையில் நடந்த செய்தி முழுதும் சொல்லி, சாக்ஷாத் பகவானை உமது கடனைக் கொடுக்கும்படி செய்தீர், உமக்குச் சமானமானவர்கள் இவ்வுலகத்தில் யாரிருக்கிறார்கள் என்றுபுகழ்ந்து போனார். பிறகு நரசிங்கமேதாவானவர் பகவத்கல்யாண குணங்களை நினைத்து ஆனந்தக்கண்ணீ ரொழுக நின்று தோத்திரம் பண்ணி, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார்.

இப்படியிருக்குங் காலத்தில், இவர் மகள் மாமி வீட்டில் தெருண்டாள் என்னுஞ் செய்தியை ஒருவன் வந்து இவர் மனைவியார்க்குச் சொல்ல, அவர் இவரிடத்தில் வந்து நமஸ்கரித்து நின்று, ஸ்வாமீ, நமது பெண்ணுக்கு மேலான வரிசை யெடுக்கவேண்டும், நீர் வாயார உத்திரவு கொடுக்கவேண்டுமென்று சொல்ல, நரசிங்கமேதாவானவர், நாம் என்ன செய்ய வல்லோம்! ஸ்ரீராமநாமந்தான் நமக்கு எல்லா நன்மைகளையும் அருள்செய்யவேண்டும் என்றார். என்று சொல்லி எழுந்து மகள் வீட்டுக்குப் போகவே, புதல்வியார் இவரை நோக்கி, நகைத்து, என் தந்தையாரே, துளசிமாலையும், நாமமும், ஜபமாலையும் தரித்து, மகள் சோபந கல்யாணத்துக்கு வெறுங் கையோடே வந்தீர், வீரவைஷ்ணவரே, இது லோக மரியாதைக்குஅழகோஎன்று சொல்ல, நரசிங்கமேதாவானவர், புதல்வியாரை நோக்கி, அம்மா, உனக்குச் செய்ய வேண்டிய வரிசைக்குச் சிறந்த பொருள்களெல்லாவற்றையும் ஒரு ஏட்டிலெழுதித் தாவென்று சொல்ல, புதல்வியார் நகைத்து, ஒரு குடிலனைப் பார்த்துத் தமக்கு வேண்டிய ஆடை யாபரணாதிக ளெல்லா வற்றையும் அவனிடத்தில் சொல்லி எழுதுவித்த பிறகு, நரசிங்கமேதாவானவர் அவனை நோக்கி, உன்னுடைய இஷ்டத்தையும் எழுதித்தாவென்று சொல்ல, அந்தக் குடிலன் மண்ணாங்கட்டியென்றொரு பொருளையும் எழுதிக்கொடுக்க, வாங்கிக் கொண்டு, துவாரகையில் எழுந்தருளியிருக்கிற பகவானை நினைத்தார்; குடிலனும இவரை நோக்கி, இதில் எழுதின வஸ்துக்களோடன்றித் தனியே வரவேண்டாமென்று பலபேருக் கெதிரே சொல்லினான். உடனே பக்தவத்ஸலனான பகவான், ஒருசுமையாளோடு வேதிய வடிவமாய் வந்து, மணமகள் வீட்டு வாயிலுக் கெதிரே நின்றார்; அங்குள்ளார் அவரை நோக்கி, நீ எந்த வூரென்று கேட்க, வேதிய வுருவங் கொண்ட பகவானானவர், நான் நரசிங்கமேதாவுக்கு ஏவற்பணிவிடை செய்பவன், அவர் தமது மகளுக்கு வரிசைச் சாமான்களை ஒரு பெட்டியில் வைத்துக் கொடுக்கக் கொண்டு வந்தேன், அதிலுள்ள பொருள்களின்சாபிதா இதோ பாருமென்று கொடுக்க, வாங்கினவர்கள் அதிலுள்ள பொருள்களெல்லாம் பெட்டியிலிருக்கக் கண்டு, ஒரு மண்ணாங் கட்டியும் இருப்பதைப் பார்த்து, இது உன் தலையில் மோதிக்கொள்ள வாவென்று நகைக்க, கொண்டுவந்த சுமையாளானவன் நாணி நின்றான்.

பொருள்களைப் பெற்றுக் கொண்டவர்கள் நரசிங்கரைப் புகழ்ந்து, அவரிடத்தில் வந்து வணங்கி, நீர் பகவானுடைய அருள் பெற்றவர், உமது பெருமையை யறியாமல் நாங்கள் இகழ்ந்தோம் என்று சொல்லி, பெண்ணுக்குச் சோபந விவாஹம் நடத்தினார்கள். பிறகு நரசிங்கர், கண்ணபிரானோடு தம்மூர்க்குப் போகும்போது பகவானே என்பொருட்டு மிகவும் சிரமமெடுத்துக் கொண்டீர் என்று சொல்ல, பகவான் மகிழ்ந்து, உமது புதல்விக்கு வேண்டுவன யாவும் அமைத்தேன், உமது தோளுக்கும் ஒரு ஆபரணம் அணிகிறேனென்று, தமது கழுத்திலிருந்த துளசி மாலையைக் கழற்றி, நரசிங்கர் கழுத்தில் தரித்து, அவரிடத்தில் விடை பெற்றுப் போய்விட்டார். அன்று முதலாக அந்தத் துளசிமாலையே அவர் கழுத்தில் விளங்கிக்கொண்டிருக்கும். அதை யறிந்த மண்டீகன் என்னும் ஓர் அரசன், மிகவும் ஊஹித்து, இது மோஹந வித்தையா யிருக்கலாம் என்று நினைத்து, அதைச் சோதனை செய்யும் பொருட்டு, கோயிலுக்குள்ளே வந்து பகவானுடைய திருக்கழுத்திலிருக்கிற மாலையை, கவசத்தோடு சேர்த்து வரிந்து கட்டிவிட்டு, பஜனை செய்து கொண்டிருக்கிற நரசிங்கமேதாவை நோக்கி, நீர் உலகிலுள்ள எல்லாரையும் மயக்குதற்குக்கற்றிருக்கிறீர், பகவானுடைய கழுத்திலிருக்கிற மாலையானது இன்று உமது தோளில் விழுவதை நான் அறிகிறேன், அப்படி விழாத பக்ஷத்தில், உம்மை மிகவும் வருத்துவேன் என்றுசொல்ல, தாஸரானவர் ஸ்ரீபகவானைத் தோத்திரம் செய்தார். அப்படித் தோத்திரம் செய்தும் நான் தோறும் இவர் கழுத்தில் வந்துவிழுகிற மாலை அன்று வந்து விழாமலிருந்தது. தாஸரானவர் மறுபடியும் அதிகமாய் ஸ்தோத்திரம் செய்தனர்; செய்தும், விழாமலே யிருந்தது. அப்போது பகவானை நோக்கி, இன்று மாலையைப் பிரசாதித்தால் உமக்கு என்ன குறைவு நேரிடும் என்றார்; அதைக் கேட்டவுடனே, அரசன் வரிந்து கட்டின கட்டானது அப்படியே யிருக்க, மாலைமாத்திரம் தாஸருடைய கழுத்தில் வந்து விழுந்து பிரகாசித்துக்கொண்டிருந்தது. இதைக் கண்ட அரசன், பகவானை நோக்கும்போது, அவர் கழுத்தில் தான் கவசத்தோடு சேர்த்துக் கட்டின கயிறுமாத்திர மிருக்கக்கண்டானேயன்றி மாலையைக் காணாமையால், ஆச்சரியமும் பயமும் கொண்டு, தாஸர் திருவடிகளிலே விழுந்து வணங்கி, இவர் தேவரே யன்றி நரரல்லர் என்று உட்கொண்டு, ஜயஜயவென்று புகழ்ந்து இன்சொற் கூறி, உமதுபெருமையை யறியாமல், என் துரஹங்காரத்தால் உம்மை மிகவும் வருத்தினேன், இந்த அபராதத்தை க்ஷமித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, தாஸரானவர் அரசன் பிரார்த்தனைக்கு மனமிரங்கி அவனை ஆசீர்வதித்து அனுப்பிவிட்டு, தாம் ஸ்ரீ ஹரி சரண தியாநபரராய்ச் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார் என்று சொல்லி, மேலே இராமதாஸர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

நரசிம்மமேதா சரித்திரம் முற்றிற்று.

# ௨௫-வது இராமதாசர் சரித்திரம்

மேலான சற்குணத்தை யுடையவரும், பக்தருக்குள்ளே திலகம்போல் விளங்குவோரும், ப்ராஹ்மண குலத்தில் பிறந்தவரும், ராமதாசர் என்னும் பெயரையுடையவரும் டாங்கூர் என்னும் ஊரில் வாழ்பவரும், தாம் போய் யாசித்துக்கொண்டு வருகிற பிக்ஷைச் சோற்றால் குடும்பத்தைப் பாதுகாப்பவரும், ராமநாமத்தை இடையறாமல் உச்சரிக்கிற நாவையுடையவரும் ஆகிய ஒருவர் இருந்தார். இவர், மாமரத்தைச் [illegible], அதில் துளசியைப் பயிர் செய்து வளர்த்து, ஏகாதசி தினந்தோறும் நியமமாய் அதை யெடுத்துக்கொண்டு, நூற்றைம்பது கோச தூரத்திலிருக்கிற துவாரகைக்குப் போய், அங்கே யெழுந்தருளியிருக்குங் கண்ணபிரானுக்கு சமர்ப்பித்து, தரிசனஞ் செய்து மீண்டுவருவார். இப்படி இருபத்தைந்து வருஷகாலம் நடத்தி வந்தார். இவர் போகும்போதும் வரும்போதும் வழியில் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டும், ஆனந்தக் கூத்தாடிக்கொண்டும் வருவார். சரீராபிமானம் சிறிதுமில்லாதவர்; கோமதி நதியில் மூழ்கி ஸ்ரீகண்ணபிரானது திருவடியில், தாம கொண்டுபோகிற துளசியை யர்ச்சித்து நின்று, பகவானே, துக்கரூபமான பிறப்பிறப்புக்கள் இனி யெனக்குண்டாகாமலிருக்கக் கருணை செய்யவேண்டுமென்று பிரார்த்திப்பார்; மறுபடியும் தமது ஊருக்கு வருவார். இப்படிக் காலங்கழித்து வருநாளில், ஏதோ அசந்தர்ப்பத்தினால் ஒரு ஏகாதசி போகாமல் நிற்கும்படி நேரிட்டது; அதைக் குறித்து மிகவும் துக்கித்துத் துவாரகைக்குப் போய்க் கண்ணபிரானைச் சேவித்து, பதிதபாவனனே, கருடவாஹனனே, பரமனே, ஹஸ்திரக்ஷகனே, எனக்கு மூப்பு வந்துவிட்டதனால் உன்னைத் தரிசித்து வரும் நியமத்தில் தவறினேன், மிகவும் அசக்தி யுண்டாயிருப்பதனால் இனி உன்னைத் தரிசிக்க வரமாட்டேன், அப்படி அடியேன் வராவிட்டாலும் என்மீது உன் கிருபை மாத்திரம் குறையாதிருக்கும்படி க்ருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்து நின்றார். மேலும், அழுத கண்ணீரோடும் சுவாமீ, இனி உன்னை யெக்காலத்தில் காணப்போகிறேன், இதுதான் முடிவாகிய சேவை யென்று பகவானுடைய திருவடியைப் பிடித்துக்கொண்டார். அப்பொழுது பகவானானவர் இவரது துன்பத்தைக் கண்டு சகிக்கமாட்டாமல் பதைபதைத்து, தமது நான்கு திருத்தோள்களும் பீதாம்பரமும் பிரகாசிக்கும்படி தாசருக்கெதிரே யெழுந்தருளி, இவரை மார்போடணைத்துத் தூக்கி, என்னிடத்தில் மிகுதியாகிய அன்புடையவனே, நெடுநாளாக என்னைச் சேவித்து வந்தாய், ஆகையால் உனக்கு நான் கடன்காரனானேன், இந்தக் கடனை எப்படித் தீர்ப்பேன்? நான் உன்னோடு வருகிறேன், கொண்டுபோவென்று சொல்ல, ராமதாசர், சுவாமீ, தேவரீரை அடியேன் எப்படிக் கொண்டு போவேனென்று சொல்ல, ஸ்ரீலக்ஷ்மீநாதன், என் தேர் வரும், அதில் ஏற்றி

க்கொண்டு இன்றிரவில் உன்னூரை யடைவாயாகவென்று சொல்லி, தேர் வரும்படி திருவுளத்தில் நினைத்தவுடனே, தேர் வந்து எதிரே நிற்கக் கண்ட தாசர், பகவானைத் தூக்கி யெடுத்து அந்தத் தேரி லேற்றிக்கொண்டு தமது ஊரை யடைந்த பிறகு, சுவாமீ, தேவரீரை எங்கே யொளித்துவைப்பேன்! என் வீட்டில் நீரிருந்தால், அவ்விடத்தில் உன்னைக் காணுதவர்களாகிய அர்ச்சகர் முதலானோர்வந்து என்னை வருத்துவார்களே; தேவரீர் திருவுள மெப்படியோ அறிந்திலேன் என்று சொல்லி, மனத்தளர்வோடு இங்கே யிருக்க, பொழுது விடிந்தபிறகு, துவாரகையில் அர்ச்சகர் கோயிலினுள்ளே பிரவேசித்துக் கண்ணனைக்காணமல் திகைக்கும்போது, அவர்களில் ஒருவர், நேற்று இராமதாசர்வந்திருந்தார்; அவர் தினந்தோறுமபூஜிக்கவேண்டுமென்றெண்ணித் தமது வீட்டுக்குக் கொண்டுபோனாரோ ஏதோ அறிந்திலோம் என்றார். கேட்ட மற்றவரெல்லாருமஅப்படி யிருக்கலாமென்று, தாசரிருக்கிற டாங்கூருக்குப் போனார்கள். இவர்கள் வருவதை முன்னுகத் தெரிந்துகொண்ட தாசர் கண்ணபிரானோடு விண்ணப்பஞ்செய்ய, அவர் ஒன்றுஞ் சொல்லாமல் மௌநமா யிருக்கக் கண்டு, நமக்கு அவசியம் தண்டனை கிடைக்குமஎன்று நிச்சயித்து, கண்ண பிரானை அங்குள்ள ஒரு கிணற்றில் கிடத்தி வைத்தார். வந்த அர்ச்சகர் இவர் வீடு முழுதும் தேடிக் காணமல் கிணற்றிற் போட்டிருந்தாலும் இருக்கலாமென்று கிணற்றில் ஆராய்ந்து, கண்ணபிரானை மேலே யெடுத்துத் தேரிலேற்றிக்கொண்டு ஊருக்குப் போகும்போது, தாசரானவர் என்னை விட்டுப் போகிறீரோவென்று துன்பத்தோடுஞ் சொல்ல, பகவானனவர், தாசரே, நீர் துக்கிக்க வேண்டாம், புண்டலீகா வீட்டில் நானிருப்பது போல உன்வீட்டிலு மிருப்பேன் என்றுசொல்ல, தாசர், சுவாமீ, தேவரீரை அர்ச்சகர்கள் தேர்மீதேற்றிக்கொண்டு போகிறார்களே, அவர்களினின்றுமஎப்படி விடுபட்டு வருவீர் என்று கேட்க, பகவானனவர், தாசரே, அர்ச்சகரிடத்தில் என் நிறையளவாகிய பொன்னைக் கொடுத்து என்னை வாங்கிக்கொள்வீராகவென்றார். தாசர், சுவாமீ, தேவரீருடைய நிறைக் கீடான பொன் அடியேனிடத்திலில்லையே யென்றார். அதற்குப் பகவானனவர், தாசரை நோக்கி, உன் மனைவியின் மூக்குத்தியை வைத்து நிறுத்தால் அது என் கனத்துக்குச் சரியாயிருக்கும்படிசெய்கிறேன் என்றார். அப்படியேஅர்ச்சகர்களிடத்திற் போய்ச் சொல்லிப் பிரார்த்திக்க, அர்ச்சகர் நகைத்து, இவன் பரம தரித்திரனு யிருந்தாலும் பேச்சுமாத்திரம் விசேஷமாயிருக்கிறதென்று பேசிக்கொள்வதை அவ்வூரிலுள்ளார் அறிந்து, இந்தத் தாசர் பொன் கொடுப்பதை நாம் பார்ப்போமென்று கூட்டங் கூடினார்கள். அவர்களைத் தாசரானவர் பார்த்து, இந்த அர்ச்சகர்கள் பகவான் நிறை யுள்ள பொன்னைக் கொண்டு, பகவானை அடியேனுக்குக் கொடுப்பதாகச் சம்மதித்தார்கள். இந்த விஷயத்தில் இவர்கள் தவறக்கூடாது, உங்களுக்கு எதிரே பொன்னை நிறுத்துத் தருகிறேன், இவர்கள் வாங்கிக்கொண்ட பிறகு கண்ணனைக்கொடாவிட்டால் நான் இவரை விடமாட்டேன் என்று சொல்லி நிற்க, அவர்கள் அர்ச்சகரை நோக்கி,

உங்களுக்கு அவர் பொன்கொடுத்து விட்ட பிறகு, அர்ச்சா விக்ரஹமாகிய இந்தக் கண்ணனைக்கொடுக்க உங்களுக்குச் சம்மதியோவென்று கேட்க, அர்ச்சகர்கள், அப்படியேயாகட்டும், அது எங்களுக்குச் சம்மதிதானென்று சொல்லி, கண்ணனை ஒரு துலையி லேற்றி, மற்றொரு துலையில் பொன்னைக் கொண்டு வந்து வையும் என்று தாசரை நோக்கிச் சொல்ல, தாசர் வீட்டுக்குள்ளேபோய் மூக்குத்தியைக் கைக்கொண்டு வெளியே வர, அங்கே யிருந்தவர்கள், நீர் வீட்டுக்குள்ளே போய்க்கொண்டு வந்தது யாதென்று கேட்க, தாசர் தம் கையிலிருந்த மூக்குத்தியைக் காட்டினார். அது கண்டு அவர்கள் நகைத்து, இது கண்ணன் விக்ரஹ நிறைக்குச் சரியாய் நிற்குமோ வென்று கேட்க, தாசரும், சரியாய் நிற்குமென்று சொல்லி, பகவானே, உன் வார்த்தையை நம்பினேன், என்னை அவமானப்படுத்த வேண்டாமென்று ப்ரார்த்தித்து மூக்குத்தியைத் துலையிலிட்ட மாத்திரத்தில், இதினுடைய நிறைக்குக் கண்ணனுடைய நிறை குறைந்து மூக்குத்தித் துலை தாழ்ந்திருக்க, கண்ண னிருக்குந் துலை மேலே யுயர்ந்து நிற்கிறதை, சூழ்ந்து நின்றவரெல்லாரும் பார்த்து, அதிசயித்து நின்றார்கள். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். முன்னே பரிஹஸித்து நகைத்த அர்ச்சகர்கள் யாவரும் ஆலோசித்து ஸ்ரீலக்ஷ்மீநாயகன் இவர்க்கு இப்படி க்ருபைசெய்தால் நமது எண்ணங்கள் எப்படி நிறைவேறும் என்று இவரைபபுகழ்ந்து கொண்டாடி, கண்ணபிரானையும் தாசர் வீட்டில் ஸ்தாபித்து, விடைபெற்றுப்போய், அவ்விடத்தில் வேறொரு விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். இன்றும் இந்தத் துவாரகா யாத்திரையாய் வருவோர், டாங்கூரில் எழுந்தருளியிருக்கிற கண்ணபிரானைக் கண்டு வணங்கிப் போவார்கள் என்று சொல்லி, மேலே பிரமசாரி வைபவத்தைச சொல்லத் தொடங்கினார்.

இராமதாசர்சரித்திரம் முற்றிற்று.

---

## உ௯-வது பிரமசாரி சரித்திரம்.

ஆதிசேஷனால் தாங்கப்பட்ட இந்தப் பெரிய நிலவுலகத்தில், பலவளங்களும் நிறைந்திருக்கிற ஹரித்துவாரம் என்கிற ஒரு பட்டணமுண்டு. அதில் இந்த வுலகத் தாசை சிறிது மில்லாத ஒரு வேதியர் கலியாணசுவாமி யென்னும் பெயர்பெற்று விளங்கிக்கொண்டிருந்தார். அவர் இரவும் பகலும் ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்கையில் ஒருநாள் அவர்க்குத் தீர்த்த யாத்திரை செய்யவேண்டுமென்கிற விருப்ப முண்டாகிப் புறப்படும்போது, பரிசுத்தராகிய ஒரு பிரமசாரி அவரைத் தொடர்ந்தார். இவ்விருவருமாகப் புறப்பட்டு, சதாகாலமும் ஸ்ரீ ராம நாம பாராயணஞ் செய்து கொண்டு பற்பல தீர்த்தங்களில் மூழ்கி, ஸ்ரீ விஷ்ணு க்ஷேத்திரங்களெல்லாம் சேவித்துக்கொண்டு, ஆத்மாநந்தத்தை யடைந்து, திருமாலின்

இரங்கி, அன்பனே, உன் பின்னே வருகிற என்னைத் திரும்பிப் பாராமல் நீ முன்னேபோ, திரும்பிப் பார்த்தாயானால் உன்னோடு வரமாட்டேன், அவ்விடத்திலேயே நின்றுவிடுவேன் என்று சொல்லக்கேட்ட பிரமசாரி திரும்பிப் பாராமல் போனார். அப்படிப் போகிறவராகிய பிரமசாரியானவர், ஸ்ரீலக்ஷ்மீ நாதரானவர் தமக்குப் பின்னே வருகிறாரென்பதை அவர் திருவடிச் சிலம் போசையாலே அறிந்துகொண்டேபோய், ஹரித்வாரத்தைக் கிட்டி, இன்னம் ஊர் ஒன்றரைக் கோசு தூரத்தி லிருக்கிற இடத்தில், பகவானுடைய சிலம் போசை கேட்காமையால் திரும்பிப்பார்த்தார். திரும்பிப் பார்த்த அந்த இடத்திலேயே பகவான் நின்றுவிட்டார். நின்ற பகவானனவர், பிரம சாரியை நோக்கி, நான் முன்சொன்னபடியே நீ போகாமல் திரும்பிப்பார்த்தாயாகையால் இவ்விடத்தில் நின்றுவிட்டேன், அரசனிடத்துக்கு வரமாட்டேன், அரசனை இங்கே யழைத்து வாவென்று சொல்ல, பிரமசாரியும் இந்தச் செய்தியை அரசனுக்குத் தெரிவிக்க, அரசன் ஆச்சரியம் அடைந்து, சிங்காதநம் விட்டிறங்கிப் பிரமசாரியை வணங்கி, தன் சதுரங்க சேனைகளோடும் புறப் பட்டு வந்து பகவானை வணங்கி, இன்பக் கடலில் மூழ்கி, இதோ இங்கே யெழுந்தருளி யிருக்கிற மூர்த்தி மதுராபுரியி லெழுந்தருளி யிருந்த மூர்த்தியோ அன்றோவென்று போய்த் தரிசித்து வந்தவர்களைக் கேட்க, அவர்களும் மதுராபுரி மூர்த்தியே இவர், சந்தேஹ மில்லையென்று சொல்ல, அரசனும் வந்த தொண்டர்களோடு பகவானை வணங்கி ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து மகிழ்ந்தான். பிறகு வேதியரைக் கொண்டு சுப முகூர்த்த மமைத்து, ஐந்து கோசு எல்லையாக மணப்பந்தல் போடுவித்து, மணத்துக்கு வேண்டியபொருள்கள் யாவும் அமைத்து, பெருஞ் சிறப்புற்று விளங்காநின்ற கலியாண சுவாமியின் புதல்வியை அலங்கரித்து, பல மங்கல வாத்தியங்களும் முழங்க, பிரமசாரிக்கு மண முடித்து, தம்பதிகளுக்கு ஆடையாபரணாதிகளை விசேஷமாகக் கொடுத்தான். தேவர்களெல்லாரும், மதுராபுரியி லெழுந்தருளி யிருக்கிற ஸ்ரீகண்ணபிரானே இவ்விடத்திற் கெழுந்தருளிச் சாக்ஷி சொன்னாரென்று புகழ்ந்து புஷ்ப வர்ஷம் பொழிந்தார்கள். மதுராபுரியில் மற்றொரு மூர்த்தியை ப்ரதிஷ்டைசெய்து, இவ்விடத்தில் நூதநமாக ஒரு ஆலயம் அமைத்து அரசனனவன் மனமகிழ்ந்திருந்தான். அன்று முதல், பகவான் உத்தர திசையில் ஹரித்வாரத்திலும், தக்ஷிணதிசையில் பண்டரிபுரத்திலும், மேற்குத் திசையில் துவாரகையிலும், கீழ்த்திசையில் ஜகந்நாதத்திலும் எல்லாத் திக்கிலுள்ளவர்களும் வந்து வணங்கித் துதித்து உஜ்ஜீவிக்கும்படி எழுந்தருளியிருக்கிறார் என்று சொல்லி, மேலே சூரதாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பிரமசாரி சரித்திரம் முற்றிற்று.

# ௨௫-வது சூரதாசர் சரித்திரம்.

ஸ்ரீதுவாரகாபுரியில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீகண்ணபிரானுடைய திருவுள்ளமுகக்கும்படியான நல்லொழுக்கம் பூண்ட அக்ரூரர் ஒருநாள் ஸ்ரீ சத்தியபாமையார் வீட்டுக்குவர, சத்தியபாமையார், வந்த அக்ரூரர் இருக்கும்படி ஆசனம் கொடுத்து, அவர் முகத்தை நோக்கி, ஸ்ரீ கண்ணபிரான் என்னிடம் வருவதொழிந்தார்; நீர் போய், அவர், முன்போல என் வீட்டுக்குவந்து என்னை யாதரிக்கும்படி விண்ணப்பஞ் செய்து, என் மனோரதத்தை நிறைவேற்ற வேண்டுமென்று பிரார்த்திக்க, அக்ரூரர் மனமிரங்கி, அந்தோ, ஸ்ரீ கண்ணபிரான் இனி வாராதிருப்பாராகில் இந்தச் சத்தியபாமையாருடைய உயிர் நீங்குமென்றெண்ணி, தாயே, நீர் இவ்விடத்தில் மனம் வருந்தாமல் இரும், ஸ்ரீகண்ணபிரானை நான் இந்த க்ஷணமே யழைத்து வருகிறேனென்று சொல்லி, அந்தக் கண்ணபிரானுடைய வேஷத்தைத் தாம் பூண்டு எதிரே நிற்கக் கண்ட சத்தியபாமையார், மன வருத்தம் [illegible] மகிழ்ச்சியை யடைந்தபிறகு, அக்ரூரர் போய்க் கண்ணபிரானுக் கெதிரே நிற்க, அவரைக் கண்ணபிரான் நோக்கி, நீர் இவ்விடத்தில் சிலபெறாதிருக்கும்போது நீ யென்னைப்போல வேஷம் பூண்டுவந்தாயாதலால், நீ கலியுகத்தில் அந்தகனாய்ப் பிறக்கக் கடவை யென்றுசொல்லி மேலே சத்தியபாமையை நோக்கி, கலியுகத்தில் நீ ஒரு தாசியாயப் பிறக்கக்கடவையென்று கூறுதலும், அப்படியே குருட்டுத் தன்மையை யடைந்த அக்ரூரர், ஸ்ரீ லக்ஷ்மீநாதனே, தேவரீருடைய திருவருள் இதுதானோ என்று கைகுவித்து வணங்கி, அடியேனைத் தேவரீர் அறியீரோ, சத்தியபாமையார் துயரத்தைத் தணிக்கும் பொருட்டு, இந்த வேஷம் பூண்டேன், இதைக் கண்டு, தேவரீர் என்போல வேஷம் பூண்டு வந்தா யென்று கோபித்து, இந்தக் கொடிய சாபம் தந்தீர், அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பல இன்சொற் சொல்லி வணங்குதலும், பகவானானவர், ஓ அக்ரூரரே, நான் நீர்கொண்ட வேஷத்தின் காரணமாகிய உண்மையை அறிவேன், நான் கோபங்கொள்ளவில்லை, இந்த வுலகத்தார் நன்மையடையும்பொருட்டு உம்மை யிவ்வாறு சபித்தேன் என்றார். அதைக் கேட்ட அக்ரூரர், அப்படியானால், கலியுகத்தில் தாய் வயிற்றிற் பிறவாமையாகிய அயோநிஜத்வத்தை எனக்குக் கிருபைசெய்வதுமல்லாமல், தேவரீர் இந்தத் திருக்கோலத்தோடு அடியேனுக் கெதிரே நிற்கவேண்டுமென்று ப்ரார்த்தித்து வணங்கினார். அப்போது பகவானானவர் திருவுள மிரங்கி, அக்ரூரரே, நீர் அஞ்சவேண்டியதில்லை, என்பிரிவாற்றாமல் வருந்துகின்ற சத்யபாமையானவள், கலி யுகத்தில் ஒரு தாசியாகப் பிறப்பாள், நீயும் வருவாய், அக்காலத்தில், உங்களை யென்னிடத்தில் சேர்த்துக்கொள்வேன் என்று சொல்ல, அப்படியே நல்லதென்று, கண்ணொளியை யிழந்து மதுராபுரியை யடைந்த அக்ரூரருடைய செய்கையைச் சொல்லுவோம். எப்படியென்றால்,

சூரதாசர் என்று பெயர்பெற்ற ஒருவர், ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணையே செய்துகொண்டிருக்கிற மேன்மையாகிய நிலையை யடைந்திருந்தார். இவர் மிகவும் தெளிவுள்ளவராய், நன்மையைத் தருகிற பிரபந்தங்கள் பலவற்றையும திருமாலையே பாட்டுடைத்தலைவனு யமைத்துச் செய்து, ஸ்ரீ வைஷ்ணவகுல திலகராய் விளங்கிக்கொண்டிருந்தார். இவர் ஒருநாள், புருஷோத்தமராகிய ஸ்ரீ கண்ண பிரானுடைய திருப்பணி செய்யும்போது, இந்தப் பிறவிக்குக் காரணமாகிய சாபத்தைத் தந்தருளின கண்ண பிரானை நினைத்து, அன்போடு எதிரேவர விரும்பி, பகவானுடைய சந்நிதியையடைந்து, வணங்கித் தோத்திரஞ்செய்து, இந்தப் பிறவிகிடைத்த வரலாற்றைச்சொல்லி, ஸ்ரீஹரி நாம ஸ்மரணை செய்துகொண்டிருக்குங் காலத்தில், பெரும் புகழை யுடைய ஜயவந்திநகரத்துக் கரசனொருவனிருந்தான். அவனது பெரியசபையில் வந்து கூடுவோராய்ப் பாடுந் தொழிலில் மஹா சமர்த்தர்களாகிய ஐஞ்ஞூறு பேருண்டு; அவர்களுக்குள்ளே, மிகவும சூக்ஷ்ம புத்தி யுள்ளவரும், யாவரும் வியக்கும்படி பாடுவோரும் ஆகிய ஒருவருண்டு. அவரைத் தானசேன் என்பவன் நாடிவந்து, எதிரே நின்று, நீர் பெருஞ் சிறப்படைந் திருக்கிறீர், உமக்குச் சமமானவர் இவ்வுலகத்தில் ஒருவரு மில்லை என்று புகழ்ந்து சொல்லுதலும், இவர் அவனை நோக்கி, ஐயா, என்னினும சிறந்தவர்கள் இவ்வுலகத்தில் அநேகம்பேரிருக்கிறார்கள், பெரியதென்று எல்லாராலும சொல்லப்பட்ட கடலும் அகஸ்தியமுனிவருடைய அங்கையி லொடுங்கி நின்றது. லோகஸ்ருஷ்டியாகிய மஹாப்ரபாவமுள்ள பிரமதேவனும் விசுவாமித்திர முனிவருக்கெதிரே நிற்கமாட்டாமல் தோற்று ஒளி குறைந்தான், ஆஞ்சநேயருடைய அங்கையால் கருடனும் ஒளி மழுங்கினான், இப்படி உலக மெங்கும ஒருவருக்கொருவர் உயர்வதும் தாழ்வதும இயல்பாய்ப் பகவானால் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், என்னை யானே சிறந்தவனென்று எப்படி நினைப்பேனென்று சொல்ல; அரசன் இவரை நோக்கி, அப்படிச்சிறந்துள்ளவர்களில் ஒருவரை இப்போது எனக்குத் தெரியும்படி காட்டும என்றான். அப்போது இவர், மதுராபுரியில், ஸ்வரவிசாரத்தில் சிறந்த சூரதாசர் என்னினும் மேலானவரென்றார். அதைக்கேட்ட அரசன், அப்படியானால், அவர் எத்தனை ராகங்களில் சமர்த்தர் என்றுகேட்க, இவர், அரசனே, அவர் எல்லா ராகங்களிலும் வல்லவர் என்றார், என்று சொல்லுதற்கு முன்பே, அரசன் ஆநந்தமடைந்து, சிவிகை அனுப்பி அவரை வரவழைத்து, அவரது திருவடியை வணங்கி, ஆசநம் தந்து இருக்கச்செய்து, பூசனை செய்து, அன்பு பாராட்டிக்கொண்டிருக்க, பாடகரெல்லாரும் ராஜ சபையில் வந்து சேர்ந்தார்கள். தானசேன் என்னும் அரசன், ஸ்ரீஹரிதாசராகிய இவரை, அன்போடு நமஸ்கரித்து, தாசரே, உமது சிறந்த ஞான கீர்த்தநங்களை நாங்கள் யாவரும் கேட்க விரும்பியிருக்கிறோம, ஆகையால் நீர் அருள்செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, தாசரானவர் அரசன் முதலானோரை நோக்கி, நான் பாடுவது ஸ்ரீஹரியின் விஷயமாகிய பாடல், அது உங்கள் செவிக்கேற்குமானால் பாடுகி

றேனென்று சொல்லி, வீணையைக் கைக்கொண்டு ஸப்த ஸ்வரங்களும் பொருந்த அமைத்து, அங்குள்ளவரெல்லாரும் ஆநந்திக்கும்படி திருமாலின் விஷயமாகிய கீர்த்தநங்களைப் பாடினார். அவைகளைக் கேட்டவர் யாவரும் ஆநந்த சாகரத்தில் மூழ்கினார்கள். இப்படியே அரசனது முயற்சியால் ஒரு மாசம் வரைக்கும் நடந்து வருகையில், அரசன் தேவிமார் ஐஞ்ஞூறு பேரும் இவரது பெருஞ்சிறப்பைக் கேள்விப்பட்டு, அரசனை நோக்கி, இவர் பாட்டில் தமக்குள்ள விருப்பத்தை யறிவித்துப் பிரார்த்திக்க, அரசன், இவர் கண்ணில்லாதவராகையால் நமமுடைய தேவிமார் இவர்க் கெதிரே வரலாம் என்று ஆலோசித்து, அவரைச் சபைக்கு வருவித்துக் கேட்கச் செய்தான். அப்போது, பூர்வத்தில் கண்ணபிரானது சாபத்தால் அந்த அரசன் வீட்டு வேலைக்காரியாய்ப் பிறந்திருந்த சத்தியபாமையை, இவர் கண்ணால் நோக்கி, நான் பாடுங் கானத்தைக் கேட்டுக்கொண்டு மௌனமா யிருக்கிற யென்று சொல்லவே, அரசன் மனைவிமார், இவர்க்குக் கண்ணில்லை யென்றல்லவா இங்கு வந்தோம்? இவர்க்குக் கண்ணிருக்கின்றதே யென்று நாணி, திரையிட்டுத் தம்மை மறைத்துக்கொண்டார்கள். பிறகு இவ்விருவரும் கலந்தபோது ஸ்ரீகண்ணபிரான் அங்கே யெழுந்தருளி, அந்நாரையும் சத்யபாமையையும் அவர்களுடைய பூர்வ ரூபத்தை யடையும்படி செய்து, தமது ஒளி யுருவத்திற் சேர்த்து, தாமும் பரஞ்சோதியாய் விளங்கினார். அரசனோடு சேர்ந்தவர் எல்லாரும் இந்த அதிசயத்தைக் கண்டு, இவர் மஹாப்ரபாவரான தேவர் என்று புகழ்ந்து கொண்டாடினார்கள் என்று சொல்லி, மேலே சேனாபிகர் வைபவத்தைச் சொல்லத் தொடங்குகிறார்.

சூரதாசர்சரித்திரம் முற்றிற்று.

# ௫௰-வது சேனாபிகர் சரித்திரம்.

பலவகைவளங்களும் நிறைந்த ஒரூரில், நருக்கர் மிகுதியாய் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அந்தத் நருக்கருக்கு நாவிதரா யிருப்போர்களுடைய குலத்தில் ஒருவர் அவதரித்திருந்தார். அவர் பெயர் சேனாபிகர் என்று சொல்லுவார்கள். அவர் வீட்டில் நாள்தோறும் ஸ்ரீ கண்ணபிரானைப் பூஜை செய்து வணங்கி வாழ்த்தி வருவார்கள். இந்தச் சேனாபிகர், அவ்வூரை யாளுகின்ற அரசனிடத்தில் வேலை செய்வோரா யிருந்தார். ஆனால், அந்த வேலை, நாம் ஸ்ரீ ஹரி பூஜை செய்வதற்குத் தடையா யிருக்கிறதே யென்று அந்த வேலையையும் செய்வதற்கு மனமில்லாதவரா யிருந்தார். அப்படி யிருக்க, ஒருநாள் இவர் நீராடி ஸ்ரீ ஹரிபூஜை செய்துகொண் டிருக்குங் காலத்தில், அரசனுடைய பரிசாரகர்கள் வந்து அரசன் அழைக்கிறானென்று அழைக்க, இவர் தமது மனைவியை யழைத்து, பெண்ணே, நான் வீட்டிலில்லை யென்று சொல்லி யனுப்புவாயாக வென்று சொல்ல, அவளும் அப்படியே சொல்லி யனுப்ப, அவர்கள் அரசனிடத்திற் போய், அந்த நாவிதன் வீட்டிலிருந்துகொண்டே, இல்லையென்று சொல்லும்படி மனையாளை யேவின

னென்று சொல்ல, அரசன் கோபங்கொண்டு, தனக்கெதிரே நிற்கிற சில வீரரை நோக்கி, நீங்கள் இந்த க்ஷணமே போய் அவனைக் கட்டி யிழுத்துக் கொண்டு வாருங்கள் என்று நியமிக்க, ஸ்ரீபக்தபராதீநனான பகவானானவர் இத ற்கு மனம் பொறுதவராய், தாம் ஒரு நாவித வேஷம் பூண்டுவந்து அரசனுக் கெதிரே நிற்க, அரசன் கோபந் தணிந்து, எனக்கு முக வேலை செய்யென்று சொல்ல அப்படியே செய்தார். இவர் செய்த முகவேலையால் மிகவும் சந்தோஷித்து, நாவிதனே, இவ்வளவு காலம் நீ செய்த வேலையைப் பார்க்கிலும் இன்று நீ செய்த வேலை மிகவும் நன்றாயிருக்கின்றது என்று சந்தோ ஷித்து, உன்கையால் எண்ணெயிட வேண்டுமென்று, ரத்நமயமான பொற் கிண்ணத்தில் வார்த்து வைத்திருக்கிற எண்ணெயை யெதிரே வைத்து, அர சன் தன் ஆசநத்தின்மேலிருந்தான். அப்படியே யாகட்டுமென்று சேனாபி கர் உருவங் கொண்டு வந்த பகவானானவர், தலைக் கெண்ணெ யிடும்போது, குண்டலம், கிரீடம், சதுர்ப்புஜம், பீதாம்பரம், நீலமேனி இவை யாவும் அப் பொற் கிண்ணத்தில் தோன்ற, அதை அரசன் உற்று நோக்கி, மெய்மறந்து விழுதலும், அந்தப்புரத்தில் உள்ளவரெல்லாரும வந்து சூழ்ந்துகொண்டு, அரசனை நோக்கி, இரண்டு ஜாமமாகியும் ஸ்நாநத்துக்கு வராம லிருக்கிறீரே யென்று கேட்கும் சப்தத்தைக் கேட்டு, அரச னெழுந்து குற்ற மற்ற நாபித ரைப் புகழ்ந்து, இங்கே நீயிருக்கக் கடவையென்று ஒரு ஆசநத்தைக் கொடு த்தலும், அந்த ஆசநத்தில் நாபிதர் இருக்காததைக் கண்ட அரசன், நீ இந்த ஆசநத்திலிருக்காமற் போனால், என் உயிர் நிற்காது என்று சொன்னான். அப் போது, நாபிதர், ஓ அரசனே, நான் வீட்டுக்குப்போய் ஸ்நாநம்செய்து வருகி றேன் என்று விடை கேட்க, அரசன் அப்படியே விடை கொடுத்தான். அப் போது, நாபிகர்வீட்டுக்குப் போய், அடப்பத்தை முளையிலே மாட்டிவிட்டு, ஸ்ரீ கண்ண பிரான் எழுந்தருளின பிறகு, அரசன் ஸ்நாநஞ் செய்து வந்து சபையில் வீற்றிருந்து, ஏவலாளரை நோக்கி, நமது நாவிதன் இப்பொழுது இங்கே வர வேண்டும், அவனை வர வழையுங்கள் என்று சொல்ல, உடனே ஏவலாளர் போய், நாபிதரை நோக்கி, அரசன் உன்னை வரச் சொன்னா னென்று சொல்லுதலும், நாபிதரானவர், அரசன் கட்டளைக் குட்பட்டு நடப் பது நமது கடமை யாகுமென்று, அடப்பத்தைத்தோளில் மாட்டிக்கொண்டு அரசன் கோபங் கொண்டிருக்கிறானே யென்று, நடு நடுங்கி, ஸ்ரீ ஹரி நாம ஸ்மரணையோடும்அரசனதுசபைக்கு வந்தார். இவரைக் கண்டவுடனே அரசன் எழுந்து நின்றான்; அதைக்கண்டவரெல்லாரும் கல்லென்று நகைத்தார்கள். அவர்கள் நகைத்ததை அரசன் மனத்திற் கொள்ளாமல், நாபிதர் முகத்தை நோக்கி, இன்று உதய காலத்தில் காட்டின உமது முகத்தை இப்பொழு தும் காட்டவிரும்புகிறேன், அருள் செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்து, இவரது பாதத்தைக் கையினால் பிடிக்க, இவர், திகைத்து, ஐயோ, நமக்கு ப் பாவம் நேரிட்டதே யென்று நிற்க, அரசன், வட்டிலிலுள்ள எண்ணெ யில் இவருடைய திருவுருவ முழுதும் தோன்றக் கண்டவுடனே, எழுந்து

நின்று, ஸ்ரீலக்ஷ்மீநாதனே, ஏழை பங்காளா, இழிந்தவனாகிய என்னிடத்தில் வந்து, இழிந்த தொழிலைச் செய்த கண்ணபிரானே என்றுசொல்லி இரங்கி, நாயகருடைய சேவடியைப் பிடித்துக்கொண்டு வணங்கி, இன்று உம்மால் ஸ்ரீலக்ஷ்மீநாதனைத் தரிசித்தேன் என்று சொல்லி, பிறகு ஸ்ரீ ஹரிநாமத்தை அன்போடும் உச்சரித்து நிற்க, நாயகரும் அரசனைப் புகழ்ந்து, தமது அடைப்பத்தைத் திறந்து பார்த்து, அதில் ஸ்ரீகண்ணபிரானால் வைக்கப்பட்டிருந்த பொருளைக் கைக்கொண்டு, வேதியரெல்லார்க்கும் அவர்கள் விருப்பத்தின் படியே தானஞ் செய்து, அரசனுக் கெதிரே நின்று பகவானைத் தோத்திரஞ் செய்ய, அரசனும் கருட வாஹனராகிய பகவானைப் பலவகையாய்த் தோத்திரம்பண்ணினான். அந்த நாள் முதலாக அரசன், சகல ஜகத் காரணராகிய ஸ்ரீ ஹரியின்நாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிதாய் வாழ்ந்திருந்தான். சேநாநாயகரும் அரசனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு தமது வீட்டுக்கு வந்து பகவந் நாம ஸங்கீர்த்தன பரராய் வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே சாத்வீகராஜன் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சேனநாயகர் சரித்திரம் முற்றிற்று.

## உஎ-வது சாத்வீகராஜன் சரித்திரம்·

சர்வாலங்காரங்களும் நிறைந்த ஜகந்நாதம் என்னும் நகரத்தை யாளுகின்ற சாத்வீகராஜன் என்பவர் ஸ்ரீ ஹரிபக்தியிற் சிறந்தவரும், ஹரி பூஜா துரந்தரரும், த்ரிகாலத்திலும் ஹரிபூஜைசெய்து திருத்துழாய்த் தீர்த்தத்தை ஸ்வீகரிப்பவரும், அதிதி பூஜைசெய்து பிறகுதான் உண்ணுதலாகிய விரதம் பூண்டவரும், விஸ்தாரமாக அன்ன சத்திரமுதலான தர்ம கைங்கரியங்கள் செய்துகொண்டிருப்பவரும், சகல ஜீவராசிகளின்மீதும் மிகுந்த தயையுள்ளவரும, பகைவருக்குச் சிங்கம் போன்றவருமா யிருந்தார். இவர் ஒரு நாள், சொக்கட்டான் ஆடிக்கொண்டிருக்கிற சமயத்தில், அந்த நகரத்திலுள்ள ஸ்ரீவிஷ்ணுவாலய ப்ரஸாதத்தை அந்தக் கோயி லர்ச்சகர்கள் கொண்டுவந்து அரசருக்குக் கொடுக்க, இவர் வலக்கை ஆட்டத்திற் குபயோகமா யிருந்ததனால் இடக் கையை எந்தினார். அர்ச்சகர்கள், பகவத் ப்ரஸாதத்தை அரசர் இடக்கையால் வாங்கப்படாது, நாமும்கொடுக்கப்படாது, மஹாபாபமென்று கொடாமல் போய்விட்டார்கள். பிறகு அரசர், சொக்கட்டான் ஆடி முடிந்தவுடனே வந்த அர்ச்சகர்கள் எங்கேயென்று எதிரேயிருந்தவர்களைக்கேட்டார். அவர்கள் பெருமாளுக்கு நிவேதித்த ப்ரஸாதத்தை இடது கையில் கொடுப்பது பெரும் பாவமென்று சொல்லித் திரும்பிப் போய் விட்டார்கள் என்று சொல்ல, அரசர், மிகவும் மனம் கலங்கி, நாம் என்ன அபசாரம் செய்துவிட்டோம,இந்தஅபசாரத்தை எப்படித் தீர்த்துக்கொள்ளப்போகிறோமென்றும், கள்ளை விரும்பிப் பாலை விலக்குகிற கீழ்மக்களைப்போல, ஆட்டத்தில் மனம் வைத்து, ஹரி ப்ரஸாதத்தை அகற்றினேனே யென்றும், இப்படிப் பகவத்

ப்ரஸாதத்தை யேற்றுக்கொள்ளாத இந்தக் கையை அறுத்தெறிவதே தகுதியான தண்டனையென்றும் ஆலோசித்து, மந்திரியை யழைத்து, அவன் முகத்தை நோக்கி, நான் வாசஞ் செய்கிற இந்த மாளிகையின் சாளர வழியாக ஒரு பேயானது இராக் காலங்களில் வந்து என்னை அச்சுறுத்துகின்றது; அந்தப் பேயின் கையை நீ யறுக்கவேண்டுமென்று சொல்ல, மந்திரியும் அப்படியே செய்கிறேனென்று சொல்லிப் போய் அன்றிரவில் வந்து அந்தச் சாளர வாயிலை யடைந்து, பேயின் வரவு பார்த்திருந்தான். அரசர், அந்த மந்திரிக்குப் பின்புறமாய் உரு மாறி வந்து, சாளர வழியில் கையை நீட்டினார். அதைக் கண்டவுடனே மந்திரியானவன் அது பேயின் கையென்று நினைத்து அதைத் தன் வாளினால் வீசி அறுத்துத் துண்டாக்கி வீழ்த்தினன். கையறுபட்டவுடனே அரசர் துடிதுடித்துக் கீழே விழுந்து மூர்ச்சித்துக் கிடக்க, மந்திரியானவன் பதறி வந்து அரசரைக் கண்டு, மிகவும் துக்கித்துச் செய்ய வேண்டிய உபசாரங்களைச் செய்து, மூர்ச்சை தெளிந்த வுடனே அரசர் மந்திரியை நோக்கி, நீ யேன் துக்கிக்கிறாய்? என் கை செய்த பிழையை நீக்கினாய், அதனாலே உனக்கு ஒரு தோஷமுமில்லையென்று மந்திரியைத்தேற்றி, விடியற்காலத்திலே, தமது வெட்டுப்பட்ட கையைச் சிவிகையின் மேல் ஏற்றி, பகவானே! அடியேனுடைய கை செய்த அபராதத்தின் பொருட்டு அதை வெட்டிச் சிக்ஷை செய்தேன். இதைவிட வேறுவகையாகிய சிக்ஷையிருந்தால் நியமித்தருளவேண்டும் என்று சொல்லித் தோத்திரம் பண்ணி, அந்தச் சிவிகையோடு சிலரைச் சேர்த்துக் கோயிலுக் கனுப்பினார். அவர்களும சிவிகையைக் கொண்டுபோய்க் கோயிலில் இறக்கி, அங்குள்ளஅர்ச்சகர் முதலானோர்க்கு அறுபட்ட கையைக் காட்ட, அவர்கள் யாவரும மிகவும் துக்கித்து, தெய்வச் செயல் இப்படியாய் முடிந்தது என்றும, இவ்வரசர் ஸ்ரீஜகந்நாதப பெருமான் திருவடியின்மீது தன் மனமுழுதும் பதிய வைத்து, இகப் பிரபஞ்சத்தில் வெறுப்புள்ளவர், அன்றியும சிறுமதோஷமாயினுமில்லாதவர் என்றும மிகவும மனங்குழைந்து, கொண்டுவரப்பட்ட கையின்மேல் ஜயஜய வென்னும் கோஷத்துடனே சந்தப்பொடியை யிறைத்தார்கள். சந்தப்பொடிபட்ட மாத்திரத்தில் அந்தக் கையானது தவநரூபமாய்விட்டது. அதைக்கண்ட அர்ச்சகர் முதலானோர் ஆச்சரியமடைந்து, அந்தத் தவநத்தை ஸ்ரீஜகந்நாத ஸ்வாமியின் திருவடியில் சமர்ப்பித்து எடுத்து முந்தின நாள்போலவே ப்ரஸாதத்தோடு சேர்த்து அனுப்பினார்கள்; அப்படி அவர்களால்அனுப்பப்பட்ட ப்ரஸாதங்கள் வருவதைக் கண்ட அரசன் மிகு மகிழ்ச்சியோடு கையேந்த, இறைவனது திருவருளால் அறுபட்ட கையும் வளர்ந்ததனால் இரண்டு கைகளாலும் ஏற்றுக்கொண்டு, தவநத்தைக் கண்ணி லொற்றிக்கொண்டு, பிறகு சிரசில் சூடிக்கொண்டார். ப்ரஸாதத்தைப் பவரோகத்தை நீக்குதற்குரிய பரமௌஷதமாக மதித்து ஸ்வீகரித்துச் சுகமாய் வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, கருமாபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சாத்விகராஜன் சரித்திரம் முற்றிற்று.

# ௨௮-வது கருமாபாயிசரித்திரம்.

ஸ்ரீ ஜகந்நாதம் என்னும் திவ்யதேசத்தில் கருமாபாயி என்றொருவர் இருந்தார். இவர் ஒருகாலைக்கொருகாலை குணம் வேறுபடாமல் நிலைத்திருந்து பல தானதர்மங்களைச் செய்பவர், நல்லொழுக்கமுள்ளவர், பூததயையுள்ளவர், எல்லாச் சீவர்கள் மேலும் கருணையுள்ளவர். இப்படியிருக்க, இவர் திருவயிற்றில் கருத்தரித்திருக்குங்காலத்தில், இவர் கணவன் தேஹவியோகமடைந்தான். பிறகு ப்ரஸவிக்குங் காலத்தில் ப்ரஸவித்தார். ப்ரஸவித்தது ஆண்குழந்தையாகையால், அவனை மிகவும் அன்போடு வளர்த்துவந்து, அவனுக்குப் பருவம் நிறைந்தவுடனே, மணமுடித்து வைக்க, அவனுக்கு ஒரு புதல்வனுண்டாகித் தவழ்ந்து விளையாடுங்காலத்தில், தமது புதல்வன் இறந்தான். கருமாபாயியானவர் தமது புதல்வனிறந்ததைக் குறித்து மிகுதியாய்த் துக்கித்து, ஓ பகவானே, என்மகன் இறந்துபோகச் சங்கற்பித்த நீர் அவன் குழந்தையாகிய இவனையாகிலும் தீர்க்காயுளாகக் கிருபைசெய்யவேண்டுமென்றும், இவனாகிலும் எனக்குத் துணையாவானென்றும், நீரேயென்னை ஆதரிக்கவேண்டும், எனக்கு வேறுகதியில்லையென்றும் ப்ரார்த்தித்து, தமது பேரனைத் தமது மகனாகவே பாவித்து வளர்த்துவந்தார். அவன் நன்றாய் வளர்ந்துவருங்காலத்தில் நோயணுகி இறந்தான். அவனிறக்கவே, மகனுக்குத் துக்கித்ததைப் பார்க்கிலும் அதிகமாகத் துக்கித்து, மனநிலை கலங்கி, ஸ்ரீலக்ஷ்மீநாதனே, என்னை இந்தத் துன்பக்கடலில் மூழ்கி வருந்தும்படி செய்வது தேவரீருடைய திருவருளுக்குத் தகுதியாமோ என்று இப்படிப் பலவகையாய்த் தோத்திரித்துப் புலம்பும்போது, ஸ்ரீ ஜகந்நாதஸ்வாமியைத் தரிசிக்கவந்த பாகவதருள் சிலர், இவர் வீட்டுக்குவந்து, இவர் துக்கிப்பதைக்கண்டு, உன் துக்கத்துக்குக் காரணம் யாதென்று கேட்க, இவரும் தமது துக்கத்துக்குக் காரணமான செய்தி முழுதும் சொல்லவே, வந்த பாகவதர்கள், இவரை நோக்கி, அம்மா, இந்தச் சம்ஸார வாழ்க்கையில் ஒரு அணுவளவும் இன்பமில்லை, இதிலிருந்துகொண்டு துக்கிப்பதனால் என்ன பிரயோஜநம்! இந்த விட்டு ஸ்ரீ கண்ண பிரானது திருவடியைப் பற்றினால் உமக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும் என்று சொல்ல, இவர் அப்படியே செய்யத் துணிந்து, ஸ்ரீ தரனாகிய பகவானுடைய திருவருளுக் குரியவராகிய ஓ பாகவதர்களே, பேதையாகிய அடியேன், ஒரே நிலைமையில் நிற்கும்படியான உபாயம் சொல்லியருளவேண்டுமென்று வேண்ட, அந்தப் பாகவதர்கள் இந்தக் கருமாபாயியாரை நோக்கி, இவ்வுலகத்திலுள்ள சாராசாரவஸ்துக்களின் நிலைமையைச் சொல்லி, ஸ்ரீஹரிநாமத்தை உபதேசித்து, ஸ்ரீகண்ணபிரானுடைய விக்ரஹத்தைக்கொடுத்து, மகன், பேரன் என்பவரிடத்தில் வைத்த அன்பை இந்தப்பகவத்விஷயத்தில்வைக்கக்கடவையென்று நியமித்தார்கள். கர்மாபாயி

யாரும் அப்படியே செய்கிறேன் என்று மன மகிழ்ச்சியோடும் அன்போடும் உபதேசம் பெற்றுக் கொண்டு, அந்தப் பாகவதர்களைப் பலவகையாய்த் துதித்து வணங்கி உபசரித்து, அவர்கள் போன பிறகு, அன்று முதலாக இடையறாமல் பகவத்பாகவதாராதநங்களில் மனவிருப்ப முள்ளவராய் வாழ்ந்திருந்தார். இப்படி யிருக்கும் போது, கருமாபாயியார், அந்தப் பாகவதர்களால் கொடுக்கப்பட்ட கண்ணன் விக்ரஹத்தோடு பேசியும், விளையாடியும், அப்யஞ்சநஞ் செய்வித்தும், முன்றானையால் ஈரந்துடைத்துத் தமது தொடையில் படுக்கவைத்தும், ஔஷதம் புகட்டியும், பாலூட்டித் தொட்டிலில் கிடத்தி ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டே தாலாட்டியும், கண்மூடி யுறங்கி விழித்தபிறகு எடுத்து மார்போடணைத்து முத்தமிட்டும், இப்படி ப்ராக்ருத சிசுக்களை வளர்ப்பதுபோலவே, அகடிதகடநா ஸமர்த்தனை ஸ்ரீகண்ண பிரானை வளர்த்து வந்தார். வளர்த்த பிறகு ஆடையாபரணாதிகளால் அலங்கரித்து, அந்நமுண்ணும் பருவம் வந்தவுடனே, அந்நப்ராஸநம செய்து அந்நமுண்பித்து, வயிறுகுழையாமல் அடிக்கடி பார்த்து, அந்நமூட்டி வருவதையும், எல்லாலோகங்களையும் அமுது செய்தவனே, யான் உண்பிக்கும் இந்தப் பாலன்னத்தையும் அமுதுசெய் தருள்வாயாக வென்று உபசரித்து வருவதையும் கண்ணபிரான் கண்டு, திருவுளங் கனிந்து, இவர் விருப்பத்தின்படியே வயிறு நிறைய வுண்டு, இவர் கண் களிகூரக்கண்டு மனமகிழும்படி செய்தார். இப்படிக் கருமாபாயியார், தாயைப்போல உபசரித்து வருவதனால், ஸ்ரீகண்ணபிரானவர் நாள்தோறும அமுதுசெய்து வளர்ந்துவரும் நாளில், ஒரு வேதியன் அந்தக் கருமாபாயியார் வீட்டுக்கு வந்தான். இவன் நந்தன் மனையை விட்ட குறை நிறையும்படி இந்தக் கருமாபாயியார் மனையை யடைந்து பெரு மகிழ்ச்சியோடு தங்கி யிருப்பவராகிய கண்ண பிரானை அறியாதவனாய், அங்கே வாசம் பண்ணிக்கொண் டிருந்தான். அந்தா ளிரவு கழிந்து விடிந்த வுடனே, தாயாகிய கருமாபாயியார், கண்ணபிரானை யெழுப்பி, ஐயனே, உன் பசியைத் தணிக்கும்பொருட்டு நான் வைத்த அமுதை விரைவாக உண்ணக் கடவை யென்று சொல்லக் கேட்ட வேதியன், கருமாபாயியாரை நோக்கி, நீ யாரை அமுதுண்ணச் சொல்லுகிறாய் யென்று கேட்க, மேக வண்ணனாகிய கண்ண பிரானை யென்று சொல்ல, வேதியன், ஸ்நாநம் செய்யாமலா கண்ணனுக்கு அமுதூட்டுவது? அப்படிச் செய்தல் தகாத காரியமாகும் என்று சொல்ல, கருமாபாயியார், நான் அப்படியே செய்கிறேனென்று சொலலி, மறுநாள் விடியுமுன்னே யெழுந்திருந்து, நீராடி, புதுநீர் கொண்டு வந்து, வீடு முழுதும் மெழுகிச் சமையல் செய்தார். இப்படி நாள்தோறும் நீராடிப் புது நீர் கொண்டு வந்து வீடு மெழுகிப் பிறகு சமையல் செய்யத் தொடங்குவதனால், உண்ணுங் காலத்துக்கு மேற்பட்டுப் போக, கண்ணன் பசி பொறுக்காமல், கோயிற் பணிவிடை செய்துகொண் டிருப்பவனாகிய ஒருவன் கனவில் வந்து, நான் அமுதுசெய்யுங் காலமறிந்து விரைவாக ஒருவன் சமையல் செய்து வந்தான்; அவனை விட்டுக் கருமாபாயியார்

தாமே நீராடிப் புது நீர் கொண்டு வந்து வீடு மெழுகிச் சமையல் செய்யத் தொடங்குவதனால், உண்ணுவதற்கு நெடு நேரமாகின்றது, எனக்கோ பசி பொறுக்கக் கூடவில்லை. ஆகையால் முன்னே சமையல் செய்தவனைக் கொண்டே இனிமேல் சமையல் செய்ய நியமிக்கும்படி கருமாபாயியாரிடத்தில் சொல்லக் கடவீர் என்று சொல்ல, அந்தக் கோயில் அர்ச்சகன் உடனே விழித்து, பொழுது விடியு முன்னே, யசோதாபிராட்டியார்போலக் கண்ணனை வளர்த்து வருகிற கருமாபாயியாரிடத்திற்கு வந்து, கருணைக் கடலாகிய பகவான் என்கனவில் வந்து, முன்னை தளிகை செய்தவனை விலக்கி, நீரே மிகவும் நேரஞ் செல்லத் தளிகை செய்வதாகவும், அதனால் தமக்குப் பசி பொறுக்கக் கூடவில்லையென்றும் சொன்னார். ஆகையால் இனி இப்படிச் செய்வதை நிறுத்தி, முன்போலவே விரைவாய்த் தளிகை செய்யும்படியேற்பாடு செய்தால் நன்மையாயிருக்கும், புறச் சுத்தியால் சிறிதும் பயனில்லை, அகச்சுத்தி யிருந்தால் அதுவே சிறந்தது என்று சொல்லக் கேட்ட கருமாபாயியார் முன்போலவே விரைவாய்த் தளிகை செய்து சமர்ப்பிக்க, சர்வசக்தனாகிய பகவானவர் இனிதா யமுது செய்து வந்தார். இதைக் கண்டவர்கள் யாவரும், பரிசுத்தமாகிய யாகம் ஹோமம் யோகம் முதலியவற்றைச் செய்வோர்களிடத்திலும் அணுகாத பரம்பொருளாகிய கண்ணனைத் தாய்போல வளர்ந்து வருகிற கர்மாபாயியாருடைய புண்ணியமே புண்ணியம் என்று புகழ்ந்து கொண்டாடினார்கள். மேலும் அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கித் தோத்திரம் செய்தார்கள். அன்று முதல் ஸ்ரீ ஜகந்நாதத்தில் ஸ்ரீ கண்ணபிரானுக்குக் கிச்சடி செய்து சமர்ப்பிப்பது வழக்கமாயிருக்கிறது என்று சொல்லி, மேலே ஜயவந்த பக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

கருமாபாயிசரித்திரம் முற்றிற்று.

## ௨௯-வது ஜயவந்தபக்தர் சரித்திரம்.

வடதேசத்தில் ஓரூரில் ஜயவந்தர் என்றொரு வணிகரிருந்தார். அவர்க்கு ஐந்து புதல்வருண்டு. இந்த ஜயவந்தர், ஸ்ரீ ராமோபாசகராகவும், ஹரி பக்தர்களை பூஜிப்பவராகவும் இருந்தார். அன்றியும் தம்மிடத்திற்கு வருகிற சாதுஜனங்களுக்கும் அதிதிகளுக்கும் தவறாமல் ஸ்வயம்பாகம் கொடுத்து வருவார். இப்படி யிருக்குங் காலத்தில், புதல்வராகிய ஐவரும் வளர்ந்து பருவம் நிறைந்தபிறகு, இவர் இப்படிச் சாதுஜனங்களுக்கும் அதிதிகளுக்கும் ஸ்வயம்பாகம் கொடுத்து வீணாகப் பொருளைச் செலவிடுகிறார் என்று மனம் பொறுக்காதவர்களாய், இவரைப் பல வகையாய் நிந்தித்து, பரமதுஷ்டர்களாயும், துராசாரத்தை யுடையவர்களாகியும் பிரமகுலத்தில் உற்பவித்த ராவணனை நிகர்த்தவர்களானார்கள். பிறகு ஒருநாள் தந்தையின் தர்ம மார்க்கத்து

க்குத் தாம் சம்மதிக்காதவர்களாய், இந்தக் கிழவனுக்குப் பித்தம் பிடித்தாற் போல் தோன்றுகின்றது. நமது குலத் தொழிலாகிய வியாபாரத்துக் குதவுகிற பொருளை யெல்லாம் இப்படிச் செலவு செய்கிறானே, இதற்கு என்ன செய்யலாம் என்று ஆலோசித்துச் சிலபொருள்களைத் தந்தைக்குத் தெரியாமல் மறைத்து வைத்துவிட்டு, இவரை வருத்தப்படுத்த வேண்டுமென்று நினைத்து அரசனிடத்தில் வந்து சொன்னார்கள். அரசன் இந்த ஜயவந்தரைக் கூவி, உமது பொருளையெல்லாம் இப்படி வீண் செலவு செய்தால், உமக்குப் பிறந்த பிள்ளைகள் ஐவரும் எப்படி ஜீவிப்பார்கள்? அவர்கள் வியாபார ஜீவனம் செய்வதற்கு ஆதரவாகக் கொஞ்சமும் வைக்காமல் பொருள் முழுமையும் இப்படிச் செலவு செய்தால் அவர்கள் என்ன செய்வார்கள் என்று கேட்க, இந்த ஜயவந்தர் அரசனை நோக்கி, தேவரீருக்குத் தெரியாததொன்றுமில்லை; பொருள், புத்திரர் முதலான எல்லாம அழிந்து போவனவே, தருமமொன்று மாத்திரமே நிலையாயிருப்பது, ஆகையால் நான் தர்ம மார்க்கத்தில் பொருளைச் செலவு செய்கிறேனேயன்றித் தீயவழியில் செலவு செய்யவில்லை என்று சொல்லக் கேட்ட அரசன், இவர்க்குப் பித்து முதிர்ந்தது, இவரை மிகுதியாக வருத்தப் படுத்துவதைப் பார்க்கிலும் கொலைசெய்வதே உத்தமமென்று தீர்மானித்துக் கொண்டு, புதல்வரை யழைத்து, இவரைக் கொலைசெய்யத் தீர்மானித்தேன், உங்கள் சம்மதம் என்னவென்று கேட்டான். அதற்குப் புதல்வர், இவன் எங்களுக்குத் தந்தை யல்ல, பகைவனுவான், இவனை ஒரு பையிற் போட்டுக்கட்டி நீரில் அமிழ்ந்து போகும்படி செய்வதே நன்மையென்றார்கள். அரசனும் அப்படியே செய்ய நினைத்து, இவரை யொரு பையிற் புகுத்திக் கயிற்றால் வாயை வரிந்து மிதவாதிருக்கும்படி பளுவான கல்லை அந்தப் பையோடு சேர்த்துக் கட்டி நீரில்விடச் சிலரை யேவினான். அவர்களும் ஆழ்ந்த நீரில் கொண்டுபோய் விட்டு வந்தார்கள். இவர் நீரில் அழுந்திப் போவதற்கு முன்பே பரமகாருணிகரான பகவானவர் பூர்வகாலத்தில் திருப்பாற் கடல் கடையும்போது மந்தரகிரியானது நீரிலழுந்தாமல் மிதக்கும்படி ஆமை யுருவாகித் தாங்கினதுபோல, இவரையும் தாங்கிக்கொண்டு நிற்க, ஜய வந்தர் மேலே மிதந்துகொண் டிருப்பதை வேந்தன் பார்த்து, சர்வாந்தர்யாமியாகிய பகவானே யிவர்க்கு உதவியாயிருக்கும்போது, எம்போல்வார் செய்யும் தீங்கு இவரை யென்ன செய்யும்? இவரைக் கொல்ல எண்ணினது நமக்குத் தகாத செய்கையென்று பயந்து, விரைந்துவந்து இவரைக் கரையேற்றிக் கட்டவிழ்த்து விட்டு, மிகவும உபசரித்துத் திருவடியில் வீழ்ந்து வணங்கி நிற்கக் கண்ட புதல்வரும் வந்து திருவடியில் வீழ்ந்து வணங்கினார்கள். பிறகு அரசனும புதல்வரும் நாங்கள் செய்த பிழையைப் பொறுத்து எங்களை ரக்ஷிக்கவேண்டுமென்று தோத்திரமபண்ணி நிற்க, ஜயவந்தர், அரசனையும் புதல்வரையும் வாழ்த்தினார். அரசன் அன்று முதல் இந்த ஜயவந்த பக்தருக்கு அடியவனாகித் தொண்டு செய்து வாழ்ந்திருந்தான். புதல்வரும் தந்தையைப் பூஜித்து இனிதாய் வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே சூரதாசர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

ஜயவந்த பக்தர் சரித்திரம் முற்றிற்று.

# ௫௰-வது சூரதாசர் சரித்திரம்.

முற்காலத்தில் அத்தினபுரியை யாண்டுகொண்டிருந்த அகபர அரசனை அடுத்து அவனுக் கிதமாய் நடந்து கொண்டு, அவனது தயையைச் சம்பாதித்து, மதுராநகரத்துக்குத் தலைவராயிருந்த சூரதாசர் என்பவர் மதுரை, கோகுலம், பிருந்தாவனம் இவை யாவும் புண்ணிய ஸ்தலங்களாகையால், அந்த ஸ்தலங்களுக்கு வருகிற சாது ஸஜ்ஜநங்களுக்குத் தகுதியாகிய உபசாரங்கள் செய்து, சுவை மிகுந்த திவ்யான்னங்களை வழங்கிவந்தார். இப்படித் தினந்தோறும் செய்து வருவதனால் தாம் நல்லவழியிற் சம்பாதித்த பொருள்களெல்லாம் செலவாய் விட, மேலே செலவு செய்வதற்குப் பொருளில்லாமல், இனி வருகிற சாது ஜநங்களின் ததியாராதநத்துக்கு எந்தப் பொருளை உபயோகிப்போமென்று வருந்தி, நம்மை நாடி வருகிறவர்களுக்குக் கொடாத பொருளினால் பயனென்ன? நமது அரசனுடைய பொருளை உபயோகிப்போம், அரசன் அறிந்து தண்டித்தாலும் தண்டனையை யேற்றுக்கொள்வோமென்று தீர்மானித்துக்கொண்டு, தம்வசத்திலிருந்த ராஜ தநத்தையெல்லாம் எடுத்து, அதைக்கொண்டு சாது ஸஜ்ஜநங்களை யுபசரித்தும், தர்மசாலைகளுக்கு உதவியும், தர்மசாலைகள் கட்டுவித்தும், தாம் வாசம் பண்ணுகிற மதுராபுரியில், திருத்துழாய் மாலையை யணிந்த திருமாலை, மதநமோஹநன் என்னும் பெயரால் ப்ரதிஷ்டை செய்தும், அந்த ப்ரதிஷ்டையின் விஷயமாக என்பதுலக்ஷத்துப் பதினாயிரம் வராகன் செலவு செய்தும், இன்னம் அநேக தர்ம கைங்கரியங்கள் செய்யநினைத்துக்கொண்டும் இருந்தார். இப்படி இவர் செலவு செய்வதைக் கண்டவர்கள், அத்தினபுரிக்கு அரசனாகிய அகபரிடத்தில் வந்து, வேந்தனே! சூரதாசர் என்பவர் உமது பொருள் முழுதும் வீண் செலவு செய்கிறார் என்று சொன்னார்கள். அதைக்கேட்ட அரசன், தன்சேவகரை நோக்கி, அங்கே நீங்கள் விரைந்துபோய்ப் பொக்கசத்தில் உள்ள பொருள்களோடு சூரதாசரையும் தக்ஷணமே கொண்டுவாருங்களென்று நியமித்தான்; அன்றியும் தன் கைத்திட்டாகிய திருமுகத்தையும் கொடுத்தனுப்பினான். சேவகர்கள் உடனே புறப்பட்டு விரைந்துபோய் மதுராபுரியை யடைந்து, பகவத் பக்தராகிய சூரதாசரைச் சேர்ந்து, அரசன் கொடுத்த திருமுகத்தைக் கொடுத்து, அத்தினபுரியில் நடந்த செய்தியையும் சொன்னார்கள். சூர தாசர் அந்தத் திருமுகத்தை வாசித்து, அதிலெழுதப்பட்டிருந்த சங்கதிகளெல்லாம் தெரிந்துகொண்டு, அஞ்சாமலிருந்து, அரசன் என்மேல் வீணாகக் கோபங்கொண்டான், அரசன் கொடுத்த பொருள் முழுமைக்கும் ஈடான மாணிக்கங்கள் சேகரித்து வைத்திருக்கிறேன், அந்த மாணிக்கங்களை அரசன் கண்டால் என்மீது மிகவும் அன்பு செய்வான், நீங்கள் இந்த ரத்ந மண்டபத்தில்

இருங்களென்று சொல்லிவிட்டுத் தமது வீட்டுக்குள்ளேபோய், தகுதியாகிய ஒரு பெட்டியில் மாணிக்கத்துக்குப் பதிலாகப் பரற்கல்லை நிறைத்து, வேந்தனே! உன்பொருள் முழுதும் வந்தநல்லோர்களுக்கும, தர்ம சாலைகளுக்கும், கோயிலுக்கும் உபயோகித்து உன் புகழை ப்ரகாசிக்கச் செய்தேனேயன்றி வேறே வீண் செலவு செய்திலேன், உன்பொருள் உன்னிடத்தில் வந்து சேரவில்லை யென்று கோவங் கொள்ளவேண்டாம், நீ கோவிப்பாயென் றஞ்சியே இன்றிரவில் எங்கேயாகிலும் போய் மறைந்திருக்கலாமென் றெண்ணி யிருக்கிறேனென்று ஒரு கடிதத்திலெழுதி அதையும்அந்தப் பெட்டியில்வைத்து மூடி, அரசனால் அனுப்பப்பட்டவர்களிடத்தில் கொடுத்து, நான்வரலாமென் றெண்ணி யிருக்கையில் நீங்கள் வந்துவிட்டீர்கள், மிகவும் நன்மையாயிற்று என்று சொல்லி, அவர்களுக்குப் பொன், ஆபரணம், ஆடை முதலியவற்றை மிகுதியாகக் கொடுத்து, அவரோடு கூடியுறங்கி, நடுராத்திரியில் அவர்களறியாமல் எழுந்து போய் ஒரு காட்டை யடைந்து, ஸ்ரீ ஹரி நாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இங்கே, சூரியோதய மானவுடனே சேவகர்கள் எழுந்து பார்த்து, சுரதாசரைக் காணாமல் நாம் போய் நமது அரசனுக்கு என்ன சொல்வோம் என்று பயந்து, அந்த வூரிலும அடுத்த வூர்களிலும தேடிக் காணாமையால் அரசன் கோவிப்பானே, என் செய்வோமென்று கவலைகொண்டு, பெட்டியைத் தலைமீது சுமந்து வந்து அரசனுக்கெதிரேவைத்து நடந்த செய்தியைச் சொன்னார்கள். அரசன் தன் மந்திரியாகிய பிரபலென்பவனைக்கொண்டு பெட்டியைத் திறக்கச் செய்து, அதில் பாற் கற்கள் நிரப்பியிருப்பதைக்கண்டு ஆச்சரியப்பட்டு, பிறகு கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்த்து, முன்னே கோள் சொன்னவன்மேல் கோபங் கொண்டு அவனை நோக்கி, தாஸர் வீண் செலவு செய்கிறா ரென்று நீ சொன்னது பொய்தானே! அவர் வீண் செலவு செய்யவில்லை, என் பொருளை நல்ல விஷயத்தில் உபயோகப்படுத்தி யிருக்கிறார். உண்மையை யெழுதி வைத்து விட்டு மறைந்துபோகும்படி செய்தாயல்லவா? நீ வைஷ்ணவ த்ரோஹியென்று மிகவுங் கோவித்துக்கடிந்துபேசி, கடிதத்தை நன்றாய்ப் பார்த்து, இது சுரதாசர் கை யெழுத்தே, சந்தேஹ மில்லை யென்று துணிந்து, கண்ணீர் பெருகச் செய்து, நல்ல மந்திரியாகிய ஒருவனை நோக்கி, மூன்றுலகங்களிலுந் தேடிப் பார்த்தாலும் சுரதாசரைப்போல ஒருவரைக் காணக்கூடுமோ? என் மதத்தினால் அவர் அஞ்சும்படி கோவித்தெழுதினேனென்று மிகவும் மனம்வருந்தி, அவர் எங்கே யிருந்தாலும் தேடி யழைத்து வந்து என் இரண்டு கண்ணும் களிக்கும்படி யெனக் கெதிரே விட்டாலன்றி நான் உயிர் தாங்கி யிருக்கமாட்டேன் என்று சொல்ல, மந்திரியானவன், உடனே எங்கேயிருந்தாலும் தேடிக்கண்டு அழைத்துவரத் தகுந்த சமர்த்தர்களாகிய சில தூதர்களை யனுப்பினான். அப்படியே அவர்களும் பல இடங்களில் தேடிக்காணாமல், முடிவில் ஒரு பசுமையாகிய வனத்தில் ஹரிபஜனைசெய்துகொண்டிருந்த சுரதாசரைக் கண்டார்கள்; கண்டு, நீர் செய்த தர்ம கைங்கர்யத்துக்காக அரசன் சந்தோஷி

த்து, உம்மைக் காண விரும்பி, எம்மை உம்மிடத்தக் கனுப்பினுன் என்று சொல்ல, சூரதாசர் தெளிந்து நினைக்கலுற்றார். எல்லா விடத்திலும் நிறைந்திருக்கின்ற எம்பெருமானுடைய செயல் இதுவென்று, சந்தேகமில்லாத மனத்தை யுடையவராய்த் தூதரோடு வந்து, அந்நகரியை யடைந்து, அரசனைக்கண்டு, சலாம்செய்ய, அரசனும் இவரைக்கண்டு, ஆசனத்தினின்று இறங்கிவந்து இவரைத் தழுவிக்கொண்டு, அன்பு மிகுந்தவனுய், உமக்குச் சமானமானவர் ஒருவருமில்லை, என்பொருளை நல்லவழியில் உபயோகித்து என்னைப்புனிதனுக்கிவிட்டீர், நீர் செய்த வுதவிக்குக் கைம்மாறுக யாது செய்வேன்? உமது பெருமையை யறியாத ஒரு உன்மத்தன் சொல்லைக்கேட்டு, உமது மனம் வருந்தச் செய்தேன், என் பிழையைப் பொறுத்து ரக்ஷிக்கவேண்டும் என்றுப்ரார்த்திக்க, சூரதாசர், உலகவாழ்க்கை துக்கரூபமாயிருக்கிறதென்று அதனை யொழித்திருந்த என்னை இன்னமும் அரசியலுக்கேற்ப நடந்துகொள்ளும்படி நியமிக்கலாமோ என்று சொல்லுகிற சூரதாசரை, அரசன் இனிதாய் நோக்கி, நீர் மனம் வெறுத்து இந்த ப்ரபஞ்சவாழ்வை விட்டிருக்கிறீர் என்கிற உமது பெருமையை யறிந்திருக்கின்றேனாயினும், உம்மை விட நினைத்திலேன், முன்னே நீர் செய்துகொண்டிருந்தபடியே இன்னமுஞ் செய்யலாம், நீதி மார்க்கத்தால் நீர் அவ்விடத்தில் சம்பாதிக்கும் பொருள் ஸாது ஸஜ்ஜநங்களுக்கும் தர்மங்களுக்கும் போதாதானுல் என்னிடத்துள்ள பொருளையும் எடுத்துச் செலவிடலாம், அடியேனையும் ஸ்ரீ லக்ஷ்மீ நாதனுக்கு அடிமையாகச் செய்துகொள்ள வேண்டுமே என்று ப்ரார்த்திக்கக் கேட்ட தாசரானவர், அரசன் மனத்தையும், அவன் தம்மிடத்தில் வைத்திருக்கிற அன்பையும், அவன் சொல்லும் இனிய சொற்களையும் குறித்து மிகவும் சந்தோஷித்து, இவனை ஸ்ரீஹரிபக்தனுகச் செய்துகொண்டால், நாம் செய்கிற ஸாது ஸஜ்ஜந சமாராதந முதலானவைகளுக்கு இவனுல் பேருதவியைப் பெறலாம் என்று நிச்சயித்து, அரசனை நோக்கி, ஸ்ரீ ஹரி தாசர்களுக்குத் தினந்தோறும் யான் செய்துவருகிற ததீயாராதந முதலானவை தடையில்லாமல் நடக்கும்படி தயைசெய்ய வேண்டுமே என்று சொல்ல, அரசன் தூருக்கனுயிருந்தாலும், இவரது வேண்டுகோளுக்கு இரங்கித் திரிகரண சுத்தியாய் அப்படியே செய்கிறேனென்றான். அதன்பிறகு அவன் இந்தச் சூரதாசர் மூலமாகக் கண்ணபிரானுக்கு அன்பனுகி, மனமகிழ்ச்சியோடு கொடுத்த திரவியத்தைக் கைக்கொண்டு, மதுராபுரிக்குப்போய், கருணைக் கடலாகிய மதநமோஹநப் பெருமானைத் தரிசித்திருந்தார். அன்று முதலாக, ஹரி தாசருக்கும், அடுத்தவர்க்கும், மற்றெல்லாருக்கும் நல்ல போஜநம், ஆடை, ஆபரணம் முதலானவைகளை அவர்கள் விரும்பினபடியே நிர்ப்பயராய்க் கொடுத்து, பரமாத்மனுகிய ஸ்ரீகண்ணபிரானைப் பஜனைசெய்துகொண்டு, அவனது திருவுருவை யிடைவிடாமல் மனத்தில் அமைத்துக்கொண்டு வாழுங்காலத்தில், திருமாலடியார்க்குத் தொண்டுசெய்வதில் இவர்போலச் சிறந்தவர் ஒருவருமில்லையென்று எல்லாரும் அறிந்துகொண்டாட, ஒருநாள், இவர்,

ஸ்ரீகண்ணபிரான் கோயிலுக்குச் சிவிகைமேலேறிப் போகும் வழியில் செருப்புக்காலோடு ஒரு பாகவதர் வந்து, தாசரைக் கண்டு, நான் கோயிலுக்குப் போய்க் கண்ணபிரானைச் சேவித்து வருமளவும், இந்தச்செருப்பைக் காத்துக்கொண்டு இங்கே யிரும் என்று சொல்ல, தாச ரானவர் உடனே சிவிகைவிட்டிறங்கி, செருப்பை வாங்கித் தமதாடையால் மூடி மார்பில் அணைத்துக்கொண்டு நின்றார். அந்தப் பாகவதர் கோயிலுக்குப் போய்ச் சூரியாஸ்தமநம் வரைக்கும் வராதிருந்தார். இவரும் மனஞ்சலிக்காமல் அந்த இடத்திலேயே நின்றார். பிறகு பாகவதர்வந்து இவரதுஸாதுசேவைக்கு மனமகிழ்ந்து செருப்பை வாங்கிக்கொண்டு போய் விட்டார். இவரும் கோயிலுக்குப் போய் ஸ்ரீகண்ணபிரானைச் சேவித்து மீண்டு மனைக்கு வந்து இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே ரஸிகமுராரிபக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சூரதாசர் சரித்திரம் முற்றிற்று.

## ருக-வது ரஸிகமுராரிபக்தர் சரித்திரம்.

உலகத்தா ரெல்லாரும் புகழ்தற்குரிய பெருஞ் சிறப்பமைந்த மதுராபுரிக் கருகில் சாயம் என்னும் ஊரில், ஸ்ரீ ஹரி பக்தியிற் சிறந்தவராகிய முராரி பக்தர் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் தினந்தோறும் காளிந்தி நதியில் மூழ்கி ஸ்ரீ ஹரிபூஜைசெய்து, ஸ்ரீ வைஷ்ணவராகிய பாகவதருடைய திருவடிகளை விளக்கி ஸ்ரீ பாத தீர்த்தத்தை ஸ்வீகரித்த பிறகு, மிக்க சுவையமைந்த பதார்த்தங்களோடு கூடிய போஜநத்தை அவர்கள் அமுதுசெய்யப் பண்ணி அவர்களைத் திருமாலுருவாகவே பாவனை செய்து அவரிடத்தில் மிக்க அன்பு பாராட்டி வந்தார். அவர்க்கு அநேகமான அடியார்களுண்டு; அவர்களும் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநத்தாலேயே காலங் கழிப்பவர்கள். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள், ஹரிதாசர் பலர் இவரிடத்துக்கு வந்தார்கள். அவர்களைக்கண்டவுடனே, அவர்கள்யாவருக்கும் ஆசநங்கொடுத்து இருக்கச் செய்து, தமது அடியார்களில் ஒருவரை யழைத்து, இந்தத் திருமாலடியாரைத் திருவடி விளக்கி ஸ்ரீ பாததீர்த்தம் கொண்டுவாரு மென்று நியமிக்க, அப்படியே அந்தச் சீடர் அவர்களைத் திருவடி விளக்கி வரும்போது, அவர்களில் ஒரு வேதியனுக் கிருக்கிற பிணியைக் கண்டு, அருவருத்து, அந்த வேதியனை யொழித்து மற்றவர்களுடைய திருவடிகளை விளக்கி ஸ்ரீ பாததீர்த்தத்தைக் கொண்டுவந்து, தமது குருவுக்கு எதிரேவைக்க, அதைக் குருவாகிய முராரிபக்தர் ஸ்வீகரித்து, இதில் ருசியில்லையே, அப்படி ருசியில்லாதிருத்தற்குக் காரணம் யாதென்று அந்தச் சீடரைக் கேட்க, அவர் சொல்லுவதற்கு நாணி நிற்க, பக்தரானவர் உண்மையைச் சொல்லுமென்று

கேட்கச் சீடர், ஐயனே, வைதவர்களில் ஒரு வேதியன் அசுத்தமான சரீரத்தை யுடையவனாகவும், கால்கள் வெடித்துப் புண்ணாகிக் கசிநீ ரொழுகப் பெற்றவனாகவும் இருப்பதைப் பார்த்து அவனைத் தொடவும் என் மனம் இசையாமையால், அவ்வொருவனை யொழித்து மற்றவருடைய திருவடிகளை விளக்கி ஸ்ரீ பாத தீர்த்தம் கொண்டு வந்தேன்; இதுதான் அடியேன் செய்த பிழை யென்றார். அதைக் கேட்ட முராரிபக்தரானவர், அப்படியா வென்று சொல்லி விட்டு, விரைந்து போய், அந்தப் பிணியாளனாகிய வேதியன் பாதங்களைப் புது நீரால் கழுவி, அந்தத் தீர்த்தத்தைக் கங்கா தீர்த்தத்திலும் சிறந்ததாகப் பாவித்து உட்கொண்டு அதிக மாதுர்யமா யிருக்கின்றதென்று சொல்லிக் களிப்பதை, மற்ற வேதியர்கள் பார்த்து அதிசயித்து, இவரது மன நிலையைக் கண்ணபிரானே யறிய வல்லனன்றி, இவ்வுலகத்தில் வேறொருவரும் அறிய வல்ல ரல்லர் என்று புகழ்ந்து, இவர், பாகவதர்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தத்தின் சுவையை யறிய வல்ல ராதலால் இவர் பெயர் இன்று முதல் ரசிகமுராரி பக்தர் என்று சொல்வது தகுதியா யிருக்கும், இவர்க்கு ஸ்ரீ கண்ணபிரான் க்ருபை செய்து இவரது மனோரதங்க ளெல்லாவற்றையும் முற்றுவிக்கக் கடவரென்று வாழ்த்திப் போன பிறகு; இந்த ரசிகமுராரி பக்தர் துதிக்க அவ்விடத்துக்கு வந்த தயார்ணவயோகி, ஸ்ரீ ஹரிபூஜை செய்து கொண் டிருக்கையில், ஒரு அரசன் வந்து அவர் திருவடியை வணங்கி, அவர் செய்யும் பூஜையை நோக்கி மகிழ்ந்து, அவர்க்கு நான்கு கிராமங்களைத் தந்து, இந்தக் கிராமங்களின் வருமானத்தைக் கொண்டு, உமது ஹரிபூஜை முதலானவைகளைக் கிரமமாய் நடத்தி வாரும் என்று சொல்லிப் போன பிறகு, தயார்ணவ யோகியானவர், இது ஸ்ரீ கண்ணபிரானது திருவருளே யென்று களித்து, நாள்தோறும் தாம் செய்யவேண்டிய ஹரி பூஜை முதலானவைகளைக் குறைவற நடத்தி வந்தார். இப்படி யிருக்கையில், அந்தச் சாயம் என்னும ஊருக்கு ஓரதிகாரி நூதநமாய் வந்து குடிகளை வருத்து மியல்புள்ளவனா யிருந்தான். அவன் இவருடைய நான்கு கிராமங்களின் பொருள் வரவைத் தான் கைக்கொண்டு, இந்தக் கிராமங்கள் இவர்க்குச் சும்மா கிடைத்ததனால் இவர்க்குக் கொடேனென்று அநியாயஞ் செய்ய, அந்த வூரா ரெல்லாரும் கூடி வந்து, அந்தக் கிராமங்கள் நான்கும இந்தத் தயார்ணவ யோகிக்கு ஒரு அரசனால் கொடுக்கப்பட்டன, அவற்றின் வரவுப்பொருளை அவருக்கே கொடுப்பது தர்மமாகு மென்று பலவிதமாகச் சொல்லியும், சிரித்துக்கொண்டே இவர்க்கு யான் கொடுக்கவே மாட்டே னென்றான். இப்படி அதிகாரியானவன் சொல்லிவிட்டுப் போன பிறகு, தயார்ணவரானவர் தமது சீடராகிய முராரி பக்தருக்கு ஒரு திருமுக மெழுதி ஒரு ஆளிடத்தில் கொடுத்து அனுப்ப, அவன் கொண்டு வந்து, பக்தர் அமுது செய்துகொண் டிருக்குங்காலத்தில் கொடுக்க, இடது கையினால் வாங்கித் தலைமீது வைத்துக் கொண்டு, பிறகு கண்களி லொற்றி, விரைந்தெழுந்து, உண்ட கை கழுவாமல் ஓடிக் குருவின் திருவடியை வணங்கி நிற்க, அவர் இது என்ன அலங்கோலமெ

ன்று கேட்க, பக்தர், ஸ்வாமீ, தேவரீருடைய திருமுகம் பார்த்த வுடனே யென் கவலை கழலாமலே யோடி வந்தேனென்று சொல்ல, தயாரணவர் மகிழ்ந்து உம்மைப் போலக் குரு பக்தியிற் சிறந்தவர் ஒருவரு மில்லை யென்று சொல்லிக் கொண்டே யெழுந்து பக்தருடைய வாலையுங்கையையும் கழுவிவிட்டபிறகு, தமக்கு நேரிட்ட சங்கடத்தைச் சொல்லி, அதிகாரியினிடத்திற் போய், ஸத்கைங்கர்யத்தில் உபயோகப்படுவதாகிய நமது நிலத்தை மீட்டுக் கண்ணபிரான் திரு நாமத்துக்கே நிலைச் சீட்டு முதலிய ஏற்பாடுகள் செய்து வருவதற் குரியவர் நீரே யன்றி வேறொருவரு மில்லையென்று சொல்ல, அப்படியே யாகட்டுமென்று அந்த ஊருக்கு வருதலும், அவ்வூரா ரெல்லாரும் வந்து இவரைச் சூழ்ந்துகொண்டு, இங்கே தேவரீர் எழுந்தருளுவதற்குக் காரணம் யாதென்று கேட்க, பக்தரானவர் தமது ஆசாரியருடைய குறையைச் சொல்ல, அவ்வூரார் எல்லாரும் மனம் நொந்து, இவ்வூர்க்கு அதிகாரியாயிருப்பவன் துடுக்கன், மிகுந்த துர்மார்க்கன், ஸ்ரீ வைஷ்ணவ த்ரோஹி, மிடுக்கன், காதகன், இரக்கமில்லாதவன், மிகுந்த கோபி, கடுஞ் சொல்லன், இப்படிப் பல துர்க்குணங்களுள்ளவனுக்குத் தேவரீர் போய்ச்சொல்லும் வார்த்தை செவிக்கேறுமா? ஏறாது. ஆகையால் அவனிடம்போகலாகாது என்று சொல்லக்கேட்டு, பக்தரானவர், அவர்களை நோக்கி, அவன் குணங்களைக் குறித்து யோசிக்கவேண்டியதில்லை, குருவாக்ய பரிபாலநம் செய்வதே எனக்குச் சிறந்த தர்மம் என்று சொல்லிவிட்டு, அவனிடத்தை நாடிப் போகிற போது வழியில் கண்டவர்கள் அதிகாரியிடத்தில் இவர் வருஞ் செய்தியைச் சொல்ல, அவன் ஒரு யானைப் பாகனை யழைத்து, நீ யானையை யோட்டிக் கொண்டுபோய், என்னை நாடி வருகிற அந்த வைஷ்ணவன்மேற் செலுத்திக் காலினால் துவைப்பித்து உயிர் நீக்கி வருவாயானால், உனக்கு வேண்டிய பொருள்களைக் கொடுப்பேன் என்றான். அப்படியே அந்த யானைப்பாகன் யானையை யூர்ந்து வரும்போது கண்ட சிலர் ஓடி, சிஷ்யகோஷ்டியோடு கூடி ஸ்ரீஹரி பஜனை செய்துகொண்டு வருகிறவராகிய முராரி பக்தருக்கு இந்தச் செய்தியைச் சொல்ல, பக்தரும் கேட்டு, குரு கார்யத்திற் பிரவேசித்து நாம் இறப்பதும் நன்மையையே தருமென்று சிறிதும் அஞ்சாதவராய் விரைந்து யானைக்கெதிரே வர, சீட ரெல்லாரும் பயந்து ஓடத் தலைப்பட்டார்கள். அதைக்கண்ட பக்தர், சீடர்களை யழைத்து, நீங்கள் உடல்பொருள் ஆவி மூன்றையுங் கொடுத்து என்னிடத்தில் உபதேசம் பெற்றீர்கள், இப்போது தேஹாபிமாநிகளாய் இப்படி யோடுவீர்களானால், உங்கள் கழுத்திலணியப்பட்டிருக்கிற துளசிமணிமாலை நீக்கும்படி நேரிடும் என்றார். இதைக்கேட்ட சீடர்கள், உயிர் பிழைத்தால் போதும் என்று துளசி மணி மாலைகளைக் கழற்றிக் குருவுக்கெதிரே வைத்துவிட்டு, இந்த மாலைகள் எங்கள் கழுத்தில் இருந்தாலல்லவோ யாங்கள் உமது சீடரென்று சொல்லப்படுவோம்? உமக்கு நாங்கள் சீடரா யிருக்கவும் வேண்டாம், எங்களுயிர்களை இழக்கவும் வேண்டியதில்லை யென்று ஓடினார்கள். பிறகு, முராரி பக்தர் தனியாகி

ஸ்ரீ ஹரியை உட்கொண்டு வர, ஓடின சீடரும் அவ்வூராரும் காணும்படி அந்த யானையானது வந்து இவருடைய திருவடியை வணங்கி நின்றது; இதைக் கண்ட யாவரும் அதிசயித்தார்கள். அப்போது பக்தரானவர் தமது கையிலிருந்த மாலைகளை யெல்லாம ஒரே மாலையாய்ச் செய்து, யானையின் கழுத்திற் போட்டு, அதின் செவியில் ஸ்ரீ ஹரிநாமத்தை உபதேசித்து, இனி உன் மதச் செருக்கு நீங்கி, நல்லோர்களுக் கிணங்க நடந்துகொள்வாயாக வென்று சொல்லி, பிறகு அந்த அதிகாரியினிடத்துக்குப் போகும்போது, இவரால் நடந்த அற்புதங்களை முன்னே போடிச் சொல்லக் கேட்ட அந்த அதிகாரியானவன், பயந்து, எதிர்கொண்டு வந்து, ஐயனே, உம்முடைய மஹிமையை யறியாமல் மூர்க்கனாகிய நான் செய்த அபராதத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து, மேலும் ஸ்வாமீ, தேவரீருக்கு எது வேண்டுமானாலும் தருகிறேன், கேளுமென்று சொல்லுதலும், பக்தரானவர், எனக்கு ஆசாரியர் நிலத்தையும் என்னால் உபதேசிக்கப் பெற்ற யானையையும கொடுத்து, யான் என்னிடம் சேரும்படி செய்யக்கடவை யென்று சொல்ல, அதிகாரியும் அப்படியே நிலச்சீட்டு முதலியவும் யானையும் கொடுக்கப் பெற்றுக்கொண்ட பக்தரானவர் தமது குரு இருக்குமிடத்தை யடைந்து, அவர் திருவடியை வணங்கி, அதிகாரியிடத்துக்குப் போனபோது நடந்த செய்தியையெல்லாம் சொல்லி, நிலப் பத்திரத்தையும் யானையையுங் கொடுத்தார். அந்த யானையானது அன்றுமுதல் ஸ்ரீஹரியின் திருநாம ஸங்கீர்த்தனங்களைக் காதாரக் கேட்டுக் கொண்டு தயாரனவரிடத்தில் வாழ்ந்திருந்து, நிதம் பகற்காலத்தில் காட்டுக்குப்போய் இலைகளையும், மடத்துக்கு வேண்டிய விறகு முதலியவற்றையும எடுத்துக்கொண்டு வந்து குவித்து விட்டு, ஹரி தாஸர் உண்ட சேஷத்தை யுண்டு வாழ்ந்திருப்பதைக் கண்டவர் யாவரும் களித்து அதிசயிக்க, யானையானது தான் பெற்ற பேற்றைக் குறித்து, யான் முற்காலத்தில் என்ன தவஞ் செய்திருந்தேனோ, இப்படிப்பட்ட ஹரிதாசருடைய சேவையில் என்றும் இருப்பதும, இவர்க்கு ஊழியஞ் செய்வதும், இவர் உண்ட மிச்சிலை யுண்பதும், சதா காலமும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனத்தைக் காதுகுளிரக் கேட்பதும ஆகிய இவை யாருக்குக் கிடைக்கும் என்று மிருதியாய்க் களித்திருந்தது. இப்படிப் பலநாள் கழிந்தபிறகு ரஸிகமுராரிபக்தர், தமது ஆசிரியரிடத்தில விடைபெற்றுப் புண்ணிய தீர்த்தங்களில் நீராடும பொருட்டு, அந்த யானையின் மீது தீர்த்த யாத்திரைக்கு வேண்டிய பொருள்களைச் சுமத்திக்கொண்டு, அடியார்களோடு கூடி, ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு போனார். போகும் வழியில் திருடர்கள் வந்து துன்பஞ் செய்யக் கண்ட இந்த யானையானது அந்தத் திருடர்களை உற்று நோக்கி அவர்கள் வாயில் ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணை யில்லாமலும், அவர்கள் கழுத்தில் திருத் துழாய் மாலை யில்லாமலும் இருப்பதைக்கண்டு, இவர்களைக் குறித்துத் தாக்ஷிண்யஞ் செய்ய வேண்டியதில்லை யென்று கோவங்கொண்டு அவர்களைக் குத்திக் கொன்றது. பிறகு, பக்தரா

னவர் அநேக புண்ய நதிகளில் ஸ்நாநம்செய்து குருக்ஷேத்ரத்துக்குப் போக நினைத்துப் போகும் வழியில், அருணாவதி நகரத்தைக் கண்டு, அவ்விடத்தில் தங்கியிருந்தார். மூன்று நாள் அங்கே தங்கி யிருக்கையில், சிலர் விரைந்து போய் அந்த நகரத்தை யாளுவோனாகிய துருக்க வேந்தனிடத்தில், இந்தப் பக்தர் அடியார்களோடும், உத்தம லக்ஷணங்க ளுள்ள யானையோடும் வந்து தங்கி யிருப்பதைத் தெரிவித்தார்கள். அந்த அரசன் இந்த யானையின் மேல் விருப்பங் கொண்டு, வந்து செய்தி சொன்னவரை நோக்கி, நீங்கள் போய் இந்த யானையை எங்கள் அரசன் விரும்பினதனால் கொடுத்து விடுங்கள் என்று சொல்லுங்கள், அவர்கள் கொடுக்காத பக்ஷத்தில், அவர்களைத் துன்பப் படுத்துங்கள் என்று சொன்னான். அந்தத் தூதர்கள் அப்படியே போய்ச் சொல்ல, பக்தருடைய அடியார்கள் அந்தத் தூதரை நோக்கி, இந்த யானை வைஷ்ணவரிடத்தி லன்றி மற்றவரிடத்திற் போகாது என்றார்கள். இவர்கள் சொன்ன சொல்லை உண்மையென்று நினையாமல் தூதர்கள் அதைப் பிடிக்க நெருங்கினார்கள். அப்போது அவர்களிடத்தில் வைஷ்ணவ சின்னங்கள் ஒன்றுங் காணப்படாமையால், கோபித்துச் சீறுதலும், கண்டுபயந்து அரசனிடத்திற் போய்ச் சொன்னார்கள். அரசன் ஒரு யானைப் பாகனை யழைத்து, நீ வைஷ்ணவ வேஷம் பூண்டு போய் அந்த யானையை வசப்படுத்திக்கொண்டு வந்து நமது யானைச் சாலையிற் கட்டவேண்டுமென்று கட்டளையிட, அவனும் அப்படியே வைஷ்ணவ வேஷம் பூண்டு வந்து யானைக் கெதிரே நின்றான். அவன் பூண்டு வந்தது கபட வைஷ்ணவ வேஷம் என்றறிந்தும், அவனிடத்திலுள்ள வைஷ்ணவ சின்னங்களைப்பார்த்து அவனுக்கடங்கி நிற்க, அவன் அதைப் பிடித்துக்கொண்டு போய் அரசனுக் கெதிரே விட, அவன் யானைப் பந்தியிற் கட்டச்சொல்லி நியமித்தான்; பாகனும் அப்படியே செய்தான். பிறகு அந்த யானையானது சாது ஜனங்களுடைய சஹவாசம நீங்கி இங்கே வந்திருக்கும்படி நேரிட்டதே யென்று அவர்களுடைய பிரிவுக்குச் சஹிக்காமல், ஊண் உறக்கங் கொள்ளாம லிருந்து ஏழு நாளில் ஸ்ரீ வைகுண்ட பதவியை யடைந்தது. இதைக் கேள்விப்பட்ட பக்தரானவர் இனியிங்கே யிருக்கலாகாதென்று புறப்பட்டு ஹரிபஜனை செய்துகொண்டேபோய்ப் பல புண்ய தீர்த்தங்களாடி இனிதாய் வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே, மீராபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ரசிகமுராரி பக்தர் சரித்திரம் முற்றிற்று.

# ௫௨-வது மீராபாயி சரித்திரம்.

இந்துஸ்தான தேசத்தில் பெரியவுமேதயபுரம் என்று சொல்லப்பட்ட ஓர் ஊருண்டு. அந்தச் சிறந்தநகரத்திற்கு அரசனாயிருப்பவன்பேர் ராணுவா என்றுசொல்லுவார்கள். அவன் விஷ்ணு பக்தியுள்ளவனும், அதிதிகளை ஆதரிப்பவனும், தன்னிடத்திற்கு வருகிற சாதுஜனங்களை எதிர்கொண்டழைத்துப் பூஜிப்பவனும், ஸ்ரீகோபால மூர்த்தியைத் தனது இதயத்தில் வைத்துச் சகலமான வுபசாரங்களும், தூப தீப நைவேத்தியங்களும் செய்து நிவேதித்த ப்ரஸாதத்தை உட்கொள்வோனுமாகி வாழ்ந்திருந்தான். இப்படி யிருக்கையில், அவனுக்கு ஒரு மகள் அதிக ரூபலாவண்யத்தோடு பிறந்தாள். அவளுக்கு மீராபாயி என்று பெயரிட்டுத் தந்தை தாயாரிருவரும் அந்தப் புதல்வியை மிகவும் அன்போடு வளர்த்து வரும் காலத்தில், ஒரு நாள் அந்தக் குழந்தையை ஸ்ரீ கண்ணபிரான் சந்நிதிக்கெடுத்து வந்து, அந்தக் கண்ணபிரானுடைய திவ்ய சௌந்தர்யத்தைச் சேவிக்கப் பண்ணிக்கொண்டு போனார்கள். அன்று முதலாகத் தினந்தோறும அப்படியே செய்து வருகையில், அந்தப் பெண்ணானவள் கண்ணபிரானுடைய திவ்ய சௌந்தர்யத்தில் ஈடுபட்டு, கார் காலத்து மேகத்தைக் கண்டு களிக்கின்ற மயில் போலக் கண்ணனைக் காணுந்தோறுங் களிக்கின்ற மனமுடையவளாயிருந்தாள். இப்படியிருக்கும்போது அந்தப் பெண் பருவ நிரம்பினவளானதைக் கண்ட தந்தையானவன், மனைவியை நோக்கி, நமது பெண் பருவ மடைந்திருப்பதை நீ கவனிக்காமலிருப்பது தகுதி யல்ல, அவளுக்குத் தகுந்த மணவாளனைத் தேடவேண்டுமென்று சொன்னான். அப்படிச் சொல்லிக்கொண்டிருப்பதைக் கேட்ட மீராபாயி, தந்தையிடத்தில் வந்து, தந்தையே, நீங்கள் தினந்தோறும் போய்த் தரிசித்து வருகிற ஸ்ரீ கோபாலஸ்வாமியை யன்றி வேறொரு மணவாளனை நான் விரும்பமாட்டேன், அவனுக்கே என்னைச் சமர்ப்பியுங்கள் என்றாள். அதைக் கேட்ட தந்தையானவன், புதல்வியை நோக்கி, உன் விருப்பத்தின்படியே யாங்கள் செய்யத் தடையில்லை, கோபால மூர்த்தி அர்ச்சாரூபியா யெழுந்தருளியிருக்கிறானாகையால் உன்னோடிணங்கமாட்டான், உனக் கிஷ்டமான ராஜகுமாரனுக்கு மணஞ்செய்து கொடுக்கிறோம் என்று சொல்ல, மீராபாயி, தந்தையை நோக்கி, அர்ச்சா ரூபியா யிருக்கிற பகவானானவர் நாம தேவருடைய நிஜ பக்தியின் வசப்பட்டவராய், அவர் வாவென்றால் வருவதும, போவென்றால் போவதும், உண் என்றால் உண்பதும் இப்படிச் சகலவிதங்களாலும் உபயோகப்பட்டு வருகிறாரல்லவா? அன்றியும் இந்தக் கலியுகத்தில் அர்ச்சா ரூபமும் விபவரூபமாகும் என்பதையும நீர் அறிந்திலீர்போலும்! என்னை யாதொரு தடை சொல்லாமல் அந்தக் கோபாலனுக்கே சமர்ப்பித்து விடுங்களென்று சொன்னாள். அதைக் கேட்ட தந்தையா

னவன், இவளுக்கு இந்தச் சிறுவயதில், ஹரிபஜனை, புராணசிரவணம், திவ்ய ஞாநம் இவைகளில் விருப்பமுண்டாயிருக்கிறதைக் குறித்து அதிசயித்து, தன் திருவாராதநத்தி லிருந்த கோபால ஸ்வாமி விக்ரஹத்தைக் கொடுத்து, இந்தக் கோபாலனை உன்னிஷ்டப்படியே ஆராதித்து உன் மநோரதத்தை நிறைவேற்றிக் கொள்வாயாக வென்று சொன்னான். அப்படியே மீராபாயி யும் கோபால விக்ரஹத்தைப் பெற்றுத் தன் மனையில் வைத்துக்கொண்டு, தினந்தோறும் விடியற்காலத்தில் எழுந்து ஸ்நாந நித்யகர்மங்களை முடித்து, புண்ய தீர்த்தத்தைக் கொண்டு திருமஞ்சநம் பண்ணி, வஸ்த்ராபரணாதிக ளால் அலங்கரித்து, சகலமான உபசாரங்களும் செய்து, பூஜித்து, வீணை யைக் கைக்கொண்டு, பகவத் குணங்கள் பலவற்றையும் புகழ்ந்து பாடிச் சாதுக்களை வருவித்து, ப்ரஸாதத்தை நிவேதித்து, பிறகு உண்டு, புராண சிரவணம் செய்தும், ஆத்ம ஞாந நூல்களை வாசித்தும், பகவத் குணாநுபவ ப்ரபந்தங்களை யுண்டாக்கிக்கொண்டிருக்கும் காலத்தில், அவ்வூரிலுள்ள சில துஷ்டர்கள், இந்த ராஜகுமாரியானவள் புருஷர்களுக்கெதிரே இப்படி ஆடு வதும் பாடுவதுமா யிருப்பது, இந்த அரசனுக்கு அவமாநத்தை யுண்டா க்குமே, இதை அரசன் அறியவில்லையே யென்று போய் அரசனுக்கு அறி விக்க, அவனுக்கு இந்தப் பெண்ணின்மீது கோப முண்டாகி, மனைவியை நோக்கி, இந்தப்பெண் இதுவரையில் சிறுவயதா யிருந்ததனால் வைஷ்ணவர்க ளோடு கூடியிருக்கச் செய்தேன், இப்பொழுது தகுதியான யௌவந பருவம் வந்திருப்பதனால் இவள் எவ்வளவு ஞாநமுள்ளவளா யிருந்தாலும் புருஷர்க ளோடு இனிக் கூடி யிருக்க லாகாது, ஊரார் இந்தச் செய்தியை யறிந்து என்னை யிகழ்ந்தார்கள். ஆதலால் உன் மகளுக்கு வேண்டிய புத்திசொல்லி, ஒரு மணவாளனை மணம்புணர்விப்பது நன்மையென்று சொன்னான். மனைவி யானவள் அரசனை நோக்கி, ஓ பிராணநாதா, இவள் கண்ணனை யன்றி வேறொருவனை மணஞ்செய்துகொள்ள மாட்டேன் என்கிறாளே, இதற்கென் செய்யலாம் என்றாள். அதுகேட்டஅரசன், அப்படியானால் இவளைக் கொல்லு வதே தகுதி, இல்லாவிடின் எனக்கு மிகுந்த அவமாநம் உண்டாகும் என்றுசொல்லி, விஷங் கலந்த அந்நத்தை உன்மகளுக்குக் கொடுத்து அவளை க் கொல்வாயாகவென்று சொல்ல, மனைவியும் அரசன் வார்த்தையைத் தடுக்க அஞ்சி, அப்படியே விஷங் கலந்த சோற்றைக் கொண்டுபோய் மகளுக்குக் கொடுத்து, இது உன் தந்தையால் கொடுக்கப்பட்டது, இதை உண்பாயாக வென்றாள். அதைக் கேட்ட மீராபாயி அந்த அந்நத்தை வாங்கிக்கொண்டு, ஸ்ரீ கண்ண பிரானுக் கெதிரே நின்று, ஓ பகவானே, நான் உன் பக்திசெய்து அது காரணமாக இறந்து படுவேனானால் இனி உன்னை யார் வழிபடுவார் கள்? அடியேன் செய்யும் பூஜையில் உனக்கு விருப்ப முண்டானால், முற் காலத்தில் தந்தையாகிய இரணியன் ஏவின சர்ப்பங்களின் கொடிய விஷத் தால் ப்ரஹ்லாதாழ்வான் இறவாதிருக்கும்படி செய்தாற்போல, என்னையும் இறவா திருக்கச் செய்வாயாக வென்று சொல்லி, அந்த விஷாந்நத்தை

யுண்டாள். உடனே ஸ்ரீகண்ணபிரான் பச்சை வடிவங்கொண்டான். விஷாங்கத்தை யுண்டும், மகள் சாகாதிருப்பதையும், கண்ணபிரான் பச்சை நிறங் கொண்டதையும், அரசன் தேவி அரசனுக்குச் சொல்ல, அரசனும் இது உண்மைதானோ வென்று வந்து பார்த்து, அப்படியே உண்மையாயிருக்கக் கண்டு அதிசயித்து, ஓ பகவானே, உன்னை விஷ முண்ணச் செய்தேனே என்று அநுதபித்து, சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்து, தன் மகளுடைய பக்திக்கு ஆச்சரியமடைந்து, அவளையும் வணங்கித் துதித்து, உன் மஹிமையை யறியாமல் நான் செய்த பிழையைப் பொறுக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, மீராபாயியும் தந்தையை வணங்கி, உன்னால் நான் கண்ணபிரானுடைய கருணைக்குரியவளானேனென்று சொல்லிநிற்க, அரசன் மீராபாயியை நோக்கி, உன்னால் கண்ணபிரான் அடைந்த பச்சை நிறம் மாறும்படி நீயே செய்யவேண்டுமென்று சொல்ல, மீராபாயியானவள், கண்ணபிரானை நோக்கி, ஸ்வாமீ, முற்காலத்தில் பூதனையின் விஷபாலைக் குடித்த நீ, இன்றும் உன் பச்சை நிறத்தை மாற்றி, முன்போலவே நீல நிறங்கொண்டு அரசனுக்குச் சேவை சாதித்தருளவேண்டும் என்று ப்ரார்த்தித்தலும், ஸ்ரீ கண்ணபிரானுமவர் இவளது ப்ரார்த்தனைக் கிரங்கி, கண்டத்தில் மாத்திரம் கொஞ்சம் பச்சை நிறமும, மற்றத் திருமேனி முழுதும் முன்போல நீல நிறமுங் கொண்டு, கண்டோரெல்லாரும அதிசயிக்கும்படி எழுந்தருளி யிருந்தார். ராணா வேந்தனுடைய புதல்வியின்பொருட்டுக் கண்ணபிரான் இந்த லீலையைச் செய்யக் கண்ட துர்ஜநர் ஸஜ்ஜநர் என்கிற இருதிறத்தாரும் அதிசயித்துத் துதிக்க, அக்காலத்தில் விளங்கினது போலவே, இன்றும் விளங்கிக் கொண்டிருக்கிறார். சொல்லப்பட்ட கந்நிகையானவள், ஆத்மகோடிகளையெல்லாம் ஆண்டருளுகிற கண்ணபிரானது கருணை விசேஷத்தால் ஆத்மஞானம விளங்கப்பெற்று இனிதாய் வாழ்ந்திருந்தாள் என்றுசொல்லி, மேலே தாசிகான்ஹோபாத்ரா வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

மீராபாயி சரித்திரம் முற்றிற்று.

## ௫௫-வது தாசிகான்ஹோபாத்ரா சரித்திரம்.

பண்டரிபுரத்துக்குத் தென்றிசையில், எழு கோசு தூரத்திலுள்ள, மங்கள வேஷம் என்கிற வூரில் வாழ்பவளாகிய ஒரு தாசியானவள், சாமா என்னும் பெயர் பூண்டு விளங்கினாள். இவள் வயிற்றில் ஒரு புதல்வியார் அவதரித்து, கண்டவர் ஆச்சரியப்படத்தகுந்த சௌந்தரியத்தோடு கூடி வளர்ந்து வருங் காலத்தில், அவருக்கு, கான்ஹோபாத்ரா என்று பெயரிட்டு அன்போடு காப்பாற்றிவர, தெய்வப்பெண்களும் நாணமடையும்படியான ரூபலாவண்யங்கள் விருத்தியடைந்தனவென்றால், இவ்வுலகத்துப் பெண்கள் நாணு

வார்களென்பதற்குச் சந்தேஹமுண்டா? இவர் பரதசாஸ்திரம் முழுதும் கற்றுத் தெளிந்தார். இளமைப் பருவத்திலேயே இவர் பாடியாடும் விதமெல்லாம் கேட்டறிந்த தெய்வப்பெண்களாகிய அரம்பை முதலானோர்கள் மெச்சிக்கொண்டாடினார்கள். இப்படியிருக்கும்போது, மயிற்சாயலையுடைய அந்தக் கந்நிகை யௌவநப்பருவமடைய, தாயானவள், அந்தக் கந்நிகையாரை நோக்கி, மகளே, நீ ஒரு அரசனிடத்திற் சேர்வாயானால், அவன் உன் ஆடல் பாடல்களை விரும்பி, உனக்கு வேண்டுமெவற்றை யெல்லாம் கொடுப்பான், ஆதலால், நீ வா, அரசனிடத்துக்குப் போவோமென்று சொல்ல, கந்நிகையானவர் அதற்கு மன மிசையாமல், தாயை நோக்கி, அம்மா, என்னுடைய அழகினுஞ் சிறந்த அழகுள்ள புருஷனை நான் விரும்புவேனே யன்றி மற்றொருவனையும் விரும்பமாட்டேன் என்று சொல்லி வாழ்ந்திருக்குங் காலத்தில், சூரியன் தேர்ப்பாகனாகிய அருணனுக்குத் திருவிழாக்காலம் நேர்ந்தது; அப்போது அநேகம் ஹரிதாசர்கள் தாளம், ம்ருதங்கம், வீணை, தடாரி, கருடக்கொடி முதலியவற்றோடு நிர்மலராகிய ஸ்ரீஹரியின் திருநாமங்களைப் பாடிக்கொண்டு, ஸ்ரீ கண்ணபிரான் எழுந்தருளி யிருக்கிற பண்டரிபுரத்துக்குப் போனார்கள். அந்த ஹரிதாசர்களை இந்தக் கான்ஹோபாத்ராவானவர் கண்டு, ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநபரராகிய நீங்கள் எங்கே போகிறீர்கள் என்று கேட்க, அவர்கள் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் புண்டலீகர்க்கு அருள்செய்த க்ஷேத்ரமாகிய பண்டரிபுரத்துக்குப் போகிறோமென்று சொல்ல, கான்ஹோபாத்ரா வானவர், அவர்களை நோக்கி, நீங்கள் சொல்லுகிற அந்தப் பாண்டுரங்கனுடைய அழகின் பெருமையை யெனக்குச் சொல்லவேண்டுமென்று வேண்ட, அந்த ஹரிதாசர்கள், அந்தப் பத்மநாபனுடைய அழகைச் சொல்வதற்கு வேதங்களுக்கும், வேதாதிகாரியான ப்ரஹ்மதேவனுக்கும் சாத்தியப்படாது என்றார்கள். அதைக்கேட்ட கான்ஹோபாத்ராவானவர், அந்த ஹரிதாசர்களைநோக்கி, ஐயரே, நீங்கள் கொண்டாடுகின்ற பாண்டுரங்கப்பெருமானை அடியேன் சரணமடைந்தால், அவர் அடியேனை விரும்புவாரோ வென்று கேட்க, தாசர்கள், அந்தப் பாண்டுரங்கப் பெருமானானவர் மதுராபுரியில் ஸ்ரீக்ருஷ்ணாவதாரஞ் செய்தபோது அவ்விடத்தில் ஒரு கூனிக்கு அருள் செய்தார்; அன்றியும், ஹீநராகிய சோகாமேளர் முதலானவர்களை க்ருபை செய்து காத்தருளினார். அப்படிப்பட்ட பாண்டுரங்கப்பெருமானானவர், உன்னைக் காத்தருள்வது அருமையல்லவென்றார்கள். அப்படிச் சொல்லக்கேட்ட கான்ஹோபாத்ராவானவர் ஞானத்தையடைந்து, தாம் வாழ்கின்ற வீட்டிற்கு விரைவாகப் போய், தமது தாயை நோக்கி, அடியேன் பண்டரிபுரத்திற்குப் போய் மீண்டு வருவேன், நீர் இவ்விடத்தி லிருமென்று சொல்லிவிட்டு, சாதுக்களோடு கூடி, வீணையைக் கைக்கொண்டு ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டும், ஆநந்த நர்த்தநம் செய்துகொண்டுமே போய் ஸ்ரீபண்டரிபுரம் சேர்ந்து, சந்நிதிக்குள்ளே பிரவேசித்து, ஸ்ரீ பாண்டுரங்கப்பெருமானை, தரிசநம் செய்து, துதித்து, தாமரை மலர்போன்ற திருவடிகளில் வீழ்ந்து, தீர்க்க

தண்டம் சமர்ப்பித்து, ஹே முகுந்தா, கோவிந்தா, உன்னுடைய பிரபாவத்தைப் பெரியோர்கள் சொல்லக்கேட்டு, அடியேனது ஜாதித்தொழிலை விட்டு உன் திருவடியை நம்பி வந்து, உன்னை ஆசிரயித்தேன்; ஆதலால் அடியேனை அங்கீகாரஞ் செய்தருளவேண்டும், நீ தயாநிதியல்லவா என்று நிர்மலராகிய பகவானுடைய திருவடிமீது தனது தலையைத் தாழ்த்திக் கண்களில் ஆநந்தபாஷ்பம் துளிக்க நின்று, அநேகவிதமாய் ஸ்தோத்திரஞ் செய்து, அவ்விடத்திலேயே தங்கி யிருந்தார். அப்படி யிருக்கிற காலத்தில் ஒரு நாள், துராசாரன் ஒருவன் அங்கே வந்து இவளது அழகைக் கண்டு ஆச்சரியமடைந்து, இப்படிப்பட்ட கட்டழகினை இவ்வுலகத்திலும் மற்றெந்த வுலகத்திலும் காண்பது மிகவும் அருமையாகும் என்று, உடனே புறப்பட்டுப் பேதரி நகரத்தையாளுகிற மிலேச்ச ராஜனிடத்திற் போய், மஹாராஜனே, பண்டரிநாதன் சந்நிதியில் ஒரு பெண் வந்திருக்கிறாள்; அவளது பேரழகையென்னென்றெடுத்துச் சொல்வேன்? அவளுடைய சௌந்தரிய சாகரத்தில் வீழ்ந்தவன் நீந்திக் கரையேறுதல் அருமையாமென்று சொன்னான். அதைக் கேட்ட அரசன், அதிசயித்து, சில தூதரை யழைத்து, நீங்கள் போய் அந்தப் பெண்ணை இந்த க்ஷணமே கொண்டுவாருங்களென்று அனுப்ப, அவர்களும் அப்படியே போய்ப் பண்டரிநாதன் சந்நிதியின் கருட ஸ்தம்பத்தினருகே ஸ்ரீ பகவந்நாமஸங்கீர்த்தநம செய்துகொண்டிருப்பவராகிய கான்ஹேமபாத்ரா என்பவரை நோக்கி, உன்னை எங்கள் அரசன் அழைத்துவரச் சொன்னான், உடனே வா, வராவிட்டால், உன்னை வலிந்து பற்றிக் கொண்டுபோய் அவ்விடத்திற் சேர்ப்போம என்றார்கள். அதைக் கேட்ட பாத்ராவானவர், அப்படியே யாகட்டும், இதோ பகவானை வணங்கி வருகிறேன் என்று சொல்லி, பகவத் ஸந்நிதியின் கர்ப்ப க்ருஹத்திலுள்ளே பிரவேசித்து, பகவானை வணங்கி, சிரசின்மேல் கைகளைக் கூப்பி அஞ்சலி செய்து, புண்டரீக வரதனே, முற்காலத்தில் கஜேந்திராழ்வானது துன்பத்தை நீக்கி யருளின கருணைக் கடலே, தேவரீருடைய திருவடித் தொண்டு செய்ய வந்து அடுத்திருக்கின்ற அடியேனை அரசனிடத்துக்குப் போக விடுவீரானால், தேவரீரை ஆசிரயித்திருக்கிற சாதுக்கள் சிரிப்பார்களே! இதை நீர் அறியீரோ என்று ஸ்தோத்திரஞ் செய்து நிற்பவரது இன்சொற்களைக் கேட்டு, கருணாசாகரமாகிய பகவானானவர், அவர் கண்ணுக் கெதிரே தோன்றி அவரது உயிரைத் தமது திருத்தொடையிற் சேர்த்துக்கொண்டார். அருகே யிருந்த இந்த அதிசயத்தைக் கண்ட சாதுக்களும அர்ச்சகர்களும் வியந்து, மனமுருகி, ஜயஜயவென்று புகழ்ந்து கொண்டாடினார்கள்; அன்று முதல் இன்றளவும் பாண்டுரங்கப் பெருமானது திருத்தொடையில் அந்தக் கான்ஹேமபாத்ரா என்னுங் கந்நிகையார் சேர்ந்திருக்குங் குறியைச் சேவிப்போர்களெல்லாம் கண்டு களிக்கின்றார்கள். இப்படி அவருயிரைப் பகவானானவர் தமது திருத்தொடையில் சேர்த்துக்கொண்ட வுடனே, அர்ச்சகர்கள் அவரது உடலைக் கொண்டு போய்த் தெற்கு வாசலின் ஒரு புறத்தில் புதை

த்து நின்று துதித்தார்கள். உடனே அந்தப் புதைத்த விடத்திலே ஒரு மரம் முளைத்துத் தழைத்து நின்றது. இப்படியிருக்க, வெளியே நின்ற தூதர்கள் உள்ளே ப்ரவேசித்து அர்ச்சகர்களை நோக்கி, இங்கே வந்த பெண் எங்கே யென்று கேட்க, அவர்கள், அவருயிரைப் பகவானவர் தமது திருத் தொடையிற் சேர்த்துக் கொண்டார், அவருடலைக் காட்டலா மென்றாலும் புதைத்த அவ்விடத்தில் அவ்வுடலே ஒரு மரமாய் முளைத்துத் தழைத் திருக்கிற தென்றார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட தூதர்கள், இது என்ன ஆச்சரியமாயிருக்கின்றது! அந்தப் பெண்ணை நீங்கள் மறைத்து வைத்துக்கொண்டு பொய் சொல்லுகிறீர்கள், நீங்கள் எங்கள் அரசனிடத்துக்கு வாருங்களென்று அழைத்துக்கொண்டு போனார்கள். போன அர்ச்சகர்கள், கந்தபொடியையும ப்ரஸாதத்தையுங் கொண்டு போய் அரசனுக்குக் கொடுக்க, அவன வாங்கி, அதில் ஒரு மயிரிருக்கக் கண்டு, இதென்னவென்று அவர்களைக் கேட்க, அவர்கள் பயந்து இது பகவானுடைய தலை மயிரென்று சொன்னார்கள். வேறொரு மயிரென்று சொன்னால், அரசன் தண்டிப்பா னென்று இவ்வாறு சொல்லக் கேட்ட அரசன், உங்கள் சாமிக்கு மயிருண்டோ, உங்களைக் கொல்லுவதற்கு முன்பே உண்மையைச் சொல்லிவிடுங்க ளென்றான். அப்போது, அர்ச்சகர்கள் அரசனை நோக்கி, ஐயா, நீர் கோயிலுக்கு வந்து உண்மையை அறிந்து கொள்ளலா மென்றார்கள். அப்படியே அரசனும அவர்களோடு விரைந்து போய்க் கோயிலை யடைந்து நின்ற வுடனே, அர்ச்சகர்கள் பகவத் ஸந்நிதிக் கெதிரே நின்று, ஸ்வாமீ, தேவரீர் உரோமத்தோடு கூடிச் சேவை சாதிக்கா விட்டால், இன்று யாங்கள் மடிவது நிச்சயம் என்று சொல்லித் துதித்து நிற்க, அரசனும் சந்நிதியிற் போய்ப் பகவானை உற்றுப் பார்க்குமபோது, அவரது திருமுடியின் கீழே சுருண்டு தொங்குகிற மயிரையும், அவரது திருத் தொடையில் கான்ஹோபாத்ராவின் உயிரிருக்கிற அடையாளத்தையும கண்டு பயந்து, பிறகு மனமகிழ்ந்து, பகவானைப் பலவகையாய்த் தோத்திரம்செய்து அர்ச்சகர்களை நோக்கி, நீங்கள் சொன்னபடியே யிருக்கக் கண்டேன் என்று அவர்களையும வணங்கி, ஆநந்தக் கண்ணீ ராருக நின்று, இந்தப் பெண்ணானவள் பகவானுடைய திருத் தொடையில் இடம பெற்றிருக்க என்ன தவஞ் செய்திருந்தாளோ என்று வியந்து, பகவானுடைய திருவடியை ஆலிங்கநஞ் செய்து துதித்துக் கொண்டாடி, அந்தப் பெண்ணினுடலே மரமாக முளைத்துத் தழைத்திருப்பதையும் கண்டு, பிறகு, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டு மென்று, பாண்டுரங்கப் பெருமானைத் தோத்திரம் பண்ணித் தன் ஊரை யடைந்து வாழ்ந்திருந்தான். கான்ஹோபாத்ராவின் உடல் மரமாய் முளைத்துத் தழைத்திருந்த தென்றே னல்லவா? அந்த மரம் இன்று வரைக்கும அவ்விடத்தில் உள்ளது; அன்றியும தேவர்கள் பலர், ஏதோ காரணத்தால் மரங்களாகவும் கற்களாகவும் அவ்விடத்தில் தோன்றியிருக்குந் தன்மையைச் சொல்லச் சேடனாலும் முடியாது என்று சொல்லி, மேலே தாமாஜி பண்டிதருடைய வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

**கான்ஹோபாத்ராவின் சரித்திரம் முற்றிற்று.**

# ௫௪-வது தாமாஜிபண்டிதர் சரித்திரம்.

பேதரிமாநகரத்தை யாளுகின்ற துருககவேந்தன், பலவளங்களும் நிறைந்திருக்கிற மங்களவேஷம் என்னும நகரத்தைதத் தன் அரசாட்சிக் குட்படுத்திக்கொண்டு, அந்த நகரத்துக்கு, ஸ்ரீஹரிபஜனையிற் சிறந்தவராய், ப்ரபஞ்ச விஷயத்தில் விரக்தராய் விளங்குவோராகிய தாமாஜி பண்டிதரை அதிகாரியாக்கிவைக்க, அந்தத் தாமாஜி பண்டிதர், தமது குடும்பத்தோடு அவ் வூரிலிருந்து, தமது அதிகாரத்தை நீதியாய நடத்திக்கொண்டும், தினந்தோறும் வருகிற தொண்டருக்கும் அதிதிகட்கும பூஜை, அன்னதாந முதலாகிய வுபசாரங்களைச் செய்துகொண்டும், ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டும வெகு காலங் கழித்துக்கொண்டிருக்கும்போது, பஞ்சகாலம் நேரிட்டு, சீவராசிகளெல்லாம பசிபொறுக்காமல் மாண்டுபோவதேயன்றி, உண்ணச் சோறு கிடையாமல் மிகுந்த துன்பத்தை யநுபவிக்குங் காலத்தில், ஒரு வேதியன் பண்டரி புரத்திலிருந்து, இந்தத் தாமாஜி பண்டிதர் வீட்டுக்கு வந்தான். அவனைக் கண்டவுடனே, பண்டிதர் மிகவும உபசரித்து, அந்த வேதியனை நோக்கி, நீர் பசியால் மிகவும் அயர்ந்திருக்கிறீர், போய் நீராடிவாரும், போஜநம் செய்யலாமென்று சொன்னார். அப்படியே அவ்வேதியன் போய் நீராடி வருதலும். அவனைத் தமது பந்தியில் வைத்து, சிறந்த போஜநம் படைத்து, புரோஹிதர் சங்கற்பஞ்சொல்ல, வேதியர் யாவரையும் நோக்கி, நீங்கள் போஜநம் செய்யுங்களென்று பண்டிதர் சொல்லும்போது, பண்டரிபுரத்திலிருந்து வந்த வேதியன் கண்ணீர் பெருக்கிப பரிதபிப்பதைக் கண்ட மற்ற வேதியர்கள் திகைக்கக் கண்ட பண்டிதர் அவ் வேதியனைக் கிட்டி நீர் என் அழுகிறீரென்று கேட்க, அவன் என்மனைவி மக்கள் நாலுநாளாய்ப் பட்டினியிருக்கிறார்கள். இங்கே நான் உண்ணப் போகுஞ் சமயத்தில் அவர்களை நினைத்துக்கொண்டு அழுகிறேன் என்றான். அதைக்கேட்ட பண்டிதர், மிகவும் மன முருகி, ஐயரே, நீர் போஜநம செய்யும், உம்முடைய குடும்பத்துக்கு வேண்டிய அரிசி முதலிய சாமக்கிரிகள் வேண்டுமட்டும் கொடுக்கிறேனென்று சொல்லி, அவ்வேதியனைப போஜநஞ் செய்யும்படி செய்து, எல்லாரையும் மகிழ்வித்து, தக்ஷிணை தாமபூலம் பெற்று எல்லாரும் ஆசீர்வதித்துப் போனபிறகு, பண்டரிபுரத்திலிருந்துவந்த வேதியனுக்குத் தாம் சொன்னபடியே, பொதிகளில் தானியத்தை நிரப்பி, அவைகளை அவ்வேதியன் வீட்டிற்சேர்த்து வரும்பொருட்டுச் சில வூழியரையேவ, அவர்களும் அப்படியே கொண்டுபோய்ப பண்டரிபுரத்தை யடையவே, அங்குள்ளவரெல்லாரும் வந்து வளைந்துகொண்டு, சூறையிட்டுத் தானியத்தைச் சுமந்து சென்றார்கள். அப்போது அவ்வேதியன் கூகூவென்றலறி யழுதான். அதைக்கண்ட அந்த வூராரெல்லாரும்ஒருமிக்கக் கூடிவந்து வேதியனை நோக்கி, உனக்கு இந்தத்தானியத்தைக் கொடுத்தவர் யார் என்று கேட்க, வேதியன், தாமாஜி பண்டிதர் கொடுத்தா

ரென்று சொல்லி, நான் செய்த பாபத்தாலே எனக்குக் கிடைத்த தானியங்க ளெல்லாம் கொள்ளைபோயினவேயென்றுமனம்வருந்தி, மறுபடியும் தாமாஜி பண்டிதரிடத்துக்குப் போகும் போது, அந்த ஊரிலுள்ள மற்ற வேதியரெ ல்லாரும் இவனைப் பின்தொடர்ந்து போய்த் தாமாஜிபண்டிதருடைய வீட் டை வளைத்துக்கொண்டார்கள். அப்படி வந்து வளைத்துக்கொண்டவர்களைப் பண்டிதர் பார்த்து வணங்கினமாத்ரத்தில், வேதியரெல்லாரும் பண்டிதரை ஆசீர்வதித்து, பண்டிதரே, நாங்கள் சிறுவிலைக் காலத்தால் அநுபவிக்கிற துன்பஞ் சொல்லி முடியாது, இப்படிப்பட்ட காலத்தில் உமது உதாரகுண த்தையும், சமாராதநச் செய்கையையும் கேள்விப்பட்டு, உம்மைவந்தடுத் தோம், ஆதலால் எங்களுடைய பசிநோயைத் தீர்த்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். அவர்கள் சொல்லுகிற தீந வசநங்களைப் பண்டிதர் கேட்டு மனமிரங்கி, வேதியரே, நீங்கள் வருந்தவேண்டாம், உமது பசிநோயைப் பண்டரிநாதர் தீர்த்தருளுவாரென்று சொல்லித் தமதுவீட்டுக்குள்ளேபோய்த் தமது தர்ம பத்நியை நோக்கி, பண்டரி புரத்திலிருந்து அநேக வேதியர் பசியால் வருந்தி வந்து நமது வீட்டைச் சூழ்ந்திருக்கிறார்கள், அவர்களுக் கெல்லாம் பண்டரிநாதர் உங்கள் பசித்துன்பத்தைத் தீர்த்தருளுவாரென்று சொல்லி வந்தேன், அவர்களெல்லார்க்கும் அந்நமிட்டு உபசரிக்காமற் போ னால், அவர்களெல்லாரும் இறந்துபோவார்கள். ஆதலால் அவர்களுக்குக் கொடுக்கலாமென்றாலோ, நமதிடத்தில் தாநியங்கள் ஒன்றுமில்லை, இதற் கென்ன செய்வோம் என்று கேட்க, சற்பிற சிறந்த அவர் மனைவியார், கண வரது முகத்தைநோக்கி, ப்ராணநாதரே, எந்தவிதத்தாலாயினும் வந்தடை ந்தவர்களுடைய துன்பத்தைத் தீர்க்கிறது புண்ணியம் மிகுந்த நன்மையென்று சொல்ல, பண்டிதர் மனைவியை நோக்கி, நம்மிடத்தில் நமதுடையபொருள் ஒன்று மில்லையாயினும், அரசனுடையபொருளிருக்கின்றது, அதையெடுத்துக்கொ டுக்கலாம், அதையறிந்து அரசன் தண்டித்து என் னுயிரை வாங்கினாலும் இவர்களெல்லாம் உயிர்பிழைப்பார்களே அதுவே போதும், இவர்கள் பொரு ட்டு என் உயிரை விடுதல் மிகவுஞ் சிறந்தகாரியமென்று நினைக்கிறேன், நீ இங்கேயிரு, நான்போய் அவர்களைத் திருப்திசெய் தனுப்பிவிட்டு வருகிறே னென்று வெளியே வந்து அரசனது தாநியக்களஞ்சியத்தைத் திறந்து, வேதி யரை யழைத்து, உங்களுக்கு வேண்டிய தாநியங்களை யெடுத்துக் கொண்டு போகலாமென்று சொல்ல, அவர்களும் அப்படியே தமக்கு வேண்டிய மட் டும் கொள்ளைகொண்டு,பண்டிதரை வாழ்த்தி,ஒரு மாசகாலமவரைக்கும்பசித மில்லாமல் தானியங்களைக் கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். அவர்க ளுடைய வறுமையும்நீங்கிற்று;பண்டிதரும் நிந்தோறும் ஸ்ரீஹரிபஜனைசெ ய்துகொண்டு வாழ்ந்திருந்தார். இப்படி யிருக்கும்போது, அரசன் பொருள் முழுதும் கொள்ளை விட்டவராகிய பண்டிதருடைய செய்கை முழுதும் இவரிடத்தில் வேலைக்காரனா யிருந்த ஒருவன் எழுதி அரசனுக் கறிவித் தான். அதை யறிந்த அரசன் மிகவும் கோபித்து, என் பொருளை என் கட்

டனை பெருமல் இவன் எப்படிச் செலவிடலாம்? இவனைக் கொலை செய்வதே தகுதியென்று தீர்மானித்து, சில வீரரைத் தன்கைச் சீட்டோடு பண்டிதரிடத்துக் கனுப்ப, அவர்கள், பண்டிதரிடத்திற்கு விரைந்து வந்து, அரசன் கண்டித் தெழுதின சீட்டைக் காட்டி, நீர் விரைந்து வந்து அரசனிடத்திற் சேர வேண்டுமென்று கோபித்துச் சொல்லவே, பண்டிதரும் அப்படியே அரசன் கட்டளைப் படியே நீங்கள் செய்வது உங்களுக்குத் தகுதியான காரியமென்று, அவர்களோடு விரைந்து போய்ப் பண்டரி புரத்தை யடைந்து, வீரரை நோக்கி, ஸ்வாமியை வணங்கி வருகிறேன் என்று இன்சொற் சொல்லி, சந்திரபாகையில் நீராடிக் கோயிலை யடைந்து, சந்நிதியிலுள்ள கருட ஸ்தம்பத்தின் அருகே நின்று வணங்கி, செங்கல் மேல் நின்ற திருக்கோலமா யெழுந்தருளியிருக்கிற பாண்டுரங்கப் பெருமானை அஞ்சலி செய்து தோத்திரித்து, திருமேனியைத் தழுவிக் கொண்டு, இன்று உன் சேவை முடிந்தது அடியேனைப் பரிகரித்த ருளேன் என்று சொல்லி, பெருமானது திருவுருவ முழுதும் விருப்பத்தோடு நோக்கி, அன்பு மிகத் தமது மனத்தில் அமைத்துக் கொண்டு, கண்களில் நீர் ததும்பத் திருவடி வணங்கி, போய் வருகிறே னென்று விடை கொண்டு, ஸ்ரீதேவி பூதேவி முதலான தேவிமார்களுடைய சந்நிதிக்கெதிரே நின்று, பெரிய பிராட்டியாரைத் தொழுது தோத்திரித்து, பிறகு மற்றப் பிராட்டி மாரையும் வணங்கி, பிறகு கருட பகவானையும் வணங்கி, உன் திருமேனி முழுதும் வேத ரூபமாயிருக்கின்றது, உன் மீது எழுந் தருளுவோன ஸ்ரீ க்ஷீராப்தி நாதன், ஆதலால் உன் பெருமையைச் சொல்ல யாவரால் முடியும்? உன்னை யல்லது என் மனத்துக் கிசைந்த பொருள் வேறொன்று மில்லை யென்று வாழ்த்திப் புகழ்ந்து, அவ்விடம் விட்டு ஆஞ்சநேயர் ஸந்நிதிக்கு வந்து அவரை வணங்கி, உயிருக்குயிராய் நிறைந்திருக்கிற பகவானுனவர், எல்லாருடைய வுயிர்களையும் தரவல்ல சமர்த்தன் என்றல்லவோ, உனக்கு சஞ்சீவியையும் சிரஞ்சீவியையும் கொடுத்தருளினுர் என்று தோத்திரம் பண்ணி, வெளிப்பட்டு, வீரரோடு போகலுற்றுர்; இப்படி வீரரோடு கூடிப் போகிற பண்டிதரை அந்த நகர ஜனங்கள் கண்டு, மனமவருந்தி, கண்களில் நீர் ஆருயப்பெருகநின்று, எங்களுடைய உயிர்களெல்லாம் அழியாமற் காப்பாற்றின இந்த மஹாத்மாவுக்கு இப்படியும் நேரிடலாமோ? இதைக்குறித்துப் பாண்டுரங்க பகவான் என் செய்யத் திருவுளங்கொண்டிருக்கிருரோ, அறியோம் என்று பற்பல வகையாய்ப் பேசிக்கொண்டு சூழ்ந்துவர, பண்டிதரும் ஸ்ரீ கண்ணபிரானைத் தமது திருவுளத்தமைத்துக்கொண்டு அரசனிடத்துக்கு வந்தார்.

இப்படி இவர் போய் அரசனை யணுகு முன்னே, ஸ்ரீபண்டரிநாதர் விரைந்து இவரது துன்பத்தை நீக்காமற்போனல், பக்தபரிபாலநன், தீனரக்ஷகன் என்னும் பெயர்கள் எனக்குத் தகுமோ, தகாமற் போவதேயன்றி அப்பெயர்களுக்கும் தாழ்வு வரும் என்று திருவுளமபற்றி, ஜீர்ணவஸ்திரம் தரித்து, தலையை மூடின கம்பளியின் கயிறுகள் கழுத்தில் தொங்கவும், கோவணம்

தொங்கவும், ஒரு தடியானது கையில் விளங்கவும, பாதங்களில் செருப்பு விளங்கவும், பண்டிதர் எழுதிக்கொடுத்த பத்திரம் ஒரு கையில் விளங்கவும், நீல நிறமாகிய திருமேனியோடு, வெட்டியானென்று கண்டோர் சொல்லும்படி வேஷம் பூண்டு புறப்பட்ட ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானை, ஸ்ரீ பெரிய பிராட்டியார் கிட்டி நின்று, அருளே திருவுருவாகப் பெற்ற பகவானே! இப்படி நாணம்விட்டு,நீயிந்தக்கோலங்கொள்வதற்குக்காரணம யாதென்றுவினவ, தேவராஜனாகிய பகவான் திருமகளை நோக்கி, மேல்விளையத்தக்க காரியத்தை நீ சிறிதும் அறிந்திலை, நமதூரிலுள்ளார் சிறுவிலைக்காலத்தால் வருந்தின வருத்தத்தை நீக்கிக் காப்பாற்றின உனது அன்பராகிய தாமாஜி பண்டிதரைக் கொலை செய்வதற்காக அரசன் ஏவின வீரர்கள் அழைத்துக்கொண்டு போகிறார்கள். அந்தப் பண்டிதர் தம்மை எமது வசத்தில் ஒப்புவித்து இருப்பவராகையால் அவருக்கு நேரிட்ட இந்த ஆபத்தை நீக்கும்பொருட்டு நான் இந்த வேஷம் பூண்டதனால் எனக்கு ஒருதாழ்வும்நாணமும இல்லை என்றுசொல்லி ஒருபெரிய பணப்பையைத்தமதுதலைமீதுவைத்துக்கொண்டுபோய்,பேதரிமா நகரத்தை ஆள்கின்ற அரசனுடைய அரண்மனை வாயிலையடைந்து, தமது வரவை அரசனுக்கு அறிவிக்கும்படி வாயில் காவலரோடு சொல்ல, அவர்களும் அப்படியே போய் அரசனுக்குத் தெரிவிக்க, அரசனும உள்ளே வரும்படி கட்டளையிட, அழைக்கவந்தவரோடுகூடிச் சென்று அரசனுக்கு எதிரில் நின்று சலாம் செய்தார். அவரைக்கண்ட அரசன் நீ யார் என்று கேட்டவுடனே, சர்ப்பசயனனாகிய ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் அரசனை நோக்கி, நான் ஒரு வெட்டியான், என் பேர் விடோபா நாகன், என் கையில் உள்ளது தாமாஜி பண்டிதர் கொடுத்த பத்திரம என்று சொன்னார். உடனே அரசன் அந்தப் பத்திரத்தை வாங்கிப் பிரித்து அருகில் இருப்போரைக்கொண்டு வாசிப்பித்து, அதில் பண்டிதர் இப்போது நேரிட்ட பஞ்சகாலத்தில் தானியங்கிடைக்காமல் உயிர்கள் வருந்தி இறப்பதைக் கண்டு அவர்களின் துன்பத்தை நீக்கும்பொருட்டு நமது களஞ்சியத்திலிருந்த தானியங்களை எல்லாம அவர்களுக்கு விற்று, வந்த பணத்தை எல்லாம் ஒரு பெரிய பையில் நிறைத்துக் கட்டி என் வெட்டியான் வசமாக அனுப்பியிருக்கிறேன், ஆதலால் அந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்டு ஒரு ரசீது எழுதி அனுப்பவேண்டும என்று எழுதியிருப்பதை அரசன் அறிந்து, பணம முழுதும் தருவாயாக என்று கேட்க, வெட்டியான் வேஷம் பூண்டுவந்த பகவானானவர் அரசன் கேட்டபடியே பணப்பையை அவனுக்கு எதிரேவைத்து அவிழ்த்துக்கொட்டி எண்ணிக்கொள்ளும்என்றார். அப்போது அரசனைக்கிட்டி நின்றவர்கள்அந்தப் பணத்தை எண்ணி இலக்ஷத்து ஐம்பத்து நாலாயிர வராகன் என்று தொகை செய்து, அதற்கு மேலும் உள்ள பணத்தை எண்ணி எண்ணிக் கைசலித்து,எண்ண முடியாமல்அதே பையிலேயே போட்டுக்கட்டி பொக்கிஷத்தில் கொண்டுபோய் பத்திரப் படுத்தினார்கள். ஆனால் இவர்கள் பகவானுடைய மாயா விசேஷத்தால் இவ்வளவு தொகையுள்ளபொருள் இந்த ஒரு

பையில் அடங்குமோ என்று யோசிக்கவில்லை. இது இப்படியிருக்க, அரசன் கீழ்க் கணக்கனாகிய ஒருவன் எழுதின சொல்லை மதித்துத் தூதரை அனுப்பினேன், இப்படி நன்மையாக நீர் அனுப்புவதை அறிந்திலேனென்று இனிய சொற்களை எழுதி அதற்குமேல் எனக்குச் சேரவேண்டிய பொருள் எல்லாம்சேர்ந்தன, ரசீதும் அனுப்பியிருக்கிறேன்,பெற்றுக்கொள்வீராகவென்று எழுதிக் கொடுத்து, பல்லக்கும பலவகையான செல்வமும் பண்டிதருக்குக் கொடுக்கும்படி வெட்டியான் வசத்தில் ஒப்புவித்து வெட்டியானுக்கும் வேண்டும பொருள்களைப் பரிசு கொடுத்து, நீ மங்களவேஷம் என்னும் ஊடா அடைவாயாகவென்று விடைகொடுத்து அனுப்ப, ஸமாநாதிகர ஹிதராகிய பகவானானவர் திருவுள்ளமகிழ்ச்சியோடு பண்டிதர் வீட்டுக்குப்போய் அரசன் தந்த பொருள்களையெல்லாம் அவர் வீட்டில் வைத்து ரசீதையும் அவர் மனைவியார் கையில் கொடுத்து மறைந்தருளினார். அதன்பிறகு பண்டரி புரத்திலிருந்து வந்த பண்டிதர், கொலைவீரரோடுவர, அவரையெதிர்கொண்டுபோய்த் தழுவிக்கொண்டு, நீர் அனுப்ப, பெரும்பொருள் கொண்டுவந்த வெட்டியான் என்னிடத்தில் பொருள் கொடுத்து ரசீதும் பெற்று வந்தான், அவன் வழியில் எதிர்ப்படவில்லையோவென்று சொல்லி, பண்டிதரே, எனக்குக்கொடுக்க வேண்டிய பொருளுக்காக நீர் எழுதின பத்திரத்தைப் பாரும் என்று கொடுக்க, பண்டிதர் அதை வாங்கிப் பார்த்து, இந்தச் செய்தி முழுதும் ஸ்ரீ பண்டரிநாதனது பெருங்கருணையால் நிகழ்ந்ததாகத் தெரியவருகின்றது. என்று ஆலோசித்து, பகவானைக் குறித்து, உலகமுண்ட பெருவாயனே! பொன் மகுடம் அணியத்தகுந்த உன் சிரசில் பழம்பாகையைத் தரித்துப் பணப் பையைச் சுமந்தாய், ரத்னஹாரந் தரித்து விளங்குகிற திருக்கழுத்தில் கம்பளக்கயிறு விளங்கப் பூண்டாய்; சங்க சக்ரங்கள் விளங்குகிற திருக் கரத்தில் தண்டத்தைத் தரித்தாய், பட்டுவஸ்திரமுடுத்து விளங்கும்திருவரையில் அழுக்கு மிகுந்த கோவணத்தை யுடுத்தாய், தேவர்கள் எல்லாரும் தாழ்ந்து வணங்குகின்ற திருவடியில் செருப்புத் தரித்தாய், என்பொருட்டாகப் பேசத் தகாத தாழ்ந்தவார்த்தைகளை அரசனிடத்திற் பேசினாய், என்பொருட்டாகத் தலை கடுக்கப் பணப் பையைச் சுமந்தாய், திருப்பாற்கடலில் ஓராலிலையில் அறிதுயிலமர்ந்தவனே! புருஷோத்தமனே! பத்மநாபா! பக்தபரிபாலகா! பண்டரிபுரத்தில் நிலைபெற்ற கற்பகக் கனியே! என்று இவ்வாறு பலவிதமாய்ப் புலம்பிக் கண்ணீர் பெருக்கி, திருத்துழாய் மாலையை யணிந்த பகவானைக் கருத்திற் பதித்து மயங்கி நின்றார். இவருடைய கருத்தைக் கண்டுகொண்ட அரசன் முதலாகிய எல்லாரும் ஆச்சரியமடைந்து, பொன் கொண்டுவந்தவன் மாதவனே யென்று முன்னமே யாம் அறியாமற் போனோம்; அவ்வளவு தொகையை ஒரு பை யேற்குமோ? அவ்வளவு பெரும் பளுவை ஒரு தலைதான் சுமக்குமோ? இப்படி இவ்விடத்தில் நடந்த அற்புதங்கள் யாவும் பண்டிதர் செய்த தவப்பயனாலேயே நிகழ்ந்தனவாகவேண்டும் என்று தெளிந்து, அவரை வணங்கித் தோத்திரஞ்செய்து நிற்க, பண்டிதரும், என்

பொருட்டாக பகவான் இப்படி செய்யத் தகாத காரியத்தைச் செய்தாரே என்று பரிதபித்து, பிறகு வேந்தனை நோக்கி, எனக்கு விடை கொடுக்க வேண்டுமென்று கேட்க, அரசன் பண்டிதரை நோக்கி, கேளும் பண்டிதரே! ஸ்ரீலக்ஷ்மீநாதனாகிய பகவான் உமக்கு ஆளாகவந்தார். அந்த அவாங்மாநஸ கோசரராகிய பகவானை நாங்களெல்லாருங் கண்டு கடைத்தேறச் செய்தீர்; ஆதலால், எம்முடைய பணிவிடைகளை யேற்றுக்கொண்டு இவ்விடத்திலே யெழுந்தருளி யிருக்கலாமென்று சொல்லிப் பிரார்த்திக்க, பண்டிதர் அவ்வரசனது வேண்டுகோளுக்குடன் படாமல் பண்டரிபுரத்துக்குப் போய், பகவானைக் கண்களிகூரக்கண்டு சேவித்து, தேவதேவனே! பாபியாகிய என்பொருட்டு ஓர் அரசன் சபைக்கெழுந்தருளி, அவனுக்கும் அவன்சபையிலுள்ள எல்லாருக்கும் சேவை தந்தருளினாய், அந்த சேவையை அடியேன் கண்டு களிக்கப் பெற்றிலேன் என்று கண்ணீரால் திருவடி விளக்கி, மூன்றடி மண்ணை மஹா பலியினிடத்தில் யாசித்துக்கொண்ட வாமந மூர்த்தியே! உன்னை யெப்பொழுதும் மறவாதிருக்கிற எனக்கெதிரே நீலமேக வர்ணனாகி, ஏன் எழுந்தருளுகிறதில்லை என்று சொல்லித் தோத்திரஞ் செய்துகொண்டிருக்கிற பண்டிதருடைய உண்மை நிலையை யறிந்த அவ்வரசன, பண்டரிபுரத்துக்கு வந்து இவரைக் கண்டு, பரமாத்மனாகிய பண்டரிநாதனை இன்னும் ஒருதரம் எமது கண்களிக்கக் காணும்படி க்ருபைசெய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, தீபமானது தூண்டுகோலால் மிகவும் சுடர்விட்டு விளங்குவதுபோல அரசன் ப்ரார்த்தனையால் தமக்கும அந்தப்பண்டரிநாதன் அரசனுக்குப் பொன்கொண்டுவந்து கொடுத்த திருக்கோலத்தைச் சேவிக்க வேண்டுமென்கிற விருப்பம் மிகுதியாக வுண்டானதனால், அன்பு மிகுந்து, செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய ஸ்ரீமந்நாராயணனைப் பலமுறை வாழ்த்தி வணங்கவே, பக்தவத்ஸலராகிய பகவானனவர், முன்னே அரசனிடத்துக்குப் பொருள் சுமந்து போன திருவுருவோடு எழுந்தருளி, பண்டிதருக்கும அரசனுக்கும காட்சி கொடுத்தருளினார்; அந்தத் திருக்கோலத்தைப் பண்டிதர் கண்டு, ஸ்ரீகண்ண பிரானே! உன் திருவருளின் தன்மை யிதுதானோவென்று திருவடியில் வீழ்ந்துவணங்குதலும, அந்தப் பகவான் அவரைத் தழுவிக்கொண்டு அன்புபாராட்டித் தமது திருப்பதியாகிய பண்டரிபுரத்துக் கெழுந்தருளினார். பிறகு அரசன் பண்டிதரை வணங்கி அவரை ஞானாசிரியராகக் கொண்டு அவரிடத்தில் மேன்மையாகிய பொருளை யடையும்படியான நற்புத்தியில்லாமையால் தன் ஊர்க்குப்போய்விட்டான். அதன்பிறகு பகவத் தாஸராகிய பண்டிதர், தமது குடும்பத்தையும உடன்கொண்டு பண்டரிபுரத்துக்குப்போய், அவ்விடத்திலுள்ளாரெல்லாரும இவரது வைபவத்தை யறிந்து துதிக்க, இடையறாமல் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ம்ருத்யுஞ்சய பக்தர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

தாமாஜி பண்டிதர் சரித்திரம் முற்றிற்று.

# ந௫-வது மிருத்யுஞ்சய பக்தர் சரித்திரம்.

சாந்தபமணி யென்னும் பெயர்பெற்ற ஒரு துருக்கன் பேதரி நகரத்துக்கு அரசனாகி அரசாட்சி செய்து வருங்காலத்தில், ஒரு நாள் தன் மனையாளோடு மாளிகையின்மேல் ஒப்பரிகையிற்போய்ப் பரிமள த்ரவ்ய மணிந்து, சரசசல்லாபமா யிருந்து, வாழைக்கனியை யுரித்துச் சர்க்கரையில் தோய்த்துத் தானும் அருந்தித் தன் மனையாளுக்குங் கொடுத்து, அக் கனிகளின் தோலைச் சாளரவழியாகக் கீழெறிய, அங்கே ஒரு வறியவனிருந்து, அந்தத் தோலை யெடுத்து வாயிலிட்டு மென்று, இது மிகவும் சுவையாயிருக்கிறதென்று உண்பதை அரசன் மனைவியானவள் பார்த்து, அரசனுக்குக்காட்ட, அரசன் கோபங் கொண்டு, இந்தக் காவலோடு கூடிய அரண்மனைக்குள்ளே இவன் எப்படி வந்தானென்று சில காவல் வீரரை யழைத்து, இவனை யார் உள்ளே விட்டது என்று தண்டித்தலும்; அவர்கள் அந்த வறியவனைக் கைசலிக்க அடித்தார்கள். அந்த அடிகளைப் பொறுத்துக்கொண்டு அவன் சிரிப்பதை அரசன் பார்த்து, ஆச்சரியப்பட்டு, அவனைத் தன்னிடத்திற்கு வரவழைத்து, அவனை நோக்கி, நீயிவ்விடத்தில் வந்ததற்காக உன்னைப்பிடித்து நன்றாயடிக்கும்படி காவல்வீரரை யேவினேன், அவர்களும் அப்படியே செய்தார்கள், அவர்கள் அடித்த அடிகளுக்காக நீ வருந்தாமல் சிரிக்கிறாய், இது என்னவென்று கேட்க, அவ் வறியவன் அரசனை நோக்கிச் சொல்லுகிறான். எப்படியென்றால், உரித்தெறிந்த தோலின் சுவையை யநுபவித்த எனக்கு உண்டான பயன் இந்த அடிகளானால், அந்தத் தோலினுள்ளே யிருந்த கனியின் சுவையை யநுபவித்த வுனக்குண்டாகும் பயன் யாதோவென்று சிரித்தேன், மேலும், உன் மனைக்கு வெளியே யிருந்த எனக்குக் கிடைத்த பயன் இதுவானால், மனைக்குள்ளே யிருக்கிற வுனக்குக் கிடைக்கும் பயன் யாதோவென்றும் சிரித்தேன் என்று சொன்னான். இதைக் கேட்டவுடனே, அரசன் மிகுதியாகிய விரக்தியை யடைந்து, அரண்மனையைவிட்டு வெளியேவந்து அரசாட்சியையும், மனைவி மக்களையும் வெறுத்துக் காட்டுக்குப் போய், ஒரு பக்கத்திலிருந்துகொண்டு, தெய்வத்தைப் பணிந்திடும்விதம் யாது? ஜநந சாகரத்தைக் கடந்து மோக்ஷ தீரத்தை யடையும் விதம் யாது? எனக்குக் கடைத்தேறும் வழியை யுபதேசிக்கிற ஆசிரியனை யடையும் விதம் யாது? என்று இப்படிப் பலவிதமா யெண்ணி, அந்தக் காட்டில் திரிந்துகொண்டிருக்குங் காலத்தில், பண்டரிபுரத்தில் ஆடிமாசத்து ஏகாதசியாகிய விசேஷதினத்தில் பண்டரி நாதரைச் சேவிக்கவேண்டுமென்று அநேகம் பாகவதர்கள் தாளம், ம்ருதங்கம் முதலாகிய வாத்ய விசேஷங்களோடு ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு கருடக்கொடிபிடித்து அவ்வழியாய்வருவதை அரசன்கண்டு, அவர்களெதிரில் வீழ்ந்து வணங்கி, எழுந்து நின்று, அவர்களிடத்தில் அன்பு மிகுந்தவனாய், இவர்கள் இவ்வழியாய் வந்ததனால் இது சுதினமாகுமென்று

மகிழ்ந்து அவர்களைத் தொடர்ந்து பண்டரிபுரத்தை யடைந்து, சந்த்ரபாகா நதியில் முழுகி, புண்டலீகரை வணங்கி, அந்த க்ஷேத்ரத்தை வலம் வந்து, ஸ்ரீ கோபாலஸ்வாமி எழுந்தருளியிருக்குங் கோயிலுக்கெதிரே நின்று, சாதுஜநங்கள் செய்கிற ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநத்தைச் சிரத்தையோடு கேட்டு, பந்தங்களைச் சேதித்தவர்களாகிய அடியார்களைப் பணிந்து, ஆநந்தக் கடலில் முழுகி, பெருமகிழ்ச்சியினால் சொல்லுகிறான். எப்படியென்றால், இவ்வுலகத்தில் அநேக தீர்த்தங்களையும், க்ஷேத்ரங்களையும், தெய்வங்களையும் கண்டேன், ஆயினும் இந்தப் பண்டரிபுரம்போல எங்குமில்லை, இந்தச்சந்த்ரபாகா நதியில் ஒருதரம் முழுகினவன் எல்லாப் பாபராசிகளையும் நீறாக்குவான், எப்படிப்பட்ட துர்ப்புத்தி யுள்ளவனாயினும் இந்த க்ஷேத்ரத்தை யடைந்து ஒருநாள் வாசம்பண்ணினால் அவன் புநிதனாய்விடுவான், இவ்வித நன்மை யமைந்த தீர்த்த க்ஷேத்ரங்களின் மஹிமைகளைச் சொல்ல வல்லவர் யாவர் என்று சொல்லி, சரீரம் புளகம்கொண்டு, கருட ஸ்தம்பத்தினருகே வந்து தலை தாழ்த்தி வணங்கி, அவ்விடத்திற் கூடியிருந்த சாதுக்களை வணங்கித் தழுவிக்கொண்ட பிறகு, திவ்ய ரூபத்தோடு செங்கல்லின் மேலெழுந்தருளியிருக்கிற பரஞ்சுடராகிய ஸ்ரீ கண்ணபிரானைக் கண்களிகூரக் கண்டு தழுவி, இரண்டு திருவடியின் கீழே விழுந்து, வாமநா, பதிதபாவநா, புருஷோத்தமா, ஹே கோபாலா, ஹ்ருஷீகேசா, பரந்தாமா, பாண்டுரங்கா, கருணாகரா, உன் வைபவத்தைக் கேட்டு வந்து உன் திருவடியிற் சரண்புகுந்தேன், உன் திருவுருவம் என் மனத்தில் விளங்கித் தழைக்கச் செய்வோரைப் பெறாமையால் அலைகிறேன், ஆகையால், போதகர் கிடைத்து என் மநோரதம் நிறைவேறும்படி கருணை செய்யவேண்டும், நீ இந்த வரத்தை எனக்கு அருள் செய்கிற வரைக்கும் உன் கோயில் வாயிலை விட்டு நீங்க மாட்டேன் என்று ப்ரார்த்தித்து, நிலத்தில் வீழ்ந்து, ஜலபாநம் முதலானவையில்லாமல் கிடக்க, கருணைக் கடலாகிய பகவானானவர், மூன்றாநாளிரவில் அவன் கனவில் வந்து, கல்யாணபுரத்தில் வாழ்கின்ற ஸஹஜாநந்த சுவாமிகளிடத்திற் போய், உபதேசம் பெற்றுக்கொள்ளக் கடவை யென்று சொல்லிப் போயினர் போனவுடனே, அரசன் கண் விழித்து அருகேயிருந்த புத்தகத்தை நோக்கி, ஜ்ஞாநவிவேகசிந்து என்பது இதுதானோ வென்று வியந்து, பாண்டுரங்கப் பெருமானாகிய தீநதயாளன், தன்கருணையால் என்னைப் பரிபாலநஞ் செய்தானென் றெண்ணி, அந்தப் புத்தகத்தை ஏகாந்த ஸ்தலத்திலிருந்துகொண்டு படித்து மநநம் செய்கிற காலத்தில் தான் கண்ட கனவை நினைத்துக் கல்யாணபுரத்துக்குப் போய்க் கண்ணபிரானது திருவடியை வணங்கி, விடைபெற்று, குருவினிடத்தை யடைந்துதேட, அவர் அங்கே யில்லாதிருக்கக் கண்டு, மீண்டு, பண்டரிபுரத்தில் தங்கியிருக்கும் நாளில், கார்த்திகை யேகாதசி நேரிட, அந்தக் காலத்தில் குருவானவர் பண்டரிபுரம் வந்து சேர்ந்தார். அந்தக் குருநாதரை அரசன் கண்டு, தான் கண்ட கனவின் செய்தியைச் சொல்ல, குருநாதரும் மன மகிழ்ந்து,

அரசனுக்கு உபதேசம் செய்து, ம்ருத்யுஞ்சயர் என்கிற பெயரையுஞ் சூட்டி
னார். அப்படி உபதேசமும் ம்ருத்யுஞ்சயர் என்கிற பெயரும் பெற்ற அர
சன், நாரணபுரத்தில் வந்து, கேட்டதை மநநஞ் செய்துகொண் டிருந்து
தெளிந்து சாக்ஷாத்கார மடைந்து, விஜ்ஞாந நிலையோடுகூடி விளங்குங் கால
த்தில், அந்த வூரிலுள்ள பவராயர் என்னும் பெயரையுடைய ஒரு ஜங்கமர்
வந்து இவரிடத்தில் உபதேசம் பெற்றார். இந்த ஜங்கமர்களிற் சிறந்த சமூ
ச்சி யென்பவ னொருவன், தன் ஜாதியானாகிய பவராயன் ஒரு துருக்கனிடத்
தில் உபதேசம் பெற்றான். இது என்ன புதுமை! செருப்புப் புதியதென்றா
லும் தலைமே லேற்றிக் கொள்ளலாமா? இவனது நடத்தை கூடாததா யிருக்
கின்றதென் றிகழ்வதைக் குறித்து, அந்தப் பவராயன் என்னும் ஜங்கமன்
தனது ஆசிரியராகிய ம்ருத்யுஞ்சயரிடத்திற் சொல்ல, அவர், இந்தச் சீட
னது மனம் திடப்படும்படி சொல்லுகிறார். அப்பா, மதம்பிடியானவன் சொல்லு
வதை நீ மனத்திற் கொள்ளவேண்டாம்; நீ என் சொல் வழியில் நின்று,
நாள் தோறும் ஸ்ரீ ராம பஜனை செய்துகொண் டிருக்கக் கடவாயென்று நிய
மித்து மேலும் சொல்லுகிறார். வெண்ணீறணிந்த ஜங்கமர்களுக் கரசனாய்க்
காசிபதி யென்னும் பெயருள்ளவன் ஒருவனிருந்தான். அவன் நாள்தோறும்
பதினாயிரம் ஜங்கமரைக் கூட்டுவைத் தண்பவனா யிருந்தான். அப்படி யிருக்
கையில், ஒரு நாள் ஜங்கமரெல்லாரும் வாதுண்ணும் பொருட்டு அநநம், கறி
வகைகள் யாவும் இலைகளில் பரிமாறின பிறகு, அந்தக் காசிபதி யென்னும்
அரசன் அந்தப் பந்தியில் உட்கார்ந்திருக்கிற ஜங்கமரை நோக்கி, நீங்கள்
யாவரும் சதாகாலமும் ஸ்மரித்துக்கொண் டிருக்கிற தெய்வத்துக்குப் பூஜை
செய்யுங்க ளென்று சொல்ல, அவர்க ளெல்லாரும் தமது கழுத்திலணிந்திரு
ந்த லிங்க முடிகளையும் பெட்டிகளையும் அவிழ்த்தும் திறந்தும் பார்த்து,
லிங்கங்கள் இல்லாதிருக்கக் கண்டு திகைத்தார்கள். அப்படித் திகைத்து
அமுது செய்யாது வருந்துங் காலத்தில், அரசன் கண்டு, என்ன செய்தி
யென்று வினவ, அவர்கள் லிங்கங்கள் காணப்படாத செய்தியைச் சொல்ல,
அவன் இது சாது தூஷணைத்தால் நேர்ந்ததே யன்றி வேறொன்றினாலும்
உண்டானதல்லவென்றான். அப்போது சமூசி யென்னும் ஜங்கமன், துலு
க்கனிடத்தில் பவராயன் உபதேசம் பெற்றானென்று நான் சொன்னேனென்
றான். அதைக் கேட்ட ஜங்கமரெல்லாரும், பவராயனுக்கு ஆசிரியரா யிருக்
கிற ம்ருத்யுஞ்சயரிடத்திற் போய், நடந்த செய்தியைச் சொல்லி வணங்கி
னார்கள். அந்தத் தேசிகோத்தமர், இந்த மடத்தில் வேதாந்தம், சித்தாந்தம்
என்னும் இரண்டு நாய்களுண்டு; அவையே இந்த லிங்கங்களை யெல்லாம்
திருடிக்கொண்டு வந்து விழுங்கி விட்டனவென்று நினைக்கிறேன் என்று
சொல்லி, அவற்றை யழைக்க, அவற்றில் ஒன்று வந்து எதிரே நிற்க, அதை
நோக்கி, நீ யுண்ட லிங்கங்களைக் கொடுவென்று நியமிக்க, அந்த நாய், ஐயா
யிரம் லிங்கங்களைக் கக்கி நின்றது. மற்றொரு நாயை யழைத்து நியமிக்க,
அதுவும் அப்படியே ஐயாயிரம் லிங்கங்களைக் கக்கி நின்றது. அப்போது ஜங்

கமரெல்லாரும், தத்தம் இலிங்கங்களைத் தெரிந்தெடுத்துக் கொள்ளமாட்டாமல் மயங்கித் தேசிகோத்தமரை ப்ரார்த்திக்க, அவர் தமது, ஜ்ஞாநக்கண்ணினால் தெரிந்தெடுத்து அவரவர்களுக்கு அருள் செய்தார். அவைகளைப் பெற்றுக்கொண்ட ஜங்கமரெல்லாரும், தேசிகோத்தமருடைய திருவடியை வாழ்த்தி வணங்கி, அவருக்கு ஜ்ஞாநசாகரர் என்றொரு சிறப்புத் திருநாமஞ் சூட்டின பிறகு, அரசனும் அவரை வணங்கி விடைபெற்றுத் தன் வீட்டுக்குப் போய், சிவலிங்கத்தைப் பூசித்து, அமுதுண்டு இனிது வாழ்ந்திருந்தான் என்று சொல்லி மேலே பாநுதாஸர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

மிருத்யுஞ்சய பக்தர் சரித்திரம் முற்றிற்று.

## நகரு-வது பாநுதாசர் சரித்திரம்.

எல்லாராலும் புகழ்ப்பெற்ற பைடணபுரி யென்னும் பட்டணத்தில் வசிப்பவரும், தினந்தோறும் சூரிய பூஜை செய்பவரும், வேதியரிற் சிறந்தவரும் ஆகிய ஸுஜ்ஞாநர் என்றொருவரிருந்தார். அவருக்கு ஒரு ஸுபுத்திரர் பிறந்து வளர்ந்து வருங்காலத்தில், அந்தந்தப் பருவங்களுக்கேற்க, அந்நப்ராசநம், சௌளம், உபநயநம், வேதாத்யயநம முதலிய எல்லாவற்றையுங் கிரமமாக நடத்தி வந்தார். ஆனால் வேதாத்யயநம் மாத்திரம் தந்தையே செய்வித்து வருவதில், ஒருநாள் அந்தப் பாட விஷயத்தில் சிறிது கோவங்கொண்டார். புதல்வர் அந்தக் கோவத்துக் கஞ்சி, வீட்டை விட்டு வெளிப்பட்டு, எங்கே போய் ஒளித்துக்கொள்வோம் என்று ஊருக்கருகே யிருக்கிற ஒரு காட்டை யடைந்து, அவ்விடத்தில் மண்ணிற் புதைந் திருந்த சூரிய நாராயணன் கோயிலைக் கண்டு, அதற்குள்ளே புகுந்து, சூரிய நாராயணப் பெருமானை மிகுந்த அன்போடு வணங்குதலும், அந்தச் சூரிய நாராயணன் ப்ரத்யக்ஷமாகி, உன் அன்புக்கு மகிழ்ந்தேன், நீ முகுந்தனை த்யாநித்துக் கொண்டிருவென்று சொல்லி, பாலைத் தங்கவட்டிலிற் கொண்டுவந்து அந்தப் பாலகர்க்கு அருத்தி, மைந்தனே! உனக்கு யாதேனும இடையூறு நேர்ந்தால் அதை நானே வந்து நீக்குவேன் என்றுசொல்லி மறைந்தார். பிறகு அந்தச் சிறுவருடைய தாய்தந்தையர்கள் ஏழுநாள் வரைக்கும ஊர்முழுதும தேடிக் காணமல் மனந்தளர்ந்திருந்தார்கள். அந்த ஏழாநாள் இந்தச் சிறுவர் கோயிலினுள்ளே யிருந்து வெளியே வரக்கண்ட ஒரு வேதியன் போய்க்கிட்டி இவரை யழைக்க, இவர் விரைந்து போய்க் கோயிலினுள்ளே ப்ரவேசித்தார். அந்த வேதியன் உடனே போய்த் தாய்தந்தையர்க்கு இந்தச் செய்தியைச்சொல்ல, அந்தத் தாய்தந்தயர் சிலரை அழைத்துக்கொண்டு விரைந்துபோய் அந்தக் கோயிலுககருகே இருள் நீங்கும்படி தீவர்த்திகள் கொளுத்திக்கொண்டு, உள்ளே ப்ரவேசித்துப பார்த்து, சிறுவர் சூரிய நாராயணன் திருவடியில் தலை வைத்துப்படுத்திருப்பதைப் பார்த்து, ஆச்சரியப்பட்டு, புதல்வரையெடுத்து மார்போடணைத்து, பாலகனே! நீ தனியே யிங்குவந்து தங்கியிருக்கக்காரணம்

யாது ? ஏழு நாளாய் உணவில்லாமல் எப்படி யிருந்தாய்? உன்னை யிங்கே காப்பாற்றினவர் யார் என்று கேட்க, சிறுவர் இங்கே ஒரு வேதியர் தினந்தோறு மதுரமான பாலைத் தங்கவட்டிலிற் கொண்டுவந்து கொடுக்க, உண்டு பசியாறி யிருந்தேன் என்று சொல்லக் கேட்ட தாய்தந்தையர் முதலானோர் அதிசயித்து, ஆலோசித்து, இந்தச் சிறுவனது நற்குணத்தைப் பார்த்து, சூரிய நாராயணனே பால் கொண்டுவந்து கொடுத்துக் காப்பாற்றினான் என்று நிச்சயித்து, இவருக்குப் பாநுதாசர் என்று பெயரிட்டு, அழைத்துக் கொண்டு தமதுவீட்டுக்குவந்து சேர்ந்தார்கள். சேர்ந்த தாய்தந்தையர்கள் இச் சிறுவனைச் சூரியநாராயணனே நமக்குக்கிருபைசெய்தாரென்று அந்தச் சூரிய நாராயணனைத் தோத்திரம்பண்ணிக் கொண்டிருக்க, தந்தையானவர் இந்த மைந்தனுக்கு வேதாத்யயநம் செய்விக்கத் தொடங்கினால், முன்போல நேரிட்டால் என்ன செய்வோமென்றும், விதிப்படி யாகக்கடவதென்றும் நிச்சயித்துக்கொண்டு, அந்தச் சிறுவனுக்கு மணமுடித்து வைத்தார். பிறகு அந்தச் சிறுவர் ஸ்ரீ பகவானுடைய ஸ்மரணையே மேலிட்டு, ப்ரபஞ்சப்பற்று முழுதுமற்றிருக்கக் கண்ட தந்தை தாயர்கள் ஸ்ரீவநமாலாதரராகிய ஸ்ரீகண்ண பிரானுடைய க்ஷேத்ரமாகிய பண்டரி நகரத்தை யடைந்தார்கள். பிறகு சிறுவராகிய பாநுதாசர் ஒரு தொழிலையுஞ் செய்யாதவராயும் வறுமையால் அந்த வஸ்திரமில்லாதவராகியும் நிர்மலனாகிய பகவானுடைய திருவடியை மறவாமல் ஸ்ரீஹரி பஜனை செய்துகொண்டிருந்தார். இவர் இப்படியிருப்பதை இவருடைய பந்துக்கள் அறிந்து வந்து, இவரை நோக்கி, ஐயா! நீர் யாதொரு தொழிலுஞ் செய்யாமல் இப்படி ஹரிபஜனை செய்துகொண்டே யிருந்தால் குடும்ப ஸம்ரக்ஷணம் எப்படி நடக்கும்? இதுவரையில் உமது தாய் தந்தையர் நடத்திவந்த குடும்ப ஸம்ரக்ஷணத்தை இனிமேல் நீரல்லவோ நடத்த வேண்டியிருக்கிறது? ஏதோ ஒரு வர்த்தகம் செய்து குடும்ப ஸம்ரக்ஷணத்தைச் சுலபமாய் நடத்தலாமே, அதற்குப் பணமில்லை யென்பீரானால், நாங்கள் நூறு வராகன் தருகிறோம், அந்தத் திரவியத்தைக்கொண்டு, வஸ்த்ர வ்யாபாரம் செய்து அந்த வ்யாபாரத்தால் வரும லாபத்தை நீர் குடும்பச் செலவு செய்துகொண்டு சுகமாயிரும், முதற்பொருளை மாத்திரம் எங்களுக்கு வேண்டும்போது கொடுக்கலாம் என்றார்கள். அவர் சொல்வதற்கு இவர் கொஞ்சம் சம்மதித்தவுடனே, இவருக்காகத் தங்கள் கடைக்குச் சமீபத்தில் ஒரு கடையமைத்து, இவருக்கு அந்த வஸ்த்ர வ்யாபாரிகள் பேசுகிற பரிபாஷையையுங் கற்பித்து, நாலு பேர் விற்கும் விலையையும் அறிவித்து, வர்த்தகஞ் செய்பவர் பொய் சொன்னால் அதிக லாபமுண்டாகும, மெய் சொன்னால் சொற்ப லாபமுண்டாகும் என்று இவ்வாறு பற்பல உபாயங்களையும் கற்பித்தார்கள். அதைக்கேட்ட பாநுதாசர் அவர்களை நோக்கி, நீங்கள் சொன்னபடியே செய்கிறேன், ஆனால் என் தலை போனாலும் பொய் சொல்லமாட்டேன், பொய் சொல்ல நினைக்கவும் மாட்டேன், மெய் சொல்லிச் செய்யும் வர்த்தகத்தால் வரும் ஊதியம் மிகவும் அற்பமானாலும், என் குடும்ப ஸம்ரக்ஷணத்துக்கு

அது போதும் என்று சொல்லுதலும், அந்த வுறவினர் இவர் சொன்னதைக் கேட்டு நகைத்து, இவனுக்குப் பிக்ஷை யேற்பதிலேயே த்ருஷ்டியாகையால் இவன் நமது சொல்லைக் கேட்கமாட்டான், இவனுக்கு நாம் சொல்லுவதில் ப்ரயோஜநமில்லை யென்று சொல்லும்போது, அவர்களில் ஒருவன் மற்றவர்களை நோக்கி, இவன் முன்பின் வர்த்தகஞ் செய்தவனல்லாமையால் அப்படிப் பேசுகிறான். நம்மோடுகூடி வர்த்தகஞ் செய்வதில் சிலநாள் பழகுவானானால் பொய் சொல்லுதல் முதலான விஷயங்களில் நமக்குக் குருவாய் விடுவானென்று சொல்ல, கேட்ட மற்றவர்கள் ஆம், ஆம், அது சரிதான் என்று ஒத்துக்கொண்டு, இவரை அந்த வ்யாபாரத்தில் அமைத்துவைத்தார்கள். அன்று முதல் இவர் வர்த்தகஞ் செய்யத் தொடங்கினார். தொடங்கி, தமமிடத்தில் ஆடை வாங்கவருவோர்களுக்கு இந்த ஆடையை நாங்கள் வாங்கினது இந்தத் தொகைக்கு, அதற்குமேல் லாபம் இவ்வளவு கொடுக்கவேண்டும், இஷ்டமானால் வாங்கிக் கொள்ளலாம், இஷ்ட மில்லாத பக்ஷத்தில் வேறு கடையில் வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லி, அதற்குச் சம்மதித்து வாங்குவோருக்கு மாத்திரம் விற்பனைசெய்துகொண்டு ஸ்ரீராமநாம ஸ்மரணையை மறவாதிருந்தார். இப்படி யிருக்க ஆடை வாங்க வருவோரெல்லாரும் இவர் பொய் சொல்லமாட்டாரென் றறிந்து, இவர் சொல்லும விலையைக்கொடுத்து வாங்கிக்கொண்டுபோகும வழக்கமுண்டாய்விட்டது. ஊரிலுள்ளோரெல்லாருமஇவரிடத்தில் வாங்குவதனால் மற்றக் கடைக்காரர்களுக்குக் கொஞ்சமும வ்யாபாரம் நடவாமலிருந்தது. அதனால் அவர்கள் நஷ்டமடைந்து வருந்தவும, இவரது வ்யாபாரம் மாத்திரம் நாளுக்கு நாள் அபிவ்ருத்தி யடையவும சம்பவித்தன. இதைக்கண்டு மற்றக் கடைக்காரரெல்லாரும இவர் விஷயத்தில் பொறாமைகொண்டு, நாமும மெய் சொல்லுவோமென்றாலும, முன்னே நாம பொய் சொல்லி யிருப்பதை யறிந்த இவ்வூரார் யாவரும அவரை நமபுவதுபோல நம்மை நம்பமாட்டார்கள், புலியானது சாந்த குணத்தை யடைந்தாலும் கண்டவர்கள் இது மனிதரை வஞ்சித்தற்கொல்வதற்கே இந்த வுபாயமெடுத்தது என்பார்கள்; ஜாரன் யாத்திரை செய்யப்போனால், இவன் பரதாரகமநத்தின்பொருட்டேயாத்திரையை மேற்கொண்டானென்பார்கள். ஆதலால் உண்மையைச் சொன்னாலும் நமக்கு ப்ரயோஜந மில்லை, இவனுக்கு உபகாரஞ் செய்த நமக்குத் துன்பமு மிவனுக்கு இன்பமும, நமக்கு நஷ்டமு மிவனுக்கு லாபமும் நேரிட்டதனால், இனி நாம் செய்யவேண்டிய வுபாயம் ஒன்றும தோன்றவில்லையென்று எதிரிலிருக்கிற கோயிலிலேபோய்த் தங்கிப் பார்த்துக்கொண்டிருக்க, இவர் கடையொன்றில் மாத்திரம் விசேஷமாய் வர்த்தகம் நடந்து வந்தது. இப்படி யிருக்குங் காலத்தில், ஒரு நாள் அந்த வூரில் ஹரிதாசர்கள் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் விசேஷமாய்ச் செய்யப் போகிறார்களென்று கேள்விப்பட்டு, அதற்குப் போகவேண்டுமென்கிற விருப்பமுள்ளவராய், கோயிலில் கூட்டமாய்க் கூடியிருப்பவர்களை நோக்கி, இன்று ஏகாதசி ஹரிதிநமாகையால் விசேஷமாய் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் நடக்கப்போகிற

தாம், அந்தப் பாகவதகோஷ்டிக்குப் போய் அவர்கள் செய்யும் ஹரிநாமஸங்கீர்த்தனம் கேட்டு வருகிறேன், நான் வருமளவும் என் கடையைப் பார்த்துக்கொள்ளுங்கள் என்று ப்ரார்த்திக்க, அவர்கள், போ! போ! பொருள் கொடுத்து உனக்குக் கடை வைத்துக்கொடுத்தது மல்லாமல் உன் கடையைக் காத்துக்கொண்டிருக்கவும நாங்கள் ஆட்களோ! நீ உன் இஷ்டத்தின்படியே போ! உன் கடையிலுள்ள வஸ்த்ரங்கள் போனால் எங்களைக் கேட்க வேண்டியதில்லை யென்றார்கள். அதைக்கேட்ட பாநுதாசர், துணிகள் போனாலென்ன? இருந்தாலென்னவென்று சொல்லிவிட்டுப் பாண்டுரங்க பகவானுடைய திருவடியை நினைத்துத் தோத்திரஞ் செய்துகொண்டுபோனார். போனவர் அவ்விடத்தில் நடக்கிற ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனத்தினால் ஆநந்தபரவசராயிருக்கையில், இங்கேயிருந்த கடைக்காரர்கள் இவர்விஷயத்திலுள்ள பொறாமையால், தாசருடைய குதிரையை அவிழ்த்து ஓட்டி விட்டு, இவர் கடையிலிருந்த புடைவைகளெல்லாவற்றையும ஒரு மடுவில் போட்டு அமிழ்த்தி விட்டு, மருந்தில்லாமல் பிணி நீங்கினாற்போல நமக்கு இந்தச் சமயம் வாய்த்ததென்று மேலும் ஆலோசித்து, பாநுதாசன் வந்து, தன் புடைவை முதலானவைகளைக் காணாமல் நொந்து போன பிறகு, மடுவிற் போட்ட புடைவைகளையெல்லாம் நாம் சொந்தமாக்கிக் கொள்ளுவோமென்று எண்ணிக் கொண்டும், இவரைத் தூஷித்துக் கொண்டும் இருந்தார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானானவர், என்னிடத்தில் அன்பு மிகுந்த பாநுதாசனென்பவனுடைய குதிரையை இந்தக் கடைக்காரர்கள் அவிழ்த்து ஓட்டி விட்டதுமல்லாமல் அவன் கடைத் துணிகளையும் மடுவிற் போட்டுவிட்டார்களே; இது என்ன அநியாயம் என்று தாசர் பொருட்டு அநுதபித்து, விரைந்து வந்து, மேய்ந்துகொண்டிருந்த குதிரையைக் கண்டு, தமது பீதாம்பரத்தை முறுக்கி அதின் கழுத்தில் மாட்டி, இழுத்துக்கொண்டு வந்து, பாநுதாசர் வரும் வழியில் நின்று தாசர் வரவை எதிர்பார்த்திருந்தார். அப்படியிருக்கும் போது, கடைக்காரர்கள் செய்த பொல்லாங்கைத் திருவுளம்பற்றிச் சிறிது கோபங்கொண்டு, அவர்களுடைய குதிரைகள், பொருள், புடைவை மூட்டைகள் ஆகிய எல்லாம் கொள்ளை போகும்படி சங்கற்பித்தவுடனே, திருடர்கள் வந்து அவர்களுடைய புடைவை முதலானவைகளைக் கொள்ளையடித்து, அவர்களையும் நன்றாய்ப் புடைத்துவிட்டுப் போனார்கள். அதின் பிறகு, கடைக்காரர்க ளெல்லாம் ஒருமிக்கக் கூடி, நாம் பாநுதாசருக்குச் செய்த தீமை நமக்கு உடனே தீமையையுண்டாக்கி விட்டதென்று பேசிக்கொண்டு சிலர் வருந்தினார்கள்; நமக்கு இந்தத் தீங்கு நேரிடுவதற்கு முன்னே அறிகுறியாகத் துர்ப்புத்தி நேரிட்டது என்று சிலர் சொல்லித் துக்கித்தார்கள்; ப்ரபஞ்சத்தில் பற்றில்லாதவனும், ஸ்ரீ ஹரி பக்தியிற் சிறந்தவனுமிராநின்ற பாநுதாசனுக்கு நாம் செய்த நஷ்டத்துக்கு எதிர் நஷ்டம் நமக்குண்டானது மன்றி, அதற்குமேல் திருடர் அடித்த அடியும் உதையும் பெற்றோமே, அது ஒரு லாபம் என்று சிலர் சொல்லி அயர்ந்தார்கள்; திரு

டர் நம்மைப் புடைக்கும்போது நாம் விலாவறக் கத்தியும் இவ்வூரிலுள்ளார் ஒருவரும் ஏனென்று கேட்கவில்லையே, இது என்ன அநியாயம் என்று சிலர் மனம் நொந்தார்கள்; அவர்களுக்குக் காது கேளாதிருக்கும்படி இந்தப் பாண்டுரங்கன் செய்திருக்கலாமென்று சிலர் சொல்லி வாடினார்கள். இப்படியிங்கே யிருக்க, ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தந காலக்ஷேபத்துக்குப் போன பாநுதாசர், அன்று ராத்திரி இருபத்தாறு நாழிகை வரைக்கும் ஸ்ரீ ஹரி நாமஸங்கீர்த்தநம் கேட்டுக்கொண் டிருந்து, முடிவில் பகவானுக்குக் கர்ப்பூரஹாரதி சமர்ப்பித்து, பகவத் ப்ரஸாதமும் பெற்று, ஹரி தாசரை வணங்கித் தமது வீட்டுக்கு வரும் வழியில், ஒரு வேதியன் ஒரு குதிரையைக் கையிற் பிடித்துக்கொண்டு நிற்பதைக் கண்டு, சமீபத்திற் போய், அந்தக் குதிரையானது தம்மதென் றறிந்து நின்ற வுடனே, அதைப் பிடித்து நின்ற வேதியன் மறைந்து போக, இவர், குதிரையைத் தாம் பிடித்துக்கொண்டு, இதைப் பிடித்துக்கொண்டு நின்ற வேதியன் யாரோ தெரியவில்லையே யென்று ஆலோசித்துக் கொண்டு வர, இவரைக் கண்ட துஷ்டர்களாகிய கடைக்காரர்கள் விரைந்து வந்து, இவரைச் சூழ்ந்துகொண்டு கதறி யழுதார்கள். தாசர், அவர்களை நோக்கி, நீங்கள் அழுதற்குக் காரணம் என்னென்று கேட்க, அவர்கள், நடந்த செய்தியெல்லாம் மறைக்காமல் சொன்னார்கள். அதைக்கேட்ட தாசர் கருணாமூர்த்தி யாதலால் தமது நஷ்டத்தைச் சிந்திக்காமல், அவர்கள் படுந் துன்பத்துக் கிரக்க மடைந்து, குதிரையைப் பிடித்து நாம் வரும் வழியில் நின்றவன், ஸ்ரீ கண்ணபிரானே, அவன் எமைபொருட்டு இந்த ஊழிதொழில் செய்தது த குதியோ! அப்படி அந்தப் பகவான் செய்ய நான் இந்த வர்த்தகத் தொழில் செய்வது தகாதென்று சொல்லி, மடியில் அவிழ்ந்திருந்த தமது புடவை மூட்டைகளை யெல்லாம் வாரிக்கொண்டு வரச்செய்து, அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து, பொருள்களையும் அப்படியே வழங்கி, குதிரையையும் அவர்களுக்கே கொடுத்து, தமது மனைக்கு வந்து ஸ்ரீ ஹரிபஜனை செய்துகொண் டிருந்தார். சாதுக்கள் தயவுடன் கண்டு இரங்கிக் கொடுக்கும் பொருளைக் கொண்டு குடும்ப ஸம்ரக்ஷணம் செய்துகொண்டு, ஆடி, கார்த்திகை இந்த இரண்டு மாசங்களின் ஏகாதசி தினத்திலே வீணை, தாளம், மத்தளம் முதலிய வாத்யங்களோடு பண்டரிபுரத்துக்குப் போய் ஸ்ரீ ஹரிபஜனை செய்து ஆநந்தக் கூத்தாடுவார்; பாண்டுரங்கப் பெருமானைத் தரிசித்து, கண்களில் ஆநந்த பாஷ்பம் பெருக நின்று தோத்திரஞ்செய்து நிற்பார். இவரது நிலைமையை அவ்விடத்தில் வந்திருப்பவர்கள் கண்டு புகழ்ந்து கொண்டாடுவார்கள். இப்படி யிருக்குங் காலத்தில், பண்டரி புரத்தில் வாழ்கின்ற ஒரு வேதியன் அதிக திரவியம் சம்பாதிக்க வேண்டுமென்கிற எண்ணத்துடனே புறப்பட்டுப் பல தேசங்களிலும் சஞ்சரித்து, முடிவில் ஒரு நல்ல நகரத்தை யடைந்தான். அந்த நகரத்தை வித்யா நகரம் என்று சொல்லுவார்கள். அந்த நகரத்துக்குள்ளே ப்ரவேசித்து, அதற்கு அரசனா யிருப்பவனது அரண்மனை வாசலில் போய் நின்று, அரசனுக்குத் தன் வரவை வாசற் காப்பாளரால்

அறிவித்தார். அரசனும் இவ்வேதியனை உள்ளே வரும்படி கட்டளையிட்டு, வந்தவுடனே அன்போடு பூஜித்து, எங்கேயிருந்து எதைக் குறித்து வந்தீர் என்று வினவ, வேதியன், அரசனே, நான் பண்டரிபுரத்தில் வாழ்பவனாகிய ஒரு வேதியன், உன்னுடைய உதார குணத்தைக் குறித்து அதிகமாய்க் கேள்விப்பட்டு வந்தேன் என்றான். அதைக் கேட்ட அரசன் வேதியனை நோக்கி, நான் நீராடி, நான் வழிபடுகிற தெய்வமாகிய காளி கோயிலுக்குப் போகிறேன், நீரும் அங்கே வாரும் என்று சொல்லிவிட்டு, பூஜா திரவியங்களெல்லாம் சேகரித் தமைத்துக் கொண்டு காளி கோயிலுக்குப் போனான்; வேதியனும் கூடவே போனான். கோயிலில் நடத்தவேண்டிய பூஜா காரியங்கள் எல்லாம் நடத்தி முடிந்த பிறகு, அரசன் எல்லாருக்கும் ப்ரஸாதம் கொடுப்பித்துத் தானும் ஸ்வீகரித்து ஒரு ஆஸநத்தில் வீற்றிருந்து, பண்டரிபுரத்திலிருந்து வந்த வேதியனை நோக்கி, நான் ஆச்ரயித்திருக்கிற இந்தக் காளியாகிய பெருந் தெய்வத்துக்கு நிகரான தெய்வத்தை வேறெங்கும் கண்டதில்லை, உம்முடைய ஊரிலுள்ள தெய்வத்துக்கு இப்படிப்பட்ட கோயிலும் பெருமையும் உண்டோ? ஏழை வேதியனாகிய நீர் உமது அத்ருஷ்ட வசத்தால் இவ்விடம் வந்து இந்த மஹா ப்ரபாவமுள்ள தெய்வத்தை தரிசித்தீர், இன்னம் நன்றாகத் தரிசநம் செய்யும் என்று சொல்ல, வேதியன், ஓ மஹாராஜனே, நீ அந்தப் பண்டரி நாதனது திவ்ய சௌந்தரியத்தைச் சேவிக்காமையால் இப்படிச் சொன்னாய், அன்றியும், இந்தக் காளி கோயிலில் தரை வெள்ளித் தகட்டால் மூடப்பட்டிருக்கிறதென்றாய், எமது பண்டரிநாதன் கோயிலில் தரை பொற்றகட்டால் மூடி மணிகள் பதிக்கப்பட்டிருக்கின்றது, நீ வந்து பார்க்கலாம் என்று சொன்னான். அன்றியும் அவ்விடத்திலுள்ள மரங்களெல்லாம் பஞ்சதருக்களே, பாறைகளெல்லாம் சிந்தாமணிகளே, பசுக்களெல்லாம் காமதேநுக்களே, வநங்களெல்லாம் துளசி வநங்களே, சாது ஸஜ்ஜநங்களாகிய ஹரி தாசர்கள் கூடி எந்நேரமும கருடக் கொடியைக் கையிற் பிடித்துத் தாளம் ம்ருதங்கம முதலிய வாத்யங்களோடு ஹரிபஜனை செய்து கொண்டிருப்பார்கள். அங்கே, சந்த்ரபாகை யென்றொரு நதியுண்டு, அதில் மூழ்குவோர்களுடைய பாபராசிகளெல்லாம் பஸ்மமாய்ப் பறந்து போகும். க்ஷீராப்தி நாதனான பகவான், புண்டலீகருடைய ஜ்ஞாந பக்தியைக் கண்டு, அவ்விடத்தில் ஒரு கல்லின்மேல், இடையிற் கையை வைத்துக் கொண்டு நின்று, தன் அடியார்க்கு வரும் துன்பங்களை யெல்லாம் நீக்கி யருளி, அவர் விரும்பினவற்றைக் கிருபை செய்கிறார். அந்தத் திவ்யமங்கள விக்ரஹ சௌந்தரியத்தைத திருமகளும் கண்டு நாணமடைகிறாள். அந்தப் பகவானது திருமுடியின் ப்ரகாசத்துக்குக் கோடிசூரிய ப்ரகாசமும் நிகராகமாட்டாது, அந்தக் கண்ணபிரானது தரிசநத்துக்கு வருகிற தேவர்கள் ஸமயம் பார்த்திருப்பார்கள், அவனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைப் புகழ்ந்து சொல்லத் தொடங்கின ஆதிசேஷன் நாக்கள் இருபிளவானதனால் நாணி நிற்கிறான். வேதங்களாலும் வேதாதிகாரியான ப்ரஹ்மாவாலும் அவன் மஹிமை சொல்ல

ப்படாது, இப்படிப்பட்ட பாண்டுரங்கன்போல ஒரு தெய்வத்தையும், பண்டரி புரம்போல ஒரு நகரத்தையும், சந்த்ரபாகாநதிபோல ஒரு நதியையும் பதினுலகத்திலுந் தேடிக் காண்பது அருமையாகும். உன்னால் ஆராதிக்கப்படுகிற இந்தக் காளியும் அந்தப் பண்டரிநாதன் கோயிலில் பணிவிடை செய்கிறாள். அதைக் காணாமையால் நீ இந்தக் காளியைப் புகழ்கின்றாய். நீ வந்து அந்த க்ஷேத்ர தீர்த்த மூர்த்திகளைத் தரிசித்தால் இப்படிப் பேசமாட்டாய் என்றான். அதைக் கேட்ட அரசன் கோபங் கொண்டு, ஓ வேதியனே, நீ யிப்படிப் பேசினதற்கு உன்னை உயிர்க்கொலை செய்யவேண்டும், உன்னைக் கொன்றால் ப்ரஹ்மஹத்தி யென்கிற தோஷத்துக் கஞ்சினேன் என்று சொல்லி, மேலும், பண்டரிபுரம் பொன்மயமா யிருக்குமென்றும், காளி அவ்விடத்தில் தாசிவேலை செய்கிறாளென்றும் பொய் சொன்னாய் என்று கோபிக்க, வேதியன், அரசனே, நீ கோபிக்கவேண்டாம், அந்த க்ஷேத்ரத்தை வந்து பார்த்த பிறகு உன் இஷ்டம்போலப் பேசுவாயாக வென்றான். அதைக் கேட்ட அரசன், வேதியனே, நீ சொல்லியதெல்லாம் உண்மையானால் நான் பண்டரிபுரத்துக்கு வருகிறேன், பொய்யா யிருக்குமானால் உன்னைத் தண்டிக்காமல் விடமாட்டே னென்று சொல்லி, மந்திரியைப் பார்த்து, நான் பண்டரிபுரத்துக்குப் போகவேண்டி யிருக்கிறது, நீ சேனைகளோடு முன்னே போவென்று நியமிக்க, அப்படியே மந்திரி முன்னே பிரயாணப்பட, அரசன் பின்னே புறப்பட்டான். அப்போது வேதியனும் பண்டரிபுரத்தில் எழுந்தருளி யிருக்கிற ஸ்ரீ கண்ணபிரானைக் குறித்து, ஓ பாண்டுரங்கப் பெருமானே, இந்த அரசனுக்கு நான் சொன்னபடியே இவ்விடத்தில் காணப்படாவிட்டால நான் கடுந் தண்டனைக் குள்ளாக வேண்டி வரும், உனது நிஜத்யாளத்வத்துக்கும் பங்கமுண்டாகும் என்று சொல்லி, பண்டரி நாதனை மனத்தி லிருத்தி பஜித்துக் கொண்டே வந்தார். அப்போது சர்வாந்தர்யாமியாகிய பகவானானவர், அரசன் சோதநார்த்தமாய் வருவதையும், தம்மை ஆசிரயித்த வேதியன் அவனிடத்தி லகப்பட்டு வருத்தத்தோடு வருவதையும் அறிந்து, ஸ்ரீ கமலவாஸிநியாகிய திருமகளை நோக்கி, வித்தியா நகரத்தை யாளுகின்ற அரசன், நம்மூர் வேதியன் சொன்னது உண்மைதானோ வென்று சோதிக்கும் பொருட்டு வருகிறான். ஆகையாலே, அவ்வேதியன் வார்த்தையை உண்மையாக்க வேண்டும் அப்படிச் செய்யாமற்போனால் எனக்கு நிலையாயிருக்கிற பக்தபாலகன் என்னும் பெயர்க்குப் பழுது நேரிடும், வேதியனுக்கும் தண்டனை கிடைக்கும், புராண வசநங்களும் பொய்யாகும், நம்மை ஆசிரயித்திருக்கிற அன்பர்களும் நகைப்பார்கள் என்று சொல்லுதலும், லோக மாதாவாகிய பெரிய பிராட்டியும் பகவானுடைய பாதாரவிந்தங்களை வணங்கி, ஸ்வாமீ, மஹாபாக்யம், அப்படியே யாகட்டுமென்று திருவுளத்தில் சங்கற்பித்தாள். உடனே முன்னோர் சொன்னபடியே பண்டரிபுரமானது பொன்மயமாய் விளங்கிற்று, அரசனாகிய ராமராஜன் அவ்வூர்க் கருகே வர வர, வேதியனுக்கு அச்சம் அதிகரித்துக் கொண்டே வர, அவரும் அந்த அச்சத்தை லக்ஷ்யம் பண்ணாமல், ஸ்ரீ ஹரி

நாம ஸ்மரணை செய்துகொண்டே வந்தார். யானை யேறி வந்த ராம ராஜன் ஊர்க்கருகே வர வர, பண்டரி நகரமானது வேதியன் சொன்னதைப் பார்க்கிலும் ஏன்மடங் கதிகமென்று சொல்லும்படி பொன்மயமாயும், ரத்னமயமாயும் நெடுந்தூரம் வரைக்கும் ஒளி வீசுவதைக் கண்டு, யானைமே லிருந்திறங்கி, தன்னை யழைத்துவந்த வேதியன் பாதத்தை வணங்கி, முன்னே நீர் சொன்னது உண்மைதானென்று சொல்லி, உமது மஹிமையைத் தெரிந்துகொள்ளாமல் கோபங் கொண்ட என் பிழையைப் பொறுத்தருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, வேதியனும், அரசனை நோக்கி ஓ மஹாராஜனே! இந்த நகரம் உம்மைப் போன்ற விவேகிகளுக்கு மாத்திரம் புராணங்களாற் சொல்லப்பட்டிருக்கிறபடியே பொன் மயமாய்க் காணப்படும், மற்றவர்க்கு இக்கலியுகத்தில் இப்படிக் காணப்படாதென்று சொன்னார். அதின்பிறகு வேதியர், நாம சொன்னபடியே பகவான் க்ருபை செய்தாரென்று மகிழ்ந்து, தாளம் மத்தளம் வீணை முதலிய வாத்யங்களைக் கைக்கொண்டு, ஹரிதாசர்களோடு கூடி, ஹரி பஜனை செய்துகொண்டு வர, அரசனும் கூட வந்தான். எவ்விடத்திலும் பழுத்தருள் சோலைகளா யிருப்பதையும், அந்தச் சோலைகளில் தங்கியிருக்கும் பறவைகளெல்லாம் பாண்டுரங்கப் பெருமானது திருநாமத்தையே சொல்லிக்கொண்டிருப்பதையும், மயில்கள் நடனஞ் செய்வதையும், சிந்தாமணிகளின் ஒளியைக் கண்டு அன்னப் பறவைகள் நெருப்பென் றஞ்சி வயல்களை நோக்கி போவதையும், காமதேநுக்கள் பசும்புல்லைக் கறித்து மேய்வதையும், இவைபோன்ற பல விசித்திரங்களையும் கண்டு அதிசயித்து, நகருக்குள்ளே ப்ரவேசித்ததும், அழகிய மாளிகைகள் பொன்னாற் செய்யப்பட்டும், ரத்னங்கள் இழைத்தும் இருப்பதனால் ஆயிரம் கண் கூசும்படி ஒளி பரப்புவதையும், ஒரு பக்கத்தில் வேதகோஷத்தையும், ஒரு பக்கத்தில் விமலகீர்த்தன வோசையையும், ஒரு பக்கத்தில் ஆடல் பாடல்களையும், ஒரு பக்கத்தில் கருடக்கொடிகள் நெருங்கியிருப்பதையும், சந்த்ரபாகா நதியில் தீர்த்தமாடுதற்குவந்து நெருங்கியிருக்கிற தேவர் கூட்டத்தையும் கண்டு ஆச்சரியமடைந்து நின்றான். பிறகு, அந்த நெருக்கத்தில் நுழைந்து அரம்பைப் பெண்கள் ஆடல் பாடல் செய்துகொண்டிருக்கிற கருடஸ்தம்பத்தின் சமீபத்தில்வந்து வணங்கி, சந்நிதிக்குள்ளே போகும்போது, அஷ்டமாசித்திகளும் பெண் ணுருக் கொண்டு ஊழியஞ் செய்து கொண்டிருப்பதையும், அவர்களோடு தான் வழி படுகிற காளியும் சேர்ந்து ஊழியஞ் செய்துகொண்டிருப்பதையும் கண்டு, இதென்ன புதுமை யென்று காளியை நோக்கி, என்னால் பூஜிக்கப்படுகிற நீயும் இங்கே வந்து ஊழியஞ் செய்கிறாயே! இதற்குக் காரணம் யாதென்று கேட்க, காளி அரசனை நோக்கி, என்றும் எனக்கு இங்கு வந்து பணிவிடை செய்வதே தொழிலாகும், இவ்விடத்தில் இந்தப் புண்டலீகருடைய ஆசிரமத்தில் கங்கை, யமுனை, சரசுவதி முதலான புண்ய நதிகளும் பெண் ணுருவாய் வந்து ஊழியஞ் செய்து தங்களுடைய பாபங்களினின்றும் விடுபடுவார்கள்; இந்த க்ஷேத்ரத்தின் மஹிமையைச் சொல்ல என்

னுல் முடியாதென்றாள். இதைக்கேட்ட அரசன் மகிழ்ந்து சந்நிதிக்குள்ளே போய், தும்புரு நாரதர் இசைபாடி நிற்கிற வாயிலில் காவலராயிருக்கிற ஜய விஜயர்களைக் கண்டு வணங்கி, அதன்பிறகு பகவான் சந்நிதிக்குப்போய், அவரது திவ்ய மங்கள விக்ரஹ தேஜோராசியைக் காணவே கண்கள் கூசி மூடிக்கொள்ளுதலும், தன்னை அழைத்துவந்த வேதியன் கையைப் பிடித்துக்கொண்டு நின்று கண்களை மெல்லத் திறந்து பார்க்கப் பகவானவர் தமது திருமேனியின் தேஜோ ராசியை மறைத்து, தமது முன்னைய திருவுருவங் கொண்டு சேவை சாதிக்க, அரசன் கண்களை நன்றாய் விழித்து ஸ்ரீலக்ஷ்மீநாதனைக் கண்களிகூரச் சேவித்து ஸ்தோத்ரஞ் செய்து, திருவடி மீது வீழ்ந்து வணங்கி ஆநந்தசாகரத்தில் மூழ்கி, உடல்புளகித்து, ஆநந்தக் கண்ணீரொழுக நின்று பகவானுடைய திருவுருவை ஆலிங்கநம் செய்து, துதித்து, தன்னருகே யிருக்கிற வேதியரை நோக்கி, ஸ்வாமீ! அடியேனைப் புநிதனாகச் செய்தாண்டருளினீர், உமது க்ருபா விசேஷத்தால், ஸமாநாதிகாஹிதனாகிய பண்டரிநாதனைச் சேவித்து என் பவரோகத்தை நிவர்த்தித்துக்கொண்டேன், இப்படி நீர் செய்த நன்றிக்கு அடியேன் என்ன கைம்மாறு செய்வேன் என்று மிகவும் தோத்திரம் செய்து திருவடியில் வீழ்ந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்து நின்று, நீர் சொன்னதைப் பார்க்கிலும் இந்தக்ஷேத்ரமானது அநேக கோடி பங்கு சிறந்திருக்கவும கண்டு களித்தேன் என்று பலவாறு துதித்து நின்றான். அப்போது, அரசன் பொருட்டுத் தேஜோ மயமாய் விளங்கின பொருள்களெல்லாம் கலிகாலத்துக்கேற்க முன்னிருந்தபடியே ஆய்விட்டன. அதையும் அரசன் கண்டு அதிசயித்து, இதுவும இந்தப் பகவானுடைய லீலையேயாமென்று நினைத்து, கற்பக மரமிருக்கக் கள்ளியை விரும்புவார்களோ? காமதேநு விருக்க ஆட்டை விரும்புவார்களோ? சூரியன் வீட்டிலேயிருக்க விளக்கைத் தேடுவார்களோ? இவ்வுலகத்தில் ஒருவரும் அப்படி செய்யார். அதுபோல இந்தப் பண்டரி நாதனாகிய பெருந்தெய்வமிருக்க, வேறான அற்ப தெய்வங்களை நான் மனத்திலும் இனி ஸ்மரிக்க மாட்டேன் என்று மனவுறுதிகொண்டு குன்றமேந்திக் குளிர்மழை காத்தவனே! திருத்துழாய்மாலையை யணிந்த ஸ்ரீதரனே! திருமறு மணிமார்பனே என்று துதித்து, ஸ்வாமீ! தேவரீரிடத்தில் அடியேன் ஒரு வரம் கேட்டுக் கொள்ளுகிறேன், அதனைக் கருணை செய்ய வேண்டும், என்னென்றால், தேவரீர் இந்தத் திருக் கோலத்தோடு எனது பட்டணத்துக்கெழுந்தருளி, அவ்விடத்தில் நிலைபெற்றிருந்து என்னைப் புநிதனாகச் செய்தருளவேண்டும என்று ப்ரார்த்தித்தலும், ஸ்ரீபண்டரிநாதன், அரசனே! உன் விருப்பப்படியே நான் வருகிறேன், வரும வழியில் என்னைக் கீழே வைத்தாயானால், நான் உன் பட்டணத்துக்கு வரமாட்டேன், அங்கேதானே நிலைபெறுவேன், அவ்விடத்திலும் உன்னால் ஏதாகிலும் குற்றம் நேரிட்டால் உடனே இந்த க்ஷேத்ரத்துக்கு வந்துவிடுவேன என்று சொல்ல, அரசனும் அப்படியே யாகட்டுமென்று, பகவானைத் திருத்தேர் மேல் எழுந்தருளச்செய்து, ஆயுதபாணிகளாகிய வீரரைக் காவலராகச் சூழ்

ந்துவரச்செய்து, கொண்டுபோய்த் தன் நகரத்தில் ப்ரதிஷ்டை செய்து சகல விதமான உபசாரங்களோடும் பூஜித்தான். இந்த அரசன் செய்யும் பூஜையை விரும்பி, பண்டரிநாதன் இங்கே சந்நிதி செய்திருக்க, ஆடிமாசத்து ஏகாதசிக்குப் பண்டரி புரத்துக்கு வந்த ஹரிதாசர்களும, மற்றவர்களும் பகவான் சந்நிதியில் இல்லாதிருக்கக் கண்டும், அரசன் கொண்டுபோனு னென்று கேள்விப்பட்டும் மனந்தளர்ந்து, உயிர் நீங்கின வுடல்போலச் செயலற்றவராய்த் துன்பக்கடலில் மூழ்கி,கருடஸ் தம்பத்தினருகே வந்துசேர்ந்து,இந்தத் தலத்தை நீங்கேன் என்று புண்டலீகர்க்குத் தந்தவரம் பொய்த்துப்போகும் படி யார் என்ன தீமை செய்தார்களோ! வித்தியா நகரத்துக்குப் போய்ப் பகவானை இங்கே கொண்டுவரத் தகுந்தவர் யார்? பகவானுக்குப் புண்டலீகர் மேல்கோபமுண்டாயிற்றோ? சாதுஸஜ்ஜநங்கள்மேல் கோபமுண்டாயிற்றோ? பகவான் இந்த க்ஷேத்ரத்தை விட்டு நீங்குவதற்குக் காரணம் யாதோ அறிகிலேம என்றும், வித்தியா நகரத்துக்குப் போய்ச் சேவிக்க வேண்டுமென்றெண்ணினுலும, அரசன் காவலுக் குட்படிருக்கிறதனுல் சேவிக்க வொண்ணுதென்றும், இவ்வாறு பலவிதமாய்ப் பேசித் துக்கித்துக் கொண்டிருக்கும் போது, பாநு தாசரானவர் அவர்களை நோக்கி, நீங்கள் மனம் வருந்தவேண்டியதில்லை; நான் வித்தியாநகரத்துக்குப்போய், ஸ்ரீலக்ஷ்மீநாதனைக் கொண்டு வருகிறேன், அப்படிக் கொண்டு வருவதற்குச் சாத்தியப்படாத பக்ஷத்தில் அவ்விடத்தில்உயிரை விட்டுவிடுகிறேனென்றுசொல்லிப் புறப்பட்டுப்போய், வித்தியா நகரத்தை யடைந்து, அங்கிருப்பவரை நோக்கி, அரசன் பண்டரி நாதனைக் கொண்டுவந்து எங்கே வைத்திருக்கிறுனென்று கேட்க, அவர்கள் அரசனுடைய பயத்தினுல் சொல்லாதிருந்தார்கள். தாசரானவர் அவர்களிற் சிலரை யேகாந்தமாக அழைத்து இனிய வசநங்கள் சொல்லி, ரஹஸ்யமாய்க் கேட்க, அவர்கள் அரசன் தன் அரண்மனைக் குள்ளே வைத்துப் பூஜித்துக் கொண்டிருக்கிறுன், அன்றியும் பூஜை முடிந்தபின் அங்கே ஒருவரும் போகவொண்ணுமல் காவல் வைத்திருக்கிறுனென்று சொல்லக் கேட்டு, மனமகிழ்ந்து, அன்றிரவில் எல்லாரும் நித்திரை செய்தபிறகு அரண்மனைக் குள்ளே போக நினைத்துப் போகும்போது, பூட்டப்பட்டிருந்த கதவுகள் பூட்டவிழ்ந்து வழி கொடுக்கப் போய், பாண்டுரங்கனிடத்தை யடைந்து, அந்தப் பெருமானைக் கண்டு வணங்கி, அன்போடு தழுவிக் கொண்டு அழுது, பல வகையாய்த் தோத்திரஞ் செய்து, புண்டலீகர்க் கருள்செய்த ஸ்ரீவைகுண்ட நாதனே, பூர்வ அன்பர்களைவிட்டு நீங்கி இந்தஅரசன் மனையில் எழுந்தருளியிருப்பதற்குக் காரணம் யாதோ? புண்டலீகர்க்கு அக்காலத்தில் சொன்ன சொல் பொய்யாய்விட்டதோ? அன்றி, எளியேமாகிய எங்கள் பூஜையை விட்டுச் செல்வனுகிய அரசன் பூஜையை விரும்பி வந்தாயோ, இந்த அரசன் பூஜையில் விருப்பம் அதிகரித்துத்தானே, திருமகள் முதலாகிய எம்மையெல்லாம் நீங்கி இங்கே வந்து அமர்ந்திருக்கிறுய்? நாங்கள் செய்கிற உன் நாம சங்கீர்த்தநம் உன் காதைத் தொளை செய்ததோ? இரவிலும் நாங்கள்

செய்யும் பஜனையாரவாரத்தால் கண்வளர்தற் கிசையாமல் இங்கே கண்வளர
வந்தாயோ? அங்கே வருகிற அன்பரெல்லாரும் உன்னைத் தழுவுவதனால்
திருமேனி வருந்தின வருத்தம் நீங்கி இளைப்பாறவோ இங்கே யெழுந்தருளி
னாய்? என்று இப்படிப் பலவாறு புலம்பக் கேட்ட பண்டரிநாதன், தாசரை
நோக்கி, நான் இங்கே வருவதற்குக் காரணம் நீர் சொன்னவைகளில் ஒன்று
மல்ல, இந்த அரசன் அன்பினால் என்னைக் கவர்ந்து வர, அந்த அன்பிற்
கிசைந்து வந்தேன் என்று சொல்லி, மேலும், இவ்விடத்தில் என்னைத்
தனியே வைத்து இவன் பூஜிப்பதில் எனக்குச் சிறிதும் சந்தோஷமில்லை,
பண்டரிபுரத்துக்கு எப்பொழுது போவேனோவென்கிற கவலை யதிகரித்து
இந்தச் சிறையிலிருக்கிறேன், இங்கு வந்தநாள் முதல் என் உயிர் உங்கள்மே
லிருக்க, நீங்கள் என்னை நினைத்து இங்கு வாராதிருந்தீர்கள், நீங்கள் அங்கே
வந்து என்னைச் சேவித்துத் தழுவிக்கொள்வதற் கிடமில்லாமல் இங்கேவந்து
விட்டேனென்று என்மேல் வெறுப்புண்டானதனாலே வாராதொழிந்தீர்க
ளாகவேண்டுமே என்றுசொல்லிக் கண்ணீர் பெருக்குதலுமே, பாநுதாசரான
வர் தாமுமே கண்ணீர் பெருக்கி, பகவானைத் தழுவிக்கொண்டு, என் பின்னே
வாருமென் றழைக்க, பகவானுமவர், அப்படியே நாளைக்கு நான் வருகிறேன்
என்று சொல்லி, தமது திருக்கழுத்திலிருந்த ரத்ந ஹாரமொன்றைக் கழற்றித்
தாசர் கழுத்திற் சூட்டி, என்னிடமே போய்ச் சேர்வாயாகவென் றனுப்பினார்.
தாசரும் அப்படியே யாகட்டுமென்று பகவானை வணங்கி, மனத்தினால் ஸ்ம
ரித்துக்கொண்டே வெளியே வந்து தமதிடத்தை யடைந்தார். இவர்வெளியே
வந்த வுடனே, கதவுகளெல்லாம் முன்போலவே பூட்டப்பட் டிருந்
தன. பிறகு சூரியோதயமாகவே, அரசன் எழுந்து ஓடி வந்து பகவானைப்
பூஜித்து, கற்பூரதீபனாராதி செய்யும்போது, இரவவன் திருமார்பிலிரு
ந்த மணிமாலையைக் காணாமல், வாயிற்காப்பாளரை நோக்கி, பகவானுடைய
ரத்ந ஹாரத்தைத் திருடிக்கொண்டு போனவர் யார் சொல்லுங்களென்று
கோபிக்க, அவர்கள், யாரெடுத்துக்கொண்டு போனார்களோ எங்களுக்குத்
தெரியாதென்றார்கள், அரசன் அவர்களை நோக்கி, நீங்கள் உள்ளே வந்து
திருடிக்கொண்டுபோனவனைப் பார்க்காமல் என்ன காவல்செய்தீர்கள்? திருடி
க்கொண்டுபோனவன் எங்கே யிருந்தாலும் அவனைத் தேடிக் கண்டுபிடித்து
க்கொண்டு வாருங்களென்று கட்டளை யிட, அவர்களும் அப்படியே புறப்
பட்டுத் தேடி வந்து, கங்கா ஸ்நாநம் செய்து அதின் கரையிலிருக்கிற பாநு
தாசர் கழுத்தில் மணிமாலை யிருக்கக் கண்டு, அவரை யடித்துப் பிடித்துக்
கொண்டு வந்தார்கள். வரும்போது, சிலர், தாசரைப் பார்த்து,இப்படிச்சாது
வேஷந் தரிப்பது திருடுதற்கோ என்பார்கள், சிலர், பகவான் திருக்கழுத்தின்
மாலையைத் திருடுகிறவன் வேறெந்தத் தீமையைச் செய்ய மாட்டான் என்
பார்கள். இப்படி வழியிலுள்ளோர் பேசுகிற பலவகையான நிந்தனை வார்த்
தைகளைக் கேட்டும் அவற்றைச் சற்றும் மனத்துட் கொள்ளாமல், பகவந்
நாம ஸ்மரணை செய்துகொண்டே காவல் வீரர் பின்னே போய் அரசனிடத்

தை யடைந்தார். அரசன் இவரிடத்தில் மணி மாலையைக் கண்டதனால் இவரைக் கழுவேற்றும்படி கட்டளையிட்டான். அரசன் சற்றும் ஆராயாமல் சொன்ன தீர்ப்பின்படி, காவல்வீரர் இவரைக் கழுவேற்றக் கொண்டுபோகையில், இவர் அவர்களை நோக்கி, காவல் வீரரே, என் உயிர் நீங்கவேண்டிய காலம் நேர்ந்தமையால், நான் பகவானைச் சேவித்து வருகிறேன், நீங்கள் அரசனிடத்தில் உத்தரவுபெற்று வாருங்கள் என்று சொல்ல, அவர்களுக்குள்ளே சாதுவாயிருப்பவனொருவன், அரசனிடத்திற்குப் போய், தாசர் சொன்ன செய்தியை யறிவித்து விடைபெற்று, பகவத் ஸந்நிதிக்கு இவரை யழைத்துப் போய் விடுக்க, இவர் பகவானைக் கண்குளிரச் சேவித்து வணங்கி, ஓ பண்டரி நாதனே! நான் ஸந்தோஷமாய் உன்னைப் பண்டரிபுரத்துக் கொண்டுபோய்ச் சேர்க்கலாமென்று எண்ணினேன் என்று அரசனைக் கொண்டு என்னைக் கழுவேற்றும்படி செய்தாய், இன்னமும் உன்னைக் கொண்டுபோக முயல்பவர்களையுங் கொன்று இங்கே யிருக்க நினைத்தாயோ என் கழுத்தில் மணிமாலையை யிட்டாய்? உன் தந்திரம் எப்படியும் நன்றாயிருக்கின்றது, நீ எப்படிச் செய்தாலும் சரிதான், அது நிற்க, நீ என்னைத் துக்கமயமாகிய பிறவிகள் எத்தனை யெடுக்கச் செய்தாலும், நான் மாத்திரம் உன்னிடத்தில் அன்பு செய்தலை விடேனென்றார். அதன்பிறகு சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்துக் காவலரோடு வெளியே வந்து கழுமரமிருக்குமிடத்துக்குப் போகும்போது, அந்த ஊராரெல்லாரும் இவரைக் கழுவேற்றுவதைப் பார்க்க வந்தார்கள். காவலரும் இவரைக் கழுமரத்தின் ஸமீபத்தில் நிறுத்தி ஏற்றுவதற்குப் ப்ரயத்னம் செய்யும் ஸமயத்தில், இவர் பகவானைக் குறித்து, ஓ ஜநார்த்தநா! என்னைக் கழுவிலேற்றினாலும், என் தலைமேல் இடிவிழச் செய்தாலும், இன்னம் எப்படிப்பட்ட துன்பங்கள் நேரிடச் செய்தாலும் உன்னை நான் மறக்கமாட்டேனென்று சொல்ல, தயாஸாகரமாகிய பகவான் இவரது மனவுறுதியை யறிந்து இவர்க்குக் கருணை செய்யவேண்டுமென்று திருவுளங்கொண்டு, அந்தக் கழுமரத்தை நோக்க, அது பச்சென்று தளிர் அரும்பித் தழைத்துச் செழித்தது. இந்தச் செய்தியைக் காவலரோடி அரசனுக் கறிவித்தார்கள். அவன் தக்ஷணமே விரைந்து வந்து கழுமரம் செழித்திருப்பதைக் கண்டு அதிசயித்து, இந்த ஹரிதாஸரை நாம் ஆராயாமல் செய்த தண்டனையைப் பொறுக்காமல் ஸ்ரீகண்ணபிரானே இப்படிச் செய்தாரென்று துணிந்து, தாசரை வணங்கி, தேவரீர் விஷயத்தில் அடியேன் பெரும் பிழை செய்தேன், அந்த அபராதத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்து அவரைத் தன் அரண்மனைக்குள்ளே யெழுந்தருளி யிருக்கிற பண்டரிநாதன் ஸந்நிதிக்கு அழைத்துவந்தான். வருதலும், ஸ்ரீலக்ஷ்மீநாதனாகிய பண்டரிநாதனது திருவடியில் வீழ்ந்து வணங்கினார். பகவானும் இவரைத் தழுவிக்கொண்டு, ஓ பாநுதாசரே, என்னால் நீ மிகுந்த துன்பமடைந்தாய், இப்பொழுதே என்னைப் பண்டரிபுரத்துக்குக் கொண்டுபோவென்றார். அதைக் கேட்ட அரசன், ஆவலோடு வந்து பகவானைத் தொழுது இங்கே அடியே

ஞல் பூஜிக்கும் பூஜையை விரும்பாமல் பண்டரிபுரம் போகத் திருவுளங் கொண்டாய், இதுதானோஉன்திருவருளென்று சொல்லியழுதான். அவனைப் பகவான் கடாக்ஷித்து, உன்னிடத்தில் எதாயினுங்குற்றம் நேரிட்டால் நான் இங்கே யிருக்கமாட்டேனென்று முன்பே நான் சொல்லியிருந்ததை நீநினைத்துப் பார், அந்த ஏற்பாட்டின்படியே இப்பொழுது ஹரி தாசனிடத்தில் ஆராயாது செய்த உன்குற்றத்தை வ்யாஜமாக்கிக்கொண்டு நான் பண்டரிபுரத்துக்குப் போகிறேன்? இதுவரைக்கும் என்னை யிவ்விடத்தில் வைத்து ஆராதநம் செய்ததனுலும், எனது நாம ஸ்மரணஞ் செய்ததனுலும் ஒரு துன்பமுமில்லாமல் நீ சுகஜீவியாய் நீடுவாழ்வாயாக வென்று சொல்ல, பானுதாசர், பகவானை நோக்கி, ஸ்வாமீ, உன்னை நான் எப்படிக் கொண்டு போவேன் என்று கேட்க, ஸ்வாமியும், ஒரு சிறு செப்புக் கொண்டு வாரும் என்று சொல்லி வரவழைத்து, அதில் ப்ரவேசித் தடங்கி இப்போது சுளுவாய்க் கொண்டு போகலா மென்று சொல்ல, தாசரானவர் உலகமுண்ட பெருவாயனுகிய இந்தப் பண்டரி நாதன் இந்தச் செப்புக்குள்ளே யடங்கினவிதம் யாதென்று ஆராயாமல், செப்பை யேந்திக் கொண்டு போகையில், பகவான் தாசரை நோக்கி, பானுதாசரே, உம்மால் முன்புபோல, பாகவதர் முகம் பார்க்கும்படியான பாக்யம் எனக் குண்டாயிற்று, இதுவே சுதிநம, எனக்கு எப்பொழுது இன்ப முண்டாகு மென்று நினைத் திருந்தேன், பண்டரி புரத்தி லிருந்து இனி யொரு க்ஷண காலமும பிரியமாட்டேன் என்று சொல்லிக் கொண்டு வரும் வழியில், பத்மாளம் என்னும் ஊரை யடுத்து வரும்போது, தாசரானவர் செப்பைக் கீழே வைத்துவிட்டு, நீராடிக் கொண்டிருந்தார் அப்போது அவர் நீராடிக் கொண்டிருந்த அந்த மடுவின் கரையில் செப்புக் குள்ளே தங்கியிருந்த பாண்டுரங்க பகவானனவர், அந்தச் செப்பை உடைத்துக் கொண்டு தமது பூர்வ ரூபங் கொண்டு நின்றார் தாசர் நீராடி வந்து, செப்புக் குள்ளே யிருந்த பகவானனவர் வெளிப்பட்டிருப்பதை நோக்கி, ஸ்வாமீ, இந்த ரூபங் கொண்டதற்குக் காரணம் என்னவென்றுகேட்க, பகவானனவர், தாசரை நோக்கி, நீர் பண்டரி புரத்துக்குப் போய், அங்குள்ள சாதுக்களுக்கு இந்தச் செய்தியைத் தெரிவித்தால் அவர்கள் வந்து என்னைத் தேர்மேலேற்றிக் கொண்டு, வாத்ய கோஷத்தோடு போவார்கள் என்று பாண்டுரங்க பகவான் சொல்ல, பானு தாசர் அப்படியே போய், பண்டரி புரத்திலுள்ள சாதுக்களுக்குச் சொல்ல, அவர்கள், தக்ஷணமே பல வகை வாத்ய கோஷத்தோடும ஸ்வர்ண ரத்ந மயமான தேரோடும் வந்து பகவானைக் கண்டு தழுவிக் கொண்டு, பரமாநந்த பரிதஹ்ருதயராய், பகவானைத் தேர்மேலேற்றிக் கொண்டு, வாத்ய கோஷத்தோடும், ஹரிநாம ஸங்கீர்த்தநத் தோடும் பண்டரி புரத்தை யடைந்து, சந்த்ர பாகா நதியில் நீராட்டி, வேத முழக்கத்துடன் எல்லாச் சடங்குகளுஞ் செய்து, பகவானைத் தேரிலிருந் திறக்கிப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டு போய்க் கோயிலில் ப்ரதிஷ்டை செய்து, திரு மஞ்சநம் செய்து,

ஆடையாபரணங்களால் அலங்கரித்து, சர்வோபசாரங்களும் செய்து பூஜித்து, ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து, சாமகாநமுழங்க, மங்களாரதி செய்து வணங்கி நின்றார்கள். அப்பொழுது அங்கு வந்திருந்த நல்லோர்களெல்லாரும், இந்தப் பாநுதாசராலல்லவோ பாண்டுரங்க பகவான் இங்கே யெழுந்தருளின தென்று அவரைக் கொண்டாடி, அவர் பக்தியைப் புகழ்ந்து, தாம் கொண்ட பெரு மகிழ்ச்சிக்கு அறிகுறியாகச் சர்க்கரை வழங்கி, திவ்ய ப்ரஸாத வகை, பலகார வகை முதலியவைகளையும் ஸ்ரீ கண்ணபிரானுக்குச் சமர்ப்பித்து, பாகவத கோஷ்டிக்கு விநியோகித்து, தாங்களும் ஸ்வீகரித்து, ஸ்ரீலக்ஷ்மீநாதனது திருவடியை வணங்கி நின்றார்கள். அந்தப் பண்டரிபுரத்திலுள்ளவர் யாவரும், பதினான்கு வருஷம் அரண்யவாசம் செய்து வந்த சக்ரவர்த்தித் திருமகனாராகிய ஸ்ரீ ராமபிரானைக் கண்டு திருவயோத்யையிலுள்ளார் சந்தோஷித்தாற்போலப் பாண்டுரங்க பகவானைக் கண்டு சந்தோஷித்தார்கள் என்று சொல்லி, மேலே, ஏகநாத ஸ்வாமிகளுடைய வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பாநுதாசர் சரித்திரம் முற்றிற்று.

# ௩எ-வது ஏகநாத சுவாமிகள் சரித்திரம்.

முற்கதையிற் சொன்ன பாநுதாசர் புதல்வர் சக்ரபாணியார், அவர் புதல்வர் ஞானப்ரகாச சூரியநாராயணர், அவர் மனைவியார் ருக்மிணீ தேவியார், அவர் திருவயிற்றில் ஒரு புதல்வர் அவதரித்தார். அவர் சாக்ஷாத் ஜகத்குருவாய் விளங்கத் தகுந்தவர், அவருக்குத் தாய் தந்தையர்கள், ஏகநாதர் என்று நாமகரணம் செய்து, அன்போடு வளர்த்து, தகுந்த பருவத்தில் உபநயநம், விவாஹம் முதலியவும் முடித்து வைத்து, மிகவும் மன மகிழ்ந்திருந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில், தைடண புரத்தில், ஞானக் கடலாயிருப்பவரும், தத்தாத்ரேயரை ப்ரஸந்நமாகப் பெற்றவரும், ஜநார்த்தந பண்டிதர் என்னும் பெயருள்ளவரும் ஆகிய ஒரு வேதியரிருந்தார். அவரிடத்துக்கு இந்த ஏக நாதர் போய் அவரை வணங்கி நின்றார். அந்தப் பண்டிதர் இவரைநோக்கி நீ யாரென்றும், இங்கேயென்ன நிமித்தமாய் வந்தாயென்றும், ஒளிக்காமல் உண்மையைச் சொல்லென்றும் கேட்க, இவர், பண்டிதரை நோக்கி, ஸ்வாமீ, அடியேனுக்கு, இந்தப்பிரபஞ்ச விஷயத்தில் சிறிதும் பற்றில்லை யாகையால் பரம புருஷார்த்தத்தை விரும்பித் தேவரீருடைய திருவடியை வந்து அடைந்தேன், அடியேனை யாண்டருள வேண்டுமென்று ப்ரார்த்தித்து நின்றார். அப்படி ப்ரார்த்தித்து நின்ற இந்த ஏகநாதரை ஜநார்த்தந பண்டிதர் பார்த்து, இவன் வயது கொஞ்சமாயிருந்தாலும் ஞாநம் பெரிதாயிருக்கின்றது என்று ஆச்சரியப்பட்டு, இவருக்கு அபயமதந்து சுகமாக என்னிடத்தில் இருக்கக்கடவாய் என்று நியமித்தருளினார். அவரது

கட்டளையை இந்த ஏகநாதர் சிரஸாவஹித்து, பூர்வகாலத்தில் நாரதமுநிவருடைய அருளைப் பெறுவதற்கு, த்ருவர் முயன்றாற்போல இரவும் பகலும் இடைவிடாமல் அவர் ஏவின பணிவிடைகளைச் செய்துகொண்டும், உறங்கும்போது கால்வருடிக்கொண்டும், தாம்பூலம் மடித்துக்கொடுத்தும், அவர் உமிழும்போது படிக மேந்தியும், பூஜா த்ரவ்யங்கள், அமைத்தும், அவருண்டு சேஷித்த ப்ரஸாதத்தை யுண்டும், இன்னும் பலகுற்றேவல்களைச் செய்தும், குருகுலவாசஞ்செய்து உடற் குயிர்போலவும் கண்ணுக்கிமை போலவும் அவரது உடற் காப்பில்நோக்கம் வைத்தும், அவர் சஞ்சரிக்கும் இடந்தோறும் ஊசியை நூல்தொடர்வதுபோலத் தொடர்ந்துசென்று, அதிகச்ரத்தையோடு காலங்கழித்தும் வரும்நாளில், இவருடைய நல்லொழுக்கம் முதலியவைகளைக் கண்ட ஜநார்த்தந பண்டிதர் மிகவும் சந்தோஷித்து, இவன் மநுஷ்யனல்லன், சிறந்த தேவனே யாமென்று இவர்மீது மிகவும் கருணைசெய்து, ஏகநாதா, இங்கே வா வென்றழைத்து, கால மெல்லாம் எனக்குப் பணிவிடை செய்துகொண்டே யிருந்தால், உன் தாய் தந்தையர்கள் மூப்பினாலும் வறுமையினாலும் மனந்தளர்ந்து துக்கிப்பார்கள். ஆகையால் அவர்களுக்கு அந்ந வஸ்திரங்கள் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும் என்றுசொல்ல, அப்படியே தாய் தந்தையரைக் காப்பாற்றுவதிலும், குருசேவை செய்வதிலும் சோர்வில்லா திருப்பதைக் கண்ட சற்குரு நாதர், இவரைத் தமது மடத்தில் ஒரு கணக்குவேலை பார்க்கும்படி நியமிக்க, அப்படியே ஒவ்வொரு நாளும் வரவு செலவு கணக்குகள் முறையே பதிவுசெய்து ஆசிரியருக்குக் காட்டி அவரை மனமகிழ்வித்துக் கொண்டு வருங் காலத்தில், ஒருநாள், கணக்கில் ஒரு காசு வித்தியாசமாயிருக்க, அதைக்கண்டு சரிப்படுத்த வேண்டுமென்று தீபம் வைத்துக் கொண்டு கணக்கை ஆராய்ந்து கொண்டிருந்தார், அன்றிரவில், வெளியே சயனித்துக் கொண்டிருந்த பண்டிதர், நடுராத்திரியில் விழித்து, தமக்குச் சமீபத்தில் சயனித்துக்கொள்பவராகிய ஏகநாதரைக் காணாமல் எழுந்து, இவர் தீபம் வைத்துக்கொண்டு கணக் காராயுமிடத்திற் போய், இவரறியாமல் இவர்க்குப் பின்புறத்தில்நின்று பார்த்திருந்தார். பிறகு இவர்கணக்குச் சரிப்பட்ட வுடனே, சிரித்துக் கை கொட்டி மகிழ்ந்தார். அதைக் கண்ட ஜநார்த்தந பண்டிதர் இவர்க் கெதிரே வந்து நின்று, எதைக் கண்டு நீ சிரித்தாயென்று கேட்க, தலை நிமிர்ந்து குரு நாதரைப் பார்த்து, எழுந்து வணங்கி, கணக்கில் பிசகாயிருந்த ஒரு காசு சரிப்பட்டுவந்த சந்தோஷத்தால் சிரித்தேன் என்றார். இதைக்கேட்ட ஆசாரியர் ஏகநாதர் முகத்தை நோக்கி, ஒரு காசு விஷயத்தில் உன் சித்தம் லயித்ததுபோல ஸ்ரீகண்ணபிரான் திருவடியிலே லயித்ததானால், நீ ஜந்ம சாகரத்தைக் கடக்கலாம் என்று சொல்ல, இவர் குருநாதரை நோக்கி, ஸ்வாமீ! இந்தக் கண்ணபிரான் திருநாமத்தைத் தேவரீர் திருவாக்கினால் கேட்டுக் க்ருதார்த்தனானேன் என்று ஸ்ரீ க்ருஷ்ண நாமத்தில் பதிந்த மனத்தையுடையவராய், ப்ரபஞ்ச விவகாரங்களை மறந்து அந்தச் சற்குருநாதரிடத்தில் உண்மையாய்க் கணக்கை ஒப்பித்தார். அதைக்

கண்டு, குருநாதர், இவன் மனநிலை யுள்ளவனென்றும், இவனுக்குச் சொல்லுவது பயன்படுமென்றும் நிச்சயித்து, இவர் காதில் தாரகமந்த்ரத்தை உபதேசித்தார். அன்று முதலாக ஏகநாதர் அந்த மந்த்ரத்தை யநுசந்தித்துக்கொண்டும், குருசேவையும் செய்துகொண்டும் வருவாராயினர். அதைக்கண்ட ஜநார்த்தந பண்டிதர் இவனுக்கு நமதுகுருசேவை செய்விக்க வேண்டுமென் றெண்ணி, இவரை நோக்கி ஏகாநாதா! நீ என் குருசேவை செய்யச் செய்வேன், ஆனால் அவர் தமது உருமாறி வருவார், நான் பேசும் விதத்தினாலே நீ அவரைத் தெரிந்துகொண்டு பேதமில்லாமல் வணங்கு, அவர் சாப்தோஷித்துக் கொடுப்பது எதுவாயிருந்தாலும், அதனை நீ கையாலேற்று அன்போடு உண்ணக்கடவாய் என்று சொன்னார். அதைக்கேட்ட இவர், பாக்யம் என்று சொல்லி வணங்கினார். பின்பு ஒரு தினத்தில் குருநாதர் இவரை யழைத்துக்கொண்டு காட்டுக்குப்போனார். அவ்விடத்தில் தத்தாத்திரேயர் பட்டாணி யுருவங்கொண்டு குதிரைமேலேறிவந்தார். அதை ஜநார்த்தநர் கண்டு, தமது சீடராகிய ஏகநாதரை நோக்கி, என்குருநாதர் வருகிறார், நீபாரென்று சொல்ல, ஏகநாதர் பார்த்து, குதிரைமேலேறிக் கையில் வாள் பிடித்துக் கொண்டு வருகிற ஒரு துருக்கனைத் தமதுகுருவென்று சொல்லுகிறார், இது என்ன புதுமையென்று எண்ணிக்கொண்டே யிருக்கும்போது, அவரும் கிட்டி வந்துவிட்டார்; இவர் அவரைக் கண்டும் வணங்காமல் அவமதித்திருந்தார். பண்டிதர் மாத்திரம் வந்தவரைத் தாழ்ந்து வணங்கினார். வணங்கின ஜநார்த்தநரோடு அநகூயை புத்திரராகிய தத்தாத்திரேயர் மிலேச்ச பாஷையிற் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்த பிறகு, தத்தாத்திரேயர், ஜநார்த்தநரைநோக்கி, எனக்குப் பசியாயிருக்கிறதென்றார். ஜநார்த்தநர், தக்ஷணமே தமது தபோமஹிமையால் பாகம் செய்த அறுசுவையோடு கூடிய திவ்யாந்நத்தை, ரத்ந பாத்திரத்தில்சேர்த்து, குருசிஷ்யர்களாகிய, இருவரும்உண்டார்கள். உண்ணும் போது, ஜநார்த்தநரை நோக்கி, இந்தச் சிறுவனுக்கும் நம் மோடுண்ண விருப்ப முண்டானால் அழைக்கலாமே யென்று சொல்லக் கேட்டுக் கொண்டிருந்த ஏகநாதர், இந்தத் துருக்கனோடு எப்படி யுண்பது என்று விரைந்து விலகிப்போக, த்ரிமூர்த்தி ஸ்வரூபராகிய தத்தாத்ரேயர் உண்டு மறைந்து போனார். மறைந்த பிறகு, ஏகநாதர் தமது குருவினிடத்திற்கு வந்து வணங்கி, குருநாதரே, குதிரைமேலேறி வந்தவரைக் குருவென்றீர், சமீபத்தில் வந்த பிறகு பார்த்தால் அவர் துருக்கர் போலக் காணப்பட்டார்; அவரை வணங்கி அவரோடு உண்டீர், இது என்ன புதுமையாயிருக்கின்றது என்றவுடனே, ஜநார்த்தநர், ஏகநாதா, என் குருநாதர் உருவமாறி வருவா ரென்று முன்பே சொல்லி யிருந்தேன், அதை மறந்து விட்டாய், அவர், அத்திரிப் புதல்வர் அவரைத் தரிசிப்பது யாவருக்கும் துர்லபம்; அப்படி அருமையானவர்வர, அம்ருதத்தைக் கழுநீரென்று நினைப்பதுபோல அவரைச் சாமாநியராகநினைத்தாய், பலவகையாகிய யோகாப்யாஸம் செய்யலாம், எல்லாப்ராணிகளுடைய ஹ்ருதயத்தையும் அறியலாம், சப்த சமுத்ரங்களை

யும் க்ஷணப்பொழுதில் நீங்தலாம், த்ரிகால வர்த்தமாநத்தையும் அறியலாம், த்ரிமூர்த்தி ஸ்வரூபராகிய தத்தாத்ரேயரைக் காண்பது மிகவும் அருமை. அப்படியிருக்க, அந்த மஹாத்மாவானவர் நமக்கு எளிதாய்க் காட்சிகொடுத்தும், நீ அவரை வணங்கிஉஜ்ஜீவிக்காமல் அவமதித்திருந்தது உனக்குத் தகுதியாகுமோ? இனி யாகிலும் அவர் வந்தால் அவரை வணங்கி அவர் அருள் செய்யப் பெற்றுக்கொள் என்று சொல்ல, இவர் அதற் கிசைந்து, ஜநார்த்தந பண்டிதரோடு மடத்துக்குப் போய் வசிக்கும் காலத்தில், மற்றொரு நாள், பண்டிதர், ஏகநாதா, நீ யின்றைக்கும் என்னோடு காட்டுக்கு வா, என் குரு நாதர் எந்தரூபங் கொண்டுவந்தாலும் நான் எச்சரிக்கிறேன், நீ கண்டுகொள் என்று சொல்லி அழைத்துக் கொண்டுபோனார். போன அந்தக்காட்டில், தத்தாத்ரேயர், பக்கிரிரூபங் கொண்டு, காமதேநுவோடு வந்து சேர்ந்தார். அவரைக் கண்ட ஜநார்த்தநர், எதிர் கொண்டு வணங்கவும், அவர் இவரைத் தழுவிக்கொண்டு, உணவு கொடுக்கவேண்டு மென்று கேட்க, இவர், அவர் கொண்டுவந்த காமதேநுவின் பாலைக்கறந்து, அதில் பாகஞ்செய்த உணவைக் கொடுக்க, அவர் இவரைக் கூடவைத்துக்கொண்டு உண்ணும்போது, இந்தச் சிறுவனைச் சேர்த்துக்கொண்டு உண்போம, அவனையழையும் என்றுசொல்ல, ஜநார்த்தநர் ஏகநாதரை நோக்கி, நான் என்குருவென்று முன்னேசொன்னவர் இவர்தாம் என்று குறிப்பா யறிவிக்க, ஏக நாதர் நெருங்கி வந்து நிற்க, தத்தாத்ரேயர், இவரை நோக்கி, உண்ண வா வென்றழைத்தார். அப்போது இவர் அஞ்சி நின்று, ஸ்வாமீ, தேவரீர் ஸ்ரீ ஹஸ்தத்தால் ப்ரஸாதம் தந்தருளுவீர் என்று சொல்ல, அப்படியே தமது செவ்வாயிற் பரிசித்த வுணவைத் தமது திருக்கையாலேந்தித் தருதலும், ஏகநாதர் அன்போடு முன்றானையில் வாங்கிக்கொண்டார். பிறகு இருவரும்உண்டு முடிந்தது. அப்போது தத்தாத்ரேயர், இந்தச் சிறுவன் யாரென்று ஜநார்த்தநரைக் கேட்க, அவர் இந்த ஏக நாதரை அருகேயழைத்து, குருநாதர் திருவடியில் கிடத்தி, இவன் என்னை ஆசிரயித்தவன் என்று சொல்ல, தத்தாத்ரேயர் இவரைக் கடாக்ஷித்து, அருளோடு சொல்லுகிறார். எப்படி யென்றால், வேத சாஸ்திரங்களாகிய பாற் கடலைக் கடைந்தெடுத்த ஸாராம்ஸமான வெண்ணெயென்று சொல்லத்தகுந்த ஸ்ரீ பாகவதத்தின் அர்த்தம் ஆழமா யிருப்பதனால், அதை ப்ராக்ருத பாஷையில் தெளிவாய்ச் செய்யவும், ஸ்ரீ ராமயணத்தையும அப்படியே செய்யவும், ஸ்ரீ ஹரிகீர்த்தநங்கள் செய்யவும் இவன் சமர்த்தனுகக் கடவனென்று இவர் தலைமேல் கையை வைத்து ஆசீர்வதித்துப் போனார். அதைக் கண்ட ஜநார்த்தநர் ஏகநாதரை நோக்கி, என் குரு நாதர் கொடுத்த ப்ரஸாதத்தை யென்ன செய்தா யென்று கேட்க, நிலத்தின்மே லெறிந்து விட்டேனென்று சொல்ல, ஜநார்த்தநர் மனம் வருந்தி, தமது திருவாயிலிருந்த தம்பலத்தைஉமிழ்ந்துகைக்கொண்டு ஏகநாதர்வாயிலிட்டுக்கைப்பற்றிக்கொண்டு மடத்துக்குப் போய், ஹரி நாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு, இருவரும் மிகவும் ஒற்றுமையா யிருக்குங் காலத்தில், ஒரு நாள் ஜநார்த்தநர், இனி

இவனிடத்தில் நாம் வேலை வாங்குதல் தகாதென்று ஆலோசித்து, சீடனை நோக்கி, இனி உன் ஊருக்குப் போய் இல்லறத்தில் அமர்ந்திருந்து, நீராடல் முதலிய நித்ய கர்மங்களை நடத்திக்கொண்டு, மெய்ஞ் ஞானத்தை யடைந்தாலும், நித்ய கர்மத்தையும் ஹரி பஜனையையும் விடாதிருப்பாயானால், ஸ்ரீ கண்ணபிரான் உனக்கு ப்ரத்யக்ஷமாய் வந்து க்ருபை செய்வார் என்று அன்போடு வாழ்த்தி அபயங் கொடுத்து அநுக்ரஹஞ் செய்து அனுப்ப, ஏகநாதர் தமதூரில் வந்து சேர்ந்து தமது மனையிற் ப்ரவேசித்துத் தாய்தந்தையரை வணங்க, அந்த முதுமைப் பருவமுள்ள தாய் தந்தையர் இவரை வாரி மார்போடணைத்து, உச்சி மோந்து பேரானந்த மடைந்திருந்தார்கள். பிறகு இவர் தமது ஆசாரியர் சொன்னபடியே, மாதா பிதாக்களுடைய சேவை, நித்ய கர்மாநுஷ்டானம், சர்வ ப்ராணிகளிடத்திலும் அருளுடைமை முதலிய சற்குணங்களோடு கூடி, தம தகத்தி லெழுந்தருளி யிருக்கிற பாண்டுரங்க பகவானைப் பூஜித்துத் தோத்திரம் செய்து வணங்கி, வலம் வந்து, துளசி தீர்த்தத்தை யெல்லார்க்குங் கொடுத்துத் தாமும் ஸ்வீகரித்து, பிறகு வேதியரோடிருந்து அமுது செய்து முடிந்த பிறகு, புராண காலக்ஷேபமும் ஹரிநாம ஸங்கீர்த்தனமும் செய்து, கண்ணுறங்குவா ராயினர். இப்படி நடக்குங் காலத்தில், இவருடைய செய்கையை யறிந்தவ ரெல்லாரும், இவர் அவதார புருஷரே யன்றிச் சாதாரண மனித ரல்லரென்று சொல்ல, சற்குருநாதருடைய திருவருளால் அநேக கவிகளையுஞ் செய்தார். அவற்றைக் கண்ட கேட்ட சாதுக்களெல்லாரும் மிகவும் புகழ்ந்து கொண்டாடினார்கள். இப்படியிருக்க, ஒரு நாள் ஸ்ரீ ராமபிரான் இவருடைய கனவில் வந்து, வால்மீகி முனிவர் வடமொழியிற் செய்த ஸ்ரீ ராமாயணம் விரிவாயும் பொருளறிதல் அருமையாயும் இருப்பதால், அதை உலகத்தார் எளிதி லறியும்படி ப்ராக்ருத பாஷையிற் செய்யக்கடவா யென்று நியமித்து மறைய, உடனே கண்விழித் தெழுந்து, வடமொழி இராமாயணத்தின் பொருள் முழுதும் ஆராய்ந்து மனத்திலமைத்துக்கொண்டு, ப்ராக்ருத மொழியிற் செய்துவருங் காலத்தில், இவர் வீட்டிற்கு அயல் வீட்டுக்காரன், வடமொழி இராமாயண மிருக்க, இவன் இப்படிச் செய்வதில் என்ன ப்ரயோஜனமென்று இகழ்ந்து வருவானாயினன். இப்படி யிருக்க, இவர் செய்யும் ப்ராக்ருத ராமாயணத்தில் பகவானானவர், மிகவும் விருப்பங் கொண்டு, பின்னும் ஒரு நாள் இவரது கனவில் வந்து, இவரைத் துயிலெழுப்பி, இராமாயணத்தைப்பாடிமுடிக்கக்கடவா யென்றும், உன் மதுரமொழிகளைக் கேட்க விருப்பமுடையேன் என்றும் சொல்லி மைக்கூடும், எழுதுகோலும் அருகில் வைத்து மறைய, ஏகநாதர், அருகிலிருந்த எழுது கருவிகளைக் கண்டு, இவற்றைக் கொண்டு வந்து இங்கே வைத்துப் போனவர் பகவானே யாகவேண்டு மென்று நிச்சயித்து, இராமாயணத்தை யெழுத முயலுங் காலத்தில், மகேந்திரகிரியிலிருந்து ஸ்ரீ ஆஞ்சநேயர் கடலைத் தாண்டுகிற கதா சந்தர்ப்பத்தில், அவரது வேகத்தை மனத்திற் கொண்டு அவசரமாய்ப் பாய்ந்து, அயல் வீட்டின் முற்றத்தில் விழுந்தார். இவர் விழு

ந்த ஒலியைக் கேட்டு அயல் வீட்டுக்காரன் எழுந்து வந்து இவர் மூர்ச்சித்து க் கிடப்பதைக்கண்டு, இவர் கையிலிருந்த காகிதத்தைப் படித்து, அநுமான் கடலைத் தாண்டுதற்காகப் பாய்ந்த சந்தர்ப்ப மிருக்கக் கண்டு, இவர் தம்மை அநுமானாகப் பாவித்துப் பாய்ந்தாரென் றறிந்து, இவரை நோக்கி, நீர் இங்கே வந்து விழுந்ததற்குக் காரணம் யாதென்று கேட்க, இவர் மறுமொழி சொல் லாதிருக்க, அவனுக்கு இவர்மீது இரக்க முண்டாகி, இவர் அவதார புருஷ ரென் றறிந்துகொண்டு,இவரை வீணாக நாம் இகழ்ந்தோமென்று பரிதபித்து இவரை யெடுத்து மார்போ டணைத் தாக் கொண்டு வந்து இவர் வீட்டிற் சேர் த்தான். சற்று நேரத்தில் இவர் மூர்ச்சை தெளிந்திருந்தார். அதை யறிந்த அயல் வீட்டுக்காரன் வந்து இவரை வணங்கி, அறி வில்லாதவனான என்னு டைய பிழையைப்பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்துத் தன்வீட்டு க்குப் போய்விட்டான். பிறகு கொஞ்ச காலங் கழித்து, ஒரு நாள் இவரிட த்தில் உபதேசம் பெறவேண்டுமென் றெண்ணி, இவர் திருவாராதநஞ் செய் யுங் காலத்தில் வந்து, தேவரீருடைய மஹிமையை யறியாமல் இகழ்ந்திரு ந்த குற்றத்தைப் பொறுத்து, எனக்கு உபதேசம் செய்தருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, இவர் சற்றுநேரம் மௌநமா யிருந்து, அவனை நோக்கி, உனக்குத் தகுந்த குருவை யடைந்து உபதேசம் பெறக்கடவா யென்றார். அப்படிச் சொல்லியும் அவன் கேட்காமல் உம்மிடத்திலல்லாமல் வேறொருவ ரிடத்தில் நான் உபதேசம் பெறமாட்டேன் என்று பிடிவாதஞ் செய்வதைக் கண்ட தாசர், இவன் நல்லவ னல்லவென் றுட்கொண்டு, நாளைக்குச் சுதிந மாதலால், நீ நீராடி வா வென்றார். அவன் அப்படியே யாகட்டு மென்று போன பிறகு, தமது வீட்டி லுள்ளவர்களைப் பார்த்து, நாளைக்கு ஸ்ரீலக்ஷ்மீ நாதனுக்குத் திருமஞ்சன தீர்த்தம் கொண்டுவர வேண்டியதில்லை, நான் சொ ன்னாலும் நீங்கள் கொஞ்சம் தாமதப்படுத்துங்கள் என்று வற்புறுத்திச் சொ ல்லி, மறு நாள் காலையில் எழுந்திருந்து, நீராடி, திருவாராதநம் செய்கிற போது, அயல் வீட்டுக்காரன் வந்து வீட்டி லுள்ளவர்களை நோக்கி, இன்ன மும் பகவானுக்குத் திருமஞ்சன தீர்த்தம் என் கொண்டுவாராம லிருக்கின்றீர் கள்? கொண்டுவாருங்களென்று சொல்ல, அவர்கள் கொண்டுவராம லிருந்து விட்டார்கள். பிறகு பகவத் தியானத்திலிருந்ததாசர் கண்திறந்து,எதிரேநிற்ப வனைப் பார்த்து, இவனது நற்குணத்தை யறிவோமென்று நினைத்து, இங்கே புண்ணிய தீர்த்தங் கொண்டுவருவோர் ஒருவரு மில்லையோ வென்று கேட்க, வீட்டி லுள்ளவர்களும் அயல் வீட்டுக்காரனாகிய இவனும் சும்மா இருக்க, தாசர் தாமே ஒரு செப்புப் பாத்திரத்தை யெடுத்துக் கொண்டு போய் நீர் கொண்டு வந்து பூஜை செய்யத் தொடங்கும்போது, அவன் வந்து, ஸ்வாமீ, அடியேனுக்கு உபதேசம் செய்தருள வேண்டு மென்றான். அப்போது தாச ரானவர் அவனை நோக்கி, திருமஞ்சன தீர்த்தங் கொண்டுவருவோ ரில்லாமை யால் நேரமாயிற்று, உபதேசத்துக்கென்று நிச்சயித்து வைத்த சுபமுஹூர் த்தமும் போய்விட்டது, இனி யென்னசெய்யலா மென்று சொல்ல, அவன்

வீட்டுக்குப் போய்விட்டான். பிறகு ஏகநாதர் தமது பூஜையை நிறை வேற்றினார்.

இப்படி யிருக்குங் காலத்தில், ஜநார்த்தந பண்டிதர் இவரை யழைத்து முகத்தை நோக்கிச் சுலீபமலையென்று ஒன்றுண்டு, அதன் பக்கத்தில் சூரிய தீர்த்தமென்று ஒரு தீர்த்த முண்டு, அதனருகே மனோஹரமான மார்க் கண்டேயாசிரமமென்று ஒன்றுண்டு, அங்கே அநேகம் சாதுக்கள்வந்து திரு மாலை வணங்கி மோக்ஷ மடைகிறார்கள். அந்தப் புண்ய க்ஷேத்ரத்தை யடை ந்து, அந்தச் சூரிய தீர்த்தத்தில் நீராடி, பாண்டு ரங்கனை த்யாநித்துக்கொண் டிருப்பாயானால், அந்த விட்டலப் பெருமானுடைய சேவை உனக்கு எளி தாகக் கிடைக்கும், அப்படி அந்தவிட்டலப்பெருமானுடைய சேவைகிடைத்த பிறகு என்னிடத்திற்கு வாவென்று சொன்னார். அப்படியே இந்த ஏகநாதர் சுலீப மலையை யடைந்து சூரியதீர்த்தத்தில் மூழ்கிக் கிழக்கு முகமாயிருந்து, ஏகாக்ரசித்தராய்ப் பகவத்யாநம் செய்துகொண் டிருக்கும்போது, அந்தமலையி லுள்ள ஒரு பாம்பு வந்து இவரைச் சூழ்ந்து கொண்டு, இவரது திருமேனி ஸ்பரிசத்தால் அதன்கொடுமை நீங்கி, இவருக்குத் தன்படம்விரித்துக் குடை பிடித்துக்கொண் டிருந்து, இவர் த்யாநம் விட் டெழுந்தவுடனே போய்விட் டது. அது முதலாகத் தினந் தோறும் அப்படியே செய்து வந்தது. இப்படி யிருக்க, அந்த மலையின் அடிவாரத்தி லிருப்போனொருவன், அவ்விடத்தில் வந்து தவஞ் செய்வோ ரெல்லாருக்கும் தன்னா லியன்ற வுதவிசெய்வோனாத லால் இந்த ஏகநாதருக்குத் திநந்தோறும் பால் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருக்க, இவர் வாங்கி யுண்டு தாஹம தணிந்திருப்பார். ஒருநாள் இவர் யோக நிஷ்டையிலிருக்கும்போது பால் கொண்டு வந்து இவர் எழுந்திருக்கு மளவும் காத்துக்கொண் டிருந்தான். அப்போது, வழக்கம் போலப் பாம்பு வந்து தன் படத்தை விரித்துக் குடையாகப் பிடித்துக்கொண் டிருப்பதை அவன் கண்டு பயந்து, ஐயோ, இந்தப் பரம சாதுவைத் தீண்டித் தீங்கு செய்யுமே யென்று அநுதபித்து, பகவானை ப்ரார்த்தித்து, இந்தச் சாதுவுக்கு த் தீங்கு நேரிடவொட்டாமல் காத்தருளவேண்டுமென்று முறையிட்டலறி னான். இந்தச் சத்தத்தைக் கேட்ட தாசர் அவனை நோக்கி, நீ யேன் கூவினை யென்று கேட்க, அவன் பாம்பின் வரலாற்றைச் சொல்ல, தாசர், இது ஒரு ஆச்சரியமோ! ஸ்ரீஹரிபாத த்யாநம் செய்வோரைக் கண்டால் யமனும் அஞ்சுவான் என்று சொல்லி அவனை யனுப்பி விட்டு, பகவானை ஸ்மரித்து, ஓ பண்டரி நாதா, உன்னுடைய திருவருளுருவத்தைக் காணவேண்டுமென் கிற எண்ணங் கொண்டு இங்கே வந்து தங்கி யிருக்கிறேன்; என் எண்ணம் நிறைவேறும்படி க்ருபை செய்யவேண்டும் என்று பல வகையாய்த் தோத்தி ரம் பண்ணி, அனலி லிட்ட வெண்ணெய்போல மன முருகி நிற்க, விட்டலப் பெருமானனவர், இவரது வேண்டுகோளுக் கிரங்கி, சகுண ரூபங் கொண்டு, பஞ்சாயுதம் பீதாம்பரம் முதலியவற்றோடும் இவருக்கெதிரே யெழுந்தருள,

இவரெழுந்து பகவானைத் திருவடி தொழுது நின்றார். அப்படி நின்றவரைப் பகவானுனவர் எடுத்து மார்போடணைத்துத் தழுவி, உன் விருப்பத்தின்படியே உனக்கு ப்ரத்யக்ஷமானேன். இதுவுமன்றி, உன்னை எந்தக் காலத்திலும் ஒரு துன்பமு முண்டாகாமல் காப்பாற்றுவேனென்று சொல்லியதை, பால் கொண்டு வந்து அயலில் நிற்பவன் கண்டு, தவயோகங்களில் ஒன்றுஞ் செய்யாமல் ஏகநாதருக்குப்பால்கொண்டு வந்து கொடுத்துக்கொண்டிருந்த புண்ணிய விசேஷத்தால், வேதங்களாலும் அளவிடப்படாத பகவானைக் கண்டு களிக்கலாயிற் றல்லவாவென்று, அன்போடு பகவானை வணங்கித் தோத்திரிக்க, பகவானும் அவனைக் கடாக்ஷித்து மறைந்து போனார், பிறகு பால் கொண்டு வந்தவன், பாலை ஏகநாதருக்குக் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். பிறகு ஏகநாதர் பேராநந்த மடைந்து, தமது ஆசிரியராகிய ஜநார்த்தந பண்டிதரிடத்திற் போய், அவருடைய திருவடியை வணங்க, அவரும் இவரை மார்போ டணைத்துத் தழுவினார். தழுவின பிறகு, ஊருக்குப் போய்வாருமென்று விடை கொடுக்க, இவர் தமது ஊருக்குப்போய் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்துவரு காலத்தில், பண்டரிபுரத்தில் எழுந்தருளியிருக்கிறஸ்ரீகண்ணபிரான்இவரிடத்திற்குப்போகவேண்டுமென்று திருவுளங்கொண்டு, ஒரு வேதியனுருவங் கொண்டு வந்து, தேவகிரியிலுளளோரை நோக்கி, ஒரு வேற்றூரிலிருந்து வேதியர் வந்தால் அவர்களுக்கு அந்நமிடத் தகுந்தவர்களாய் இவ்வூரில் யாரிருக்கிறார்கள் என்று கேட்க, அவர்கள் ஏகநாதரைச் சுட்டிக் காட்ட, அவரிடத்திற்குப் போய், ஸ்வாமீ, ஏழையாயும் பரதேசியாயுமிருக்கிற நான், இவ்வூரில் ப்ரபலமான அந்நதானஞ் செய்வதில் நீர் மிகவுஞ் சிறந்தவ ரென்று கேள்விப்பட்டு வந்தேன், எனக்கு அந்ந வஸ்திரங் கொடுத்துக் காப்பாற்றினல், எப்பொழுதும் பணிவிடை செய்து கொண்டு இங்கேதானே யிருந்துவிடுவேனென்றார். அது கேட்ட ஏகநாதர், நீர் எங்கேயிருந்து வந்தீர், உமது பெயர் யாது என்று வினவ, அந்த வேதியர், எனக்கு ஒரு வூரென்ப தில்லை, என் பெயர் கண்டியா, என் மனத்துக் கிசைந்தவர் யார் என்று தேடிவந்தேன்; தேடின விடங்களில், ஹரிபக்தராகிய வும்மைப்போலப் பெருங் குண முடையா ரொருவரையுங் கண்டிலேன் என்று சொல்லக் கேட்ட ஏகநாதர், பகவானாகிய வேதியரை நோக்கி, உமக்கு இங்கே யிருக்கச் சம்மதமானுல் இருக்கலாமென்று சொல்ல, ஸ்ரீகண்ணபிரான் அதற்கிசைந்து அவர் வீட்டு வேலைகளைச் செய்ய விருப்பங்கொண்டு அவர் வீட்டிற் பிரவேசித்து, தினந் தோறும் காலையி லெழுந்து கோமயம் கொண்டு வந்து குவித்தல், குப்பையை விளக்கி யகற்றுதல், மெழுகுதல், பாத்திர வகைகளைச் சுத்தி செய்தல், வஸ்திரங்கள் துவைத்தல், காவடிநீர் கொண்டு வருதல், சந்தந மிழைத்தல், மலர் தொடுத்தல், விளக்கேற்றல், இவரது தேவியாரிடும் பணிவிடைகள் செய்தல், தயிர் கடைதல், வெண்ணெய் திரட்டி யெடுத்தல், போஜந வகைகளை யன்போடு செய்து நிறைத்தல், போஜந சாலையைச் சுத்தப்படுத்துதல், தாசரது தேவியாரை இன்ன

மென்ன வேலை செய்ய வேண்டுமென்று கேட்டல், பூசை முடிந்த பிறகு
வருகிற வேதியரோடு கூடியிருந்து தாசரு முண்ணும்படி அமுது பரிமாறு
தல், உண்ட பிறகு வாய் பூசும் நீர் முதலியவை கொடுத்தல், சந்தன புஷ்ப
தாம்பூலாதிகள் கொடுத்தான பின்பு, எச்சிலிலைகளைக் கொண்டுபோய் வீட்டு
க்கு நெடுந் தூரத்திற் சேர்த்தல், உண்ட விட மெல்லாஞ் சுத்தி செய்தல்,
இந்த வேலைகளெல்லாம் முடிந்தபிறகு, தமது கால் கைகளைச் சுத்திசெய்து
கொண்டு, தாமும் அமுது செய்து, பிறகு இரவில் நடக்கவேண்டிய புராண
காலக்ஷேபம் ஸ்ரீஹரி பஜனை முதலியவைகளுக்கு வேண்டியவற்றையும்
அமைத்து, அவை முடிந்த பிறகு படுக்கை யமைத்து, இன்னமும் வேண்டு
வனவாகிய குற்றேவல்களையுஞ்செய்து, தாசர் கண்ணுறங்கின பிறகு தாமும்
உண்டு உறங்க விரும்புவார். இந்தவிதமாகத் தினந் தோறும் செய்து வருங்
காலத்தில், தாசருடைய தாய்தந்தையர் பரமபதமடைந்தார்கள். அவர்களுக்கு
ச் சரம கைங்கர்யங்க ளெல்லாங் குறைவற நடத்தி, ஒரு வருடம் கழிந்து,
பிதிர்த்தினம் வர, தாசர், அவ்வூரிலுள்ள வேதியரிடத்திற் போய் நாளை எமது
வீட்டில் சிரார்த்த மாகையால், போஜநத்துக்கு வாருங்கள் என்று சொல்லி
வீடு வந்து சேர்ந்திருந்தார். மறுநாள் விடியற்காலத்தில் எழுந்து நீராடி,
நித்திய கர்மங்களை முடித்துப் பூஜையையும் நிறைவேற்றி, மேலுப்பரிகையி
லிருந்தார். அப்பொழுது வீதியில் ஒருபுலையனும், புலைச்சியும் வந்து குப்பை
கூட்டும்போது, இவர் வீட்டில் வேதியர் பொருட்டுச் சமைக்கிற அந்நம்,
பதார்த்த வகைகள் இவற்றின் நறுமணத்தைப் புலைச்சி யறிந்து தன் கணவ
னுக்குச் சொல்ல, அவன், பெண்ணே, அந்த அந்நாதிகள் வேதியர்க்கல்லது
நமக்கெப்படி கிடைக்கும்? கிடைத்தாலும் உண்ணத்தகாது, வேதியருண்ட
எச்சிலாயினுங் கிடைத்தால் நாம செய்த புண்ணியம் என்று சொல்லி, அந்த
எச்சிலும் சிரார்த்த தினத்திலல்லது மற்ற நாட்களில் கிடைப்பது அருமை,
அந்தஎச்சிலிலைகளையும் கண்ணுக்குத் தெரியாமல் நிலத்திற் குழி தோண்டி,
அதிற் கவிழ்த்து மூடுவார்கள், நீயேன் வீணாசைப்படுகிறாயென்று சொல்லு
வதை உப்பரிகைமே லிருந்தவர் கேட்டார். கேட்டுக் கீழே யிறங்கி வந்து
தமது மனைவிக்கு இந்தச் செய்தியைச் சொல்லி, அவர்களுக்கு இப்போது
சமைத்த அந்நத்தை யிட்டால் நலம என்று சொல்ல, தேவியாரும், அப்படி
யே செய்யலாம், ஆனால் அவ்விருவருக்கு இட்டு மிகுந்ததை வேதியர்க் கிட
லாகா தாகையால் அவரது சுற்றத்தா ரெல்லாரையும வரவழைத்து இப்பொ
ழுது சமைத்ததை யெல்லாம் அவர்களுக்குக் கொடுத்து விட்டு, வீடு முத
லானவற்றைச் சுத்தி செய்து, புதிதாகச் சமைத்து வேதியர்க்குப் படைக்க
லாம் என்று சொல்ல, அது சரியான காரியம் என்று ஏக நாதர் அப்படியே
நடத்திவிட்டார். உண்ட புலையர்கள் மிகுதியாய்க் களித்து வாழ்த்திப் போனா
ர்கள். பிறகு வீடுவாசல்முழுதும் சுத்திசெய்து, முன்போலவே புதியதீர்த்தம்
கொண்டுவந்து சமையல் செய்வித்து அமைத்துவைத்துக்கொண்டு, வேதியர்
க்காக எதிர் பார்த்திருக்கையில், வேதியர் வந்து இப்படி யெங்களை வரச்

சொல்லி, எங்கள் பொருட்டுச் சித்தப்படுத்தின போஜநத்தைப் புலையர்க் கிடுவது நீதியோ? அந்தப் புலையர்தாமோ உன் பிதிரர் என்று பலவகையாய்க் கடிந்து பேச, ஏக நாதர் அவர்களை நோக்கி, உங்களுக் கென்று சமைத்த போஜந வகைகளின் நறுமணத்தை வீதியிற் குப்பை விளக்குகிற புலையனும் புலைச்சியும் கந்தித்து, இந்தப் போஜந வகைகள் நமக்கெப்படிக் கிடைக்கு மென்று பேசிக் கொண்டார்கள். அதை நான் கேட்டு, இந்தப் புலையர் கந்தித்த இந்த போஜந வகைகளை வேதியர்க்குப் படைப்பது தருமமல்லவென்று அவர்களுக்கே உபயோகபபடுத்தி விட்டு, முன்போலவே வீடு வாசல்கள்சுத்திசெய்து,நூதந தீர்த்தங்கொண்டுவந்து சமையல்செய்து சித்தமாயிருக்கின்றது. இப்படிசெய்ததிலும் குற்றமிருநதால் க்ஷமித்துச்சிரார்த்த கர்மத்தை நிறைவேற்றி யருளவேண்டுமென்று சொல்ல, வேதியர்கள் ஏக நாதர் முகத்தை நோக்கி, யாகாமிர்தத்தை நாய்க்கிடுவது போலவும், திருத்துழாயை மசிதிற் கொண்டுபோய் வைப்பதுபோலவும்,எங்களுக்கு உபயோகிக்கத் தகுந்தவைகளைப் புலையருக்கு உபயோகித்தது மல்லாமல், சமாதாநமும் சொல்லவந்தாய்; உன்வீட்டில் நாங்கள் உண்ணமாட்டோ மென்று சொல்லிப் போய்விட்டார்கள். அதன்பிறகு ஏகநாதர், மனம் வருந்தி, தமது வீட்டில் வேலை செய்கிற கண்டியாவி னிடத்திற்கு வந்து, நீர் ஏன் விசனமடைந்தவர்போலிருக்கிறீர் என்று கேட்க, அந்தக் கண்டியா சொல்லுகிறார். பிதிர்த்திநத்தில் விசநமடைந்திருப்பது நன்மையல்ல, நீர் விரும்பினால் பிதிர்க்க ளெல்லாம் வரமாட்டார்களோ? வந்து சிரார்த்த திநமாகிய இன்று இங்கே சம்ப்ரமாகப் புசித்துப் போவார்கள் என்று சொல்ல, பேறிவையுடையவராகிய ஏகநாதர் அறிந்து, இந்தக் காரியம் முடியவேண்டுமென்று நினைத்தார்; நினைத்து, இது நல்லதென்று சொன்ன அவனை நோக்கி, இவ்விடத்தில், நீ பிதிரருக்கு உணவு கிடைக்குமபடி, இலைகளை விரித்து, அமுது பரிமாறக் கடவாயென்று சொல்லி, துன்பத்தை யெல்லாம் நீக்கத் தகுந்த ஸ்ரீகண்ணபிரான் திருவுருவை மனத்திற் பதித்து, தென்புலத்தாராகிய பிதிரர் இங்கேவந்து அமுதுசெய்து த்ருப்தியடையும்படி கருணைசெய்யவேண்டும் என்று ப்ரார்த்திக்க, அப்படியே பிதிரரெல்லாரும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கு அர்க்கியபாத்தியாசமநங்களுந் தந்து, ஆசநங் கொடுத்து, ஜநார்த்தநரையும் ஆராதித்து, ஸ்ரீ கண்ணபிரானுக்கு அர்ப்பணமென்று சங்கற்பமுஞ் சொல்லி நீர் வார்த்த வுடனே, பிதிரரெல்லாரும த்ருப்தியாயுண்டு களித்தார்கள். பிறகு அவர்களைநோக்கி, மிகுதியாயிருக்கிற அமுதை யென்ன செய்யலாமென்று கேட்க, நீங்கள் உம்முடைய இஷ்டர்களோடு கூடி உண்ணக்கடவீர்கள் என்று சொன்னார்கள். அதைக்கேட்ட வேதியர், உள்ளேவந்து பேசுகிறவர் யாரென்றுநோக்க, பிதிரர்கள் மறைந்துபோனார்கள். அதைக் கண்ட வேதியர்கள் வெளியே வந்து, இவர் மனிதரல்லர், திருமாலே இப்படி அவதாரம்செய்ததுபோ லிருக்கிறது, ஆதலால் இவர் விரும்பினதுபோல எந்தக்காரியமும் முடிகின்றது, நாமெல்லோரும் கர்மாபிமாநி

களா யிருப்பதனால் அவமானத்தை யடையும்படி அவரது பிதிரர் வந்து உண்டு போனார்கள், நமக்குக் கிடைக்கத் தகுந்த தக்ஷிணை முதலானவைகளையும் இழந்தோம், நாளையத்தினம் வந்து இவரை உறவாக்கிக் கொண்டாலல்லது நமது மானம் நிலைபெறாது என்று பேசிக்கொண்டு போனார்கள். அவர்கள் போனபிறகு ஏகநாதர் தமது இஷ்டரோடு கூடி யுண்டார். மறுநாளுதயத்தில் நேற்று வந்து அவமான மடைந்து போன வேதியர்கள் ஒருமிக்கத் திரண்டு வந்து, சங்காதிரஞ் சேர்ந்து ஏகநாதரை யழைக்க, இவர் போய் வேதியர்களை வணங்கினார். வணங்கி என்னை யழைத்த காரிய மென்னவென்று கேட்க, அவர்கள், நேற்று நீ செய்த பிழைக்காகப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டுமென்று சொல்ல, இவர், விஷ்ணு பக்தனாகிய எனக்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டிய அவசிய மில்லை யென்றார். அதைக் கேட்ட வேதியர்கள் மறுபடியும் இவரை நோக்கி, நீர் சொல்லும் வார்த்தை உண்மையேயானாலும், எங்கள் வார்த்தையை மறுக்காமல் செய்துகொள்வீரானால் தேஹசுத்தி யுண்டாகுமென்று வற்புறுத்திப் பிராயச்சித்தம் செய்துகொள்ளுவதற்கு இவரை உடம்படச் செய்து, ஸ்நானம் செய்வித்து, பிராயச்சித்தம் நடத்திக்கொண்டிருக்குங் காலத்தில், திரியம்பகத்திலிருந்து ஒரு வேதியன் வந்து, இவ்வூரில் ஏகநாதரென்பவர் யார் என்று கேட்க, இங்கிருந்த வேதியர்கள் அவனை நோக்கி நீ யேன் கேட்கிறாயென்று வினவ, அவன் தன் வரலாற்றைச் சொல்லுகிறான். எப்படி யென்றால் நான் திரியம்பகம் என்னும் ஊரிலிருப்பவன், எனக்குக் குஷ்டநோய் உண்டாகி அதனால் மிகவும் வருந்தி, திரியம்பகேசுவரனை வணங்கி, இந்த நோய் நீங்கும்படி க்ருபை செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்துக் கண்ணுறங்கினேன், அந்தச் சிவபெருமான் என் கனவில் வந்து, தேவகிரியில் ஏகநாதர் என்று ஒரு விஷ்ணுபக்தரிருக்கிறார், அவர் தமது பிதிர்த்திநத்தில் அளவற்ற புலையருக்கு அந்நதானஞ் செய்தார், அதனால் அவர்களுள் ஒருவனுக்கு அந்நமிட்ட புண்ணியத்தை உனக்குத் தருவாரானால் உனதுநோய் நீங்குமென்று சொல்லி மறைந்தார். ஆகையால் அவரைக் கண்டு வணங்கி, எனது நோயை நீக்கிக்கொண்டு போகலாமென்கிற ஆவலோடு வந்தேன் என்று சொன்னான். அதைக் கேட்ட வேதியர்கள் அதிசயித்து, வேதியர் பொருட்டு அமைத்த உணவைப் புலையருக்கிட்டால் புண்ணியம் உண்டாகுமென்று எந்தச் சாஸ்திரத்திற் சொல்லுகிறதோ, அவன் சொன்னது வெறும் பொய் யென்று சொல்ல, அவர்களுள்ளே சிலர், கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமோ? பிதிரர் வந்து அமுதுசெய்து போனதை நாம் கண்ணாரக் கண்டோமே, இன்னமும் அவர் மகிமைக்கு வேறு சாக்ஷி வேண்டுமோ, இவர்கள் ஏன் வீணாகப் பொறாமை கொள்ளுகிறார்கள் என்று சொல்லி, வந்த வேதியனுக்கு, ஏகநாதர் இவரே யென்று சுட்டிக் காட்டினார்கள். உடனே அந்த நோயாளியானவன் நீராடி வந்து இவரை வணங்கி, ஸ்வாமீ, தேவரீர் பிதிர்த்திநத்தில் புலையருக்கு அந்நதானஞ் செய்தீரல்லவா? அவர்களுள் ஒரு புலைய

னுண்டதனுல் உமக்குண்டான புண்ணியத்தை எனக்குத் தந்தால், எனது நோய் தீரும் என்று திரியம்பகேசுவரன் சொன்னதனுல் தேவரீரை வந்தடைந்தேன், கருணை செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, ஏகநாதரும் அப்படியே கொடுத்தேனென்று சொன்னவுடனே, வேதியன் குட்டநோய் நீங்கிப் பொன் மேனியனுய் நின்றான். இவனைக் கண்ட வேதியர்கள், நாமெல்லாம் கர்மாசாராபிமாநங்களை யுடையவர்களா யிருப்பதனுல் பயன் யாது மில்லை, இந்த ஏகநாதர் மெய்ஞ்ஞானியா யிருக்கையா லல்லவோ, அவருக்கு எந்தக் காரியமும் எளிதாய் முடிகிறது என்று, ஏகநாதரை வணங்கி, நீர் ஸ்ரீ லக்ஷ்மீ நாதரே யன்றி நா மனித ரல்லீர் என்று புகழ்ந்து, உமது பெருமையை இப்போது நாங்கள் நன்று யறிந்துகொண்டோம், குளிர்ச்சியிற் சிறந்த பனிமலைக்குக் குளிர்ச்சியை யுண்டாக்கும் பொருட்டு விசிறிகொண்டு விசிறுதலும், இனிமையிற் சிறந்த அமிர்தத்துக்குச் சர்க்கரை, கற்கண்டு, தேன் முதலியவற்றால் இனிமையை யுண்டாக்குதலும் ஆகிய தொழில்கள் செய்பவர்போல், சுத்த சாத்விக குணமும் மெய்ஞ்ஞானமு முள்ள உமக்கு நாங்கள் பிராயச்சித்தம் செய்து உமமைப புநிதராக்க வநதோம, நீர் உமது பிதிரர்களை யழைத்து அமுது செய்யச் செய்ததும், குஷ்டநோய் தீர்த்ததும் ஆகிய அற்புதச் செய்கைகளை உம்மிடத்திற் கண்டோம், உமது மஹிமையைப் புகழ்ந்து சொல்ல எங்களால் முடியாது என்று தோத்திரித்து அழைத்துக்கொண்டு போய் வீடு சேர்ந்து, இவர் கொடுத்த தக்ஷிணை முதலானவைகளைப் பெற்றுத் தமது இடங்களை யடைந்து, இந்த ஏகநாதர், ப்ராஹ்மண பக்தியிலும், ஹரி பக்தியிலுஞ் சிறந்தவர் என்று மகிழ்ந்துப் புகழ்ந்துகொண்டிருந்தார்கள். இப்படி யிருக்க, துவாரகாபுரியில் வாழ்கின்ற ஒரு வேதியன், நீலமேகவண்ணனுகிய ஸ்ரீ கண்ணபிரானது சேவை கிடைக்காமல் அநுதபித்துத் தவஞ் செய்துவருங் காலத்தில், ராதை, ருக்குமணி என்னும பிராட்டிமா ரிருவரும் அந்த வேதியன் மனத்தில் தோன்றி, நீ விரும்புகிற ஸ்ரீ கண்ணபிரானுனவர், தேவகிரியில் வைஷ்ணவ சிரோமணியாய் வாழ்கிற ஏகநாதர் வீட்டில், கண்டியா என்னும பேர் பெற்றுப் பன்னிரண்டுவருஷ காலமாய் ஊழியஞ்செய்து கொண்டிருக்கிறார். நீ அங்கேபோய், எங்களை முழுதும் மறந்திருக்கிற அந்தக் கண்ணபிரானை அழைத்து வாவென்று சொன்னவுடனே, வேதியன் புறப்பட்டுப்போய், தேவகிரியில் ஏகநாதர் வீட்டில் புகுதலும், ஏகநாதர் இந்த வேதியனை வணங்கி, ஆசநந்தந்து, எங்கிருந்து வந்தீர், வந்தகாரியம் யாதென்று கேட்க, வேதியன், நான் கண்டியாவைக் காணவந்தேனென்று சொல்ல, கண்டியா நீர் மொள்ளப்போனுன், இன்னம் ஒரு க்ஷணநேரத்தில் வருவானென்றுஏகநாதர்சொன்னுர். அப்படிச்சொல்லிக்கொண் டிருக்கும்போதே கண்டியாவும் நீர்க்காவடியைத் தோளிற் சுமந்துகொண்டு வந்தான்; வந்து தன்னைத் தேடிவந்திருப்பவனைப் பார்த்து நாணி, ஏகநாதர் வீட்டுக்குள்ளே போய், பன்னிரண்டு வருஷகாலமாய் ஒரு துன்பமு மில்லாமல் இங்கே யிருந்தேன், இந்தக் கடன்காரன், எங்கே யிரு

ந்தோ இங்கு நானிருப்பதை யறிந்து வந்துவிட்டானென்று மனம் வருந்த, ஏகநாதர், வந்த வேதியனை யழைத்து, கண்டியா இதோ வந்தான் என்றார். உடனே வேதியன் விரைவாயோடிவந்து கண்டியாவை வணங்க, அவன் பேசாமல், திருவாராதன அறைக்குள்ளேபோய்க் காவடியை யிறக்கி வைத்துவிட்டு மறைந்து போனான். வந்த வேதியன் சற்று நேரம் பார்த்து, உள்ளே போனவன், ஏன் இன்னம் வெளியே வர வில்லையென்று உள்ளேபோய்ப் பார்த்துக் கண்டியாவைக் காணாமையால் திகைத்து, பகவானானவர் அடியேனுக்கு அருள்செய்யாமற் போனாரேயென்று துக்கித்து நிலத்தின்மேல் விழுந்து, கோவென்று அலறுவதைக் கேட்ட ஏகநாதர் வந்து, ஏன் கதறுகிறீர் என்று கேட்க, வேதியன் தான்வந்த வரலாற்றைச் சொல்ல, ஏகநாதர் அந்த வேதியனை நோக்கி, நீர்செய்த தவமே தவம், நமது பவரோகத்தை நீக்கத் தகுந்த பகவான் இவன் என்றறிந்து வணங்கினீர், நான் அந்தபகவானை யாரோ ஒரு வேலைக்காரனென்று நினைத்து, அவரிடத்தில் வேலை வாங்கினேனே, என்னைப்போல அவிவேகிகளுண்டோ வென்று இரக்க மடைந்து, ஓ பகவானே, பன்னிரண்டு வருஷகாலமாக அநேக வூழியங்களை நீ செய்ய ஏற்றுக் கொண்டேன், வேலைசெய்து உன் திருகரங்கள் காய்ப்பேறிப் போயின, உன் திருவடிகள் கன்றும்படி தோளின்மேல் நீர்க்காவடி சுமந்துவரப் பார்த்திருந்தேனே, சர்வ லோக சரண்யனாகிய உன்னை யறிந்து கொள்ளாத வீணனாயினேனென்று பலவிதமாய்ப் பிதற்றிப் புலம்புவதைக் கண்ட இவர் தேவியார், மிகவு மனங் கலங்கி யழுது சோர்ந்து, கோவிந்தா, உன்னை யறிந்து கொள்ளாமல் உன்னிடத்தில பணிவிடையை யேற்றுக்கொண்டோமே என்று புலம்பினார். இந்த இருவருடைய நிலைமையைக் கண்ட வேதியன் இவர்களிடத்தில் விடைபெற்றுப் போய்விட்டான். பிறகு ஏகநாதர், தமது தேவியாரோடுங் கூடிக் கண்ணபிரானையே இடைவிடாமல் நினைத்துக்கொண்டு வாழுங் காலத்தில், ஒரு நாள் இவர் கனவில் ஞானதேவர் தோன்றி, அளகாபுரிக்கு வந்து என் சமாதியைத் தரிசித்து, என்னை யடைந்திருக்கிற அஜாநு மரத்தின் வேரை ஒரு புறத்தில் ஒதுக்கி, சமாதியை நன்றாய் மூடிவாவென்று சொல்லிப் போய்விட்டார். ஏகநாதரும் அப்படியே அளகாபுரிக்குப்போய், இந்த்ராயணி நதியில் மூழ்கி, சந்த்யாகால கர்மங்களை முடித்து, சித்தேசுவரனை வணங்கி, வஜ்ரசமாதியிற் படிந்திருக்கிற ஞானதேவரைக் கண்டு வணங்கி, அவரை யணுகி யிருக்கிற மர வேரையும் ஒதுக்கி, பிறகு சமாதிக்கதவை மூடிக் கல்லடுக்கிச் சாந்துசெய்து முன்போலவே செய்து வைத்தார். இப்படிச் செய்த பிறகு தாசரும், கூட இருப்பவரும் பசியோடு தங்கியிருக்க, பாண்டுரங்கப் பெருமான் இவர்களுடைய பசித் துன்பத்தை நீக்க நினைத்து, ஒரு வணிக னுருவங்கொண்டு, சமையலுக்குரிய பொருள்களாகிய அரிசி முதலிய எல்லாவற்றையும கொண்டுவந்து கடைத்தெருவில் வைத்துக்கொண்டிருக்க, ஏகநாதர், இரண்டு வேதியரை யனுப்பி அவ்வணிகனிடத்தில் தமக்கு வேண்டிய பொருள்கள் யாவையும் வாங்கிக்கொண்டு

வரச் சொன்னார். அப்படியே அவர்கள் போய், வேண்டியவற்றை வாங்கிக்கொண்டு, சற்றேயிரும், விலைப்பணம் கொண்டுவருவோமென்றார்கள். அதற்கு அவ்வணிகர், அவசரம் வேண்டாம, இன்று முழுதும் இங்கே யிருப்பேன், நீங்கள்போய்ச் சமையல்செய்து புசித்த பிறகு, பணம் கொண்டுவரலாம், ஏக நாதரையும் நானறிவேன், அவ ரென்னை யறியார், அவர் இங்கே வந்திருக்கிற செய்தியைக் கேட்டுப் பல சரக்குகளை யெடுத்துக்கொண்டு வந்தேன் என்று சொல்ல, வேதிய ரிருவரும் இரண்டடி பெயர்த்து வைத்துத் திரும்பிப் பார்த்து, வணிகரைக் காணாமல் அதிசயித்து, ஏகநாதரிடத்தில் வந்து, இந்தச் செய்தியைச் சொல்ல, அவர், வணிகனாய் வந்தவர் பகவானே யென்றறிந்து, இவர் நம் பொருட்டு அநேக விதமான துன்பங்களை யடைகிறாரே யென்று மனம் வருந்தி யிருக்க, வேதியர்கள், கொண்டுவந்தவற்றைச் சமையல் செய்தார்கள். பிறகு தாசரும வேதியரும் உண்டு, அன்றிரவில் அங்கே தங்கி, ஹரி நாம ஸங்கீர்த்தநம செய்துகொண் டிருந்து, பொழுது விடிந்தவுடனே, சமாதியை வணங்கி, அங்கிருந்து புறப்பட்டு வந்து தம் மூரை யடைந்து, ஹரிபஜனை செய்துகொண்டு, எப்பொழுதும் தமது குருவையே நினைத்து இருந்ததனால், நீரோடு நீர் சேர்ந்தாற்போல, ஜநார்த்தநர் தாமாக வாழ்ந்திருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில், ஜநார்த்தநர், இவ்வுலகத்திலுள்ள மூடரை யெல்லாம் ஸ்ரீ ஹரி பக்தர்களாக்க வெண்ணி, ஏகநாதரை நோக்கி, நீ தீர்த்தயாத்திரையாய்ப் புறப்பட்டுப்போய் அங்கங்குள்ள சமஸ்தஜநங்களுக்கும் உபதேசம் செய்து, அவர்களை ஸ்ரீஹரிதாசர்களாகச் செய்யவேண்டும் என்று நியமிக்க, அப்படியே ஏகநாதர் புறப்பட்டுத் தீர்த்தயாத்திரை செய்துகொண்டும், அங்கங்கே வந்து தம்மை ஆசிரயிப்பவர்களுக்கு உபதேசித்துக் கடைத்தேறப் பண்ணியும் வருகிற காலத்தில், ஒருநாள் கோதாவரி நதிக் கரையிலுள்ள பிரதிஷ்டாந நகரத்தை யடைந்து, அங்கே தங்கி யிருக்கையில், இவர் ஹரிபஜனை செய்வதும், கீர்த்தனைகள் நூதநமாய்ச் செய்வதும் ஆகிய தொழிலையே இடைவிடாமல் மேற்கொண்டொழுகுதலால் இவர் அவதார புருஷ ரென்று கொண்டாடுவார்கள். இப்படி யிருக்க, இவர் தனியே சஞ்சரிப்பதற்கு விட்டலப்பெருமான் பொறுக்காதவராய், இவரோடு கூடவிருந்து உதவியாய்ப் பாடினால் இவர்க்குக் கொஞ்சம் இளைப்பாற்றிக்கொள்ள அவகாசமிருக்கும் என்று, தாம் ஒரு சங்கீதபாடகராகிய வேதியவேஷங்கொண்டு, தாளத்தைக் கைக்கொண்டு, ஏகநாதர் முதுகின் புறத்திலிருந்து, அவர் சொல்லுங் கவிகளை அவரோடுகூடிப் பாடுவோரா யிருந்தார். இப்படி யிருக்கையில், ஒரு நாள் ஸ்ரீக்ருஷ்ணஜயந்தி வர, அந்த உத்ஸவத்தை விசேஷவைபவமாய் நடத்தவேண்டுமென்று எண்ணி, அவ்வூரிலுள்ள தநவான்களுக்கு அறிவிக்க, அவர்களும் உத்ஸவத்துக்கு வேண்டிய பொருள்கள் யாவுஞ் சேகரித்திருந்தார்கள். இந்தச் செய்தியைத் தமது ஆசாரியராகிய ஜநார்த்தநருக்கு ஒரு வேதியன் மூலமா யறிவிக்க, அவரும் மனமகிழ்ந்து, குடும்பத்தோடு வேண்டிய பொருள்களைக்கொண்டு புறப்

பட்டு ஏகநாதரிருக்கிற நகரத்தைச் சமீபித்து வரும்போது, தத்தாத்ரேயர் எதிர்ப்பட்டார். அவரை வணங்கிப் புகழ்ந்து நிற்க, இவரை, தத்தாத்ரேயர் மார்போடணைத்து, ஓ ஜநார்த்தநரே, உமது சீடன் ஒப்பற்றவன், அவனது ஞானவொழுக்கங்களைக்குறித்துச் சந்தோஷித்து நானும் அவனது மடவாசலி லிருந்து அவன் பாடுங் கீர்த்தனங்களைக் கேட்டு ஆநந்திக்கிறேன் என்று சொல்லி, ஏகநாதரிடத்துக்கு விரைந்துபோய், உமது சற்குருநாதர் வந்தாரென்று சொல்ல, அந்த ஏகநாதர் எழுந்து வந்து குருநாதர் திருவடியை வணங்கி, இத்தனை தூரம் தேவரீர் எழுந்தருளும்படி அடியேன் என்ன தவஞ்செய் திருந்தேனோ என்று தோத்திரஞ் செய்து ஆசநந் தந்திருத்தி, திருவடியை விளக்கி, ஸ்ரீ பாத தீர்த்தங்கொண்டு, பிறகு, உத்ஸவ காரியத்தை விசேஷ வைபவமாய் நடத்தி, தாமும் ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்யும்போது, விட்டலப் பெருமான் கைத்தாளங்கொண்டு பின்னின்று உதவியாய்ப் பாடுவதைக் கண்டவரெல்லாரும, இவர்க்கு இசைவான உதவி பாடகர் அமைந்தார் என்று வியந்து கொண்டாடினார்கள். பிறகு பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து ப்ரஸாதம விநியோகித்து இப்படி யெட்டுநாள் வரைக்கும் பகல் முழுதும வேதியரை பூஜிப்பதும், இரா முழுதும ஹரிபூஜை செய்வதும் ஆகிய தொழிலைச் செய்து, ஒன்பதாவது நவமிநாளில், ஸ்ரீ பாகவதத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீ கண்ணபிரானுடைய லீலைகளெல்லாவற்றையும் செய்து, தசமிநாளில் வாத்ய விசேஷங்கள் யாவையும முழங்கச் செய்து, ஊர்வலம் வந்து, ஸ்ரீ கண்ணபிரானை மடத்திற் கெழுந்தருளச் செய்து, ஹாரதி சமர்ப்பித்து, எல்லாருக்கும ப்ரஸாத விநியோகம் நடத்தின பிறகு, ஜநார்த்தநர் ஏகநாதரை நோக்கி, உனக்குத் தகுதியான உதவி யொன்று கிடைத்ததைக் குறித்துச் சந்தோஷிக்கிறேன; ஆனால் அவர்க்கும் உனக்கும் பிரிவு நேரிடாமலிருக்கப் பாண்டுரங்கப் பெருமானை ப்ரார்த்திக்கிறே னென்றார் அப்போது, ஏகநாதர் தன் ஸஹபாடியை நோக்கி, உமது ஊர் யாது, பேர் யாது என்று வினவ, ஸஹபாடியானவர் எனக்கு ஊரென் றொன்றில்லை யானும் நல்லவ ரிருக்கு மிடமே யெனக்கு ஊராகக்கொண்டு வாசம் பண்ணுவேன், என்பேர் விட்டலன், உம்மைப்போன்ற சாதுவை யெங்குங் கண்டிலேன், ஆகையால் உம்மை யடுத்திருக்கிறேன் என்று சொன்னவுடனே, ஏகநாதர், மட்டில்லாத பெருமகிழ்ச்சியை யடைந்து, அப்படியே உமது விருப்பம் போல என்னிடத்தில் எந்நாளும் இருக்கக் கடவீர் என்று சொல்ல, நாலு நாள் தங்கியிருந்து, ஏகநாதரை இங்கே யிருக்கும்படி நியமித்து ஜநார்த்தநர் போய்விட்டார்.

அப்பால் ஏகநாதர், திநந்தோறும் ஹரிகீர்த்தநங்களை விரும்பிப் பாடி அன்போடு பகவானைத் தோத்திரம பண்ணிக்கொண்டிருக்குங் காலத்தில், பண்டரிபுரத்திலுள்ள ஒரு வேதியன் விடோபாவாகிய பகவானது சகுண வுருவைக் *காணவேண்டு மென்கிற எண்ணத்தோடு திநந்தோறும் சந்த்ர பாகா நதியில் நீராடி, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம செய்து வந்தான். அவனு

டைய பக்திக்குப் பாண்டுரங்கப் பெருமான் மகிழ்ந்து அவன் கனவில் தோன்றி, ஓ வேதியனே, நீ என் அருளுருவைத் தரிசிக்க விரும்புவாயானால், ப்ரதிஷ்டான நகரத்தை யடைந்து, ஏகநாதர் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்யும்போது, ஸஹபாடியாய் அவருக்குப் பின்பு நிற்பேன், அங்கே வந்து என்னைக் காணக்கடவாயென்று சொன்னார். அவ்வேதியன் விழித்து, ஆச்சரியப்பட்டு, அந்த ப்ரதிஷ்டான நகரத்தை யடைந்து, ஏகநாதர் கதை செய்யுங் காலம் சம்பவித்தவுடனே, அவ்விடத்திற் போய், ஏகநாதருக்குப் பின்னே நின்ற ஸஹபாடியைக் கண்டு வணங்க, அவ்வுருவம் நீங்கி, சங்கசக்ராதிகளைத் திருக்கரத்தில் உடையவனாகிய பகவான் எதிரே வந்து நின்றார். நின்ற பகவானை, ஏகநாதரும், அவர் கதாகாலக்ஷேபத்துக்கு வந்த மற்றவர்களும் கண்டு, ஜய ஜய வென்கிற பேரொலியோடு சாஷ்டாங்கமாக வணங்கித் தோத்திரம் பண்ணினார்கள்; உடனே பகவானும் மறைந்து போனார். வந்த வேதியனும் மற்றவர்களும் ஏகநாதர் திருவடியை வணங்கி, விட்டோபாவானவர் பன்னிரண்டு வருஷகாலமாக உமமிடத்துக்கு வந்து, ஸஹபாடியாய்ப் பாடிக் கொண்டிருந்தாரென்றால், உமது மகிமையைச் சொல்ல வல்லவர் யாவர் என்று புகழ்ந்துரைக்க, ஏகநாதரும், ஆம்! ஆம்! பாண்டுரங்கப் பெருமானவர் நம்மிடத்தில் வந்து அதிக வேலை செய்து திருமேனி வாடினார் என்று அநுதபித்து, அதின் பிறகு தமதூரை யடைந்து வாழ்ந்திருக்குங் காலத்தில், ஒரு நாள் உத்தவர் என்னும் பெயருள்ள ஒரு வேதியர், ஏகநாதரிடத்துக்கு வந்து வணங்கி நிற்க, இவர் அவ்வேதியரைத் தழுவிக் கொண்டு, வந்த காரியம் யாதென்று கேட்க, அவர், ஏகநாதரை நோக்கி, நீர் உமது வாக்கால் பாகவதஞ் சொல்லக் கேட்கவேண்டுமென்னும் விருப்பத்தால் உம்மிடத்துக்கு வந்தேனென்று சொல்ல, ஏகநாதரும் அப்படியே யாகட்டுமென்று, சுபதினம் பார்த்து ஆரம்பித்து, தினந்தோறும் நியதமாய்ப் பாகவதத்தைப் படித்து, எல்லாருக்கும் விளங்கும்படி அர்த்தம் சொல்லிக் கொண்டு வருகிற காலத்தில், ஒரு நாள், பாண்டுரங்கப் பெருமான் ஒரு வேதியனாய் வந்து, ஏகநாதரைக் கும்பிட்டு நிற்க, இவர் அப்பெருமானை நோக்கி, உமது ஊர் யாது, பேர் யாது என்று வினவ, பெருமான், தாஸரை நோக்கி, நான் ஓரூரில் நிலையாயிருக்கிறதில்லை, என் பேர் கேசவன், திருத்துழாய் மாலையை யணிந்த ஸ்ரீ லக்ஷ்மீநாதனது வைபவத்தை விஸ்தாரமாகச் சொல்லுகிற ஸ்ரீ பாகவத புராணத்தை வாசித்து அர்த்தம் சொல்லுகிறீரென்று கேள்விப்பட்டு, அதைக் கேட்கவேண்டுமென்று வந்தேன் என்று சொல்ல, ஏகநாதர், சரிதான் என்று தினந்தோறும் பாகவத புராணபடனம் செய்து வந்தார். அப்படி யிருக்குங் காலத்தில், ஒருநாளிரவில், இரண்டு சாமத்துக்கு மேலே, தேசாந்தர வேதியர் நாலுபேர் வந்து, ஏகநாதரைக் கண்டு, எமது மிகுந்த பசியைத் தவிர்க்க வேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவர் தமது தேவியாகிய கிரிஜாபாயியை நோக்கி, இந்த வேதியர் பொருட்டு விரைவாகச் சமையலாக வேண்டும் என்று சொல்ல, தேவியார், வருத்தத்

துடனே சமைக்க விறகில்லையென்று சொல்ல, தமது இடத்திலிருக்கிற உத்தவர் என்னும் வேதியரை யழைத்து, இந்த வீட்டைப் பிரித்து இவருக்கு வேண்டிய விறகு கொடுக்கக் கடவை யென்றார். அவர் வீட்டைப் பிரிக்க நெடுநேரஞ் செல்லுமே யென்றார். பிறகு ஏகநாதர், விரைந்தெழுந்து தாம் தூங்குகிற கட்டிலைப் பிளந்து கொடுத்துச் சமைக்கக் கடவா யென்றார். தேவியார் அந்த விறகைக் கொண்டு, கணவர் சொற்படியே சமையல்செய்து, வந்த வேதியரை யுண்பித்து, தாம்பூல தக்ஷிணைகளையுங் கொடுத்து, திருப்தி செய்ய, அவர்கள் ஏகநாதரிடத்திற்கு வந்து வாழ்த்தி வணங்கி விடைபெற்றுப் போனார்கள். சிலநாள் கழிந்த பிறகு, இவர் மனையில் சிரார்த்தம் ஒன்று நேரிட்டது. அதற்கு அநேக மறையோர்கள் வந்து உண்ணும்படியான ஏற்பாடு செய்திருந்தார், அப்போது இவருடைய மனத்தைச் சோதிக்கும்பொருட்டுத் திரிமூர்த்திகளும பக்கிரிகள் போல வேஷம் பூண்டு வந்து, எமது மிகுந்த பசியைத் தீர்க்கவேண்டுமென்று பிரார்த்திக்க, உடனே இவர் தமது மனைவியை யழைத்து அவர்களுக்கு விரைவாக அன்னமிடச் சொல்ல, அவரும் அப்படியே யிட்டு அவர்கள் பசியை நீக்கி, தாம்பூல தக்ஷிணைகளையுங் கொடுத்து உபசரிக்க, அவர்கள் மகிழ்ந்து, இவர் ஜாதிபேதம நோக்காத பெருந்தன்மை யுள்ளவர் என்று சொல்லித் தமது உருவங்களை ஏகநாதருக்குக் காட்ட, அவரும் அவர்களை வணங்கித் துதித்தார். துதிக்கும்போது, அவர்கள் பக்கிரிகளாகி, யவன பாஷையில் தாம் அன்னமிட்டதைக் குறித்துப் புகழ்ந்து பேசிக்கொண்டு, தமது பவளவாய்ச் சிவப்பேறும்படி தாம்பூலந் தரித்து அங்கிருக்குஞ் சமயத்தில், இவர் வீட்டில் உண்ணும் பொருட்டு வந்த வேதியர்கள் இவர்களைக் கண்டு, இதென்ன அநியாயம், இன்று தாழ்ந்த ஜாதியாருக்கு அன்னமிட்டாய், நீ வேதியனாகமாட்டாய் என்று கோபத்தோடு கூடின வன்சொற்களை வழங்கிப் போய், அந்த ஊர் நாட்டாண்மைக்காரனிடத்தில் இந்தச் செய்தியைச் சொன்னார்கள். அந்த அதிகாரியானவன் ஏகநாதரை யழைத்து, சாதியிழிந்த பக்கிரிகளுக்குச் சிரார்த்த தினத்தில் அன்னமிடலாமோ, இது தகுமோ என்று கேட்க, இவர், நான் என்செய்வேன், பசித்துவந்து கேட்டார்கள் அவர்கள் பசி வருத்தத்தைப் பார்த்துச் சகிக்க முடியாமையால் அன்னமிடும்படி நேரிட்டது என்று சொல்லி, வேதியரை நோக்கி, என் பிழையைப் பொறுத்தருளி, வேறே சுசியாகச் சமையலாகிக் கொண்டிருக்கிற வுணவைச்சந்தோஷமா யுண்டருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, அவர்கள் இவரைநோக்கி, உமது பிதிரர் வந்து உண்டால் யாமும் வந்து உண்போமென்றார்கள். அப்படியே செய்கிறேன் வாருங்களென்று அழைத்துக் கொண்டு தமதுவீட்டில் ப்ரவேசித்து, இலைகளில் அன்ன முதலானவைகளைப் பரிமாறிப் பிதிரரை வேண்டுதலும், பிதிரர் வந்து, திருப்தியா யுண்டார்கள். அதைக்கண்டவேதியர்கள், அதிசயித்து, இந்த ஏகநாதரை ஸ்ரீமந்நாராயணனே இப்படி அவதரித்தாரென்று புகழ்வதன்றி வேறு விதமாய்ப் புகழ்வது தகாதென்று அஞ்சி, தாமும் உண்டு தாம்பூல தக்ஷிணைகளைப் பெற்றுப்போய்

விட்டார்கள். அன்றிரவில், ஸ்ரீ ஹரி பஜனை செய்து கர்ப்பூரஹாரதி சமர்ப்பித்து, வந்தவர்களுக்கெல்லாம் ப்ரஸாதம் கொடுத்தனுப்பினார். பிறகு, ஒருகாலத்தில், அவ்வூரில் வாழ்வோனாகிய க்ருஷ்ணதாசன் என்னும் ஒரு வேதியன் காளியை யாராதிப்பவனாயும், அவளுடைய வர ப்ரஸாதத்தால் அநேக கவிகளைச் செய்பவனாயும இருந்தான். அவன், ஸ்ரீவால்மீகிபகவான், ஸம்ஸ்க்ருதத்திற் செய்த ஸ்ரீராமாயணம்போல, ப்ராக்ருதத்திற் செய்து யுத்தகாண்டம் வரைக்கும் நிறைவேறினதைச் சில வேதியர் அறிந்து வியந்து, அந்தச் செய்தியை ஏகநாதருக்கு வந்து சொல்ல, இவரும், அவன் ஸ்ரீஹரியின் ப்ரபாவத்தையே புகழ்ந்து சொல்லுவது மிகவும் நல்ல காரியந்தானென்று சொல்லி, மனமகிழ்ந்திருக்க, ஒருநாள், நடுராத்ரியில், க்ருஷ்ணதாசன் கனவில் காளியானவள வந்து, நாளை உதயத்தில் உனக்கு மரணமுண்டாகுமென்று சொல்லி மறைய, உடனே க்ருஷ்ணதாசன் விழித்தெழுந்து, நாம ஆரம்பித்துச் செய்து வருகிற கிரந்தம முடிவதற்கு முன்னே நமக்கு மரணம நேரிடுவதற்குக் காரணம் யாதோ, அதைக் கண்டறிய வேண்டும், இந்த விஷயத்தில் ஏகநாதரிடத்திற்போய்க் கலந்து யோசிப்பதே நல்ல காரியமென்று தீர்மானித்து, தான் செய்யுங் கிரந்தத்தை யெடுத்துக்கொண்டுபோய், நித்ரித்துக்கொண்டிருக்கிற ஏகநாதரை யெழுப்பி, நடந்த செய்தியைச் சொல்லி, இந்தக் கிரந்தத்தை நீரே முடித்தருள வேணடுமென்று ப்ரார்த்திக்க, இவர் அந்த க்ருஷ்ணதாசன் கொண்டுவந்த கிரந்தத்தை வாங்கிப் பார்த்து, கவிகள் மிகவும் நேர்த்தியா யிருக்கின்றன, முழுதும் ஒருவர் வாக்காகவே யிருந்தால் அழகா யிருக்கும், ஆகலால், நீரே பூர்த்தி செய்யக் கடவீர், இந்த க்ரந்தம் பூர்த்தியாகிற வரைக்கும், உமக்கு மரணபயம் வேண்டியதில்லை, போம் என்று சொல்ல, அவன் மிகவும் மனமகிழ்ச்சியோடு இவர் திருவடியை வணங்கி விடைபெற்றுத் தன் வீட்டுக்கு வந்து, விடியுமுன்னே கிரந்த பூர்த்தி செய்து மகிழ்ந்திருந்தான்.

அப்பால், கருநாடக தேசத்தில், மிகுந்த தனவானாகிய ஒரு வணிகன், பண்டரிநாதனுக்கு அன்பனாகியும், மிகுந்த தருமாத்மாவாகியும் இருந்தான், அவன் விடோபாவுக்குச் சமானமான சுவர்ண விக்ரஹத்தைச் செய்து, பிரதிஷ்டை செய்யத் தகுந்த சுபமுஹூர்த்தமும் பார்த்து அமைத்திருந்தான். அக்காலத்தில், ஒரு நாள், இரவில், அந்த வணிகன் கனவில், விடோபாவானவர் எழுந்தருளி, தேவகிரியி லிருக்கிற ஏகநாதரிடத்தில் போய், இந்த விக்ரஹங்களை அவரிடத்தில் கொடுக்கக் கடவை. அப்படிச் செய்யாத பக்ஷத்தில் உனக்கு மிகுந்த துன்பங்கள் உண்டாகும் என்று சொல்ல, வணிகன் விழித்தெழுந்து, துன்பமடைந்திருந்து, விடிந்த பிறகு தனது கனவில் நிகழ்ந்த செய்தியை வேதியர்க்குச் சொல்ல, அவர்கள், இந்தக் கனவின்படியே மூன்று தினமும் நிகழ்ந்ததானால் அந்த ஏகநாதரிடத்தில் சேர்த்துவிடக் கடவீர் என்று சொன்னார்கள். அப்படியே மூன்று தினமுங் கனவு நிகழ்தலும், விக்ரஹத்தை யெடுத்துக்கொண்டு ஏகநாதரிடத்துக்குப் போய், செய்தியைச்

சொல்லி யெதிரே வைத்து, மூன்று நாளுங் கண்ட கனவைச் சொல்ல, ஏகநாதர் மிகவும் சந்தோஷித்து, அந்த விக்ரஹத்தின் ஸௌந்தரியத்தை நோக்கி, அன்போடு அதனை மார்பிலணைத்துக்கொண்டு சொல்லுகிறார். ஓ பாண்டுரங்கப் பெருமானே, உன் பெருமையைப் புகழ்ந்து பேச வல்லவர் யாருளர் என்று தோத்திரித்து, நல்ல முஹூர்த்தமாராய்ந்தமைத்துக்கொண்டு, அவ்வூரார்க்கு அறிவித்து, வரவழைத்து, அந்த விக்ரஹத்தை ஒரு பக்கத்தில் ப்ரதிஷ்டைசெய்து, வெண்ணெயைக் கையிலேந்தி, விட்டலப் பெருமானே, நீ இதனை யமுது செய்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தவுடனே ஸ்ரீகண்ணபிரானவர் தமது செவ்வாய் திறந்து உண்ணக் கண்டவர் யாவரும் வியந்து, ஜயஜய வென்று தோத்திரம்பண்ணி, ஏகநாதரையும் புகழ்ந்து நின்றார்கள். பிறகு எல்லாருங்கூடிப் பகவானை வலம்வந்து போற்ற, ப்ராஹ்மண சந்தர்ப்பணம் செய்து தக்ஷிணை தாம்பூலங்களைக் கொடுத்து அனுப்பினார். இவை யாவும் வணிகன் கண்டு, விட்டலப் பெருமான் ஒருதரமாகிலும் தன்னூர்க்கெழுந்தருளி மஹோத்ஸவங்கண்டருள நினைத்து, தன் எண்ணத்தை ஏகநாதருக்கு அறிவிக்க, இவரும் அதற்கு இசைந்தவுடனே, வணிகன் தன் ஊருக்குப் போய் உத்ஸவத்துக்கு வேண்டியவைகளைச் சித்தப்படுத்திக் கொண்டு ஏகநாதருக்கு அறிவிக்க, உடனே இவர், கண்ணபிரானை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டு, மங்களவாத்ய கோஷத்தோடு வணிகனிருக்கு மூருக்கு வந்தார். இவர் வரவை யெதிர்பார்த்திருந்த வணிகன் எதிர்கொண்டு வந்து சகல மரியாதைகளும் செய்து அழைத்துப்போய், தான் நூதனமாகச் சித்தப்படுத்தி வைத்திருந்த ஸ்ரீருக்மிணீ பிராட்டியார்க்கும் ஸ்ரீகண்ணபிரானுக்கும் விசேஷவைபவத்தோடு விவாஹமஹோத்ஸவம் நிறைவேற்றி, ப்ராஹ்மண சந்தர்ப்பணம் செய்து, ஒரு மாசத்தளவும் இடைவிடாமல் ஸ்ரீ ஹரி நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்து, வணிகன், ஸ்ரீ கண்ணபிரானும் ஸ்ரீருக்மிணீபிராட்டியும் ஆகிய தம்பதிகளுக்குச் சீதந முதலியவைகளைக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு, அந்தத் தம்பதிகளைத் தேர்மேலேற்றிக் கொண்டு, தம்மூர்க்கு வந்து, அவர்களை அவ்விடத்தில் ப்ரதிஷ்டை செய்து ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு வாழ்ந்திருந்தார்.

ஏகநாதர் இப்படி வாழ்ந்திருக்குங் காலத்தில், ஒருநாள் உத்தவரை நோக்கி, நான் பண்டரிபுரம் போய் விட்டலப் பெருமானைச் சேவித்து வர வேண்டும், நான்போய் வருகிற வரைக்கும், இவ்விடத்தில் நூதநமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட விட்டலப் பெருமானைப் பூசித்துக்கொண்டிரும் என்று சொல்லிப் புறப்பட்டு ஹரிதாசர்களோடுங் கூடி ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டேபோய், சந்த்ரபாகாநதியில் நீராடும்போது, பாண்டுரங்க பகவானவர், அர்ச்சகர்மேல் ஆவேசித்து, எனக்கன்பரான ஏகநாதர் என்னைக் காணவேண்டுமென்று வந்து, சந்த்ரபாகா நதியில் நீராடுகிறார், அவரை நீங்கள் யாவரும் எதிர்கொண்டு, நான் புறப்பட்டால் என்னவிதமாய் மரியாதை செய்கிறீர்களோ அவ்விதமாகவே அவருக்கு மரியாதை

செய்து அழைத்து வாருங்களென்று, கோயிலிலுள்ள வேதியர்களுக்கு நியமிக்க, அவர்களும் அப்படியேபோய் ஏகநாதரைச் சகல சம்ப்ரமத்தோடும் அழைத்து வந்து கோயிலிற் சேர்க்க, இவர் ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்து கொண்டே கருட ஸ்தம்பத்தி னருகே வந்து நின்று பகவானைச் சாஷ்டாங்கமாக வணங்கித் தோத்திரஞ் செய்து தழுவிக்கொண்டு, பேராநந்த மடைந்து, நாலுநாள் வரைக்கும் தங்கி, பகவத் தரிசநம் செய்துகொண்டிருக்க, பகவானவர் சதுர்த்தசி திதியில், அர்ச்சகமுகேந, ஏகநாதரை நோக்கி, நீர் இன்று பாநுதாசர் சரித்திரத்தைக் கீர்த்தநரூபமாக விரைந்து செய்து, அந்தக் கீர்த்தநங்களை என் சந்நிதியில் பாடக் கடவீரென்று நியமிக்கக் கேட்ட ஏகநாதர், மஹா பாக்யமென்று, அன்று அஸ்தமநத்துக்குள்ளே அந்தப் பாநுதாசர் சரித்திரகீர்த்தநங்கள் செய்து, அன்றிரவில், பகவத் ஸந்நிதியில் பாடி, பகவானை மகிழ்வித்து, தீர்த்த ப்ரஸாதங்களும் லபித்துக்கொண்டு, தமது ஊருக்குப் போய் விட்டார்.

அதன்பிறகு, தமதூரில் நாள்தோறும், பகல்முழுதும் ஸ்ரீபாகவதபுராண படநத்தையும், இரவில் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநத்தையும் இடைவிடாமல் நடத்திவந்தார். இப்படி யிருக்குங்காலத்தில, ஒருநாள் விட்டலப்பெருமான் கேசவன் என்னும் பெயருள்ள ஒரு வேதிய ரூபங்கொண்டு, இவரிடத்துக்கு வந்து, நான் இவ்விடத்தில் பன்னிரண்டு வருஷகாலமாய்த் தங்கியிருந்தேன், இனித் தீர்த்தயாத்திரை செய்யப்போகிறேன் எனக் கேட்டு, எங்கே போனாலும் மறுபடியும் நான் கண்டு சேவிக்கும்படி சேவை சாதித்தருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, அப்படியே யாகட்டுமென்று போய்விட்டார். பின்பு திநந்தோறும் இந்த ஏகநாதர் செய்யும் புராண படநத்தையும், ஹரிநாமஸங்கீர்த்தநத்தையும் கேட்டுக் கொண்டு வெளியே யிருந்து, சத்பாவிகனுயும், புலையனுயு மிருக்கிற ராணு என்பவனும், அவன் மனைவியும் இவரைப் பின்தொடர்ந்து, இவர் போகும் வழி முழுதும் குப்பை போக்கிச் சுத்தப்படுத்தி, அழிவற்ற பரம்பொருளே யிவரென்று மனத்திற்கொண்டு, நாள்தோறும் இவரைத் தரிசித்துவந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில் ஒருநாள், அந்த ராணு என்னும் புலையன் மனைவியானவள் ராணுவை நோக்கி, இந்த ஏகநாதர் சாக்ஷாத் பகவத் அவதாரமாதலால் ஒருநாள் இவரை நம் வீட்டில் அமுது செய்வித்தால் நாம் மோக்ஷபதத்தையடையத் தகுந்தவர்களாவோம் என்று சொல்ல, அவனும் அப்படியே செய்யலாம் என்று உடன்பட்டு, இவர் தனியாயிருக்கும்போது, வணங்கி, ஸ்வாமீ, ஒருநாள் அடியேன் குடிசைக்கு எழுந்தருளி அமுது செய்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, அப்படியே செய்கிறேனென்று இவர் ஒத்துக் கொள்ள, ராணு வென்பவன் தன் மனைவியிடத்தில் இந்தச் செய்தியைச் சொல்ல, அவள் மிகவும் சந்தோஷத்தோடு சமையல் செய்து சித்தப்படுத்தி வைத்துக்கொண்டு, ஏகநாதரை யழைத்துக் கொண்டு வாரும் என்று கணவனிடத்திற் சொல்ல, அவன் போய் இவரை வணங்கி யழைக்க, அவன் பின்னே வந்துகொண்டிருக்கும்போது, பின்னே

வருகிற வேதியர் மனம் பொறுக்காமல், இவரை நோக்கி, நீர் புலையன் வீட்டில் உண்ணத்தகுமோ? இதைக் குறித்து உமக்குத்தண்டனை விதிக்கப்படும் என்றார். அதைக்கேட்ட ஏகநாதர், வேதியரை நோக்கி, காமாதிகளாகிய அரிஷட்வர்க்கத்தை வென்று ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்த இவனைப் பறையனென்று சொல்லத்தகாது, நேற்றிரவில் என்னைக் கண்டு கேட்டுக்கொண்டான், அதற்கு நானும் ஒத்துக்கொண்டேன், இந்தக் குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும் என்றார். அதற்கு அவ்வேதியர் இசையாமல், நீர் தண்டனையேற்றுக் கொள்ளாத பக்ஷத்தில் உம்மைச் சாதியிலிருந்து நீக்கிவிடுவோமென்று சொல்லி, இவரை யழைத்துக்கொண்டு போய், நதிக்கரையில் வைத்துப் பிராயச்சித்தம் செய்துகொண்டிருக்கக் கண்ட ராணுவென்பவன், மனம் வருந்திப் போய்த் தன் மனைவியோடு இந்தச் செய்தியைச் சொல்ல, அவள், இன்று ஏகநாதர் வந்து நமது வீட்டில் உண்ணுமற்போனால் உயிர்விடுவேன் என்றாள். அதைக் கேட்ட ராணுவென்பவன், மனைவியை நோக்கி, ஏகநாதர் கருணைக்கடலாகையால் நமது வேண்டுகோளை மறுக்கமாட்டார், அப்படி ஒருவேளை மறுத்தால் நாம் இருவரும் உயிரை விடுவோம் என்று சொல்லி, ப்ராயச்சித்தமசெய்வித்துக்கொண்டுநதிக்கரையிலிருக்கிறஏகநாதரிடத்திற்குப்போய்,தேவரீர் வரவேண்டுமென் றழைக்க,அவரும் வருகிறேனென்றுசொல்ல, அவன் இவர் வருவாரென்னும் மனவுறுதியோடு வீடு சேர்ந்துஇவர்வரவை யெதிர்பார்த்திருக்க, இதையறிந்த வேதியர், நீர் முன்பு சொன்னதற்கு இப்பொழுது ப்ராயச்சித்தம் நடந்திருக்க, இன்னமும் அப்படியே சொல்லுகிறீரே யென்று இவரை இவர் வீட்டுக் கழைத்துக்கொண்டுபோய், இவரை யென்ன செய்தாலும் இவர் பொய் சொல்ல மாட்டார், புலையன் வீட்டுக்குப் போவார் என்று துணிந்து, இவரை வீட்டில்வைத்துக் காவல்காத்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது இந்த ஏகநாதர் தேவ தார்ச்சனை செய்து, வேதியருக்கு அமுதூட்டி, தாமும் அமுதுசெய்து, பாகவத புராண காலக்ஷேபத்தைத் தொடங்கும்போது, ராணுவானவன் வந்து அழைக்க, நீ முன்னே போ, நான் உன் பின்னே வருகிறேனென்று அவனுக்குத் திடஞ் சொல்லி யனுப்பினார். அவன் போனபிறகு விட்டலப் பெருமானைத் தியானித்து, பகவானே, அந்தப் புலையனுடைய மநோரதத்தைச் சீக்கிரத்தில் நிறைவேற்ற வேண்டுமென்று ப்ரார்த்திக்க, ஸ்ரீலக்ஷ்மீ நாதராகிய விட்டலப்பெருமானானவர் ஏகநாதருடைய ரூபத்தைக்கொண்டு, புலையன் வீட்டுக்குப் போக, அவனும் அவன் மனைவியுமாக இவர்க்குச் சகலவிதமான உபசாரங்களையுஞ் செய்து அமுதூட்ட வுண்டனர். இங்கே காவல் காத்திருக்கும் வேதியர்கள், இந்தச்செய்தியைக்கேள்விப்பட்டுப்புலையன்வீட்டிற்போய்ப் பார்த்து, அங்கே ஏகநாதர் அமுதுசெய்து கொண்டிருப்பதையும், இங்கே வந்து பார்த்து,பாகவத புராண காலக்ஷேபம் செய்துகொண்டிருப்பதையும் கண்டு, அதிசயித்து, அங்கே ஒரு ஏகநாதரும் இங்கே ஒரு ஏகநாதரும் காணப்படுகிறார்கள், ஸ்ரீ ஹரிபக்தர்களுடைய பெருமையை யறிய எமக்குச் சாத்தியப்படாது

என்று வேதியரெல்லாரும் இவரை வணங்கித் தோத்திரஞ் செய்துபோனார்கள்.

அதின் பிறகு, ஒரு நாள் அவ்வூரில், தனக்குக் கிடைத்த ஸ்பரிசவேதிக் கல்லினால், இரும்பு முதலானவைகளைப் பொன்னாக்கிக் குடும்ப ஸம்ரக்ஷணஞ் செய்து வருகிற ஒரு வேதியன், தன் மனைவியும் புத்ரனும் இறந்து போனதனால், இனி யிங்கே யிருப்பதனால் என்ன ப்ரயோஜநமென்று, காசி யாத்திரை போகத் துணிந்து, இந்த ஸ்பரிசவேதிக் கல்லைக் களங்கமில்லாத நல்ல ஹ்ருதயத்தை யுடையவர்களிடத்தில் கொடுத்துவைத்துப் போக வேண்டுமென்றெண்ணி, யோசித்து, இந்த ஏகநாதர் நிர்மல ஹ்ருதயர், இவரிடத்தில் வைத்துப்போவோமென்று தீர்மானித்து இவரிடத்துக்கு வந்து, நான் காசி யாத்திரை போய் வருமளவும் இந்தப் பரிசவேதிக் கல்லைப் பத்திரப்படுத்தி வைத்திருந்து, நான் வந்த பிறகு எனக்குத் தரவேண்டுமென்று சொன்னான். அவனை இந்த ஏகநாதர் இந்தக் கல்லின் பெருமை யென்னவென்று கேட்க, அவன் இரும்பு முதலானவைகளைப் பொன்னாக்குவது இதன் பெருமை யென்றான். அப்படியானால் இருக்கட்டும், நீ யாத்திரை போய் வாவென்று சொல்லி, அந்தக் கல்லை, அவன் கண் காணும்படி நிருமாலியக் குப்பையிற் போய் விழும்படி எறிந்தார். அவன் இதைக் கண்டு, அந்தக் கல் காணமற் போனால் நீர்தான் தரவேண்டுமென்று சொல்லித் தீர்த்தயாத்திரை போய்த் திரும்பி வந்து, ஏகநாதரைக் கண்டு வணங்கிக் கல்லைக் கேட்டான். இவர், உன் கண் காண நான் குப்பையி லெறிந்தேனே, அது உனக்குத் தெரியுமல்லவா? அந்தக் குப்பையில் தேடிக் கண்டெடுத்துக்கொள்ளக் கடவா யென்றார். அப்படியே அவன் அந்தக் குப்பையில் தேடித் தன் கல்லைக் காணாமல் மனம் வருந்தும்போது, நீ போன பிறகு, நாள்தோறும் சேர்கிற நிருமாலியக் குப்பையை நதியிற் கொட்டிவிடுகிறோம், நதியில் போய்த் தேடினால் கிடைக்கும், போவோம வாருமென்று அவ்வேதியனை யழைத்துக் கொண்டுபோய் நதியிற் குளித்து, ஒரு மடி நிறையக் கற்களை வாரிக்கொண்டு வந்து, இவற்றுள்ளே உமது கல்லைத் தேடி யெடுத்துக்கொள்ளுமென்று சொல்ல, அவ்வேதியன் ஒவ்வொரு கல்லாக இரும்பில் பரிசித்துப் பொன்னானதைக் கண்டு, எல்லாம் பரிசவேதிக் கற்களாகவே யிருக்கின்றனவென்று வியந்து, ஸ்ரீவிட்டலப்பெருமானே ஏகநாதராய் அவதரித்திருக்கிறாரென்று மனத்திற்கொண்டு, தனக்கு வேண்டிய ஒரு கல்லை யெடுத்துக்கொண்டு, இவரைப் புகழ்ந்து தன்வீட்டுக்குப் போய்விட்டான். இவர் மற்றக்கற்களை நதியி லெறிந்துவிட்டு நீராடித் தமது மனையை யடைந்தார்.

அப்பால், ஒருநாளிரவில் நான்கு திருடர் வந்து மடத்திலிருந்த சில பொருள்களைத் திருடிக்கொண்டு போக வுத்தேசித்த வுடனே, நால்வருக்கும் கண் தெரியாமல் போய்விட்டதனால், தடவிக்கொண்டே, ஏகநாத ரிருக்கு மிடத்துக்கு வந்து, கண் பெற்று, ஏகநாதரைக் கண்டு வணங்கி நிற்க, இவர் அவர்களை நோக்கி, நீங்கள் என்னகாரியமா யிங்கே வந்தீர்களென்று கேட்க,

அவர்கள், ஸ்வாமீ! திருடும்பொருட்டு நாங்கள் இங்கே வந்தோம், வந்து மடத்துப் பொருளைத் தொட்டவுடனே கண் தெரியாமற் போயிற்று, இப்போது தேவரீர் சந்நிதியைச் சேர்ந்தவுடனே கண் பெற்றோம், உம்மைப்போலப் புண்யாத்மாக்கள் இவ்வுலகத்தில் ஒருவருமில்லை, நாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, ஸ்ரீலக்ஷ்மீநாதராகிய பகவானுக்கு அன்பராகிய ஏகநாதரானவர், அவர்களை நோக்கி, நீங்கள் அஞ்சவேண்டாம், நீங்கள் விரும்பும் பொருள் எதாயினும் இங்கேயிருக்குமானால் எடுத்துக்கொண்டு போகலாமென்று சொல்ல, இவர் சொல்லும் வார்த்தையின் தன்மையை நோக்கி, எங்களுக்கு இந்த நடுராத்திரியில் பசி மிகவும் உண்டாயிருக்கின்றது, ஆகையால் எங்கள் பசியை நீக்கியருளவேண்டுமென்று வேண்ட, உடனே இவர் தமது தேவியாரைத் துயிலெழுப்பி, இவர்களுக்கு அன்ன மிட வேண்டுமென்று நியமிக்க, அப்படியே துரிதமாகச் சமையல் செய்து அவர்களுக் கிட்டு, அவர்கள் பசியை நீக்குதலும், அவர்கள் இவரைப் புகழ்ந்து கொண்டாடிக்கொண்டு போய்விட்டார்கள்.

மற்றொருநாளிரவில் ஒரு பறையன் களவு செய்ததனால் சிறை செய்யப்பட்டு உணவில்லாமல் வருந்தி, வெளிப்பட்டு வரும்போது, பசியினால் வருந்தி நடக்கச் சக்தியில்லாதவனாய் இவர் மடத்துக்கெதிரே வந்து களைத்து விழக் கண்டு, இவர் இது என்னவென்று கிட்டி வந்து பார்த்து, மனிதனாயிருக்கக்கண்டு, நீ ஏனிங்கு வந்தாய் என்று கேட்க, அவன் பசிக்களையால் வாய் திறவாமல், கையினால் பசியென்று குறித்துக் காட்டினான். இவர் அவன் குறிப்பை யறிந்துகொண்டு, இவன் குடல் முதல் தொண்டையளவும் உலர்ந்திருக்கும், இப்போது அன்னமுண்பித்தால் தொண்டையில் விக்கி யிறந்து போவான் என்று, சர்க்கரை சேர்ந்த பாலை வட்டிலில் வார்த்து அவனைப் பருகுவித்தார். உடனே அவன் சோர்வு நீங்கி வல்லமை பெற்று, ஏகநாதரை நோக்கி, நான் பறையன், களவு செய்த குற்றத்தால், ராஜ தண்டனைக் குட்பட்டு வருந்தி யிளைத்து உயிர் நீங்குந் தருண சமயத்தில் இங்கு வந்துவிழுந்தேன், என் சோர்வை நீக்கிக் காப்பாற்றினீர், இன்னம் என் உடம்பு தேறுகிறவரைக்கும் காப்பாற்றினால் உமக்குப் பெரும புண்ணியமுண்டாகும் என்று ப்ரார்த்திக்க, அப்படியே இங்கேயிரு என்று சொன்னார். இதைக் கண்ட வேதியரெல்லாரும், இவர் பறையனுக்கு உபகாரம் செய்வதைக் குறித்துப் பொறாதவர்களாய், இவரை நிந்தித்துப்போனார்கள். அந்தப் பறையன் சிலநாள் இவரிடத்தில தங்கியிருந்து, இவரது எச்சிலையுண்டு, உடம்பைத் தேற்றிக்கொண்டு, விடைபெற்று யாத்திரையாய்ப் போய்விட்டான்.

மற்றொருநாள் இவர் நீராடிவரும் வழியிலுள்ள ஒரு அரச மரத்திலிருந்த ஒரு ப்ரஹ்மராக்ஷஸு, இவருக்கெதிரே வந்து நின்று வணங்கி, நீர் செய்த அன்னதானத்தின்பலன் மலைபோலக் குவிந்திருக்கிறது, அதில் ஒரு பறையனுக்குச் செய்த அன்னதான பலத்தை யெனக்குத் தந்தால், நான் என் பூர்வரூபம் பெறுவேன் என்று ப்ரார்த்திக்க, அப்படியே தந்தேனென்றார். உடனே

அந்த ப்ரஹ்மராக்ஷஸு தன் பூர்வரூபம் பெற்று ஏகநாதரை வணங்கிச் சென்றது. முன்னே யிவரை நிந்தித்துப் போன வேதியர்கள் இந்தச் செய்தியைக் கண்டு, அஞ்சிவந்து இவரைத் தோத்திரஞ்செய்துபோனார்கள்.

அதின் பிறகு, வடமொழிப் பாகவதத்தை ப்ராக்ருதத்தில் உரையோடும், ஹஸ்தாமலகம் என்னும் நூலை அப்படியே உரையோடும், சுகாஷ்டகத்தை அப்படியே உரையோடும், இன்னம் அநேகமான அபங்கக் கவிகளும் கீர்த்தனங்களும் செய்து உலகத்தில் பரவச் செய்ய, இவரது ப்ரபாவத்தைக் கேட்ட அநேகமான அறிஞர்கள் மிகவும் சந்தோஷித்தார்கள். ஒரு வேதியன், இவர் செய்த பாகவதடீகாவைப் பெற்றுத் தினந்தோறும் பாராயணஞ் செய்பவனாயிருந்து, பிறகு காசி யாத்திரை போனான். அவ்விடத்தில் கங்கா ஸ்நாநஞ்செய்து மணிகர்ணிகா கட்டத்தில் உட்கார்ந்து பாராயணஞ் செய்து கொண்டிருக்க, அங்கே, மஹாவித்வானாகிய ஒரு சந்நியாசியின் சீடரிருவர் நீராடவந்து இதைக்கேட்டு, இது மிகவுஞ் சுவையுடைத்தா யிருக்கின்றது, இது யார்செய்ததென்று கேட்க, வேதியன், தேவகிரியிலுள்ள ஏகநாதர் என்னும் மஹாத்மா செய்ததென்று சொல்ல, அந்தச் சீடர்கள், இது உலகில் பரவுமானால், வடமொழிப் பாகவதத்தை ஒருவருந் தேடமாட்டார்களென்று நிர்மாநித்துக்கொண்டு, தமது ஆசானாகிய சந்நியாசியினிடத்திற்போய் இந்தச் செய்தியைச் சொல்ல, அவன் கோவங்கொண்டு, அந்த க்ரந்தஞ் செய்தவனை யழைத்து வாருங்களென்று ஒரு கடிதமெழுதி யனுப்ப, அந்த இரண்டு சீடருங் கொண்டுபோய்க் கொடுக்க, ஏகநாதர் படித்துப் பார்த்துக் கொண்டு, தமது சீடராகிய உத்தவரை யழைத்து, நான் காசியாத்ரை செய்து வருமளவும், நீர் தேவதார்ச்சனை முதலியவும் நடப்பித்துக்கொண்டிருக்கக் கடவீரென்று சொல்லிப் புறப்பட்டுப்போய், கங்கையில் நீராடி, பகவத்தாராதனம் செய்து யோக நிஷ்டையில் எழுந்தருளி யிருந்தார். கடிதங் காட்டி இவரை யழைத்துவந்த சீடர்கள் மடத்திற் போய்த் தமது ஆசானுக்கு இவரது வரவைத் தெரிவிக்க, அவன், இவரை மடத்திற்கு அழைத்துக்கொண்டு வந்து வைத்திருங்கள் என்று சொல்லிவிட்டு, முந்நூறு சீடரோடு பிச்சை பெற்று வரப்போனான். சீடர் இருவரும் ஏகநாதரை யழைத்து வந்து மடத்தில் வைத்துக்கொண்டிருந்தார்கள். பிறகு சந்நியாசி வரும் வழியில் எதிரே போய்ச் சொல்ல, அவன், சீடர் முகத்தை நோக்கி, முன்னோர் க்ரந்தத்தின் மஹிமையைக் கெடுத்தவனை, ஒவ்வொருவரும் ஐயைந்து குத்தாய் ஓங்கிக் குத்துங்கள், நான் இதோ உங்கள் பின்னாலே வருகிறேன், நீங்கள் முன்னே போங்கள் என்று சொல்ல, அப்படியே செய்வோமென்று போகிறவர்களில் சிலர், நமது ஆசான் சொன்னபடியே செய்வோமானால் அவனுயிர் நீங்கும், அதனால் நமக்குக் கொலைப்பாவம் சம்பவிக்கும், ஆதலால் அவனுடைய தன்மையை யாராய்ந் தறிந்து, பிறகு செய்யத் தகுந்ததைச் செய்வோமென்று ஏகநாதரிடத்துக்குப்போக, அவர் இவர்கள் கண்களுக்கு, சாக்ஷாத் விட்டல பவானாகவே தோன்றக் கண்டு, திகைத்து, பயபக்தியோடு ஏகநாதரது தி

வடியை வணங்கித் தோத்திரம்பண்ணி, ஸ்ரீவிட்டலப் பெருமானையும் பலவாறு புகழ்ந்து நின்றார்கள். இந்தச் செய்தியைச் சிலர் போய்ச் சந்நியாசிக்குச் சொல்ல, சந்நியாசி முன்னிலும் கோபம் அதிகரிக்கப் பெற்றவனாய், தனது ஆசநத்துக்குத் திரையிட்டு மறைக்கச் சொல்லி, ஒருவனை யனுப்பி, மறைத்த பிறகு, அந்த ஆசநத்தில் தான்போயிருந்து, அதட்டி, ஏகநாதா, உத்தமமான மறையோர் குலத்துதித்து, சந்நியாசமடைந்த நான், உன் கபட வித்யையைச் சேரழித்துத் தண்டிக்கோட்ட வந்தேன் என்று சொல்ல, ஏகநாதர், ஸ்வாமீ, அடியேன் சிறு பாலகன், அடியேனை யழைத்து முகங் காட்டாமல், திரைக்குள்ளே யிருந்து, கோபித்துப் பேசும்படி, யான் செய்த குற்றம யாதாயினும் உளதானால் பொறுத்தருளவேண்டும், தேவரீருடைய திருமுகத்தைக் காண விரும்புகிறேன் என்று சொல்லக் கேட்ட சந்நியாசி, சாந்தகுணத்தை யடைந்து, திரையை நீக்கிப்பார்த்து, இந்த ஏகநாதர் ஸ்ரீகண்ணபிரான் வடிவமாய்த் தோன்றக் கண்டான். கண்டு, மிகவும பயந்து, ஆச்சரியமடைந்து, ஏகநாதரை வணங்கி, ஸ்ரீகண்ணபிரானே, அடியேனைத் தொண்டு கொள்ளவோ வந்தாய் என்று துதித்து நிற்க, ஸ்ரீகண்ணபிரான் உருவம் மாறி, முன்போல ஏகநாதராய் விளங்கக்கண்டு, ஸ்ரீபரந்தாமனே இப்படி உலகத்தார் ஈடேறும்பொருட்டு அவதரித்தாரென்று நிச்சயித்து, அருகில் வந்து திருவடியைப் பிடித்துக்கொண்டு, அவிவேகியாகிய அடியேனுடைய குற்றத்தை மன்னித்தருள வேண்டுமென்று நிலத்தின்மேல் கிடக்க, ஏகநாதர் அந்தச் சந்நியாசியைத் தூக்கி யெடுத்து, ஆசிரமத்தால் உயர்ந்த நீர் என்னைப் பணியத்தகுமோவென்று உபசாரவார்த்தைகள் சொல்லி, இருமென்று சொன்னார். அப்போது சந்நியாசியானவன் இவரை நோக்கி, ஸ்வாமீ, தேவரீர் திரு வாக்கினால் ஸ்ரீ பாகவதத்தைக் கேட்க விரும்புகிறேன் என்று ப்ரார்த்திக்க, அப்படியே ஏகநாதரும் ஸ்ரீபாகவதத்தைப் படித்து வ்யாக்யாநம் செய்ய, சந்நியாசி கேட்டு ஆநந்த பரவசனாய், தேவரீர் சில நாள் இவ்விடத்தில் என்னோடுகூடி யிருக்கவேண்டுமென்று வேண்ட, ஏகநாதரும அவன் வேண்டுகோளுக் கிசைந்து அவ்விடத்தி லிருக்கும்போது, இவரது ஸ்ரீபாகவதத்தை அரங்கேற்ற வேண்டுமென்று சந்நியாசியானவன் ப்ரயத்நம் செய்யக் கண்ட அவனது சீடர்கள் அவனை நோக்கி, ஸ்வாமீ, இந்த ஏகநாதன் செய்த பாகவதத்தைத் தேவரீர் அங்கீகரிக்கலாமா? உம்மை யொத்தவர்களெல்லாம் இதைச் சிறப்பித்தீர்களானால், வடமொழிப பாகவதத்துக்கென்ன மஹிமை யுண்டு என்று கேட்க, சந்நியாசி அவர்களை நோக்கி, நானும உங்களைப்போலவே அதை அநாதரித்து, நீரி லெறியலாமென்றெண்ணி யிருந்தேன். அவரைக் கண்டபோது, அவர் ஸ்ரீகண்ணபிரானது திருவுருவாகவே சேவை தந்தருளினார். ஆகையால் சாக்ஷாத் பகவதம்சமே யென்று துணிந்து அவரை வணங்கினேன், நீங்களும் அவர் விஷயத்தில் அபசாரப்படவேண்டாம் என்று சொல்ல, அவர்கள் அவன் சொல்லையும் லக்ஷ்யம் பண்ணாமல் ஏகநாதரிடத்திலிருந்த புத்தகத்தை வலிந்தெடுத்துக் கொண்டுபோய் நதியிலெறிந்து விட்

டார்கள். அப்போது அந்தப் புத்தகம் நீரில் விழுவதற்கு முன்பே, கங்கா தேவியானவள் தனது கங்கணக் கையை நீட்டி அன்போடு ஏற்றுக்கொண்டாள். எதிர்த்த வேதியர்கள் அதைக்கண்டு பயந்து, நமது ஆசாரியர் சொன்னது மெய்யே, நாம் செய்தது பிழையே யாமென்று, ஏகநாதரை யடைந்து அவர் திருவடியை வணங்கி, மூர்க்கராகிய எங்கள் பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தார்கள். அப்பால் இவர்களிற் சிலர், ஆற்றில் நீந்திக்கொண்டுபோய் கங்காதேவியின் கையிலிருந்த புத்தகத்தை வாங்கிக்கொண்டு சந்நியாசியினிடத்துக்கு வந்து புத்தகத்தைக் கொடுத்து, ஸ்வாமீ, தேவரீர் சொன்ன சொல் வேத வாக்கியமேயென்று கொண்டாட, அவன், நீங்கள் ஏகநாதருக்கு அடிமைப்படுங்களென்று சொல்ல, அப்படியே அந்த வேதியரெல்லாரும் ஏகநாதர் திருவடியை வணங்கி, எங்களை யீடேற்ற வேண்டுமென்றார்கள். அப்போது ஏகநாதர், சந்நியாசியையும் அவ்வேதியரையும் நோக்கி, நீங்கள் எனக்குச் செய்யுஞ் சிறப்புக்களெல்லாவற்றையும் இந்தக் கிராமத்துக்குச் செய்யுங்களென்று சொல்ல, அதற்கு அவர் யாவரும் மகிழ்ந்து, அந்தக் கிரந்தத்தை யானை முதுகிலேற்றி, பலவாத்யங்களும் கோஷிக்கவும், பக்தர்கள் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு சூழ்ந்து வரவும், சுகந்த பொடி, புஷ்பம் முதலிய பரிமள திரவியங்களை அன்பர்கள் தூவிக்கொண்டு வரவும், வழியிலிருப்பவர்கள் கர்ப்பூரஹாரதி முதலிய வுபசாரங்களைச் செய்யவும், எழுநாள் வரையும் ஊர்க்கோலம் வந்து, எட்டாநாள் மடத்தைச் சேர்ந்து, ப்ராம்மண சந்தர்ப்பணை முதலியவும் செய்து மகிழ்ந்திருந்தார்கள் அன்று இரவில், ஏகநாதர் ஸ்ரீ ஹரிநாம சங்கீர்த்தனம் செய்யக் கேட்டவர் எல்லாரும் ஆநந்தமடைந்து, ஹாரதி செய்து, பரஸாதம் லபித்துக்கொண்டு, நாலுநாளளவும் ஸ்ரீ பாகவத விஷயமாக உத்ஸவம் நடத்தி, எல்லாரும் ஏகநாதர் செய்த ஸ்ரீ பாகவதத்தையே படித்து ஆநந்திக்கலானார்கள்.

அதன்பிறகு, ஏகநாதர், சந்நியாசி முதலியோரிடத்தில் விடைபெற்றுத் தமதூருக்கு வரும்வழியில், தாசோபண்டிதர் என்னும் பெயருள்ள வேதியர், இளமைப் பருவத்திலேயே தத்தாத்ரேயரைக் கண்டு வணங்கினைத்து, உறவினர் முதலியோரை விட்டு ஒரு காட்டுக்குப் போய், சருகு முதலியவற்றைப் புசித்து, தேஹாபிமானத்தை விட்டு, இருபது வருஷகாலம் வரைக்கும் அவரை த்யானம் பண்ணிக்கொண்டிருக்க, அவர் இவர்மீது இரக்கங்கொண்டு தமது அருளுருவைக் காட்டியருளக் கண்டு, திவ்ய சரீரம் பெற்று, அநேகமான கவிகளைச் செய்து ப்ரபலராயிருந்தார் அவர் ஏகநாதரது வைபவத்தை, முன்பே கேட்டறிந்திருப்பவராதலால் வந்து இவர் திருவடியை வணங்க, இவரும் அவர் திருவடியை வணங்கி, இருவரும் ஒருவர்க்கொருவர் தழுவிக்கொண்டார்கள். பிறகு அவ்வேதியர் இவரைத் தமது பர்ணசாலைக்கு வரும்படி ப்ரார்த்தித்து, அழைத்துப் போய், சகல வுபசாரங்களும் செய்து அமுதருந்தச் செய்து, பிறகு ஸ்ரீபாகவதம் ஏகநாதர் திருவாக்கால் கேட்டு

அன்றிரவில் ஹரிநாமஸங்கீர்த்தநமும் கேட்டு மகிழ்ந்தார். இப்படி ஒருமாச காலம் வரைக்கும் இவரை வைத்துப் பூஜித்துக்கொண்டிருக்க, இவர், க்ருஷ்ண ஜயந்தி நெருங்கிவிட்டபடியால் ஊர்க்குப்போகவேண்டும், நீரும் அந்தச் சமயத்தில் அங்கு வரவேண்டுமென்று சொல்லிப் போயினர்; போய் ஊரையடைந்திருக்க, தாசோபண்டிதரும் ஸ்ரீஜயந்திக்கு முன்பே வந்து சேர்ந்தார். சேர்ந்து, ஏகநாதர் மடத்து வாசற்படியருகே, தத்தாத்ரேயர், சூலத்தைக் கையிலேந்திக்கொண்டு நிற்கக்கண்டு, வியந்து வணங்கி, ஐயனே, இங்கே யெழுந்தருளியிருப்பதற்குக் காரணம் யாதென்று கேட்க, அவர் இந்தப் பண்டிதரைத் தழுவிக்கொண்டு, இந்த ஏகநாதர் பகவதம்சமாய் அவதரித்தவர், இவரது அன்புக்காக, இவர் மடத்து வாசற்படியி லிருந்து, இவரைச் சேவிக்க வருவோரை இவருக்குத் தெரிவித்துக்கொண்டிருப்பேன், இவருடைய தபோ மஹிமையைச் சொல்ல வல்லவர் யாவர்? அநேக ஜந்மங்களில் செய்த தவப்பேற்றை யுடையவர்களுக்கேயன்றி, மற்றவர்களுக்கு இவர் தரிசநம் கிடைப்பது துர்லபம் என்று சொல்லி, பண்டிதரை வாசற்படியில் நிறுத்திவிட்டு, உள்ளேபோய் ஏகநாதருக்கு அறிவிக்க, அவர் உடனே எழுந்து வந்து பண்டிதரைத் தழுவிக்கொள்ள, இவரும் ஏகநாதரைத் தழுவிக்கொண்டு அநேகவித சம்பாஷணம் செய்த பிறகு பண்டிதரை உள்ளே அழைத்துக்கொண்டுபோய்ச் சகல உபசாரங்களோடும் அமுது செய்வித்து, புராண காலக்ஷேபம் கேட்பித்து, அன்றிரவில் ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தநஞ் செய்ய, பண்டிதர் கேட்டு மகிழ்ந்திருந்தார். இப்படி ஸ்ரீஜயந்தி உத்ஸவம் முடியுமளவும் அங்கிருந்து, பிறகு ஏகநாதரிடத்தில் விடைபெற்று, தமதூரையடைந்து யாவருக்கும் ஏகநாதருடைய வைபவத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார். ஏகநாதரும், தமது மடத்துக்கு வருகிற சாதுக்களுக்கெல்லாம், அன்னம் வழங்கி, பகற்காலங்களில் ஸ்ரீபாகவத புராண காலக்ஷேபமும், இராக்காலங்களில் ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தநமும் செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள் இவர் கோதாவரிநதிக்குப் போய் நீராடி வரும் வழியில், துர்மார்க்கனாகிய ஒரு துருக்கன் இவரை மதிக்காமல் எச்சிலை உமிழ்ந்தான். அது இவர்மேல் வந்து விழுந்ததைக் குறித்துக் கோபங்கொள்ளாமல், அவன் செய்த தீமையின் பொருட்டுப் பரலோகத்தில் தண்டிக்கப்படுவானே என்று அவனது துர்க்கதிக்குத் தாம் மனம் வருந்தி, இவனை எப்படியாகிலும் பரிசுத்தனாக்கவேண்டுமென்று எண்ணி, மறுபடியும் போய் ஸ்நாநஞ் செய்து வந்து, தமது நித்தியகர்மாநுஷ்டானங்களை முடித்தபிறகு, ஓர் ஆளிடத்தில் பிரசாதத்தைக் கொடுத்து அவனோடுகூடத் தாமும்போய் அந்தத்துருக்கன் வீட்டையடைந்து, இந்தப்பிரசாதம் ஸ்ரீபகவதர்ப்பணஞ் செய்யப்பட்டது, ஆதலால், இதனை உன் எல்லாப பாபங்களும் நசிக்கும் பொருட்டு, உட்கொள்வாயாக என்று சொல்ல, அந்தத் துருக்கனுக்கு இவரது தரிசநமாத்திரத்தால் ஞானோதயமானதனுல், இவர் பரிசுத்தாத்மா என்று மனத்திற்கொண்டு, இன்று உதயத்தில் இவர்மீது காம எச்

கிலே உமிழ்ந்ததை மறந்து, நம்பொருட்டு, அமுதேந்திக்கொண்டு வந்து கொடுத்து, நமக்கு ஹிதமான வார்த்தைகளுஞ் சொல்லுகின்றாரே, இவரைப் போல் பரமசாதுக்கள் மூவுலகங்களிலும் கிடைப்பது அருமை என்று தீர் மானித்து, இவரது திருவடிகளில் விழுந்து வணங்கி, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, ஏகநாதரும் அவனை நோக்கி, உன் குற்றத்துக்காக நீ யஞ்சவேண்டியதில்லை, இப்போது நான் கொடுத்த பகவத் பிரசாதத்தால், உன பாப முழுதும் நசித்துப்போயிற்று என்று அபயங்கொடுத்துத் தமது மடத்தை யடைந்தார். அந்தத் துருக்கன் இந்தப் பகவத்பிரசாதத்தைஉட்கொண்டு அதனால் மனம் தெளிவடையப் பெற்று ஸ்ரீஹரி பக்த னானான். பிறகு ஒரு நாள் மத்தியான காலத்தில் இவர் கோதாவரி தீர்த்தமாடி வரும்போது, இவருக் கெதிரே மிகவும் சூடேறின மணலின்மேல் விளையாட வந்த ஒரு குழந்தை அகப்பட்டு, ஓடவுஞ் சக்தியில்லாமல் பதைத்து, வாய்விட்டு அழுது வருவதைக் கண்டு, அந்தக் குழந்தையைக் கிட்டி, அதை எடுத்து அணைத்துத் தமது ஆடையால் வேர்வை துடைத்து, அந்தச் சிசுவை நோக்கி, அப்பா குழந்தாய், உன் வீடு எங்கே என்று கேட்க, அந்தச்சிறுவன், தன் வீடு இருக்குந் திசையைக் கையினால் காட்டினான். உடனே அந்தச்சிறுவனை எடுத்துக்கொண்டு, அவன் காட்டின திசையைக் குறித்துப்போய் எதிரே தேடிக்கொண்டு வருகிற அந்தக் குழந்தையின் தாயைப்பார்த்து அவள் கையில் கொடுத்து அவள் புலைச்சி என்பதை யறிந்து, மறுபடியும் நீராடி வந்து மடத்தைச் சேர்ந்தார்.

பின்பொரு காலத்தில், திரியம்பகம் என்னும் ஊர்க்கு அயலில் உள்ள ஒரு சிறு கிராமத்திலிருப்பவனாகிய ஒரு வேதியன், குஷ்ட நோயால் மிகவும் வருந்தி, பலவிதமான பரிஹாரங்களாலும் அது தீராதிருக்கக் கண்டு, இதற்கு யாம என்செய்வோம்! நமக்குச் சிவபெருமானே யன்றி வேறொரு துணையுமில்லை என்று துணிந்து, பசிக்குக் கந்த மூலபலாதிகளை உண்டு, பன்னிரண்டு வருஷகாலங் கழித்து வந்தான். அப்படியிருக்குங் காலத்தில், ஒரு நாள் சிவபெருமான் அவனது கனவில் வந்து, கோதாவரி நதிக்கரையில் உள்ள தேவகிரி என்னும் ஊரில், ஏகநாதர் என்னும் ஒரு ஹரிபக்தரிருக்கிறார், அவரிடத்தில் போய், அவர் மணலில் அகப்பட்டுப் பதைத்த ஒரு குழந்தையைக் காப்பாற்றின புண்ணியத்தைத் தாப பெறுவாயானால், உடனே உன் பிணி முழுதும நீங்கிப்போகும என்று சொல்லி மறைந்தார். உடனே வேதியன் நித்திரை விட்டெழுந்து, தேவகிரியில், ஏகநாத ஸ்வாமிகளின் திருமாளிகைக்குப் போய், அவ்விடத்தில் அவரைக் காணாமல் தேடிக் கொண்டு கோதாவரி நதிக்கரையில் வந்துநின்று, அந்நதியில் நீராடுவோரைப் பார்த்து, ஏகநாத ஸ்வாமிகள் என்பவர் யார் என்று கேட்க, அவர்கள், இவரைச் சுட்டிக் காட்ட, வேதியன், சமீபித்து, ஏகநாதரது திருமுகத்தை நோக்கி, மனமுருகி, பலவகையாகத் தோத்திரஞ் செய்து வணங்கி, சிவபெருமான், தன் கனவில் வந்து சொன்னதையும, தான் படுகிற துன்பத்தையும்,

விண்ணப்பஞ் செய்ய, ஸ்வாமிகள் கிருபைகூர்ந்து, தாம், மணலிலகப்பட்டு வருந்தின குழந்தையைக் காப்பாற்றினதனால் உண்டான புண்ணியத்தை வேதியனுக்குத் தாரைவார்த்துக் கொடுக்க, உடனே அவன் பிணி நீங்கி, தேஹம் ஒளியோடு கூடிப் பிரகாசிக்கப்பெற்று, ஸ்வாமிகளை வாழ்த்தி வணங்கினான். இதைக் கண்ட வேதியரெல்லாரும், ஜயஜய கோஷஞ் செய்து, இவருக்கு நிகராவாரொருவருமில்லையென்று புகழ்ந்துகொண்டாடினார்கள். ஏகநாத ஸ்வாமிகளும் தமது மடத்தையடைந்து இனிதாக வாழ்ந்திருந்தார்.

அதன்பிறகு ஒருநாள், உத்தவர் என்னும் வேதியர் முதலானோர் வந்து ஏகநாதரை வணங்கி, நீர் செய்த பாகவதத்தை யாங்கள் கேட்க விரும்புகிறோம் என்று அன்போடு வேண்ட, அப்படியே ஏகநாதர் பாகவதஞ் சொல்லத் தொடங்கினார். அப்படித் தொடங்கின நாளில், கோதாவரி யென்னும் நதி, தன் பெண்ணுருவங்கொண்டு, காலக்ஷேபம் நடக்கும் இடத்தின் ஒரு பக்கத்தில் வந்திருந்து, தினந்தோறும் காலக்ஷேபங் கேட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்து, அங்கு வரும் பாகவதரெல்லாரும் இந்தப் பெண் யாரோ, அறியோமென்று, காலக்ஷேப முடிவில் அவள் போகும்போது கூடவே தொடர்ந்துபோய், அவள் கோதாவரியில் மறைதலைக் கண்டு, தங்கள் மனத்தில் அதிசயித்து, இந்தப் பெண்ணுருவங் கொண்டுவந்து புராண காலக்ஷேபங் கேட்டது கோதாவரி நதியேயென்று துணிந்துபோய், ஏகநாத ஸ்வாமிகளிடத்தில் இந்தச் செய்தியைச் சொல்ல, அவர் பாகவதரை நோக்கி, உங்கள் புண்ணியவசத்தால் கோதாவரியின் திருவுருவத்தைக் கண்டீர்கள் என்று சொல்ல, அவர்கள், எல்லாம் உமது பாகவத காலக்ஷேபத்தின் ப்ரபாவமேயல்லாது வேறல்லவென்று புகழ்ந்து பாகவத பாராயணஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில், ஏகநாதரது மடத்துக்கருகில் குடியிருப்பவனாயிருந்தும், ஸ்ரீஹரிநாமத்தை ஒருநாளாகிலும் சங்கீர்த்தநம் செய்யாதவனாயிருக்கிற ஒரு குடியானவனை ஏகநாதர் பார்த்து, ஐயோ, இவன் கிடைத்தற்கரிய மானுடதேகத்தைப் பெற்றும் அதை வீணாக்குகிறானேயென்றும், நமது மடத்தருகிலிருந்தும் நம்மோடு கலவாமல் இப்படி வீணாய் நசித்துப் போகிறானே யென்றும் சிந்தித்து, அன்புமிகுந்து, அவனைத் திருத்தும்பொருட்டு, அவனை ஒருநாள் வழியிலே கண்டு, குடியானவனே, உன் குடும்பத்தோடு நீ சுகமாயிருக்கிறாயா என்று வினவ, அவன் எல்லாரும் சுகமாயிருக்கிறார்களென்று தன் குடும்ப க்ஷேம லாபங்களைச் சொல்ல, கேட்ட ஏகநாதர், உன் குடும்ப வாழ்க்கையைக் கழிக்குங் காலத்தில், ஒரு கடிகைப்போதாயினும் சக்ரபாணியாகிய பகவான் கதையைச் சிரவணஞ் செய்ய வேண்டும் என்று வலிந்து சொல்லக் கேட்ட அவன், எனக்கு ஒரு க்ஷண காலமாயினும் ஒழிவில்லையென்று சொல்ல, இவர் அவனை நோக்கி, நீ இதே வேலையாயிருக்காமற்போனாலும், வேலை செய்கிற காலத்திலாகிலும் ஸ்ரீஹரியின் திருநாமத்தை மறவாமல் ஸ்மரித்துக்கொண்டிரு, அப்படி வேலைக் காலத்தில் ஒருவேளை இசையாமற் போனாலும் போகட்டும் என்று சந்தோஷ

த்தோடு, ஒரு கடிதமெழுதி, அந்தக் கடிதத்தில் ஒருசுலோகத்தை யெழுதி, அவன் முகத்தைக் கையினால் தடவி, நீ இந்தச் சுலோகத்தையாயினும் தெளிந்தறிவாயாக என்று சொல்லித் தமது மடத்திற் சேர்ந்திருந்தார். அவன் அந்தச் சுலோகத்தைப் படித்து அதின் அர்த்த சாரத்தை யறிந்து, அது மிகவும் இனிமையா யிருக்கக் கண்டு, மறு நாள் வந்து மற்றொரு சுலோகம் எழுதித் தரவேண்டு மென்று வேண்ட, அப்படியே யெழுதிக் கொடுத்தார். அதையும் படித்து அதின் சாரத்தை யறிந்துகொண்டு, மிகவும் ஞானவானாகி நாள்தோறும் பகலில் பாகவத காலக்ஷேபத்திலும், இரவில் ஹரிநாம ஸங்கீர்த்தநத்திலும் விருப்பமுள்ளவனா யிருப்பதை யறிந்த ஏகநாதர், ஸஹஸ்ரநாமத்தை யெழுதிக்கொடுத்து, இதைத் தினந்தோறும்சீராடி, நியமமாய்ப் படனம் பண்ணக் கடவா யென்று கொடுக்க, அவன் அப்படியே செய்து ஹரிதாசன் ஆனான்.

இது நிற்க, ஏகநாத ஸ்வாமிகள் இவ்வாறு பகவத் தியாநபரராய்க் காலங் கழிக்கையில், இவருக்கு ஒரு மகள் பிறந்தாள். அவளுக்குக் கோதுபாயி யென்று பெயரிட்டார். அதின்பிறகு ஒரு மகன் பிறந்தான், அவனுக்கு ஹரி யென்று பெய ரிட்டார். அதின்பிறகுஒரு மகள் பிறந்தாள், அவளுக்குக் கங்காபாயி யென்று பெய ரிட்டார். இவர்களை அன்போடு வளர்த்து வந்து, பெண்க ளிருவருக்கும் பருவம் வந்த வுடனே, அவர்கள் தகுதிக்கேற்ற மணவாளர்களைத் தேடி மணமுடித்துக் கொடுத்தார். பிறகு ஹரியென்னும் புதல்வர் சகல சாஸ்த்ர பண்டிதராய் பிரகாசிக்க, அவருக்கும் மணமுடித்து வைத்தார். அவருக்கு மூன்று மக்கள் பிறந்தார்கள். அவர்களில் இளைய பிள்ளையாகிய ராகவனை இங்குவிட்டு, மற்ற இரண்டு பிள்ளைகளையும், தேவியையும் அழைத்துக்கொண்டு காசிக்குப்போய் அவ்விடத்தில் வாசம் பண்ணிக்கொண்டிருந்தார். ராகவன் என்னும் இளையபிள்ளையானவர், பாட்டனாருக்கு ஏவற் பணிவிடைகள் செய்துகொண்டும், இவர் செய்த கீர்த்தநங்களைப் பாடும்போது அதற் கிசையத் தாளங் கொட்டிக் கொண்டும் இவர்க்கு மிகவும் அநுகூலரா யிருந்தார். இந்தச் சிறுவரது செய்கையைக் கண்டோரெல்லாரும் இவர் தமது பாட்டனாராகிய ஏகநாத ஸ்வாமிகளுடைய பெயர் விளங்கச் செய்தற்குத் தகுந்தவரே யென்று புகழ்ந்திருந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில் ஒரு நாள், இளையவராகிய ராகவ பண்டிதர், பாட்டனாராகிய ஏக நாதர் திரு வடியை வணங்கி, அடியேனுக்கு ஞானோபதேசம்செய்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்கஇவருடைய பரிபக்குவத்துக்கு ஏகநாத ஸ்வாமிகள் சந்தோஷித்து, இவருக்கு ஞானோபதேசம் செய்தருளினார். அதற்குமேல் சிலநாள் கழிந்தபிறகு, ஏகநாதஸ்வாமிகள், நமக்கு மூப்பு வந்துவிட்டது, இனி நமது புதல்வர் நம்மிடத்தில் இல்லாதிருப்பது தகுதியல்ல வென்று ஆலோசித்து, காசி க்ஷேத்ராத்துக்குப் போனார். இவர் வரவை யறிந்த ஹரி பண்டிதர் வந்து இவரது திருவடியை வணங்கி, தமது இருப் பிடத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சகலவிதமான வுபசாரங்க

ரும் செய்து, அமுது செய்வித்து இவர் மன மகிழும்படி திருப்திசெய்ய,
இவர் சிலநாள் அவ்விடத்தில் தங்கியிருந்து, ஒருநாள் புதல்வர் முகத்தைப்
பார்த்து, அப்பா, எனக்கு வார்த்திகப் பருவம் வந்துவிட்டதனால், இந்தச்
சமயத்தில் நீ என்னைப் பிரியலாகாது, என்னிடத்திலேயே யிருக்கவேண்டும்,
ஆதலால் உன் புதல்வர் இருவரையும் பைதண க்ஷேத்திரத்தில் இருத்தி, நீ
என்னுடன் வருவாயாக, எனக்கு உன்னையன்றி வேறு புதல்வர் இருக்கிறா
ரோ என்றார். அதைக் கேட்ட புதல்வர், என்னிடத்தில் பேரருளுள்ள தந்
தையே, என் விருப்பத்தின்படியே நீர் செய்தால் அடியேன் உம்மோடு வரு
வேன் என்றார். ஏகநாதர் அது என்ன சொல்லென்று வினவ, புதல்வர்
சொல்லுகிறார். நீர் பிறருடைய அன்னத்தை புசித்தலும், ப்ராக்ருத பாஷை
யிலுள்ள கிரந்தங்களை உமது வாயினாற் சொல்லுதலும் ஆகிய இச்செய்கை
களை விட்டுவிட்டால், அடியேன் உம்மோடு கூடியிருக்கத் தடையில்லை
யென்றார். அதைக்கேட்ட ஏகநாதர் நகைத்து, அப்படியே உன் இஷ்டம்போல
நான் நடந்துகொள்ளுகிறேனென்று சொல்ல, உடனே புதல்வராகிய ஹரி
பண்டிதர் இவரை யழைத்துக்கொண்டுபோய்த் தமதூரை யடைந்து, ஆசனத்
தில் இருத்தி, வடமொழியிலுள்ள ப்ரபந்த வகைகளை வினவ, அவர் வினா
வுக்குத் தக்க விடை சொல்லிக்கொண்டு வந்தார். நாள்தோறும் இவ்வாறே
நடந்துகொண்டிருக்க, விவேகிகளெல்லாரும் இதைக்கண்டு, இவர் தமது
கொள்கை மாறியிருப்பதற்குக் காரணம் யாதென்று ஆலோசித்துக் கொண்
டிருந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில், அவ் வூரிலுள்ள ஒரு ஏழைப்
பார்ப்பினியானவள், தன் நோய் நீங்கும்பொருட்டு, தன் குருவின் சொற்படி
யே, ஆயிரம் ப்ராஹ்மணருக்கு அன்னமிட்டாள். உடனே அந்த நோய் தீர்ந்து
விட்டது. சிலநாள் கழித்து மறுபடியும் அப்படியே செய்ய நினைத்துப்
பொருளில்லாமையால் வருந்தி, சற்குருஸ்வாமிகளிடத்தில் வந்துவணங்கி,
ஸ்வாமீ, பொருளில்லாமையால் என் விரதத்துக்குப் பங்கமநேரிட்டிருக்
கின்றது என்று விண்ணப்பஞ்செய்ய, சற்குருவானவர் கருணைகூர்ந்து, பெ
ண்ணே, வேதத்தில் சொல்லப்பட்ட உபாய மொன்றுண்டு, அது யாதென்
றால் சொல்லுகிறேன் கேள். ஒரு வேதபாடகன் நூறுபண்டிதர்க்குச் சமான
னாவான், ஒரு யாக கர்த்தாவானவன் ஆயிரம் வேதபாடகனுக்குச் சமான
னாவான், ஒரு ஜிதேந்த்ரியன் ஆயிரம் யாக கர்த்தாக்களுக்குச் சமானனாவான்,
த்ரிவிக்ரமனாகிய ஸ்ரீ பகவானுடைய தாசனாயிருப்பவனொருவன் ஆயிரம்
ஜிதேந்த்ரியர்களுக்குச் சமானனாவான், அந்தத் தாசர்களிற் சிறந்தவராகிய
ஏகநாதஸ்வாமிகளை யழைத்து அவரொருவருக்கு மாத்திரம் அன்னமிட்டால்
உன் மனோரதங்கள் எல்லாம் நிறைவேறுமென்றுசொல்ல, அப்படியே அந்த
ப் பார்ப்பினி, ஏகநாதர் மடத்திற்கு வந்து அவரை வணங்கி, தனது விரதத்
தின் வரலாற்றைச் சொல்ல, இவர் அவளைநோக்கி, என் புதல்வராகிய ஹரி
பண்டிதரிடத்தில் உத்தரவு பெற்று வந்தால் நான் வருவேன் என்றார். அப்
படியே அவள் ஹரி பண்டிதரை வணங்கி உத்தரவு கேட்க, அவர் என் தந்

தையானவர் சிலநாளாகப் பராந்நம் உண்பதில்லையென்று ப்ரதிஜ்ஞை செய்துகொண்டிருக்கிறார் என்றார். பார்ப்பினி மறுபடியும் ஏகநாதரிடம் வந்து வணங்கி, தேவரீருடைய புதல்வர் இசையவில்லை, நீரே யென் எண்ணத்தை முடித்தருளவேணடும் என்றாள். அதற்கு ஏகநாதர் மன மிரங்கி, தமது புதல்வர் முகத்தைநோக்கி, அப்பா, இந்தப் பார்ப்பினியின் எண்ணத்தை முடித்தால் நலமென்று சொல்ல, புதல்வர், காசிக்ஷேத்ரத்தில் செய்த ப்ரதிஜ்ஞை வீணாய்ப்போமே யென்று வருந்தினார். அதைக் கண்ட ஏகநாதர், புதல்வரை நோக்கி, நீயே போய் அவள் கொடுக்கிற அரிசி முதலிய பொருள்களையெல்லாம் வாங்கிக்கொண்டு அவ்விடத்திலேயே சமையல் செய்தால் அவள் கருத்தும நிறைவேறும், நமது ப்ரதிஜ்ஞையும் கெடாது என்று சொல்ல, புதல்வருக்கு இந்த ஏற்பாடு உசிதமாய்க் காணப்பட்டதனால் அப்படியே அவள் வீட்டுக்குப் போய், அவள் கொடுத்த பதார்த்தங்களைக் கொண்டு சமையல் செய்து சித்தப்படுத்தி வைத்துக்கொண்டு, ஏகநாதரை யழைத்துவாவென்று பார்ப்பினியை யனுப்ப, அவள்போய் ஏகநாத ஸ்வாமிகளை யழைத்துவருகிற வழியில் ஸ்வாமிகளைநோக்கி, அடியேன் உயர்ந்த பலகாரங்களெல்லாம செய்வித்து வைத்திருக்கிறேன், என் கையினாலே நானேயிட, நீர் உண்டால் என் பிணி தீரும் என்று சொல்ல, ஸ்வாமிகளும் அவளைநோக்கி, பெண்ணே, நான் உண்ணுஞ் சமயத்தில் பலகாரங்களைப் போடக் கடவாயென்று சொன்னார். பிறகு வீடு சேர்ந்தவுடனே இவர்க்குச் சிறந்த ஆசனமிட்டு, சகலமான உபசாரங்களும் செய்து முடிந்தபிறகு, ஹரிபண்டிதர், தாமே எல்லாக் கறிவகைகளும் அன்னமும் தந்தைக்குப் பரிமாற, இவர் அமுது செய்திருக்குங் காலத்தில், பார்ப்பினி, பலகாரங்கள் பரிமாற, அவற்றை இவர் விரைந்துண்டார். அதைக்கண்ட புதல்வர் கோபித்து அவளைப் பார்க்க, ஸ்வாமீ, நீர் தயை செய்து க்ஷமித்தருள வேண்டுமென்று வேண்ட, ஹரிபண்டிதர், பிதாவின் செய்கையைக் குறித்து அப்பால் விசாரித்துக்கொள்ளலாமென்று அடங்கியிருந்தார். ஸ்வாமிகளும அமுதுசெய்து முடிந்தது. இவர் கை கால்கள் சுத்தி செய்துகொண்டபிறகு, புதல்வர் இவர் உண்ட எச்சில் இலையை யெடுத்துப்போய் வெளியி லெறிந்து வந்து சுத்திசெய்யப் போய் அவ்விடத்தில் முன்போல இலை யிருக்கக்கண்டு, அதையும் எடுத் தெறிந்து வந்து வேறொரிலை யிருக்கக்கண்டார். இப்படி யெடுத்தெறிந்து வருந்தோறும் இங்கே இலை இருக்கக்கண்டு, பயந்து, நமது தந்தையாரைப் பகவதம்ஸமென் றறியாமற் போனேன், உலகமெல்லாம் இவரைப் புகழ்வதையும் யோசிக்காமற்போனேன் என்று தமது குற்றத்தைக்குறித்து, அநுதபித்து, தந்தையாருடைய திருவடியை வணங்கி, இதுவரைக்கும் கல்விச் செருக்கால் தேவரீரை மதியாமலிருந்த குற்றத்தை க்ஷமித்தருள வேண்டுமென்று வேண்ட, ஸ்வாமிகள் கிருபைகூர்ந்து, இந்த இலையை யெடுத்தெறிந்தால் இனி வேறே இலையிருக்காது என்று சொல்ல, அப்படியே யெடுத்தெறிந்து, அவ்விடத்தில் வேறிலை யில்லா திருக்கக் கண்டு அதிசயித்தார். பிறகு அந்தப் பார்ப்பினி,

புஷ்பசந்தன தாம்பூலாதிகளைக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு தமது மடத்துக்கு வரும்போது, பண்டிதர், ஸ்வாமிகளைநோக்கி, ஐயரே, நீர் முன்னே யெனக்குச் சொன்ன பிரதிஜ்ஞை வார்த்தையை விட்டு, தேவரீர் திருவுள்ளப்படியே முன்போல வர்த்திக்கலாமென்று ப்ரார்த்திக்க, அப்படியே ஸ்வாமியும் ப்ராக்ருத பாகவத காலக்ஷேபத்தையும், ஹரிநாம ஸங்கீர்த்தனத்தை ஒழிவிலும் நடத்திவர, பண்டிதர் கேட்டு மகிழ்ந்திருந்தார்.

அப்படிச் சிலநாள் கழிந்தபிறகு, அவ்வூருக் கருகிலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு வேதியனிருந்தான். அவனுக்கு ஒரு ஊமைப் பிள்ளை பிறந்து ஒன்பது வருஷம் வரைக்கும் வாய் பேசாமலிருப்பதைக் கண்ட தாயானவள் மிகவும் மனம் வருந்தத்தோடு அந்தச் சிறுவனை யெடுத்துக் கொண்டு ஏகநாத ஸ்வாமிகள் சந்நிதியை யடைந்து, காவ்ரி என்னும் அந்தச் சிறுவனை அவர் திருவடியில் கிடத்தி, இவனை வளர்ப்பதனால் எங்களுக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. இவனை நீரே வளர்த்தால், உமக்குப் புண்ணியமும் புகழுமுண்டாகும் என்று சொல்லி விட்டு விட்டுப் போனாள். அப்படியே ஸ்வாமியும் அந்தச் சிறுவன்மீது அன்பு செய்ய, அவனும் நீராடல் முதலிய ஒழுக்கங்களிற் சிறந்த பண்புடையவனாய் மடத்துத் திருப்பணிவிடைகள் யாவும் செய்து முடித்து, சாயங்காலம் ஒருவேளை போஜனஞ் செய்துகொண்டிருந்தான். அப்படியிருக்குங்காலத்தில், ஸ்ரீராமபிரான் ஏகநாத ஸ்வாமியின் ஏகாந்தத்தில் ப்ரத்யக்ஷமாகி, நீ ஸ்ரீராமாயணத்தை ப்ராக்ருத பாஷையில் செய்து முடிக்கக்கடவாயென்று சொல்லி மறைந்தார். அப்படியே ஸ்வாமிகள் செய்யத் தொடங்கி, யுத்த காண்டத்தில் நாற்பத்திரண்டத்தியாயம் வரைக்கும் செய்து முடிந்தபிறகு, ஊமைப் பிள்ளையாகிய காவ்ரி யென்பவனைநோக்கி, வேதியரெல்லாரையும் வருவித்து வைத்துக்கொண்டு, எனக்குப் பரந்தாமத்தை அடைதற் குரிய காலம் நேரிட்டது, ஆகையால், நீ யுத்தகாண்டத்தின் குறையை முடிப்பதல்லாமல், உத்தர காண்டத்தையும் செய்து முடிக்கக் கடவை யென்று நியமித்து, எழுதுகோலும் மைக்கூடும் கொடுத்தருளினார்; அன்றியும் தலைமீது கை யமைத்து அபயம் தந்தருளினார். அவன் தக்ஷணமே ஸ்ரீஹரிநாம ஸ்மரணை செய்து, சுவாமிகளுக் கெதிரே யிருந்துகொண்டு, மேலே ஒரு அத்தியாயஞ்செய்து படித்துக் காட்ட, அதைக் கேட்டவர் யாவரும் அதிசயித்து, இந்த ஊமைச் சிறுவனும், ஸ்வாமிகள்போலவே பாடுகிறான், இது புதுமையாயிருக்கிறதென்று சொல்லி மகிழ்ந்தார்கள். ஸ்வாமிகளும் தாம் பரந்தாமமடையப் போகிறோமென்று சொன்ன ப்ரஸ்தாபத்தைக்கேட்ட சாது ஜநங்களெல்லாரும் வந்து கூடினார்கள். ஸ்வாமிகளும் வழக்கம்போலவே ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்து, பகவானுக்குக் கர்ப்பூர ஹாரதி சமர்ப்பித்து, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனமே வேதசாரம், ஜீவகாருண்யமே சிறந்த தவம் என்று எல்லார்க்கும் சொல்லி, கோதாவிரி நதிக்கரையில் அக்நிகாரியம் செய்துகொண்டிருக்கிற வேதியரை வணங்கி, நதி ஜலத்தில் இடையளவாகிய ஆழத்திலிறங்கி நின்று, ஸ்ரீபகவானை ஹ்ருதயத்தி லிரு

த்தி வணங்கி, வாய் பகவந்நாமஸ்மரணை செய்துகொண்டே யிருக்கப் பரந்தாமத்தை யடைந்தார். உடனே சாதுஜநங்களெல்லாரும் கூடிப் பரிதபித்து, வேதத்திற் சொல்லப்பட்டபடியே, இவரது திருமேனியைக் கோதாவரி தீரத்தில், ஹரிபண்டிதரைக்கொண்டு தஹநம் செய்வித்து மேலும் செய்ய வேண்டிய க்ரியைகளெல்லாம் செய்து முடித்துப் போய், மறுநாள் வந்து ஹஸ்திகளை யெடுக்க, அந்த ஹஸ்திகளின் அடியில் ஒரு அரசமரம் முளைத்திருப்பதைப் பார்த்து, ஸ்வாமிகளே அரசமரமாய் முளைத்தாரென்று ஆலோசித்து, அவ்விடத்தில் ஒரு கோயில் கட்டி, அதில் ஸ்வாமிகளின் திருப்பாதுகையைப் பிரதிஷ்டை செய்து, பூஜித்து, இரவும் பகலும் புராண காலக்ஷேபத்தையும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநத்தையும் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே மாண்கோஜிபோதலே வைபவத்தைச் சொல்லத்தொடங்கினர்.

ஏகநாதசுவாமிகள் சரித்திரம் முற்றிற்று.

# ௩அ-வது மாண்கோஜிபோதலே சரித்திரம்.

தாமணம் என்னும் பாலேகாட்டு நகரில், நான்காவது வருணத்தில் அவதரித்து, மாண்கோஜிபோதலே யென்னும் திருநாமம் பூண்டு, ஸ்ரீஹரி பக்தியிற் சிறந்து விளங்குவோர் ஒருவரிருந்தார். அவர் குடிப்பேர் ஜக்தாப் என்று சொல்லுவார்கள். அவர் தேவியார் திருநாமம் மமதாயி இவர் திருவயிற்றில் ஏமாஜி யென்னும் புதல்வர்ஒருவர் அவதரித்தார். அவர்க்குத் தகுந்த பருவத்தில் மண முடித்துவைத்தார்கள். அந்தப் பெண்ணின் பெயர் பாகீரதி யென்பார்கள். இந்த நால்வரும், உலகவாழ்வில் மிகவும் விரக்தர்களாய் இரவும பகலும், பாண்டுரங்கப்பெருமானுடைய திருவடியை த்யானிப்பவரா யிருந்தார்கள். இவர்கள் தமது வீட்டுக்கு வேண்டியுமட்டும தாநியாதிகளைக் குவியல்களாகச் சேகரித்து வைத்திருப்பார்கள். இவர்களில் மாண்கோஜிபோதலே யென்பவர் ஏகாதசிகள் தோறும் ஸ்ரீ பண்டரி புரத்துக்குத் தவறாமற் போய், ஸ்ரீ கண்ணபிரானை தரிசித்து, தோத்திரஞ்செய்து, கண் விழித்து, மறுநாளாகிய துவாதசி யுதயத்தில், வேதியர்க்கு அந்நமிட்டு, பிறகு வறியவர்க்கும் அப்படியே செய்து, மறுநாள் பாலேகாட்டில் வந்து சேர்ந்து வாழ்ந்திருப்பார். இப்படி நெடுநாள் வரைக்கும் நடந்துவருங் காலத்தில், மேகம் காலமழை பெய்யாமையால் சிறுவிலைக் காலம் வந்து உயிர்களை வருத்த, பசிப்பிணியால் உயிர்கள் வருந்துவதை, போதலே யானவர்கண்டு, தமது தேவியாரை நோக்கி, உலகத்துள்ள உயிர்களெலலாம் பசிப்பிணியா லிறந்தொழிய, நாம் மாத்திரம் சுகமாயிருப்பது அழகோ! ஆதுலர்க்குச் சாலை, அறுசமயத்தார்க்குண்டி, ஓதுவார்க்குணவு, ஆவுக்குவாயுறை, சிறைச் சோறு, ஐயமிடல், தின்பண்டம் நல்கல்; அறவைச் சோறிடுதல், மகப்பெறு

வித்தல், குழந்தையை வளர்த்தல், குழந்தைக்குப் பாலுண்பித்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத்தூரியம், சுண்ணமபு, நோய்மருந்து, வண்ணான், நாவிதன், கண்ணுடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகந் தரல், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடங்கட்டுவித்தல், சோலை வைத்தல், வாவி வெட்டுதல், ஆவுரிஞ்சு தறிநடுதல், விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைதந் துயிர்மீட்டல், கன்னிகாதானம் இந்த முப்பத்திரண்டு தர்மங்களுள்ளே நம்மா லியன்ற வளவு செய்வ தல்லவா இல்லறவாழ்க்கைக்கு அழகு? அப்படிச் செய்பவர்களுடைய பாவங் குறைந்து மெய்ஞ்ஞானம் வளரும்; வளரவே, பிறவிநோய் நீங்கி, பாண்டுரங்க பகவானுடைய க்ருபைக்குப் பாத்திரராகலாம் என்று சொல்லக்கேட்ட மனைவியார், அப்படியே அந்நதானம் செய்ததேயன்றி, கோதானமும செய்து, யாவரையும் மகிழ்வித்து, பகவத்யானம் செய்துகொண் டிருக்குங் காலத்தில், மாண்கோஜி போதலே யென்கிற இவர்க் கெதிரே ஸ்ரீ கண்ண பிரான் ப்ரத்யக்ஷமாகி நின்றார். கண்ட தாசரானவர், பாண்டுரங்கபகவானுடைய ஸ்ரீபாதங்களை வணங்கினார்; பகவானும் இவர்க்குக் கிருபைசெய்து போய்விட்டார். பிறகு தொண்டரோடு கூடி, ஹரிதிநத்தில் பாண்டுரங்க பகவானைச் சேவிக்கும் பொருட்டுப் பண்டரிபுரத்துக்குப் போகும்போது, இவர் தேவியார் செலவுக்குப் பொருள் சிறிது மில்லையே யென்று மனம் வருந்தி, ஜீர்ண வஸ்திரத்தை யுடுத்து, விற கொடித்து விற்றுக் கிடைக்கும் பொருளைக் கொண்டு நாளை த்வாதசியை நடத்துவோம் என்றெண்ணிக் கொண்டுபோகும் வழியில், விறகுகள் பொறுக்கிச் சுமையாகக் கட்டித் தலைமேற் சுமந்துகொண்டுபோய், பண்டரிபுரத்து வீதியில் விற்று, அதனால் கிடைத்த பொருளைக் கைக்கொண்டு, கணவரும் தாமுமாகப் பகவானை வணங்கி வாழ்த்தி, சந்த்ர பாகா நதியில் நீராடி, ஒரு வேதிய னுக்கு ஒரு காசு கொடுத்துச் சங்கற்பஞ் செய்வித்து, திருத்துழாய் முதலியவை ஒரு காசுக்கு வாங்கிக்கொண்டு, சந்நிதிக்கு வந்து, விட்டலப்பெருமானைப் பூஜித்துத் தழுவிக்கொண்டு சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்து, அன்றிரா முழுதும கண்விழித்து ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து கொண்டிருந்து, விடியற்காலத்தி லெழுந்து சந்த்ரபாகையில் நீராடின பிறகு, தாசரானவர், தமது தேவியாரை நோக்கி, இன்று ததியாராதநத்துக்குப் பொருளில்லையே, என்ன செய்யலாமென்று கேட்க, தேவியார் விறகு விற்ற பொருளில் செலவழிந்தது போக மிச்சமாயிருக்கிற பொருளைக்கொண்டு, அரைச்சேர் அரைத்த மா வாங்கித் துணியில் முடிந்து கணவர் கையிற் கொடுக்க, அதை அவர் கைக்கொண்டு, அறுசுவையோடு கூடிய வுணவை யுண்ணுகின்ற வேதியர்கள் இந்த அற்பமாகிய மாவை யுண்பார்களோ வென்று சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, இவரது கருத்தை யறிந்த பாண்டுரங்க பகவான் ஒரு விருத்த வேதிய வுருவங் கொண்டு, தலையில் பழைய குல்லாவும், கையில் தடியும், அரையில் கோவண வுடையுமாக இவர்க் கெதிரில் எழுந்தருளி, இவரை நோக்கிச் சொல்லுகிறார். நீர் நெடுநாளாக

க் கொடுக்கிற அந்நத்தை யுண்டு உம்மை யாசீர்வதித்துக் கொண்டு ஜீவித்திருக்கிறேன். இந்த ஊரிலுள்ளவர்கள் செல்வருக்குக் கொடுப்பதன்றி, என்னைப் போன்ற எளியவர்களுக்கு அந்நமும் கொடுப்பதில்லை. ஆகையால் உம்மிடத்தில் எவ்வகையான உணவிருந்தாலும் ஏற்றுக்கொள்ளுகிறேன் என்று சொல்ல, தாசரானவர், சந்தோஷித்து, இந்த அற்ப மாவை வாங்கி யுண்ணத் தகுந்தவர் இவ்வுலகில் யாருளர்? ஸ்ரீ லக்ஷ்மீ நாதனே இந்தக் கிழ மறையோன் வடிவங்கொண்டு வந்ததாகக் காணப்படுகின்றதென்று தீர்மானித்து, துணியில் முடிந்திருந்த மாவை நனைத்தோடு அவிழ்த்து வேதியர் கையில் கொடுத்துக் கைகூப்பிச் சொல்லுகிறார். இந்த மாவையன்றி உமக்குக்கொடுப்பதற்கு என்னிடத்தில் வேறு பொருளில்லை, இந்த மாவை விருப்பத்தோடு அமுது செய்தருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, அந்த வேதியர் தாசனை நோக்கி, நீர் மனம வருந்தவேண்டியதில்லை, நீர் அன்போடு கொடுத்த இந்த மாவானது தேவாமிர்தத்திலும் சிறந்தது என்று சொல்ல, தாசரானவர், இந்த வெறுமாவை இவ் வேதியர் எப்படி யுண்பாரென்று ஆலோசிக்கையில், மறையோர், இவரை நோக்கி, இந்த மாவை அடை சுட்டு உண்ணுகிறேன் என்றார். அதைக்கேட்ட தாசரானவர் மகிழ்ந்து, அடுப்பில் நெருப்பு மூட்டுதலும், வேதியர், சந்த்ரபாகையில் நீராடி, ஈரவஸ்திரத்தோடு வந்து, அந்த மாவைப் பிசைந்து அடைதட்டிக்கொண்டிருப்பதை யறிந்த ருக்மிணீ பிராட்டியார், இந்த வ்ருத்த வேதியர்க்குத் தகுதியான ஒருகிழவியாகி, நடை தளர்ந்து, கையில் ஒரு தடி பிடித்துக்கொண்டு வந்து, இவர் பக்கத்தில் நின்று, இவர் அடை தட்டுவதைப் பார்த்து நகைத்து, ஒன்றும் என்னைவிட்டுப் பிரியாத நீர் இன்று பிரிந்துவந்து இந்த அடை தட்டுகிறீரே, இது என்ன புதுமை! இங்கே கொடும், நான் அடை சுட்டுக் கொடுக்கிறேன் என்று சொல்ல, அப்படியே கொடுத்துவிட்டு, அருகே யிருந்து பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது தாசரானவர், இந்த மாவானது ஒருவர்க்கே பற்றாது, அப்படியிருக்க, இவ்விருவர் எப்படி யுண்பார்கள் என்று ஆலோசித்துக்கொண்டிருக்க, அந்த வேதியக் கிழவி அடைசுட்டு வைக்க, அதைக் கண்ட வேதியர், எம்மோடு நீரும் உண்ணவாரும் என்று தாசரை யழைக்க, இவர், ஸ்வாமீ, நீங்களிருவரும் உண்டு மிச்சமான உச்சிட்டத்தைத் தருவீரானால் உண்பேன் என்றுசொல்ல, வேதியரும் தமதுதேவியாரோடு அமுது செய்யும்போது, ஆகாசவீதியில் சித்தர், முநிவர், தேவர் எல்லாருந் திரண்டு நின்று வாழ்த்தி, யோகம்முதலியவற்றைச் செய்வோர் அமுதுண்ணக் கடவீரென்று ப்ரார்த்தித்தால், சந்தோஷித்து அமுது செய்யாத பகவான், ஒரு அன்பர் வீட்டில், சிறிதும் உப்பில்லாத அடைசுட்டுத் தமது தேவியாராகிய ருக்மிணீ பிராட்டியாரோடு உண்டு அன்பரை மகிழ்விப்பதைப் பார்த்தீரோ வென்று ஒருவரோ டொருவர் பேசிக்கொண்டிருக்க, ஈடும் எடுப்பும் இல்லாத பகவான், பிராட்டியாரோடு அமுதுசெய்த பிறகு, சேஷத்தைத் தாசர் கையிற் கொடுத்து மறைய, இவர் அந்தச் சேஷத்தைத் தமது தேவியாரோ

ரல்லவா? உலக முழுதும் ஆரவார நடத்தையை யுடையதேயன்றி, ஏழை களை ஆதரிப்பவரில்லை, நீ யன்புள்ளவனுகையால், உன் அன்பின் பொருட்டு உமது மாவை வாங்கி அடை சுட்டு உண்டேன் என்று சொன்னதைக் கேட்ட மாண்கோஜிபோதலே யானவர், பகவானே, உமது மஹிமையைத் தெரிந்துகொள்ள வல்லவர் யார் என்று கைகூப்பி வணங்கித் தோத்திரஞ் செய்து, விடைபெற்றுத் தாமணத்துக்குப்போகப்புறப்பட்டு, ஒருவனத்தில் போகும்போது, அதிக தாகமுண்டாகி, நீர் கிடைக்காமல் வருந்துவதை யறிந்த ஸ்ரீகண்ணபிரான், ஸ்ரீருக்மிணீ பிராட்டியாரோடு, இந்தத் தாசர் குலத்தார்போல வேஷம்பூண்டு, இவர்வரும்வழியில் ஒரு வீடுண்டாக்கிக்கொண்டு, இருவரும் தயிரையும் அடையையும் அமைத்து வைத்துக்கொண்டு, தாசர் தேவியாரோடு வருவதைக் கண்டு, நீங்கள் பண்டரி புரத்துக்குப் போய் மீண்டு வருகிற ஸ்ரீஹரிதாசர்களாதலால், எமது சிறு குடிலில் எழுந்தருளி, யாம் கொடுப்பதை யுண்டு, எம்மைப் புனிதராக்கி, உமது ஊருக்கு எழுந்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, அந்தச் சொல்லைப் போதலே யானவர் கேட்டு, இவ்விடத்தில் மநுஷ்ய சஞ்சாரமே யில்லை, இவர்கள் இவ்விடத்தில் எதிர்ப்பட்டது புதுமையா யிருக்கின்றதென்று, அவர்களைத் தொடர்ந்து அவர்கள் குடிலுக்குப் போய் அவர்கள் கொடுத்ததை யுண்டு, அயர்வு தீர்ந்து, தமதூருக்குப் போகப் புறப்பட்டுத் திரும்பிப் பார்க்கும்போது, அவர்களில்லாமல் மறைந்து போனதனுல், போதலே யானவர், நாம் தாஹத்தால் வருந்தி வருகிறோமென்பதை யறிந்த பகவானே இப்படி வந்து நமது தாகத் துன்பத்தை யொழித்துப்போனுரென்று மன மகிழ்ந்து, தாமும் தமது தேவியாருமாகக் கூடி, அந்த வழி முழுதும் ஸ்ரீபகவந்நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டே போய்த் தமது ஊராகிய தாமணத்தை யடைந்து இனிதாய் வாழ்ந்திருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில், ஒருநாள், இவர் தமது சோளக் கொல்லையைக் காத்துக்கொண்டிருக்கும்போது, பறவைக் கூட்டங்கள் வந்து சோளத்தைத் தின்ன, அவற்றை யோட்டாமல், அவற்றினுள்ளே பகவான் நிறைந்திருக்கிறு ரென்பதை யறிந்தவ ராகையால் அவைக ளுண்டு பசியாறுவதே நன்மையாமென் றிருப்பவராயும், அவ்விடத்தில் வருவோர்களுக்குக் கதிர்களைத் தாமே பறித்துக் கொடுத்து அவர்களை மகிழ்வித்துக்கொண் டிருப்பவராயும், இடையறுமல் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருப்பவராயும் இருக்கும் போது, இவரது தேவியார் அந்தச் சோளக் கொல்லையைக் காவல் காக்கிற இவருக்கு உணவு கொண்டுபோய் இவரை யுண்பித்த பிறகு, பறவைகள் சோளத்தைத் தின்பதையும் இவர் அவற்றை யோட்டாமல் மன மகிழ்ந்திருப்பதையும் நோக்கி, கணவரைப் பார்த்து, ஐயரே, நீர் இங்கு விளைவதை யெல்லாம் பிறர்க்குக் கொடுத்துப்பாழாக்கினுல்செங்கோல் செலுத்துகிற அரசனுக்கு எப்படி இறைப்பொருள் செலுத்துவீர்? நம்முடைய மனை

வாழ்க்கை யெப்படி நடக்கும்? இனி இங்கே யிருந்துகொண்டு இப்படி உமது கையினால் கொடுப்பீரானால் பாண்டுரங்கன்மே லாணையுண்டு என்று சொல்லி, தமது வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், வீட்டில் அமைந்திருக்கும்போது நடந்ததைச் சொல்லுவோம்.

ஒருநாள், பண்டரிபுரத்துக்கு யாத்திரையாகப் போவோர் சிலர் அங்கே வர, இவர் அவர்களை நோக்கி, இவர்கள் ஸ்ரீஹரிதாசர்கள் என்று அன்புமிகுந்து, அவர்களை வணங்கி வாழ்த்தி, நீங்கள் இவ்விடத்துக்கு வர அடியேன் என்ன தவஞ் செய்திருந்தேனோவென்று சொல்ல, அந்த வேதியர்களில் ஒருவர் வந்து இவரைக் கிட்டி நின்று, நீர் விளைக்கும் சோளக்கதிர்களில் கொஞ்சம் கொடுத்தால் தின்று பசியாறுவேன் என்றார். அதற்குப் போதலே யானவர் அந்த வேதியரை நோக்கி, ஐயரே, என் மனைவி யாணையிட்டிருக்கிறாளாதலால் என் கையால் கொடுக்கக் கூடாது, உமது கையால் வேண்டிய மட்டும் ஒடித்துக்கொள்ளும் என்று சொன்னார்; அவர் அப்படியே செய்தார். அவரைக்கண்ட மற்ற வேதியரும் மற்றவரும் அவ்வாறே வந்துகேட்க இவரும் அப்படியே ஒடித்துக் கொள்ளும்படி உத்திரவு கொடுக்க, அவர்களும் அப்படியே ஒடித்துக்கொண்டுபோக, இப்படி யெல்லாரும் மனமகிழும்படி யிவர் உத்திரவு கொடுத்ததனால், சோளக் கொல்லையானது, முற்காலத்தில் வானர வீரர்களால் மது வனம் அழிந்தாற்போல அழிந்தது. வந்து கேட்பவர்களுக் கெல்லாம் இவர் உத்திரவு கொடுத்ததையும், அவர்கள் கதிரொன்றுமினு மில்லாமல் ஒடித்துப் பாழாக்கினதையும் கண்டோர் யாவரும் இவருக்கு உணர் வழிந்து போயிற்று என்று பேசிக் கொண்டார்கள்; சிலர் இவர் ப்ரபஞ்சவிஷயத்தில் விரக்தரானாரென்றார்கள். இப்படிப் பலவாறுகப் பேசிக்கொள்ள, இவரும், மனைவி மகன் முதலானவர் கடிந்து பேசுவார்களென்றஞ்சி, வீட்டுக்கு வராமல் கொல்லையை யடுத்திருக்க, அப்போது இவர் புதல்வர் வந்து சோளக் கதிர்களை யாராய்ந்தெடுக்கும்போது, அவரை நோக்கி, அப்பா குழந்தாய், ஈக்கள் தாமுண்ணவேண்டு மென்கிற எண்ணத்தோடு சேர்த்து வைத்த தேனைப் பிறர் கைக்கொண்டு உண்பதுபோல, சத்விஷயத்தில் உபயோகிக்காத பொருளைப் பிறர் அபஹரிப்பார்கள். ஆகையால், நமது பொருள்கள் யாவும் ஸத்பாத்திரத்தில் உபயோகித்தால் ஸ்ரீஹரியாகிய பகவானுடைய க்ருபைக்குப் பாத்திரராகலாம், இதைத் தீர்க்கமாய் ஆலோசித்து, நீ விசனப்படாம லிருக்கக் கடவாயென்று சொல்லக் கேட்ட புதல்வர், சற்று நிதானித்து, இவர் சொன்ன சொற்களின் சாரத்தை யுட்கொண்டு, மனத்தெளி வடைந்தார். பிறகு பிதாவின் திருவடியில் வீழ்ந்து வணங்கி, அவரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், முன்பு போலவே அவரிடத்தில் அன்பு பாராட்டி, தாயார்க்கும் ஹிதவசனங்களைச் சொல்லி அவருடைய கோபத்தைத் தணிவித்தார். பிறகு மனைவியார், பாண்டுரங்கன் மீது ஆணையிட்டிருந்தும் இவர் இப்படிச் செய்தாரே, இனி வாய்தாக்காரருக்கு எழு விராகன் கட்டவேண்டுமே, என்செய்வோ மென்று மனம் வருந்தி

யிருக்கும்போது, மறுநாள் வாய்தாக்காரரும் வந்து பணம் கேட்டார்கள். அப்போது, போதலையானவர் வீட்டிலிருந்த மூன்று வராகனைக் கொடுத்து, மற்ற நாலு வராகனும் நாளைக்குக் கொடுக்கிறேனென்று சொல்ல, அவர்கள் போய் விட்டார்கள். போனபிறகு போதலையானவர், அந்த ஊரிலிருக்கிற நாகாயியென்னும் பெயருள்ள பார்ப்பினியிடத்திற்குப்போய், எனக்கு நாலு வராகன் வேண்டும், கொடுத்தாயானால், வட்டியுடனே செலுத்துவேன் என்றார். அவள் நாளைக்குக் கொடுக்கிறேனென்றாள். அதைக் கேட்ட தாசரானவர் மனங் கலங்காமலிருந்தார். இவருடைய குணாதிசயங்களெல்லாம் அந்தப் பார்ப்பினியானவள் பிறரால் கேள்விப்பட்டு, இவருக்குக் கொடுக்கும் பணம் மீண்டும் நமக்கு வராதென்று ஆலோசித்துக் கொடாமலிருப்பதே உத்தமமென்றிருந்தாள். மறுநாள் இவர் அவளிடத்துக்குப் போய்க் கேட்க, அவள், ஒருவன் எனக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை இன்று கொடுக்கிறேனென்று சொல்லியிருந்தான், அவனை நம்பி உனக்கு நான் கொடுப்பதாகச் சொன்னேன். அவன் பொய்த்துப்போனான், நான் என்செய்வேனென்றாள். அதைக் கேட்ட தாசர் திரும்பிவந்து விட்டார். வந்து, மனைவியாரிடத்தில், பணம் கிடைக்காத செய்தியைச் சொல்லி விட்டு, மற்றொரு ஊருக்காகிலும் போய்ப் பணம் கொண்டு வருகிறேனென்று புறப்பட்டுப் பணம் கிடைக்கத் தகுந்த ஊருக்குப் போனார். இவர் போனபிறகு இவ்வூரிலுள்ளோரெல்லாரும், வாய்தாப்பணம் செலுத்தமாட்டாமல் பயந்து எங்கேயோ போய்விட்டான் என்று பேசிக்கொண்டார்கள். இப்படியிருக்க, வாய்தாக்காரர் வந்து இவர் வீட்டு வாசற்கதவை மூடி, ராஜ சிக்ஷையாகிய முத்திரையிட்டு, நீர், நெருப்பு முதலியவை உள்ளே பிரவேசிக்காமற் செய்து வருத்தினார்கள். இந்தச் செய்தியையறிந்த பண்டரிநாதனாகிய ஸ்ரீகண்ணபிரான், வெட்டியான் வேடம்பூண்டு நாலு வராகனைக் கைக்கொண்டு, வாய்தாக்காரரிடத்தில் வந்து, இது போதலையனுப்பினதென்று கொடுத்து விட்டுப் போய்விட்டார். போதலையானவர் தாம் போனவூரில் பணம் கிடைக்கப்பெற்று மறுநாள் வந்து, வாய்தாக்காரரிடத்திற்குப்போய், உமது பணம் இதோ, வாங்கிக் கொள்ளுங்களென்று சொல்லுதலும், அவர்கள், உமது பணத்தை உமது வெட்டியான் கொண்டுவந்து கொடுக்கப் பெற்றுக்கொண்டோம் என்றார்கள். இவர் வீட்டில் வந்து வெட்டியானிடத்தில் பணங் கொடுத்தது யாரென்றார். அவர்கள், நாங்கள் கொடுக்கவில்லையென்றார்கள். பிறகு அந்தவூர் வெட்டியானைக் கண்டு கேட்க, அவனும் எனக்கு ஒன்றும் தெரியாதென்றான். பிறகு தாசரானவர், வெட்டியானுருவங் கொண்டு வந்து பொருள் கொடுத்துப் போனவர் பண்டரிநாதரேயென்று அறிந்து, என் பொருட்டுப் பகவான் இப்படி வருவதற்கு, நான் எப்படிப்பட்ட தவத்தைச் செய்திருந்தேனோ என்று சொல்லி, பகவானுடைய க்ருபாவிசேஷத்தைக் குறித்துப் புகழ்ந்து, ஸ்ரீபகவந்நாமஸங்கீர்த்தனம் செய்து, என் பொருட்டு, நீ புலையன் வேடம் பூண்டு வந்தாயே, ஓ க்ருஷ்ண விட்டலே யென்று ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்

கும்போது, ஸ்ரீபகவானானவர் இவருக்கு ப்ரத்யக்ஷமானார். தாசரானவர் அந்தப் பகவானைத் தரிசித்து வணங்கி வாழ்த்தினதும், பகவானானவர் இவரைத் தழுவிக்கொண்டார். பிறகு தாசர், பகவானை, உமக்கு இந்த நாணயங்கள் எங்கே கிடைத்தது என்று கேட்க, பகவானானவர், உனக்குப் பொருள் கொடுப்பேனென்று சொல்லித் தவறினவருடைய பொருளைக் களவு செய்து கொண்டு வந்தேனென்று சொல்ல, தாசர், கல்லென்று நகைத்து, இப்படிச் செய்யலாமா? அந்த ஏழைப் பார்ப்பனின் பொருளை ஏன் களவு செய்தீர்? நான் கொண்டு வந்த பொருளை அவருக்குக் கொடுத்து விடுகிறேன் என்று சொல்ல, பண்டரிநாதர், சாதுக்கு நேர்ந்த கொடுக்காதவனுடைய பொருளை நீர் கொடுத்தால் நானும் மறுபடியும் பறித்து விடுவேன் என்று சொல்ல, தாசர், அதற்குத் தடைசொல்ல அறியாமல் சும்மா இருந்தார். இவர் அஞ்சித் தளர்வதைக்கண்ட பகவானானவர் இவர் கொல்லையிலுள்ள சோளத்தை நன்றாய் விளையும்படி செய்தார். அந்த விளைவைக் கண்டு அவ்வூரார் எல்லாரும் இவரை மதித்தார்கள். மதிக்கத்தகாதபடி வரண்டுபோன சோளக் கொல்லை இப்படி விளைந்தது என்ன புதுமையென்றும், இவர் பகவத்பக்தராகையால் இவர்க்கு எல்லாம் கைகூடி வரும் என்றும் யாவரும் சொல்லி மகிழ்ந்தார்கள். போதலே யானவர் தமது களஞ்சியத்தில் நிறைந்திருக்கிற தானியங்களை முற்றும், கேட்போரெல்லார்க்கும் அவர்கள் இஷ்டப்படியே கொடுத்து மகிழ்வித்து, பின்னும் அந்தக் கொல்லையில் ஸ்ரீஹரிநாமஸ்மரணை செய்துகொண்டே காவல் செய்திருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில், ராஜோராக என்னும் ஊரை யாள்வோரும், வெகு தர்மாத்துமாவும் ஆகிய ஒருவரிருந்தார். அவர் தமது மனைவியோடும் ஸ்வர்க்கலோகமடைந்த பிறகு, அவர் புதல்வரிருவரும் துன்மார்க்கர்களாய், தமது குடும்பஸம்ரக்ஷணம் செய்யாமல் யதேச்சையாய்த் திரிந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் அப்படித் திரிவதனால், அவர்களுடைய ஸஹோதரியாயிருக்கிறவரும், ஹாசியென்னும் பெயருள்ளவருமாகிய அம்மையார் அந்தக் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார். அந்தக் குடும்பத்துக்கு ஒரு குறைவுமில்லாமல் காப்பாற்றி வருபவராகிய இந்த அம்மையார், ஸ்ரீஹரி நாம ஸங்கீர்த்தனத்தை இரவும் பகலும் இடைவிடாமற் செய்பவராயிருந்தார். இவர், சோளக் கொல்லையைக் காவல் செய்துகொண்டிருக்கிற போதலே யானவர் செய்கிற ஸ்ரீஹரிபஜனையை நாள்தோறும்போய்க் கேட்டு வருவார். ஒருநாள் இவர் போதலேயின் முகத்தை நோக்கி, ஐயரே, அடியேன் பராதீனையாயிருந்தாலும், ஸ்ரீஹரியின் திருவடியை யடையும்படி நீர் அடியேனைத் திருத்தி யருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, போதலே யானவர், பராதீனையாயிருக்கிற இவள் எந்த ப்ரகாரம் ஸ்ரீஹரியின் திருவடிக்குரியவளாவாள் என்று யோசித்து, அந்த அம்மையாரை நோக்கி, நீ, தினந்தோறும் ஸ்ரீபகவந்நாமஸ்மரணை செய்துகொண்டும், ஏகாதசி விரதத்தை அநுஷ்டித்துக்கொண்டும், என்னிடம் வந்து ஸ்ரீஹரி பஜனை செய்வதைக் கேட்டுக் கொண்டும் இருக்கவேண்டும்; இப்படி நீ செய்

வத்திற்குத் தடை நேரிடா திருக்கும்படி உன்னை யேவல் கொள்ளுகின்ற எஜமானருடைய உத்திரவு பெற்றுக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்து வருவாயானால், நீ ஸ்ரீலக்ஷ்மீகாதராகிய பகவானுடைய திருவடிக்கு உரியவனாவாய் என்று சொன்னார். அதைக் கேட்ட அம்மையார், அப்படியே செய்கிறேனென்று சொல்லித் தம் வீட்டுக்கு வந்து, இடைவிடாமல் ஸ்ரீஹரிநாமஸ்மரணை செய்துகொண்டும், வீட்டு வேலைகளைத் தடையில்லாமற் செய்துகொண்டும், ஏகாதசி விரதத்தை விடாமல் அநுஷ்டித்துக்கொண்டும், யஜமானர் உத்திரவு பெற்றுப் போதலே யானவர் வாழ்கின்ற ஊருக்குவந்து, ஏகாதசி ராத்திரிகளில் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநத்தைக் கேட்டுக்கொண்டும் இருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில், ஒருநாள் மாயபுரத்திலிருந்து வருகிறவர்களில் ஒருவன் பாம்புகடித்திறந்தான். அதைக் கண்டவர் யாவரும் ஒருமிக்கக் கூடி அவனைத் தூக்கிக் கொண்டுவந்து, போதலே யானவர் ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டிருக்கிற இடத்தில் கிடத்தி, இவர் செய்கிற ஸ்ரீஹரிபஜனையின் மஹிமையால் இவன் பிழைத்தாலும் பிழைக்கலாமென்று நம்பியிருந்தார்கள். போதலே யானவர் அவர்களை நோக்கி, ஸ்ரீஹரிநாமம அமுதினும சிறந்தது, ஆதலால் நீங்களெல்லாம கைகொட்டிக்கொண்டு, ஸ்ரீ ஹரிநாமத்தைச் சொல்லுங்கள் என்றார். அப்படியே அவர்கள் கைகொட்டிக்கொண்டு ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம செய்கிற காலத்தில், சவமாய்க் கிடக்கிற இவனும் நம்மோடு கூடிக் கைகொட்டாமலும் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்யாமலும இருக்கிறானேயென்று பேசிக்கொண்டார்கள். அதைக்கேட்ட போதலே யானவர், அந்தப் பிணத்தை நோக்கி, மனிதராகப் பிறந்தவர்கள் ஸ்ரீ ஹரி நாமங்களைக் கை கொட்டிக்கொண்டு பாடுதல் சிறந்தது, இதினும் சிறந்த பொருள் வேறொன்று மில்லையென்று உயிருள்ளவர்களுக்குச் சொல்லுவதுபோலச் சொன்னார். இவர் இபபடிச் சொன்னதைச் சர்வாந்தர்யாமியாகிய பகவான் அறிந்து, இந்தச்சவம பிழைத்துப பேசாமற்போனால், என் பேருக்கும் என் அடியார்க்கும் தாழ்வு நேரிடும் என்று திருவுளங்கொண்டு, யமனை நினைக்க, உடனே அவன் வந்தான். அவனை நோக்கி, இந்தச் சவத்தினுள்ளே யிருந்த உயிரை முன்போலிருக்கச் செய்யென்று நியமிக்க, அப்படியே, யமனானவன் அந்தச் சவத்துக்கு உயிரைக் கொடுக்க, அந்தச் சவமாயிருந்தவன் பிழைத்தெழுந்து, தாசருக்கெதிரே, தன் நாவினால் பகவநாமங்களை யுச்சரித்துக் கைகொட்டி ஆநந்தக் கூத்தாடினான். அதைக்கண்ட யாவரும் கைகொட்டி ஆநந்தக் கூத்தாடினார்கள். இதைக்கண்ட போதலே யானவர், பகவானைக் குறித்து, சவமா யிருந்ததை யறியாமல் தூங்குகிறவனென்று நினைத்து, ஸ்ரீஹரிநாமங்களைச் சொல்லென்றேன், அப்படி அடியேன் சொன்னசொல் பழுதாகாமல், அவனைப் பிழைக்கச் செய்தருளினாய், ஒருபொருட்டன்மை யில்லாத என்னையும் ஒருபொருளாக்கி உனக்காட்படுத்தினாய், உன்பேரருளிருந்தவா றென்னென்று ஆநந்தக் கண்ணீர் ததும்ப நின்றார். பிறகு சூரியோதயத்துக்கு முன்னே விட்டலப்பெருமானுக்கு

ஹாரதி செய்து, ப்ரஸாதமும் கொடுக்க யாவரும் பெற்று மகிழ்ந்து, திருமாலே இந்த அவதாரமாய் வந்தாரென்று தாசரைப் புகழ்ந்து கொண்டாடித் தங்கள் தங்களிடங்களிற் போய்ச் சேர்ந்தார்கள்.

இப்படி யிங்கே நடந்த செய்திகள் யாவுங் கண்ட ஹாசி யென்பவர் ஸ்ரீஹரியின் சாக்ஷாத்காரத்தை த்யானம் செய்துகொண்டு இருந்தார். இப்படி மூன்று வருஷ காலஞ் சென்ற பிறகு, முகுந்தன் என்பவர் பெற்ற புதல்வரிருவரும் வாலிபப் பருவ மடைந்து, தம்மிடத்திலுள்ள பொருள்களை யெல்லாம் பாகித்துக்கொள்ள விரும்பி, வேலைக்காரியும் ஒரு பொருளாதலால் இந்த ஹாசியையும் விற்றுப் பொருளாக்க நினைத்தார்கள். இவர்களுடைய எண்ணத்தை யறிந்த ஹாசி யென்பவர் ஸ்ரீஹரியை த்யானித்து ஸ்வாமி, இவர்கள் என்னை விற்றால் பிறர் வாங்கக்கூடும்; அப்போது அடியேன், தாசரைப் பிரியவேண்டி வருமே யென்று துக்கிக்க, இதைத் தாசரறிந்து, நீயேன் துக்கிக்கிறாய்? எந்தக் காலத்தில் எது நடக்கவேண்டி யிருக்கிறதோ அந்தக் காலத்தில் அது நடந்தே தீரும், அதைத் தடுக்க முடியாதென்றார். அதைக் கேட்ட ஹாசியானவர், அடியேனை நீரே விலைக்கு வாங்கிக் கொண்டால் தேவரீருடைய ஊழியம் செய்துகொண்டு காலங் கழிப்பே னென்று வணங்கிப் பிரார்த்திக்க, அப்போது போதலே யானவர், என்னிடத்தில் பொருளில்லையானாலும், ஸ்ரீபண்டரிநாதருடைய திருவடியைப் பற்றி யிருக்கிற எனக்கு ஒரு குறையுமில்லை, என் கொல்லையை விற்றாயினும் உன்னைக் கொள்வேன், நீ வருந்தவேண்டியதில்லை, நீ உன்னூருக்குப் போ, நான் உன் பின்னே வருகிறேன் என்று சொல்லக் கேட்ட ஹாசி யானவர், மனமகிழ்ச்சியோடு வீட்டுக்குப் போனார். அதன்பிறகு ஸ்ரீஹரிதாசராகிய போதலேயானவர் தமது மைத்துனரிருக்கும் ஊருக்குப் போய் அவர்களைக் கண்டு, நீங்கள் ஹாசியை விற்கப்போகிறதாகக் கேள்விப்பட்டு அவளை நான் விலை கொடுத்து வாங்க வந்தேன் என்றார். அவர்கள் அதைக்கேட்டவுடனே மிகவுங் கோபங்கொண்டு, அயலார்க்குச் சும்மா கொடுத்தாலுங் கொடுப்போம், நீர் விலை கொடுத்தாலும் உமக்குக் கொடுக்கமாட்டோம என்றார்கள். இதை வீட்டுக்குள்ளிருந்து கேட்ட ஹாசி, இப்படி யெல்லாம நடப்பதற்குக் காரணம என் ஊழ்வினையாமென்று மனம்வருந்துவதைத் தாசர் அறிந்து, நீ வருந்தவேண்டியதில்லை யென்று சொல்லி, மேலும் பலபேருக் கெதிரே நின்று, நான் விட்டோபாவை யனுப்பி உன்னை வாங்குமபடி செய்கிறேன் என்று தமதூருக்குப் போனார். இவர் சொன்னதைக் கேட்டவர்கள் யாவரும் இவர்க்கு ஸ்ரீபண்டரிநாதர் வசப்பட்டிருக்கையால் இவர் சொன்னபடியே நடக்குமென்று பேசிக்கொண்டார்கள். இப்படி யிருக்க, இந்தத் தாசருடைய மைத்துனர் இருவரும், இந்த ஹாசியைத் தாசர் விலைகொடுத்து வாங்குவதற்கு முன்பே நாம் பிறர்க்கு விற்றுப் போடுவோமென்று தீர்மானித்து, வாங்குவோரைத் தேடினார்கள். அப்போது ஒருவன் இருபத்தைந்து வராகன் கொடுத்து வாங்குவதற்குச் சம்மதித்து வந்தான். அப்போது ஹாசியா

னவர் ஸ்ரீஹரியை த்யாநித்து, ஸ்வாமீ, என் குருநாதராகிய போதலே யான வர் சொன்னசொல் தவறாது என்று நான் இதுவரையில் உயிர் கொண்டிருந் தேன், அவர் இதுவரையில் வர வில்லை, உன் அடியவராகிய தாசரது சொல் பழுதாகாமற் காப்பது உனக்குக் கடமையாகும் என்று சொல்லி, அநேக விதமாகப் பகவானைத் தோத்திரம் செய்தார். செய்தவுடனே, ஸ்ரீ பண்டரி நாதர் ஒரு வேதிய வடிவங்கொண்டு வந்து, அங்குள்ளவர்களை நோக்கி, இங் கே நடந்த செய்தி யென்னவென்று விசாரித்துத் தெரிந்துகொண்டு, ஹாசி யை நோக்கி, உன் குருவானவர் உன்னை யழைத்துவரச் சொல்லி என்னை யனுப்பினா ரென்று சொல்ல, ஹாசியார், என் குருநாதர் சொல் தவறார் என்று சொல்லித் தம்மக்களோடு வருந்தி யிருக்க, வந்த வேதியர் ஹாசியை யும் அவர் மக்களையும் தம்மோடு கலப்பித்துக் கொண்டு மறைந்து விட்டார். அப்போது அங்கிருந்தவர்களெல்லாம், போதலே யென்கிற தமது தாசர் சொன்ன சொல் தவறாகாமல் ஸ்ரீ பண்டரிநாதர், ஹாசி யென்பவரை அவர் புதல்வரோடு தமது திருவடியில் சேர்த்துக்கொண்டார். இது மிகவும் ஆச்ச ரியமென்று தாசரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். பிறகு, ஹாசியை வாங்க வந்து, முஹதம் புதல்வரிடத்தில் பொருள் கொடுத்தவன் அவர்களை நோக்கி, முஹதம் புதல்வரே, நீர் முன்னதாக என்னிடத்தில் பொருளைப் பெற்றுக்கொண்டு, இப்போது உங்களுடைய அடிமைப் பெண்ணைக் கொடு க்காதிருக்கிறீர்கள், நீங்கள் என்னிடத்தில் வாங்கிக்கொண்ட பொருளைக் கொடுத்து விடுங்களென்று கேட்க, அவர்கள், ஹாசியை அவள் மக்களோடு உனக்குக் கொடுத்துவிட்ட பிறகு, உனக்குப் பொருள் எப்படி வரும்? அவளை மாண்கோஜி அழைத்துக்கொண்டு போயிருக்கிறாராகையால் அவரி டத்தில் பொருள் வாங்கிக்கொள் என்றார்கள். அதைக் கேட்டவுடனே, பொ ருள் கொடுத்தவன், மாண்கோஜி அழைத்துப்போனதை நான் பார்க்கவில்லை, அவரைப் பொருள் கொடுக்கும்படி நான் எப்படிக் கேட்கலாம் என்று பிணங்கினான். இவ்விடத்தில் வழக்கு இப்படி யிருக்க, முன்னேபோனபோத லே யானவர் தாம் தங்கியிருக்கு மிடத்திலிருந்துகொண்டே இந்தச் செய்தி யைக் கேள்விப்பட்டு, அன்போடு, ஓ பாண்டுரங்கா, உன்னை அடியேன் ப்ரார்த்திப்பதற்கு முன்பே, அவ்விடத்திற்குப் போய் இந்த ப்ரகாரம் ஹாசி யை யழைத்துக் கொண்டாயோ வென்று சொல்லி மனமகிழ்ந்தார். அந்தக் காலத்தில், அவ் வூர்க்குச் சமீபத்திலிருக்கிற ஒரு புலையன் போதலே யான வர் இருக்குமிடத்துக்கு நாள்தோறும் வந்து அடிவணங்கி, எனக்கு உபதே சம் செய்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவர் அந்தப் புலையனை நோ க்கி, அப்பா, நான் ஒருவர்க்கும் உபதேசம் செய்வதில்லை, நீபோய்த் தகுதி யான பெரியோரை அடுத்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள் என்று சொல்லியும், அவன் இடைவிடாமல் நிர்ப்பந்திக்க, இவர், அவனை நோக்கி, நான் சொன்ன சொல்லைக் கேளாமல் நீ என்னை நிர்ப்பந்திக்கிறதினால், நான் பண்டரிநாதருக்கு அறிவித்து அவர் விடை கொடுத்தால், நான் உனக்கு

உபதேசிக்கிறேன் என்று சொல்லி, ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானை மனத்தினால் தியானம் செய்தார். செய்தவுடனே ஸ்ரீபாண்டுரங்க பகவானானவர் அவர் மனத்தில் எழுந்தருளி, நீ அந்தப் புலையனுக்கு உபதேசம் செய்வதற்கு என் சம்மதியைப்பெற விரும்பினாய், ஆனால் அன்பு, நல்லறிவு, விரக்தி, குருபக்தி முதலான நற்குணங்களுடையவனுக்கு உபதேசிக்கவேண்டியதே, இவன் அப்படிப்பட்ட நற்குணங்களுடையவனல்ல, இவனிடத்தில் இரக்கமில்லாமை, பொய், களவு, கள்ளுண்டல், காமம், கொலை, ஆசிரியர் சொன்ன சொல்லை மனத்திற் பதித்து வைக்காமல் பிறர்க்குச் சொல்லுதல் என்கிற துர்க்குணங்கள் யாவும் நிறைந்திருக்கின்றன. ஆகையால் இவனுக்கு உபதேசம் செய்யலாகாது, நீ இவனது இயற்கையை யறிய விரும்பினால், அதற்கு ஒரு உபாயம் சொல்லுகிறேன் கேள் என்று சொல்லுகிறார். நீர் உழுகிற எருதுகளில் ஒன்றை இந்தப் புலையனைக்கொண்டு கொல்லுவித்துச் சமைத்து உமது உறவினரோடு கூடியுண்டு, பிறர்க்கு இந்தச் செய்தியைச் சொல்லவேண்டாமென்று இவனுக்கு வற்புறுத்திச் சொல்லிப்பாருமென்று சொல்ல, தாசரானவர் பகவானை நோக்கி, உயிர்வதை செய்வது யாதுக்கு? உண்ணாததை உண்பது யாதுக்கு? அடியேனுக்கு இந்தக் காரியம் செய்வதில் சிறிதும் மனமில்லை யென்றார். அதைக் கேட்ட பகவானானவர், ஓ தாசரே, என்சொல்லை ப்ரமாணமாகக்கொண்டு நீர் செய்வதனால், கொலைப்பாவமும் புலாலுண்ணும்பலமும் உம்மையணுகமாட்டா. ஆதலால் நான் சொன்னபடியே நடக்கக் கடவீரென்று சொல்லி மறைந்து போனார். பிறகு மாண்கோஜி அந்தப் புலையனை நோக்கி, நீ என் சொற்படி நடந்தாயானால் நீயே நல்லமாணாக்கன் என்று மனமகிழ்ச்சியோடு உனக்கு உபதேசம் செய்வேன், அது யாதெனின், என் எருதுகளில் ஒன்றைக் கொன்று சமைக்கக் கொடுத்து, இந்தச் செய்தியைப் பிறருக்குச் சொல்லாதிருக்கக்கடவா யென்றார். உடனே அந்தப் புலையன் எருதைக் கொன்று தந்தான். அதைத் தாசரானவர் பகவான் சொற்படியே சமையல் செய்வித்துத் தமது உறவினரோடு கூடியிருந்து உண்டார். அப்போது இவரோடிருந் துண்டவர்கள், கொலை செய்யாத இவர் தகரைக் கொலை செய்தது ஆச்சரியமென்று சொல்லிக் கொண்டு போய்விட்டார்கள். அவர்கள் போன பிறகு போதலே யானவர் புலையனை நோக்கி, நீ கொன்ற எருதின் எலும்பு, தோல், கொம்பு, குளம்பு முதலானவைகளைக் கொண்டு போய் என் கொல்லையில் புதைக்கக் கடவா யென்று சொல்ல, புலையனும் இராக்காலத்தில் அப்படியே புதைத்து விட்டான். விடிந்த பிறகு, அந்தப் புலையன், விருந்துண்டோர்களில் ஒருவர் வீட்டுக்குள்ளே நுழைந்து ஒருபுறத்தி லிருக்க, அந்த வீட்டுக்காரன் பார்த்து, அடா புலையா, நீ வீட்டுக்குள்ளே வரலாமோவென்று கேட்க, புலையன், அந்த வீட்டுக்காரனை நோக்கி, நான் சண்டாளன், நீர் உயர்ந்த ஜாதியார்; ஆனாலும், உமக்கும் எனக்கு முள்ள பேதமென்னவோ அறிந்திலேன். நேற்று, போதலே யானவர் எருதைக் கொன்று சமையல் செய்வித்து உங்

களுக் கெல்லாம் விருந்திடச் சாப்பிட்டீர்கள், இன்று என்னை யிகழ்வதற்கு க் காரணம் யாதோ, சொல்லும் என்றான். என்று சொன்னவுடனே, அந்த வீட்டிலிருந்தோ ரெல்லோரும்கூடி, மாண்கோஜி யானவர் இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யமாட்டாரென்றும், இவன் சொல்லுவது பிசகென்றும், தாசருடைய எருது, அது இருந்த இடத்தில் காணப்படவில்லை யென்றும பலவாறாகப் பேசிக்கொண்டு, தாசரிடத்துக்குப் போய் இதன் உண்மையை யறிவோமென்று தீர்மானித்துக்கொண்டு, புலையனை நோக்கி, உன்சொல் உண்மை யென்பதற்குச் சாக்ஷியுண்டோ வென்று கேட்க, புலையன், என் சொல் பொய்யாகாதபடி உங்களுக்கு உண்மையைக் காட்டுகிறேனென்றான். அதைக் கேட்ட எல்லாரும், இந்தப் போதலே இந்தக் காரியம செய்தது உண்மையாகுமானால், நாம் இவனைக் கொல்லுவோம், நமக்கு ராஜதண்டனை கிடைத்தாலும் கிடைக்கட்டும என்று நினைத்து, ஆயுதபாணிகளாய்ப் புறப் பட்டுப்போய்க் கண்மூடிக்கொண்டு பகவத்தியானத்திலிருக்கிற மாண்கோஜிக் கெதிரே நின்று, உன்னைக் கொல்லவந்தோம, நீ கண்திறந்துபார் என்றார்கள். அன்றியும் எருதைக் கொன்று விருந்து செய்வது தகுதியாமோ? உனக்கு இந்தத் துராசாரம்எப்படியுண்டாயிற்றுஎன்று அதட்டிக் கேட்க, தாசரான வர் கண்திறவாமல், ஓ பகவானே, உமது சொற்படி நான் செய்ததனாலுண் டான இந்த விபத்தை நீக்கியருளவேண்டு மென்று ப்ரார்த்தித்துக்கொண் டிருக்க, வந்தவரெல்லாரும் இவரை நோக்கி, எங்களை யெல்லாம் குலப்ரஷ்ட ராகச் செய்துவிட்டுப் பகவத்தியானம் பண்ணுகிறீரே, இது அழகாயிருக்கிற தென்று பழித்துப்பேசி, புலையனை நோக்கி, நீ எருதைக் கொன்றதற்குத் தகுதியான அத்தாக்ஷி காட்டவேண்டு மென்றார்கள். அதைக் கேட்ட புலை யன் அவர்களெல்லாரையும் அழைத்துக்கொண்டுபோய், நிலத்தில் புதைக்க ப்பட்டிருந்த தோல், எலும்பு, கொம்பு முதலியவற்றை வெளியி லெடுத்து வைத்தான். அப்படி அவன் எடுத்து வைத்தவைகளெல்லாம ஆட்டின்தோல் முதலியவைகளா யிருக்கக்கண்டு, அவர்களெல்லாரும், புலையன் பொய்சொ ன்னதலால் இவனைக் கொல்லுவோ மென்று நினைத்து, போதலே யிடத்தி லிருந்த எருது உளதோ இல்லையோ பார்ப்போமென்றுபோய், அவருடைய எருது கட்டுமிடத்திற் பார்த்து அது நிற்கக் கண்டு, அடா புலையா, பகவத் தாசராகிய போதலேயின்மீது இப்படிப்பட்ட பழிமொழி சொன்னயாதலால் உன்னைக் கொலை செய்வோமென்று சொல்லுதலும, அநதப் புலையன் மனம் கலங்கி, சரீரநடுக்கமடைந்து, மாண்கோஜியின் தலைவாயிலில் வந்து, ஓவென் றலறிப் புலம்பி, என்னை யிவர்கள் வதைக்காதிருக்கும்படி தயை செய்ய வேணடும்என்று ப்ரார்த்திக்க, ஸ்ரீஹரிதாசராகிய மாண்கோஜியானவர் தமது உறவினரை நோக்கி, பெரியோர்களாகிய நீங்கள் இவன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டு மென்றார். அவர்களும் நாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டு மென்று தாசரை ப்ரார்த்தித்து வணங்கிப் போய்விட் டார்கள். அதின் பிறகு பகவானனவர், தாசருடைய மனத்திற்றோன்றி, புலை

யனது நிலைமையைப் பார்த்தீரோவென்று சொல்ல, தாசரானவர், பகவானை நோக்கி, தீநதயாளா, என்னை யொருபொருளாகச் செய்து தேவரீர் செய்யும் புதுமைக்கு ஒரு எல்லையுண்டோவென்று துதித்து நின்றார். இவர் செய்த தோத்திரத்துக்குப் பகவானுனவர் திருவுளமிரங்கி நகைத்துக்கொண்டே போய்விட்டார். பிறகு தாசரும் தமது இனத்தாரோடுங்கூடி மனமகிழ்ச்சியோடு வாழ்ந்திருந்தார்.

இப்படி யிருக்குங் காலத்தில், ஒருவருஷ முழுதும் மழை பெய்யாமலிருந்து, பிறகு ஒரு மழை பெய்தது. அந்தச் சமயத்தில் தாசருடைய புதல்வர்கள் தமதுவீட்டிலிருந்த விதையைக்கொண்டுபோய், நல்லவிளைவாகுமென்றெண்ணித் தமது நிலத்தில் விதைத்தார்கள். அந்த மழை நாளுக்கு நாள் அதிகமாகப் பெய்யத் தலைப்பட்டதனுல் இவர்கள் விதைத்த விதையெல்லாம் அழுகிப்போயின. அதைக்கண்ட தாசரானவர் பிறரிடத்தில் கொஞ்சம் விதையைக் கடனுக வாங்கிச் சம்பாதித்து விதைக்கலாமென்றெண்ணித் தமது வீட்டில் பத்திரப்படுத்திவைத்தார். அப்போது பண்டரிபுரத்தில் நடக்கப்போகிற உத்ஸவத்தைச் சேவிக்கவேண்டுமென்று பலவூர்களிலுமிருந்து புறப்பட்டு வந்த ஹரிதாசர்கள், இந்த வழியாய் வந்து, இந்தப் போதலே யானவர் வாழ்கின்ற வூரில் சேர்ந்து இவரைக் கண்டார்கள். இவர், அந்த ஹரிதாசர்களைக் கண்டு வணங்கி, ஸ்வாமிகளே, நீங்கள் அடியேனை ஒரு பொருளாக நினைத்து அடியேனிடத்துக்கு எழுந்தருளினீர்களே, இதற்கு அடியேன் செய்த தவம யாதோ அறிந்திலேனென்றார். அப்போது, வந்த ஹரிதாசர்களில் ஒருவர் இவரை நோக்கி, இந்தச் சிறு விலைக் காலத்தில் எங்களை ஆதரிக்கவேணடும், உமமைப்போலச் சர்வ ப்ராணிகளிடத்திலும் அருளுள்ளவர்கள், இவ்வுலகத்தில் யாரிருக்கிறார்கள் என்றார். அதைக் கேட்ட தாசரானவர், இவர்களுக்கு அந்நமிட்டு பசரிக்கலாமென்றால், கடன் வாங்கி விதைக்கவேண்டுமென்று வைத்திருக்கிற விதையையன்றி வேறு தாநியம் நம்மிடத்திலில்லையே, என்செய்வோமென்று ஆலோசித்து, தமது புதல்வர்களைத் தனியிடத்தில் அழைத்து, மக்களே, இந்த ஹரிதாசர்களுக்கு அந்நமிட்டால் பெரும் புண்ணியமுண்டாகும், இவர்கள் விஷயத்தில், நாம விதைக்க வேண்டுமென்று கடன் வாங்கிவைத்திருக்கிற விதையைத் தான் உபயோகிக்க வேண்டியதாயிருக்கின்றது, உயிரில்லாத நிலத்தில் விதைவிதைத்து அதிகமாய் உழைத்தால், அந்த வுழைப்புக்குத் தகுந்த சிறு பயனை யடையலாம், உயிருள்ள சரீரங்களில் விதைத்தால் உழைப்பில்லாமலே பெரும்பயனை யடையலாம், அதிலும், ஹரிதாசர்கள் வயிற்றில் விதைத்தால், இம்மையிற் பெரும்பயனையும், மறுமையில் மேலான கதியையும்அடையலாம். ஆதலால் நமது விதையைஇந்த ஹரிதாசருக்கு வழங்கும்படி நீங்கள் சம்மதிக்க வேண்டு மென்றார். அதற்குப் புதல்வர் யாதொரு தடைசொல்லாமல் சம்மதித்தார்கள். உடனே தம்மிடத்திலிருந்த விதையை

யெடுத்து அந்த ஹரிதாசர்களுக்குக் கொடுக்க, அவர்கள் வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள். அதின்பிறகு இவர் தமது நிலத்தில் விதைக்கும் பொருட்டு மற்றொருவனிடத்தில் விதையைக் கடன் கேட்டார். அவன் பேய்ப் பரங்கி விரையைக் கடனாகக் கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு வந்து தமது நிலத்தில் விதைத்தார். இந்தச் செய்தியை அவ்வூரார் கேட்டு நகைத்தார்கள். அப்படி யிகழ்ந்து நகைத்ததேயன்றி, இவர் தம்மிடத்திலிருந்த தானியமுழுதும் வந்து கேட்டவர்களுக்கெல்லாம் கொடுத்துவிட்டு இப்போது பேய்ப் பரங்கிக்காயை விதைத்துப் பயிரிடுகிறார். இனி வருவோருக்கு அந்தப் பேய்ப் பரங்கிக்காயைக் கொடுப்பார் என்று சொல்லிச் சிலநாள் கழித்து இவருடைய பயிரைப் பார்க்கலாமென்று இவரது விளை நிலத்திற்குப் போய்ப் பார்க்கும்போது, பேய்ப் பரங்கிக்காய்கள் அதிகமாய்க் காய்த்திருப்பதைப் பார்த்து, ஒரு காயைப் பறித்து உடைத்துப் பார்க்க, அந்தக் காயினுள்ளே முழுதும கோதுமை நிறைந்திருப்பதைக் கண்டு அதிசயித்து, இப்படி யிருப்பதற்குக் காரணம் ஸ்ரீபண்டரி நாதருடைய திருவருளே யல்லது வேறில்லை யென்று மிகவும ஆச்சரியப்பட்டார்கள்! இந்தச் செய்தியை யறிந்த ஒரு அதிகாரியானவன் இதை ஒரு கடிதத்தில் எழுதி, மண்டலீகனாகிய சக்ரவர்த்திக்கு அறிவித்தான். அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த செய்தியை, மண்டலீகனாகிய துருக்கன் அறிந்து, ஆச்சரியப்பட்டு, உடனே தாசரை இங்கே யழைத்து வாருங்களென்று சில தூதரை யேவ, அவர்கள் அப்படியே யழைத்து வந்து ராஜசபையில் விட, அரசன் தாசரை நோக்கி, நடந்த செய்தி என்னென்று கேட்க, இவர் நான் ஒன்றும் அறியேன், நடந்த செய்தி யெல்லாம் ஸ்ரீபண்டரி நாதருடைய திருவருளே அறியு மென்றார். அதைக் கேட்ட அரசன் கோபித்து, இவன் வஞ்சகன், இவனை இன்றைக்கு நமது ஜாதியில் சேர்த்துவிடுகிறேன் என்று மனந் துணிந்து, பசுவினது இறைச்சியைச் சோற்றோடு கலந்து இவருக் கெதிரே வைத்து, இதனை யுண்ணக் கடவீரென்று சொன்னான். அந்தச் சோற்றைத் தாசரானவர் உற்றுப்பார்க்கவே, அது பகவானுடைய திருவருளினால் புஷ்பமும் திருத்துழாயுமாகக் காணப்பட்டது, இவர்க்குக் காணப்பட்டதுபோலவே அரசன் முதலானோர்க்கும் காணப்பட்டமையால், அரசன், இவர் பரிசுத்தாத்மா வென்று அதிக பயமும் வியப்புங்கொண்டு இவரது திருவடியை வணங்கி, தேவரீருக்கு வேண்டுவனவற்றைக் கொடுக்கிறேன், கேளுமென்று சொல்ல, தாசர் எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை யென்று சொல்லித் தமதிருப்பிடத்தை யடைந்து, மூட ஜநங்களும ஸ்ரீஹரி பக்தியைப் பெற்று உஜ்ஜீவிக்கும்படி இரவும் பகலும் ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்து கொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே, பகிரம்பட்டர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

மாண்கோஜிபோதலே சரித்திரம் முற்றிற்று.

# ௩௯-வது பகிரம்பட்டர் சரித்திரம்.

யாவராலும் புகழப்பெற்ற பெருஞ் சிறப்பமைந்த பைடணபுரம் என்னும் நகரத்தில் வேதசாஸ்திரங்களில் மிகவும் வல்லவராகிய பகிரம்பட்டர் என்பவர் ஒருவரிருந்தார். இவர் அநேகம் வேதியருக்குப் பலநூல்களையும் கற்பிக்க வல்லவராய், நாள்தோறும் தமது வீட்டில் அக்நி கார்யம் செய்பவராய், கங்கா ஸ்நாநம் செய்பவராய், ஜபாநுஷ்டாந முதலியவற்றில் தவறாதவராய், தேவதார்ச்சனை, ப்ராஹ்மண சமாராதனை, புராணகாலக்ஷேபம் இவைகளை நியதமாக நடத்தி வருவோராய் இருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள் தாம் உண்ணும்போது, மனைவியை நோக்கி, பதார்த்த வகைகளில் உப்பில்லாமல் சமைத்ததற்குக் காரணம் யாதென்று வினவ, மனைவியானவள், இவரை நோக்கி, நீர் கிழத்தனமடைந்தும் இன்னமுமா சுவையை விரும்புகிறீரோ வென்று சொல்ல, இவர் மன வருத்த மடைந்து, எழுந்து, மனைவியை வணங்கி, தாயே என் குற்றம் நீங்கும்படி நல்ல விடை சொன்னாய், என்றுசொல்லி, இனிநாமிங்கேயிருப்பதில் பிரயோஜநமில்லையென்றும், நாம் ஈடேறும் வழியைத் தேடவேண்டுமென்றும் ஆலோசித்து, வைராக்யத்தையடைந்து, காட்டிற்போயிருந்தால் நமது இனத்தார் வந்து அழைத்து வருவார்கள், அன்றி இந்தக் குலத்தைவிட்டு வேறொரு குலத்தில புகுவோமென்றால் இந்த வேதியர் நம்மைச் சேர்க்கமாட்டார்கள், பரமஹம்ஸத்திற் சேர்வோமென்றால் உயர்ந்தோர் நகைப்பார்கள். ஆதலால் இழிகுலமாவதே நன்மையென்று தீர்மானித்து, துருக்கருக்குக் குருவாயிருப்பவனாகிய ஒருவனிடத்திற் போய், ஐயா, நான் உமது குலத்திற் பிரவேசித்தால் எனக்கு நன்மையுண்டாகுமா? குரான் என்னும் உங்கள் வேத புத்தகத்தில் சொல்லப்படுகிறது யாது? என்று வினவ, அந்தத் துருக்கக் குருவானவன், இவரை நோக்கி, நீர் எமதுகுலத்தில் பிரவேசித்தால் நன்மையுண்டு, அது இருக்கட்டும், நீர் உமது குலத்தைவிட்டு எமது குலத்திற் புகுவது பொருள் விருப்பத்தினாலேயோ என்று கேட்க, இவர் அந்தக் குருவை நோக்கி, ஏதோ ஒரு விஷயத்தால மன வெறுப்புண்டாகி, உமதுகுலத்திற் புகச் சம்மதித்தேனேயன்றிப் பொருளை விரும்பினேனில்லை யென்றார். அதைக் கேட்ட துருக்கன் இவருடைய மன வுறுதியை யறிந்து, இவர்க்குச் சுன்னத்து என்னுஞ் சடங்குசெய்து, இவரை ப்ரஷ்டராகச் செய்துவிட்டான். பிறகு இந்தச்செய்தியை இவர் இனத்தாராகிய வேதியர் கேட்டு, இவரைத் திருத்துவது எப்படியென்று மனந் தளர்ந்து இவரைக் கைவிட்டார்கள். அவர்களில் சிலர், இவருடைய மனைவியால் இவர்க்கு இந்தக் கதி சம்பவித்ததுஎன்றும், ஆனாலும் இவர் மனம் வருந்தும்படியான கடுஞ் சொற்களை மனைவியானவள் சொல்லலாகாதென்றும், அவள்அப்படிச் சொன்னாலும்இவர் வீட்டைவிட்டு வந்து

இப்படி ப்ரஷ்டரானது அநியாய மென்றும், இவர்க்குப் பைத்தியம் பிடித்த தென்றும் பலவாறாகப் பேசிக்கொண்டது மன்றி, இவனைப் பார்த்தாலும் இவன் பேரைச் சொன்னாலும் நமக்குப் பாவமுண்டாகு மென்றும் சொல்லி நிந்தித்தார்கள். பிறகு பட்டரானவர், ஒருநாள், நாம குலம் விட்டுக் குலம் புகுந்தும் ஒரு பிரயோஜநத்தையு மடையவில்லையே யென்று ஆலோசித்துக்கொண்டு, கங்கா நதிக்கரையை யடைந்து, அவ்விடத்திலிருந்த வேதியரை வணங்கி, நான் ஜாதிப்ரஷ்டனானேன் என்று சொல்லிக் கண்ணீர்விட்டழுதார். இவரழுவதைக் கண்ட வேதியர், இவரை நோக்கி, நீர் குலம் விட்டுக் குலம் புகுந்ததனால் உமக்குக் கிடைத்த லாபம் என்னவென்று கேட்டார்கள். அதற்கு இவர், என் தீவினையால் இப்படி யானேனே யன்றி, லாபம் ஒன்றுமில்லை யென்றார். பிறகு அவ்வேதியர் மன மிரங்கி இவர்க்குப் பிராயச்சித்தம் செய்து தமது ஜாதியிற் சேர்த்துக்கொண்டார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட துருக்கர் வந்து வேதியரைக் கண்டு, சுன்னத்துசெய்து எங்கள் ஜாதியிற் சேர்த்துக்கொள்ளப்பட்ட இவனை நீங்கள் உங்கள் ஜாதியில் எப்படிச் சேர்த்துக்கொண்டீர்கள் என்று கேட்க, அவ்வேதியர்கள் மறுமொழி சொல்லாமலிருந்தார்கள். பட்டர் துருக்கர்களை நோக்கி, எனக்குக் காதில் தொளையிருப்பதனால் நான் துருக்கனல்ல வென்று சொல்லி, அவர்களை வைதலும் அவர்கள் இவரோடு வாது செய்யமாட்டாமல் போய்விட்டார்கள். பிறகு இவர் வேதியரை நோக்கி, நீங்கள் பிராயச்சித்தஞ் செய்தும் எனது பூர்வரூபமடையப் பெற்றிலேனே யென்று கேட்க, அவர்கள் மௌனமாயிருந்தார்கள். பிறகு இவர் நான் வேதியனு மல்லன், மிலேச்சனு மல்லன் என்று மனஞ்சலித்து, அவ்வழி வருவோரை நோக்கி, நான் என்ன ஜாதியானாகக் காணப்படுகிறேனென்று வினவ, அவர்கள் நீர் வேதியராகக் காணப்படுகிறீரென்று சொல்ல, இவர் எனக்குச் சுன்னத்துச் சடங்கு செய்யப்பட்டிருக்கிறதே யென்று சொல்ல, அவர்கள், இவன் பித்தனென்று பேசிக்கொண்டு போய்விட்டார்கள். அதின்பிறகு இவர் வடவாளம் என்னும் ஊரில் வந்து, நாகநாதர் என்கிற ஒரு தபசியைக்கண்டு வணங்கி, நான் வேதியனோ, துருக்கனோ சொல்லும் என்று வினவ, அந்தத் தபசியானவர் இவர் தலைமீது தமது கைத்தடிகொண்டு மோதி மூர்ச்சித்து விழும்படிசெய்தார். மூர்ச்சித்துக் கிடக்கிற இவரது ஐயத்தை நீக்கி, மேன்மையாகிய ஞானத்தை யருள்செய்ய வேண்டுமென் றெண்ணி, தமது சீடரை யழைத்து, இவனை உரலிற்போட்டு இடித்து உருத்தெரியாமற் சிதைத்து உண்டையாக்குங்கள் என்றுசொல்ல, அவர்களும் அப்படியே செய்து எதிரே வைக்க, நாகநாதர் அந்த உண்டையைக் கொண்டு ஒரு பாவைசெய்து, விறகுகளை யடுக்கிச் சிதையுண்டாக்கி, அதின்மேல் பாவையை வைத்துமூடி, செந்தீயிட்டெரித்துக் கனிந்த பிறகு, அந்தப்பாவையைத் தமதருட்கண்ணால் பார்த்தருளுதலும், அந்தப் பாவை ஒரு மனிதரூபமாய் மவுநமாயிருந்தது, அதை நோக்கி, நீயாரென்று கேட்டார். அப்போது இவர் வேதியனென்றும் துருக்கனென்றும் சொல்ல நாணி,

யிருக்க, குருவானவர், உனக்குள்ளே யிருப்பவர் யாரென்று கேட்க, அதற்கும் இவர் பேசாமலிருக்க, காகநாதர் இவனைச் சிதையிலிட்டெடுத்தும் இவனுக்குத் தெளிவுண்டாகவில்லையே யென்று, சிதையிலிருந்த இவரை யெழுப்பி, மெய்ஞ்ஞானத்தை உபதேசித்தார். பட்டரானவர் மெய்ஞ்ஞானோபதேசம் பெற்றவுடனே நிஷ்டாபரராகி, ஆநந்தக்கடலில் அழுந்தி, குருநாதருடைய திருவடியை வணங்கித் தோத்திரஞ்செய்து, முன்னொருகாலத்தில் நாமதேவர், கற்சிலையை அமுதுண்ணும்படி செய்தார், ஞானதேவர் எருமைக்கடாவை வேதமோதும்படி செய்தார், இப்படி இன்னம் அநேக அத்புதங்களைச் செய்வோர் உலகத்தில் பலருண்டு, சிதையிலிட்டு உருமாறும்படி யெரிக்கப்பட்ட என்னை யிப்படிச்செய்த இந்த மஹாத்மாவைப்போல் ஒருவரு மில்லை யென்று மிகவும் புகழ்ந்து கொண்டாடினர். பிறகு அந்த காகநாதரிடத்தில் விடைபெற்று, அவரை வணங்கிப் புறப்பட்டுப் பண்டரிபுரத்தையடைந்து, விட்டலப் பெருமானைத் தரிசித்து, கண்ணும் மனமுங் குளிரப்பெற்று, ஆநந்தபாஷ்பங்கள் கண்ணினின்றும் பெருகும்படி செய்து தழுவிக்கொண்டு, பலவகையாய்த் தோத்திரஞ்செய்து, ஹரிதாசரோடுகூடிப் பலகவிகள்சொல்லி, பகவத் குணாநுபவத்தில் பொருந்தி இனிது வாழ்ந்திருந்தாரென்று சொல்லி, மேலே கணேசநாதர்வைபவத்தைச்சொல்லத் தொடங்கினர்.

பகிரம்பட்டர்சரித்திரம் முற்றிற்று.

---

## ௪0-வது கணேசநாதர் சரித்திரம்.

சிறப்புப் பொருந்திய பாலேகாட் என்னும் நாட்டில் சாரசம், உச்சனி, என்று சொல்லப்பட்ட ஊர்கள் இரண்டுண்டு; அந்த இரண்டூர்களிலும் சஞ்சரிப்பவரும், பேரறிவையுடையவரும், வைராக்கிய குண முள்ளவரும், கணேசநாதர் என்று பெயருள்ளவரும் ஆகிய ஒருவர் இருந்தார். இவர், கௌபீநந்தவிர மற்ற ஆடையை விரும்பாதவரும், ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்பவரும், பகற்காலமுழுதும் காட்டுக்குப்போய்த் தங்கி யிருந்து, இராக்காலத்தில் ஊருக்குள்ளேவந்து, ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டு திரிந்து பிச்சையேற்று உண்பவரும், புகழ்ச்சி இகழ்ச்சி என்பவைகளை மனத்திற்கொள்ளாதவரும் ஆகி யிருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில், உலகத்தை யாளுகின்ற சிவராஜனென்னும் ஓரரசன், பண்டரிநாதனைச் சேவிக்கப்போகிறவன் இவரிருக்கும் ஊர்வழியாய்வந்து, இவரது பெருமையைக் கேள்விப்பட்டு இவரை வணங்கி இவரது ஞானநிலையையும், வைராக்கியத்தையும், பேசும்வார்த்தையையும் அறிந்து மிகுந்த ஆநந்தமடைந்து, நமமுடைய புதியகட்டிலின்மேல் இவரை யொருநாள் சயநிக்கச் செய்து, பிறகு நாம் அதிற் சயநித்தல் நன்மை யென்று ஆலோசித்து, இவரைநோக்கி, ஸ்வாமீ, தேவரீர் அடியேன்வீட்டுக் கெழுந்

தருளி ஒருநாள் தங்கியிருக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவர் அவன் ப்ரார்த்தனைக்கு இரங்கி, அவனிஷ்டம்போலவே அவனுடனேபோய் அரண்மனையை யடைந்து, அவன்செய்த வுபசாரங்களை யேற்று, அவன் விருப்பத்தின்படியே புஷ்ப சயநம் அமைக்கப்பெற்ற புதிய கட்டிலின்மேல் சயநிக்கப் போகிறவர், முற்றத்தில் கிடக்கிற சில பரற்கற்களைத் தேடியெடுத்தார். அதைக் கண்ட அரசன் இந்தக் கற்களைத் தேடி யெடுப்பது யாதுக்குஎன்று கேட்க, இவர், ஸ்ரீஹரிநாமத்தை யெண்ணுதற்கென்றார். அரசன் இவரைக் கட்டிலின்மே லேற்றிச் சுற்றிலுந் திரையிட்டுப் போய்விட்டான். இவர் அந்தக் கட்டிலின்மே லிருந்துகொண்டு, இந்த நிலையைவிட்டு நீங்குவது எப்போதோ வென்று மனம் வருந்தித் தாம் தேடி யெடுத்த கற்களைச் சயநத்திற் பரப்பிக்கொண்டு அதின்மேற் படுத்துறங்கினார். அரசன், பொழுது விடிந்த பிறகுவந்து, இவரை வணங்கி வாழ்த்தி, சயநத்தின்மேல்கிடக்கிற பரற்கற்களைப்பார்த்து, இவரைநோக்கி, நான் புஷ்பசயநம் அமைத்திருக்க, இந்தப் பரற்கற்களின்மேல் துயில்வதற்குக் காரண மென்னவென்று கேட்க, இவர் அரசனை நோக்கி, மஹாராஜனே மெத்தென்றிருக்கிற இடத்திற் படுத்தால் நித்திரை யதிகரிக்கும், நித்திரை அதிகரித்தால் மெய் மறக்கும்படி நேரிடும், மெய்மறந்து தூங்கினால், பகவத்ஸ்மரணை கெடும், ஆதலால் உன்விருப்பத்தின்படி கட்டிலின்மேல் படுத்தாலும், பகவானுடைய ஸ்மரணை தவறாதிருக்கும் பொருட்டு இந்தக்கற்களை விரித்துப்படுத்தேனென்றார். இவர்இப்படி சொல்லக்கேட்ட அரசன் மிகவும் அநுதபித்து, இவரை வணங்கி இவரருள்பெற்று ஸ்ரீஹரிநாம ஸ்மரணையை ஒழியாதவனா யிருந்தான். பிறகு, கணேசநாதர், அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, முன்பு தாமிருந்த இடத்தை யடைந்து, ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு, தம்மை வந்து அடுத்தவர்களுக்கு ஸ்ரீராம தாரகமந்திரத்தை உபதேசித்தவுடனே, அவர்களெல்லாரும் ப்ரபஞ்ச வாசனையற்றவராய், ஜ்ஞாந நிலையையடைந்து ப்ரகாசித்தார்கள். இப்படி ஒருவருஷகாலம் கழியவே, இவருக்கு முந்நூற்றறுபது சீடர்கள் அமைந்தார்கள். அப்படி யமைந்த சீடர்களெல்லாரும் இவர்போலவே வைராக்ய சீலராயிருப்பதைப் பார்த்து, அவ்வூரிலுள்ளார் எல்லாரும் இவரது செய்கையை நோக்கிப் பேசிக்கொள்ளுகிறார்கள். எப்படி யென்றால், இவர் திருவடியை ஆசிரயித்தோர் எல்லாரும் இவர்போலவே வைராக்ய சீலராயினார் என்று சொல்லுவோரும், இவர் தம்மை யடுத்தவரை மயக்குகிறவர் என்று சொல்லுவோரும், ஸ்ரீபண்டரிநாதரே இந்த ரூபமாய் வந்திருக்கிறாரென்று சொல்லுவோரும், இவரது சேவை பிறவிப் பிணியை நீக்கும் என்று சொல்லுவோருமாய், இப்படிப் பலவாறாகப் பேசிக்கொண்டு, ஒரு மாமரத்தின் நிழலிலிருக்கிற இவரைக்கண்டு, ஓ ஹரிதாசரே! உம்மிடத்தில் வருவோரையெல்லாம் சீடராக்கிக்கொண்டு, அவர்களுக்கு ஹிதோபதேசம்செய்து, இன்னம் ஊரிலுள்ளவரெல்லாரும் உம்மிடத்துக்குவரும்படி செய்கிறீர். இப்படிச் செய்வதனால்அவர்களுடைய இல்லறவாழ்வுக்குக்கெடுதி

யுண்டாகின்றது. ஆதலால் இதுமுதல் மரங்களுக்கெல்லாம் ஞானோபதேசம் செய்து கொண்டிருப்பீரானால் உமது அருள் மிகவும் பிரகாசமடையும் என்று சொன்னார்கள். அதற்கு இவர் அப்படியே செய்கிறேனென்று சொல்லித் தமக் கருகேயிருக்கிற மாமரத்துக்குத் தாரக மந்த்ரத்தை உபதேசித்தார். அதைக் கண்டோரெல்லாரும் இவரைநோக்கி, தாசரே, நீர் மனிதருக்கு உபதேசித்து அதனால் அவர் குணம் மாறுபடுவதைக் கண்டோம், இந்த மாமரம் குணம் மாறுபட்டதற்கு என்ன அத்தாக்ஷியென்றார்கள். அதைக் கேட்ட தாசரானவர், அன்று தமக்குக்கிடைத்த ரொட்டியும் கீரையும் பகவதர்ப்பணம்செய்து, கையிலேந்திக்கொண்டு, அந்த மாமரத்துக் கெதிரே நின்று, இன்று கிடைத்த பகவத்ப்ரஸாதமாகிய இதனை நீ யுண்ணக்கடவாயென்று சொல்லுதலும், அந்தமரம் சற்றுவெடித்தது, உடனே இவர் வெடித்தசந்தில் ப்ரஸாதத்தைச் செருகவே அதுஉள்ளே வாங்கிக்கொண்டு வெடித்தவாய்மூடிக்கொண்டது. இந்த அதிசயத்தை அங்குள்ளாரெல்லாருங்கண்டு மகிழ்ந்து, இவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தோத்திரம்செய்தார்கள். இப்படி அவர்கள் தோத்திரஞ்செய்து விடைபெற்றுப்போன பிறகு, இவர் முன்போலவே, காட்டில் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார். இருக்குங்காலத்தில் ஒருநாள், இவரதுவைபவத்தைக்கேட்டு இவரிடத்துக்கு வந்த நான்குவருணத்தாரையும் நோக்கி, நான் ஹரிபஜனைசெய்கிறேன், நீங்கள் கைத்தாளம் போடுங்களென்று சொல்ல, அப்படியே எல்லாரும் கைத்தாளம்போட, வேதியர்மாத்திரம் இவரைநோக்கி, நீ ஹீனன், நீதாளம்போடென்று நியமித்தால் நாங்கள் போடமாட்டோமென்றார்கள். அதற்கு இவர் நீங்கள்போடாமற்போனால் சும்மாஇருங்கள். இங்குள்ள கற்கள்போடும் என்று சொல்லி, அங்கேகிடக்கிற கற்களை நோக்குதலும், அந்தக் கற்கள் ஒன்றோடொன்று தாக்கித் தாளம்போல ஒலித்ததைக்கண்ட அந்த வேதியர்கள் ஆச்சரியப்பட்டு, உயிரில்லாத கற்கள் இவர் விஷயத்தில் இப்படி உபயோகப்படும்போது நாம் சும்மா இருப்பது நன்மையல்லவென்று தாமும் தாளம் போடத் தொடங்கினார்கள். பிறகு இவரது மஹிமையைப் புகழ்ந்து கொண்டாடித் தாமும் இவரது கோஷ்டியோடுகூடி ஸ்ரீஹரிபஜனை செய்தார்கள். தாசரானவர் பஜனை முடிவுசெய்து பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, அடியாரெல்லாருக்கும் ப்ரஸாதம் கொடுக்க, அவர்கள் பெற்றுக்கொண்டு போய் விட்டார்கள். பகவானாகிய விடோபாவும் இவருக் கெதிரே யெழுந்தருளி, நீ இந்தப்ரகாரமாகவே எந்நாளும் என்னைப் பஜித்துக்கொண்டிருவென்று நியமிக்க, இவரும் அவ்வாறே ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டும், தம்மை நாடி வந்தடுப்பவர்களுக்குத் தாரகமந்த்ரத்தை உபதேசித்துக்கொண்டும் இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே கேசவசுவாமி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

கணேசநாதர்சரித்திரம் முற்றிற்று.

## ௪௧-வது கேசவஸ்வாமி சரித்திரம்.

பிறவித்தளையைச் சேதிப்பதாகிய வைராக்ய கட்கத்தைத் தாங்கின வரும், இந்தப் பூலோகத்திலுள்ள எல்லாத் தேசங்களிலும் சஞ்சரிப்பவரும், கேசவஸ்வாமியென்னும் பெயர்பூண்டவரும் ஆகிய பரமபக்த சிரோமணி யானவர் ஒருவர் முற்காலத்தில் இருந்தார். அவர், ஒருநாள் விஜாபூருக்கு வந்து, பஞ்சாக்நி மத்தியிலிருந்து, ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து கொண்டிருந்தார். அதைக் கேட்கும்பொருட்டு அவ்வூரிலுள்ள நான்கு வரு ணத்தாரும் வந்து கூடினார்கள் அப்படி வந்து கூடினவர்களில் சிலர் ஸாது ஸஜ்ஜநங்களாகவும், சிலர் வைதிகராகவும், சிலர் பண்டிதர்களாகவும் இருந் தார்கள். அப்போது கேசவஸ்வாமியானவர், தமது சிஷ்யர்களில் ஒருவராகிய ஒரு விருத்த வேதியரை யழைத்து, இன்று ஏகாதசி விரததிநமாதலால் எல் லாருக்கும் திவ்யப்ரஸாதம் கொடுக்கவேண்டும், நீர் கடைக்குப்போய், சர்க்க ரை சுக்கு முதலியவற்றை வாங்கிவாருமென்று நியமிக்க, அப்படியே அந்த விருத்தவேதியர்போய், கடைத்தெருவில் எல்லாக் கடைகளும் மூடியிருப்ப தைக்கண்டு, இனி இந்த இராக் காலத்தில் எங்கே போகலாமென்று, மூடப் பட்டிருக்கிற கடைகளில் ஒரு கடையின் கதவைத் தட்ட, அதில் படுத்துறங் கிக்கொண்டிருந்த செட்டியானவன் எழுந்து, என்ன வேண்டுமென்று கேட்க, விருத்த வேதியர், சுக்கு முதலான வஸ்துக்கள் வேண்டுமென்று சொல்ல, விளக்கில்லாமல் இருளாயிருப்பதனால், அவன் கை நிதானத்தின் மேல் சுக்குப்பையைவிட்டு, நாவிப்பையையவிழ்த்து, அதுவும் சுக்குப்போல வே கைப் பரிசத்துக்குத் தோன்றினதனால் அதைச் சுக்கென றெண்ணியே கொடுத்து, சர்க்கரை முதலான மற்றவைகளையும் கொடுத்தான். அவற்றை விருத்த வேதியர் கொண்டுபோய்க் கேசவஸ்வாமி மடத்தில் கொடுத்து ப்ர ஸாதம் சித்தமாய்க் கொண்டிருக்கும்போது, இந்தச் செய்தியையறிந்த பக வானானவர், இன்று ப்ரஸாதம் உண்போரெல்லாரும் மரண மடைவார்கள், அப்படி மரணமடைந்தால் ஸ்ரீஹரிபஜனைக்குப் போனவர்களெல்லாரும் இறந்தார்கள் என்று நம்மேல் பழியுண்டாகும், அன்றியும், உலகத்தார் யாவ ரும் ஹரி பஜனையானது அன்பரைக் கொலைசெய்வது என்றும் பழித்துரை ப்பார்கள், மேலும், ஹரிபஜனை செய்வோரையும் உலகத்தார் மதித்துப் புகழ வும் மாட்டார்கள். இதையன்றியும் நமது திருநாம மானது தாரகமென்று சொலலப்படுவதும் பொய்யாய் முடியும் என்று திருவுளம் பற்றி, அந்த விருத்தவேதியர் கொண்டுவந்த நாவியின் சத்தை க்ரஹித்துக்கொண்டு, அதைச் சுவை, குணம் முதலானவற்றால் சுக்கையே நிகர்த்திருக்கும்படி செய்தருளினர். கேசவ ஸ்வாமியானவர் ஸ்ரீஹரிபஜனை செய்து முடிந்த வுடனே, பகவானுக்கு ஹாரதிசமர்ப்பித்து, அடியாருக்கெல்லாம் ப்ரஸா தம் கொடுக்கப் பெற்றுக்கொண்டுபோய் விட்டார்கள். இப்படியிருக்க, கடை க்காரச் செட்டியானவன் மறுநாட் காலையிலெழுந்து கடையைத் திறந்து சர

க்குப்பைகளை வரிசையாய் அமைக்கும்போது, அவிழ்ந்திருக்கிற நாவிப்பையைப்பார்த்து, இந்த நாவியைச் சுக்கென்று கொடுத்தோமே, ப்ரஸாதத்தை உண்டவரெல்லாரும் இறந்திருப்பார்களே, பெரும பாவத்துக்கு ஆளானோமே, என்னசெய்வோமென்று மனம் வருந்தி, கடையை விட்டு அவ்வூர் வீதிகளில் வந்து நின்று நிதானித்து, எங்கும அழுகுரல் இல்லா திருப்பதையும், மயானத்திற் போய் ஒரு பிணமாயினும வேகாதிருப்பதையும் அறிந்து, ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, ராத்திரி கேசவசுவாமி பஜனைக்குப் போயிருந்த ஒரு பாகவதர் அவ்வழியாய் வந்தார். இந்தச் செட்டியானவன் அவரை நோக்கி, சுவாமீ, தேவரீர் ராத்திரி போயிருந்த கேசவசுவாமி பஜனையில் என்ன ப்ரஸாதங் கொடுக்கப்பட்டது என்று கேட்க, அந்தப் பாகவதர், சுக்கு முதலிய திரவியங்கள் சேர்ந்த திவ்யமான சர்க்கரைப் பொங்கல் என்றார். அதைக்கேட்ட செட்டியானவன், ஆச்சரியமடைந்து, ஸ்ரீபண்டரிநாதர் நாம் கொடுத்த நாவியைச் சுக்காக்கிவிட்டாற்போலிருக்கின்றதென்று தீர்மானித்து, மனந்தெளிந்து மகிழ்ந்து, தன் கடைக்குவந்து, பகவானுடைய திருவடியைத் தியானித்துக்கொண்டிருந்தான். கேசவ சுவாமி, விடியற்காலத்தி லெழுந்து நீராடி அநுஷ்டானம் முடித்து, பகவதாராதநம், பஜனை முதலியவும் செய்து ஹாரதி சமர்ப்பிக்கும்போது, பகவானுடைய திருமேனி கறுத்திருக்கக் கண்டு, இப்படி யிருப்பதற்குக் காரண மென்னவென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, செட்டியானவன் வந்து, இவர் திருவடியை வணங்கி,ராத்திரி நடந்த செய்தியைச்சொல்லி,அடியேன் அபுத்தி பூர்வமாகச் செய்த அபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, கேசவ சுவாமியானவர், கண்களில் நீர்ததும்ப நின்று, ஸ்ரீபண்டரிநாதனே, உன் ப்ரஸாதத்தை யுண்ட அன்பரை மரணமடையாமற் செய்து உமது விருதை விளக்கியருளினீர். நாவியின் சத்தையுண்டு திருமேனி கறுத்தீர், ப்ரஹ்லாதாழ்வானும், கைலாசபதியாகிய ருத்ரமூர்த்தியும் உமது திருநாமோச்சாரணத்தால் விஷ முண்டும பிழைத்திருக்கின்றார்கள். அன்றியும் அவர்கள் நிறம் மாறுபடவில்லை. அப்படியிருக்க, நாவியின் சத்தைச் சிறிது க்ரஹித்த மாத்ரத்தில் திருமேனி கறுத்திருப்பது, ஆலோசிக்குமிடத்தில் அமிர்தத்தை மரணநோய் அணுகிறாற்போலவும, சூரியனை இருள் அணுகிறாற்போலவும், குளிர்ந்த சந்திரனுக்கு வேர்வை யுண்டானாற்போலவும் இருக்கின்றது. அடியோங்களுடைய மனத்துன்பம மாறும்படி தேவரீர திருமேனியில் இப்போதிருக்கிற நிறம்மாறி, முன்னைய நிறங்கொண்டு எங்களுக்குத் தரிசநங்கொடுக்கவேண்டும என்று ப்ரார்த்திக்க, பகவானும் இவர் மனவிருப்பத்தின் படியே தமது நிறமமாறி முன்போலவே பிரகாசிக்க சாதித்தருளினார். கண்டோரெல்லாரும் வியந்து கொண்டாடினார்கள் செட்டியும் அடியார்களிலொருவனாயிருக்கக் கேசவசுவாமியானவா ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே கோமாயியம்மாள் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

கேசவசுவாமி சரித்திரம் முற்றிற்று.

# சஉ-வது கோமாயியம்மாள் சரித்திரம்.



முற்காலத்தில் ஓர் நரிவ, ஜீர்ணவஸ்த்ரத்தை யுடுத்து, வீடுகள் தோறும் இரந்துண்பதே தொழிலாகக்கொண்ட, ஒரு பார்ப்பன விதவையாகிய கோமாயியம்மாள் என்பவர், ஒருநாள், ஸ்ரீபண்டரி யாத்ரையாகப் புறப்பட்டுச் சந்த்ரபாகா நதியை யடைந்து, அன்று ஆடிமாசம் சுத்த தசமியாகையால், அடுத்தநாளாகிய ஏகாதசி ஹரிதிநத்தில பண்டரிபுரம்போய்ச் சேரவேண்டுமென்கிற எண்ணத்துடன் நிற்கும்போது, அந்த நதியானது அதிக ப்ரவாஹத்தோடு கூடியிருப்பதையும், யாத்திரைக்காரர் ஓடமேறிப் போய் அக்கரை சேர்வதையும் பார்த்து, நம்மிடத்தில் ஓடக்காரனுக்குக் கொடுக்கக் காசில்லையே, என் செய்வோமென்று மனம் வருந்தி, ஓடக்காரனிடத்தில் வந்து, அப்பா, நீ எத்தனையோபேரைக் காசுவாங்கிக்கொண்டு அக்கரை சேர்க்கிறாய், நான் ஏழையாகிய பார்ப்பனவிதவை, என்னிடத்தில் காசில்லை, என்னை அக்கரையிற் கொண்டுபோய்ச் சேர்ப்பாயானால் உனக்குப் பெரும் புண்ணியமுண்டு என்று சொல்லி, ஓடத்தை நெருங்குதலும் அந்த ஓடக்காரன் இவரை நீரில் தள்ளிவிட்டு ஓடத்தை நடத்திக்கொண்டுபோய் விட்டான். இவர் ஆடை நனைந்து கரையிலேறிப் பெருங்கூரலிட்டழுதார். அப்போது அங்கிருந்த மற்றொரு ஓடக்காரன், அம்மே, காசுகொடுத்தாலல்லவோ அக்கரை சேரலாம் என்று சொன்னான்? அதற்கு, அம்மையார், அப்பா, என்னிடத்தில் காசில்லை, கொஞ்சம் மாவிருக்கின்றது, அதைத் தருகிறேன், என்னை அக்கரை சேர்த்துவிடு என்று சொல்ல, அவனும், சீ, சீ, காசுகொடுக்காமற்போனால் ஓடத்தி லேற்றமாட்டோம என்று சொல்லி ஓடத்தை நடத்திக்கொண்டு போய்விட்டான். அதின் பிறகு கோமாயியார் என் செய்வார்! மிகவும் பரிதபித்து, ஓ பண்டரிநாதா, அடியேன் நாளையத்திநம எப்படி உன் சந்நிதியை யடைவேனென்று மிகவும் துக்கித்தார். அதைத் திருவுளம் பற்றின ஸ்ரீபண்டரிநாதர் ஒரு ஓடக்காரன்போல வந்து, அம்மே, நீ யேன் துக்கிக்கிறாய்? இந்த ஓடத்தி லேறிக்கொள், உன்னை அக்கரை சேர்க்கிறேனென்று சொல்ல, அம்மையார், இவனும காசுகேட்பானேயென்று நினைத்து, என்னிடத்தில்காசில்லை, கொஞ்சம் மா விருக்கின்றதுகொடுக்கிறேனென்றார். இதைக்கேட்ட பண்டரிநாதராகிய ஓடக்காரர், அம்மே, இங்கே வருவோராகிய ஏழைகளைக் காசு வாங்காமல் அக்கரை சேர்க்கும்பொருட்டே நான் இங்கேயிருக்கிறேன், எனக்கு நீ யொன்றுங் கொடுக்கவேணடியதில்லை யென்றார். அப்போது அம்மையார், அந்த ஓடக்காரரை நோக்கி, அப்பா, நான் முதுமையும் துர்ப்பலமும உள்ளவள், இந்த வஸ்திரம் ஒன்றல்லது வேறே வஸ்திரமில்லை, இது நனைந்தால் குளிரினால் வருந்துவேன், ஆகையால் என்னை அதிஜாக்ரதையாய்க் கொண்டுபோய் அக்கரை சேர்க்கவேண்டும் என்று சொல்ல, ஓடக்காரர், அம்மே, உன் ஆடையேயன்றி உன் காலும் நீரில் பட

வொட்டாமல் கொண்டுபோகிறேனென்று இவரைத் தூக்கித் தோள்மேல்
வைத்துக்கொண்டுபோய் அக்கரை சேர்த்தார். அப்போது அம்மையார் ஓட
க்காரர் காலிலும் நீர்படாமலிருப்பதைப் பார்த்து, அப்பா, நான் உன் தோணி
லேறிக்கொண்டு வந்ததனால், என்காலில் நீர்படாமலிருப்பது ஸஹஜமே, நீ
நீரிலிறங்கிவந்ததனால் உன் காலில் நீர் பட்டிருக்கவேண்டுமே, இது என்ன
ஆச்சரியம் என்று சொல்ல, ஓடக்காரராகிய பகவானனவர், அம்மே, நான்
இங்கே தோணிசெலுத்துவோனல்லன், பவக்கடல் கடத்தும் படகுக்காரன்,
ஆதலால் யார் வந்தாலும் என்னை யடைந்தவரைப் பவக் கடல் நீர் சிறிதும்
படாமல் அவர்களை மோக்ஷதீரத்தில் சேர்ப்பேனென்றார். அம்மையார், பக
வான் சொன்ன வார்த்தையைச் சிரத்தையோடு ஆராயாமல், மறுபடியும்
மாவைவாங்கிக் கொள்ளும்படி சொல்ல, பகவானாகிய படகுக்காரர், நான்
கொடுப்பதே யன்றி ஒருவரிடத்தில் வாங்கும வழக்கமில்லை, நானைக்கு ஹரி
திநமானகயால், அந்தமாவை அடைசுட்டுப் பண்டரிபுரத்தில் ஒரு ஏழை வே
தியர் கையில் கொடுத்தால் உனக்குப் பெரும் புண்ணிய முண்டு என்று
சொல்லி மறைந்துபோனார். மறைந்த பிறகு, அம்மையார், நீலமணி வண்ண
னாகிய பகவானைக் கோயிலிற்போய்ச் சேவித்துப் புறத்தே தூங்கி, விடியற்
காலத்திற்போய், சந்த்ரபாகாநதியில் மூழ்கிவந்து, உபவாசமாயிருந்து பக
வானை வணங்கி, அன்றிரவில், அடியார்கள் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்
வதைக் கேட்டுக்கொண்டிருந்து, துவாதசி காலையில் சந்த்ரபாகையில் முழுகி
க் கரையேறி, அன்று நான்கு வேதியர்களுக்கு அமுதுசெய்விக்கவேண்டுமென்
றெண்ணினார். ஆயினும் உப்பு, பருப்பு, அரிசி முதலிய சாமக்ரியைகள் ஒன்று
மில்லாமல் வெறுமமாவைக் கொடுத்தால் யார் வாங்குவார்களென்று கவலை
கொண்டு, அங்கிருந்த சில வேதியரை நோக்கி, ஐயன்மாரே, என்னிடத்திலு
ள்ள கொஞ்சம மாவை உங்களில் யாராயினும ஒருவர் கைக்கொள்ளுங்களெ
ன்று ப்ரார்த்திக்க, அவர்களில் ஒருவரும் இவர் கொடுக்க எண்ணின மா
வைக் கைக்கொள்ளாமல் போய்விட்டார்கள். அப்போது அம்மையார், பாண்டு
ரங்க பகவானைத் தோத்திரம பண்ணி, ஸ்வாமீ, இத்தினத்தில் வேதியர்க்கு
அமுது செய்விக்காமல் அடியேன் எப்படி உண்ணுவேன் என்று மிகவும்
வருந்துவதை யறிந்த பாண்டுரங்க பகவானனவர் ஒரு வேதிய வுருவங்கொ
ண்டு வந்து, அம்மே, நான் துர்ப்பலனாகிய கிழ வேதியன், எனக்கு ஒரு
கை மாவைக் கொடுத்தால் பெரும் புண்ணியமாகும் என்று கேட்க, கோமா
யியார் மிகவும் மனமகிழ்ந்து தமமிடத்திலிருந்த மாவைக் கொடுக்க,
வந்த வேதியர், அம்மே, என் மிகுந்த பசிக்கு உண்ணும்படி விரைவாக
இந்த மாவை அடை சுட்டுக் கொடுக்கவேண்டும் என்றார். அப்படியே
அம்மையார் அடை சுட்டுக் கொடுக்க, பகவானாகிய முதுவேதியர் வாங்கி
உண்டுகொண் டிருக்கும்போது, புஷ்பவாஸினியாகிய பெரிய பிராட்டி
யார் ஒரு விருத்த ஸுமங்கலியாய் வந்து, என்னை விட்டு நீர்மாத்திரம்
விருந்துண்ணுகிறீரோ வென்றார். அப்படிச் சொல்லும்போது, பகவானனை

வர் அம்மையாரை நோக்கி, ஒரு சுமங்கலி வந்தாள், ஆதலால் உமது தணியில் முடிந்திருக்கிற மாவையும் அடைசுட்டுத் தரவேண்டுமென்று சொல்ல, அம்மையாரும் தமது துகிலில் மா விருக்கக் கண்டு அதை அடைசுட்டுக் கொடுக்க, பகவானவர் வாங்கித் தாமும் பிராட்டியாருமாக அமுது செய்தார்கள்; செய்து முடிந்தவுடனே மறைந்துபோனார்கள் அம்மையாரும் அதன்பிறகு அமுது செய்து காதிடத்தை யடைந்து, ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார் என்று சொல்லி, மேல லதீப்ஷாபக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஸோமாயி அம்மாள் சரித்திரம் முற்றிற்று.

---

# சங-வது லதீப்ஷா பக்தர் சரித்திரம்.

துருக்கரில், லதீப்ஷா என்கிற பெயருள்ளவர் ஒருவரிருந்தார், இவர் கீதை, பாகவதம் முதலாகிய புராணங்கள், இவைகளைக் கேட்பவராயும், குற்றமற்ற வைஷ்ணவ சிகாமணியாயும், அல்லும் பகலும் இடைவிடாமல் ஸ்ரீஹரிபஜனை செய்பவராயும் இருந்தார்; மேலும், நாள்தோறும் நியமமாய் ஸ்ரீஹரிபூஜை செய்பவராயும் இருந்தார். இவர் இப்படி யிருப்பதை யறிந்த துஷ்டராகிய துருக்கர், தங்கள் அரசனிடத்திற்போய், இவன் நம்முடைய மதஸ்தனாயிருந்தும் இப்படிச் செய்வதனால், இவனைத் தண்டித்துப் பழைய படியே நம்முடைய ஜாதியிற் சேர்க்கவேண்டும் என்றார்கள், அரசன் அவர்களை நோக்கி, நமது மதத்துக்கு விரோதியான இவன் வீட்டிற் புகுந்து, உள்ள பொருள்களை யெல்லாம் கொள்ளையிடுங்கள் என்றான், அவர்கள் அப்படியே போய், இவர் வீட்டில் ப்ரவேசித்து இவரைக் கண்டவுடனே, பரம சாந்த முடையவர்களாய், தங்களைத் தாங்களே மறந்துகொண்டு, ராஜ சேவை கொடியது, இனிராஜ சேவையை விட்டு இவரிடத்தில் தங்கியிருந்து கீதா காலக்ஷேபம் முதலானவைகளைக் கேட்டுக் கடைத்தேறுவோ மென்று எண்ணி இங்கேயே நின்றுவிட்டார்கள். இந்தச்செய்தியைக் கேட்ட அரசன், தானே நேரில் வந்து இவரை வருத்தவேண்டுமென்றெண்ணி, வீட்டுக்குள்ளே நுழைந்து, அப்போது இவர் செய்துகொண்டிருந்த ஸ்ரீ பாகவத் காலக்ஷேபத்தைக் கண்டு, நாமும் சற்றுநேரம் நின்று கேட்போமென்று நின்றவன், சுவர் முழுதும் ஸ்ரீபகவானுடைய தசாவதாரமுதலிய சித்திரங்களெழுதப்பட்டிருப்பதைப் பார்த்து, ஆச்சரியப்பட்டு, அந்தச் சித்திரங்களுக்குள்ளே, ஸ்ரீகண்ணபிரானுக்கு ராதையானவள் வெற்றிலைச் சுருள் மடித்துக் கொடுக்கிறதுபோல ஒரு ஓவிய மிருப்பதை நோக்கி, ராதை வெற்றிலைச் சுருள் மடித்துக் கையில் வைத்துக்கொண்டு நிற்க, அதை யேன் கண்ணபிரான் ஏற்றுக்கொள்ளாமலிருக்கிறார் சொல்லும் என்று லதீப்ஷாவைக் கேட்க, இவர் ஸ்ரீகண்ணபிரானை மனத்தினால் தியானித்து, பரம காருணிக

ஞன ஓ பகவானே, ராதா பிராட்டியார் ஏந்தி நிற்கிற வெற்றிலைச் சுருளைத் தேவரீர் ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று ப்ரார்த்திக்க, ஓவிய வுருவா யிருந்த ஸ்ரீகண்ணபிரான் திருப்பவளந் திறந்து வெற்றிலைச் சுருளை வாங்கிக் கொண்டதைக் கண்ட அரசன், மிகவும் அதிசயித்து, ஓவியமாகிய கண்ணன் வாய் திறந்ததும், ஓவியமா யிருந்த ராதை தன் கையிலிருந்த வெற்றிலைச் சுருளை அவர் வாயிலிட்டதும் மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றன வென்று, இவரது மஹிமையைப் புகழ்ந்துகொண்டாடி, இவரது திருவடியை வணங்கி நின்று, இப்படிப்பட்ட மஹாத்மாவாகிய உமது பெருமையை யறியாமல் உம்மை வருத்தவேண்டுமென்று நினைத்து வந்தேன், என் அபராதத்தை க்ஷமித்தருளவேண்டும் என்று ப்ரார்த்தித்து இவரிடத்தில் விடை பெற்றுத் தன் ஊரை யடைந்தான். இவரும் சதா காலமும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிதாய் வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே சந்தோபா பக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

லதீப்ஷா பக்தர் சரித்திரம் முற்றிற்று.

---

## சச-வது சந்தோபா பக்தர் சரித்திரம்.

முற்காலத்தில் ராஞ்சணம் என்னும ஊரில், சந்தோபா என்னும் பெயருள்ளவர் ஒருவரிருந்தார். இவர் சதுரங்க சேனைகளோடுங் கூடிச் செல்வத்தால் குபேரனுக்குச் சமானமானவராயும், தம்மினத்தாருள் மேன்மையுடையவராயும் வாழ்ந்திருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில், ஒருநாள், இவர் துக்காராம் ஸ்வாமியுடைய கதையைக் கேட்டு, இந்தக் குடும்ப வாழ்வும் சரீரமும் பொய்யென்கிற மெய்ஞ்ஞானம வாய்க்கப் பெற்று, வைராக்கிய சீலராய், இனிப் பிறவியை விரும்பாமல் இனி அரைநிமிஷமாயினும் வீண்காலங் கழிக்க லாகாதென்று ஆலோசித்துத் தம்மிடத்திலுள்ள பரிசாரகர்களுக்கெல்லாம் வேண்டியமட்டும் பொருள் முதலாயினவற்றைக் கொடுத்து, அவரவர்களுடைய ஊர்களுக்கு அனுப்பிவிட்டு, வேதியர்க்குத் தமது பொருள் முழுதும் தத்தஞ்செய்து, நான்குமுழ வஸ்திரத்தை அரையிலுடுத்து, ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு வெளியே வந்து, பீமரதி நதிக்கரையின் ஒரு பக்கத்தில் விளங்குகின்ற ஒரு மலைமேலேறி, கூட்டிலிருந்து வெளிப்பட்ட கிளிபோலவும், தாமரைமலருள்ளே யகப்பட்டிருந்து வெளிப்பட்ட வண்டுபோலவும் மிகவுங் களிப்போடு ஸ்ரீஹரிபஜனை செய்துகொண்டிருக்க, இவருடைய தாயானவள் இவர் இப்படி வைராக்யத்தை யடைந்து மலைமேல் வசிப்பதைக் கேள்விப்பட்டு, இவரது மனைவியாரை அலங்கரித்துக்கொண்டு போய்விட்டால், அவள்மீது விருப்பங்கொண்டாயினும் வருவார் என்றெண்ணி, இவர் மனைவியாரை அலங்கரித்துப் பல்லக்கிலேற்றி யனுப்ப, அவ

ரும் அப்படியே போய்க் கணவரைக் கண்டு வணங்கி, அடியேனுக்கு உம்மையன்றி வேறே தெய்வமில்லையாதலால் உம்மை வந்தடுத்தேன் என்றாள். அதற்கு இவர், பெண்ணே, நீ யென் சொற்படி செய்வதாயிருந்தால் என்னிடத்தில் இருக்கலாம், இல்லாதபக்ஷத்தில் நகரத்துக்குப் போகலாம் என்று சொல்ல, மனைவியார் நீர் சொல்லுகிற சொல்லின்படியே நடக்கிறேன் என்று சொல்ல, இவர், மனைவியாரை நோக்கி, பிராணநாயகி, நீ உன் ஆடையாபரணாதிகளெல்லாவற்றையும் நீக்கி, நான்குமுழ வஸ்திர முடுத்து என்னோடு கூடியிங்கே யிருந்தால் இருக்கலாமென்று சொல்ல, மனைவியாரும் சம்மதித்து, நான்குமுழ ஆடையுடுத்துக் கணவருக் கருகே யிருந்தார். இப்படியிருக்குங்காலத்தில், ஒருநாள் சந்தோபாவுக்குப் பசி அதிகரித்து, மனைவியாரை நோக்கி, பெண்ணே, எனக்கு அதிக பசியாயிருப்பதனால், நீ ஊருக்குள்ளே போய், நமது உறவினரும், ஸ்நேஹரும் ஆகிய அவர்கள் வீடுகள்தோறும் போய், ஒவ்வொரு வீட்டிலும் அரையடைக்கு அதிகமாயேற்காமல் பிக்ஷையேற்றுவரக்கடவாயென்று நியமிக்க, மனைவியாரும் இவரை வணங்கி, நான்குமுழ வஸ்திரமும் தாலியுமன்றி வேறொன்று மில்லாதவராய், ஊர்க்குட்சென்று, வீடுகள்தோறும் பிக்ஷையேற்று, முடிவில், தமது கணவருடைய தங்கைவீட்டுக்குப் போய்ப் பிக்ஷைகேட்க, அவள் வந்து இவரைப் பார்த்து, உன் பெருஞ்செல்வத்தை யிழந்து இப்படிப் பிக்ஷையேற்றுச் சீவிக்க நேரிட்டதா! இதுவும் தெய்வச்செயலென்று பரிதபித்து, வீட்டுக்குள்ளே போய், சர்க்கரையும் நெய்யும் சேர்ந்த இரண்டு அடைகள் கொண்டுவந்து கொடுத்தாள். அதைப்பார்த்த இவர் மனைவியார், அரையடைக்கு அதிகமாய் வாங்க வேண்டாமென்று என் கணவர் கட்டளையென்று சொல்லியும் கேளாமல் இரண்டு முழு அடையைத் தந்துபோனாள். அப்படி அவள் கொடுத்த இரண்டடைகளையும் வாங்கிக்கொண்டு தமது கணவரிருக்கு மிடத்தை யடைந்து, அமுதுசெய்யலாமென்று சொல்ல, தாசரானவர், பெண்ணே, நான் சொல்லியிருந்தும், முழுவடை யேன் வாங்கிவந்தாயென்று கேட்க, மனைவியார், பிராணநாதா, நான் எவ்வளவு சொன்னாலும் கேளாமல் உன் தங்கை கொடுத்ததைத் தடுக்காமல் வாங்கி வந்தேன் என்றாள். அதைக் கேட்ட தாசரானவர் இந்த முழு அடைகளைக் கொடுத்து வந்தால் நான் உண்பேனென்று சொன்னார். அதுகேட்ட மனைவியார் கணவரது சொற்படியே விரைவாகப்போய் அடைகளைக் கொடுத்தவரிடத்தில் கொடுத்துவிட்டு மீண்டு வரும்போது மழைபெய்து வழி முழுதும் கான்யாறு பெருகி யோடுவதைக் கண்டு, இந்த ஆற்றைக் கடந்து போகும்விதம் யாது என்றும், நமது கணவர் பசித்திருப்பாரே என்றும் துன்பமிகுந்து, பாண்டுரங்கப் பெருமானைத் தியானஞ் செய்தார். அப்போது ஸ்ரீபாண்டுரங்க பகவானானவர் இவர்மீது இரக்கங்கொண்டு ஆறு கடத்துவோனுடைய ரூபங்கொண்டு அவ்விடத்தில் வந்து இவரை நோக்கி, நீர் ஏன் வருந்துகிறீர், என்று கேட்க, இவர் என் கணவர் அந்தக்கரையிலிருக்கிறார், நான் அவர்க்கு உணவு கொண்டுபோகும் வழியில் இந்த ஆறு

கடைப்பிடித்ததால் மனம்வருந்தி நிற்கிறேன், இந்தச் சமயத்தில் என்னை உனது தங்கையாகப் பாவித்து அக்கரையில் சேர்ப்பாயானால் உனக்குப் பெரும்புண்ணிய முண்டாகும் என்று சொல்ல, பகவானானவர், இவரது வேண்டுகோளின்படியே இவரைத் தமது திருத்தோளில் ஏற்றிக்கொண்டு நீந்தி விரைவில் அக்கரையில் சேர்த்து அழைத்துக்கொண்டு இவர் கணவர் இருக்குமிடத்தளவும் சென்று உன்பிராணநாதரைக் கண்டாயா என்று சுட்டிக்காட்டி மறைந்துபோனார். போனபின்பு இவர் தமது கணவரிடஞ் சென்று நிற்க, தாசரானவர், பெண்ணே! இந்த மழையில் எவ்விதமாய் ஆற்றைக் கடந்து வந்தாய் என்று கேட்க, இவர் நடந்த செய்தியைச் சவிஸ்தாரமாய்ச் சொன்னார். அதைக்கேட்ட தாசரானவர், ஸ்ரீபாண்டுரங்கப்பெருமான் உனக்குச் சேவை சாதித்தார்; அதுபோலவே எனக்கும் அவர் வந்து சேவை சாதிக்குமளவும் உண்ணாமலிருப்பேன் என்று சொல்லியிருந்தார். மறுநாள் ராஞ்சணத்தில் வாழ்கிற பரமபாகவதரென்பவரான ஒரு செட்டியின் கனவில் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் எழுந்தருளிச் சந்தோபாபக்தர் பசித்திருக்கிறார், அவர் பசி தணியும்படி அறுசுவையோடுகூடிய அமுது உண்பித்தால் உனக்குப் புண்ணியமாகும் என்று சொல்லி மறைந்தார். உடனே அந்தச் செட்டியானவன் விழித்து எழுந்து, பகவான் நியமித்தபடியே திவ்வியாகாரம் சித்தஞ் செய்து எடுத்துக்கொண்டு சந்தோபா பக்தர் இருக்குமிடத்திற்குப் போய், பகவானானவர், எனக்கு நியமித்த பிரகாரம் உமக்கு அமுது கொண்டுவந்தேன்; இதனை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று பிரார்த்திக்க, தாசர் அவனை நோக்கி, உனக்குப் பிரத்தியக்ஷமான பகவான் என் எதிரே வராமல் இருக்கிறார், ஆதலால் அவர் எனக்குச் சேவை சாதிக்குமளவும் உண்ணமாட்டேன் என்றார். செட்டியானவன் இவரது மனவுறுதியை நோக்கி, இவரை நிர்ப்பந்திக்காமல் தன் ஊர்க்குப் போய்விட்டான். பிறகு இந்தச் சரீரம் அன்னமயமல்லவா என்பதனைச் சிறிதும் அறியாமல் இப்படிப் பசியோடிருக்கிற இவரது உறுதி நிலைக்கு ஸ்ரீபாண்டுரங்கப் பெருமான் மகிழ்ந்து, சகுண ரூபத்தோடு இவர்க்கெதிரே எழுந்தருளக் கண்டு, மிகவும் ஆவலோடு வணங்கித் தோத்திரஞ் செய்ய, பகவான் இவர்க்கு அபயந் தந்து மறைந்தார். பிறகு இவர் அந்தப் பகவானுடைய மங்களகுணங்களை ஸ்மரித்துக் கொண்டும் அவனது திருநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டும் ராஞ்சணம் என்னும் ஊரில் நாள்தோறும் பிக்ஷையேற்று உண்டு மலையில் வாசம் பண்ணிக்கொண்டிருக்க, அந்த ஊரில் குடியிருப்பவனும் துஷ்டபுத்தியும் ஆகிய ஒரு வேதியன் குடும்ப வாழ்க்கையில் மிகுந்த இச்சையுள்ளவனாயிருந்தான். அவன் எப்பொழுதும் தன் மனைவியோடு சண்டை செய்வதும அவள் எதிர்மொழி கொடுத்தால் இந்தக் காட்டில் வாழ்கின்ற சந்தோபா பக்தர்போல இந்தக் குடும்ப வாழ்க்கையை விட்டு நீங்குவேன், அப்போது நீ என்ன செய்வாய் என்று பயமுறுத்துவதும் ஆகிய தொழிலை மேற்கொண்டிருந்தான். அவன் மனைவியானவள், நாம் நம் கணவனோடு

எதிர்த்துப் பேசுவோமானால், இவன் நம்மைக் கைவிடுவான், அப்படி விட்ட பக்ஷத்தில் நாம் என் செய்வோம் என்று அவனோடு எதிர்த்துப் பேசாமல் அடங்கி யிருந்தாள். இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் சந்தோபா பக்தரானவர், அவள் வீட்டின் தலைவாசலில் வந்து நின்று பிக்ஷை கேட்க, அவள் பிக்ஷைகொண்டு வந்து, இவர் பாத்திரத்திற் பெய்து நின்று, ஐயரே, என் கணவர் தினந்தோறும் என்னோடு சண்டைசெய்கிறார், நான் எதிர்த்து ப்பேசினால் உம்மைச் சுட்டி உம்மைப்போல நான் துறவு பூண்பேன் என்று சொல்லுகிறார். இதற்கு யான் என் செய்வேன் என்று சொல்லிப் புலம்ப, இவர் அவளை நோக்கி, அம்மா, நீ அஞ்சாதே, இனி உன் கணவன் உன்னோடு சண்டை செய்யும்போது நீ எதிர்த்துப் பேசு, அதற்கு அவன் நான் துறப்பேன் என்று சொன்னால், உடனே நீ துறந்துபோ வென்று கடுமையாய்ப் பேசு, அப்போது அவன் துறந்து என்னிடம் வருவான், அப்போது அவனுக்கு நான் உபதேசித்து மறுபடியும் உன்னிடத்தில் வந்து இல்வாழ்க்கையில் அமர்ந்து, ஆண்டிகையிலகப்பட்ட குரங்குபோல உனக்கு அடங்கி நடக்கும்படி செய்கிறேனென்று சொல்ல, அவள் இவரது திருவடியை வணங்கி மகிழ்ந்திருந்தாள், இவரும் தமது ஆசிரமத்தை யடைந்தார். பிறகு அந்த வேதியன் வீட்டிற்கு வந்து எனக்குப் பசி மேலிட்டிருக்கிறது, நீயேன் இன்னம் சமையல் செய்யவில்லை, உன்னை நான் விட்டு நீங்குவேன் என்று சொல்ல,உடனே இவளும் அந்தப்படியே செய்யலாமே,உன்னையார் தடைசெய்தார்கள் ? அப்படி இஷ்டமிருந்தால் விரைந்துபோம் என்றாள். மனைவியானவள் இப்படிச் சொல்லக் கேட்ட வேதியன், ஆகா! மோசம் வந்தது, இனி யிங்கிருப்போமானால் நமது பெருமைக்குக் குறைவு நேரிடும் என்று உடனே ஒரு செம்பைக் கையி லெடுத்துக்கொண்டு சந்தோபா பக்தர் இருக்கும் இடத்தை யடைந்து, தாசரே, உமமைப்போல் நானும் குடும்பத்தை விட்டுவந்து உம்மைச் சரணடைந்தேன், எனக்கு நன்மையைத் தருகின்ற உபதேசம் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, தாசர் வேதியனை நோக்கி,உன்னைப்போல் இப்படிப்பட்ட வைராக்கிய சீலர்களை எங்குங் கண்டதில்லை, உமக்கு உபதேசஞ் செய்வதற்கு யாதொரு தடையுமில்லை என்று சொல்லி, செம்பும் ஆடையும் கொண்டு சென்றால் திருடர் பறித்துக் கொள்வார்கள்; ஆகையால் அவைகளை நீக்கிக் கோவண மொன்றை மாத்திர முடுத்துச் சுரைக் குடுக்கையைத் தூக்கிக் கொண்டுபோய், நீர் கொண்டுவா என்று நியமிக்க,வேதியனும் அவ்வாறே கோவணமும் சுரைக்குடுக்கையுமாகப்போனான்; அவன் போன பிறகு, இவர் அவனது ஆடையைப் பல துண்டுகளாகக் கிழித்தெறிந்து விட்டுச் செம்பையும் ஓர் பள்ளத்தில் போய் விழும்படி வீசி யெறிந்தார். நீர் கொண்டுவரப்போன வேதியன், நீர் மொண்டு கொண்டு வந்து தாசரிடஞ் சேர்ந்தான். அப்பொழுது தாசரானவர் தாமும் தமது மனைவியுமாக வேப்பங்காய்களை உணவாக உண்டு கொண்டிருக்க, வேதியன் எனக்குப் பசியாயிருக்கின்றது என்று சொல்ல,இவர் தாம்உண்டு

கொண்டிருந்த வேப்பங்காய்களை அள்ளி உண்ணென்று கொடுக்க,வேதியன் இந்தக் கசப்பான வேப்பங்காய்களை எப்படி உண்பது என்று சொல்ல, சந்தோபா பக்தர், வேதியரே, துறவடைந்திருக்கிற நமக்குச் சுவை விருப்பம் கூடாது, பசிக்கு எது கிடைத்தாலும் புசிப்பதே துறவுக்கு அழகு, இதனை அறிந்து கொள்வாயாக என்று சொல்ல, அந்தணன், ஐயோ, நான் என் மனைவியை விட்டு என்ன லாபத்தை யடையும் பொருட்டு இவ்விடத்திற்கு வந்தேன்? பசிக்கு உலர்ந்த அடையாயினும் அவ்விடத்தில் கிடைக்கும்,இவ்விடத்தில் அதுவும் கிடைக்காமல் வேப்பங்காய் கிடைத்ததே என்று கண்ணீர் விட்டழுதான். இதைக்கண்ட தாசர் ஏன் அழுகிறாய் என்று வினவ, வேதியன் தன் குடும்பத்தில் நடந்த விருத்தாந்தமெல்லாஞ் சொல்லி, உம்மை நான் நம்பி வந்ததற்கு, உண்ண வேப்பங்காய் கிடைத்தது, பசித்தீயோ எரிக்கிறது, குளிரோ நடுக்குகின்றது, ஆடையோ பறந்து விட்டது, இவ்விதமான துன்பம அநுபவிக்கக் காரணமாக நான் எப்படிப்பட்ட பாவத்தைச் செய்திருந்தேனோ? மனைவியை நாள்தோறும் வருத்தின பாபம இப்படி நான் வருந்தச் செய்தது, நான் அறிவீனத்தால் மனைவியைத் துறந்து வந்ததே மோசம, இந்தக் கோவண வேஷத்தோடு மறுபடியும் வீட்டிற்கு எப்படி நாணமில்லாமற் போவேன்? அப்படி நாணத்தை விட்டு நான் போனாலும், என் மனைவி, துறந்து சென்ற நீ மறுபடியும இல்வாழ்க்கைக்கு வரலாமோ என்று கடிந்து பேசுவாள், இதற்கு நான் என்ன செய்வேன் என்று புலம்பி அழுதான். இந்த வேதியனது நிலையைக்கண்ட சந்தோபா பக்தரானவர், அவனை நோக்கி, நீ முன்போல் நாள்தோறும் உன் மனைவியோடு சண்டை செய்யாமலும், அடிக்கடி துறந்துபோவேனென்று சொல்லாமலும் உன் மூர்க்கக் குணங்களை விட்டுச் சாந்த குணத்தை யடைந்து இருப்பாயானால் உன் மனைவியோடு உன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து அவளுக்கு வேண்டிய சமாதானம் சொல்லி வருவேன் என்றார். அதைக்கேட்ட வேதியன், ஸ்வாமீ, அப்படிச்செய்தால் நான் முன்போலச் சண்டைசெய்தல்முதலாகிய தீச்செய்கைகளை விட்டு அவளோடு ஒற்றுமையாய் வாழ்ந்திருப்பேன் என்று உறுதிமொழி சொல்லக் கேட்ட தாசரானவர், பொழுது போன பின்பு, அவனை வீட்டுக் கழைத்துக் கொண்டுபோய் அவன் மனைவியை யழைத்து, உன் கணவனுக்கு உபதேசஞ் செய்து அழைத்து வந்தேன், இனி நீ அவனை உன் வசப்படுத்திக்கொண்டு மனமகிழ்ச்சியோடு வாழ்ந்திருக்கக் கடவை, அவன் கோவணத்தோடு வருவான்,அவனை இகழாமல் அவனுக்கு நல்ல ஆடையைக் கொடு என்று சொல்லிவிட்டு, வேதியனை நோக்கி, நீ இனி மனந்தளரவேண்டாம், உன் மனையாளுக்கு வேண்டிய புத்திமதிகளைச் சொன்னேன், நீ உன் வீட்டிற்குப்போ என்று நியமித்தார். அப்பொழுது வேதியன், தாசரை நோக்கி, ஸ்வாமீ, உமது சொல்லைத் தள்ளமாட்டேன் என்று வணங்கித் தனது வீட்டில் பிரவேசித்தான். இவனைக் கண்டவுடனே மனைவியானவள் உயர்ந்த வஸ்திரங் கொடுத்து இனியசுவை யமைந்த அன்னமும் படைத்தாள்.

வேதியனும் அதுமுதல் கலகமில்லாமல் மனைவியோடு ஒற்றுமையாய் வாழ்ந்துகொண்டிருந்தான். இப்படி வேதியனைத் திருத்தி இல்லறத்தில் இன்பத்தோடு வாழும்படி அமைத்து வைத்த சந்தோபா பக்தரானவர், ஆடிமாசம் ஏகாதசிக்கு பண்டரி யாத்திரை செய்ய விரும்பி வீணை, மிருதங்கம், தாளம் கருடக்கொடி இவை முதலானவைகளோடு ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம்செய்துகொண்டும், ஆநந்தக் கூத்தாடிக் கொண்டும் இரண்டாயிரம் ஹரிதாசர்களோடுகூடி ஏகாதசிக்கு முன்னாளாகிய தசமிதினத்தில் நரசிங்கபுரத்தின் அருகேபோனார். அப்போது ஹரிதாசர்கள் எல்லாரும் அங்குள்ள நதிப்பெருக்கைக் கண்டு, பண்டரி புரத்திற்குப் போய் ஸ்ரீருக்மிணீ நாயகனாகிய பகவானை ஹரிதினமாகிய நாளைக்கு எப்படித் தரிசனஞ் செய்யப்போகிறோம்? இந்த நதிப்பெருக்கைக் கடப்பதற்குரிய ஒரு ஓடம் நேரிட்டால் நன்றாயிருக்கும் என்று வருந்தும்போது, பக்தரானவர் அவர்களை நோக்கி, நீங்கள் மனம வருந்த வேண்டாம, என்னோடு வாருங்கள், பகவானவர் நம்மைக் காப்பாற்றினாலும் சரி, கை விட்டாலும் சரி என்று மன மகிழ்ச்சியோடு நதியிலிறங்கி முன்னே போகக்கண்டு, ஹரிதாசர்களெல்லாரும இவரைப் பின் தொடர்ந்தார்கள். அப்போது ஸ்ரீலக்ஷ்மீநாதனான பகவான் கூர்ம ரூபமாகி நீருள்ளே யிருந்து தாங்க, நீரானது கணைக்காலளவா யிருந்ததனால் தாசர் முதலிய எல்லாரும சுலபமாய் நடந்து அக்கரை யடைந்து பண்டரிபுரம் சேர்ந்து சந்திரபாகாநதியில் நீராடிப் புண்டலீகரைத் திருவடி பணிந்து கோயிலுக்குள்ளேபோய் ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானைச் சேவித்து அன்போடு பணிந்து தழுவிக்கொண்டு அவனது திருநாமங்கள் பலவற்றையும சொல்லித் தோத்திரஞ் செய்து, பகவானே! உலகத்திலுள்ள அன்பர்களுக் கெல்லாம் அன்பனாகி அவர்கள் விரும்பினவற்றைக் கிருபை செய்கிறாய், உன் புகழ் சேடனுக்கும் சொல்ல முடியா தென்றால் என் சொல்லுக்கு அடங்குமோ? இன்று கூர்ம ரூபமாகி எங்களெல்லாரையும் காத்தருளின கருணாசாகரமாகிய உன் திருவடியை விட்டு நீங்காமல் இருக்கும்படி எனக்குக் கிருபை செய்யவேண்டும என்று பிரார்த்திக்க, பாண்டுரங்கப் பெருமானும் அருள்கூர்ந்து, உன் விருப்பத்தின்படியே என்னை விட்டு நீங்காமல் இவ்விடத்திலேயே வாழ்ந்திருக்கக் கடவாயென்று நியமிக்க, சந்தோபா பக்தரும், தமது குடும்பத்தோடு கூடி, அந்தப் பண்டரிபுரத்தில் தங்கி, ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே நீளோபா பக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சந்தோபா பக்தர் சரித்திரம் முற்றிற்று.

# ௪௫-வது நீளோபாபக்தர் சரித்திரம்.

பல வளங்களும் நிறைந்த பிம்பளநேரி என்னும் ஊரில் வாழ்பவரும், யான் எனது என்கிற அஹங்கார மமகாரங்கள் இல்லாதவரும், எப்பொழுதும் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்ய விரும்புவோரும், ஸ்ரீஹரிதாசர் சரித்திரங்களை எடுத்து எப்பொழுதும் புகழ்ந்துரைப்பவரும், குடும்பத்தைத் தம்மதென்று மனத்திற் கொள்ளாதவரும், யாசகவிருத்தியினாலேயே திருமாலடியார்க்கும் வறியவர்க்கும் பக்தியோடு உதவிசெய்து தமது குடும்பத்தையும் மகிழ்விப்பவரும் ஆகிய நீளோபா என்பவர் ஒருவர் இருந்தார். இவருடைய கன்னிகைக்கு மணப்பருவம் வாய்த்ததைக்கண்ட இவரதுமனைவியார் இவரை நோக்கி, நமதுஉறவினர் யாவரும் செல்வப்பெருக்கோடு கூடி வாழ்கின்றார்கள், நாமோ ஏழைகளாயிருக்கிறோம், அவர்களுக்கும் நமக்கும் எப்படிப் பொருந்தமாகும் என்று சொல்ல, தாசரானவர், பெண்ணே, ஸ்ரீ கஜேந்திரவரதர் இருக்கிறார், அவர் நம்மைக் காத்தருளுவார், நீ அஞ்சவேண்டாம் என்று சமாதானஞ்சொல்லி வாழ்ந்திருக்கும் நாளில், விவாகத்தினத்துக்கு முன்னாளில் ஸ்ரீபண்டரிநாதன் ஒரு கிழவேதியனாகித் தன் கையிலுள்ள ஜீர்ணவஸ்திரத்தில், சமையலுக்கேற்ற சில பதார்த்தங்களை முடிந்துகொண்டு தாசருக்கெதிரேவந்து நின்று, நான் துர்ப்பலன், எளியவன், சமையலுக்குரிய சிலபதார்த்தங்களைக் கொண்டுவந்தேன், அவைகளைச் சமைக்கச் சக்தியில்லேன், ஆதலால் அவைகளைச் சமைத்துக்கொடுத்தால் பசிதீரவுண்பேன் என்றான். அது கேட்ட தாசர் வேதியனைப் பணிந்து, நீர் ஒரு பதார்த்தமும் கொடுக்கவேண்டியதில்லை, ஸ்ரீபண்டரிநாதனுக்கு நிவேதிக்கும் பிரசாதத்தைக்கொடுக்கிறேன், வாரும் என்று சொல்ல, வேதியன் பண்டரிநாதனுக்கு நிவேதித்து நீர் கொடுக்கும் பிரசாதம் கொஞ்சம், அதையுண்டு என்பசி தணியாது என்று சொல்ல, தாசரானவர் தமதுமனைவியாரை நோக்கி, இந்த வேதியருக்குச் சிறந்த திவ்வியான்னங்களைச் சமைத்து அன்போடு உண்பிக்கவேண்டும் என்று நியமிக்க, மனைவியாரும் அப்படியே யாகட்டுமென்று சொல்ல, வந்த வேதியர் அவரை நோக்கி, நான் கொண்டுவந்த இந்தப்பாகம் என் பொருள், இதனை உமது பெண்மணத்துக்குச் சேகரிக்கப்பட்ட பொருள்களோடு சேர்த்துவைத்தால் மனமொத்து நீர் இடும் அமுதை நான் இனிதாக உண்பேன் என்றார், அப்பொழுது தாசருடைய மனைவியார், நாம இந்த வேதியர் கொண்டுவந்த வஸ்துக்களை வாங்கிக் கொள்ளாவிடில் இவர் அமுது செய்யமாட்டார், தீமை நேரிடும் என்று யோசித்து, அவர் கொடுத்த வஸ்துக்களை ஏற்றுக் கொண்டு, விவாகவிஷயமாய்ச் சேகரித்த வஸ்துக்களின் நடுவே வைத்தார். அதைக்கண்டு இடைவிடாமல் ஹரிநாமசங்கீர்த்தனம் செய்பவராகிய தாசரானவர், இவர் விஷயத்தில் மிகவும் அன்பு பாராட்டினார். அப்போது வேதி

யன் தாசரை நோக்கி, பகவானுக்கு நிவேதித்த ப்ரஸாதத்தை முன்னே கொடுத்தால், உண்டு, கொஞ்சம் பசிதணிந்திருப்பேன், அப்பால் சமையலாகிற வுணவுகளை வயிறார வுண்பேன் என்றான். அப்படியே தாசரும் பகவத் பிரசாதத்தைக் கொடுக்க, விரும்பி உண்டார். பிறகு தாசரானவர் தமது மனைவியாரை நோக்கி, நீ சீக்கிரமாய், சமையல் செய்யவேண்டும் என்று நியமிக்க, அவ்வாறே அவர் மனைவியாரும் விரைவில் சமைத்துப்பரிமாற, வேதியர் வயிறாறவுண்டார், பிறகு தாசரும் உண்டார். அன்றிரவில் வேதிய வுருவங் கொண்டுவந்த பகவானானவர் தாசர் முகத்தைநோக்கி, உங்கள் பெண்ணின் விவாகம் நாளைக்கு நேர்ந்திருத்தலால், நான் அந்த விவாக காரியங்களெல்லாவற்றிற்கும் முன்னின்று, முடிவளவும் உதவிசெய்து, மணப்பந்தலிலேயே உண்ணுதற்கு என் மனம் விரும்புகின்றது என்று சொல்ல, மெய்யன்பராகிய நீளோபா பக்தரும் அப்படியே செய்யலாமென்று வணங்க, அவ்விரவும் நீங்கிற்று, பொழுதும் விடிந்தது. விடிந்தவுடனே வேதியர் விரைவாய்எழுந்து மனைமுழுதும் விளக்கி, மெழுகி, காவடிகொண்டுபோய் நீர்மொண்டுகொண்டு வந்து, வீட்டில் செய்யவேண்டிய வேலைகளை யெல்லாம் செய்துகொண்டிருந்தார். அப்போது மாப்பிள்ளையும் உறவினராகிய ஐஞ்ஞூறுபேரும் கொண்டு வந்துவைத்த பண்டங்களில் வேண்டுமவற்றை எடுத்துக்கொண்டு சமையல் செய்து, பலகார வகைகளோடு, வந்தவரெல்லாரும் வயிறார வுண்ணும்படி பரிமாறி, உண்ட பிறகு எச்சில் இலைகளையும் தானே எடுத்து எறிந்து, எச்சிலிடம் பூசி, கைகால்கள் சுத்திசெய்துகொண்டு, சந்தன புஷ்ப தாம்பூலாதிகளும் கொடுத்து, மற்றுமுள்ள குற்றேவல்களும் செய்தார். தாசர் இந்தவேதியர் செய்த பணிவிடைகள் எல்லாம் கண்டு மனமகிழ்ந்து, உமது பெயர் என்னவென்று கேட்க, என்பெயர் விட்டலன் என்றுசொல்லி, உமதுபெண் விவாகத்தில் வயிறார உண்டு என் இளைப்புத் தீர்ந்தேன் என்று சொல்லக் கேட்ட தாசர், மிகவும் அன்போடு, இந்தவேதியருக்கு ஒரு வஸ்திரம் கொடுக்கவேண்டும் என்றுநினைத்திருந்தார். நாலுநாள் கழிந்து, ஐந்தாநாள், வந்தவரெல்லாரும் போய்விட்ட பிறகு, சிறந்த வஸ்திரமொன்றை வருவித்து, விடோபாவுக்குக் கொடுக்கும்பொருட்டு அவரை யழைக்க, மணவேலை முழுதும் நிறைவேற்றின வேதியர் காணப்படாமையால், தாசரானவர் ஆலோசித்து, இங்கு வந்து நமது பெண்ணின் மணவேலை முற்றும் சிரத்தையோடு நிறைவேற்றினவர் ஸ்ரீகண்ணபிரானே யென்று தீர்மானித்துப் பகவானே, இப்படிவந்து நமது வீட்டு வேலைகள் செய்ததனால் நான் அபராதியானேனே என்று இரங்கி, தளர்ச்சியோடு நித்திரை செய்யும்போது, அவரது கனவில் ஸ்ரீபண்டரிநாதன் எழுந்தருளி, இடையில் கையைவைத்துக்கொண்டு நின்று, உனது அன்புக்கு மகிழ்ந்தேன், இந்த உண்மையை உலகத்தாரெல்லாரும் அறியும்படி நான் இவ்விடத்தில் எப்போதும் நிற்பேன் என்று சொல்லித் தமது திருக்கரத்தை இவரது சிரசில் வைத்தருளினர். உடனே தாசர் எழுந்து நோக்குதலும், பகவானானவர் கனவிற் கண்ட நிலை போலவே எதிரே

நிற்கக்கண்டு, வணங்கி வாழ்த்தி ஹரிநாமசங்கீர்த்தநம்செய்து அவர் திருவடியைப் பூஜித்திருந்தார். அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவிட்டல மூர்த்தியை விரும்பி வருஷந்தோறும் பங்குனிமாசம் கிருஷ்ணபக்ஷம் துவிதியை தினத்தில் மஹோற்சவம நடத்தப்பட்டு வருகின்றது என்று சொல்லி, மேலே உத்தவசித்கனர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

நீளோபா பக்தர் சரித்திரம் முற்றிற்று.

---

# சகரு-வது உத்தவசித்கனர் சரித்திரம்.

தாநூர் என்னும் நகரத்தில் தத்துவப்பொருளை முற்று முணர்ந்தவரும் விரக்தியோடுகூடிய மனத்தை யுடையவரும் அநேக நூல்கள் செய்து முடித்தவரும் ஆகிய உத்தவ சித்கனர் என்பவர் ஒருவர் முற்காலத்தில் இருந்தார். இவர் சித்திரை சுக்லப் பிரதமை தினத்தில் புறப்பட்டுப் பேதரி நகரத்தில் வந்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனம் செய்ய, அவ்வூரிலுள்ள பக்தர் முதலான எல்லாரும் கேட்டு மகிழ்ந்து ஆனந்த பரவசராய் இவரை வணங்கி ஸ்ரீ ராம நவமி வரைக்கும் இவ்விடத்தில் எழுந்தருளியிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அவர்கள் பிரார்த்தனையை மறுக்கமாட்டாமல் சம்மதித்து அவ்விடத்தில் தங்கியிருந்தார். ஸ்ரீராமநவமி உற்சவம் நெருங்குதலும் எவ்விடத்திலும் அலங்காரம் செய்து ஸ்ரீராமபிரானை எழுந்தருளப்பண்ணி ஸ்ரீராமசங்கீர்த்தநத்தை அன்போடு செய்து உற்சவதினங்களிலும் நாடோறும் ததியாராதநம் நடத்தி உற்சவம சாத்து செய்யுந் தினத்தில் அநேக வாத்தியங்கள் முழங்கச் செய்து கருடக்கொடி யேந்தி ஹரிநாமசங்கீர்த்தநம் செய்துகொண்டு ஊர்வலம் வந்தார்கள். வரும்போது வழியில் உள்ள ஒரு மசீதில் இருந்த பல துலுக்கர் இவர்கள் வருகிற ஆடம்பரத்தைக் கண்டு இவர்களை வருத்தவேண்டுமென்றெண்ணி ஹரிதாசராகிய வேதியர்மேல் சாணியுண்டைகளை எறிந்து கருடக்கொடியை ஒடித்து வீணை முதலிய வாத்தியங்களையும் அழித்தார்கள். அப்போது தாச ரெல்லாரும் நடுங்கி ஓடி உத்தவசித்கனர் இடத்திற் சென்று நடந்த செய்தி யெல்லாம் சொல்ல, அவர் ஸ்ரீராமபிரான் சந்நிதியை யடைந்து கேசவாதி திருநாமங்களால் ஸ்தோத்திரஞ் செய்து ஸ்ரீஹரிதாசர்கள் உன் திருநாமசங்கீர்த்தனம் செய்வதில் உனக்கு விருப்பமில்லையோ? துருக்கர் செய்யும் இடையூற்றைக் கண்டும் தேவரீர் சும்மா இருந்தால் அவர்கள் விஷ்ணு பக்தர்களை மிகவும் வருத்துவார்களே, அந்தப் பக்தர்கள் வருந்த நேரிடுமானல் உனக்கு பக்தபரிபாலனன் என்னும் திருநாமம் எப்படி நிலைத்திருக்கும் என்று வருத்தத்தோடு சொல்லக் கேட்ட துருக்கர்கள் அவ்விடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த ஸ்ரீராமபிரானை ஒரு மாடத்தில் சேர்த்து அலங்கார முழுதும் கலைத்துக் களித்திருந்தார்கள். இந்தச் செய்தியை ஆஞ்சநேயர் அறிந்து இப்படிப்பட்ட துஷ்டர்களைச் சிக்ஷிக்க

வேண்டுமென் றெண்ணி அவர்களிருந்த மசீதை இடிந்து விழும்படி மோத வேணென்று வரும்போது ஞானவானாகிய ஒரு பகீரானவர், இவர் செய்யப் போகுங் காரியத்தை யறிந்து இவரை வணங்கி எதிரே நின்று, ஓ மஹாநுபாவா, அடியேன் இருக்குமிடம் மாத்திரம் அழியாமல் இருக்கும்படி கிருபைசெய்து மற்றதை உமது இஷ்டம் போலே நாசஞ் செய்யலாம் என்று பிரார்த்திக்க, இவன் பிரார்த்திப்பதைக் கண்ட அந்தத் துருக்கர்கள் இந்தப் பகீருக்குப் பித்தம் பிடித்தது என்று அவமதித்துப்பேச, பகீரானவர், அவர்களை நோக்கி, என் துள்ளுகிறீர்கள்? இன்னும் சற்று நேரத்தில் நீஙகளும் உங்கள் மசீதும் படுகிறபாட்டை நீங்களே பார்க்கப் போகிறீர்கள் என்று சொல்ல, துருக்கர்கள் எங்கள் மசீதை அழிப்பதற்கு இவன் சமர்த்தனுவானு? இவன் அப்பனும் சமர்த்தனுக மாட்டான் என்று இகழ்ந்து சொல்லிக் கொண்டிருக்கும்போது ஆஞ்சேநேயர் கோவத்தோடுவந்து ஒரு கையினல் மசீதை மோதினுர். இவர் கைபடுமுன்னே அந்த மசீதானது மேருமலை இடிந்து விழுந்தாற்போல இடிந்து விழுந்தது; அதிலிருந்த ஐந்நூறு துருக்கர்களும் மடிந்தார்கள். இந்தச் செய்தியை அயலிலிருந்து பார்த்த வேறு சிலதுருக்கர்கள், தம் அரசனிடத்தில் ஓடிச்சொல்ல, அவன் மிகவும் கோபங்கொண்டான். உடனே அவனுக்கு வயிற்றில் பொறுக்கக் கூடாத நோய் உண்டாயிற்று. அந்த நோயைப் பொறுக்காதவனுகிப் பூமியின்மேல் வீழ்ந்து புரண்டு உத்தவ சித்தனர் இடத்தில்வந்து, அன்போடு பணிந்து தோத்திரஞ்செய்து, ஸ்வாமீ! உங்களைத் துன்பப படுத்தினவர்க ளெல்லாரும் மடிந்து போனுர்கள். இப்போது ஆஞ்சநேயரைப் பிரார்த்தித்து என்மீது அவர்க்குக் கிருபையுண்டாம்படி செய்யவேண்டுமென்று வேண்ட, அப்படியே அவரும் ஆஞ்சநேயரைப் பிரார்த்தித்து இவன் வயிற்றிலுண்டான நோயை நீங்கச்செய்தார். அரசனும் தன் அரண்மனையை யடைந்தான். ஹரிதாசராகிய உத்தவ சித்தனர் தாளம், மிருதங்கம் முதலியவை முழங்க, ஹரிநாம சங்கீர்த்தநம் செய்து அந்த ஊரைவலம்வந்து பேரானந்தத்தோடு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே நாபாஜி பக்தர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினுர்.

உந்தவசித்தனர் சரித்திரம் முற்றிற்று.

## சஎ-வது நாபாஜி பக்தர் சரித்திரம்.

காசி க்ஷேத்திரத்தில் ஜ்ஞாந வைராக்கியங்களில் மிகுந்தவராகிய ஆனந்த ஸ்வாமியென்று சொல்லப்பட்டவர் ஒருவ ரிருந்தார். அவர் சீடர் அநந்தாநந்த ஸ்வாமி, அவர் சீடர் போகாரி தாசர், அவர் சீடர்கள் அக்கிரஜி கிலஜி என்பவர்கள். இவ்விருவரில் மூத்தவரான அக்கிரஜி நாள்தோறும் விஷ்ணு பக்தி செய்பவராய் அவரது கல்யாண குணங்களை யெடுத்துப் பேசுவோராய் வைராக்கிய சீலராய்ச், சாந்தி, தயை முதலிய குண கணங்களுக்கு இருப்பிட

மானவராய் இருந்தார். இவர் பிரபோதனி, பத்மஹஸ்தி முதலானோர்க்கு ஸ்ரீ ஹரிபக்தியை போதித்தார். சிரவணம் முதலிய நவவித பக்திகளில் ஒவ்வொன்றை ஒவ்வொருவர்க்குக் கொடுத்து அவர்களை ஈடேற்றினவராயிருக்குமிவர்க்கு ஸ்ரீ லக்ஷ்மீ நாதனாகிய பகவானானவர், தமது சகுண ரூபத்தோடு இவர் நினைத்தபோ தெல்லாம் சேவை சாதித் தருளுவர். இப்படியிருக்குங் காலத்தில், அந்தத் தேசத்தில் மழை யில்லாமல் சிறுமை யுண்டாகியிருந்த துன்பத்தால் உயிர்கள் வருந்தும்போது அவ்வூரிலுள்ள ஒரு குணவதியானவள், தன் குழந்தைக்குச் சோறு கிடைக்காமல், மிகு துயரங்கொண்டு அங்கிருந்த ஒரு நதிக்கரையில் குழந்தையை வைத்துவிட்டு நதியில் விழுந்து இறந்தாள். தனித்திருந்த அந்தக் குழந்தையானது தாயைக் காணாமையாலும் பசி வருத்தத்தாலும் கோவென்று அலறி யழும்போது அங்கே நீராடவந்த அக்கிரஜிதாசர், அந்தக் குழந்தையைக் கண்டு மிகவும் இரக்கமுற்று, அதனருகே போய் ஏனழுகிறாய் என்று கேட்க, அக்குழந்தை நான் என் தாயைச் சோறுகேட்டேன், அவள் என்னைவிட்டு எங்கேயோ போய்விட்டாள் என்று சொல்லக்கேட்ட அக்கிரஜி மிகவும் கருணையுடையவராய் நீராடி மீண்டு அந்தக் குழந்தையை அழைத்து, பயப்படாதே என்று அபயம் கொடுத்ததனால், இந்தக் குழந்தைக்கு அன்றுமுதல் நாபாஜி யென்னும்பெயர் உண்டாயிற்று. அப்படி அந்தக் குழந்தைக்கு நாபாஜி என்னும் பெயர் சூட்டி தமது மடத்துக்கு அழைத்துப்போனார். அவ்விடத்தில் இந்த நாபாஜி யென்பவர் அந்த மடத்தில் வந்து அமுது செய்கிற பெரியோர்களுடைய எச்சிலுண்டு வளர்வாராயினர். அக்கிரஜி தினந்தோறும் செய்கிற தேவதார்ச்சனை முதலியவற்றைப் பார்த்தலாலும், மடத்தின் புறத்திலிருந்து வருகிற பெரியோர்களையெல்லாம் திருவடி வணங்குதலாலும், மடத்தில் நடக்கும் ஸ்ரீபாகவத காலக்ஷேப முதலியவற்றைக் கேட்பதினாலும் இவரது சஞ்சித கர்மங்களெல்லாம் நசித்து மெய்ஞ்ஞான முண்டாகி உலகத்திலுள்ள எல்லாருடைய ஹ்ருதயத்தையும் அறியத்தக்க விவேகியாய், த்ரிகால வர்த்தமானங்களையும் அறிய வல்லவராய், மவுன நிலையை யுடையவரா யிருக்குங் காலத்தில், ஒரு நாள் அக்கிரஜி கங்கையில் நீராடி ஸ்ரீஹரிபூஜைசெய்து ஆராதி சமர்ப்பித்துப் பகவத் சாரணாரவிந்தங்களைத் தாழ்ந்து வணங்கி, நாபாஜியை உள்ளே யழைத்து, ஒருவரையும் உள்ளே விடாமல் இருக்கக் கடவாய் என்று நியமித்து, கதவடைத்து மேலே யொருகம்பளம் போர்த்து மானசபூஜையிற் பொருந்தி ஏகாக்ர சித்தராயிருந்து, ஸ்ரீ ஹரியானவர், வராதிருக்க, இவர் மனம்வருந்தித் தியானித்துத் தியானித்து அயர்ந்திருந்தார். இதனை வெளியிலிருந்த நாபாஜி அறிந்து, ஸ்வாமீ! சமுத்திரத்தில் ஒரு வணிகனுடைய மரக்கலம் முழுகிப் போகா நின்றது; அதை அந்தக் கப்பலுக்கு யஜமானனாகிய வணிகன் கண்டு ஸ்ரீத்வாரகா நிலயனாகிய பகவானை நினைத்து என் கப்பல் முழுகாமல் கிருபை செய்வாயானால் உன் பரம பக்தனாகிய அக்கிரஜிக்கு இந்தக் கப்பலிலுள்ள பொன்னில் ஐந்தி லொருபாகம் கொடுப்பேன், தவறமாட்டேன் என்று பிரா

ர்த்தித்தான். அந்த வணிகனது கப்பலை முழுகிப் போகாமற் செய்யும்பொரு ட்டாகவும் உமக்கு லாபமுண்டாகும் பொருட்டாகவும் பகவானுனவர் அங் கே போயிருக்கிறுர். ஆதலால் நீர் சற்றுநேரம் பகவானை நினையா திருக்கவே ண்டும் என்று சொல்ல, அவ்வாறே அக்கிரஜீயும் பகவானை நினையா திருந் தார். சற்றுநேரம் பொறுத்து நாபாஜி, அக்கிரஜியை யழைத்து, ஸ்ரீ கண்ண பிரான் கலங்காத்து மீண்டுவெந்தான், இனி நீர் அவனைக் குறித்துத் தியானிக்க லாம் என்றுர். இதைக் கேட்டவுடன் அக்கிரஜியும் கண்ணபிரானைத் தியானி க்க, அவரும் பிரத்தியக்ஷமானுர். அப்படிப் பிரத்தியக்ஷமான பகவானுடைய பீதாம்பரம் நனைந்திருக்கக் கண்டு வணங்கித் தோத்திரஞ்செய்து ஸ்ரீ சக்ர பாணியாகிய பகவானே! இந் நேரம் எங்கே போயிருந்தாய் என்று வினவ, பக வானுனவர் கடலில் முழுகும் வணிகன் கப்பலை முழுகாமற் காத்து வந்தேன், அவ் வணிகன் அந்தக்கப்பலிலுள்ள பொருளில் ஐந்தி லொருபாகம் உனக்கு அனுப்புவான், அதைவாங்கி மடத்துக்கு உபயோகிக்கக்கடவாய், உனக்கு மட த்தின் செலவு அதிக மாயிருக்கின்றது என்று சொல்லி இவர் செய்யும் மானசபூஜை முடிந்தவுடன் மறைந்துபோனுர். பிறகு அக்கிரஜியானவர், கத வைத்திறந்து நாபாஜியை உள்ளே யழைத்து, பிரமதேவனுக்கும் தெரிந்து கொள்ள வொண்ணுத செய்தியை நீ எப்படித் தெரிந்துகொண்டாய் என்று கேட்க, நாபாஜியானவர், நகை முகத்தோடு நின்று, ஸ்வாமீ! தினந்தோறும் சாதுக்கள் பிரசாதத்தை உண்டதனுலும் தேவரீர் கிருபாவிசேஷத்தாலும் ஸ்ரீ கண்ணபிரானது செயலை அறிந்தேன் என்று சொல்ல, அக்கிரஜி கருணை கூர்ந்து நாபாஜி முகத்தை நோக்கி, ஸ்ரீஹரியின் கல்யாண குணங்களைப் புகழ் வதிலும் அவரடியார்களைப் புகழ்ந்தால், அந்தச் சக்ரபாணிக்கு மிகவும் திரு வுள்ளம் உவக்கலாகின்றது, இந்த ரகசியார்த்தம் உலகத்தார்க்குத் தெரியாது, நான் உனக்கு இதனை விளங்கச்சொன்னேன், தெரிந்துகொள்வாயாக என்று சொல்ல, நாபாஜி அக்கிரஜியின் திருவடியை வணங்கிப் புகழ்ந்து ஆசாரியர் நியமப்படி பக்த சரித்திரத்தை குவாலியர் பாஷையிலும் ப்ராக்ருதபாஷை யிலும் வழங்கும்படி தினந்தோறும் பிரபந்த ரூபமாக எழுதிக்கொண்டி ருந்தார். இவர் இப்படி எழுதுவதை அந்தத் தேசத்திலுள்ளோர் கேள்விப் பட்டு இவரை வணங்கி இவரிடத்தில் பக்த சரித்திரத்தை சிரவணஞ்செய் தும் மநநஞ்செய்தும் புகழ்ந்தும் இருக்கலானுர்கள் என்று சொல்லி, மேலே நானக்தாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினுர்.

நாபாஜி பக்தர் சரித்திரம் முற்றிற்று.

## சஅ-வது நானக் தாசர் சரித்திரம்.

பஞ்சாப் தேசத்தில் பேரறிவையுடையவரும், வைராக்ய சீலரும், நாள் தோறும் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்வோருமாகிய நானகர் என்னும் பெயருள்ள ஒருவரிருந்தார். இவர் மிகுந்த தநவந்தராகையால், அந்தத் தந

முழுதும் நல்வழியில் செலவுசெய்து, ஸ்ரீகருடத்வஜனுகிய பகவத்பஜனையை இடைவிடாமல் செய்யவுத்தேசித்து ஒரு விஷ்ணு ஆலயங்கட்டினுர். ஆனுல் அது துருக்கதேசமாகையால் அந்தத் துருக்கர் யாவரும் இந்த ஆலயத்தைக் கண்டு பொறுமைகொண்டு தூஷித்துக்கொண்டிருப்பதை நானக் அறிந்து, இவர்கள் துஷ்டர்கள், இவர்கள் தங்கள் அரசனுக்குச் சொல்லி ஆலயத்தை இடிக்கவுஞ் செய்வார்கள், அப்படி அவர்களால் இடிக்கப்படுவதற்கு முன்பு நாமே யிடித்துத் தள்ளுவது நன்மையாகுமென்று ஆலோசித்து, தாம் கட்டுவித்த ஆலயத்தைத் தாமேயிடித்துத் தள்ளினுர். இப்படி யிடித்துத்தள்ளின பிறகு துருக்கருக்குச் சந்தோஷமுண்டாகும்படி ஒருமசீதுகட்டுவிக்க, இந்துக்களெல்லாம இதைக் கண்டு இகழ்ந்து பேசுவதைக் கேட்டவுடனே, அந்த மசீதையும இடித்துத் தள்ளிவிட்டு அளவற்ற கொல்லைகளை உண்டாக்கினுர். இப்படிப்பலவகையாலும் இவர்பொருளை யெல்லாம் நாசம் செய்வதைக்கண்டவரெல்லாரும், மறைவாயிகழ்ந்து பேசினதுமல்லாமல் நேரேயிவரைக்கண்டு நீர் இப்படிச் செய்வதற்குக் காரணம் யாதென்றுகேட்க, இவர் சிலர் சங்கரனையும், சிலர் ப்ரஹ்மாவையும், சிலர் விஷ்ணுவையும், சிலர் சூரியனையும், இன்னும் பல தேவர்களையும் உத்தேசித்து வணங்குகிறுர்கள். அவைகள் யாவும் நல்ல மதங்களே யென்று சம்மதித்து இப்படிச் செய்தேன் என்று சொல்லினுர். இவர் சொன்னதைக் கேட்டவர்கள் நகைத்து, இவரைப் பகீரென்றாகிலும், பைராகி யென்றாகிலும் சொல்லுதற் கிடமில்லை. இவர் சுத்த ஸாத்விக மூர்த்தியா யிருக்கிறுரென்று, எல்லாரும் தமது அரசனிடத்துக்குப் போய், நமது குலத்திற் பிறந்த ஒருவன், இப்படித் திரிவதைக் குறித்து விசாரிக்க வேண்டுமென்று சொல்ல, அரசனும் ஒரு ஏவலாளனையிவரிடத்துக்கு அனுப்பி, குலாசாரத்தினின்றும் வழுவலாகாதென்று வற்புறுத்தும்படி செய்தான். அப்படியே அந்த ஏவலாள் இவரிடத்துக்குப்போய், உம்மை நமது குலாசாரத்துக்கேற்க நடக்கும்படி அரசன் உமக்குச் சொல்ல என்னை யனுப்பினுனென்று சொல்ல, தாசர் அவனை நோக்கி, மண்ணென்றே கலங்கள் பலவாறுற்போலவும், பொன்னென்றே ஆபரணங்கள் பலவாறுற்போலவும், முதற்காரணராகிய திருமாலொருவரே பல மதங்களுக்கேற்கப் பலதெய்வங்களாய் விளங்குகிறுர் என்கிற வுண்மையை யறிந்து நான் அவரைப் பரம்பொருளாயெண்ணி அவரை யிடைவிடாமல் பஜித்துக்கொண்டிருக்கிறேன் என்று ஒரு பாட்டை யெழுதி அந்த ஏவலாளன் கையிற்கொடுக்க, அவன் கொண்டுபோய் அரசனிடத்தில் கொடுத்தான். அரசன் அந்தப் பாட்டைப் படித்துப் பார்த்து மிகவும் சந்தோஷித்து இவரது மெய்ந்நிலையைச் சோதித்தறியவேண்டுமென்றெண்ணி, வெளிக்கு மிகவும் கோபங்கொண்டவன்போலத் தோன்றி, இந்த நாட்டுக்கு அரசனுயிருக்கிற என் வார்த்தையை இகழ்ந்தான், ஆகையால் அந்த நானகனைக் கைப்பிடியாய்க் கொண்டுவாருங்கள் என்று நியமிக்கவே, ஐஞ்ஞூறு பட்டாணித் துருக்கர் ஒருங்கு கூடிப் புறப்பட்டு ஆயுதபாணிகளாய்த் தாசரிருக்குமிடத்துக்கு வந்து வீட்டுக்குள்ளே நுழைய

வுத்தேசிக்கையில், நாணகர் அறிந்து ஸ்ரீபாண்டுரங்கப்பெருமானை நினைத்தார். உடனே பகவான் நியமநத்தால் பதினாயிரம் போர் வீரர்கள் அவ்விடத்தில் வந்து துருக்கர் ஐஞ்ஞூறு பேரும் மனம் கலங்கி யோடும்படி அடித்தார்கள். அவர்கள் ஓடிப்போய் அரசனிடத்திற்சொல்ல, அரசன் அஷ்ட சித்திகளும் பெற்றிருப்பவராகிய தாசரை இந்தமூடர்கள் சொன்ன சொல்லைக்கேட்டு வருத்தினேன் என்று அநுதபித்து, உடனேவந்து நாணக்தாசரைவணங்கி, ஸ்வாமீ! பரமசாதுவாயிருக்கிற தேவரீரை அடியேன் அறிவின்மையால் துன்பப்படுத்தினேன், ஆயினும் அந்த அபராதத்தை க்ஷமித்து அடியேனைக் காத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்து இவரிடத்தில் விடைபெற்றுச்சென்றான். இந்தச் செய்தியை ஊரரெல்லாரும் அறிந்துவந்து பலவகைப் பொருள்களையும் சமர்ப்பித்து இவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. இவர் இவ்வழியாய் வருகிற பொருள் முழுதும் தம்மிடத்துக்கு வருகிற சாது ஜநங்களுக்கு அநநதாநம் செய்யும் விஷயத்தில் உபயோகித்து வந்தார். இவர் மடத்தில சேர்ந்திருக்கிற இவர் சீடர் பலருள்ளும் சூத்திரா, மர்தனு என்னும் இரண்டு சீடர்கள் இவரிடத்தில் மிகவும் அன்பு பாராட்டித் தமது உடல் பொருள் ஆவி இம்மூன்றையும் சமர்ப்பணஞ்செய்து, ப்ரபஞ்சப்பற்று முழுதும் விட்டவராய், இவரை வழிபடுதலே பரமப்ரயோஜநமாகிய மோக்ஷத்துக் கேதுவென்று கடைப்பிடித்து, இவரது கருணைக்குப் பாத்திரராகி, குருகுலவாசம் செய்துகொண்டிருந்தார்கள். இப்படி யிருக்குங்காலத்தில், ஒருநாள் நாணகர் சூத்திராவை மடத்தில் வைத்து, மர்தனுவை யழைத்துக்கொண்டு, ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணையோடு வெளிப்பட்டார். வெளிப்பட்டவர், மக்காவிலுள்ள துருக்கர் அவ்விடத்திலுள்ள க்ருஷ்ண விக்ரஹத்தைப் பேர்த்துக் குப்புறக்கிடத்தி அதின்மேல் மாட்டெலும்புகளைக் குவித்துவைத்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு, அந்தக் கண்ணபிரானைச் சேவிக்க வேண்டுமென்று விரும்பி, மக்காவுக்குப் பிரயாணப்பட்டுப் போகும்வழியில் ஒரு கான் யாறுனது மிகவும் பெருகிக் குறுக்கே ஓடுவதைக் கண்டு, அலக்நிரஞ்சநம் என்று ஒருதரம் சொல்லி நீர்மேல் நடந்துபோனார். கூட வந்த சீடர், நீரிலிறங்க அஞ்சிக் கரைமேல் நின்றுவிட்டார். அப்படி நின்றவர் குருநாதரை அஞ்சலித்து, ஸ்வாமீ! உம்மோடுகூட நீரிலிறங்க அஞ்சி நின்றுவிட்டேன், அடியேன் உம்மைவந்துசேரும்படியான ஒரு உபாயம் சொல்லியருள வேண்டும் என்றார். அப்போது நாணகர் தமதுசீடரை நோக்கி நீ குருத்தியாநம் செய்துகொண்டு நீரில் இறங்கினால் ஒரு தீமையுமில்லாமல் என்னோடு வரலாமென்றார். அதைக்கேட்ட சீடர் குருத்தியாநம் செய்து நீரிலிறங்க, நீரானது இவரது இடுப்பளவாயிருந்தது. ஆற்றின் நடுவே நீரானது கணைக்காலளவாயிருக்க நின்ற குருநாதரைப் பார்த்து, இவரும், நாம் நமது குருநாதர் போல அலக்நிரஞ்சநம் என்று சொல்லாமையாலல்லவோ நமக்கு இடையளவாயிருக்கின்றது, நாமும் அலக் நிரஞ்சநமென்று சொல்லுவோமானால் நமக்கும் கணைக்காலளவாகவேயிருக்கும் என்றுநினைத்து அலக்நிரஞ்சநம் என்று

சொன்னார்; சொன்னவுடனே, நீரானது இவர்க்குக் கழுத்தளவாய்விட்டது. அப்போது இவர் அஞ்சி, குருநாதராகிய நானகரை நோக்கி அஞ்சலித்து, ஸ்வாமீ! ஆற்றில் அமிழ்ந்துபோகின்றேன் என்று கூவினார். நானகர் திரும்பிப்பார்த்து நீ குருத்தியானத்தை யேன்விட்டாயென்று சொல்ல, மறுபடியும் இவர் குருத்தியானம் செய்தவுடனே, நீரானது முன்போல இடுப்பளவாயிருக்க, குருநாதரோடுகூடவே போய்க் கரையேறினார். அப்போது நானகர் இவரை நோக்கிச் சீடரானவர்கள் தமது குருநாதர்கள் சொல்லும் வழியில் நடந்தால் நன்மையுண்டாகும், அப்படி நடவாமற் போனால் தீமையுண்டாகும் என்று சொன்னார். அதைக்கேட்ட மர்தானாவானவர் அப்படியே இனிமேல் சற்குரு தியானத்தை மறவேன் என்று சொல்லி நானகருடைய திருவடியை வணங்கி நின்றார். பிறகு குருவும் சீடரும் ஆகிய இருவரும் மக்காவுக் கருகேபோய்ச் சேர்ந்தவுடனே, அந்த மக்காவிலுள்ளவர்கள் மாட்டிறைச்சியும் சோறும் விற்கும் வழக்கத்தையும், இந்துக்கள் வந்தால் அவர்களைத் தமது ஊரில் பிரவேசிக்காமற் செய்வதையும், தப்பி வந்தால் கொலை செய்வதுமாகிய வழக்கத்தையும் நானகர் அறிந்து, அந்த மக்காவிலிருப்பவர்களுடைய கண்ணுக்குத் தோன்றாமல் தம்சீடரும் தாமுமாக ஊருக்குள் போய், ஸ்ரீ கண்ணபிரானுடைய கோயிலிற் பிரவேசித்தார்கள். அப்போது அங்குள்ள முஜாவர் இவர்களைப்பார்த்து, நீங்கள் யார், இவ்விடத்துக்கு எப்படி வந்தீர்களென்று கேட்க, நானகர் அந்த முஜாவரை நோக்கி, உத்பத்தி லயங்களுக்குக் காரணமாகி, சிற்பரஞ்சோதியாகி, திரிகுணாதீதமாகி, சர்வவியாபகமாகி, நிராமயமாகி, தற்பரமாகி நிற்பது எந்தப் பொருளோ, அந்தப் பொருளே நான், உலகத்திலுள்ள அடியார்களைக் காத்தருளும்பொருட்டு இந்த ரூபங் கொண்டு வந்தேன் என்று சொன்னார். அதைக்கேட்ட முஜாவர், நீர் சொல்லுவது உண்மையென்பதை யறியும்படி பரீக்ஷிக்க வேண்டியதாயிருக்கின்றது என்றார் அதற்கு நானகர் முஜாவரை நோக்கி, உமது இஷ்டம்போலப் பரீக்ஷிக்கலாமென்றார். முஜாவர் பழமையாயிருந்த இந்துக்களுடைய விக்ரஹத்தை இவ்வூரார் மண்ணிற் புதைத்திருக்கிறார்கள். அந்த விக்ரஹம் முன்போல வந்து கோயிலில் நிற்கும்படி செய்வீரானால் உமது சொல்லை நம்பலாமென்றார். அதைக்கேட்ட நானகர் பக்தபராதீனராகிய ஸ்ரீகண்ணபிரானைத் தியானித்து, ஸ்வாமீ! அடியேன் சொன்னசொல் வீணாகாமல் இந்தத் துருக்கர் பார்க்கும்படி தேவரீர் வந்து கோயிலில் முன்போலவே நின்று சேவைசாதிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, த்ரிவிக்ரமராகிய பகவானானவர் இவருடைய ப்ரார்த்தனைக்குத் திருவுளங்கனிந்து, இவர் விரும்பினபடியே தமது திருவாழிதிருச்சங்கங்களோடு எழுந்தருளினார்; எழுந்தருளின பகவானை நானகர் பலவகையாய்த் தோத்திரம்பண்ணி வணங்கி நிற்கக் கண்ட முஜாவர் அஞ்சி, நானகருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கித் தோத்திரம்பண்ணி, நீர் உண்மையான தெய்வமேயென்பதற்குச் சந்தேஹமில்லையென்று மிகவும் புகழ்ந்து கொண்டாடினார். பிறகு அங்கிருந்து புறப்பட்டு மலைச்சாரல்க

ளெல்லாம் கடந்து ஒரு நதியினருகே வந்தார். அவ்விடத்தில் ஒரு அரசன் தன்சேனைகளோடும் வந்தவன் அந்த நதிப்பெருக்கைக்கண்டு அஞ்சி, அதைக் கடந்து போகமாட்டாமல் அந்த நதிக்கரையில் நின்றான். அவன் இந்த நான கரைக் கண்டமாத்திரத்தில், இவரது திருவடியை வணங்கி, ஸ்வாமீ! இந்த நதியைக் கடந்து போகும்படியான ஒரு உபாயம் சொல்லவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவர் காயிதத்தால் ஒரு தொன்னை செய்து அதை அரசன் கை யிற் கொடுத்து, இந்தத் தொன்னையின்மேல் நீ உன் பரிவாரத்தோடும் ஏறிக் கொண்டு நிர்ப்பயமாய் ஆற்றைக் கடக்கலாம் என்று சொல்லித் தாம் தமது சீடரோடும் விரைவாக நதியைக் கடந்து வந்து வீற்றிருந்தார். அரசன் இவர் தந்த தொன்னையின்மேல் தன் பரிவாரத்தோடும் ஏற, அது புஷ்பகவிமாநம் போல இடங்கொடுத்து வந்தது, நதிக்கரையிற் சென்று அரசன் தனக்குமுன் னேவந்து நதிக்கரையில் வீற்றிருக்கிற நானகரை அடிவணங்கி, ஸ்வாமீ! தேவரீர் சாக்ஷாத் பகவதம்ஸமென்பதற்குச் சந்தேஹமில்லை, அடியேனுக்கு ஸ்ரீமந் நாராயணனைக் காணவேண்டுமென்கிற விருப்பம அதிகரித்திருக்கின் றது; ஆகையால், அடியேனுக்குப் பகவானுடைய சேவை கிடைக்கும்படி செய்தருளவேண்டும் என்று ப்ரார்த்தித்தான். அதற்கு நானகர் அரசனே! அந்தப் பகவத்ஸேவையானது சற்குருவின் உபதேசமுகத்தால்கிடைக்குமே யன்றி வேறுவகையால் கிடைக்கமாட்டாதென்றார். அரசனும்நல்லது என்று வணங்கித் தன் ஊருக்குப் போய்விட்டான். பிறகு, நானகர் தமது சீடரோ டும் புநாநகரத்துக்குப் போனார். போய் அந்தப் புநாநகரத்தில் பெருந் தவத் தையுடைய கோரக்கர் எழுந்தருளக் கண்டு, வணங்குதலும், கோரக்கர் இந்த நானகரை நோக்கி, நானகரே! உமது மஹிமை இந்த வுலகமெல் லாம் பரவி விளங்குகின்றது, இப்பொழுது ஹரித்வாரத்தில் நான்கு லக்ஷம் பேர் ஹரிதாசர்கள் வந்து கூடியிருக்கிறார்கள், அவர்களெல்லாருக்கும் அமு தளித்தால் நன்மையாகும் என்றுசொல்ல, நானகர், அவரை நோக்கி, ஸ்வாமீ, நீர் சொன்னபடியே செய்கிறேன், நீர் முன்னே போய் அமுது செய்ய வரவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லிவையும் என்று சொல்ல, அப்படியே, கோரக்கர் அவர்களுக்குச் சொல்லப் புறப்பட்டு ஹரித்வாரத்து க்குப் போய்க் கொண்டிருக்கும்போது, இந்த நானகர் அவருக்கு முன்னே ஹரித்வாரத்தை யடைந்து, அங்கிருந்த நான்கு லக்ஷம் ஹரிதாசர்களுக்கும அமுதளித்து, அவர்கள் உண்டு மகிழ்ந்து நானகரைப் புகழ்ந்த பிறகு, ஆகாச மார்க்கமாய்ப் போன கோரக்கர்போய், அந்த ஹரிதாசர்களை நோக்கி, இன்று நானகர் உங்களுக் கெல்லாம் அமுதளிப்பதாக உங்களுக்குச் சொல்லச் சொ ன்னார் என்று சொல்லுதலும், அவர்கள் கோரக்கரை நோக்கி, நானகர் இங்கு வந்து எங்களுக் கெல்லாம் அமுத ளித்து எங்களை மகிழ்வித்து இப்போது தான் போனார் என்றார்கள். அதுகேட்ட கோரக்கர், மிகவும் வியந்து, நானக ரைப்புகழ்ந்துகொண்டிருக்கும்போது, நானகரும்வந்து கோரக்கரைவணங்கி நின்றார். அப்போது கோரக்கர் நானகரைத் தழுவிக்கொண்டு, நான் ஆகாச

மார்க்கமாய் வந்துகொண்டிருக்க, நீர் சூக்ஷ்மரூபங்கொண்டு எனக்கு முன்னேவந்து, ஹரிதாசர்களுக்கெல்லாம் அமுதளித்து, அவர்களை மகிழ்வித்தீர்; உம்மைப் போலப் பகவத்பக்தர் இவ்வுலகில் ஒருவருமில்லையென்று சொல்லி, மனமகிழ்ந்து ஆகாச மார்க்கமாய்ப் போய்விட்டார். நாணகரும் தமது மடத்தை யடைந்து, சிஷ்யவர்க்கங்களோடுகூடி, ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே பிரேமாபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

நாணக் தாசர் சரித்திரம் முற்றிற்று.

## சகூ-வது பிரேமாபாயி சரித்திரம்.

---

மஹா ப்ரபாவமுள்ள காசீக்ஷேத்ரத்தில் பிரேமாபாயி என்றொரு அம்மங்கவியார் இருந்தார். இவர் சாதுக்களிடத்தில் அன்பு மிக்கவரும், ஸ்ரீபாகவத புராண சிரவணத்தில் விருப்பமுள்ளவரும், ஸ்ரீஹரிநாமஸ்மரணையை மறவாதவரும், எல்லாச் ஜீவர்கள்மேலும் அருளுடையவரும் ஆகியிருந்தார். இவர் நாள்தோறும் கங்கையில் நீராடிவந்து, தம்மிடத்திலுள்ள ஸ்ரீக்ருஷ்ண விக்ரஹத்தை அர்ச்சித்தே தத்தி வழிபட்டு, ஆநந்தபாஷ்பம் துளிக்கின்ற கண்களையுடையவராய்ப் பரவசப்பட்டிருப்பார். இப்படியிருக்கிற இவர் வீட்டிற்கு ஒருநாள் சில சாதுஸஜ்ஜநங்கள் வந்தார்கள். அவர்களை வணங்கி, ஆசநந்தந்து, இவர்களுக்கு அமுதளிக்கும் வேலையிற் பிரவேசித்தால் இன்று ஸ்ரீபாகவத சிரவண மில்லாமற் போகின்றது, இவர்களைப் பசித்திருக்கவிட்டுக் காலக்ஷேபத்துக்குப் போனால், பாகவதர்களுக்கு அமுதளிக்காத அபராதம்நேரிடுகின்றது, இதற்கு என்ன செய்வோமென்று ஆலோசித்து, தமது பத்து வயதுள்ள மகனை நோக்கி, நீ இன்றுபோய்ப் பாகவதம்கேட்டு வந்து, நடந்த கதையை எனக்குச் சொல்லக்கடவையென்று அனுப்பிவிட்டு, ஸ்ரீஹரிநாமங்கள் பலவற்றையுஞ் சொல்லிக்கொண்டே நீராடிவந்து, சமையல் செய்து ஸாதுக்களைப் பாதபூஜைசெய்து, அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்து, பிறகு மிகுந்த உபசாரத்தோடு அமுது செய்வித்து, கால் கைகள் சுத்திசெய்ய நீர் தந்து, புஷ்ப சந்தன தாம்பூலங்கள் கொடுத்து, அதன் பிறகு ஸ்ரீபாகவத காலக்ஷேபத்துக்குப் போய்வந்த தமது புதல்வனோடிருந்துண்டு, மகனை நோக்கி, அப்பா, நீகேட்டுவந்த ஸ்ரீபாகவதகதையை எனக்குச் சொல்லென்று கேட்க, அவனும் தான் அன்று கேட்டு வந்த உலூகலபந்தந சரித்திரத்தைச் சொல்லக் கேட்டு, அந்தச் சரித்திரத்தின் முடிவில், ஸ்ரீ கண்ணபிரான், தாயாகிய யசோதைப்பிராட்டி உரலோடு சேர்த்துக்கட்ட அந்தக்கட்டை யவிழ்த்துக்கொள்ளமாட்டாமல் கண்களில் நீர்பெருக்கி, அழுது கொண்டிருந்தான் என்பதைக் குறித்து, மிகவும் மனம் வருந்தி நான்போய் அந்தக்கட்டை அவிழ்த்துவிட்டு வருகிறேனென்று சொல்லிப் புறப்பட்டு

க் கோகுலத்துக்குப் போகும்போது, வழியில் ப்ராணனை விட்டுப் பரமதாம த்தை யடைந்தார். இந்தச் செய்தியை வந்திருந்த சாதுக்கள் கேள்விப் பட்டு ஆச்சரியமடைந்து, இவர் அந்தக்கண்ணன் விஷயத்தில் தாயினும் மிகு ந்த அன்புள்ளவராய்ப் போய் உயிர் நீங்கினு ரல்லவாவென்று வியந்தார்கள். அந்தச் சமயத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பிறகு புதல்வன் இவ ருக்குச் செய்யவேண்டிய கர்மங்களையெல்லாம் கிரமமாகச் செய்து, தானும் விஷ்ணு பக்தியுடையவனாய், ஹரிதாசன் என்னும் பெயர் பெற்று ஸ்ரீ ஹரி நாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிதுவாழ்ந்திருந்தான் என்றுசொல்லி, மேலே சிளாபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பிரேமாபாயி சரித்திரம் முற்றிற்று.

## ருO-வது சிளாபாயி சரித்திரம்.

முற்காலத்தில் ஒரு அரசனுக்கு ஒரு புதல்வியார் பிறந்தார்; அவருக்கு ச்சிளாபாயியென்று பெயரிட்டு, கல்வி கற்கும வயது வந்தவுடனே ஒரு உபா த்தியாயரிடத்தில் விட்டுக் கல்வி கற்பிக்கும்படி சொல்ல, அந்த வுபாத்தியாய ரும்அப்படியே கல்வி கற்பித்துவருங்காலையில்,அரசனுகிய தமது தந்தை சாள க்ராம பூஜை செய்வதைக் கண்ட இவர், உபாத்தியாயரை நோக்கி, ஐயரே, எனக்குச் சாளக்ராம பூஜை செய்யவேண்டு மென்கிற விருப்பம அதிகரித்தி ருக்கின்றது, ஆகையால் திநந்தோறும பூஜை செய்வதற்கு ஒரு சாளக்ராமம் சம்பாதித்துக் கொடுக்கவேண்டு மென்றார். உபாத்தியாயர் இவர்க்கு இந்தச் சிறு வயதில் இந்தப்புத்தி யுண்டானதைக்குறித்து ஆச்சரியமடைந்து, ஒரு கருநிறங் கொண்ட உருள் கல்லை இவர் கையிற்கொடுத்து, இதைப் பூஜித்து வாவென்று சொல்ல, அதை மிகவும் அன்போடு வாங்கிவந்து தன்னிடத்தில் வைத்துக்கொண்டு, திநந்தோறும் உதயத்திலெழுந்து நீராடிவந்து,தமது தந் தைபோலத் தாமும் சாளக்ராம பூஜையை மந்திரமில்லாமற் செய்துவந்தார். இவருடைய மனவுறுதியை ஸ்ரீபகவானவர் அறிந்து,அந்தக்கல்லிலே ஸாந் நித்யஞ் செய்திருந்து, இவர் செய்கிற நைவேத்யங்களை அன்புடனே யேற்று க்கொண்டார். இவர் திநந்தோறும் சாளக்ராம பூஜைசெய்கிறதைக் கண்ட தாய் தந்தையர்கள், இது ஒரு விளையாட்டென்றிருந்தார்கள். இப்படியிருக் குங்காலத்தில், இவர்க்குத் தகுதியான பருவம் வந்ததைக்கண்டு, இவரைத் தமது குலத்தானுகிய ஒரு ராஜ குமாரனுக்கு மண முடித்துக் கொடுத்தார் கள். அவன் இவரை யழைத்துக்கொண்டு தன் ஊருக்குப் போகும் வழியில் இவர் தமது பூஜைப் பெட்டியிலிருக்கிற சாளக்ராமத்தை யெடுத்து வைத்து ப்பூஜை செய்யக்கண்ட இவரது கணவன், இது என்னவென்று கேட்க, இது என் குலவொழுக்கமென்று சொல்ல, அவன் இவள் இவ்வயதில் பூஜைசெய்ய த்தகுந்தவளோ வென்று இவர்க்குத் தெரியாமல் அந்தப் பூஜைப் பெட்டி

யை யெடுத்து நதியிலெறிந்துவிட்டான். மறுநாள் உதயத்தில் இவர் எழுந்து நீராடிவந்து, பூஜைப் பெட்டியை வைத்த இடத்திற் காணாமையால் மிகவும் துக்கித்து, ஓ பகவானே! நான் உன் ஸ்வரூபமான சாளக்ராமத்தைப் பூஜை செய்யாமல் உண்ணேன் என்று சொல்லிப் புலம்பும்போது, மாமனும் மாமியும்வந்து எவ்வளவு சமாதானம் செய்தாலும் கேளாமல் நாலுநாளளவும் உபவாசமாயிருந்தார். ஐந்தாநாள் விடியற்காலத்தில் ஸ்ரீகண்ணபிரான் இவர் மனநிலையை யறிந்து, இவர்க்குக் கல்வி கற்பிக்கிற உபாத்தியாயர்போல இவருடைய கனவில்வந்து, பூஜைப்பெட்டியைக் கையிற் கொடுத்துவிட்டுப்போக இவர் விழித்துப்பார்த்துத் தமது கையில் பூஜைப் பெட்டி யிருக்கக் கண்டு, போய் நீராடிவந்து, பூஜை செய்துகொண்டிருப்பதை இவர் கணவன் கண்டு, நான்பூஜைப் பெட்டியை நீரி லெறிந்துவிட்டேன், அதை யாரெடுத்து வந்து இவர்க்குக் கொடுத்தார்களென்று ஆச்சரியப்பட்டு, இவர் மன நிலையைக் கண்டு, ஸ்ரீகண்ணபிரான் கொண்டுவந்து கொடுத்திருக்கலாம் என்று துணிந்து, அவனும் விஷ்ணு பக்தியிற் சிறந்த ஹரிதாசனாகிச் சிளாபாயியாரோடு கூடி வாழ்ந்திருந்தானென்று சொல்லி, மேலே சமர்த்தராமதாச சுவாமிகள் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

சிளாபாயி சரித்திரம் முற்றிற்று.

## ௫௧-வது சமர்த்தராமதாசசுவாமிகள் சரித்திரம்.

மஹாமஹிமையுள்ள கங்காநதிக்கு அருகே கோசு தூரத்தில் சாம்பு என்னும் ஊரில், கருணிகர் குலத்தில் அவதரித்தவரும், இல்லற வாழ்க்கையில் அமைந்திருப்பவரும், பரமார்த்தத்தைச் சாதிக்கும்படியான துணிவுள்ளவரும், சதாகாலமும் சாதுசேவை செய்பவரும், சதுர்வேத பாரங்கதரான ப்ராம்மணகுல திலகருமாகிய சூரியாஜி பண்டிதர் என்பவர் ஒருவரிருந்தார். இவர் தமது தர்மபத்தினியும், பதிவ்ரதாசிரோமணியுமாகிய ரேணுபாயி என்பவரோடுகூடி, அந்யோந்யமாய் இனிது வாழ்ந்திருக்குங் காலத்தில், இவ்விருவரும் சூரியோதயத்துக்கு முன்னே யெழுந்திருந்து, நீராடி, சூரியபகவானைக் குறித்து, ஷோடசோபசாரங்களுஞ்செய்து, ஆதித்யஹ்ருதய பாராயணம் செய்து, மனவொருமைப்பாட்டோடிருந்து, சூரியபகவானுடைய திருநாமங்களை ஆயிரம் உருப்போட்டு வருவார். இந்தப்ரகாரம் பன்னிரண்டு வருடம் நியமமாய்ச் சூரியநாராயண பூஜையை நடத்தி வரும்போது, சூரியநாராயணர் இவர்களுடைய பக்திக்கு மகிழ்ந்து, இவர்க்கு ப்ரத்யக்ஷமானார். ஆனவுடனே, பண்டிதர் அன்போடு வணங்கி, கைகுவித்து அஞ்சலி செய்து, தோத்திரம் செய்துநின்றார். அப்போது சூரியபகவான் பண்டிதனை நோக்கி, உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளக் கடவாய் என்றார். அப்போது பண்டிதர், ஸ்வாமீ, தேவரீருடைய தரிசனத்தினால் க்ருதார்த்த

ருனேன். என் மனைவியானவள் புத்திரப்பேறில்லாமல் மனம் வருந்துகிறாள், அவள் வயிற்றில் புதல்வருண்டாகும்படி க்ருபை செய்யவேண்டும் என்று ப்ரார்த்திக்கும் சமயத்தில், ரேணுபாயியும் வந்து வணங்கினள். அப்போது சூரியநாராயணர் இவர்களை நோக்கி, உங்களுக்கு இரண்டு புத்திரர்கள் பிறப்பார்கள், அவ்விருவரில் மூத்தவன் எனது அமிசமாயிருப்பான், இளையவன் மாருதியின் அமிசமாயிருப்பான், அன்றியும் மூத்தவன் இல்லற தர்மத்தை மேற்கொண்டு வழுவாமல் நடத்தி வருவான், இளையவன் வைராக்கிய சீலனாய், பரம்பொருளை யடைய முயற்சி செய்துகொண்டிருப்பான்; இவனை, மேலான ஞானவானென்று யாவரும் புகழ்வார்கள் என்று சொல்லிப் போய்விட்டார். இவரும் முன்போலவே பூஜையை நடத்தி வந்து, ஏழு நாள் ரதஸப்தமி யுத்ஸவமும் செய்து, ஆதித்ய வாரத்தில் வேதியர்க்கு அமுதளித்து மகிழ்வித்தார். முன்னே சூரியபகவான் கொடுத்தருளின வர பலத்தால் ரேணுபாயி வயிற்றில் கருத்தரித்து, பத்து மாதங்கள் நிரம்பினவுடனே நல்லநாளில் சுபமுகூர்த்தத்தில் ஒரு புதல்வனை யீன்றாள். தந்தையானவர் அந்தக் குழந்தைக்கு ஜாதகர்மங்கள் யாவுங் கிரமமாய் நடத்தி, கங்காதரர் என்று நாமகரணமுஞ் செய்து அன்போடு வளர்த்து, ஏழு வருடம் நிறைந்தவுடனே, உபநயனம் செய்வித்து, பிறகு கல்வி கற்பித்து, தகுதியான வயதுண்டான பிறகு மண முடித்துவைத்தார். அதின் பிறகு, ரேணுபாயியார் உத்தம தினத்தில் மற்றொரு புதல்வனைப் பெற்று, அந்தப் புதல்வனுக்கு நாரணன் என்று பெயரிட்டார். இந்த இளைய குழந்தைக்கு ஜநந காலத்திலேயே கொஞ்சம் வாலிருந்ததைக் கண்ட தந்தை தாயர்கள், சூரியநாராயணர் சொன்னபடியே இவன் மாருதி அமிசம் என்பதற்கு அடையாளமாகக் கொஞ்சம் வாலும் இருக்கின்றது என்று பேசிக்கொண்டு, இந்தச் செய்தியை வெளிப்படுத்தாமல் குழந்தையை அன்போடு பாதுகாத்து வந்தார்கள். இந்தச் சிறுவனானவன் சற்றுநேரமாயினும் வீட்டில் தங்கியிருக்காமல் வெளியே போய்த் திரிந்து வருவதைக் கண்ட தாயானவர், அப்பா குழந்தாய், நீ அடிக்கடி வெளியே போனால், பூச்சாண்டி உன்னைப் பிடித்துக்கொண்டு போவான் என்று பயமுறுத்தினர். அதைக் கேட்ட சிறுவன், பூச்சாண்டி யென்னிடத்தில் வந்தால் அவனை ஒரே அறையால் கொன்றுவிடுவேனென்று சொல்ல, தாயானவர் நகைத்து மார்போடணைத்து முத்தமிட்டுக்கொண்டார். இப்படி அடிக்கடி வெளியே போவதும், வருவதும், தாயார் அச்சுறுத்தினால் அவர் மனமகிழும்படியான மழலைச் சொற்களால் மகிழ்விப்பதுமாய், ஐந்து வயது நிரம்புமளவும் வளர்ந்து, கல்வி கற்கத்தொடங்கி ஒருவருட காலத்தில் சகல கலைகளையும் கற்று வல்லவரானார். அதின் பிறகு ஏழாம் வயது நிரம்பினவுடனே உபநயநம் செய்துவைத்தார்கள். இளைய புதல்வர் இப்படி யிருக்க, மூத்தபுதல்வர் மிகவும் விவேகியாய் இல்லறத்தை நடத்திக்கொண்டு வந்ததுமல்லாமல் நித்யகர்மம், வேதாத்யயநம், ஹரிபூஜை, ஹரிநாமஸங்கீர்த்தநம் முதலியவற்றையும் குறைவற நடத்திவந்தார்; இதுவுமல்லாமல், தந்தை

தாயாருடைய ஏவற் பணிவிடைகளும் சிரத்தையோடு செய்து வந்தார். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள், அரசமரத்தினடியிலிருந்து ஸ்ரீராமநாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கும்போது, ஸ்ரீராமபிரானனவர் சர்வாபரண பூஷிதராய், ஸ்ரீஜாநகீ ஸமேதராய், கோதண்ட பாணியாய், இளைய பெருமாளும் அநுமானும் தொடர்ந்து வர, இவர்க்கெதிரே யெழுந்தருளினார்; எழுந்தருளுதலும், இந்தக் கங்காதரர் கண்டு களித்து, அன்போடு வணங்கித் தோத்திரம் செய்து, உடல் பூரித்து, ஆநந்தபாஷ்பத்தைக் கண்கள் பொழிய நின்றார்; அப்படி நின்றவரை ஸ்ரீராமபிரான், குளிரக் கடாக்ஷித்து, மாருதியை நோக்கி, இவன் என்னை இடையறாமல் ஸ்மரித்துக்கொண்டிருந்ததனால், இவனுக்கு ராமிராம தாசன் என்று பெயர் கொடுத்தேன் என்று சொல்லி அபயந் தந்துபோய்விட்டார். அதின்பிறகு இவர் வந்து வீடுசேர்ந்தவுடனே, தந்தையானவர், அப்பா, இந்நேரம் என்ன செய்தாயென்று கேட்க, இவர் நடந்த செய்தியெல்லாம் சொல்ல, தந்தையானவர் இவரை மார்போடணைத்துக்கொண்டார். பிறகு தந்தையார் மனமகிழும்படி, "பக்திரஸம" என்னும் கிரந்தத்தைச் செய்து முடித்து, அப்போது நேரிட்ட ஸ்ரீராமநவமியுத்ஸவத்தையும் அதிக வைபவமாய் நடத்தி, ஒன்பது நாளும் ப்ராஹ்மண போஜநம் நடத்தி, பத்தாம் நாள் ஊர்வலம் வந்து உத்ஸவத்தைச் சாத்துசெய்து வீடு வந்து சேர்ந்து, பகவத் தியானபரரா யிருந்தார்; இவர் இப்படியிருக்க, இவர்க்கிளையவராகிய நாரணர், மரங்களின்மேலேறித் தொங்குதல் முதலிய செய்கைகளை மேற்கொண்டும் பற்பல விளையாடலைச் செய்துகொண்டும் இருந்தார். இப்படியிருப்பதைத் தாயார் அறிந்து, மைந்தனே, நீயிப்படித் திரிவது நன்றல்ல, தநதான்யங்களை முயன்று சமபாதித்தா லல்லவோ உனக்கு மணமுடித்துவைக்கலாம் என்று சொல்லக் கேட்ட இவர், மறுநாள் சூரியோதயத்துக்கு முன்னே யெழுந்து, ஊருக்கருகே யிருக்கிற நெற் களத்திற்குப் போய், அவ்விடத்தில் நெருங்கியிருக்கிற நெற்பொதிகளிலொன்றைத் தூக்கிக்கொண்டு, வாயுவேகமா யோடி வந்து, தமது வீட்டுத் திண்ணைமேல் வைத்து, தாயாரை யழைத்து, எனக்குக் கட்டளையிட்ட காரியத்தைச் செய்துவிட்டேன் என்றார். இப்படி இவர் தாயாரிடத்தில் வந்து சொல்வதற்கு முன்பே, குடியானவன் ஓடி வந்து, இவருடைய தாயை நோக்கி, உன் புதல்வன் என்னுடைய நெற்பொதியைத் தன் வலிமையால் தானொருவனே யெடுத்துக்கொண்டு வந்தான், பலசாலிகளான இருவர் தூக்கக்கூடாத நெற்பொதியை இவன் ஒருவனே தூக்கிக்கொண்டு வந்தான், இவன் ஒரு அவதாரபுருஷனாயிருக்கலாம் என்றான். இப்படிச் சொன்ன குடியானவனை நாராயணசாமியானவன் நோக்கி, ஏன் சலசலவென்று இரைச்சலிடுகிறாய், இந்த நெற்போர் உன்னதானால் எடுத்துக்கொண்டு போவென்றார். அதைக்கேட்ட குடியானவன் சந்தோஷமாய்ச் சிலரோடு விரைந்து வந்து அந்த நெற் பொதியை யெடுக்க, அதின் கீழே மற்றொரு பொதி யிருக்கக் கண்டு அதை யெடுத்தான், அதின் கீழே மற்றொரு பொதி யிருக்கப் பார்த்தான், அதை யெடுத்த

பிறகு, அதின் கீழே மற்றொரு பொதி யிருக்கக் கண்டு, இனி யெடுக்க நமக்கு ஸாத்யப்படாது என்று மனம் தளர்ந்து, இவர் அவதார புருஷரும், பகவத்பக்தருமா யிருப்பதனால் இப்படிப்பட்ட காரியங்கள் இவரால் நடக்கின்றன என்று அதிசயித்து, இவரது திருவடியை வணங்கிப் போய்விட்டான். பிறகு இந்த நாரணரும் தாம் தூக்கிக்கொண்டு வந்த நெற்பொதியைத் தமது வீட்டுக்குள்ளே சேர்த்தார் அந்தச் சமயத்தில் பண்டிதர் வர, அவர் மனைவியார், தமது புதல்வர் அவதார புருஷர் என்று கூறி இப்போது நடந்த செய்தியெல்லாம் தெரிவிக்க, தந்தையார் மனமகிழ்ந்து, இந்தப் புதல்வருக்கு மணஞ்செய்ய ப்ரயத்நம் செய்தார். செய்து, தகுந்த கந்நிகை கிடைத்தவுடனே, மணத்துக்கு வேண்டிய பொருள்களெல்லாம் சேகரித்து, மங்களவாத்தியங்கள் முழங்க, சுபமுஹூர்த்தத்தில் மணமுடித்து, உறவினரோடிருந்துண்டும் மணத்துக்குரிய மற்றச் சடங்குகளையும் செய்து முடித்தும் களித்திருந்தார். இப்படியிருக்குங் காலத்தில் இந்த மணமானது நமது பவ பந்தத்துக்குக் காரணமென்று அறிந்து, இந்த நாரணர், மரங்கள் நெருங்கியிருக்கிற காட்டிற் போய் மறைந்தார். இவர் போனதுகண்டவர் யாவரும் பின்தொடர்ந்து போய்க் காணாதவராய்த் துக்கித்துச் சோர்வடைந்திருந்தார்கள். தாய்தந்தையரும் மிகவும் வருந்தி உயிர் நீங்கும்படியான நிலையி லிருப்பதைக் கண்ட உறவினர் வந்து இவர்களுக்குப் பல தைர்ய வார்த்தைகள் சொல்லித் தேற்றி, இச்சிறுவன், நைஷ்டிக ப்ரஹ்மசாரியாகிய மாருதியின் அம்சமென்றறிந்திருந்தும் நீங்கள் மணஞ்செய்தது உங்கள் குற்றமேயன்றி அவன் குற்றமல்ல, அவன் வந்த வழியை நோக்கிப் போனான், அவனைக் குறித்து நீங்கள் துக்கிக்க வேண்டியதில்லை, அவன் இந்த லோகத்தை யீடேற்ற வந்தவன், அவன் இன்னுங் கொஞ்சநாளில் வருவான் என்று சொல்ல, தாய் தந்தையர் ஒருவாறு மனக் கவலை நீங்கி, அவன் மழலைச்சொல் முதலானவைகளை நினைத்துப் பலவகையாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் இப்படி யிருக்க, இவர் ஒரு வலையிலகப்பட்ட மான் அந்த வலையைத் தப்பி ஓடி மறைவதுபோலத் தம் முள்ளக்களிப்போடு ஊரைவிட்டு விரைந்துபோய்க் காட்டில் புலி கரடி முதலான துஷ்டமிருகங்கள் பிறவுயிர்களைக் கொலை செய்வதைக் கண்டும் அஞ்சாமல் போகும்போது பசிதாஹங்களால் உண்டாகும் துன்பத்தைப் பொறுத்து வைராக்கிய சீலராய் மனவுருக்கத்தோடு பகவானை நினைந்து பகவானானவர் எனக்கு எப்பொழுது அருள்செய்வாரோ என்று சிந்தித்துப் பிறகு மாருதியைத் தியானஞ்செய்து தோத்திரித்தும் அவர் தனக்கெதிரே வந்து அருள்செய்யாததைக் கண்டு, நான் சுகமாயிருந்து தியாநிப்பதனாலல்லவோ மாருதியானவர், எனக்குப் பிரத்தியக்ஷமாகவில்லை என்று அந்தக் காட்டிலுள்ள கொடிகளை அறுத்து வந்து காலிற் கோத்து அதை ஒரு மரத்தின் கிளையில் கட்டித் தலைகீழாகத் தொங்கிக்கொண்டு கடல்நீர் குளப்படி நீர்போலாகக்கடந்து, ஸ்ரீஜாநகியாரைக் கண்டு இலங்கையை நெருப்புக் கிரையாக்கிச் சிரஞ்சீவிகளில் ஒருவராகிச் சஞ்சீவிபர்வ

த்தைக் கொண்டுவந்து இறந்தவர்களைக் காப்பாற்றி, இன்னும் அநேகமான உபகாரங்களைச் செய்த அஞ்சனைச் செல்வரே! ஸ்ரீராம பிரான் உம்மை இவ்வுலகத்தில் சிரஞ்சீவியாய் வைத்தது அடியார்களைக் காக்கும்பொருட்டல்லவோ என்று பலவாறு புகழ்ந்து, நீர் விரைவாக எனக்கெதிரே எழுந்தருளாத பக்ஷத்தில் நான் உயிரை விடுவேன் என்றுசொல்ல, ஸ்ரீ ஆஞ்சநேயர், இவர்க்கெதிரே தோன்றி இவர் காலிற் கட்டியிருக்கும் கட்டை யவிழ்த்து மார்போடு அணைத்துக்கொள்ள, இவர், அவரது அடியை வணங்கி அவர் புகழை யமைத்து அடங்கக் கவிகளைச் சொல்ல, ஸ்ரீ ஆஞ்சநேயர் மனமகிழ்ந்து, இவரைநோக்கி, நீ எனது அம்சமாக இவ்வுலகத்தில் பிறந்திருக்கிறாய் ஆதலால் உனக்கு ஸ்ரீராமபிரானுடைய திருவருளுண்டாகும்படி செய்கிறேன், வா என்று அழைத்துக்கொண்டு பஞ்சவடியை அடைந்தார். அப்போது சூரியன் அஸ்தமித்ததனால் அவ்விடத்திலுள்ள ராமகுண்டம் என்னும் தீர்த்தத்தில் மூழ்கி நியமங்களை முடித்துக்கொண்டு அன்று ஸ்ரீ ராமநவமி யாதலால் சக்ரவர்த்தித் திருமகனார் கோயிலில் அநேக சாதுஜநங்கள் வந்து சேர்ந்து, தாளம் மிருதங்கம் முதலிய வாத்திய விசேஷங்கள் முழங்கப் பாடியாடுவதை அங்கொரு புறத்திலிருந்து நோக்கிக்கொண்டிருந்து, அவர்களெல்லாரும் உற்சவத்தை நிறைவேற்றிச் சென்ற பிறகு மாருதி யானவர், இந்த நாரணரை அழைத்துக்கொண்டு கோயிலுக்குள்ளே பிரவேசித்து ஸ்ரீராமபிரானை வணங்கிவாழ்த்தி, அஞ்சலித்து நிற்க, பகவானானவர் இவரைநோக்கி, நீ சேது ரக்ஷணத்தைவிட்டு இங்கு வந்தகாரியமென்னவென்று கேட்க, ஆஞ்சநேயர், பகவானே, இவன் என் அம்சமாகப் பிறந்தவனாதலால் இவனை உமது திருவடிக்கு ஆளாக்க அழைத்து வந்தேன் என்று சொல்லினார். இப்படி இவர் சொல்லும்போது, கூட இருந்த நாரணர், குருவருள் பெறாதவராகையால் எதிரே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீராமபிரானைச் சேவிக்கப் பெறாமல் மனம் வருந்தும்போது ஆஞ்சநேயர், பெருமாள் திருவடியில் வீழ்ந்து வணங்கி, ஓ கருணைக்கடலே, இந்தச் சிறுவனைக் கிருபைசெய்து காத்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, பகவானானவர், இந்தச் சிறுவனுடைய சிரசின்மேல் கையைவைத்து உபதேசித்து இந்தச் சிறுவனுக்கு மதிநலம் மேன்மேலும் உண்டாகக் கடவதென்று ஆசீர்வதித்து ராமதாஸனென்று பேர்சூட்டி ஆஞ்சநேயரை நோக்கி, இந்தச் சிறுவன் எனது ஸம்ப்ரதாயத்தை நன்றாகப் பிரகாசிக்கச் செய்து உலகத்திலுள்ள சேதநரைத் திருத்துவான் என்று திருவாய்மலர்ந்தருள, வாயுபுத்திரரான ஆஞ்சநேயர், பகவானை வணங்கி விடைபெற்றுச் சிறுவனோடுபோய்க் கங்காநதியில் நீராடிப் பகவத்தியாகஞ் செய்து கொண்டு நாசிகம் என்னும் திருப்பதிக்குக் கீழ்த்திசையில் உள்ள டாங்களி என்னும் ஊருக்குப் போகும்போது இந்தச் சிறுவராகிய ராமதாஸர் தேம்பித் தேம்பி அழத்தொடங்கினார். இதைக்கண்ட ஆஞ்சநேயர், இவரை நோக்கி நீ ஏன் அழுகிறாய் என்று கேட்க, இவர் நான் ஸ்ரீராமபிரானைப் பிரிந்ததனால் எனக்குச் சகிக்கக்கூடாத துக்கம் உண்டாயிருக்கின்றதென்று சொல்லி,

என்னை அந்த ஸ்ரீராமபிரான் சந்நிதியில் கொண்டுபோய்ச் சேர்த்தால் உயிர் தரித்திருப்பேனென்று சொல்ல, மாருதியானவர், இவரது வேண்டுகோளுக் கிரங்கி மீண்டும் பஞ்சவடியை யடைந்து ஸ்ரீ ஜாநகிரமணராகிய பகவானது திருவடியைத் தொழுது நிற்க, ஸ்ரீராமபிரான் இவ்விருவரையும் நோக்கி, போய் மீண்டு வந்த காரியம் என்னென்று கேட்க, ராமதாஸரானவர் பெருமாளை நோக்கி, ஸ்வாமீ! உன் பிரிவைச் சகிக்கமாட்டாமல் மீண்டு வந்தேன், எப்பொழுதும் தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹத்தைச் சேவித்துக்கொண்டே யிருக்கும்படி அடியேனுக்குக் கிருபை செய்தருளவேண்டும் என்று பிரார்த்தித்து ஒரு அஷ்டகத்தால் தோத்திரஞ் செய்ய ஸ்ரீவாமவிகாதரராகிய பெருமாளானவர், திருவுள்ளமகிழ்ந்து ராமதாஸரை நோக்கி விரைவில் உன் எண்ணம் நிறைவேறும், நீ மனம் வருந்தாமல் சந்தோஷமாய் இந்த மாருதியோடு போவென்று சொல்லி மாருதியை நோக்கி, இந்த ராமதாஸன் எப்பொழுது என்னை நினைத்தாலும் நீயே முன்னின்று இவனது கருத்தை முடிக்கவேண்டும் என்று நியமித்தருளினர். பிறகு இவ்விருவரும் ஸ்ரீராமபிரானை அடிவணங்கி விடைபெற்று டாங்களி என்னும் ஊருக்குப்போய் ஸ்ரீராமசரித்திரத்தை மாருதியானவர், பகல்முழுதும் விஸ்தரித்துப் பிரசங்கிக்கவும் ராமதாஸர் அன்றிரவில் ராமநாமசங்கீர்த்தநம செய்யவும் அங்குள்ளாரெல்லாரும் கேட்டு இவ்விருவரையும் பூஜித்துக் கொண்டாடினர்கள். இப்படி யிருக்க ஒருநாள் மாருதியானவர் தாஸரை நோக்கி, நான் உன்னைத்தொடர்ந்து அநேகநாளாய் உன்னோடு கூடிவாழ்கிறேன், நான் சேதுரக்ஷணார்த்தமாகப் போகவேண்டும் என்று சொல்ல, தாஸரானவர் மாருதியை வணங்கி, உம்மைப் பிரிந்து ஒரு க்ஷணகால மாயினும் நான் உயிர் தரித்திருக்கமாட்டேன், அன்று பஞ்சவடியில் ஸ்ரீராமபிரான் என்னை உம்மிடத்திலல்லவோ ஒப்புவித்தது, அப்படியிருக்க நீர் என்னைவிட்டுப் போவது நன்றோ என்று சொல்ல, ஆஞ்சநேயர் தாஸரை நோக்கி, நீ என்னைக் குறித்துத் துக்கிக்க வேண்டாம், ஸ்ரீவிபீஷணாழ்வான்பொருட்டுப் பெருமாள் கட்டளையின்படி திருவணையைக் காத்திருக்கவேண்டும், ஆகையால் நான் போகிறேன், நீ நினைத்தபோதெல்லாம் உன்னிடத்துக்கு வருவேன், அன்றியும் நீ உன்னை யாசிரயித்தவர்களுக் கெல்லாம் அநுக்கிரகஞ் செய்யும்பொருட்டுத் தென்றிசையை நோக்கி வருவாய் என்றுசொல்லி, ஆசீர்வதித்துத் தம்மிடத்துக்குப் போய்விட்டார். பிறகு ராமதாஸர் அன்று முதல் தினந்தோறும் சூரியோதயத்தில் நீராடி ஸ்ரீ ஹரிபூஜை செய்து அதன் பிறகு உஞ்சவிருத்தி செய்து வேதியரோடு இருந்து அமுதுசெய்து இடைவிடாமல் ஸ்ரீஹரிபஜனைசெய்து கொண்டிருந்தார். அப்போது அந்த நாசிகம் என்னும் ஊரிலுள்ளவரும் பிற வூர்களிலிருந்து அவ்வூர்க்கு வந்தவர்களும் இவர் செய்யும் ஹரிபஜனையைக் கேட்டுத் தாங்களும் ஹரிபஜனை செய்வதில் சிரத்தையுடையவர்களானர்கள். அவர்களுள்ளே உத்தவர் என்னும் ஒரு வேதியர் இவரது திருவடியை ஆசிரயிக்க, அவர் மனநிலையை அறிந்து அவருக்கு அநுக்கிரகஞ் செய்தார். அவ்வே

தியர், பிரபஞ்சப்பற்று முழுதும் விட்டு இவருடைய சேவையே பரமப் பிரயோஜனமென்று துணிந்து இடைவிடாமல் இவரை ஆசிரயித்துக்கொண்டும், ஸ்ரீராமபஜனை செய்துகொண்டும் இருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் ராமதாஸர் ஆஞ்சநேயரது திருவுருவைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று எண்ணின எண்ணத்தை அவரறிந்து, இவருக்குப் பிரத்தியக்ஷமாகி, நீ என் உருவை இவ்விடத்தில் பிரதிஷ்டைசெய்ய எண்ணங்கொண்டாயாதலால் நீ அமைத்த இந்த விக்ரஹத்தையே ஸ்தாபிக்கக்கடவை என்று சொல்லி, ஸ்தாபிக்கச் செய்து அதில் தாம் பிரவேசித்து விளங்கிக் கொண்டிருந்தார். ராமதாஸர் அநேக வேதியர்களை வருவித்து வேத விதிப்படி அந்த ஆஞ்சநேய விக்ரஹத்தை ஸ்தாபித்து, திருமஞ்சநம் முதலிய ஷோடசோபசாரமும் செய்து, ப்ராஹ்மண ஸமாராதநமும் விஸ்தாரமாகச் செய்து அன்றிரவில் ஆஞ்சநேய சரித்திரத்தையும் ஸ்ரீராம சரித்திரத்தையும கீர்த்தநத்தி லமைத்துப் பாடிக்கொண்டிருந்து சூரியோதய காலத்தில் ஹாரதி ஸமர்ப்பித்து வந்தார். இவ்விதமாக இவர் தினந்தோறும் நடத்திவருவதை யாவரும் அறிந்துவந்து ஸ்ரீ ஆஞ்சநேயரைச் சேவித்துப் போகும்படியான வழக்கம் ஏற்பட்டு நடந்துவந்தது. இப்படி நடந்து வரும் நாளில் தாஸரானவர் உத்தவரை யழைத்து, இன்றுமுதல் நீர் உதயகாலத்தில் நீராடி ஆஞ்சநேய பூஜை செய்து அதற்குமேல் ஊரில் பிரவேசித்து உஞ்சவிருத்தி செய்து, அதிதிகளுக்கும் இட்டு நீயும் உண்டு ஸ்ரீஹரி பஜனை செய்துகொண்டு உன்னை யாசிரயித்தவர்களுக்கு உபதேசித்து, இவ்வாறு காலங்கழித்து வரக்கடவை என்று நியமிக்க, உத்தவர் தாஸரை யடிவணங்கி, ஸ்வாமீ! நீரே என் ஹ்ருதயத்தில் தங்கியிருந்து எல்லாக் காரியங்களையும் நடத்தவேண்டுமேயன்றி நான் சுவயமாய் நடத்தமுடியாது என்றுசொல்ல, தாஸர், அப்படியே யாகட்டுமென்று ஆசீர்வதித்தார். பிறகு தாஸரானவர், நடுராத்திரியில் எழுந்து தென் திசையிலுள்ள காட்டுக்குப் போய்விட்டார். இவர் போய்ச் சற்றுநேரங் கழிந்தபிறகு உத்தவர் நித்திரைவிட்டெழுந்து தமது ஆசிரியரைக் காணாமல் வருந்தி மனந் தெளிந்து, ஆசிரியர் நியமித்தபடியே நாள்தோறும் நடத்திவந்தார். காட்டிற்குப்போன ராமதாஸர், அவ்விடத்தில் உதிர்ந்த சருகையும் பழங்களையும் உண்டு நித்திரை செய்யும்போது அவ்விடத்திலுள்ள துஷ்ட மிருகங்கள் யாவும் இவரது ஹரிபஜனையின் பெருமையினால் சாந்த குணத்தை யடைந்து, அவைகளும் ஹரிபஜனை செய்துகொண்டிருக்கச் செய்து, அக்காட்டை விட்டு நீங்கிப் பல திவ்விய தேசங்களுக்கும் போய், அவ்வவ்விடங்களில் உள்ளவர்களை ஹரிபஜனையால் திருத்தி, ஜராட் என்னும் ஓர் ஊரையடைந்து அங்குள்ள ஆஞ்சநேய சந்நிதிக்குப்போய் அவரைச் சேவித்து விடைபெற்று மாவுலி நகரத்துக்கு வந்து, கிருஷ்ணாநதியில் மூழ்கி நேமநிஷ்டைகள் செய்து முடிந்தபிறகு ஆஞ்சநேயரை நினைத்தமாத்திரத்தில் அவர் இவருக்குப் பிரத்தியக்ஷமாயினார். அவரைத் தாஸர் தரிசித்து அடியேனுக்கு ஸ்ரீராமசேவையில் விருப்பம் உண்டாயிருக்

கின்றதென்று சொல்ல, அவர், தாஸரை நோக்கி, நீ பதின்மூன்று அக்ஷரங்களாலாகிய மூல மந்திரத்தை ஏகாந்த ஸ்தலத்திலிருந்துகொண்டு மூன்றரைக்கோடி உரு ஜபித்தாயானால், ஸ்ரீராம பிரான் உனக்கு ப்ரத்தியக்ஷமாவார் என்று சொல்லி மறைந்தார். மறைந்த பிறகு தாஸரானவர் ஸ்ரீராமபிரானை மனத்தினால் தியானித்து மந்திரஜபம் செய்துகொண்டிருந்தனர். இவ்வாறு ஊணுறக்க மில்லாமல் கடுந்தவம் செய்துகொண்டிருக்கும் நாளில், இந்தத் தவத்தின் மகிமையை அறிந்த இந்திரன் அஞ்சி, தன் குருவாகிய பிரகஸ்பதியை நோக்கி, பூலோகத்தில் இத்தன்மையான கடுந் தவத்தைச் செய்துகொண்டிருப்பவன் யார் என்று வினவ, குருவானவர் இந்திரனை நோக்கி, ஆஞ்சநேயர் உலகத்தை உத்தரிக்கும்பொருட்டு இப்படி அவதரித்து ஸ்ரீராமபிரானை மனத்தில் இருத்தி அருந் தவம் செய்கின்றார் என்று சொல்லக் கேட்ட இந்திரனானவன், இவர் செய்யும் அருந் தவம் முடிவு பெற்றால் நமக்கு என்ன தீங்கு நேரிடுமோ வென்று அஞ்சி, அந்தத் தவத்தை யழிக்கும் பொருட்டு மோகினியை யழைத்து, ஓ பெண்ணே! நீ எல்லா உலகங்களையும் மயக்க வல்ல சக்தியுள்ளவளாதலால், இன்று பூலோகத்துக்குப் போய் ஸ்ரீராமத் தியானம் செய்துகொண்டிருப்பவனாகிய ராமதாஸனை மதிமயக்கி உன்னைத் தழுவும்படி அவனுக்குப் பித்து ஏற்றவேண்டும் என்று ஏவி, அதன் பிறகு மன்மதனை யழைத்து அவனுக்கும் அப்படியே இவரது தவத்தை அழிக்கவேண்டிய முயற்சி செய்யும்படி கட்டளையிட்டான். அப்படியே மன்மதன் அவ்வன முழுதும் புஷ்பங்கள் மலர்ந்து நறுமணம் வீசவும், தடாகங்களில் நீர் நிறைந்து அலை யெறியவும், மந்தமாருதமாகிய தேரிலேறி, குயில்களாகிற திருச்சின்னம் ஊதவும், பூர்ண சந்திரனாகிய குடை கவித்து விளங்கவும், வண்டொழுங்காகிய நாணோசை மிகவும், கமுகம்பாளைகளாகிய கவரிகள் வீசவும், அன்றிற் பறவைகள் ஒருபக்கத்தில் சப்திக்கவும், அசோக மரங்கள் மலர்களாகிய கைவிளக்கேந்தவும், சண்பகம் முதலிய மலர்களின் மணம் மிகக் கமழவும், சோலையானது இருள்போல நெருங்கியிருக்கவும், தாழை மடல்கள் வாள்போல அசைந்து விளங்கவும, மாதராகிய சேனை சூழ்ந்து வரவும், கிளிகளாகிய புரவிகள் நெருங்கி வரவும், கருமபாகிய வில்லை வளைத்து, வண்டு நாண் பூட்டி, தாமரை மலர் முதலிய பஞ்சபாணங்களைத் தொடுத்து, ராமதாஸரது மார்பின்மீது தாக்கும்படி பிரயோகித்தான். அந்தச்சமயத்தில் மோகினியானவள் வீணை வாசித்துக்கொண்டு தன் மேனி யொளி யெங்கும் பிரகாசிக்க, அதிக ரூபலாவண்யத்தோடு வந்து, மின் கொடிபோலும் இடை துவளவும், ஸ்தனதடங்கள் ஆடவர் மனங்களைச் சூறையிட்டு உலாவவும், முகமானது பூர்ணசந்திரன்போல் விளங்கவும் மெல்ல மெல்லக் கலாபமயில் போல அசைந்து நடந்து, பிரமன் முதலிய தேவர்களும் மயங்கும்படி தேவகானம்செய்தாள். அந்தத் தேவகானத்தைக் கேட்ட தாஸரானவர், தம்முள்ளே நகைத்துக்கொண்டு தமது மனம் சற்றும் அசையாதிருக்கும்படி யோக நிலையை யடைந்து முன்போலவே இருந்தார். இப்படி இவர் இருந்த கலங்கா

நிலையைப் பிரமாதிதேவர்கள் கண்டு, இவரது மனவுறுதியையும் தபோமகிமையையும் புகழ்ந்து பூமழை பொழிந்து ஆசீர்வதித்துப் போனார்கள். பிறகு இவரது தவத்தை அழிக்க இந்திரனால் ஏவப்பட்டுவந்த மோகினியும் மன்மதனும் மனவருத்தத்தோடு மீண்டுபோய் இந்திரனுக்கெதிரே தலைவணங்கி நின்றார்கள். அதைக்கண்ட இந்திரனும் இவர்கள் போனகாரியத்தில் வெற்றியடையவில்லையென்பதை அறிந்து தானும நாணமடைந்திருந்தான். அப்படியிருக்க, இவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த ராமதாஸர், வாயு புத்திரராகிய ஆஞ்சநேயரைத் தியானிக்க, அவர் இவருக்கெதிரே எழுந்தருளினார். தாஸர் அவரது திருவடியை வணங்கி, இங்கே இந்திரனால் நிகழ்ந்த செய்திமுழுதும் சொல்லுதலும், மாருதியானவர் மனமகிழ்ந்து, நீ இவ்வுலகுக்கு அச்சாணியாயிருக்கிறாய், உனக்கு ஸ்ரீராமபிரானது அநுக்கிரகம் மேன்மேலும உண்டாகக்கடவது என்று ஆசீர்வதித்த பிறகு, நல்ல கனிகளை இருவருமாக உண்டு, மாருதியானவர் தமதிடத்துக்குப் போய்விட்டார். பின்பு தாஸரும் முன்போலவே தவஞ்செய்துகொண்டிருந்தார்.

இப்படிப் பன்னிரண்டு வருஷகாலம் கழிய, மந்திரஜபத் தொகை பூர்ணமாதலும, ரகுகுலதிலகரான ஸ்ரீராமபிரான் இவரது தவத்துக்குத் திருவுள்ளமுவந்து, ஸர்வாபரண பூஷிதராயும வனமாலாதரராயும் பஞ்சாயுதங்களோடுங் கூடினவராய் இவர்க்கெதிரே பிரத்தியக்ஷமாகி நின்றார். அப்படி நிற்கிற சக்ரவர்த்தித் திருமகனாரைத் தாஸர் தரிசித்து வணங்கி நிற்றலும், இவரைப் பகவானானவர் மார்போடு அணைந்து இவரது சரீர முழுதும் தமது திருக்கைகளால் தடவினார் அப்போது தாஸர், தமது இரு விழிகளிலும் ஆநந்தபாஷ்பம ஒழுக நின்று ஒரு அபங்கக் கவியினால் ஸ்தோத்திரஞ் செய்தார். அந்தத் தோத்திரத்தைக் கேட்ட ஸ்ரீ ஜாநகி நாதர் மிகுதியாகச் சந்தோஷித்து, நீ அபேக்ஷிதத்தைக் கேட்டுக்கொள்ளக்கடவை என்று நியமிக்க, தாஸர், ஸ்வாமீ! ரகுநந்தனா, தேவரீரை என் மனத்தில் எப்பொழுதும் விளங்கும்படி இருத்தி உனது திருநாமமாகிய தாரக மந்திரத்தை இடையறாமல் ஜபித்துக்கொண்டிருக்கிற ருத்திரமூர்த்திபோல மிகவும் தியானித்து அபங்கக் கவிகளால் உன்னைத் தோத்திரஞ் செய்யும்படி உனது திருவருள் தரவேண்டும் என்பதேயன்றி வேறு பொருள்களை என் மனம் விரும்பவில்லை என்று சொல்ல, ஜகதீசனாகிய சக்ரவர்த்தித் திருமகனார் இவருக்கு அபயந்தந்து எல்லாவற்றையும் அறியவல்ல தனது திவ்ய ஜ்ஞானத்தையும் கொடுத்தருள, தாஸர், அடியேன்செய்த தவமே தவம்என்று சொல்லித் திருவடியை வணங்க, பீதாம்பரதரனான ஸ்ரீ பகவானானவர், அந்தர்த்தான மடைந்தனர். அதன்பிறகு தாஸரானவர், தினந்தோறும் அவ்வனத்திலிருந்துகொண்டு, கிருஷ்ணா நதியில் நீராடி, பகவதாராதனஞ் செய்து, தாம் தவஞ் செய்யும் காட்டிற்கு அருகே யிருக்கிற ஒரு நகரத்திற்குப் போய், பதினொரு வீடுகளில் ஐயமேற்கும்போது, ஜயரகுவீரஸமர்த்த என்றுசொல்லி, ஐயமெடுத்து, கிடைத்ததைப் பெற்று, அதிதிகளுக்கீந்து மீதியை யெடுத்துப்போய் அடை

கட்டு ஸ்ரீராமபிரானுக்கு நிவேதித்து, அவர் அமுதுசெய்தபிறகு சேஷத்தைத் தாமு முண்டு தவஞ்செய்துகொண்டு வரும்போது, அவகாசம் நேரிட்ட காலங்களிலெல்லாம் ஸ்ரீ ராமசரித்திரத்தைக் கவிகளாகச் செய்து அக் கவிகளை ஏட்டிலெழுதி அவ்வேடுகளை நதியில் விட்டுவிடுவார். இப்படி நாள்தோறும் செய்துவருங் காலத்தில் சாதார் என்னும் ஊரில் வாழ்கிற சிவாஜி என்னும் அரசன், வேட்டையாடும்பொருட்டு அவ்விடத்திற்கு வந்தான், வந்தவன் மூன்று ஜாமம் வரைக்கும் அலைந்து பசி மிகுந்தவனாய் ஒரு பக்ஷியாயினும், ஒரு விலங்காயினும் நமக்கு இன்று கிடைக்கவில்லையே என்று மிகுந்த களையோடு வரும்போது, தாஸர் இருப்பதைப் பார்த்து இவர் சமீபத்தில் வந்து வணங்க எண்ணங்கொண்டான். ஆனால் இவரை மிருகாதிகள் சூழ்ந்துகொண்டிருப்பதை நோக்கித் திகைத்து நின்று, அந்த நின்ற இடத்திலிருந்தே கைகூப்பி அஞ்சலித்து, இப்படிப்பட்ட மெய்த் தவத்தையுடைய மஹா புருஷரைத் தரிசிக்கும்படி நேரிட்ட இந்தத் தினமே நல்ல தினம், இவரைத் தரிசிப்பதற்குப் பூர்வகாலத்தில் எப்படிப்பட்ட அருந்தவம் செய்திருந்தேனோ என்று இவரிடத்து அன்பு மிகுந்தவனாய்ச் சூரியோதயமாகிறவரைக்கும் அவ்விடத்தில் நின்று, இவரருளை யான் பெறுதல் எக்காலமோ என்று மனத்தில் எண்ணி, அங்கு நின்றே இவர் திருவடியை வணங்கித் தன் நகரத்துக்குப்போய் உண்ணாமல், இவரருள் பெறுவது எப்படி என்று ஆலோசித்துக்கொண்டு இராத்திரி முழுதும் கண்ணுறங்காமல் இருந்து, விடியற்காலத்தி லெழுந்து நித்திய கருமங்களை முடித்துச் சில சேனைகளையழைத்துக்கொண்டு முன்போலவே தாஸர் இருக்கு மிடத்தில் வந்து நமஸ்கரித்து ஒரு ஜாமநேரம் நின்று, இவர் நமக்குக் கிருபை செய்யும்படி பகவானவர் அநுக்கிரகிப்பது எந்தக் காலமோ என்று சிந்தித்துக்கொண்டிருக்கும்பொழுது, ஒருவன் இவர் எழுதின ஏட்டைக் கைக்கொண்டு வந்து அதிலுள்ள கவியைப் படிக்கக் கேட்ட அரசன், மிகவும் சந்தோஷித்து நதியில் அடித்துக்கொண்டு வருகிற ஏடுகள் பலவற்றையும் எடுத்துக்கொண்டு வாருங்களென்று தன் ஊழியர்களிடத்தில் சொல்ல, அவர்களும அப்படியே ஏடுகளையெல்லாம் எடுத்துக்கொண்டு வந்து அரசனுக்கெதிரே வைக்க, அவற்றையெல்லாம் ஒரு புத்தகத்தி லெழுதுவித்து, நன்றாய்ப்படித்து, அக்கவிகளின் பொருளை யறிந்து ஆச்சரியப்பட்டு, கவிகளின் முடிவில் அமைந்திருக்கும் பெயரை ஆராய்ந்து, இப்பெயருள்ளவர், புலி கரடிகளோடு கூடியிருப்பவராகிய இந்தத் தாசரே ஆகுமென்று நிச்சயித்து, இவருடைய அருள்பெறுவதே இவ் வுலகத்தில் அரும் பொருளென்று மனந் துணிந்து, ராஜரீகத்தில் விருப்பமில்லாதவனாய் நாள்தோறும் இவரிடத்தில் வந்து வணங்கிக்கொண்டிருந்தான்.

இப்படி அரசன் நாள்தோறும் செய்வதை இவனுடைய மந்திரிமார்களாகிய எண்மரும் நோக்கி, ஐயனே! பிராக்ருத பாஷையில் செய்யப்பட்டிருக்கிற கவிகளில் உன் மதிமயங்கி எந்தச் சாதியிலும் கலவாத ஒருவ

ரிடத்திற்கு நீர்போவது உமக்குத் தாழ்வல்லவோ? பரம்பொருளை அடைதற்கேதுவான உபதேசம் பெறவேண்டுவீரானால், தேவபாஷை தெரிந்தவராயும், வேதிய குலத்தினராயும், மடாதிபதிகளாயும் இருக்கிற அநேகர் இவ்விடத்தில் இருக்கிறார்கள், அவர்களிடத்தில் நீர் உபதேசம் பெற்றுக்கொள்வதே நன்மை, ஆதலால் இவரிடத்திற்கு அடிக்கடி போவதும் வருவதுமாகிய வழக்கத்தை நீர் விட்டுவிடவேண்டும் என்று அநேகவிதமாகச் சொல்ல, அரசன் அவர்கள் சொல்லுஞ் சொற்களைச் சிறிதும் செவி கொடுத்துக் கேட்காமல் தினந்தோறும் தாஸரிடத்துக்குப் போய்க்கொண்டேயிருந்தான். ஒருநாள் மாருதியானவர் எழுந்தருள, தாஸர் அவரை வணங்கித் துதித்துக்கொண்டிருக்கும்போது, அரசன் அவ்விடத்திற்குப் போய், மாருதியின் திருமேனி ஒளி மிகுதியால் கண்கள்கூசி மூடிக்கொண்டு சற்று விலகியிருந்து, அவர் போனபிறகு கண்விழித்துப் பார்த்துத் தான் கடைத்தேற விரும்பிக் கைகுவித்து, தாஸரை அஞ்சலித்து நின்றான். இப்படிப் பலநாளும் அரசன் வந்து வணங்குவதைத் தாஸரானவர் அறிந்து இரக்கங்கொண்டு தம்மருகில் வரும்படி கட்டளையிடுதலும், அரசன் சமீபத்தில் வந்து இவரை வணங்கித் தோத்திரஞ்செய்து நான் இந்தப் பவசாகரத்தைக்கடந்து உஜ்ஜீவிக்கும்படிபரமார்த்தத்தை அடியேனுக்கு உபதேசித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, தாஸரானவர், அவனை நோக்கி, அரசனே! நீ உலகத்தை யெல்லாம் ஆளும்படியான பெருமையையுடையவன், நான் ஒரு பேய் வழிவமாய் இந்தக் காட்டில் தங்கியிருப்பவன், என்னிடத்தில் நீ உபதேசம் பெற்றுக்கொண்டால் உலகமுழுதும நகைக்குமல்லவா? அல்லவென்று என்னிடத்திலேயே உபதேசம் பெறுவையாயின், ஒராளொருகாலத்தில் நான் உன்னிடத்திற்கு வரும்படி நேரிடும், அப்படிவர நேரிட்டபோது மஹா சபையின் நடுவில் அதிபதியாய் வீற்றிருக்கிற நீ அந்தச் சபையாருக்கெதிரே என்னைவணங்குவையோ? வணங்க வெட்கப்படுவையானால் பரமார்த்தம உனக்குச் சித்திக்கமாட்டாது, ஆதலால் உனக்குத் தகுதியான ஆசாரியரைச் சரணடைந்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்டு அரசாளுதல் எல்லார்க்கும் சம்மதமான காரியம், அப்படிச் செய்வதை விட்டு, கோவணம்அன்றிப் பிறிதொரு பொருளுமில்லாமல் பூமியே மெத்தையாயும், ஆகாசமே வஸ்திரமாயும், சோலையே பந்தலாகவும், மிருகங்களும் பக்ஷிகளுமே உறவினராகவும் கொண்டு இந்தக் காட்டில் வாழ்கிற என்னை நீ ஆசிரயிக்கத்தகாது என்று சொல்லக்கேட்டு, இவரிடத்தில் முன்னிலும் அன்பு மிகுந்தவனாகிய அரசன், ஓ சற்குருநாதரே! அடியேன் திரிகரண சுத்தியாய் உம்மை வந்தடைந்தேன், அதை நீர் அறிந்திலீரோ? எப்படியாயினும் என்னை ஆண்டருளவேண்டும் என்று துதித்துநின்றான். அப்பொழுது தாஸர், இவன் மிகவும் பரிசுத்த குணத்தையுடையவன் என்று மனங் கனிந்து, இன்று குருவாரமாக நேரிட்டது மிகவும் நன்மையாமென்று அரசனை நோக்கி, நீ நீராடிவா வென்று நியமித்தார். அப்படியே அரசனும் போய் நீராடி ஒற்றை ஆடையோடு வெளியே வந்து உடம்

பின் ஈரம்துடைத்துக்கொள்ள வேறு வஸ்திரம் இல்லாமையால், உடுத்திருந்த ஆடையையே இருதுணியாக்கி, ஒன்றை அரையில் உடுத்து, மற்றொன்றினால் ஈரந்துடைத்துக்கொண்டு, கோபீசந்தனத்தைக் கொண்டு துவாதச நாமமும் இட்டு, நித்திய கருமங்களையும் முடித்து, காய்கனி மலர்கள் என்பவற்றைக் கிடைத்தமட்டுங் கைக்கொண்டு ஆசாரியரைப் பூஜிப்பதற்கு தொண்டையில் நீர் முகந்துகொண்டு தாஸரிடத்திற்கு வந்து வணங்கி அஞ்சலித்து நின்றான். அவனை ஆசாரியர் நோக்கி, பதினொருதரம் நமஸ்காரம் செய்யக்கடவாயென்று நியமிக்க, அரசனும் அப்படியே தொழுதுநின்று, உய்ந்தேன், உய்ந்தேன் என்று சொல்லி, உடல் பொருள் ஆவிகளாகிய மூன்றையும் ஆசாரியருக்குச் சமர்ப்பித்துப் பூஜித்து நின்றான். அப்படி நின்றவனைத் தாஸரானவர் தம்மருகிலிருத்தி, அவன் தலைமேல் தமது திருக்கரம் அமைத்து உபதேசஞ் செய்தருளினர். அதின்பிறகு, அரசனே! இன்றுமுதல் உயிர்க்கொலை செய்வதைவிட்டு மனத்தில் எல்லாச் சீவர்களின்மேலும இரக்கம் வைத்து ஹரி பூஜை செய்கிற ஹரிதாஸர்களுடைய நேசம் வைக்கக் கடவாய், இப்படிச் செய்தால் பெருமையை யடைவாய், ஏகாதசியாகிய ஹரிதினத்தில் நித்திரையை ஒழித்து அன்றிரவில் ஆஞ்சநேயரைத் தரிசனஞ் செய்துகொண்டு இருக்கக் கடவாய் என்று நியமிக்கக்கேட்ட அரசனானவன், உமது கட்டளையின்படியே நடப்பேன் என்று சொல்லி, அவருடைய திருவடியை விளக்கி ஸ்ரீபாததீர்த்தத்தை உட்கொண்டு, துளசிமாலிகையை அவர் கழுத்தில் சூட்டி ஷோடசோபசாரங்களும் செய்து, தான் கொண்டுவந்த கனிகளைத் தாஸருக்கெதிரே வைத்தான். அவர் அவன் மனக்கருத்தை அறிந்து அக்கனிகளை அமுது செய்தார், அமுது செய்து சேஷித்திருந்த கனிகளை அரசன் உண்டான். பிறகு தாசர் அரசனைநோக்கி, இனி நீபோய் உன்னுடைய அரசாக்ஷியைச் செய்துகொண்டிருக்கலாம் என்று சொல்ல, அரசன், ஸ்வாமீ! என் உடல் பொருள் ஆவி மூன்றையும் உமக்குத் தத்தஞ் செய்தபிறகு அரசாளுதல் எனக்குத் தகாது என்று சொல்லி, தேவரீர் அரசு செய்துகொண்டு இரும், அடியேன் உமக்கு ஏவற் பணிவிடை செய்துகொண்டிருக்கிறேன் என்று சொல்ல, தாஸரானவர், அரசனே, முற்காலத்தில் ஜநகன், அம்பரீஷன் என்பவர் முதலானோர் ஞானவான்களாயிருந்தும் பகவதநுக்கிரகத்தால் அரசாண்டார்கள், அவர்களைப்போல நீயும் அரசாளுவதினால் உனக்கு நேரிடும் குறைவு யாது? நீ சொன்னபடியே உனது நகரம் முதலாகிய பொருள்களெல்லாம் என்னதேயாயினும் நான் நியமிக்கிறபடியே செய்வது உனக்குச் சொரூபமாகும், ஆதலால் நான் சொன்னபடி நீபோய் என் அரசாட்சியைச் செய்துகொண்டிருக்கக் கடவாய் என்று ஏவினர். ஆசாரியர் இப்படிச் சொல்லுதலும் அவரது திருவடியைச் சிறிதும் விருப்பமில்லாத பிரிவனாயிருந்தாலும் அவர் நியமநத்தை அதிக்கிரமிக்கக் கூடாதென்று அவர் திருவடியை வணங்கி, நகரத்திற்குப்போய், அன்று இரவில் கண்ணுறங்கி, அருணோதய காலத்தில் விழித்து, பத்திரி[illegible]ப சந்தனாதிகளையும் ஆடையாபரண வகை

கலையுங்கொண்டு வாத்திய விசேஷ முழக்கத்தோடும் சேனா சமூகத்தோடும் நதிக்குச்சென்று நீராடி, உண்ணத் தகுந்த பதார்த்தங்க ளெல்லாவற்றையும் சேகரித்துக்கொண்டு, ஆசாரியரிடத்திற்குப்போய் வணங்கித் தான் கொண்டு போன ஆடையாபரணாதிக ளெல்லாவற்றையும் எதிரே வைத்து நிற்க, ஆசாரியர், அரசனே! நீ இவையாவும் எனக்குச் சமர்ப்பிப்பதில் சிறிதும் எனக்கு விருப்பமில்லை, இனி உன் நகரத்திற்குப்போ என்று சொல்ல, அரசன், குருமூர்த்தியே, நாள்தோறும் உம்மைச் சேவிக்காமல் அமுதுண்ணமாட்டேன், இந்த விரதத்தை முடிப்பதற்குத் தேவரீர் கிருபை செய்யவேண்டுமே என்று சொல்லி, தினந்தோறும் இப்படியே செய்துவந்தான். இப்படி இவன் செய்வது தாஸருக்குச் சம்மதியில்லாமையால் ஆடையாபரணாதிகளை யெல்லாம் தமது இடத்தில் வைத்துவிட்டுத் தனியே வெகு தூரம்போய், அவ்விடத்தில் ஒருமலைமேல் ஏறி, ஸ்ரீராமத்தியானம் செய்துகொண்டு தங்கியிருந்தார். பிறகு அரசன் தினந்தோறும் வரும் வழக்கம்போல வந்து, இவரை ஆசிரமத்தில் காணாதவனாய் ஆடையாபரணங்கள் மாத்திரம் இருக்கக்கண்டு மிகவும் மனம் வருந்தி, மூன்று நாள்வரைக்கும் அந்தக்காடு முழுதும் தேடியும் அவ்விடத்திலும் காணாதவனாய், இருகண்களும் நீர்பொழியக்குருசேவை எனக்குக் கிடைக்குமோ, அவர் சேவை கிடைக்குமளவும் அமுதுண்ணேன் என்று நிச்சயித்து இருப்பதைத் தாஸர் அறிந்து, அரசனுக்கெதிரே எழுந்தருள, அரசன் அவரைக்கண்டு வணங்கித் திருவடியில் விழுந்து புலம்ப, ஆசாரியர் மனமகிழ்ந்து அவனைத் தமது மார்போடணைத்துக் கண்ணீர் துடைத்தருளினார். அப்போது அரசன் இவரது திருவடியைப் பூஜித்து, நான் தினந்தோறும் உம்மைச் சேவிக்கும்படி கிருபை செய்யவேண்டும் என்று ப்ரார்த்திக்க, தாஸரானவர், அரசனே! ஏட்டில் எழுதப்பட்டிருக்கும் கவியின்பொருளை அறிந்துகொள்வதே எனது நித்தியசேவை என்று அமைந்திருக்கக்கடவாய், அப்படியல்லாமல் நேரே என்னைச் சேவிக்க விரும்பினாயானால் நீ நினைக்கும்போது அவ்விடத்தில் வந்து உனக்குக் காட்சிகொடுப்பேன் என்று சொல்லுதலும், அரசன் நமஸ்கரித்து நகரத்தை யடைந்தான். இவர் தனியே போய்விட்டார்; போய் அந்தக்காட்டைக் கடந்து, மாஹுலி என்னும் ஊரை யடுத்திருக்கிற அரண்யத்தை யடைந்து, அவ்விடத்திலுள்ள கிருஷ்ணாநதிக்கரையில் ஒரு மரத்தின்மீதேறி, அவ்வூரிலுள்ள சிறுவர்களோடுகூடி விளையாடி, அயலிலுள்ள வேறொரு மரத்தின்மேல் தாவியேறி, பலதரம் நிலத்தில் குதித்து, வானரம் விளையாடுவதுபோலப் பலசேஷ்டைகளையும் செய்து, அச்சிறுவர் தம்மீது எறியும் கற்களைத் தம்மேல் ஏற்று, புளி காடி முதலியவற்றை அவர்கள்மேல் எறி, இப்படி அநேகவிதமான விளையாட்டைச் செய்துகொண்டிருக்கும்போது அவ்வூரிலுள்ளார் இவர் முற்பிறப்பில் வானரமாய் இருந்திருக்கலாம் என்று அதிசயித்துப் பேசிக்கொண்டார்கள். இவர்காலையில் ஐயமேற்க வரும்போது கண்டவர்கள் இச்சிறுவன் இருபத்தைந்து வயதுள்ளவனும் மிகுந்த அழகுள்ளவனும் இருக்கிறான், இந்தச் சிறுவயதில் இவனுக்குப் பித்தம் பிடித்த

தே, இவன் ஜன்மம் பயனற்ற ஜன்மமாயிற்றே என்று பல நிந்தை வார்த்தைகளையும் பேசினார்கள். இப்படியிருக்க, இவர் அந்த நகரத்தில் பதினொரு வீட்டில் கிடைத்த அமுதை ஏற்று உண்டு திரிகின்றகாலத்தில், ஒருநாள் மூன்று அடை சுட்டார். அச்சமயத்தில் அரசனானவன் இவரைத் தேடிவந்து சமீபித்து நோக்கி, திருவடியில் விழுந்து வணங்கி, மனமகிழ்ந்திருக்க, தாஸரானவர், தாம் சுட்ட மூன்றடைகளில் ஒன்றைப் பகவானுக்குச் சமர்ப்பித்து,ஒன்றைத்தாமுண்டு, ஒன்றை அரசனுக்குக்கொடுக்க,அவன் கையிலேற்றுநின்று அவ்விடத்திலேயே உண்டு, அளவற்ற ஆநந்தங் கொண்டு, ஆசாரியரிடத்தில் விடைபெற்றுப் போய்விட்டான். இதைக் கண்டவர் யாவரும் அரசன் இந்தப் பித்தனிடத்தில் அநுக்ரஹம் பெற்றானே, இவன் ஒரு பைத்தியக்காரனென்று இகழ்ந்தார்கள். பிறகு இவர் ஸ்ரீராமநாம ஸ்மரணை செய்துகொண்டே சிறுவரோடு விளையாடிக்கொண்டிருக்கையில், ஒருசிறுவன் எறிந்த கல் இவருடைய நெற்றியிற் பட்டவுடனே, இவர் மூர்ச்சித்து நிலத்தின்மேல் விழுந்து உயிர் நீங்கினவர்போலிருக்கக் கண்ட சிறுவர்கள், இந்தச்செய்தியை அரசனறிந்தால் நம்மையெல்லாம் உயிர் வாங்குவானென்று அஞ்சி, ஒருவருமறியாமல் ஆற்றுமணலில் ஒரு குழி தோண்டி அந்தக் குழியில் இவரைப் போட்டு மூடிவிட்டார்கள். அப்படி அவர்கள் மூடிவிட்டுப் போனபிறகு அரசன் சற்குருநாதனைத் தேடிவந்து இவரை யிருப்பிடத்திற் காணாமையால் அவ்வழியில் எதிர்ப்பட்டவர்களை வினவ,அவர்கள்,அரசனே! விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்கள் யாரோ ஒரு யதியை ஆற்றுமணலிற் புதைத்துப்போனார்கள் என்று சொல்ல, அரசன், எங்கேயென்று கேட்க, மாவுலிநகரத்தில் என்றார்கள். அரசன் விரைந்து மாவுலிநகரத்துக்குப் போகிறபோது, அவ்வூரார் அரசன் வருவதை முன்னே நினைந்து, எழுநாளாய்த் தன் ஆசாரியனைத் தேடிக் காணாமல் மன வருத்தத்தோடு வருகிற அரசன் இந்தச் செய்தியை யறிந்தால் நமக்கெல்லாம் கொடுமையான தண்டனை நேரிடும், ஆகையால் அந்த ஸந்யாஸியின் பிரேதத்தைச் சுட்டுப்பொடியாக்கி நீரில் கலக்கிவிட்டு வருவோமென் றெண்ணி, புதைத்த இடத்திற்போய் மணலைத் தோண்டினவுடனே, இவர் தூங்கியெழுந்தவர்போலெழுந்து உரத்த சத்தமாய்க் கனைக்க, வந்தவர்களெல்லாரும இறந்து எழு நாளாகியும் இவன் உயிரோடிருக்கிறான், இவன் ஒரு அவதார புருஷனாயிருக்கலா மென்று பயந்தோடிவிட்டார்கள். ஊரார் வந்து இவரைக்கண்டு ஓடிப்போன சங்கதியைச் சிலர் விரைந்து வந்து அரசனுக்குச் சொல்ல, அரசன் தாயைக் காணாமல் திகைத்த குழந்தை அந்தத் தாயைக் கண்டால் எவ்வளவு சந்தோஷமடையுமோ,அவ்வளவு சந்தோஷமடைந்து வந்து, குருநாதரைக் கண்டு, திருவடியை வணங்கி நிற்க, குருநாதரும் அரசனை யெடுத்து மார்போடணைத்துத் தழுவிக்கொண்டார். அரசனும் சிறுவர்கள் செய்த செய்கையைக் கேள்விப்பட்டு, சற்குருநாதருடைய தபோமஹிமையை நினைத்து மிகவும் ஆச்சரியமடைந்து,அவரது கட்டளையின்படி, சமையல்செய்து, தேசிகரையுண்பித்து,

மீதிலைத்தானுண்டு, அடிவணங்கி, ஸ்வாமீ! தேவரீருடைய நகரத்துக்கு எழு
ந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, குருநாதர் அரசனை நோக்கி, எழு
நாளாக என்னைத் தேடி வருந்தினாய், நீ ஊருக்குப்போ, நீ நினைக்கும்போது
நான் நகரத்துக்கு வருகிறேன் என்று சொல்ல, அரசன் விடைகொண்டு
நகரத்துக்குப் போனவுடனே, தாசரும் வனத்துக்குப் போய்விட்டார். வனத்
தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது, தத்து என்னும் பெயரையுடைய
ஒரு அம்பட்டன் இவரிடத்தில் வந்து வணங்கிநின்று, அடியேனுக்கு உப
தேசஞ்செய்து, என் பிறவித் துன்பத்தை யொழித்தருள வேண்டுமென்று
ப்ரார்த்திக்க, அவனுடைய மனநிலையை யறிந்த குருநாதரானவர் அவனுக்கு
த் தீக்ஷை செய்து, இடைவிடாமல் ஸ்ரீஹரிநாம ஸ்மரணை செய்யும்படி நிய
மித்து, அப்படியே அவனுஞ் செய்துகொண்டு இவரை விட்டுப் பிரியாமலிரு
க்குங் காலத்தில், ஒருநாள் அவனை யழைத்துக்கொண்டு, சாதார் நகருக்குப்
போகும்போது, வழியில், நகரம் ஒருகோசதூரமாயிருக்குமிடத்தில் நீராடி
ஸ்ரீ ஹரிபூஜை செய்துகொண்டிருக்கும்போது, தத்து என்பவனாகிய சீடன்,
பசி பொறுக்காதவனாய் அங்குள்ள ஒரு சோளக் கொல்லையிற் போய், கதிர்
களை யொடித்துச் சுட்டுக்கொண்டிருப்பதைக் கொல்லைக்குடையவன் கண்டு
விரைந்து வந்து தன் கையிலிருந்த கோலால் தத்துவை நன்றாய் அடித்தது
மன்றி, அவனை யிப்படிச்செய்ய ஏவினவன் இவனென்று நினைத்து, தாசரை
யும் கைசலிக்க அடித்துப் போய்விட்டான். தாசர் நகைத்துக்கொண்டிருந்
தார். தத்து குருநாதரைக்குறித்து மனம் வருந்தினான், அவன் வருந்துவதை
க்கண்ட தாசர், அவனை நோக்கி, ஸ்ரீஹரி தாசருக்கு இன்பமும் துன்பமும்
சமானமாகும், கதிர்களை யொடிக்கும்போதிருந்த சந்தோஷம், பயிர்க்காரன்
அடிக்கும்போதும் நமக்கிருக்கவேண்டும், அப்படியிருப்பதைவிட்டு நீ துக்கி
ப்பது தகுதியல்லவென்றார். அதைக் கேட்ட சீடன், ஸ்வாமீ, அவன் கதி
ரொடித்த என்னை யடித்தது நியாயமே, தேவரீரை யேனடித்தான்? அது
அநியாயந்தானே, அதற்காக நான் மனம் வருந்தினேன் என்றான். தாசரான
வர், இந்தச் செய்தியை ஒருவருக்குந் தெரிவிக்கவேண்டாமென்று நியமித்
தார். இப்படி யிருக்கும்போது, அரசன் அனுப்பின தூதர் சிலர் வந்து தாச
ரிருப்பிடத்தில் தேடிக் காணாமல் அலையும்போது, இவர் இவ்விடத்திலிருப்ப
தாகக் கண்டோர் சொல்லக் கேட்டுப் போய், அரசனிடத்திற் சொல்ல, அர
சன், நகரத்தை அலங்கரிக்கும்படி கட்டளையிட்டு, சேனைகளோடு புறப்பட்டு
வந்து, குருநாதரைக் கண்டு வணங்கிப் பல்லக்கின்மேலேற்றிக்கொண்டு நகர
த்துக்குள்ளே பிரவேசித்து ஊர் வலம் வந்து, அரண்மனையை யடைந்து,
குருநாதருக்குச் செய்ய வேண்டிய உபசாரங்களெல்லாம் செய்து, அமுது
செய்தருளப் பண்ணி, புஷ்ப சந்தன தாம்பூலாதிகள் கொடுத்து மகிழ்வித்த
பிறகு, இவரோடுவந்த தத்து என்னும் சீடனைத் தனியேயழைத்து, தேசிக
ருடைய முதுகு தடித்திருப்பதற்குக் காரணம் யாதென்று கேட்க, அவன்,
தேசிகர் சொல்லவேண்டாமென்று சொன்னதனால், அரசன் கேள்விக்கு

விடை சொல்லாமல் மௌனமாயிருந்தான். அரசன் அவனை நோக்கி, நீ உண்மையைச் சொல்லாமற்போனால் நான் உயிர் விடுவேன் என்றான். இது கேட்ட தத்து உண்மையைச் சொல்லுதலும், அரசன் அந்தச் *சோளக் கொல்லைக்காரனை வரவழைத்துச் சிறைசெய்வித்தான், இந்தச் செய்தியைத் தாசர் அறிந்து, அவனை வரவழைக்கும்படி அரசனுக்குச் சொல்ல, அரசன் அவனைச் சிறைச் சாலையிலிருந்து அழைப்பித்தான், அப்போது குருநாதர், அரசன் போர்த்திருந்த சாலுவையை அவனுக்குக் கொடுப்பித்து, அவனை நோக்கி, நீ போய் உன் கொல்லையைப் பாதுகாத்துக்கொண்டு சந்தோஷமாயிருக்கக் கடவா யென் றனுப்பிவிட்டார். இதைக் கண்ட சபையாரெல்லாரும் தாசரது பெருங்குணத்தை வியந்து கொண்டாடினார்கள்! பிறகு தாசரானவர் மூன்றுநாள்வரைக்கும் அரசன் விருப்பப்படி யிருந்து, மூன்றுநாள் ராத்திரியில், தத்து என்னுஞ் சீடனோடு வனத்துக்குப்போனார். விடியற்காலத்தில் அரசன் எழுந்து ஆசிரியரைக் காணாமல் தேடிக்கொண்டு போய், வனத்திலிருக்கக் கண்டு அடிவணங்கி நிற்க, தாசர் அவனை நோக்கி, நான் திரியம்பகத்துக்குப் போய் வர நிச்சயித்திருக்கிறேனென்று சொல்லுதலும், அரசன், அடியேனும் வருகிறேன் என்றான். அதற்குத் தாசர் சம்மதிக்காமல் அவ்விடத்தில் துருக்கருடைய கலகம் மிகுதியா யிருக்கின்றது, ஆகையால் நீ என்னோடு வரத்தகாது, நீ அரசாட்சியை நடத்திக்கொண்டு சுகமா யிரு, நான் போய் விரைவில் மீண்டு வருகிறேன், நான் வருமளவும், நீ ஆஞ்சநேயரையும் ஸ்ரீராம பிரானையும் பூஜித்துக்கொண்டிரு வென்று சொல்லி, நான் போகும் வழியில் அநேக ஸாது ஸஜ்ஜநங்களிருப்பார்கள், அவர்களுக்கெல்லாம் அவ்வவ்விடங்களில் அமுது செய்விக்கவும், புண்யக்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்யவும் கொஞ்சம் பொருள் தரவேண்டுமென்று கேட்க, அரசன் அவர் விருப்பத்தின்படியே யானைகளின்மீதும், ஒட்டகங்களின்மீதும், குதிரைகளின்மீதும் அளவற்ற திரவியத்தையும் ஆடையாபரணாதிகளையும் சுமப்பித்துக்காவலாளரையும்கூட அமைத்தனுப்பிவிட்டு, ஆசிரியர் நியமித்தபடியே மாருதி பூஜை முதலானவைகளைக் குறை வற நடத்திவந்தான். இங்கே யிப்படியிருக்க, தல யாத்திரையாய்ப் புறப்பட்ட தாசர், அங்கங்குள்ள ஸாது ஸஜ்ஜநங்களை அமுது செய்வித்தும் ஆடையாபரணாதிகள் தந்தும் மகிழ்வித்துக்கொண்டேபோனாலும், தாம் பிக்ஷையே புசித்துப்போய்த் திரியம்பகம் என்னும் ஊரை யடைந்து, தாந தர்மங்களைச் செய்துகொண்டு அவ்விடத்தில் தங்கி யிருந்தார். அப்போது அவ் வூரிலுள்ள வேதியர் வந்து இவரை நோக்கி, நீர் வபநம் செய்துகொள்ளும் என்றார்கள். அதற்கு இவர் ஒன்றுஞ் சொல்லாமல் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். அப்படியிருக்கும்போது ஒருநாள், தத்துவோடு விளையாட நினைத்து, அவன் ஒரு குறி வைக்க, அதைத் தப்பாமல் படும்படி கல்லெறிந்தார். அதைக் கண்ட யாவரும் வியந்தார்கள்! மற்றொரு நாள் ஒரு பறவையின்மேல் ஒரு கல்லை வீச, அந்தக் கல் அந்தப் பறவையின்மேல் தப்பாமற் பட்டதனால்

அது இறந்து விழுந்தது. அதைக் கண்ட வேதியர், இவர்க்குச் சிறிதாயினும் ஜீவகாருண்ய மில்லையே, இவரை மஹா புருஷரென்று நாம் எப்படி நம்புவது என்று பேசிக்கொள்வதையறிந்த தாசர், இறந்துகிடக்கிற பறவையைக் கைக்கொண்டு வேதியரிடத்துக்கு வந்து, ஐயரே, நான் ஜீவகாருண்யம் சிறிதுமில்லாமல் இதைக் கொன்றேன், நீங்கள் ஜீவகாருண்ய முதலான நற்குணங்கள் மிகுதியாகவுடையவர்க ளாகையால், இந்தப் பறவையின்மீது அருள் செய்து, உமது புண்ணியத்திற் சிறிது பகிர்ந்து கொடுப்பீர்களானால், இது பிழைக்கும், உங்களுக்குப் புண்ணியமுண்டாகும், என் பாவமும் தொலையும் என்றார். அதைக் கேட்ட வேதியர், இறந்ததைப் பிழைப்பிக்க யாராலாகும்? ராமனாலுமாகாது, நாங்கள் புண்யவான்களேயானாலும் இதைப் பிழைப்பிக்கச் சக்தியுடையோ மல்லோம் என்றார்கள். அதைக் கேட்ட தாசர் சிரித்து, ராமனாலும் ஆகாதென்கிறீர்களே, அந்த ஸ்ரீராம நாமமே எல்லாம் செய்ய வல்லதாகும்போது அவர் செய்ய வல்ல ராகமாட்டாரோ! இதோ, ராமநாமத்தின் மகிமையைப் பாருங்களென்று, ராமநாமஸ்மரணை செய்துகொண்டே தமது கையிலிருந்த உயிர் நீங்கின பறவையை மேலேயெறிய, அது உயிர்பெற்றுப் பறந்துபோயிற்று. அதைக் கண்ட வேதியர் அதிசயித்து, இவர் மஹாத்மா, இவரை ராமதாசர் என்று சொல்லத் தடையில்லை யென்று இவரது திருவடியை வணங்கித் தோத்திரம் செய்தார்கள். பிறகு ஒருமாசகாலம் அங்கே தங்கியிருந்து, புறப்பட்டுப் பஞ்சவடியைச் சேர்ந்து, அவ்விடத்தில் ஸ்ரீராமபிரானைக் கண்டு வணங்கி, ப்ராஹ்மண ஸமாராதநம் முதலானவைநடத்தி, அன்றிரவில் ஸ்ரீராமநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருக்கும்போது, ஸ்ரீராமமூர்த்தியானவர் ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் எழுந்தருளித் தாசருக்கு மாத்திரம் காட்சி கொடுத்து, இவரை மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு, இனிய வசனங்கள் பேசி மறைந்து போய்விட்டார். பிறகு தாசரானவர், ஜபதபங்கள் முதலான யாவும் ஸ்ரீராமநாமஸங்கீர்த்தநந்தாலுண்டாகிற பயனை யுண்டாக்கமாட்டாவென்று, ஸ்ரீராமநாமத்தின் மஹிமையை அநேகவிதமாய் அங்குள்ளவர்க ளெல்லார்க்கும் எடுத்துச் சொல்லி அவர்களை ஸ்ரீராமபக்தர்களாகச் செய்து, விடியற் காலத்தில் பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, யாவர்க்கும் ப்ரஸாதவிநியோகம் செய்வித்து, சக்ரவர்த்தித் திருமகனார்க்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, பல்லாண்டு பாடி, விடைபெற்று, டாங்களிக்குப் போய், அவ்வூராரும் உத்தவரும் வணங்கப் பெற்று, பிறகு தாம் அவ்வூரில் மாப் பிச்சை யேற்று வந்து அடைசுட்டு, அதைப் பகவதர்ப்பணம் செய்து, வேதியர்க் கருத்தி, மீதியைத் தாம் புசித்து, அன்றிரவில் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து, இப்படி மூன்று நாள் அங்கே தங்கித் தம்மை வந்தடைந்தவர்களுக்கெல்லாம் உபதேசம்செய்து, பிறகு புறப்பட்டுத் தாய் தந்தையர் இருக்கிற ஊரையடையவுத்தேசித்து, கங்கைக் கரைவழியாய் வந்து ஜாம்பூர்க்கருகே யிறங்கினார். இந்தச் செய்தியை அவ்வூரார் அறிந்து நமது அரசனாகிய சிவாஜிக்கு ஆசாரி

யராயிருப்பவர் எழுந்தருளினால் அவரை நாம் போய்த் தரிசநம் செய்யாம லிருக்கக்கூடாதென்று புறப்பட்டு ஸ்ரீபாத காணிக்கை முதலானவைகள் கொண்டுவந்து வைத்து வணங்கித் தூரத்தில் நின்றார்கள். நின்றவர்களுள் ஒரு வேதியன் இவர்க்குச் சமீபத்தில்வந்து, நீர் அரசனுக்குக் குருவானவரும் சூரியாஜி பண்டிதருக்குப் புதல்வரல்லீரோ! உமது பெயர் நாரணரல்லவோ வென்று கேட்க, தாசர் நகைத்திருந்தார். மேலும் அந்த வேதியன் இவரை நோக்கி, இப்பொழுது நீர் எங்கே யிருக்கிறீர் என்று கேட்க, பஞ்சவடியி லிருக்கிறேன் என்றார். பிறகு அந்த வேதியன் உமது தாய் தந்தையரை வரச்செய்கிறேனென்று சொல்ல, இவர் என் தாய் தந்தையர் என்னி டத்திற்கு வருவது நன்மையல்ல, நான் அவர்களிடத்திற்கே போகிறேன். என்றெழுந்து கால்நடையாய்ப் போகும்போது அவ்வூர்க்கு அதிகாரியா யிருப்பவன் விரைந்துபோய்த் தந்தைக்குத்தெரிவித்தான். அப்படித் தெரிந்த வுடனே தாய் தந்தையர் மிகுந்த களிப்படைந்திருக்க, இவரும் சேனைக ளோடு வந்து இருமுது குரவரையும் வணங்கி, தமையனாரையும் வண ங்கினார், அவர்களும் இவரது வணக்கத்தை யேற்றுக்கொண்டு சொல்ல வேண்டிய முகமன்வசநங்களைச் சொன்னார்கள். அன்றியும் இத்தனைநாள் எங்களை மறந்து எப்படி யிருந்தாய் என்றும், இந்த வேஷத்தை நாங்கள் காணும்படியான பாக்கியம் செய்திருந்தோம் என்றும், பற்பல வுருக்க வார்த்தைகளைச் சொல்லக்கேட்ட தாசரானவர், அவர்களுடைய துக்கத்தை நீக்கும்பொருட்டு அநேகமான அபங்கக் கவிகளைச் சொன்னார். அப்போது அம்மூவரும் இவன் நமது குலமுழுதும் ஈடேறப் பிறந்தவனென்று அதிச யித்துப்புகழ்ந்தார்கள். அதின்பிறகு இவர் பிக்ஷையேற்கப்போனார். இதைக் கண்டவர் யாவரும், இவர் அரசனுக்குக் குருவாயிருந்தும் பிக்ஷை யேற்குந் தொழிலை விடவில்லையே; இவர் மிகவும் வைராக்யசீலர் என்று கொண்டாடி னார்கள். பிறகு இவர் பிக்ஷையேற்று வீட்டிற்கு வந்தவுடனே இவருடைய தந்தையார் வேதியர்க்கு அமுதளித்து அதின்பிறகு இரண்டு புதல்வரோடு கூடியிருந்து உண்டு மகிழ்ந்திருக்கும்போது, தாசரானவர் சாத்தாருக்குப் போக ப்ரயத்நித்ததை யறிந்த தாய் தந்தையரும் தமையனும் உமது சிஷ ரான அரசனைப் பார்க்க நாங்களும் வருகின்றோம் என்றார்கள். அதற்குத் தாசர் சம்மதித்து, தந்தையையும் தமையனையும் யானைமேலும் தாயைச்சிவி கைமேலும் ஏற்றிக்கொண்டு சாத்தார்க்கு அருகே வரும்போது, சிலர் ஓடி வந்து அரசனுக்குச் சொல்ல, அவன் தன் சேனையோடு புறப்பட்டு வந்து எதிர்கொண்டு வணங்கி யழைத்துப்போய், அவர்க்குத் தகுந்த ஆசநங்கள் கொடுத்துபசரித்தபிறகு, வேதியர்க்குஅமுதளித்து, பிறகு தாசர் முதலான நால்வருக்கும் அமுதளித்து, அவருண்ட மிச்சிலைத்தானுண்டு, தாசருடைய தமையனாரை இராக்கதை நடத்தும்படி செய்தான். அப்படியே அவர்செய்த காலக்ஷேபத்தைக் கேட்டவர் யாவரும் மகிழ்ந்திருந்தார்கள். பிறகு பகவா னுக்கு ஹாரதி சமர்ப்பித்து யாவருக்கும் ப்ரஸாத விநியோகம்செய்து எல்

லாரும் போனபிறகு தாய் தந்தையரையும் தமையனையும் முன்பே யுறங்கச் செய்து, பிறகு தாசருக்கு உபசாரஞ்செய்து உறங்கச்செய்தான். இப்படி ஒரு மாதம் கழிய, தாசரானவர் அரசனை நோக்கி, என் தாய் தந்தை, தமையன் மாரை ஊருக்கனுப்பக் கடவாயென்றார். அரசனும் அவர் கட்டளைப் படியே அவர்களுக்கு வேண்டிய ஆடையாபரணாதிகளெல்லாம் கொடுத்து, ஊருக்கனுப்பிவிட்டான். தாசர் முன்போலவே ஆடையாபரணாதிகளை நீக்கி விட்டு, தத்துவையமைத்துக்கொண்டு காட்டுக்குப் போய்விட்டார்.

அப்பால் மாவலியென்னும் ஊரிலிருப்பவனும் சிறிதும் படிப்பில்லாதவனும் போஜனப்ரியனும் ஆகிய ஒரு வேதியன், அரசனுக்குக் குருவாயிருக்கிற தாசரை யடைவோமானால் அரசனால் நமக்கு நல்ல போஜனங் கிடைக்கும், அதிக திரவியமும் சம்பாதிக்கலாம் என்று ஆலோசித்து, தாசரிருக்கு மிடந்தேடி வந்து, இவரைச் சூழ்ந்திருக்கிற புலி கரடிகளைக் கண்டு நெருங்க அஞ்சி, தூரத்திலிருந்து வணங்கினான். தாசர் அந்த வேதியனை நோக்கி, நீ யஞ்சவேண்டாம் என்று சமீபத்தில் வருவித்து, உமக்கு வேண்டியதென்ன வென்று கேட்க, உம்முடைய அருள் பெற வந்தேனென்றான். தாசர் என்னருள் பெற்றால் உனக்கென்ன பயனுண்டென்றார். அதற்கவன், உமதருளுக் குரியவனானால் எனக்கு வஸ்திராபரணங்களும் நல்ல வுணவும் கிடைக்கும் என்றான். இதைக்கேட்ட தாசர் சிரித்து இவன் உபதேசம்பெறத் தகுந்தவனல்லனென்று நினைத்துப் போவென்று சொன்னவுடனே, அவன் உபதேசம் செய்யாமற்போனால் நான் உயிர் விடுவேனென்றான். அதைக் கேட்ட தாசர் இவன் மூடமூடன், இவன் அப்படிச் செய்தாலும் செய்வான் என்று அவனுக்கு ஒரு உபதேசஞ்செய்து, நீ இன்றுமுதல் தினந்தோறும் ஸாதுசேவை, ஜீவகாருண்யம், வேதார்ச்சனை முதலானவைகளும் நாமஸங்கீர்த்தனமும் செய்துகொண்டிரும் என்று நியமிக்க, அந்த வேதியனும் அப்படியே செய்கிறேனென்று சொல்ல, பிறகு தாசரானவர் தமது வழக்கப்படியே பிக்ஷையேற்றுவந்து தாமுமுண்டு, தத்துவுக்குங் கொடுத்து மகிழ்ந்து, ராம நாமஸ்மரணை செய்துகொண்டிருந்தார். அப்போது அரசன் அவ்விடத்திற்கு வந்து, தான் கொணடுவந்த வுணவுகளைத் தாசர்க்குச் சமர்ப்பிக்க, அவருண்டு மீதியை அங்கேயிருக்கிற வானரங்களுக்குக்கொடுத்து, தாமுண்டு மீதியாயிருந்த அப்பத்தை அரசனுக்குக்கொடுக்க, அவன் வாங்கியுண்டு ஊருக்குப்போய் விட்டான். இதை யறிந்த பார்ப்பான், அரசனாயிருப்பவன் உப்பில்லாதஎச்சி லப்பத்தை யுண்டானானால், இவ ரருளால் நமக்கென்ன பயனுண்டாகும் என்று மனம் வருந்தி, மூன்றுநாள் ஊணுறக்க மில்லாதவனாய், இனி நமது, உயிர் நீங்கும் காலமுழுதும் பிக்ஷையேற் றுண்ணவும நம்மாலாகாது என்று யோசித்து, தாசரிடத்திற் போய், நான் அயலூருக்குப் போகிறேனென்று விடைகேட்க, தாசரும் நான்சொன்னபடியே நடந்துகொள் என்று சொல்லி விடை கொடுக்கப் போய்விட்டான். போய் எங்கே நல்ல வுணவு கிடைக்கு மென்று விசாரிக்க, ஒருவன் இவனை நோக்கி, ஓ ப்ராஹ்மணா, இவ்வூர்க்குத்

தலைவனு யிருப்பவன் நாள்தோறும் ப்ராஹ்மணருக்கும் ஒரு மஹா புருஷருக்கும் அமுதளிக்கிறான், அங்கே போனால் உனக்கு நல்ல வுணவு கிடைக்கும் என்று சொல்ல, அப்படியே அவனிடத்திற்குப் போய் ப்ராஹ்மணபங்தியிலிருந்து வயிறார வுண்டு, இந்த மஹா புருஷரிடத்தில் உபதேசம் பெற்றால் நமக்கு நல்ல போஜநம் கிடைக்கும் என்று அந்த மஹா புருஷரை வணங்கினான். அவர் நீ யாரென்று கேட்க, தன் வரலாறு முழுதும் சொல்ல, அந்த மஹா புருஷர் இவனை நோக்கி, ஓ ப்ராஹ்மணா, ஒருவரிடத்தில் உபதேசம்பெற்ற பிறகு மற்றொருவரிடத்தில் பெறுவது தகாத காரியம் என்று சொல்ல, வேதியன் நல்ல காரியம் செய்தீர், அவரிடத்தில் உபதேசம் பெற்றது பட்டினி யிருந்து சாவதற்கே யன்றி வேறல்ல வென்று சொல்லி, நீரே உபதேசம் செய்யவேண்டுமென்று நிர்ப்பந்திக்க, அவர் இவனை விலக்க நினைத்து, நீ உனக் குபதேசித்தவரிடத்திலே அந்த வுபதேசத்தைக் கொடுத்துவிட்டு வாவென்றார். அப்படியே இவன் ராம தாசரிருக்கும் வனத்திற் போய் அவரைக் கண்டு, நான் ஒருபெரிய குருவினிடத்தில் உபதேசம் பெற்றேன், உமது உபதேசத்தை நீரே வாங்கிக்கொண்டு எனக்கு விடைகொடும் என்றான். தாசர் அதிசயித்து, உன்னைப்போற் சீடர்கள் இந்தவுலகத்தில் எங்கும் கிடைக்கமாட்டார்கள், வாயில் நீர் வார்த்துக் கொப்பளித்து உமிழ்ந்துவிடு என்றார். அப்படியே அவன் செய்தான், இவன் உமிழ்தலும் அந்த வுமிழ் நீர் ஒரு பாறைமீது விழுந்து, தாசர் உபதேசித்த பதின்மூன்று அக்ஷரங்களும் அந்தப் பாறையின்மீது தோன்றி விளங்கின. அதை இப்பொழுதுங் காணலாம். பிறகு வேதியனைத் தாசரானவர் நோக்கி, இனி உமது இஷ்டப்படியே போகலாமென்றார். உடனே வேதியன், அங்நமிட்ட வேதியனிடத்துக்குப் போய், தாசரிடத்தில் நடந்த சங்கதியைச சொல்ல, அந்தப் பெரியவர், ராமதாசர் சொன்ன மந்திரத்தை இழந்துவிட்டாய், அந்த மந்திரத்தைப் பார்க்கிலும் என்னிடத்தில் வேறு மந்திரமில்லை, குரு உபதேசத்தைக் கொப்பளித்து உமிழ்ந்துவிட்ட நீசனே, என் னருகே யிராதே, போ என்று கடிந்து சொன்னார். பார்ப்பான் மிகவும் பயந்து அவ்விடத்தில் நிற்காமல் நீங்கிப் போய் விட்டான். ராமதாசர் தமது வழக்கம் விடாமல் காட்டிற்குப் போய்ச் சஞ்சரிக்கும் காலத்தில், அவ் வழியாகப் பண்டரிபுரத்துக்கு யாத்திரை போவோர்வந்து இவ்விடத்தி லிறங்கி, அன்றிரவில், துக்காராம் சாமிகள் செய்த அபங்கக்கவிகளைத் தாளம் மிருதங்கம் முதலான வாத்யவிசேஷங்களோ டமைத்துப் பாடிப் பண்டரிபுரத்தின் மஹிமையெல்லாம் விளங்கச்செய்தார்கள். அவர்களைத் தாசர்நோக்கி, ஐயரே, நீங்கள் எங்கே போகிறீர்களென்று கேட்க, அவர்கள், நாங்கள் பண்டரி புரத்துக்குப் போகிறோம் என்று சொன்னதுமன்றி, இவரிருக்கும் இருப்பைக்கண்டு, இவர் மஹா யோகியென்று நிச்சயித்து, இவரது திருவடியைத் தொழுது, எம்மோடுவாரும் என்றார்கள். அதுகேட்ட தாசர், பண்டரி புரத்தில் எந்தத்தெய்வமிருக்கிறது? அவரால் எந்தெந்த அடியார்கள் என்னபேறு பெற்றார்கள்

என்றார், அவர்கள், பண்டரிபுரத்தில் ஸ்ரீ கண்ணபிரான் எழுந்தருளியிருக்கிறார், அவர் புண்டலீகர் முதலானவர்களுக்குக் காட்சி கொடுத்துப் பெரும்பேறளித்தருளினார், எம்மோடுவந்து அந்தப் பெருமானைச் சேவிக்கக்கடவீர் என்றுவேண்ட, தாசரானவர், என் குலதெய்வமாகிய ஸ்ரீராமபிரானிடத்திலேயன்றி மற்றொரு தெய்வத்தினிடத்தில் என் மனம் பொருந்தவில்லையே, நான் என்ன செய்வேன் என்றார். அவர்கள் சரியே யென்று போய் விட்டபிறகு, இன்னும்வேறு சில ஹரிதாசர்கள் அழைக்க அவர்களுக்கும் அப்படியே சொல்ல, அவர்கள், இவர், கற்புள்ளமாதர் தமது கணவரையன்றி வேறொருவரைக் கண்கொண்டு பார்ப்பதுஞ் செய்யமாட்டார்களல்லவா? அதுபோலத் தமது குலதெய்வமாகிய ஸ்ரீராமபிரானையன்றி வேறு தெய்வங்களை ஸ்மரிக்கிறதில்லை யென்கிற விரதம பூண்டிருக்கிறார் என்று பேசிக்கொண்டுபோய் விட்டார்கள். இப்படியிருக்க, ஸ்ரீபகவானானவர் இவரது மனவுறுதியை யறிந்து, தாமே ஒரு வேதியருடங் கொண்டு, இவர் வாசஞ்செய்கிற காட்டில் வந்து, ஸ்நாநம செய்து அடைசுட்டு ஸ்ரீராமஸமர்ப்பணஞ் செய்து பிறகு உண்டு கொண்டிருக்கிற ராமதாசரிடத்தில் வந்து சேர்தலும், வேதியரைக் கண்ட தாசர் அவரை அடிவணங்கி, இந்த ப்ரஸாதத்தை நீர் உண்பீரானால், ஸ்ரீஜாநகி ரமணனுக்கு உவப்புண்டாகுமென்றார். அதுகேட்ட வேதியர், நான் பட்டினியாயிருந்துவந்த சமயத்தில் எனக்கு இப்படிப்பட்ட அப்பத்தைக் கொடுத்தீரே, உம்மைப்போலப் புண்ணியவான்கள் யாரிருக்கிறார்கள்? நீர் பரம பாகவதராயிருக்கிறீர், நீர் செய்த வுபகாரத்துக்கு நான் என்ன கைம்மாறு செய்யக் கடவேனென்று புகழ்ந்திருந்தார். அப்போது தாசர் அவ்வேதியரைநோக்கி, உமதுபெயர் யாது? நீர் எவ்விடத்திலிருப்பது? நீர் இங்குவந்த காரண மென்னவென்று கேட்க, வேதியர், என்பெயர் விட்டலபடவே, நான் இருப்பதுபண்டரிபுரம், பண்டரியாத்ரைக்காரரை யெதிர்கொண்டழைத்துக் கொண்டு போவது எனக்கு வழக்கம், இப்போது ஆடிமாதம் நெருங்கியிருப்பதனால், ஆடி யேகாதசி உத்ஸவத்துக்கு விசேஷமாய் வருகிற ஹரிதாசரை யெதிர் கொண்டழைத்துப் போகவந்தேன் என்று சொல்லி, நீரும் வந்தால் பண்டரி நாதனைச்சேவித்து வரலாம் என்றார். அதற்குத்தாசர், நான் ஸ்ரீராமபிரானையன்றி வேறுதெய்வத்தை ஸ்மரிக்கமாட்டேன் என்றார். அதுகேட்ட வேதியர், உமக்கு ஸ்ரீராமஸேவையும் கிடைக்கும் என்றார். அப்படி ஸ்ரீராமபிரான் அங்கே யெழுந்தருளிச் சேவை சாதிக்கிறதாயிருந்தால் நான் வருகிறேனென்றார். வேதியன் அப்படியே உமக்கு ராமசேவை கிடைப்பதற்குத் தடை யில்லையென்று சொல்லுதலும், தாசரானவர் மனமகிழ்ச்சியோடு, சீடனாகிய தத்துவையும் அழைத்துக்கொண்டு வேதியரைப் பின்தொடர்ந்து போக, அவர் இன்னமும் வருகிற ஹரிதாசரை யழைத்துவருகிறேன், நீங்கள் போய்க்கொண்டே யிருங்களென்று யாத்திரைக் காரரை இவர்க்கு வழித்துணையாய்ச் சேர்த்துவிட்டுப் போய்விட்டார். தாசரானவர் பண்டரிபுரத்தருகே வந்தவுடனே, பண்டரி நாதனது கோயிற் சிகரத்தைக் கண்டு

மிகவும் ஆநந்தம் கொண்டு, பகவானைத் தோத்திரம் செய்துகொண்டு போகும்போது, பல வாத்திய விசேஷங்களோடும் பாடி யாடி ஆநந்த பரவசராய் மெய்மறந்து நிற்பதும், பண்டரி நாதனை அன்ப ரெல்லாரும் தழுவிக்கொள்வதும் ஆகிய அற்புதமான செய்கைகளை யெல்லாம் கண்டு மிகவும் வியந்து சொல்லுவாராயினர். இப்படிப்பட்ட கோயில் இதற்குமுன்னோ நான் எங்கும் கண்டதில்லை யென்று மனமகிழ்ந்து, கருடஸ்தம்பத்தினருகே வந்து நின்று பகவானை வணங்கி, அவ்விடத்தில் சந்நிதி செய்திருக்கிற ஆஞ்சநேயனையும் வணங்கி, ஸ்ரீராமபிரான் எங்கே யிருக்கிறாரென்று கேட்க, அவர், துவாபர யுகத்தின் அந்தத்தில் இங்கே சந்நிதி செய்து எழுந்தருளி யிருக்கிற இந்தக் கண்ணபிரானே ஸ்ரீராமபிரான், வேற்றுமை யில்லை, அன்றுமுதல் இன்றளவும் இந்தக் கண்ணபிரானையே ஸ்ரீராமபிரானாகப் பாவித்து நான் அபேதமாய் வணங்கி வருகிறேன், அந்த ஸ்ரீராமபிரானே கண்ணன் என்னும் பெயர் பூண்டு எழுந்தருளி யிருக்கிறார், நீ அவரை வணங்கக்கடவாயென்று அழைத்துக்கொண்டுபோய் விட்டலப்பெருமானுக் கெதிரே விட, தாசரானவர் அந்த விட்டலப்பெருமானை வணங்கி, ஸ்வாமீ, உனது ராமரூபத்தை நான் கண்டு மகிழும்படி சேவைசாதித் தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, பகவானும் அப்படியே ஸ்ரீ ஜாநகிபிராட்டியாரோடும் இளைய பெருமாளோடும் எழுந்தருளிச் சேவைசாதித்துத் தாசரைத் தழுவிக்கொண்டார். அப்போது தாசரானவர், பஞ்சவடியிற் கண்டு வணங்கினாற்போலக் கண்டு வணங்கினின்றார். பிறகு அங்கு வந்திருந்த ஹரி தாசர்கள் இவரை நோக்கி, ஸ்ரீராம பிரானைக் கண்ணபிரானாகச் செய்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, தாசர், பகவானே, தேவரீர் முன்போலவே கண்ணபிரானாகச் சேவை சாதித்தருள வேண்டுமென்று வேண்டுதலும், பகவானவர் ராமரூபம் நீங்கி, கண்ணபிரானாகச் சேவை தந்தருளினார். இதைக்கண்டவரெல்லாரும் தாசரைப்புகழ்ந்து இவர் கையைப் பிடித்துக்கொண்டு ஊர்வலம் வந்து கருடஸ்தம்பத்தருகே வந்து, ஹாரதி சமர்ப்பித்து, சந்த்ர பாகாநதியை யடைந்து, அவ்விடத்தில் மணற் குன்றின்மே லிருந்து, நாமதேவர்பாடுகிற ஹரிநாம ஸங்கீர்த்தனங்களை இரவில் முதல் மூன்றுஜாமம் வரைக்கும் கேட்டுக்கொண்டிருந்து, பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, பகவதர்ப்பணமான பாரணம் புசித்துக்கொண்ட பிறகு, அடியாரெல்லாரும் தாசரை நோக்கி, இவ்விராக்காலக்ஷேபம் நீர் செய்யவேண்டுமென்று வேண்ட, இவர், நான் சிறுவயதுமுதல் ராமநாம ஸ்மரணை செய்துகொண்டு வனத்திற்சஞ்சரித்துக் கொண்டிருந்தேன், என்னைக் கதை செய்யச் சொன்னால், ராகதாளங்களோடு ஹரிநாம ஸங்கீர்த்தனங்களை அமைத்துப் பாடவல்லேனோ என்றார். அதற்கு அவர்கள், தேவரீர் பாண்டுரங்கபகவானை ஸ்ரீராமபிரானாகச் செய்யவும் மறுபடியும் அந்த ராமபிரானைப் பாண்டுரங்கனாகச் செய்யவும் வல்லீர், ஆதலால் கீர்த்தனங்களை ராகதாளங்களோடு அமைத்துப் பாடாமற்போனாலும், வசநரூபமாகக் காலக்ஷேபம் செய்தாலும் நாங்களெல்லோரும் கேட்டு உஜ்ஜீவிப்போம் என்றார்கள். அவர்கள்

விருப்பத்தின்படியே அன்றிராமுழுதும் ஸ்ரீராம வைபவத்தைக் குறித்து விஸ்தாரமாக உபந்யாஸம் செய்து, ஸ்ரீ ராம நாமமே முக்திக் கேதுவானதென்று வற்புறுத்தி, ஹாரதி சமர்ப்பித்து, மறுநாள் பௌர்ணமியாகையால் பாண்டுரங்கப் பெருமானைத் திருத்தேரில் எழுந்தருளச்செய்து, பல வாத்யங்கள் கோஷிக்க, கோபாலகாலா என்னும் உத்ஸவம் செய்யும்பொருட்டுக் கோபுரத்தையடைந்து ஸ்ரீகண்ணபிரான் முற்காலத்தில் செய்த பந்தாட்டம் தும்பிபாடல், கோலாட்டம், கோணங்கியாட்டம், கோமாளி முதலிய விளையாட்டின் வகைகளெல்லாவற்றையும் செய்து, கெட்டி பாரிபோளி வெண்ணெயையும், பகவானுக்கு நிவேதித்து, நிம்பராஜர் அருளின பிரசாதத்தைத் தேவர்கள் மனித ரூபமாய் வந்து வாங்குவதையும், அவற்றை யெடுத்து உட்கொள்வதையும் கண்டு, யாவரும் ஆனந்தபரவசமடைந்த பிறகு, ஆடல், பாடல், முதலிய சம்ப்ரமத்தோடு பாண்டுரங்க பகவானைக் கொண்டுவந்து கோயிலில் எழுந்தருளச் செய்தார். அர்ச்சகர்கள் பூஜை முதலியதை முடித்து அவரவர்கள் இடங்களுக்குப் போய்விட்டார்கள். அதன்பிறகு தாசரானவர் கோயிற்கதவினருகே நின்றார். உடனே பூட்டப்பட்டிருந்த கதவு தானே திறந்துகொள்ளவே தாசர் உள்ளே பிரவேசித்து, பகவானுடைய திருவடியை வணங்கி ஸ்தோத்திரஞ்செய்து, சிவாஜிமகாராஜன் என்னை எப்பொழுதும் காணாமல் வருந்துவான், எனக்கு விடை கொடுத்தருள வேண்டுமென்றார். பகவான் தாசரை நோக்கி, நீ மறுபடியும் வனத்தைவிட்டு எப்பொழுது என்னிடத்துக்கு வருவாயென்று கேட்க, தாசரானவர் தேவரீர் என்னிடத்தில் க்ருபை செய்கிற காலத்தில் வருவேனென்றார். மேலும் பகவானே, என்னை ஒரு க்ஷணகாலமும் நீ பிரிந்திருக்கலாகாதென்று வேண்ட, அப்படியே யாகட்டுமென்று பகவான் க்ருபைசெய்து விடைகொடுக்கப் பெற்றுக்கொண்ட தாசர் நாசிகபுரத்தையடைந்து, பிக்ஷையேற்று வந்த மாவைப் பிசைந்து அடைதட்டிச் சுட்டு, பகவதர்ப்பணஞ்செய்து உண்ணும்பொழுது, விட்டலபகவான் ஒரு வேதியவுருவங்கொண்டுவந்து, எனக்கு அதிக பசியுண்டாயிருக்கின்றது என்று சொல்ல, தாசர் ஐயரே, நான் சுட்டது உப்பில்லாத அடை, இது உமக்கு ஆகுமோவென்றார். அதற்கு வேதியர் நான் தவிட்டைத் தின்பவன், அதிலும் இது மேலானதல்லவாவென்று வாங்கியுண்டு, இன்று இங்குள்ள பகவத்ஸந்நிதியில் நீர் கதை செய்ய வேண்டுமென்று சொல்ல, தாசர் அப்படியே யாகட்டுமென்று அன்றிராமுழுதும் கதா காலக்ஷேபம் செய்து, ஹாரதிசெய்து, ப்ரஸாதம்பெற்று, மாவுலிக்குப் போய், அதற்கருகே யிருக்கிற வனத்தையடைந்தார். இவர் வந்த செய்தியை யறிந்த அரசன் மிகுந்த ஆவலோடு விரைந்து வந்து அடி பணிந்து நின்றான். தாசர் அவனை நோக்கி, நான் பண்டரிபுரத்துக்குப் போய்க் கண்ணபிரானாகிய பாண்டுரங்கனைச் சேவித்து வந்தேன், என்னைக் காணாமையால் நீ உண்ணாமல் பட்டினியிருந்தாய், விரைந்து போய் உண்டு பசியாறி பகவந் நாமஸ்மரணை செய்து கொண்டிருவென்று விடைகொடுக்க, அரசன் விடைபெற்றுப்போய் அன்னமுண்டு இனிதுவாழ்

ந்திருந்தான். இப்படி யிருக்கும்போது டில்லிபாதுஷா என்பவன் தன் சேனைகளோடு புறப்பட்டுத் தென்றிசை நோக்கி வரும் வழியில், க்ருஷ்ணா நதிக்கரையி லிறங்கினான். அப்பொழுது அவன் படைத் தலைவனாகிய ஒருவன் மாவுலி வனத்திற்கு வந்து ஒரு லக்ஷ்யம் வைத்து அம்பெய்தான். அதைக் கண்ட தாசர், நீ இவ்விடத்தில்வந்து அம்பெய்தலில் ப்ரயோஜநமில்லை, எய்த அம்பைப் பின்தொடர்ந்து பிடிப்பது சாமர்த்தியம் என்றார். அவன் இது யாராலும்முடியாத காரியம், இதோ நான் எய்கிறேன் எய்கிற அம்பை நீர் தொடர்ந்து பிடித்தீரானால் நீரே சமர்த்தர் என்றான். தாசர் அவனை அப்படியே எய்யச் சொல்லி, எய்த அம்பைப் பின் தொடர்ந்து பிடித்துக்கொண்டார். இதைக்கண்ட அந்தப் படைத்தலைவன் அதிசயித்து இவரது திருவடியில் வீழ்ந்து வணங்கி, நீர் அவதாரபுருஷர் என்று மிகவும் புகழ்ந்தான். தாசரானவர் அவன் கையிலுள்ள வில்லையும் அம்பையும் வாங்கி ஒரு அம்பெய்து எதிரேயிருந்த ஒரு மரம் அநேக துவாரங்களாகும்படி செய்தார். இதைக்கண்ட அப்படைத் தலைவன் இவர்க் கெதிரே நம் அரசனும் சேனைகளும் வந்தால் இவர் விடுகிற ஒரு அம்புக்கே இரையாய் விடுவார்கள் என்று அஞ்சி நடுநடுங்கிப் பலவாறு புகழ்ந்து போய் அரசனுக்கு இந்தச் செய்தியைத் தெரிவித்து அவனையும் சேனைகளையும் அழைத்துக்கொண்டு போய்த் தன் ஊரைய டைந்தான் அதின்பிறகு தாசரானவர் அவ்விடம்விட்டுச் சம்பளகட் என்னும் ஊருக்குப்போய் அன்றிராத்திரி ராம கதா காலக்ஷேபம் செய்து, அங்குள்ளோரெல்லாரையும் ஆநந்திக்கச்செய்தார். அன்றியும் உபதேசம்பெற வுத்தேசித்து வந்தவர்க்கு உபதேசித்து அவ்விடம் விட்டுப்புறப்பட்டுஸைஹபூருக்குப்போய், அவ்விடத்திலும் கதைசெய்து அங்குள்ளோரை மகிழ்வித்து, தேசபாண்டியின் புதல்வியாகிய அக்காபாயிக்கு உபதேசம் செய்து, அவளை ராமநாம ஸங்கீர்த்தநபரையாக்கி, அவளுடைய அன்புக்கிரங்கி, சிலநாள் தங்கியிருந்து, பிறகு சுராபுரம் என்னும் ஊருக்குப்போனார். அவ்விடத்தில் இவருடைய பிடார்களெல்லாரும் வந்துசேர்ந்தார்கள்.

இப்படியிருக்க, அவ்வூரிலுள்ள ஒரு கருணிகன் மக்களாகிய தத்தோபா அம்பாஜி என்கிற இருவரில் இளையவன் சித்தப் பிரமைகொண்டான். அவன் தாய்தந்தையர் அதற்கு என்ன பரிஹாரஞ் செய்தும் நீங்காமையால் விசனமடைந்திருந்தவர்கள், இவரது ப்ரபாவத்தைக்கேட்டு, சித்தப்பிரமைகொண்ட சிறுவனை யழைத்துவந்து இவர் திருவடியிற் கிடத்திச் செய்தி முழுதுஞ்சொல்ல, தாசர் கருணைகூர்ந்து, ஆறு அபங்கக் கவிகளால் அந்தச் சித்தப்பிரமையை நீக்கியருளினார். அப்போது அந்தச் சிறுவனாகிய அம்பாஜி இவர்திருவடியை வணங்கித் தோத்திரம்பண்ணி, ஸ்வாமீ! உம்மை விட்டு நீங்கமாட்டேனென்றான். தாய்தந்தையர் அவனுக்குத் தாசரிடத்திலிருக்கிற அன்பின் மிகுதியைக் கண்டு, இவ்விடத்தில் தாசருக்குப் பணிவிடை செய்துகொண்டிருவென்று தாசரிடத்தில் ஒப்புவித்துப்போக, அம்பாஜியும் தாசருக்குத் திருவுள்ளமுகக்கும்படியாய் ஏவற்பணிவிடைகள் செய்துகொ

ண்டிருந்தான். இப்படி குருகுலவாசஞ் செய்வதனால் அம்பாஜியும் மஹாமேதாவியாயும், வைராக்ய சீலனாயும், கதாகாலக்ஷேபாதிகள் செய்யவல்லவனாயும் விளங்கினான். இவனது அபிவிர்த்தியைக் கண்ட தாசரும் அதிகமாகச் சந்தோஷித்திருந்தார். இப்படியிருக்குங்காலத்தில் வேதியர் கோசாயிகள் தபசிகள் முதலானவர் அநேகர் வந்து தாசரை வணங்கினார்கள். அந்தக் கோஷ்டியில் அக்காபாயியும் வந்திருக்கக் கண்டு, தாசரானவர் அவளை நோக்கி இந்தக்காட்டிலும், மலையிலும், கல்லிலும், முள்ளிலும், நான் போகிற இடங்களுக்கெல்லாம் நீ வருவது சரியல்ல, நீ உன் ஊருக்குப் போவென்றார். அப்போது அக்காபாயி தாசரைநோக்கி உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தஞ்செய்து உம்மைச் சரணடைந்தேன். ஆகையால் நீர் எவ்விடத்திற்குப்போனாலும் நானும் தொடர்ந்துவருவேன், உம்மைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டேன் என்றாள். தாசர் அதற்கொன்றும் சொல்லாமல் சும்மா இருந்து, பிறகு புறப்பட்டு, சீடர்கள் சூழ்ந்துவரப்போய் ஒரு மலையை யடைந்தார், அடைந்தவும், இவர் சீடரிற் சிலர் பிக்ஷையேற்றுவரப் போனார்கள். சிலர் மாத்திரம் கூட இருந்தார்கள். அந்தக்காட்டில் ஆழமிகுதியாயுள்ள ஒரு துரவைக் கண்டு, அதின் கரையிற் பலவகையான மரங்களிருப்பதனால் அவற்றின் சருகுகள் உதிர்ந்து அந்தத் துரவுநீரில் விழுந்திருப்பதையும் கண்டார். கண்டவர் சீடர்களை நோக்கி, இந்த இலைச் சருகுகளை யெடுத்துவிட்டால் நீர் நன்றாயிருக்குமென்று தாசர் சொல்ல, அதின் கரையிலிருந்த மரக்கிளையை வெட்டினால் மேலேறி வெட்டுகிற நாமே விழுந்திறப்போம், சருகுகளை வாரியெடுப்போமென்றாலுமே துரவு ஆழமாயிருப்பதினால் ஏதாகிலும் அபாயம் நேரிடும் என்று அஞ்சி, ஆசாரியர் சொன்னபடி செய்யாமல் தாமதித்திருந்தார்கள். ஊருக்குள்ளே போய் ஐயமேற்று வந்தவர்களில் அம்பாஜி யென்பவன் தாசரைநோக்கி, ஸ்வாமீ! சருகுகளெல்லாம் எடுக்க நெடுநேரஞ்செல்லும், ஆகையால் நீர் நீராடுவீர் என்று சொல்ல, தாசர், நீண்ட இக்கிளையை வெட்டின பிறகுதான் நான் நீராடுவேன் என்று சொல்ல, அம்பாஜி ஒரு கோடரியைக் கைக்கொண்டு, ஸ்வாமீ! வெட்டுகிற கிளை தேவரீர்மேல் விழாமல்சற்று விலகியிருக்கவேண்டும் என்றான். அதற்குத் தாசர் நீ அந்தக்கிளையை நானிருக்கிற பக்கத்தைவிட்டு வேறு பக்கத்தில் வளைத்து வெட்டு என்று நியமிக்க, அம்பாஜி அப்படியே செய்கிறேனென்று போய் மரத்தை அடியோடு பேர்க்க, மரமும இவனும் துரவில் விழுவதைக்கண்ட மற்றச் சீடர்கள்பயந்து, ஆ! ஆ! வென்றலற, தாசர் நீராடிவந்து அக்காபாயியை நோக்கி, எனக்கு அமுது படைக்கக் கடவாயென்று கேட்க, அக்காபாயி, ஸ்வாமீ! அம்பாஜி கிணற்றில் அமிழ்ந்திவிட்டானென்பதைச் சிறிதும் தேவரீர் திருவுளங்கொள்ளாதிருப்பதற்குக் காரணம் யாதென்று கேட்க, தாசர் அவனைக் குறித்து நீ யேன் துயரப்படுகிறாய், அவனைப்பற்றி உனக்காகவேண்டியதென்னவென்றார். அது கேட்ட அக்காபாயி மறுவார்த்தை பேசாமல் அமுதுபடைக்க, எல்லாரோடுமிருந்துண்டு முடிந்தபிறகு, சிவாஜியரசன்வந்து திருவடியை வணங்கி, அக்

காபாயி முகத்தை நோக்கி, முகம்வாடி யிருப்பதைக்கண்டு, இங்கே நடந்த செய்தி யென்ன சொல்லென்றுகேட்க, அவள்நடந்த செய்தியைச் சொல்லக் கேட்ட அரசன் ஆசாரியரைக் கேட்க அஞ்சி ஊருக்குப் போய்விட்டான். இந்தச் செய்தியை அயலூரார் அறிந்துவந்து இந்தத் தீமைசெய்தவரை அரசனே ஒன்றுஞ் செய்யாமற் போனபோது நாம் என்ன செய்வது என்று பதைத்து, தூரவிலிறங்கிச் சோதித்துக்காணுமையால், ஐயோ! அம்பாஜியைப் பிசாசம் உண்டுவிட்டதோ, முதலை முதலிய ஜலசரங்கள் விழுங்கிவிட்டனவோ என்று பேசிக்கொண்டு போய்விட்டார்கள். பிறகு தாசர் தமது சீடரோடும் வேறொரு சோலைக்குப் போய் ஆறு நாள் கழித்து அம்பாஜி யிருக்கும் தூரவி னருகே வர, ஐய மேற்று வந்த சீடர்கள் அன்னம் சமைத்து இலைகளில் பரிமாறிக்கொண்டிருக்கும் காலத்தில், அரசனாகிய சிவாஜியும் வந்து திருவடி தொழுதான். தொழுதவனைத் தாசர் நோக்கி, இன்று நீயும் எங்கள் பந்தியிலிருந்துண்ணக் கடவாயென்று நியமிக்க, அவனும் அப்படியே பந்தியில் உட்கார்ந்தபிறகு, தூரவிலழுந்தின அம்பாஜியைத் தாசர் பேரருளோடு அழைக்க, அம்பாஜி ஏனென்றான். அவனைக் கலியாணம் அமைந்துளையோவென்று கேட்க, அவனும் தேவரீருடைய க்ருபாவிசேஷத்தால் அமைந்துளேன் என்றான். அப்படியானால் எழுந்து எமமிடத்துக்கு வாவென்றார். உடனே அம்பாஜி தூரவைவிட்டுவந்து தாசருடையதிருவடியை வணங்கினான். எல்லாரும அதிசயித்து, கலியாணமாவென்று குருநாதர்கேட்டபடியே கலியாணமா யமைந்திருந்ததனால் இவர்க்குக் கலியாண கோசாமியென்னும்பெயர் தகுதியாகுமென்று அம்பாஜியை அந்தப் பெயரிட்டழைத்தார்கள். அந்தச் சமயத்தில் சிவாஜியரசன் தன் குருநாதரைத் தேடிக்கொண்டு அவ்விடத்துக்குவந்து, முன்போலவே குருநாதரைப் பூசித்து, மாங்கனி நிவேதநம் செய்தான். அந்தக் கனிகளை அன்பர் எல்லாருக்கும கொடுத்துத் தாமும் அமுதுசெய்து முடிந்த பிறகு, தாசரெல்லாரையும நோக்கி, ஓ தாசர்களே! நான் இவ்விடத்தில் அரசாட்சி செய்ய எண்ணினேன், ஆதலால், இருந்து அரசு செய்வதற்காக ஒரு ஆசநம அமைக்கவேண்டும் என்று சொல்ல, தாசர்களெல்லாரும் மண்ணினால் ஒரு ஆசநம் அமைத்து, அதின் மேல் குருநாதரை எழுந்தருளச் செய்தார்கள். பிறகு அஷ்ட மந்திரிகள் சூழவும், சதுரங்க சேனைகளும் தத்தமக்குரிய நிலைகளி லமைந்திருக்கவும், மாருதியுருவ மெழுதப்பெற்ற கொடியைக் கட்டினார்கள். அரசன் சகலவிதமான அலங்காரங்களும் செய்வித்த பிறகு, குருநாதருக்கு முன்னே அக்காபாயியைக் கீர்த்தநம் பாடச்செய்து, அதின் பிறகு வேணுபாயியைக் கதை செய்யச் செய்து, அதின்பிறகு எல்லாருங் கலந்து மனமொத்து ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தநம் செய்தார்கள். அந்த ஹரிநாம ஸங்கீர்த்தநத்தால் அரசன் ஆநந்தபரவசனாய் இரண்டு தினம் வரைக்கும் ஒன்றையும் அறியாமலிருந்தான். அரசன் இப்படி யிருப்பதைத் தாசர் அறிந்து, இவன் இப்படி யிருப்பானானால், நாம் ராஜரிகம் செய்வதெப்படியென்று, ஆலோசித்து, தாச

போதக் கிரந்தம் என்றொரு நூலைச் செய்யத்தொடங்க, அதைக் கல்யாண கோசாமி எழுதிக்கொண்டு வந்தார். அந்தக்கிரந்தம் இரண்டு நாளில் முடிவு பெற்றது. அதில், ராஜநீதி எழு தசகங்களில் சொல்லப்பட்டிருப்பதனால், அதை அரசனுக்குக் கொடுத்து, அதில் சொல்லப்பட்ட ராஜநீதிகளை நன்றாய்க் கவனிக்கும்படி நியமித்தார், அப்படியே அரசனும் அந்த ராஜநீதியைப் பாராயணஞ் செய்துகொண்டிருந்தான். அந்தப் பாராயணத்தால் அவன் மனந் தெளிவடைந்தது, தாசரும் ஹரிநாம ஸங்கீர்த்தனமும் அரசாட்சியும் செய்துகொண்டிருந்தார். இந்தப்பிரகாரம் அரசனுடு, பன்னிரண்டு வருஷகாலம் ப்ராஹ்மண போஜனம் முதலான ஸத் கிரியைகளோடு அரசாட்சியையும் நடத்திவருங் காலத்தில், ஒரு நாள் அரசனைப் பார்த்து, நீ உன் ஊருக்குப் போவென்று கட்டளையிட்டு, குரு கீதை முதலியவைகளையும் போதித்தனுப்ப, அரசன் விடைபெற்று ஊருக்குப் போய்விட்டான். போனபிறகு, தன் குருநாதர் கொடுத்த எல்லாவற்றையும் தினந்தோறும் பாராயணஞ் செய்து வருவதை, அவ்விடத்திலுள்ள, காகா என்கிற வடமொழிப் புலவன், இவன் செய்கிற பாராயணத்துக்கு அநேக விரோதங்கள் செய்துகொண்டும், தாசர் செய்த நூல்களையும் தாசரையும் நிந்தித்துக்கொண்டும் இருந்தான். இப்படியிருக்கும்போது தாசர் அரசனிடத்துக்கு வந்து ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருப்பதைப் பண்டிதன் கேட்டுப் பரமானந்தமடைந்து இவரை நோக்க, இவர் மாருதிபோல அவன் கண்ணுக்குத் தோன்றினார். அப்போது பண்டிதன் அதிசயித்து, தாசரை வணங்கிப் பலவகையாய்த் தோத்திரம்பண்ண, தாசர் மன மகிழ்ந்து அந்தக் காகா பண்டிதனைத் தழுவிக்கொண்டு, ஸ்ரீஸீதாபதிநாதராகிய பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, வந்திருந்தவர் யாவருக்கும் ப்ரஸாத விநியோகம் செய்து, அரசனை ஆசீர்வதித்து வேறொரு நாட்டுக்குப் போய்விட்டார்.

அப்பால், ராமதாஸரானவர், சமீபத்தில் அன்புள்ள சீடர்களோடும் கூடி, ராமநாமத்தை ஸ்மரித்துக்கொண்டு சாமபள்கட் என்னும் ஊரையடைந்து, அதற்கருகிலிருக்கிற ஒரு மலையின்மீதேறி, அவ்விடத்தில் தாம் வாசம்பண்ணத் தகுந்த மடமொன்றை யேற்படுத்தினார், அது இப்பொழுதும் இருக்கின்றது, அங்கிருந்து புறப்பட்டு, ஸஹராபூர் என்னும் ஊரையடைந்து, அங்குள்ள ஆஞ்சநேயரை வழிபட்டு, பகற்காலத்தில ராமபஜனை செய்துகொண்டும், இராக்காலங்களில் தாசபோதம என்கிற கிரந்தத்தைக் கல்யாணகோசாமி படிக்க, அர்த்தம் சொல்லிக்கொண்டும் இருக்கையில், ஒரு வேதியன் வந்து தாசரை வணங்கி, ஸ்வாமீ, அடியேன் குடும்ப பாரத்தால் மிகவும் வருந்தினேன், இந்தக் குடும்பத் துன்பம் நீங்கும்படியான உபாயம் அருள்செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, தாசரானவர் அதற்கு மறுமொழி சொல்லாமற்போய் ஒரு தடாகத்தினருகே யிருந்து, அவ்வேதியனை நோக்கி, நீ வைராக்யசீலனாய், குருவாக்யப்படியே நடப்பாயானால் உன் துன்பம் நீங்கும் என்றார். அதைக்கேட்ட வேதியன், ஸ்வாமீ, தேவரீர்

நியமிக்கிறபடியே நடக்கிறேன் என்றான். அப்போது தாசரானவர் அவனை நோக்கி, நீ இந்தமரத்தின்மேலேறித் தடாகத்துக்கு நேரேயிருக்கிற கிளையில் வாவென்றார். அப்படியே அவன் வந்த பிறகு, அந்தக் கிளையைக் கைகளால் பிடித்துக்கொண்டு கால்களைக் கீழே தொங்கவிடுவாயாகவென்று நியமித்தார். அப்படியே அவன் செய்தபிறகு, இப்போது மரக்கிளை உன்னைப் பிடித்துக்கொண்டிருக்கின்றதா, நீ மரக் கிளையைப் பிடித்துக்கொண்டிருக்கிறாயா என்று கேட்டார். அதற்கு அவன் நான்தான் கிளையைப் பிடித்திருக்கிறேன் என்றார், அதைக்கேட்ட தாசரானவர், அவனை நோக்கி, இப்படியே குடும்பத்தை நீயே பற்றியிருக்கிறாயேயன்றிக் குடும்பம உன்னைப் பற்றியிருக்கவில்லை, நீ உன் துன்பத்தை நீக்கிக்கொள்ள விரும்புவாயானால், உன் கைகளை விட்டுவிடக் கடவாயென்றார். அப்படியே அவன் விட்டவுடனே குளத்தில் விழுந்து அழுந்தினான், அழுந்தினவன் அந்த நீரில் கண்திறந்து, அங்கே ஒரு ஊரும் அதில் ஒரு மடமும இருக்கக் கண்டு அதிசயித்து நின்றான். அன்றியும், அந்த மடத்தில் தாசபோத காலக்ஷேபம் நடப்பதையும், அந்தக் காலக்ஷேபத்துக்கு வந்திருப்பவர்களையும் தாசருடைய சீடர் பலரையும் காமதேநு, கற்பகவிருக்ஷங்களையும், வாழை, மா, பலா என்னும் கனிவகைகளையும், மடத்துக்குள்ளே ஒரு பொன்னாசநத்தின்மேல் வீற்றிருக்கிற ராமதாசரையும் கண்டு, மிகவும் ஆச்சரியமடைந்து, தாசருடைய திருவடிகளை வணங்கினான் வணங்கினவுடனே, தாசருக்குக் கருணை பூண்டகி அவனுக்கு அநுக்ரஹம் செய்தருளினார். உடனே அந்த வேதியன் பரமாநந்தக் கடலில் மூழ்கினான். அப்போது, தடாகக்கரையிலிருந்த தாசர், அவனை நோக்கி, ஓ வேதியனே, கரைக்கு வாவென்று சொன்ன சந்தத்தைக் கேட்ட வேதியன் மனமகிழ்ந்து, கரையேறி வந்து, தாசருடைய திருவடியைத் தொழுது நின்றான். அவனைத் தாசரானவர் நோக்கி, ஓ வேதியனே, நீ இந்தத் தடாகத்தில் மூழ்கியிருந்தபோது கண்ட அதிசயத்தைச் சொல்லென்று கேட்க, அவன், தான் கண்ட அதிசயத்தை யாவரும் அறியும்படி சொல்லி, தாசரை நோக்கி, ஸ்வாமீ, தேவரீருடைய மஹிமையைச் சொல்ல வல்லவர் யாவர் என்று தோத்திரம்பண்ணினான். அதின்பிறகு, தாசரானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, சாம்பள்கட் என்னும் ஊரை யடுத்த ஒரு மலைமீதேறி, அவ்விடத்தில் ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இவர் இங்கே வந்திருப்பதை அரசன் கேள்விப்பட்டு வந்து, தான் ஏறி வந்த குதிரையை மலையடிவாரத்தில்விட்டு, மலைமேலேறி, தாசரைக்கண்டு வணங்கின பிறகு, தனக்குண்டாயிருக்கிற தாகத்தைக் கைச்சாடையால் அறிவித்தான். அதைக் கண்ட அக்காபாயியார், அரசனை நோக்கி, இங்கே நீர் கிடைக்காது, கொண்டுவரும்படி யனுப்பலாமென்றால், சீடர்கள் பிக்ஷைக்குப் போயிருக்கிறார்கள் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, சீடர்களும் வந்துசேர்ந்தார்கள். அவர்களை நோக்கி நீர்கொண்டுவரவேண்டும், அரசனுக்குத் தாகம் அதிகரித்திருக்கின்றது என்று அக்காபாயியார் சொன்னார். அதற்கு அந்தச்

சீடர்கள், இந்த மலையின்மீது நீர் கிடைப்பது அருமை, கீழேபோய்க் கொண்டுவரவேண்டும் என்றார்கள். அதைக்கேட்ட தாசரானவர், இவர்கள் கீழேயிறங்கிப்போய் நீர் கொண்டு வருமளவும் இவன் தாகம் பொறுக்கமாட்டானென் றறிந்து, ஒரு கோலைக்கொண்டு நிலத்தில் ஊன்றினார். ஊன்றின இடத்திலிருந்து நீர் பெருகினதைக் கண்ட அரசனும், சீடர் முதலான யாவரும் அந்த நீரைக் குடித்து, இப்படிப்பட்ட இனிய சுவையுள்ள நீரை நாங்கள் எங்குங் கண்டதில்லையென்று தாசரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். அந்த நீர்ப்பெருக்கு அன்றுமுதல் இன்றளவும் யாவருக்கும், ஸநாநபானபாகாதிகளுக்கு உபயோகப்பட்டுக்கொண்டு வருகின்றது. அந்த நீரைக் குடித்துத் தாகம் தணிந்தபிறகு அரசன் தன் ஊருக்குப் போய்விட்டான். அப்பால், தாசரானவர் சிலநாள் அங்கே தங்கியிருந்து, அதின் பிறகு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வேறொரு ஆரணியத்துக்குப் போனார். அப்போது மழைக்காலமாயிருந்ததனால் எல்லாரும் மழையில் நனைந்து குளிரினால் வருந்தினார்கள். அந்தச் சமயத்தில் தாசரானவர் அக்காபாயியார் முகத்தை நோக்கி, எனக்குப் பசியாயிருக்கின்றது, எனக்கு உணவு கொடுக்கவேண்டுமென்று கேட்க, அக்காபாயியார், ஈர விறகுகொண்டு அடுப்பு மூட்டி நெருப்புண்டாக்கி, அது நனையாமல், அடுப்பின்மேல் தமது ஆடையால் மறைத்து, கொஞ்சநேரத்துக்குள் பாயசம் செய்துவைத்துக்கொண்டு, ஸ்வாமீ, பாயசம் செய்து சித்தமாயிருக்கின்றது, எழுந்து அமுது செய்யலாமென்று சொல்லக் கேட்ட தாசரானவர், இப்பொழுது எனக்குப் பசியில்லையென்று சொல்லி, மறுநாள் அங்கிருந்து புறப்பட்டுப்போய் வேறொரு ஆரணியத்தையடைந்து, எனக்குப் பசியாயிருக்கின்றதென்றார். அதைக் கேட்ட அக்காபாயியார், முன்போலவே மழையால் வருந்திப் பூரிசெய்து வைத்துக்கொண்டு, அமுதுசெய்ய வாருமென்றழைக்க, தாசரும இப்பொழுது எனக்குப் பசியில்லையென்றார். இப்படி இரண்டு நாள் சொல்லி, அவள் மனம் வெறுக்கும்படி செய்யவும, அவள் மனம வெறுக்காமலும் தாசரைப் பிரியாமலும் இருந்துகொண்டு, மிகவும் அன்போடு தாசருடைய ஊழியம் செய்துகொண்டு, தாமும் தாசரைப்போலவே அந்நபானங்களை நீக்கியிருந்தார். பிறகு தாசரானவர் வேறொரு காட்டுக்குப்போய், கல்யாணகோசாமியை நோக்கி, நீ ஒரு வில்லைச் செய்து மிகு விரைவில் என் கையிற் கொடுக்கவேண்டும் என்றார். கோசாமியும் குருநாதர் சொற்படியே மூங்கிலைக்கொண்டு ஒரு வில்லைச் செய்து கொடுத்தார். தாசர் அந்த வில்லைக் கைக்கொண்டு கானகமுழுதும் வேட்டையாடுவதைக் கண்ட மடாதிபதிகளாகிய குருக்கள் அரசனிடத்துக்கு வந்து, ஓ ராஜகுமாரனே, நாங்கள் நெடுங் காலமாய் அநேகருக்கு உபதேசித்து வருவதை அறிந்திருந்தும், எங்களை அவமதித்து, காட்டில் திரிகிற ஒருபேயனைக் குருவென்று மதித்து, நீயும் அவனோடு காட்டில் அலைகிறாய், இது என்ன விபரீதம் என்று அரசனைச் சற்றே கடிந்து பேச, அரசன் அவர்களுக்கு மறுமொழி கொடாமல் மௌனமாயிருந்தான். பிறகு

அந்த மடாதிபதிகள் தமது சீடரை நோக்கி, நீங்கள் காட்டுக்குப்போய், ராம தாசனுடைய நடக்கையைத் தெரிந்துகொண்டு வாருங்கள் என்று சொல்ல, சீடர்களும் அப்படியே தாசரைத் தேடிக்கொண்டு வந்து நெருங்கும்போது, தாசரானவர் அந்தக் காட்டிலுள்ள பறவைகளை யெல்லாம் கொன்று, ராசி ராசியாய்க் குவித்துக்கொண்டிருந்தார், அதைக் கண்ட அந்தச் சீடர்கள் போய்த் தமது குருக்களுக்குத் தாசருடைய செய்தியைச் சொன்னார்கள். அதுகேட்ட மடாதிபதிகள் அரசனை யழைத்துக்கொண்டு தாசரிருக்குமிடத்துக்கு வந்தார்கள். அப்போது தாசரானவர் தமதுசீடர்களை நோக்கி, நான் வேட்டையாடிக் கொன்ற பறவைகளெல்லாவற்றையும் நீங்கள் ஒரு மரத்தினருகில் கொண்டுவந்து சேருங்கள் என்றுகட்டளையிட, சீடர்களும் அப்படியே செய்தார்கள். அதைக் கண்ட மடாதிபதிகள் அரசனை நோக்கி, ஓ அரசனே, பகவத்பக்தனுகவும துறவியாகவும் இருக்கிறவன் சிறிதாயினும் ஜீவகாருண்யமில்லாமல் இப்படிஉயிர்களை வதைப்பது தகுதியாமோ, இவனை நீ குருவென்று ஆசிரயித்திருப்பது உன் பெருமைக்குத் தகாது என்று சொல்லி, அரசனோடு தாசரிடத்துக்கு விரைந்து வந்து, தாசரே, யாவருக்கும் ஜீவகாருண்யம் முதலான மேலான தர்மங்களைப் போதிக்கிற நீரே இப்படி செய்வீரானால் உம்மை யார் மதிப்பார்கள் என்று அவமதித்துப் பேசினார்கள். அப்பொழுது ராமதாசரானவர் அந்த மடாதிபதிகளை நோக்கி, நன்மையும்தீமையும் நம்மாலே உண்டாவனவல்ல, ஸ்ரீராமபிரானாலேயே உண்டாகின்றனவென்றுசொன்னார். சொல்லுதலும், மடாதிபதிகள் தாசரை நோக்கி, நீ கையில் ஒரு வில்லைத் தரித்துக் கொன்று குவிக்கும் பாவச்செய்கை முழுதும் ஸ்ரீராமபிரானால் நிகழ்வதென்று சொல்லுதல் உனக்குத் தகாது என்று சொல்ல, தாசரானவர், அவர்கள் சொல்லுக்கிணங்க, ஓ ஸ்வாமிகளே, நான் அறியாமையால் இந்தப் பாவங்களைச் செய்தேன், ஆதலால், ஜ்ஞாநிகளான நீங்கள், இந்த உயிர்களெல்லாம் பிழைத்தெழும்படி செய்தருளவேண்டும், அப்படிச் செய்தால் அவை பிழைப்பதேயன்றி, என் பாவமும் நீங்கும் என்றார். அதைக் கேட்ட வேதியர்கள் தாசரை நோக்கி, அடா பாதகா, நீ கொடுமையாகிய காரியத்தைச் செய்துவிட்டு, இப்பொழுது அந்த வுயிர்களைப் பிழைப்பிக்கச் சொல்லுகிறாய், இந்தக் காரியம் சாக்ஷாத் பகவானாலாலும் முடியுமா, எங்களைப் பரிஹஸிக்கிறாய், இது உனக்குத் தகாது என்று சொன்னவுடனே, தாசரானவர் விரைந்து, அரசனை நோக்கி, விறகு கொண்டு வாவென்றார். அரசனும் அப்படியே கொண்டுவர, அந்த விறகைக் கொளுத்தி, அந்த நெருப்பில் பறவைகளை யெல்லாம் போட்டவுடனே, அவையாவும், உயிர்பெற்றெழுந்து, ஒன்றின்பின்னொன்றாக ஆகாயத்தில் பறந்துபோயின. இந்த அற்புதத்தைக்கண்ட அரசனுக்கெதிரே யிருந்தவர்கள் எல்லாரும் நாணமடைந்து, தலை வளைத்து, நின்று, தாசரை நோக்கி, ஸ்வாமீ, தேவரீருடைய மகிமையைத்தெரிந்துகொள்ளாமல் அவிவேகிகளாகிய நாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று தோத்

திரித்துவணங்கி, விடைபெற்றுத் தங்கள் தங்கள் இடங்களுக்குப் போய்விட்டார்கள்; அரசனும் விடைபெற்றுத் தன்னூருக்குப்போய்விட்டான். தாசருடைய மஹிமையைப் பார்த்திருந்த சிஷ்டரெல்லாரும் ஆநந்தக் கடலில் மூழ்கினார்கள்.

அதின்பிறகு, புண்ணியக்ஷேத்ரமென்று யாவரும் சொல்லிப்புகழும்படியான கோலாபூரில் வாழ்பவனாகிய ஒருவேதியன், தாசரிடத்துக்குவந்து வணங்கி, ஸ்வாமீ, நான் வாழ்கின்றவூரில் சக்தி உபாஸனை மிகுந்து, எவராகிலும் ராம நாமத்தை யுச்சரித்தால், மரண காலத்தில் சொல்லவேண்டியதைப் பிழைத்திருக்குங் காலத்தில் என் சொல்லுகிறீர்கள் என்று அவர்களைத் தண்டித்து வருத்துகிறார்கள், இதற்கு என்ன வுபாயம் செய்யலாம் என்று வினவக் கேட்ட ராமதாசர், சிரித்து, அவ்வூருக்குப் போய், அவ்விடத்தில் ஹரிபஜனைசெய்து, அங்குள்ளார் எல்லாரும ராமநாம ஸங்கீர்த்தநத்தையே செய்யும்படியாய் அவர்களைத் திருத்தி, அங்குநின்றும் புறப்பட்டு, கர்ஹாட் என்கிற தேசத்துக்குப்போய் அவ்விடத்தில் தங்கி, தினந்தோறும் ராமநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். அதைக்கேட்ட அநேகர் பரிசுத்தமான மனமுள்ளவர்களாய், இவரைச் சரணமடைய, அவர்களுக் கெல்லாம் உபதேசம்செய்து வருகிற காலத்தில், அவ்வூரிலுள்ள பாண்டியாந்தான் பெற்ற புதல்வியாயும், விதவையாயு மிருந்த வேணுபாயி என்பவள் தாசரிடத்தில் வந்து, இவர் செய்யும் ஹரிநாம ஸங்கீர்த்தநங்களைக்கேட்டு, அன்பு மிகுந்து, தாசரைவணங்கி, வாழ்த்தி, திரிகரணசுத்தியாய், ஸ்வாமீ, அடியேன்மீது கருணை கூர்ந்து அநுக்ரஹிக்க வேண்டும் என்று பிரார்த்திக்க, அவளுடைய நல்ல எண்ணத்தை யறிந்ததாசர், அப்படியே செய்கிறேன், நீபோய் ப்ராஹ்மணபோஜநம் சேகரித்து வைத்துக்கொண்டு ப்ராஹ்மணரை வரவழைக்கக் கடவாயென்று நியமித்தார். அவளும் அப்படியேசெய்ய, வேதியர்கள் வந்து உண்டு மனமகிழ்ந்தபிறகு அவளுக்கு அநுக்ரஹித்து, ஆஞ்சநேயரை மனத்தில் நினைத்தார். உடனே ஆஞ்சநேயர் ப்ரத்யக்ஷமாகி நிற்க, அவருக்கு அந்நம், கறிவகைகள் யாவும் கொண்டுவந்து பரிமாறும்போது, அவருடைய சௌந்தரியத்தைக் கண்டு மூர்ச்சித்து விழுந்தாள். விழுந்தவுடனே, அவளைத் தாசர் தமது திருக்கரத்தாலெடுத்து, நீ எதைக்கண்டு அஞ்சினாய், சொல்லென்று கேட்க, அவள், ஸ்வாமீ, யாரோ ஒரு மஹாபுருஷர், மிகவும் ஒளியுருவாகி வால், கோவணம், யஜ்ஞோபவீதம் இவைகளோடு வரக் கண்டு, கண்கூசி அஞ்சி, உப்பரிகையின் மேலிருந்து விழுந்தேனென்றுசொல்ல, தாசரானவர், அவளைநோக்கி என் சிஷ்டர்களில் ஒருவராயினும் ஆஞ்சநேயரைத் தரிசிக்கவில்லை, அவரைத் தரிசிக்கப்பெற்ற உன் பாக்கியமே பாக்கியம் என்று சொல்லி, கொண்டு வந்தவுணவுகளை யெல்லாம் மாருதியானவர் அமுதுசெய்யும்படி பரிமாறக் கடவையென்று நியமித்து, அப்படியே அவள்செய்ய, மாருதியானவர் அமுதுசெய்து மறைந்தபிறகு, மிச்சத்தையுண்டு, முன்னே உண்டு வயிறு நிறைந்திருக்கிற வேதியருக் கெல்லாம் புஷ்பசந்தந தாம்பூலாதி

களைக் கொடுப்பித்து, மூன்றுநாள் அங்கே தங்கியிருந்து, ஹரிநாம ஸங்கீர்த்தநம்செய்து கொண்டே, தம்மிடத்தில் அநுக்ரஹம்பெற்ற வேணுபாயிக்குத் தெரியாமல் காட்டுக்குப் போய்விட்டார். இவர் சீடரோடு காட்டுக்குப் போனதை யறிந்த வேணுபாய், தாசருடைய பிரிவுக்கிரங்கி, தாசரிடத்துக்குப்போவோர்களைப் பின் தொடர்ந்து போனாள். போய்த் தாசரைக் கண்டு வணங்கி, ஐயரே, அடியேன் உமது சந்நிதியைவிடாம லிருந்துகொண்டு தேவரீருடைய ஊழியம் செய்துகொண்டிருக்கிறேன் என்றாள். அதைக்கேட்ட தாசரானவர், அந்தச்சிறுமியை நோக்கி, நீயோ சிறுபெண், ஆகையால் நான் திரியுங்காடு மலைமுதலிய இடங்களுக்கு நீவரலாகாது, உன்மீது எனக்குள்ள அருளால் சொல்லுவதை உறுதியாய் நம்பி அந்தப்படி நடக்கக்கடவாய், என்னென்றால், நீ போய் உன் வீட்டிலிருந்துகொண்டு, நாள்தோறும ஸ்ரீராமபிரானுடைய திருவடியைச் சிந்தித்துக்கொண்டும, அவரது திருநாமத்தை உச்சரித்துக்கொண்டும, இருந்தாயானால் உனக்கு நற்கதியுண்டாகும் என்றுசொல்லியனுப்ப, வேணுபாயி அப்படியே போய்விட்டாள். போய், தாசர் சொன்னபடியே ஸ்ரீராமநாமத்தை இடைவிடாமல் உச்சரித்துக்கொண்டிருந்து, சிலகாலங் கழிந்த பிறகு, தாசர் சஹாபூருக்கு வந்த செய்தியைக் கேள்விப்பட்டுவந்து, அவர் செய்த கதைகளைக்கேட்டுத் தன்னூருக்குப்போய் வாழ்ந்திருக்கும்போது, இவளுடைய கணவனுக்குத் தந்தையானவன், இவள் தந்தையை நோக்கி, உன் மகளுடைய செய்கைகள் நன்றாயிருக்கவில்லையென்று சொல்ல, அவன் தன்மகளையழைத்து, நீ ஊருராய்த் திரிவது உனக்குத் தகுதியாகுமோவென்று கோவத்தோடு கேட்டான். தாயும அப்படியே கோபத்தோடு வன்சொற்களைவழங்கினாள். தந்தை தாயரா இருவரும இப்படிப் பேசினதைக் கேட்ட வேணுபாயியானவள், என் நாயகன் இறந்ததனாலல்லவோ, நற்கதியை விரும்பிச் சற்குரு நாதரைத் தேடலானேன், இதனால் உங்களுக்கு என்ன பழியுண்டாகும்? அனாதியும், எனக்கு நித்யமான மாதா பிதாக்களாவோர், ஸ்ரீஜாநகி பிராட்டியும், ஸ்ரீராமபிரானுமே யன்றி, நீங்கள் எனக்குத் தாய் தந்தையர் ஆகமாட்டீர்கள் என்று சொல்லக் கேட்ட தாய் தந்தையர், இவள் நமக்கு அடங்காமற் பேசுகிறாளாகையால் இவளைக்கொல்லுவதே தகுதியாமென்று தீர்மானித்து, இவளுக்கு நஞ்சு கலந்த சோற்றைக் கொடுத்தார்கள். வேணுபாயி, அந்தச் சோற்றில் நஞ்சு கலந்திருப்பதை யறியாதவளாகையால், வாங்கியுண்டாள். உண்டு சற்று நேரத்துக்குள்ளே, இவளுக்கு மயக்கமுண்டாயிற்று; உண்டாதலும் சற்று நிதானித்துத் தெளிவோடிருந்துகொண்டு, தன் குருநாதராகிய தாசரை த்யானித்து, ஸ்வாமீ, எனக்கு இப்போது நேரிட்டிருக்கிற அபாயத்தைத் தேவரீரேநீக்கி என்னைக் காப்பாற்றவேண்டும் என்று சொல்லிக்கொண்டே உயிரைவிட்டாள். இதையறிந்த தாசரானவர், இவள் இறந்துகிடக்கிற இடத்திற்குவந்து, இவளை அருட்கண்ணால் நோக்குதலும், வேணுபாயி உயிர்பெற்றெழுந்து, சற்குரு நாதரை நோக்கி, ஸ்வாமீ, எனக்கு நஞ்சுகலந்த சோற்றையுண்பித்த தாய் தந்தையர்,

அடியேன் தேவரீருக்குப் பணிவிடை செய்வதற்கு மனம் பொறுக்கமாட்டார்கள் என்று சொல்லி, சாம்பள்காட் என்கிற நகரத்தையடைந்தான். பிறகு ராமதாசரானவர், முசனருத்திரர், ராமாஜி, தேவதாசஜசவந்தர், திவாகரர் என்பவர் முதலான சோசாமிகளுக்கு இனியவசனங்களைச் சொல்லி, அவர்களைத் தங்கள் தங்கள் இருப்பிடங்களுக்கு அனுப்பிவிட்டுத் தாம் ஆனகாவத நகரத்துக்கு வந்து, பீடாேடு நெசிராயணிப்பதியில் சோடி, ஞானதேவர் சமாதியைத் தொழுது ஸ்தோத்திரம் பண்ணி, மூன்றிராத்திரி அங்கேயிருந்து ஹரிநாம ஸங்கீர்த்தனம்செய்து புறப்பட்டு கங்காதீரத்தை யடைந்து, ஏகநாத ஸ்வாமிகளுடைய திருவடி நிலையை யமைத்து, அரச மரத்தின் கீழிருந்து, தொழுது வாழ்த்தி, அவ்விடத்திலும் மூன்றிராத்திரி ஸ்ரீராம சரித்திரத்தை யருளிச்செய்ய, அந்த ஏகநாத ஸ்வாமிகள் இவர்க்குப் பிரத்தியக்ஷமாகி, சந்தோஷத்தோடு தழுவிக் கொண்டு, விடை கொடுத் தனுப்ப, அங்கிருந்து புறப்பட்டு அவரங்காபாத் என்னும் நகரத்தை யடைந்தார். அடைதலும், அங்கே, ராமி ராமதாசு என்னும் மஹாத்மாவானவர் தமது சீடர்களோடும் எழுந்தருள, அவரைக்கண்டு வணங்கிப் புறப்பட்டுப் போகும்போது, பிஜூரில் வாழ்கின்ற புண்யவதியாகிய பார்வதிபாயி யென்பவள் இவர் செய்யுங் கதையைக்கேட்டு, பரமார்த்தத்தில் வெறுப்புடையவளாய், வைராக்ய ஞானங்களை யடைந்து, தாசருடைய திரு வடியை வணங்கி, இவரைத் தன் னூருக்கு அழைத்துக்கொண்டு போய், ஷோடசோபசாரமும் செய்து, அடியேனுக்கு உபதேசித் தருளவேண்டும் என்று ப்ரார்த்திக்க, தாசர் அவளுடைய சித்த சுத்தியைத் தெரிந்துகொண்டு, அவளுக்கு உபதேசித்து, அவள்வீட்டில் ஒன்பது நாளிருந்து, அங்கு நின்றும் புறப்பட்டு, டாங்கணி நகரையடைந்து, அவ்விடத்தில் ஆஞ்சநேயர் கோயிலைச்சேர்ந்து வணங்கிப் பூஜித்து, பஞ்சவடிக்குப்போய், ஸ்ரீராம குண்டத்தில் முழுகி, ஸ்ரீராம பிரானைத்தொழுது வாழ்த்தி, அநேக கீர்த்தனைகள் பாடி, இராக்கால மூன்று சாமங் கழித்து, நான்காஞ் சாமத்தில் விடியற்காலமாகும்போது பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, யாவருக்கும் ப்ரஸாத விநியோகஞ்செய்தார். இப்படி மூன்றுநாள் அவ்விடத்திலிருந்து, பிறகு புறப்பட்டுத் தம்மைத் தேடிக்கொண்டிருக்கிற சிவாஜிராஜனுடைய உத்தியானத்தில் அநேக வாத்ய முழக்கத்தோடும் ஆநந்தக்கொடியோடும் வந்துசேர்ந்தார். இவர் வந்து சேர்ந்ததைச் சிவாஜி ராஜன் அறிந்து, சதுரங்க சேனைகளும் புடைசூழ்ந்துவரக் கால்நடையாய் வந்து குருநாதரைக் கண்டு வணங்கிப் பூஜித்து, தன்பட்டத்து யானைமேல் பொன்னாசனமிட்டு, அதன் மீது தாசரையேற்றி, பல வாத்யகோஷத்தோடு, தானும் மந்திரிகள் எண்மரும் கவரிவீசிக்கொண்டு, நகரை வலம் வந்து, அரண்மனையை யடைந்து, உயர்ந்த பொற் றவிசில் தாசரை யெழுந் தருளுவித்து, ஷோடசோபசாரங்களும் செய்து அமுது செய்வித்த பிறகு, வேதியருக்கூட்டித் தானும் உண்டான். அன்றிரா முழுதும் தாசரைக்கொண்டு ஹரிநாம ஸங்கீர்த்தனம் நடத்தி, உதயகாலத்தில் பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, வந்தவரெல்லா

ருக்கும் ப்ரஸாத விநியோகம் நடப்பித்து முடிந்தபிறகு தாசரானவர் அங்கிருந்து புறப்பட்டுத் தம் சிடரோடு வனத்தை யடைந்து சிலநாள் கழித்து, சாம்பள்கோர் என்கிற வூரில் பிரவேசித்து, அவ்விடத்தில் ஸ்ரீராம மூர்த்தியைப் பிரதிஷ்டைசெய்ய நினைத்து, வாயுகுமாரராகிய ஸ்ரீ ஆஞ்சநேயரைத் தியாநித்தார். அவ்வாயு புத்ரர் உடனே ப்ரத்யக்ஷமாகி நின்று, இவ்விடத்துக்கு எழு கோசு தூரத்திலிருக்கிற ஒரு சிற்றூரில் அமர்ந்திருக்கிற ஸ்ரீராம மூர்த்தியைக் கொண்டு வந்து இவ்விடத்தில் ஸ்தாபிக்கக் கடவாயென்று சொல்லி மறைந்தார். உடனே தாசரானவர் அந்த விக்ரஹத்தைக் கவர்ந்து கொண்டுவர வேண்டுமென் றெண்ணி, இராக் காலத்திற் போய், ஸ்ரீராமர், ஜாநகிபிராட்டி, லக்ஷ்மணர், அநுமான் என்கிற நால்வருடைய விக்ரஹங்களையும் கவர்ந்து கொண்டுவந்தார். அந்த வூரிலுள்ளார் விடியற் காலத்தில் சேவிக்க வந்து, கோயிலில் விக்ரஹங்கள் இல்லா திருப்பதைக் கண்டு, யார் கொண்டுபோனார்களோ வென்று சிந்தித்து, பலவிடங்களிலும் தேடிக்காணாமல் ராமதாசர் இருப்பிடத்துக்குவந்து, இவரிடத்தில் தாம தேடும் விக்ரஹங்கள் யாவையுங் கண்டு, இவரை நோக்கி, அரசனுக்குக் குருவாயிருக்கிற நீர் இப்படிக் களவுசெய்தல் உமது பெருமைக்குத் தகுதியாகுமோவென்றார்கள். அதற்குத் தாசர் மறுமொழிசொல்லாமல் மௌனமாயிருந்தார். வந்தவர்கள், இவர் நாம் கேட்ட கேள்விக்கு மறுமொழி சொல்லாம லிருத்தலால் நமது விக்ரஹங்களை நாமே யெடுத்துக்கொண்டு போவோமென் றெண்ணிக் கிட்டி வந்து, விக்ரஹங்களைப் பலருங் கூடி யெடுத்து, அவைகள் சற்றும் அசையாதிருப்பதைக் கண்டு, பகவானுக்கு இவ்விடத்தே யெழுந்தருளத் திருவுள்ளம் என்று தீர்மானித்து, பயந்து, தாசரைநோக்கி, ஸ்வாமீ, தேவரீருடைய மஹிமையை யறியாமல் நாங்கள் செய்தபிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று வணங்கித் துதித்துப் போய்விட்டார்கள். பிறகு தாசரானவர், பகவானைப் பிரதிஷ்டை செய்ய நினைத்து, அவ்வூராரால் அமைக்கப் பட்டகோயிலில், சுபமுஹூர்த்தத்தில் அந்த விக்ரஹங்களைத் தனித்தனியே பிரதிஷ்டை செய்து, மேலும், விக்ரஹ ப்ரதிஷ்டா காலத்தில் செய்யவேண்டிய க்ரியைகள் எல்லாம்செய்து, ப்ராஹ்மண சந்தர்ப்பணம் நடத்தி முடித்தபிறகு, ஸ்ரீராமபிரானைக் கண்குளிரச் சேவித்து நிற்கும்போது, பகவானானவர் ஸ்ரீஜாநகி பிராட்டியாரோடும் வந்து தாசரைத் தழுவிக் கொண்டார். அன்றிரவில் தாசரானவர் திருக் கோயிலின் மண்டபத்தில் தாளம் ம்ருதங்கம் முதலிய வாத்ய விசேஷங்களோடு ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தநம் செய்து, விடியற் காலத்தில் பகவானுக்கு மங்களாரதி சமர்ப்பித்து ப்ரஸாதவிநியோகமும் நடத்தி, நாலு நாள் வரைக்கும் அங்கே தங்கி யிருந்து, உத்ஸவத்தை நிறைவேற்றி, பிறகு க்ருஷ்ணாநதியை யடைந்து, அந்த நதிக்கரையி லுள்ள ஒரு வனத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருக்குங் காலத்தில், ஒருநாள் டாங்களியில் முன்னே ப்ரதிஷ்டை செய்த அநுமாரை யன்றிப் பதினொரு இடங்களில் ப்ரதிஷ்டை செய்யவேண்டுமென்கிற எண்ணம் இவர்க்கு உண்டா

யிற்று. அந்தப் பதினொரு இடங்களின்பெயர் யாவையெனின் சாம்பளகாட், சிங்கணபுரம், மசூர், சஹாபூர், மூமாடி சாதாரா, பத்தி, சுசிராளே, ஜராடா, டேம்பி, நவகாமலை, ஊர்ணபாகு என்பவைகளே. இந்த இடங்களி லெல்லாம் தமது திருக்கையால் ஆஞ்சநேய விக்ரஹங்களைப் பிரதிஷ்டைசெய்து, வேதோக்தமான க்ரியைகள் உபசாரங்கள் யாவும் செய்து வணங்கித் தோத்திரித்து, இந்தப் பதினொரு இடங்களில் எதாகிலும் ஒரு இடத்தில் எழுந்தருளி யிருக்கிற மாருதியைப் பதினாறு தினம வரைக்கும் கிரமமாய்ப் பூஜித்தவர்கள் தங்கள் தங்கள் பக்திக்குத் தகுந்த பலன்களை யடையக் கடவார்கள் என்று மங்களா சாஸநம் பண்ணி, இந்த இடத்தில் இன்னார், இந்த இடத்தில் இன்னார், இருந்து கோயிற்பணிவிடைகளை நடத்திவரவேண்டும் என்று, தம் சீடர்களிற் சிலரை நியமித்து வைத்துவிட்டு, அங்கு நின்றும் புறப்பட்டு, கனவிலும் ஸ்ரீ ஹரிநாமஸ்மரணை செய்யாத முழுமூடர்கள் வாழ்கிற ஊர்களிற்போய், ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்து, அங்குள்ளவர்க ளெல்லோரும் ஹரிபக்தர்களாகும்படி செய்து, பிறகு தம்சீடரோடு சாம்பளகாட் என்னும் ஊருக்குவந்து, அங்கே முன்பு பிரதிஷ்டைசெய்த ஸ்ரீராமமூர்த்தியைக் கண்டு சேவித்து, அப்போது சமீபித்திருந்த ஸ்ரீராமநவமி யுத்ஸவத்தை நடத்தத் தொடங்கும்போது, சிவாஜிராஜனும் வந்துசேர்ந்தான். அவனைக்கொண்டு ஒன்பது நாள் உத்ஸவமும சிறப்பாய் நடத்தி, பத்தாம்நாளிலே விசேஷமான அலங்காரம் செய்து உத்ஸவத்தைப் பூர்த்தி செய்து, ப்ராஹ்மண போஜநம் நடத்தி, அரசனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, தம் சீடரோடும் எழுந்தருளியிருக்கும்போது, ஸ்ரீஹநுமந்தஜயந்தி சமீபித்தது; அந்த வுத்ஸவத்தை நடத்தத் திருவுளங்கொண்ட தாசர், முன்னே தாம ஆஞ்சநேயரைப் பிரதிஷ்டைசெய்த பதினொரு இடங்களிலும அலங்கரித்து, ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு ராமதாசர் விழுக்காடாகப பதினொரு ராமதாசர்களாயிருந்து உத்ஸவ கைங்கர்யத்தை நிறைவேற்றினபிறகு, பல இடங்களுக்குப் போய், அங்கங்கே யிருப்பவர்கள் முழு மூடரா யிருந்தாலும் அவர்களை யெல்லாம் திருத்தி, ஸ்ரீராம பக்தியிற் சிறந்தவர்களாக்கி, ஸ்ரீராம பக்தருக்கு முக்யமாய் ஆஞ்சநேயர் அருளிருக்கவேண்டுமென்றும, அவருடைய அருள்பெறாவிடின் எந்தக் காரியமும் முடியாதென்றும், யாவருக்கும்போதித்து, அவர்களுடைய மனங்களை நிலைபெறச்செய்து, பிறகு பகவானுக்கு ஹாரதிசமர்ப்பித்து அடியார்களுக்கு ப்ரஸாதவிநியோகம்செய்து, அங்கு நின்றும் புறப்பட்டுக் கோலாபூரை யடைந்து, அங்கும் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து, சந்திரகிரியை யடைந்து, அந்த மலைமேலேறி மூன்றுமாச காலம் வரைக்கும் ஸ்ரீஹரிகதா காலக்ஷேபம் செய்துகொண்டிருந்து, அவ்விடம் விட்டுப்போய், சேதுபந்தநஞ்செய்த நளன் என்னும் வாநரவீரன் வாசம்பண்ணுகிற இடத்தையும் கண்டு, அவ்விடத்தில் கோல்ஹாசுரனை வதைத்த திருமகளையுங்கண்டு, வணங்கித் தோத்திரம்பண்ணி, பகுளம் என்னும் தேவாலயத்தையும் தரிசித்துத் துதித்து, ரங்காளம், பத்மாளம் என்னும் பொய்கைகளைக் கண்டு, அவற்றில்

நீராடி, அங்குநின்றும் புறப்பட்டு உத்தரதிசையிற்போய், பஞ்சகங்கையில் நீராடி, மார்க்கண்ட பர்வதம் முதலான மலைகளையும், இமாசலம் ரத்நாகரம் முதலான பெரிய பர்வதங்களையும் கண்டு, அவற்றுக்குத் தென் றிசையி லுள்ள ஸ்தலங்களையெல்லாம் தரிசித்து வணங்கி, தமது சிஷ்யர் பலரோடும் அரணியத்தை யடைந்து, அவர்கள் பணிவிடை செய்துகொண்டிருக்கவும், அக் காபாயி சமையல் செய்துகொண்டிருக்கவும் தங்கியிருக்குங்காலத்தில் மாவுலி நகரிலிருந்த சிஷ்டராகிய உத்தவகோசாமி யென்பவர், தாளம் மிருதங்கம் முதலிய வாத்ய விசேஷங்களோடு ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருப்பதைக் கேள்விப்பட்ட அவுரங்காபாதுக்கரசனானவன் வந்து, உத்தவகோசாமி செய்யும் ஹரிபஜநத்தைக் கேட்டு மனமகிழ்ந்தான். ஆனாலும் ஸ்ரீராமமூர்த்தி யன்றி வேறு உண்மையான தெய்வமில்லையென்று எல்லாரும் கேட்க இவர் வற்புறுத்திச் சொன்னதைப் பொறுக்காதவனாய், தன் குலஸ்தர்களாகிய பட்டாணிகளை நோக்கி, இந்தக்கோசாமியைக் கட்டிக்கொண்டு வாருங்களென்று போய்விட்டான். அந்தப் பட்டாணிகளும் அரசன் கட்டளைப்படியே கோசாமியைக் கட்டின கட்டோடு கொண்டுபோய் அரசனுக்கெதிரே விட, அரசன் காஜியை வரவழைத்து, இவனுக்குச் சுன்னத்துச் செய்யும் என்று நியமித்தான். அதைக்கேட்ட கோசாமியானவர் மனங்கலங்கி நாம சுன்னத்துச் செய்யப்படுவோமானால் நமது குலாசார தர்மத்துக்குக் குறைவு நேரிடுமேயென்று சிந்தித்து, தமது சற்குருநாதராகிய ராமதாசரை மனத்தில் தியானித்தார்; உடனே ராமதாசரானவர் விரைந்தெழுந்தார். அதைக்கண்ட அக்காபாயி நீர் இவ்வளவு விரைவா யெழுந்ததற்குக் காரணம் யாதென்று வினவ, தாசரானவர் அவளை நோக்கி, உத்தவகோசாமியைத் துருக்கர்வருத்துகிறார்கள், ஆகையால் அங்கே போய் அவனுடைய ஆபத்தை நீக்கவேண்டி யெழுந்தேனென்று சொல்லி, அவருக்குத் தெரியாமல் தாம் மாருதி ரூபங்கொண்டு, உலகமுழுதும் நடுங்கும்படி ஆரவாரித்துக்கொண்டுபோய், அந்தத் துருக்க வேந்தனை ஓர் திருக்கரத்தால் அறைய, அவன் உயிர் நீங்காமல் மூர்ச்சித்து விழுந்தான். சற்றுநேரத்தில் மூர்ச்சை நீங்கித்தெளிந்தெழுந்து, ஸ்வாமீ! தேவரீருடைய மஹிமையை யறியாமல் மஹாபாபியாகிய அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும் என்று வணங்கிப் பிரார்த்தித்தான். அதற்குத் தாசர் மன மிரங்கி, தமது சற்குரு ரூபங் கொண்டுநின்று, அரசனை நோக்கி, நீ இனிமேல் ஸ்ரீஹரிதாசரையும், வேதியரையும், பசுக்களையும் வருத்தாம லிருக்கக் கடவாய், ஆலயங்களையும் அழிக்காதிருக்கக் கடவாய் என்று அவனுக்கு ஹிதமான சொற்களைச் சொல்லி, உத்தவகோசாமியை யழைத்துக் கொண்டு சாம்பளகோர் என்னும் ஊரை யடைந்து, அங்கே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீராமபிரானைத் தரிசித்து வணங்கித் தோத்திரித்து, அங்குள்ள சிஷ்டரை நோக்கி, நீங்கள் உலக முழுதும் போய் அங்கங்குள்ள மூடர்களையெல்லாம் திருத்தி, ஹரிபக்தர்களாகச் செய்யுங்கள் என்று நியமித்தார்.

அப்படியே அந்தச் சீடர்கள் பல இடங்களிலும் சென்று, அவ்வவ்விடங்களிலுள்ள பலருக்கும் உபதேசித்து, அவ்வவ் விடங்களில் அநேக மடங்களையும் ஏற்படுத்தி, அவர்களெல்லாரும் தாசர் வழியை அநுசரிக்கும்படி செய்தார்கள்.

அக்காலத்தில், பாகா நகரத்தில், கேசவசாமி என்பவர் ஒருவரிருந்தார். அவர் சாந்தசீலரும், பிரபஞ்சத்தில் வைராக்யமுடையவரும், ஞானம் அன்பு முதலிய ஆத்ம குண பூர்த்தியுள்ளவருமாயிருந்தார். அவர் இந்தத் தாசரது மகிமையை அநேகரால் கேள்விப்பட்டு இவரிடத்தில் பயபக்திகளையுடையவராய், நான் இப்படிப்பட்ட மஹாத்மாவைப்போய்த் தரிசிக்கவேண்டுமென்றால் என்னுடைய துர்ப்பலமானது தடுக்கின்றதே என்று மனந்தளர்ந்து, உலகத்திலுள்ள சேதனரை உய்விக்கும் பொருட்டு அவதரித்தருளின சத்குருநாதருடைய சேவை செய்தற்குத் தகுந்த தவப்பயன் இல்லாத நான் யாது செய்வேனென்று பலவிதமாக ஆலோசித்து, ஒரு சீடனைப் பார்த்து, சாம்பளகோரில் வாழ்கின்ற சத்குருவினிடத்தில் நீ போய் இதைக் கொடுத்து வருவாயென்று ஒரு விண்ணப்பம் எழுதி அவன் கையில் கொடுத்து வழிச்செலவுக்காக அரைப்படி அரிசியையும் தந்து அனுப்ப, அவன் வாங்கிக்கொண்டு தாசரிருக்கும் நகரத்திற்குப்போய், அவர் நீராடி நித்தியநியமங்களை நிறைவேற்றி ஸ்ரீராமபிரானது சந்நிதியில் இருக்கும்போது அந்த விண்ணப்பத்தை அவருக்கு எதிரேவைத்து நமஸ்கரித்து நின்றான். நின்றவனைத் தாசரானவர் நோக்கி, நீ யார், இதைக் கொடுத்தனுப்பினவர் யார், என்று வினவ, எதிரே நின்றவனாகிய அந்தச் சீடன், ஸ்வாமி! இதைக் கொடுத்தவர் கேசவசாமி என்பவர், நான் அவரது சீடன், தேவரீருக்கு நமஸ்காரம் சொல்லச் சொன்னார் என்று சொல்ல, ஸ்ரீராமபிரானுடைய திருவடியின்கண் மிக்க அன்பையுடையவராகிய தாசரானவர் மிகவும் நன்றென்று அந்த விண்ணப்ப ஓலையில் எழுதியிருந்த செய்தியைப் படித்துப் பார்த்து மகிழ்ந்து, அவனை மூன்றுநாள் அவ்விடத்தில் இருக்கச் சொல்லி, அரசனுக்குத் தெரிவித்து அவனால் இந்தச்சீடனுக்கு மனமகிழ்ச்சியுண்டாகும்படி வஸ்திராபரணங்களைக் கொடுப்பித்து, கேசவசாமி எழுதினதற்குப் பிரதியாகத் தாமும் ஒன்றையெழுதி அவனிடத்தில் தந்து, ஒரு வேளைக்குவேண்டிய உணவு கொடுத்து அனுப்பினார். அந்தச் சீடன் அவரிடத்தில் விடைபெற்றுத் தனது ஆசாரியராகிய கேசவசாமி இடத்திற்குப் போய், தாசரிடத்தில் நடந்த செய்தி யாவும் சொன்னான். அதைக் கேட்ட கேசவசாமியானவர் மிகவும் மனமகிழ்ந்திருந்தார். அப்போது அவரது அருள்பெற்று ஞானவானாயிருந்த கிருஷ்ணாஜி நேசர் என்னும் நாவிதர் நாள்தோறும் ஐயமேற்றுண்டு, போதம் என்னும் கிரந்தத்தை இடைவிடாமல் அத்தியயநம் செய்துகொண்டு மஹா யோகியாய் இருப்பதை அறிந்த ஜயராமன் என்னும் ஒரு வேதியன் வந்து, உம்மினும் சிறந்த ஞானவான்கள் எவ்விடத்திலும் இல்லையென்பதை யான் அறிந்து உம்மைச் சரணமடைந்தேன், அடியேனுக்கு உபதேசம் செய்தருளவேண்டும் என்று வணங்கிப் பிரார்த்தி

க்க, நாவிதர் இவருடைய பிரார்த்தனைக்கு இசையாமல் நான் இழிகுலத்தினேன், நீர் வேதியர், அப்படியிருக்க நீர் என்னை வணங்கவுந் தகாது, நானும் உமக்கு உபதேசித்தலுந் தகாது, ஆதலால் என் ஆசாரியரிடத்தில் வந்து அவரை வணங்கி அவரிடத்தில் உபதேசம் பெற்றுக்கொள்வீராக என்று அன்போடு சொல்ல, அந்த வேதியன் நாவிதரை நோக்கி, நான் உம்மைப்பார்க்கிலும் உம்முடைய ஆசாரியர் மஹாஞானவானென்று மதிக்கவில்லை, அன்றியும் என் மனம் வேறொருவரிடத்தில் பொருந்தவுமில்லை, ஆதலால் நீரே எனக்கு உபதேசித்தருளவேண்டுமென்று சொல்லுதலும், நாவிதர் அதற்கு மனமிசையாதவராய், இனி என் செய்வோமென்று ஆலோசித்து, ராமதாசரிடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், அவர் திருவடியை வணங்கி, வேதியனுடைய மனக்கருத்தை அறிவிக்க, அந்த தாசரானவர் வேதியனை நோக்கி, ஓ வேதியரே! நீர் யோசிப்பது பஹுஜநவிரோதமான காரியம், நீர் ஞானோபதேசம் பெறவேண்டுமென்கிற எண்ணமுடையவரானால் வேதியரிடத்தில் பெற்றுக்கொள்வதேயன்றி, தாழ்ந்த குலத்தினனாகிய நாவிதனிடத்தில்பெறுவது அழகல்ல என்று சில நீதிமொழிகளைக் கூறித் தடுத்தும் கேட்காமல் அன்போடு தோத்திரஞ்செய்து திருவடியைப் பிடித்துக்கொண்டு, நீரே உபதேசித்தருளவேண்டுமென்றான். அப்போது அவனதுமனவுறுதியைக் குருநாதர் அறிந்து, நாவிதரை நோக்கி, இவனுக்கு உபதேசம் செய்யக் கடவீர் என்று நியமித்தார். அதைக்கேட்ட நாவிதர் வேதியனை யழைத்துக்கொண்டு தமது வீட்டிற்குப்போய்ச் சாஸ்திரவிதிப்படியே ஸ்ரீராமபிரானது திருவடிகளைப் பூஜித்து வேதியனுக்கு உபதேசஞ்செய்தார். வேதியனும் குருசேவை செய்துகொண்டும் உபதேசிக்கப்பட்டதை மநநஞ் செய்துகொண்டும் இருக்குங்காலத்தில், நாவிதர் பரகதியை யடைந்தார். உடனே ஜயராமன் என்னும் அவ்வேதியன் நாவிதருக்குச் செய்யவேண்டிய சரம கைங்கரியங்கள் யாவுஞ் செய்து, அவ்விடத்தில் ஒரு நந்தனவனம் ஏற்படுத்தி, அதில் ஆசாரியருடைய பாதுகையை அமைத்து, அதை அன்போடு பூசித்துக் கொண்டிருந்து, ஒருவருஷம் கழிந்தவுடனே திதி செய்ய நினைத்துத் தமது ஆசாரியரிடத்திற் போய் வணங்கி, என் குருவுக்குத் திதி சமீபித்திருக்கின்றது, ஆதலால் அதனைச் செய்ய அடியேனுக்கு விடைகொடுக்கவேண்டும் என்று கேட்க, அவர், ஜயராமனை நோக்கி, நீ செய்வதைக் கண்டால் வேதியர் வந்து சிரார்த்த போஜநத்தை உண்ணமாட்டார்கள், ஆனாலும் ஸ்ரீராமபிரானது திருவருளால் எல்லாம் நிறைவேறும், நீர்போய் உமது விருப்பத்தின்படியே நடத்தக் கடவீர் என்று நியமிக்க, அப்படியே வேதியன்போய்த் திதிக்கு வேண்டியவற்றைச் சேகரித்து வைத்துக்கொண்டு, அமுதுசெய்யும் பொருட்டு வேதியரை யழைக்க, அப்படியே வேதியர் வந்து நிறைந்திருக்கும்போது வேதியன், மடைத்தொழில் முடித்துத் தன் ஆசாரியராகிய நாவிதருடைய சமாதியைப் பூஜைசெய்துகொண்டிருந்ததை வந்த வேதியரெல்லாரும் பார்த்து, இவன் நாவிதனிடத்தில் உபதேசம் பெற்று, அவன் இறந்தவுடனே அவனைப் பூஜி

க்கிறானே; இவன் வேதியன்தானா? இவன் அழைக்க வந்த நாமெல்லாரும் இவனிடத்தில் உண்டோமானால் நாம் எல்லாரும் இழிகுலத்தாராவோம், ஆதலால் இவன் வீட்டில் உண்பது நமக்குத் தகாத காரியமென்று ஆலோசித்து எழுந்து போய் விட்டார்கள்; இதைக் கண்ட வேதியன், துக்கித்துத் தனது ஆசாரியனை நினைத்த மாத்திரத்தில் ஆசாரியர் எழுந்தருளினார். இவரைக் கண்ட வேதியர்களெல்லாரும் இந்த வேதியன், செய்வது சரியான காரியமா? நீர் சொல்லுமென்று இவரை வணங்கி, இவரிடத்தில் ஒரு அற்புதம் விளங்கினால் அதைக் கண்டு நாங்கள் இவன் வீட்டில் உண்போம் என்றார்கள். அதைக் கேட்ட குருநாதர் வேதியர்களை நோக்கி, நீங்கள் இங்கேயிருங்கள் என்று சொல்லி, வீட்டிற்குள்ளே போய், ஜயராமனோடு வெளியே வந்தார். அப்போது ஜயராமனது தோளின்மீது ஸ்ரீராமபிரானும் குருநாதரிடத்தில் ஸ்ரீ ஆஞ்சநேயரும் விளங்குவதை வேதியர்கள் கண்ணாரக் கண்டு ஆச்சரியப்பட்டு, ஸ்ரீராமபிரானையும் ஆஞ்சநேயரையும் வணங்கி, ஸ்ராத்தம் முடிந்தவுடனே உண்டு மகிழ்ந்து, புஷ்பசந்தன தாம்பூல தக்ஷிணைகளைப் பெற்றுப்போயினார்.

அதன் பிறகு ராமதாசரானவர், அநேக பேரோடு கூடி ஒருவனத்திற் சென்று நாள்தோறும் ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில், பங்குனி மாசத்தில் அபரபக்ஷத்தில் சதுர்த்தசி திதியோடு கூடின ஆதிவாரம் விடியற்காலத்தில் ஸ்நாநம் வந்து, மறுபடியும் ஒருதரம் போய் ஸ்நாநம் வந்தார். அதைக் கண்ட அக்காபாயி என்பவர் தாசரை நோக்கி, நீர் நித்தியபடி ஸ்நாநம் வந்த பிறகு மற்றொருதரம் போய் ஸ்நாநம் வந்ததற்குக் காரணம் யாதென்று கேட்க, தாசர், என் தமையனார் இன்று ஸ்ரீராமபிரானது திருவடியையடைந்தார். அதைக் குறித்து வேதவிதி தவறாமல் ஸ்நாநம் வந்தேன், இதற்குப்பிரகாரம் பத்து நாளும் செய்வேன் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, சிவாஜி அரசன் வந்து இவரை அடிபணிந்து நிற்க, அவனை நோக்கி, என் தமையனார் பரமபதமடைந்தாராதலால் பத்துநாள் வரைக்கும் எனக்குச் சூதகம் காக்கவேண்டியிருக்கிறது, இதன்பின்பே சாமபள்ளேகார் என்னும் நகரத்தில் ஸ்ரீராமநவமி உற்சவம் செய்யக்கடவீர், உற்சவமுடிவில் நான் அவ்விடத்திற்கு வருகிறேன் என்று விடைகொடுத்தனுப்ப, அரசனும் அப்படியே போய் உற்சவத்தை நிறைவேற்றினான். உற்சவமுடிவுநாளில் ராமதாசரும் அவ்விடத்திற்கு எழுந்தருளினார். இவரைக் கண்ட சாதுஜனங்களெல்லாம் இவரை வணங்க, அவர்களையெல்லாம் குளிரக் கடாக்ஷித்து விடைகொடுத்து, அரசனுக்கும் விடைகொடுத்து அனுப்பி, தாம் அவ்விடத்தில் வீற்றிருந்தார். அப்போது அரசன், தன் மனத்தில் ஒன்றை நினைத்துக்கொண்டு, பரளிகட் என்கிற மலையில் தன் ஆசாரியருக்கென்று நினைத்து ஒரு மடம் கட்டி, அதில் தாசர் வந்திருக்கும்படி பிரார்த்தித்தான். அதற்குத் தாசரானவர், அரசனே, வனத்தில் சஞ்சரிக்கவேண்டும் என்னும் விருப்பமுள்ள என்னை நகரத்தையடுத்த சாந்த மடத்திலிருக்கும்படி

செய்தல் உனக்குத் தகுதியாகுமோ என்று கேட்க, அரசன் வணங்கி, எப்படியாகிலும் என் கோரிக்கையைத் தேவரீர் முடித்தருள வேண்டும் என்று தோத்திரஞ் செய்தான். அதற்குத் தாசர், மனமிசைந்தவுடனே, அவனை அழைத்துக்கொண்டுபோய், சிம்ஹாசனத்தில் எழுந்தருளப்பண்ணி, சோடசோபசாரங்களுஞ் செய்து, லக்ஷபிராமண போஜநமுஞ் செய்வித்து, ராத்திரியானவுடனே, தாசர் நித்திரை செய்யக் கால் வருடிக்கொண்டிருந்தான். அப்போது தாசர் விழித்தெழுந்து, அரசனை நோக்கி, அரசனே! துக்காராம் ஸ்வாமிகள், அநேகஞ் சீடர்களோடு எழுந்தருளுகிறார்; அவரை எதிர்கொண்டு அழைத்துவா என்று நியமிக்க, அரசன், நான் முன்பே தூதுவர்களை அனுப்பியிருக்கிறேனென்று சொல்லி, தாசரோடு கூடவே இருந்தனன். பிறகு துக்காராம் ஸ்வாமிகளும வந்து தாசரைக் கண்டு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யக்கண்டதாசரும் அவரை மார்போடுதழுவிக்கொண்டனர். இந்தப் பிரகாரமே வந்த சாதுக்களையெல்லாம தழுவிக் கொண்டு இருந்த காலத்தில், மண்டபத்தில் வேதியர்க்கு போஜநம அளித்தபிறகு, ராத்திரியானவுடனே, அருந்தவத்தையுடைய அறிஞர், வேந்தனை நோக்கி, நீ முந்தி ஹரிகீர்த்தநம் செய்யென்று சொல்ல, அரசன் நாம எண்ணின எண்ணம நிறைவேறிற்று என்று தனது குருநாதரையும மற்ற சாதுக்களையும் அனபோடு பணிந்து, காலில் சதங்கை கட்டிக்கொண்டு, மிருதங்கம் முதலிய வாத்தியங்கள் முழங்க விஸ்தாரமாக ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தநம் செய்தான். அதைக் கண்ட குருநாதர் ஆநந்தபரவசராய், அரசனை ஓரிடத்தில் இருக்கும்படி நியமித்து, வேணுபாயியை அழைத்து, ஸ்ரீஹரிகதா காலக்ஷேபம செய்யும்படி நியமித்து, அவர் அப்படியே செய்து யாவரையும் அவசமாக்கின பிறகு, விடியற்காலத்தில் ஹாரதி சமர்ப்பித்து, யாவர்க்கும பிரசாத விநியோகஞ் செய்து, மறுநாள் இரவில் அந்த மண்டபத்தில் அக்காபாயியைப் பாடச் சொல்லி, அவர் பாடி யாவரையும் ஆநந்த சாகரத்தில் மூழ்கச் செய்த பிறகு, பகிணுபாயியை அப்படியே பாடச்சொல்லி, அதின்பிறகு மனவுறுதியுள்ள வாமநகோசாமியைப் பாடச் சொல்லி, விடியற்காலமானவுடனே ஹாரதி சமர்ப்பித்து, மறுநாள் நிம்பராஜரையும ரங்கசாமிகோசாமியையும பாடும படி நியமித்து, அதன் பிறகு ஜயராமகோசாமியையும், அவர்க்குப் பிறகு கல்யாண கோசாமியையும், அவர்க்குப் பிறகு மேமநாபா கோசாமியையும் சிவராம கோசாமியையும் பாடச்செய்து, அவர்க்குப் பிறகு அடியவரெல்லாரையும் பாடசெய்து, அதற்குப் பிறகு துக்காராம ஸ்வாமியை நோக்கி, தேவரீர் ஹரிகதை செய்யவேண்டும் என்று பிரார்த்திக்க, அவர், சமர்த்த ராமதாசஸ்வாமியைப் பணிந்து, ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தநம் செய்ய, தாசர் முதலானோர் பரவசப்பட்டுச் சூரியோதயமாகும் வரைக்கும் மெய்மறந்து ஹரிநாம சங்கீர்த்தநம் செய்துகொண்டேயிருந்தார்கள். அப்போது பகவான், அவ்விடத்தே யெழுந்தருளினார். அப்படி யெழுந்தருளின பகவானுனவர், துக்காராமஸ்வாமிகளைத் தழுவிக்கொண்டு, மிகவும் ரஸமாயிருக்கிற உனது

கீர்த்தனத்தைக் கேட்டுப் பொழுது விடிவதையும் அறியாதிருந்துவிட்டேன் என்று சொல்ல, துக்காராம ஸ்வாமியும் பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்தார். உடனே பகவானனவர் மறைந்து போயினர். இதைக் கண்ட அடியாரெல்லாரும் ஆநந்தசாகரத்தில் மூழ்கினார்கள். துக்காராமஸ்வாமிகளும் பகவானை வணங்கி மங்கள ஹாரதி சமர்ப்பித்து, தாசரை அடிபணிந்து தழுவி நிற்க, தாசரும் அவரிடத்து உறுதியாகிய அன்பு பாராட்டிப் பிறகு யாவர்க்கும் பிரசாத விநியோகஞ் செய்து மறுநாள் ராத்திரியில் ராமதாஸர் ஸ்ரீஹரி கதா காலக்ஷேபம் செய்து நின்று, சேவர்களெல்லாம் பரவசமடையும்படி ஸ்ரீ லக்ஷ்மீ நாதனுக்கு ஹாரதி சமர்ப்பித்துப் பிரசாதம் பகிர்ந்து, நாடோறும் ஸ்ரீராமநாமஸங்கீர்த்தனஞ் செய்துகொண்டிருந்தார். அப்படியிருக்க, அரசனானவன், வந்த சாதுக்களுக்கெல்லாம் பாதபூஜை செய்து, அவர்கள் மகிழும்படி அன்னபானாதிகளைக் கொடுத்து, இது சாதுசற்சனங்கள் தங்குவதற்கு இடமாயிருந்ததனால் இதற்கு இன்றுமுதல் சற்சனகட் என்று பெயரிட்டான். பிறகு சாதுக்களெல்லாம் விடைபெற்றுத் தத்தம இடங்களைச் சேர்ந்தார்கள். அதன்பிறகு துக்காராம ஸ்வாமிகளும் அரசன் தருவதற் கெண்ணியிருக்கிற வரிசைகளை யறிந்து, இவன் நம்மிடத்திலுள்ள அன்பினால் கொடுக்க எண்ணின பொருள்களை ஏற்றுக்கொள்ளுதல் நமக்குத் தகாத காரியமென்று, அரசனிடம் சொல்லாமல் பிரயாணமடைந்தார். அரசன் துக்காராம ஸ்வாமியைத் தேடிக் காணாதவனாய்த் தாஸ சற்குருநாதருடைய திருவடியைப் பணிந்து, ஸ்வாமீ! வஸ்திராபரணாதிகளை பிருதியாகக்கொடுக்க எண்ணியிருந்தேன்; அப்படியிருக்க, துக்காராமஸ்வாமிகள் அடியேனோடு சொல்லாமலே போய்விட்டார் என்று சொல்ல, ராமதாஸர், அரசனை நோக்கி, சகல சித்திகளையும் அடைதற்குரிய மோக்ஷத்தையும் விரும்பாமல், ஸ்ரீபாண்டுரங்கப் பெருமானுடைய பிரபாவத்தையே புகழ்ந்துகொண்டிருக்க விரும்பினவராகிய துக்காராம ஸ்வாமிகள், நீ தருவதாகிய பொருளை ஏற்றுக்கொள்ளுவாரோ? ஏற்றுக்கொள்ளார்; ஆதலால் அவர் உன்னோடு சொல்லாமல் போய்விட்டார்; நீ அதைக் குறித்து விசனப்பட வேண்டியதில்லை என்று சொல்ல, அரசன், அவரது பெருமையை நினைந்து அவரது திருவடியை வணங்கித் தன் ஊர்க்குப் போயினன். தாசரும் வனத்திற்போய்ச் சற்சனகட் என்னும் மலைக்குப் போவதும் அதைவிட்டு வனத்திற் போவதுமாய்த் தமது விருப்பத்தின்படியே சஞ்சரித்துக்கொண்டிருக்கும் நாளில், அந்த சற்சனகட்டின் உச்சியில் வாசம்பண்ணுகிறவளாகிய ஒரு காளி யென்னும் தேவதை நடு ராத்திரியில் தாசருக்கு எதிரில் வந்து நின்றாள். இவர் அந்தக் காளியைக் கண்டு, தாயே, நீயார்? நீ இருப்பது எங்கே என்று கேட்க, அந்தக் காளியானவள், நான் மாயை என்பவள், நானிருப்பது இந்த மலையில், நீர் எத்தனை தரம் இவ்விடத்திற்கு வந்தும் என் முகத்தைத் திரும்பியும் பார்த்திரில்லை; ஆனால் என்மீது நீர் சொல்லும் கீர்த்தனத்தைக் கேட்க விரும்புகிறேன் என்று சொல்ல, தாசரானவர், காளியை நோக்கி, தாயே, உன் கழுத்தி

லணிந்திருக்கிற முத்துமாலையில் நான்கு முத்துக்களை யெடுத்து எனக்குக் காது நிறையக் கடுக்கன் செய்துபோட்டால் நான் உன்மீது கவிபாடுகிறேன் என்றுசொல்ல, மாயையானவள் அப்படியே நானேயத்தினம் செய்துபோடுகி றேன் என்று சொல்லி மறைந்தாள். அதைக்கேட்ட தாசரானவர், மறுநாள் இரவில் அந்த மாயையின் கோயிலை யடைந்து கும்பிட்டு நின்றார். இவரைக் கண்டவுடனே, இவர் கேட்டபடியே காதுநிறையக் கடுக்கனிட்டாள். அதை யணிந்துகொண்டு, அந்தக் காளிக்கு எதிரே நின்று, அவள் மனங் களிக்கும் படி அற்புதமான கவிகளைச் சொல்லி விடைபெற்றுத் தம்மடத்தை யடைந் தார். இப்படியிருக்க, மறுநாள் காலையில் கோயிலுக்குள்ளே வந்த அர்ச்சகர் கள் காளியின் மார்பில் அணிந்திருந்த முத்துமாலையில் நான்கு முத்துக்கள் குறைந்திருப்பதைப் பார்த்து,பயந்துபோய், அரசனிடத்திற் சொல்ல, அரசன் அவர்களிடத்தில் சந்தேகப்பட்டு அவர்களைச் சிறைச்சாலையி லடைத்துவைத் திருந்தான். அன்றிரவில் காளியானவள் அரசன் கனவில்வந்து, நான் நான்கு முத்துக்களை யெடுத்துக் கடுக்கன் செய்து ராமதாசருக்கு இட்டு அவரிடத தில் கவி கேட்டேன்; நீ அர்ச்சகர்கள் திருடிக்கொண்டார்களென்றெண்ணி அவர்களை வருத்தவேண்டாம் என்று சொல்லிவிட்டுப் போயினள். அரசனு னவன் விழித்து, சற்சன மலையில் வாசம்பண்ணுகிற தாசரிடத்திற்கு வந்து இவரைக் கண்டு வணங்கி, இவர் காதில் கடுக்கன் தரித்திருப்பதைப் பார்த்து மனமகிழ்ந்து தான் கண்ட கனவை அங்குள்ள சாதுக்களுக் கெல்லாஞ் சொல்லி விடைபெற்றுத் தன் நகரத்திற்குப் போய்விட்டான்.

அதின்பிறகு ஒருநாள் இவர், அடியார்களில் ஒருவனுகிய வணிகன், சௌதாகிரி என்னும வர்த்தகப்பெயர் பூண்டு கப்பல் வியாபாரம் செய்யும் பொருட்டு அநேக தீவுகளில் போய், வர்த்தகம் செய்துகொண்டு மீண்டு வரும்போது, பெருங் காற்றால் இவன் ஏறிவருங் கப்பலானது சின்னுபின்ன ப்பட்டு நீரில் அழுந்துகிறசமயத்தில், அவன் மனம் வருந்தி, செய்யவேண் டிய முயற்சியெல்லாம் செய்து பயனடையாமல் செயலற்றவனுய் ராமதாச ரைத் தோத்திரஞ் செய்து, தியானித்துப் பொன்னினுல் நிறைக்கப்பட்டிருக் கிற இந்தக் கப்பலானது நீரிலழுந்தாமல் கரை சேரும்படி அனுக்கிரகஞ் செய்தால் அந்தப் பொன்னில் நான்கி லொருபாகம் தேவரீருக்குச் சமர்ப் பிக்கிறேனென்றுன். இவன் இப்படிப் பிரார்த்தித்ததை யறிந்த ராமதாசர், அந்தக் கப்பல் நீரிலழுந்தாமல் கரைசேரப்பண்ணி, ஈரவஸ்திரத்தோடுநிற்க, அவ்வணிகன் இவரைக் கண்டு திருவடியில் வீழ்ந்து வணங்கி, நான் நினைத்த மாத்திரத்தில் எழுந்தருளி என்னை ரக்ஷித்த சற்குருநாதரே என்று புகழ்ந்து வணங்கி நின்றுன்; தாசர் மறைந்துவிட்டார்; கப்பற்காரன் ஆச்சரியப்பட் டான். ஒருக்ஷணகாலத்தில் ஆடை நனைந்து நீரொழுகவும் அன்பரெல்லா லாரும் வியப்படையவும் விளங்குகிற தாசரை வாமனசாமி என்னும் அடி யார் நோக்கி, ஒப்பற்ற பெருந் தவத்தை யுடையவரே! உமது ஆடையில் இப்படி நீரொழுகக் காரணம் யாது? ஒரு க்ஷணகாலத்திற்கு முன்பு

இப்படியில்லையே என்று கேட்க, தாசரானவர், கேட்ட அன்பனை நோக்கி, ஓ அன்பரே! நற்குணமுள்ள ஒரு வணிகன் தன் கப்பல் கடலில் அழுந்திப்போகுங்காலத்தில் என்னை நினைத்துத் தோத்திரம்பண்ணினான்; அதற்காக நான் மனமிரங்கிக் கடல்நீரில் முழ்கிக் கப்பலை முழுகாமல் மிதக்கும்படி செய்து, கொண்டுவந்து கரைசேர்த்தேன்; அதனால் என் ஆடை நனைந்திருக்கின்றது என்று சொல்லக்கேட்ட சாதுக்களெல்லாரும், இவர் ஒரு நிமிஷத்தில் போய்ச் செய்து வந்த காரியத்தை யாம் அறிந்திலமல்லவா என்று ஆச்சரியப்பட்டார்கள். மறுநாள் அந்த வர்த்தகன் அளவற்ற பொன்னைக் கொண்டுவந்து தாசரை வணங்கி, ஸ்வாமீ! என்கப்பலானது நீரிலமுழுகாமல் காப்பாற்றினீர்; அதைக்கண்டு உம்மை வணங்கி யெழுந்து பார்க்கும்போது, நீர் மறைந்துவிட்டீர், ஆனாலும் இப்பொழுது வேண்டிய பொன் கொண்டுவந்திருக்கிறேன், இதனை அங்கீகரிக்கவேண்டுமென்று வணங்கிநின்றான். இதனை அடியாரெல்லாரும்பார்த்து, இவரது மகிமைக்கு ஒரு எல்லையுண்டோ என்று புகழ்ந்து கொண்டாடிக்கொண்டிருக்கையில், ராமதாசர் வணிகன் சமர்ப்பித்த பொன்னைச் சற்பாத்திரத்திலே மனப்பூர்த்தியாய்ச் செலவுசெய்து வணிகனை நோக்கி, நீ இன்னம் வேண்டிய பொருள்களை யெல்லாம் அடையப்பெறுவாய் என்று ஆசீர்வதித்து விடைகொடுக்கப் பெற்றுப்போய்விட்டான்.

அதின் பிறகு சிலநாள் கழிந்தவுடனே, ஔரங்கசாக்ஷாவின் பெருஞ்சேனையானது சற்சனகட் என்னும் மலையைத் தம் வசப்படுத்திக் கொள்ள எண்ணி, பல உபாயங்கள் செய்தும், கிடைக்கப்பெறாமையால், வெடிகுண்டு முதலியவற்றை வெடிப்பித்து, அருகிலிருக்கும் மலைகளெல்லாம் பொடிபடச் செய்தகாலத்தில், அந்த அனர்த்தத்தைத் தாசரானவர் கண்டு, ஸ்ரீ ஆஞ்சநேயரை நினைத்தவுடன், அநேக வானரங்கள் தோன்றி, இந்தச் சேனைகளைச் சின்னாபின்னப்படத் தகர்த்து அழிக்க, அதைக் கண்ட சேனைத் தலைவன் தன் அரசனாகிய ஔரங்கசாக்ஷாவுக்கு இந்த வானரங்கள் செய்யும் அனர்த்தத்தையும் ஒரு ஹிந்து சந்நியாசி அந்த மலையில் வாசம்பண்ணுகிற செய்தியையும் எழுதியனுப்பினான். அரசனானவன் அச்செய்தியையறிந்து, அந்தத் தபோமகிமையுள்ள ஹிந்து சந்நியாசியை வணங்கி மீண்டு வாருங்கள் என்று அறிவித்தான். அப்படியே சேனைத் தலைவன் ராமதாசர் திருவடியில் விழுந்துவணங்கித் தோத்திரஞ்செய்து, ஸ்வாமீ! அடியோங்களை ரக்ஷித்தருள வேண்டுமென்று தாழ்வு சொல்லி விடைபெற்று ஊருக்குப் போய்விட்டான். சிவாஜி அரசன் இந்தச் செய்தியை அறிந்து, ஆனந்தபரவசனாய் வந்து ராமதாசரது மகிமையை வியந்துவாழ்த்தித் திருவடியைப்பிடித்துக்கொண்டிருக்க, அவனைத் தாசரானவர் நோக்கி, ஏகாந்தமான இடத்திற்கு, அழைத்துக்கொண்டுபோய், ஓ அரசனே! நீ ஸ்ரீராமபிரானுடைய பாதாரவிந்தங்களைச் சேரவேண்டிய காலம் சமீபித்ததனால் நீ விவகாரங்களெல்லாவற்றையும் ஒழித்து, இடசித்தனாய், மனத்தில் ராமரூபத்தைத்தரித்து, பதின்மூன்றெழுத்தைக்கொண்ட மந்திரத்தை ஜபித்துக்கொண்டிருப்பாயாக என்று நியமித்தார். நியமித்தலும்,

அரசன் பரமானந்தத்தை யடைந்து, சற்குருநாதரை வணங்கி, உடல் பொருளாவி மூன்றையும் முன்பே தேவரீருக்குத் தத்தஞ் செய்தேன், இன்னும் உமது கட்டளையின்படி பாரதந்திரனாய் நடக்கப்போகிறேன் என்று சொல்லி வணங்கி விடைபெற்று ஊருக்கு விரைந்துவந்து, அநேகமான தான தர்மங்களைச் செய்து, குருநாதரால் நியமிக்கப்பட்ட நாளில், உலகமுழுதும் சம்பாதி என்னும் தன் புதல்வனுக்குக் கொடுத்து, முடிசூட்டி ஏகாந்த ஸ்தலத்தின் ஒரு பக்கத்திலிருந்து, ஸ்ரீலக்ஷ்மீநாதராகிய ஸ்ரீராமபிரானது திருமேனியைத் தியானித்துக்கொண்டிருந்து அவரது திருவடியை யடைந்து வாழ்ந்திருந்தார்.

அதின்பிறகு அரசனான சம்பாதி, தன் தந்தைக்குச் சரமக்கிரியைகளையெல்லாம் செய்து முடித்து, சற்குருநாதருடைய திருவடிச்சேவை செய்துகொண்டு இருக்குங்காலத்தில், தன் தந்தையை நினைத்து மனம்வருந்துவதை தாசரானவர் அறிந்து, லோகஸ்வபாவத்தையெல்லாம் எடுத்துச்சொல்லி அவன் மனத்தைத் தெளிவித்துத் தத்துவஞானத்தை உபதேசித்தருளினார். அந்த உபதேசத்தைப் பெற்று மனந்தெளிவடைந்த சம்பாதி, தன் தந்தையாகிய சிவாஜிபோல மனமயக்க மொழிந்து தனதூரில் நிலைபெற்று வாழ்ந்திருந்தான். பிறகு தாசரானவர் ஒருநாள் சீடரெல்லாரையும் ஒருமிக்க அழைத்து, இப்பொழுது வரப்போகிற அபரபக்ஷத்தில் நவமிதிதியில் மத்யாந காலத்தில் நான் ஸ்ரீமந்நாராயணசரணாரவிந்தத்தை யடையப்போகிறேன், அடைந்தவுடனே என் தமையனார்க்குப் பேரனான கங்காதரனை என் பட்டத்துக்குரியவனாக்கி, என் சம்பிரதாயத்தை விளங்கச் செய்துகொண்டிருங்கள் என்று நியமித்தார். அதைக்கேட்ட சீடர்கள் விரைந்துபோய், தாசர் தமையனார் வீட்டிலுள்ளவர்களுக்கு இந்தச் செய்தியைத் தெரிவிக்க, அவர்களெல்லாரும் திரண்டுவந்து, சாம்பள் கோரியிருக்கிற தாசரைக்கண்டு வணங்கின மாத்திரத்தில், தாசரானவர் அவர்களைநோக்கி, நீங்கள் யாவரும் இடைவிடாமல் ஸ்ரீஹரி நாமஸ்மரணை செய்துகொண்டும், உஞ்சவ்ருத்தியால் தேஹபரிபாலநம்செய்துகொண்டும், சரீரமுள்ளளவும் ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியை த்யானித்துக்கொண்டும், பூஜை முதலியவற்றைத் தவறாமல் நடத்திக்கொண்டும், ஸ்ரீராமநவமியுத்ஸவமும், ஹநுமஜ்ஜயந்தி யுத்ஸவமும விசேஷ வைபவத்தோடு நடத்திக்கொண்டும், ஸ்ரீஹரிதாசர்கள் வந்தால் அவர்களை அன்போடு அந்நபாநாதிகளால் உபசரித்துக்கொண்டும், எல்லா வுயிர்களிடத்தும் அருள் செய்துகொண்டும், வைராக்ய சீலராயிருங்கள்; இப்படி யிருப்பீர்களானால், நீங்கள் ஸ்ரீராமபிரானது திருவடிக்கு ஆளாவீர்கள்; அன்றியும், ஸ்ரீபகவத் ப்ரபாவத்தை யார் சொன்னாலும் அன்போடு கேட்டு மகிழ்தல், தாசபோத கிரந்த பாராயணஞ் செய்தல், ஜாதி நீதி தவறாதிருத்தல் என்னும் இந்தச் செய்கைகளிலும் வழுவாதிருங்கள் என்றார். இவர் சொன்னதை யெல்லாருங் கேட்டு அப்படியே யாகட்டுமென்று வணங்கி நின்றார்கள். அந்தச் சமயத்தில் கருநாடக தேசத்தில் வாழ்கிறவராகிய ஒரு ஸாதுவானவர், ஸ்ரீராமபிரான், ஸ்ரீஜாநகிபிராட்டி,

ஸ்ரீலக்ஷ்மணப்பெருமாள், ஸ்ரீஆஞ்சநேயர் இந்நால்வருடைய விக்ரஹங்களை யெடுத்துக்கொண்டு வந்தார். அவரைத் தாசர்பார்த்து, அவரிடத்தில் மிகவும் அன்பு பூண்டு, விக்ரஹங்களைக் காட்டச் சொல்லி, பார்த்துச் சந்தோஷித்து, அருகிலிருப்பவராகிய கல்யாணகோசாமியை நோக்கி, இந்த விக்ரஹங்களைப் பெட்டியில் வைத்துப் பத்திரப்படுத்துங்கள், இவை பிற்காலத்தில் பயன்படும் என்று நியமித்து, மேலும் சொல்லுகிறார். நான் பரமபதத்தை யடைந்த பிறகு என் சரீரத்தைச் சமாதிசெய்யாமல் தகனஞ்செய்து, அந்த இடத்தில் இந்த நான்கு விக்ரஹங்களையும் ப்ரதிஷ்டைசெய்துவையுங்கள் என்றும் நியமித்தார். பிறகு தாம முன்னமே சொன்ன நாள் நேரிட்டவுடனே, சூரியோதயத்தில் நீராடி, பத்மாசநத்தி லெழுந்தருளி ஸ்ரீராமபிரானை த்யானித்து, ஓ ஸ்ரீராமபிரானே! இன்று எனக்கெதிரே யெழுந்தருளி உன் திருவடியை நான் அடையும்படி க்ருபை செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தவுடன், ஸ்ரீராமபிரான் இவருக்குப் பிரத்யக்ஷமானார். அப்படி ப்ரத்யக்ஷமான பகவானுடைய சகுணவடிவாகிய திருமேனியின் திவ்யசௌந்தர்யத்தைக் கண்களிகூரக்கண்டநுபவித்து அவருடைய திருவடியில் ஐக்யமாய்விட்டார். அதைக்கண்ட தேவர்கள் முனிவர்கள் ஸாதுக்கள் எல்லாரும் மலர்மழை பொழிந்து, ஜயஜயகோஷஞ்செய்தார்கள். பிறகு தாசருடைய திருமேனியைப் பலபேருங்கூடித் தாங்கிக்கொண்டுபோய் ஒரு இடத்தில் வைக்க, ஸாதுக்களெல்லாரும் சேர்ந்து, இவருடைய ஆத்மகுணங்களைப்புகழ்ந்து, சந்தனக்கட்டை முதலான பரிமள காஷ்டங்களால் சிதைசெய்து, அதின்மேல் இவர் திருமேனியைக் கிடத்தி, விதிப்படியே நெருப்புமூட்டி இரண்டுநாள் கழித்து மூன்றாநாள் உதயத்தில் அங்கத்தைச் சுத்திசெய்யும் பொருட்டுச் சாம்பலெடுக்கையால் அள்ளும்போது, அந்தச்சாம்பலில் இவருடைய பாதுகையும், பதின்மூன் றக்ஷரங்களையுடைய திருமந்திரமும எழுதப்பட்டிருந்ததைக்கண்டு ஆச்சரியப்பட்டு நின்றார்கள். அப்போது கல்யாணகோசாமியானவர் பாதுகையைக்கொண்டு நின்று மனங் தளரும்போது, அவருடைய மனத்தளர்ச்சி நீங்கும்பொருட்டு அந்தச் சாம்பலிலிருந்து ஒரு தொனியுண்டாயிற்று. அது எப்படி யென்றால், என் சரீரமாத்திரம இல்லாமற்போய்விட்டது, நான இந்த வுலகமுள்ளளவும் இருப்பேன், நீங்கள் துக்கிக்கவேண்டியதில்லை, நீங்கள் ஸ்ரீராமநாம ஸ்மரணையை மறவாமலும தாசபோதக்ரந்தத்தைப் படனஞ்செய்துகொண்டும இருப்பீர்களானால் உயர்ந்த பதத்தை யடையலாம் என்று ஒருகவிசொல்லும் தொனியுண்டாயிற்று. அதுகேட்ட கல்யாணகோசாமி முதலானவர்கள் வியந்து கொண்டாடினார்கள். அதின்பிறகு இந்தத் தாசருக்குப்பேரனாகிய கங்காதரர் ஜாம்புநகரத்திலிருந்துவந்து க்ருஷ்ணா நதியையணுகுதலும், கல்யாண கோசாமி முதலானவர்கள் அவரைக்கண்டு தழுவி, அவரையழைத்துக்கொண்டு மலைமேலேறி, தாசரிருந்த ஆசநத்தைக்காட்ட, கங்காதரர்கண்டு கைகுவித்து வணங்கி, தாசர் திருமேனியை தஹநஞ்செய்த இடத்தில் பாதுகையைப் பிரதிஷ்டைசெய்து, ஒருகோயில் ஏற்படுத்தி, அதில் ஸ்ரீராமபிரான் முதலானோ

ருடைய விக்ரஹங்களை யெழுந்தருளுவித்து, பகல்முழுதும் ப்ராஹ்மணாராதநமுதலியவற்றால் காலங்கழித்து இரவில் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநஞ்செய்து இப்படி ஐந்துநாள் உத்ஸவமகொண்டாடி, கங்காதரருக்குப்பட்டாபிஷேகம் செய்துவைத்தார்கள். அவரும் ஞானவைராக்யசீலராய் அந்தப் பட்டணத்திலிருந்துகொண்டு ஸ்ரீராமநவமி, அநுமந்த ஜயந்தி முதலான உத்ஸவங்களைத் தவறாமல் நடத்திக்கொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே மண்டலீகராஜன் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சமர்த்தராமதாசசுவாமிகள்சரித்திரம் முற்றிற்று.

## ௫௨-வது மண்டலீகராஜன்சரித்திரம்.

இந்துஸ்தாநம் என்னும் தேசத்தில் மண்டலீகன் என்னும் பெயருள்ள ஒரு அரசர் இருந்தார். அவர் தேவியார் பெண்மைக் குணங்களிற் சிறந்து விளங்குகின்றவர். இவர் பெயர் சுலக்ஷணி யென்று சொல்லுவார்கள். இவர் ஹரிபக்தியிற் சிறந்தவராயும் ஏகாதசி விரதத்தை வழுவாது நடத்துவோராயுமிருந்தார். இவர்கணவராகிய மண்டலீகர் விரதாநுஷ்டாநம் முதலானவைகள் இல்லாதவராயினும் மனத்தில் மாத்திரம் ஹரிநாமத்தைப் பதித்துவைத்திருந்தார். இவரது மனநிலையைத்தேவியார் அறியாமையால் அரசனை நோக்கி, ப்ராணநாதரே, நீர் விஷ்ணு பூஜை செய்யவேண்டுமென்றாள். அது கேட்ட அரசன், ஓ பெண்ணே, நான் ராஜரிகம் நடத்துவதினால் மனநிலையில்லாதவனாயிருக்கிறேன், நான் ஹரிபூஜைசெய்யமுடியாதென்றார். அதைக்கேட்ட தேவியார் மனவருத்தத்தோடிருக்குங் காலத்தில், ஒருநாள் அரசர் நித்திரைக் காலத்தில் ராமாவென்று உச்சரிக்கக்கேட்ட தேவியார் விடியற்காலத்திலெழுந்து நீராடிவந்து நித்திய கர்மாநுஷ்டாநங்களை முடித்து, ஸ்ரீஹரிபூஜை, ப்ராஹ்மண ஸமாராதனம், ஹரிநாமஸங்கீர்த்தனம, உத்ஸவம் முதலியவற்றைச் செய்யத் தொடங்கினார். இதைக்கண்ட அரசர், இன்று நீர் இப்படி செய்வதற்குக் காரணம் யாதென்று தேவியாரைக்கேட்க, தேவியார் நாயகரை நோக்கி, உமதுவாயால் ஒருதரமாயினும் ராமநாமோச்சாரணம் செய்ய நான் ஒருகாலத்திலும கண்டதில்லை; அப்படியிருக்க, நேற்றிரவில் நித்திரைக்காலத்தில் ராமநாமோச்சாரணத்தை உமது வாயாற்கேட்டு மனக்களிப்படைந்து அந்தப் பெருங்களிப்பினால் இந்த உத்ஸவாதிகளை நடத்தினேன் என்றார். அதைக் கேட்ட அரசர், ஒருவரு மறியாதிருக்க என்மனத்திற் பொதிந்து வைத்திருந்த ஸ்ரீராமபிரானவர், அந்தமனமாகிய இடத்தை விட்டு, வாய் வழியாய் வெளிப்பட்டாரோ வென்று சொல்லி, அந்த ஸ்ரீராமபிரானுடைய திருவடிக்குத் தமது உயிரைச் சமர்ப்பித்தார். அதைக் கண்ட தேவியாரும உடலைவிட்டு நீங்கித் தமது நாயகரைத் தொடர்ந்து போனார். இவ்விருவருடைய அந்யோந்ய நிலைமையைக் கண்டீரோ வென்று யாவரும் வியந்து கொண்டாடினார்கள் என்று சொல்லி, மேலே பிளாபாயி வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

மண்டலீகராஜன்சரித்திரம் முற்றிற்று.

# ௫௩-வது பிளாபாயி சரித்திரம்.

ஸூரைநகரில், ஒரு பிராமணரின் புத்திரியாகிய பிளாபாயி என்பவர் ஒருவரிருந்தார். இவர் அதி பால்லியத்திலிருந்து ஸ்ரீ ஹரி பூஜை செய்துகொண்டு வருவார். இவர்க்குத் தகுதியான பருவம் வாய்த்த பிறகு, இவர் கணவர் இறந்து போனதனால் இவர் தமது தந்தையாரிடத்தை யடைந்து, தமது வழக்கம்போல ஹரி பூஜை செய்துகொண்டிருக்குங் காலத்தில், அந்தத் தந்தையும் இறந்துபோனான். பிறகு இவர் தமது ஸஹோதரர்களிடத்தி லிருக்க நேர்ந்தது. அப்போது அந்தச் ஸஹோதரர்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் மாறுபட்டு, உள்ள பொருள்களையெல்லாம் பாகித்துக்கொள்ள எண்ணிப் பிரித்துக்கொள்ளும்போது, இளைய ஸஹோதரன் பாகத்தில் பிளாபாயியாருடைய பூஜைப் பெட்டி அகப்பட்டது. இங்குப் பிளாபாயியார் ஸ்ரீ பகவானைப் பூஜைசெய்யாமல் உண்ணமாட்டாராகையால், இளையவனிடத்துக்குப் பூஜைப் பெட்டியைக் குறித்துக் கேட்டனுப்பினார். அவனும் அந்தப் பெட்டியைத் தேடிப்பார்த்துக் காணாமையால், என்னிடத்தில் இல்லையென்றான். அதைக் கேட்ட பிளாபாயியார் ஐந்துநாள் வரைக்கும் உண்ணாதிருந்தார். இவருடைய மனநிலைமையை யறிந்த ஸ்ரீ பகவானானவர், பாயியாருடைய கனவில் ஒரு பிராம்மண ரூபங் கொண்டு வந்து பூஜைப் பெட்டியைத் தந்து மறைந்துபோனார். இவர் விழித்தெழுந்து, விடியற்காலத்தில் நீராடிவந்து, பகவதாராதனம் செய்து, பிறகு அமுது செய்தார். இதையறிந்த இளையவன், தன் தமையனிடத்திலும் தமக்கையிடத்திலும் வந்து வணங்கி, நான்செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து, தமையனோடு கூடி விரோதமில்லாமல் வாழ்ந்திருந்தான். பிளாபாயியாரும் ஸ்ரீ ஹரிபூஜையைத் தவறாமல் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே ராமாபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பிளாபாயி சரித்திரம் முற்றிற்று.

# ௫௪-வது ராமாபாயி சரித்திரம்.

காசியில் சந்தராஜன் என்று ஒரு அரசனிருந்தான்; அவன் ஸாது பூஜையிற் சிறந்தவன்; அவனுக்கு ராமாபாயி என்றொருபெண்பிறக்க, அப்புதல்வியார்க்குப் பருவம் வருமளவும் அன்போடு வளர்த்துப் பிறகு ஒரு வாலிபனுக்கு அந்தப் புதல்வியாரை மணஞ் செய்து கொடுத்தான். அந்த மண மகன் ஸ்ரீஹரிபக்தி இன்னதென்றறியாதவனாகவும், கனவிலும் ஸ்ரீஹரிநாமஸ்மரணை இல்லாதவனாகவும், காமுகனாகவும் இருந்ததனால், ராமாபாயியார் மிகவும் மனம்வருந்தி, நமது வினைப்பயன் இப்படிச் சம்பவித்ததென்று தீர்மானித்துக்கொண்டு, கணவனுக்கு அநுகூலமாக நடந்து வரும் நாளில், அவர் வயிற்

தில் ஒரு சற்புத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரனை அன்போடு வளர்த்து வரும் நாளில் ராமாபாயியார் தம் கணவனுக்கு ஸ்ரீஹரிபக்தியுண்டாவது எக்காலமோவென்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், ஒருநாள், கணவனை நோக்கி, உத்தமர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்தால் அவர்களை அலக்ஷ்யம் பண்ணாமலும், உயிர்க்கொலை செய்யாமலும் இருந்தால் மேலான நற்கதி வாய்க்கும், அவற்றைச் செய்தால் மீளா நரகம் சித்திக்கும் என்றார். இந்த வார்த்தையைக் கேட்ட அந்தத் துர்மார்க்கன், ராமாபாயியார் வார்த்தையைத் திரஸ்கரித்து, ஹரிதினமாகிய ஏகாதசியில் ஒரு ஆட்டைக் கொண்டுவந்து கொலை செய்யப்போனான். அதைக்கண்ட ராமாபாயியார் இன்று இப்படிப்பட்ட காரியத்தைச் செய்வது நன்மை யல்லவென்று சொல்ல, அவன் அந்தச் சொல்லைக் கேளாமல் ஆட்டைக் கொன்றான். அதற்கு ராமாபாயியார் மிகவும் துக்கித்து, இதற்கென்ன செய்யலாமென்று ஆலோசித்து, தமது புதல்வனுக்கு நஞ்சைப்பாலோடு கலந்தூட்டித் தொட்டிலில் வளர்த்தினார். சற்றுநேரத்தில் நஞ்சின் கொடுமையால் புதல்வன் இறந்துபோனான். புதல்வன் இறந்ததை அந்தத் துராசாரன் முதலானோர் அறிந்து, கோவென் றலறி யழுதார்கள். அப்போது ராமாபாயியார் சற்றும் மனந் தளராமல், ஸ்ரீஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். இப்படி இவர் இருப்பதைக் கண்டோரெல்லாரும் அவரை நோக்கி, புதல்வன் இறந்ததைக்குறித்து நாங்களெல்லாரும் வருந்தி அழும்போது, பத்துமாசம் சுமந்து பெற்று அன்போடு வளர்த்த உன்மனம் சற்றும் கலங்காமலிருப்பது ஆச்சரியமென்று அழுதுகொண்டே சொல்ல, ராமாபாயியார் அவர்களை நோக்கி, அழியும்பொருள் என்றைக்காயினும் அழிக்தேதீரும்; அதைக்குறித்து அழுதால் என்னபயன் என்றார். அதைக்கேட்ட கணவனானவன் இவரை நோக்கி, அப்படியானாலும் இந்தச் சிறு வயதிற் சாவது தகுதியோ வென்றான். அதற்கு ராமாபாயியார், தகுதி யல்லவாயினும் பகவானுடைய கட்டளையைக் கடக்க முடியாது, ஆனால் ஸ்ரீஹரிதாசர்கள் இப்பொழுது நமது வீட்டுக்கு எழுந்தருளுவார்களானால் நமது துன்பம் தீரும் என்றார். அதைக்கேட்ட கணவன் அவர் நம்மிடத்துக்கு வருவதெப்படியென்று கேட்க, பாயியார் சொல்லுகிறார். ஹரிதாசரைக் கண்டு வணங்கி அழைத்து வந்து அவர்களை அன்போடு உபசரித்து அவர்கள் திருவடிகளை விளக்கி, அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தை நமது புதல்வன் வாயிற்பெய்தால் இவன் பிழைப்பான் என்று சொல்ல, அப்படியே அவன்போய் அங்குள்ள கோயிலிலிருக்கிற திருமாலடியாரை யழைத்துவந்து பூஜித்துத் தோத்திரம் செய்து அவர்களுடைய ஸ்ரீ பாததீர்த்தத்தைக் குழந்தையின் வாயிற் பெய்தவுடனே குழந்தையானவன் தூங்கி விழித்தெழுந்தாற்போல எழுந்திருக்கக் கண்டு வியந்து, எமது துன்பம் நீங்கினது என்று சொல்லி, அந்த ஹரிதாசரிடத்தில் பக்தி யுள்ளவனாகித் தீச்செய்கைகளை விட்டொழிந்து சாதுவாகி, நாள்தோறும் ஹரிபஜனைசெய்துகொண்டும், ஹரிபூஜைசெய்துகொண்டும், ஹரிகதைகளைக் கேட்டுக்கொண்டும் ஹரிதாசனாய் வாழ்ந்திருந்தான் என்று சொல்லி, மேலே ராமராஜர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ராமாபாயி சரித்திரம் முற்றிற்று.

# ௫௫-வது ராமராஜா சரித்திரம்.



ஓரூரில், பரமசாத்விகராயும், ராமோபாசகராயும், அல்லும்பகலும் ஸ்ரீராம சரித்திரத்தைக் கேட்டுக்கொண்டிருப்பவராயும், ராமராஜர் என்னும் பெயருள்ளவராயும் ஒரு அரசர் இருந்தார். அந்த அரசருடைய அரண்மனையில் ஒரு புராணிகர் ஸ்ரீராமாயணம் படித்துக்கொண்டு வரும்போது, ஸ்ரீராமமூர்த்திக்கு ஒரு துன்பம் நேரிடுகிற சந்தர்ப்பத்தில் அரசர் துன்பப்படுவதைக்கண்டு ஸ்ரீராமஜயம் என்று சொல்லிக்கொண்டே வருவார். இப்படியிருக்குங் காலத்தில் அந்தப் புராணிகர் ஒருநாள் ஏதோ ஒரு பிணியினால் புராணபடனத்துக்கு வரக்கூடாமலிருந்ததனால் தமது புதல்வனை அரண்மனைக்கு அனுப்பி ஸ்ரீராமஜயத்தை மாத்திரஞ் சொல்லிவாவென்று நியமித்தனுப்ப, அந்தப் புதல்வன் தந்தை சொன்னபடியே செய்யாமல் தான் அரண்மனைக்குப் போய், பஞ்சவடியில இளையபெருமாளும், ஜாநகிபிராட்டியும் ஸ்ரீராமபிரானும் வாசஞ்செய்யுங் காலத்தில, மாரீசன் என்பவன் ஒரு மானுருவங்கொண்டு, ஸ்ரீஜாநகிபிராட்டிக்கெதிரேவர, பிராட்டியார், அந்தஅழகான மாயமானைக் கண்டு ஆச்சரியப்பட்டு, இதைப் பிடித்துத் தரவேண்டுமென்று ஸ்ரீராமபிரானுக்குச் சொல்ல, அவரும் அப்படியே அதைத்தொடர்ந்து பிடிக்கப்போய், அது அகப்படாமையால், இதுமாயமானென்றறிந்து அதன்மீது ஒரு பாணத்தை விட்டார். அந்தப் பாணம்பட்டு அது கீழே விழும்போது, லக்ஷ்மணாவென்று கதறிக்கொண்டு விழுந்தது. அந்தச்சத்தத்தைப் பிராட்டியார் கேட்டு, இளைய பெருமாளாகிய லக்ஷ்மணரை நோக்கி, உமது தமையனாருக்கு ஏதோ அபாயம நேர்ந்ததுபோலிருக்கின்றது. அதலால் நீர்போய்ப் பார்த்துவாரும் என்று சொல்ல, இளைய பெருமாளானவர், என் தமையனாருக்கு ஒரு அபாயமும் நேரிடாதென்று எவ்வளவு வற்புறுத்திச்சொல்லியும பிராட்டி கேளாமையால், மாரீசன் விழுந்த இடத்தைத் தேடிக்கொண்டு இளைய பெருமாள் போய்விட்டார். அந்தச் சமயத்தில் பிராட்டி தனியேயிருப்பதை யறிந்த ராவணன் வந்து பல இனிய சொற்களைச் சொல்லியும் பிராட்டி தன் கருத்துக் கிணங்காமையால், அவரை (பர்ணசாலையோடு) (நிலத்தைத்தோண்டி) எடுத்துத் தன் தேர்மேலேற்றிக்கொண்டு போய்விட்டான் என்ற சந்தர்ப்பத்தைப் படித்தான். அதைக் கேட்ட ராமராஜர் மனம் பதைத்து, அந்த ராவணனைத் தொடர்ந்துபோய்ப் பிடிக்கும்பொருட்டு நமது சதுரங்கசேனைகளையும் ஆயத்தப் படுத்தவேண்டும என்று மந்திரிக்கு நியமிக்க, அவனும் அபபடியே சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட, ராமராஜர் அந்தச் சேனைகளோடு தென்கடலளவும் போய், சேனைகளையும் மந்திரியையும் கரையில் நிறுத்திவிட்டுத் தான்மாத்திரம் தனியே கடலிலிறங்கிப் போவதை யறிந்த ஸ்ரீராமபிரானவர் ஸ்ரீசீதாபிராட்டியாரோடும் அரசருக்கெதிரே எழுந்தருளி, அரசரைநோக்கி, இவளை வஞ்சித்துக் கொண்டுபோனவனைக்கொன்று

மீட்டுவந்தேன், நீபோகவேண்டாமென்று சொல்ல, அரசர்கோவம் தணிந்து ஸ்ரீராமபிரானுடனே கரைசேர்ந்து, ஸ்ரீராமமூர்த்தியின் திருவடியை வணங்கித் தோத்திரம் செய்து விடை பெற்றுத் தமது ஊருக்குப் போய்விட்டார். போய், முன்போலவே ஸ்ரீராமசரித்திரத்தைச் சிரவணம் செய்துகொண்டிருக்கும் நாளில், நரஹரி தாசர் என்பவர் ஒருவர் இந்த அரசரைப்போலவே ஹரி பக்தியிற் சிறந்தவராயிருந்தார். அவர் திருமாலின அவதாரங்கள் ஒவ்வொன்றையும் வேடம் பூண்கிற காலத்தில், சீடர்கள் இந்த வேடத்துக் கேற்க வுருவங்கொண்டு சூழ்ந்திருக்கவும், பல வாத்யங்களும முழங்கவும் நடனம் செய்பவராயிருந்தார். இவர் ஒருநாள் நரசிங்க வேடமபூண்டார். அந்தவேடத்துக் கேற்க ஒருசீடன் இரணியனாகவும் ஒரு சீடன் ப்ரஹ்லாதன்போலவும வேடம் பூண்டார்கள். அந்தச்சமயத்தில் இரணியன் தன் மகனாகிய ப்ரஹ்லாதனோடு வாது செய்ய விட்டுத் தாசர் தூணுக்குள்ளே மறைந்திருந்தார். அப்போது ப்ரஹ்லாதன் பகவான் எங்கும் நிறைந்திருப்பார் என்று சொல்ல, இரணிணியன் இந்தத் தூணிலிருப்பாரோ என்று வினவி, இருப்பார் என்று ப்ரஹ்லாதர் சொன்னவுடனே, இரணியன் அந்தத் தூணைத் தாக்க, தாசர் அந்தத் தூணிலிருந்து நரசிங்கமாக வெளிப்பட்டுவந்து இரணியன் வயிற்றைக் கிழித்துக் குடலைப் பிடுங்கிக் கழுத்தில் மாலையாக அணிந்துகொள்ள அந்த இரணிய வேடங் கொண்ட சீடன் உண்மையாகவே இறந்தான். இதை எல்லாருங்கண்டு அய்யோவென்றலற, இறந்தவனுக்கு உறவினராயிருப்பவர் இந்தச் செய்தியை அரசனிடத்திற் சொல்ல, அரசர் அவர்களை நோக்கி, அந்தச் சவத்தைத் தஹநம்பண்ணின பிறகு வாருங்களென்று கட்டளையிட, அவர்கள் அப்படியே அந்தச் சவத்தை மயானத்திற் கொண்டுபோய்த் தஹநஞ்செய்தார்கள். பிறகு நரஹரி தாசரை அரசர் அழைத்து, நீர் தசரதராகவும், உமது சீடர்கள் ராமனாகவும் கைகேசியாகவும வேடம் பூண்டு நடியுங்களென்றார். அப்படியே அவர்கள் வேடமபூண்டு நடிக்கும்போது, கைகேசி ஸ்ரீராமனுக்கு முடிசூட்டுவதைத் தடுத்துக் காட்டுக்கனுப்ப, அதைக்கண்ட தசரத வேடம் பூண்ட தாசர், புத்ரனாகிய ஸ்ரீராமனது பிரிவைச் சகிக்காமல், ராமா, உன்னைப் பிரிந்து நான் உயிர்வாழ மாட்டேனென்று வருந்தி மூர்ச்சித்து உயிரைவிட்டார். இதைக்கண்டோரெல்லாரும, தாசர் மெய்யாகவே யிறந்தாரென்று சோகித்து அழுது கொண்டு, உண்மையாகிய தசரதர், ராமருக்காக இறந்ததைச் சப்த ப்ரமாணமாகக் கேட்டோம், வேடம் பூண்ட தசரதர் இறந்ததை இங்கே ப்ரத்யக்ஷ ப்ரமாணமாய்க் கண்டோம் என்று பேசிக்கொண்டிருந்தார்கள். ராமராஜரும் ஹரிநாமசங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ஏகருசாவ்கார் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ராமராஜர் சரித்திரம் முற்றிற்று.

# ௫௯-வது ஒகரு சாவ்கார் சரித்திரம்.

உத்தர தேசத்தில் ஓர் ஊரில், ஒகரு சாவ்கார் என்றொரு வணிகரிருந்தார். அவர், ஞானம் அன்பு முதலிய ஆத்ம குணங்கள் நிறைந்த உத்தமர். அவர் மனைவியார் கற்பிற் சிறந்தவராயும், வருகிற சாது ஜனங்களை மிகவும் அன்போடு பூஜிப்பவராயும், எல்லா விஷயங்களிலும் மிகுந்த அருளுள்ளவராயும் இருந்தார். அவ் விருவரும் ஸ்ரீஹரி நாம ஸ்மரணை செய்துகொண்டும், நாள்தோறும் பக்த ஜனங்களுக்கு அன்னம் பரிமாறிக்கொண்டும், பாவமில்லாத நல் வழியால் திரவியத்தைச் சம்பாதித்துக்கொண்டும் இருந்தார்கள். இப்படி இவர்கள் இருக்குங்காலத்தில் ஒருநாள், பகவானானவர் அவர்களைப் பரிசோதிக்க வேண்டுமென்று திருவுளங்கொண்டு, ஒரு சாதுரூபங்கொண்டு வந்து, ஒகரு மனைவியாரை நோக்கி, உன் நாயகர் எங்கேயென்று கேட்டார். அதைக்கேட்ட மனைவியார், என்நாயகர் சந்தைக்குப் போயிருக்கிறார், விரைவாக வருவார், நீர் இரும் என்று ஆசனம் கொடுத்து உபசரிக்க, பகவானானவர், எனக்குப் பசி மிகுந்திருக்கின்றது. நீங்கள் வருகிற சாதுக்களுக்கு அன்னமளித்து உபசரிக்கிறவர்களென்று எங்கும் பிரசித்தமாயிருப்பதனால் வந்தேன் என்றார். அதைக்கேட்ட சாவ்கார் மனைவியார், விரைந்து கடைக்குப் போய்க் கையில் காசில்லாமையால் தமது நகையை யீடாகவைத்து அரிசி பருப்பு முதலியவற்றை வாங்கிக்கொண்டு வந்து சமையல்செய்து அன்னமிடுதலும், அந்த மஹானுபவராகிய பகவானானவர், நான் வெகுநாளாய் அன்னமில்லாமல் பசியால் வருந்தினேன்; அம்மே, இன்று நீயிட்ட அன்னத்தால் என் பசி முழுதும் நீங்கிவிட்டது என்று சொல்லி, வயிறாரவுண்டு கால் கை சுத்தி செய்துகொண்டபிறகு, வீட்டிக்குள்ளே புகுந்து, அடுக்குப்பானைகளெல்லாவற்றையும் தமது திருக்கரத்தால் தடவி, இன்றுமுதல் இந்த அடுக்குப்பானைகளில் உனக்கு வேண்டும் பொருள்களெல்லாம் குறையாமல் நிறைந்திருக்கும் என்றும், இதுபோலவே எப்போதும் சாதுக்களை உபசரிக்கக் கடவாயென்றும் சொல்லிவிட்டு மறைந்துபோய்விட்டார். மறுநாள் சாவ்கார் வந்தவுடனே இங்கே நேற்று நடந்த செய்தியெல்லாம் மனைவியார் சொல்லக் கேட்டு மனமகிழ்ந்திருந்தார். மற்றொருநாள் அநேக சாதுக்கள் வரக்கண்டு, இத்தனைபேருக்கு அன்னமிட வேண்டுமானால் அதிகமான பொருள் வேண்டுமே, ஆனாலும் முன்னே ஒரு சாதுவானவர் சொல்லிப்போனதைப் பரிசோதிப்போமென்று போய் அடுக்குப்பானை யொன்றைத் திறந்து பார்த்து, அதில் மொஹரா, வராகன் என்பவைகள் நிறைந்திருப்பதைநோக்கி, தமக்கு வேணமட்டும் எடுத்துக்கொண்டுபோய், எல்லாப் பொருள்களும் பெற்றுச் சமைத்து, வந்த சாதுக்களெல்லாருக்கும் அமுதுண்பித்து, மகிழ்வித்து அனுப்பினபிறகு, வணிகர் தமதுமனைவியார் முகத்தைநோக்கி, நானில்லாத சமயத்தில் இங்கே வந்தவர் யாரோ ஒரு சாது என்று நினைக்கவேண்டாம், அவர்

சாக்ஷாத் பகவானேயன்றி வேறல்ல, உனக்கெதிரே வந்து உன்னைப் புகிதை யாக்கின பகவான், எனக்கெதிரே ஏன் எழுந்தருளவில்லையென்று சொல்லி பரிதபித்து, ஓ பகவானே, பக்தபாலனே, உம்மைக்கண்டு களிக்கவேண்டுமென்று என் கண்கள் மிகவும் விரைகின்றன, காட்சி தந்தருளவேண்டும் என்று தோத்திரம் செய்தார். அந்த ஒகருசெய்த தோத்திரத்துக்குப் பகவானவர் சங்கசக்ர சதுர்ப்புஜ பீதாம்பர கிரீட நூபுராதிகள் விளங்குமபடி இவருக்கு ப்பிரத்யக்ஷமானார்; அதனும, ஒகருவானவர் பகவானுக்கு ஷோடசோபசாரங் களுஞ்செய்து, திருவடிவணங்கித் தோத்திரம பண்ணினார்; பகவானும் இவர்க்கு அபயம்தந்து மறைந்தார். சால்கார், தம்மை நாடிவருகிற சாதுக்களுக் கெல்லாம் அமுதளித்து மகிழ்வித்து, தமது மனைவியாரோடும் ஸ்ரீராமமூர்த்தியை ஸ்மரித்துக்கொண் டினிது வாழ்ந்திருந்தாரென்று சொல்லி, மேலே ஹரி அநந்தவைஷ்ணவர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

ஒகருசால்கார் சரித்திரம் முற்றிற்று.

---

# ௫எ-வது ஹரி அநந்தவைஷ்ணவர் சரித்திரம்.

---

ஓரூரில் ஹரி அநந்த வைஷ்ணவர் என்றொருவர் இருந்தார். அவர், யதிராஜர் ஏற்படுத்தின ராமாநுஜ சித்தாந்தத்தை அநுஸரித்து நடப்பவராயும், ஸ்ரீஹரிபூஜா துரந்தரராயும், எல்லா வுயிர்களின்மேலும் பேரருளுள்ளவராயும், ஸர்வஜ்ஞராயும், ததீயாராதநத்தில் மிகவும் விருப்பமுள்ளவராயும், ப்ரபத்தி நிஷ்டையுள்ளவராயும் இருந்தார். இப்படி யிருக்கிற காலத்தில் அநேகம் அன்பர்கள் இவரை வந்தடுத்தார்கள். அவர்களில் ஒருவன இவரிடத்தில் மிகவும் பக்தியுள்ளவனாய், இவரது சேவைசெய்வதே பரம ப்ரயோஜநமென்றெண்ணி, நாள்தோறும் அவ்வூரில் யாசித்து ஒருபடிமாவைச் சேகரித்துக் கொண்டுவந்து இவர்க் கெதிரே வைத்து வணங்குவான். இவர் அந்த மாவைத் தம்மை நாடிவருகிற சாதுக்களுக்கு உபயோகித்து வருவார். இப்படி நெடுநாள்கழிய, ஒருநாள், சிறந்த ஞானவானாகிய ராமாநந்தர் என்பவர் அநேகம் சீடர்களோடு அநதவூருக்கு வநது ஒரு இடத்தில் தங்கி யிருந்தார். ஹரி யநந்தருடைய சீடர், நாள்தோறும மாவை யாசித்து வருவதுபோல அன்றைக்கும யாசிக்கப்போய் வீடுகள்தோறும் யாசித்து வரும்போது, ராமாநந்தர் இருக்குமிடத்தைக் கண்டு அவரைக் காதலோடு வணங்கினான். அந்த ராமாநந்தர் இவனைப்பார்த்து, இவன் சற்குருசேவை செய்வதில் மிகுவிருப்புள்ளவன் என்றறிந்து, ஐயோ, இவன் நாளை உதயகாலத்தில் இறந்து போகும்படியான அற்பாயுசு உள்ளவனாயிருக்கிறானேயென்று விசனப்பட, அவரை மறுபடியும் வணங்கி அந்தச் செய்தியை நன்றாயறிந்துகொண்டு, தன் ஆசிரியராகிய ஹரியநந்தரிடத்திற்போய் இந்தச் செய்தியைச் சொல்லி, எந்நாளும் உமதுசேவை செய்துகொண் டிருக்கவேண்டுமென்று விரும்பியிருந்

தேன், அந்த எண்ணத்துக்கு மாறாக நாளை உதயத்தில் இறந்துபோகப்போகிறேனே, நான் எப்படிப்பட்ட நிர்ப்பாக்கியன் என்று சொல்லி யழுதான். அதைக்கண்ட ஹரியநந்தர், அந்தச் சீடனை நோக்கி, நீ அழவேண்டாம், பகவானுடைய அநுக்ரஹத்தால் உனக்கு ஒருகுறையும் நேரிடாது, நாளை நீ யிறக்கமாட்டாய், தைரியமாயும் சந்தோஷமாயும் இரு என்றுசொல்லி, மறுநாள் விடியற்காலத்தில் எழுந்து நீராடி, சீடர் அருகே யிருக்கும்படி அவருக்கு நியமித்து ஸ்ரீலக்ஷ்மீ நாதராகிய பகவானைத் தமது மனத்தில் நிறுத்தித் தியானித்துக் கொண்டிருந்தார். அப்போது பகவானுனவர் தமது திவ்யாயுதங்களாகிய சங்கசக்ராதிகளோடும், கிரீட நூபுராதி அலங்காரத்தோடும், பீதாம்பரத்தோடும இவருக்குப் பிரத்தியக்ஷமானார். அப்படி யெழுந்தருளின பகவானை இவர்கண்டு சேவித்து, அவரது திவ்ய விக்ரஹ சௌந்தர்யத்தில் ஈடுபட்டு மனமழுந்தி யிருக்கையில், சீடனது உயிரைக் கவர்வதற்கு யமன்வந்து, பகவானும ஹரியநந்த பக்தரும மனங் களித்திருப்பதையும, பகவானுடைய சக்ராயுதம் மேலே சுழன்றுகொண்டிருப்பதையும கண்டு, நெடுநேரம் சமயம் பார்த்திருந்தான். அப்படி யிருந்தும் சமயம் வாய்க்காமையாலும், சீடனது ஆயுளெல்லை அதிக்ரமித்ததனாலும் தனது ஆணையைச் செலுத்துவதற் கிடமில்லாமல் திருமபிப போய்விட்டான். ஹரியாநதர் நெடுநேரம யோக நிஷ்டையில் அமர்ந்திருந்தார். அபபோது உயிர்பிழைத்து நிந்தசீடர், அவருக்கருகேபோய், ஸ்வாமீ, என் மரணகாலம் கடந்து நான்கு ஜாமமாய் விட்டது என்று சொல்ல, ஹரியநந்தர் விழித்துச் சீடனை நோக்குதலும், சீடன் அவருடைய திருவடியை வணங்கினான். பிறகு மறுநாள் காலையிலெழுந்து வழக்கம்போல மாவை யாசிக்கும் பொருட்டுப் போனான். அப்போது ராமாநந்தர் இவனைப்பார்த்து, நீ யெபபடி உயிர்பிழைத்தாயென்றுவினவ, இவன் தனது ஆசாரியருடைய க்ருபா விசேஷத்தால் பிழைத்த செய்தியைச் சொல்லுதலும், ராமாநந்தர் மிகவும் அதிசயித்துவந்து ஹரியநந்தரைவணங்கினார்; இவரும் அவரைவணங்கினார். பிறகு இருவரும ஒருவரையொருவர் தழுவிக்கொண்டபிறகு, ராமாநந்தர் ஹரியநந்தரைப்பார்த்து உம்முடைய பக்திக்கு ஒரு அளவில்லை, உமது சீடனுயிரை நீங்காமற் காத்தருளினீர், உமக்குச் சமானமானவர் ஒருவரு மில்லையென்று தோத்திரம பண்ணினார். அப்போது ஹரியநந்தர், ராமாநந்தரை நோக்கி, ராமாநந்தரே, ஸ்ரீசக்ரபாணியாகிய பகவானது அருளினால் எப்படிப்பட்ட அஸாத்யமான காரியமும் ஸாத்யமாகும், நம்மால் என்ன காரியம முடியும் என்று சொல்ல, ராமாநந்தர் நன்றென்று விடை பெற்றுப்போய்த் தமமிடத்தை யடைந்தார். ஹரியநந்தரும் ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தனம செய்துகொண்டு சீடரோடும் இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ராம சந்த்ரபட்டர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

ஹரி அநந்தவைஷ்ணவர் சரித்திரம் முற்றிற்று.

# ௫௮-வது ராமசந்த்ரபட்டர் சரித்திரம்.

வேதசாஸ்திர நிபுணராயும், விரக்தராயும், மண் பொன் என்பவைகளையும், கல்மணி என்பவைகளையும் ஒரேபடியாய்ப் பார்ப்பவராயும், அக்நிஹோத்ரம் செய்பவராயும், ஸ்ரீஹரி பூஜையில் வழுவாதவராயும், தாசபிபி நதிக்கரையில் அமலநேர் என்னும் ஊரில் வாழ்பவராயும், ராமசந்த்ரபட்டர் என்னும் பெயருள்ளவராயும் ஒருவரிருந்தார். இவர் அந்நகரத்தரசனாயிருப்பவனுக்குக் குருவாயிருந்தும், தாம் பிக்ஷை யேற்றுண்பதே விரதமாகப் பூண்டிருந்தார். இப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் அரசன் மனைவி இவருக்கு ஏதாயினும் கொடுத்துதவி செய்யவேண்டுமென்று நினைத்து, இவர் தேவியாரை அழைப்பித்து, உயர்ந்த ரத்நாபரணங்களைக் கொடுத்தனுப்ப, தேவியார் வீட்டுக்கு வந்ததும், பட்டரானவர், தமது தேவியார் அரசன் மனைவியிடத்தில் வாங்கிக்கொண்டுவந்த ரத்நாபரணங்களைப் பார்த்து, இந்த உபாதியை நீ யேன் சுமந்துவந்தாய்? இவற்றில் நமக்கு ஆசையிருந்தால், ஸ்ரீபகவானானவர் நம்மை யறியமாட்டார் என்று சொல்ல, தேவியார் இவர் சொல்லுவது உண்மையேயாமென்று அவைகளைத் தமது வீட்டிலிருக்கிற ஹோமகுண்டத்தில் போட்டுப் புதைத்துவிட்டு, உபாதி நீங்கியிருந்தார்; இதைக் கண்ட பட்டரும் மகிழ்ந்திருந்தார். இந்தச் செய்தியை அரசன் அறிந்து பட்டரிடத்துக்கு வந்து வணங்கி, உமக்குக் கொடுத்த ஆபரணங்களையெல்லாம் கொடுத்துவிடும் என்றான். இவர் மனம்வருந்தி, ஸ்ரீஹரியை த்யானித்ததும், அந்த ஆபரணங்களெல்லாம் ஹோமகுண்டத்திலிருந்து வெளிப்பட்டன. அவை முன்னிருந்ததைப் பார்க்கிலும் அதிகமாய்ப் ப்ரகாசிக்கக் கண்டு அரசனும் வியந்துநிற்க, பட்டர் அவனை நோக்கி, உன் ஆபரணங்களையெல்லாம் நீ கொண்டுபோகலாமென்று சொல்ல, அரசன் நான் கொடுத்ததை மறுபடியும் வாங்கமாட்டேனென்றான். பிறகு பட்டர் அங்குள்ள இரவலரை யழைத்து அவர்களுக்கு அந்த ஆபரணங்களைக் கொடுத்து மகிழ்வித்து, அரசனுக்கு விடைகொடுத்தனுப்பி, ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே சுஹக்ஷாபக்தர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ராமசந்த்ரபட்டர் சரித்திரம் முற்றிற்று.

# ௫௯-வது சுஹக்ஷாபக்தர் சரித்திரம்.

ஆம்தாபாத் என்னும் ஊரில், சுஹக்ஷா என்னும் பெயருள்ளவர் ஒருவர் இருந்தார். அவர் ஆண்பெண் என்னும் இரண்டு மல்லாத அலியாயிருந்தார். ஆயினும் ஸ்ரீஹரி பாதத்யானத்தில் பதிந்த மனமுள்ளவராயிருந்தார்.

இவர் தம்மை வந்தடுத்த மற்றப் பேடிகளோடு கூடிவெளிப்பட்டால், மனம் கண்ட பொருள்களின் மேல செல்லுமென்று வீட்டைவிட்டு வெளியேவரும் வழக்கமில்லை, பெண்கள்போல ஆடை யுடுப்பார், பொன் முதலியவற்றில் சற்றும் ஆசையில்லாதவர், ஸ்ரீகண்ணபிரானது திருவடியையே த்யானித்துக்கொண்டு ஏகாக்ர சித்தராயிருப்பார். இவரது ஹ்ருதயத்தின் நிலையையறிந்த ஸ்ரீகண்ணபிரானானவர் தமது சகுணரூபத்தை நாள்தோறும் அவருக்குத் தரிசநங் கொடுத்துக்கொண்டிருந்தார். இப்படி யிருக்குங்காலத்தில், அந்தவூரில் மழை பெய்யாம லிருந்ததனால் அந்நபாநாதிகள் கிடைக்காமல் உயிர்கள் மிகவும் வருந்துவதைக்கண்ட அரசன், மழையைப் பெய்விக்க விரும்பித் தவஞ் செய்யத் தொடங்கினான். அந்நபாநங்களை வெறுத்து பதினாள் இப்படித் தவஞ் செய்கையில், ஒரு நாளிரவில் அவன் கனவில், பகவான் ஒரு ப்ராஹ்மணவேஷம் பூண்டுவந்து, நீ சுஹுமக்ஷா பக்தனைக்கண்டு வணங்கித் தோத்திரஞ் செய்தால், அவர் கருணையால் மழைபெய்யும் என்றும், அப்படிச் செய்யாதபக்ஷத்தில் அனுஷ்டித்தாலும் மழை பெய்யாதென்றும் சொல்லி மறைந்தவுடனே, அரசன் விழித்தெழுந்து, தன் சபையிலுள்ளவர்களுக்குத் தான் கண்ட கனவின் செய்தியைச்சொல்ல, அந்தச் சபையாரும் அரசனைநோக்கி, யாராயிருந்தாலும், பகவத் பக்தர்களாயிருந்தால் அவர்களே சிறந்தவர்கள். அவர்களை வணங்குவதனால் நமக்கு ஒரு குறையுமில்லை, லோக க்ஷேமத்தின்பொருட்டு அவரை வணங்கலாமென்றார்கள். அதைக்கேட்ட அரசன் பக்தரைவணங்கச் சம்மதித்துப் போய்வணங்கி, தான் கண்ட கனவைச் சொல்ல, பக்தரானவர், ஆணும் பெண்ணுமல்லாத விகாரரூபமாய்ப் பிறந்து அவியாயிருக்கிற என்னை, சிறந்த வேந்தன்வந்து வணங்கும்படி செய்தாயே, ஓ கண்ணபிரானே, இது உனக்குத் திருவுளம்போலும், இந்த பெருமையை எனக்கு ஏன் கொடுத்தாய் என்று இப்படிச் சொல்லிக்கொண்டும், ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டும் முற்றத்தில் நின்று, மழை பெய்யவேண்டுமென்று சிந்தித்தார். நெடுநேரம் அப்படிநின்று சிந்தித்தும் மழை பெய்யவில்லை. அப்போது பக்தரானவர் மனவருத்தத்தோடு கண்களை மூடிக்கொண்டு ஒரு ஏகாந்தஸ்தானத்திலிருந்து, ஓ பகவானே, அரசன் கனவில் வேதிய வடிவாய்ப் போய், என்னை வணங்கும்படி அரசனுக்கு நியமித்தது, அவன் அப்படியே என்னை வந்துவணங்கி ப்ரார்த்திக்க, நான் ப்ரார்த்தனைக்கிரங்கி உன்னை த்யானித்தேன், இந்தச்சமயத்தில் நீ இப்படிச்செய்வது உனக்குநீதியாகுமாவென்று பலவாறு வேண்டியும் மழை பெய்யாமலே யிருந்தது, அதைக் கண்ட பக்தர் மிகவும் கோபங்கொண்டு, இன்றுமுதலாக ஸ்ரீலக்ஷ்மீநாதனை நான் நினைக்கவே மாட்டேனென்று சொல்லித்தன் மூக்கிலணிந்த நத்தைக்கழற்றி யெறிந்து, கையிலணிந்திருந்த வளையல்லை உடைக்கப் போகும்போது, லோக ரக்ஷகனாகிய பகவானது கருணையால் மேவிடத்தி லிருந்து மழைபெய்யத் தொடங்கிப் பதினான்கு நாள்வரைக்கும் விடாமல் பெருமழைபெய்தது. இந்த அதிசயத்தைக் கண்டயாவரும் வியந்து பக்தரைக்கொண்டாடினார்கள். அரசனும்

வந்து வணங்கி, ஸ்வாமீ, அடியேன் தருவதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, பக்தரானவர் எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லை, இனி இந்தப் பொய்யுடம்பை நீக்கநினைத்தேன், ஆதலால் எனக்குச்சமாதி கட்டித் தரவேண்டும் என்றார்; அப்படியே வேந்தனும் பக்தருக்கு ஒரு சமாதி கட்டித் தர, பக்தரும் ஸ்ரீஹரியை த்யானித்தார். பகவானனவர் தக்ஷணமே யெழுந்தருளி இவருக்கு அபயந் தந்ததை யாவரும் அறிந்துவந்து, புஷ்பம் அபீர்ப் பொடி முதலியவற்றை இவர் மீதிறைத்து, ஸ்ரீஹரி பஜனை செய்து ஆநந்தக் கூத்தாடினார்கள். பக்தர் அவர்களை நோக்கி, என்னுடைய தீக்ஷை பெறுவோர் பிறவிக் கடலைக் கடப்பார்களென்று சொல்ல, அதை ஒருவரும் கவனிக்காம லிருந்தார்கள். ஒரு அநாதன் மாத்திரம் வந்து வணங்கினின்றான்; அவனுக்கு உபதேசித்து, தமது நத்தை அவன் மூக்கில்குத்தி, கைவளையலையும் அவன் கையில் அணிவித்து ஆசீர்வதித்து, சமாதிக் குழியி லிறங்கினார். இவரது தீக்ஷைபெற்ற சீடன், நத்து வளையல் ஆடை என்பவற்றைக் கொண்டணிந்து, ஸ்ரீஹரி நாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார் என்று சொல்லி, மேலே பன்ஹாஜி ரசபுத்திரர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

சுஹக்ஷாபக்தர் சரித்திரம் முற்றிற்று.

---

## ௬0-வது பன்ஹாஜீரசபுத்திரர் சரித்திரம்.

குஜராத்தி தேசத்தில், டோகாபூர் என்னும் ஊருக்கு அரசனயிருந்த குமான்சிங்கு என்பவர்க்கு மிகவும் சிநேகரா யிருந்த பன்ஹாஜி ரசபுத்திரர் என்பவர், ஸ்ரீஹரியை மனத்துட்கொண்டு ஹரிநாம சங்கீர்த்தநத்தை இடைவிடாமற் செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்கும் நாளில் தீபாவளி நேரிட்டது. அப்போது அரசன் அந்தத் தீபாவளியின் இரவில் தீபோத்ஸவம்செய்தான். அந்த ஈரோத்ரியில் பன்ஹாஜியானவர் விரைந்தெழுந்து, தமது மேற்போர்வையைக் கசக்கினார். அதைக் கண்ட அரசன் பன்ஹாஜியை நோக்கி, நீர் ஆடையைக் கசக்க வேண்டியதற்குக் காரணமென்ன வென்று கேட்க, இவர் அரசனை நோக்கி, துவாரகையில், ஸ்ரீ கண்ணபிரானுக்குத் தீபோத்ஸவம் நடக்கின்றது; அந்த உத்ஸவத்தில் அர்ச்சகர், அந்தக்கண்ணபிரானுக்கு ஆடையாபரணலங்காரஞ்செய்து, ஹாரதிசமர்ப்பிக்கும்போது, ஒப்பற்றவராகிய அந்தக் கண்ண பிரானுடைய அங்கியில் நெருப்புப் பற்றிக்கொண்டது, அதை அவிக்கும் பொருட்டு ஆடையைக் கசக்கினேன் என்றார். இதைக் கேட்ட அரசன் மிகவும் ஆச்சரியமடைந்து பன்ஹாஜியை நோக்கி இப்போது அந்தக் கண்ணபிரான் எந்தவிதமான ஆடையைத்தரித்திருக்கிறார் சொல்லுமென்றுகேட்க, பச்சையுடுப்பென்று பன்ஹாஜி சொன்னார். அதைக்கேட்ட அரசன், ராவடாலூர்க்கு அரசனயிருக்கிற தன் சட்டகனைக்கொண்டு இந்தச் செய்தியின் உண்மையைத் தெரிந்துகொள்ளலாமென் றெண்ணி, துவாரகை

யில் என்ன ஆச்சரியம் என்று அவனுக்கு ஒரு கடிதமெழுதி யனுப்பினன்; அவன் துவாரகையில் ஸ்ரீகண்ணபிரானுக்குத் தீபாவளி பண்டிகைக் காலத்தில் தீபோத்ஸவம் நடக்கும்போது, பகவானுடைய பச்சை அங்கியில் நெருப்புப் பற்றிக்கொண்டது. அந்த நெருப்பைப் பன்ஹாஜி கசக்கி அவித்தார் என்று எழுதியனுப்பினன். அந்தக் கடிதத்தைக் கண்ட குமான்சிங்கு மிகவும் வியந்து, பன்ஹாஜியை நோக்கி, நீர் இங்கே யிருந்துகொண்டே, துவாரகையில் நடந்த செய்தியை அறிய வல்லரா யிருக்கிறீர், நீரே திருமாலுக்கு மெய்யன்பர், உமது பெருமையை யென்னல் அளவிட்டுச் சொல்ல வொண்ணாததா யிருக்கின்றதுஎன்று தோத்திரம் பண்ணி, அவருக்கு இரண்டு கிராமங்களைக் கொடுத்து, இந்த இரண்டு கிராம வருமானத்தைக்கொண்டு தேஹயாத்திரையைச் சுகமாய் நடத்திக்கொண்டும், நாள் தோறும் அடியேனுக்குச் சேவைசாதித்துக் கொண்டுமிருக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, பன்ஹாஜியானவர் அரசனை நோக்கி, அப்படியே யாகட்டும், நீ எப்பொழுதும் ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருவென்று நியமித்தார்; அப்படியே அரசனும் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநபரனாய் வாழ்ந்திருந்தான். பன்ஹாஜியும் ஸ்ரீ துவாரகையில் எழுந்தருளி இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே ஜயமல்லராஜர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினர்.

பன்ஹாஜிசபுத்திரர் சரித்திரம் முற்றிற்று.

## ௬௧-வது ஜயமல்லராஜர் சரித்திரம்.

மேடம் என்னும் ஊருக்கு அரசரா யிருந்த ஜயமல்ல ராஜர் என்பவர் ஸ்ரீஹரிபக்தி யுடையவராய், நாள்தோறும் ஸ்ரீஹரி பூஜையை நியதமாய் நடத்திவருவோராய்ப் பூஜை முடிவில் ஒருஜாமநேரம்வரைக்கும் பகவத் தியானத்தில் நிச்சலமா யிருப்பவராய், அந்தச் சமயத்தில் அவ்விடத்துக்கு ஒருவரும் வரக் கூடாதென்கிற கட்டளை பிறப்பித்தவராயிருந்தார். அப்படி யிருக்குங் காலத்தில், இவர் தம்பியானவன் இவர் ஆளுகின்ற ராஜ்யத்தில் தான் சமபாகம் பெற விரும்பி, அவ்வூரை விட்டு, அயலிலிருந்து கொண்டு, சேனைகளைச் சேகரித்துக்கொண்டு இவர் பூஜை செய்துகொண்டிருக்கிற காலத்தில் வந்து கோட்டை முழுமையும் வளைந்துகொண்டான். இதைக்கண்ட இவருடைய மந்திரியானவன், தானும் சேனைகளோடு புறப்பட்டுப்போய் அவனோடுயுத்தஞ் செய்தான். அப்போது, வந்த படைகள் அதிக பல முள்ளவைகளாயிருப்பதனல் அந்தச் செய்தியை மந்திரியானவன் தன் அரசனுடைய தாயினிடத்திற் சொல்ல, அவர் இந்தச்செய்தியை அரசனுக்குச் சொல்லென்றுசொல்ல, மந்திரி இப்போது அவர் பூஜையிலிருக்கிறரே, நான் எப்படிபோய்ச் சொல்லுவேனென்று சொல்ல, தாயானவர், இந்தச் சமயத்தில் நாம் பூஜையைக் குறித்துத் தாமதித்திருக்கலாகாது என்று போய்த்தன் புதல்வராகிய அரசரு

க்குத் தெரிவிக்க, அவர் தாயை நோக்கி ஒரு மறுமொழியுஞ் சொல்லாமல்
தாமே சாமளன் என்று சொல்லி யிருந்தார். அப்போது கருணாநிதியாகிய
பகவானானவர் தாம் ஒரு போர்வீரன்போல வேஷம் பூண்டு, சர்வாயுதங்களை
யும் தரித்து, கையில் வாளேந்தி, ஒரு குதிரைமேலேறிக் கோட்டை வாசற்
கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து, கோட்டையை வளைந்திருந்த
சேனையிற் பாய்ந்து, அந்தச்சேனை முழுமையும் அதம்செய்தார். அப்போது
அந்தச் சேனையில் பகவானால் மடிந்தவர்கள் ஒழிய, மற்றவர்கள்முறிந்தோடி
விட்டதை, அந்தக்கோட்டை மதிலின்மேலிருந்து பார்த்த நகரஜனங்கள் ஆச்சரிய
மடைந்து, இவன் யாரோ தெரிய வில்லை, பல பேரையும இவன் ஒருவனே
அதம் செய்தான் என்று புகழ்ந்துகொண்டிருக்க, பகவானாகிய போர் வீரர்,
ஜயமல்லராஜனுடைய தம்பியை நன்றாகக் கட்டிக்கொண்டு வந்து மந்திரியி
னிடத்தில் சேர்த்துவிட்டு மறைந்து போனார்; மந்திரியும் அவனைச் சிறைப்
படுத்திவைத்தான். பிறகு ஜயமல்லராஜர் தாம செய்யும் பூஜையை முடித்து
வெளியே வந்து மந்திரியை நோக்குதலும், மந்திரியானவன் அரசன் பூஜை
செய்யத் தொடங்கினது முதல, தம்பியைச் சிறைப்படுத்தின அளவுக்கும
நடந்தவற்றையெல்லாம் அரசனுக்குச் சொன்னான். அதைக்கேட்ட அரசன்
இது சாமளன்செய்தசெய்கையென்றறிந்து ஸ்ரீவநமாலாதராகிய பகவானான
வர் என்பொருட்டு இவ்வளவு சிரமமெடுத்துக்கொண்டாரே யென்று மிக
வும் பரிதபித்து, ஓ சாமளரூபனே! தம்பிக்குச் சேவை தந்தருளினதுபோல
எனக்கு உன் சேவை தாரமற்போனாய், அடியேன் உன் திருவடிக்கு என்ன
பிழை செய்தேன் என்று புலம்ப, க்ருபாசாகரமாகிய பகவானானவர் திரு
வுள மிரங்கி அரசருக்கு ப்ரத்யக்ஷமாகி, அபயந் தந்து மறைந்தார். பிறகு
அரசர் தமது தம்பியை வரவழைத்துக் கட்டவிழ்த்துவிட்டார். உடனே அந்த
த் தம்பியானவன் இவரை வணங்கி நின்று, தேவரீருடைய மஹிமையை
யறியாமல் அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும் என்று
ப்ரார்த்திக்க, அரசர் தம்பியை நோக்கி, தம்பீ, ஸ்ரீருக்மிணீ நாதர் உனக்கு
ப்ரத்யக்ஷமானார், ஆதலால் இவ்வுலகத்தில் உனக்கு நிகரானவர் ஒருவரு
மில்லை, உன் பாக்கியமே பாக்கியம் என்று மார்போடணைத்துக் கொண்டு,
மனவொருமைப்பாட்டுடனே தம்பியோடு வாழ்ந்திருந்தார். இப்படி வாழுங்
காலத்தில், ஒரு தச்சனைக்கொண்டு, ஒரு கோயில்கட்டுவித்து, அதில் ஸ்ரீபக
வானைப் பிரதிஷ்டைசெய்து, கோயில் மதில் வாசல்வழியாய் ஒருவரும் போ
க்குவரவுகள் செய்யாதிருக்கும்படி சுற்றிலும் மதில் வளைத்து, தாம் மாத்தி
ரம் நூலேணியின் வழியாய் கோயிலுக்குள்ளேபோய், பகவானைப் பூஜித்து
வணங்கி வாழ்த்தி, கோயிலின் ஒரு பக்கத்தில் மௌனமா யிருந்துகொண்டு,
ஓ பகவானே! தேவரீர் என் மனத்துக்குத் தோன்றுவதுபோல என் கண்ணு
க்குத் தோன்றி யருள வேண்டும் என்று ப்ரார்த்திக்க, பகவானும் இவர்
விருப்பத்தின்படியே இவருக்கு ப்ரத்யக்ஷமானார். அப்படி ப்ரத்யக்ஷமான
பகவானை அரசர் கண்களிகூரக் கண்டு, திருவடியைக் கையாற்பற்றி, உடல்

புளகிக்க, கண்ணீர் ததும்ப, ஆநந்தபரிதராய், ரத்நாசநத்திலேற்றி, ஷோட சோபசாரங்களுஞ் செய்து, சயநத்தில் கண் வளரச்செய்து, ஸ்ரீ பாதங்களை வருடி, உலகத்தில் என்னைப்போலப் பாக்கியவான்கள் யாரென்று மனமகிழ்ந்து, நாலேணியின் வழியாய் வெளியேவந்து தாம் அரண்மனைக்குப்போனார். இப்படி நெடுநாள் நடந்துகொண்டிருக்குங் காலத்தில், ஒருநாள் இவர் சந்நிதிக்குள்ளே போனவுடனே நாலேணியை யெடுத்துவிடும் வழக்கம்போலெடுக்காமல் மறந்து சந்நிதிக்குள்ளே போய்ப் பகவானை வணங்கிக்கொண்டிருக்குஞ் சமயத்தில், அரசன் மனைவியார் அந்த நாலேணி வழியாய்க் கோயிலுக்குள்ளேபோய், பகவானுடைய திருவடியை வருடிக்கொண்டிருக்கிற கணவனைக் கண்டு, தாமும் பகவானை வணங்கித் தோத்திரஞ்செய்தார். பகவான் அவர் செய்த தோத்திரத்துக்குத் திருவுளமிரங்கிக் கடாக்ஷிக்க, அரசன் கண்டு, நீ யெப்படி வந்தாயென்று மனைவியைக் கேட்க, நாலேணியானது இன்று உம்மால் எடுக்கப்படாமலிருப்பதனால் நான் அதன் வழியே வந்து பகவானைச் சேவிக்கும்படியான பாக்கியம் பெற்றேன் என்று சொல்லி வணங்கினாள். இப்படி அரசராகிய ஜயமல்லராஜரும் அவர் தேவியாரும் மனவொற்றுமையுடையவராய், நாள்தோறும் பகவதாராதநமும் பகவந்நாமஸங்கீர்த்தநமும் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே ஸ்ரீதர பண்டிதர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஜயமல்லராஜர் சரித்திரம் முற்றிற்று.

---

## கூஉ-வது ஸ்ரீதரபண்டிதர் சரித்திரம்.

---

முற்காலத்தில் பல வளங்களும் நிறைந்த ஓரூரில் ஸ்ரீதரபண்டிதர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் எல்லாரிடத்திலும் விசுவாசமுள்ளவராகவும், இடைவிடாமல் எப்பொழுதும் ஸ்ரீ ஹரிபூஜை செய்பவராகவும் இருந்தார். இவருடைய மனைவியாரோ, கற்பிற் சிறந்தவராயிருந்தார். இந்தப் பண்டிதர் யாராயினும் விகற்பமாய்ப் பேசினும் அது உண்மையென்றே நம்புவார். இவர் ஒருநாள் யாத்திரை செய்யத் துணிந்து, தமது தேவியாரைக் குதிரை மேலேற்றிக்கொண்டு ஒரு காட்டின் வழியே போகும்போது சில திருடர்கள் தொடர்ந்ததைக் கண்டு, தேவியார் பண்டிதரை நோக்கி, சூரியாஸ்தமந காலத்தில் நாம் காட்டில் பிரவேசித்தோம், ஏதாகிலும் தீமைநேரிடுமென்று அஞ்சுகிறேன், ஆதலால் திரும்பிப் போவோமென்று சொல்லுதலும், இதைக்கேட்ட திருடர்கள் நீங்கள் அஞ்சவேண்டியதில்லை, நாங்கள் உங்களுக்கு வழித் துணையாய் வருகிறோம் என்றார்கள். அதைக்கேட்ட பண்டிதர் அந்தத் திருடரை நோக்கி, உங்கள் சொல்லில் எங்களுக்கு நம்பிக்கையுண்டாகவில்லை, எங்களுடைய மனதுக்கு நம்பிக்கை யுண்டாகும்படியாக ப்ரமாணஞ்செய்தால் நாங்கள் உங்களை வழித்துணையாய் நம்பி உங்களைத் தொடர்

ந்து வருவோமென்று சொல்ல, திருடர்கள் உம்மிடத்திலும் எம்மிடத்தி லும் வேற்றுமையில்லாமல் ஒரு தன்மையாய் வாழ்கின்ற ஒப்பற்ற சாக்ஷி பூதராகிய ஸ்ரீ ராமபிரானறிய எங்களிடத்தில் ஒரு கெடுதியில்லை, வாருங்கள் என்று சொல்லுதலும், பண்டிதரும் தேவியாரும் மனந் தெளிந்து, அந்தத் திருடரைப் பின்றொடர்ந்து நடந்தார்கள். இப்படி பாரமார்த்திகமான வார்த் தைகளைப் பேசிக்கொண்டு வந்ததிருடர், கொஞ்சதூரம் இவர்கள் வழிநடந்த பிறகு, பண்டிதருடைய தலையை யறுத்துக் கீழே தள்ளி, அவருடைய ஆடையாபரணங்களை யெல்லாம கைக்கொண்டனர். குதிரை மேலேறி முன் னே போகிற தேவியார் திரும்பிப்பார்த்து மிகவும் மனம்வருந்தியிருக்க, கொலை செய்த திருடர்கள், உன் கணவனை நாங்கள் கொலைசெய்தோம், அதைக்குறி த்து நீ பார்ப்பதினாலும், துக்கப்படுவதினாலும் பிரயோஜனமில்லை யென்று அதட்டிச் சொல்லக்கேட்ட தேவியார், அந்தத் திருடர்களை நோக்கி, நீங்கள் சாக்ஷியென்று சொன்ன அந்த ஸ்ரீராமபிரானும இந்தத் தொழிலை நீங்கள் செய்யும்போது திருவுள மிசைந்திருந்தாரோ வென்று சொல்லி முடிப்பத ற்குமுன்பே ஸ்ரீராமபிரானவர் ஒருநீண்ட வில்லைக் கையிலேந்திக்கொண்டு வந்து அந்தத் திருடர்களை ஒரு நிமிஷகாலத்தில கொன்றார்; கொன்று ஸ்ரீதர பண்டிதரிடத்தில் வந்து தமது கருணைக் கண்ணால் நோக்குதலும், பண்டிதர் உயிர் பெற்றெழுந்து, தமது தேவியாரை நோக்கி, சாக்ஷியாயேற்பட்டிருந்த வர் நம்மைக் காப்பாற்றும் பொருட்டு அன்போடு எழுந்தருளினார், பார்த் தாயோவென்று சொல்லி, பத்தினியும் தாமுமாக ஸ்ரீராமமூர்த்தியை வணங்க, ஸ்ரீராமமூர்த்தியானவர், இவ்விருவருக்கும் அபயங்கொடுத்து இவர்கள் அவ் வனத்தைக் கடக்குமளவும் வழித்துணையாய்வந்து பிறகு மறைந்துபோனார். இவர்களும் நிர்ப்பயமாய்த் தீர்த்த யாத்திரை செய்து மகிழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே ஹரிபாளதாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங் கினார்.

ஸ்ரீ தரபண்டிதர் சரித்திரம் முற்றிற்று.

## ௬௩-வது ஹரிபாளதாசர் சரித்திரம்.

முற்காலத்தில், ஒரு சிறந்த நகரத்தில், ஹரிபாளர் என்பவர் ஒருவ ரிருந்தார். இவர் சாது ஸஜ்ஜநங்களைப் பூஜித்து, அவர்களுக்கு அந்நம் வஸ் திரம் முதலானவைகளைக் குறைவறக் கொடுத்து மகிழ்வித்துக்கொண்டும், ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டும் இருந்தார். இப்படி இவர் அந்நதாநம் முதலானவைகளை விசேஷமாகச் செய்வதனால் இவரிடத்தி லிரு ந்த பொருள் முழுதும் செலவாய்விட்டது. அப்படியிருந்தும், ஸ்ரீஹரிதாசர் கள் இவரது பெருங் கீர்த்தியைக் கேட்டு இவரிடத்துக்கு வருகிற வழக்கம் நீங்கா திருந்ததனால், அவர்களுக்கு உதவி செய்து மகிழ்விக்கவேண்டுமென்

கிற எண்ணமுள்ளவராகி, திருடியாகிலும் அவர்களை ஆதரிக்கவேண்டி, தாம் திருடர்வேடம் கொண்டு வழிநடப்போரை மறித்துப் பயமுறுத்தி, அவர்கள் பொருள்களையெல்லாம் கொள்ளையடித்துக் கொண்டுவந்து சாதுக்களுக்கு உதவி செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்குங் காலத்தில் ஒருநாள், இவர் தம் கையில் ஒரு காசுமில்லாதிருந்ததைக் கண்டு, இன்றைக்குவருஞ் சாதுக்களை உபசரிப்பதற்கு ஒரு காசாகிலும் இல்லையே, என்ன செய்வோமென்று மனம் வருந்தி, வில்லையும் அம்பையும் கைக்கொண்டு ஒரு காட்டிற்போய், இவ்வழியாய் எவர் வருவாரோ வென்று நெடுநேரம் எதிர்பார்த்திருந்தும் ஒருவரும் அவ்வழியாய் வரக்காணாமையால் துக்க சாகரத்தில் மூழ்கி யிருந்தார். அப்போது ஸ்ரீ லக்ஷ்மீநாதராகிய பகவானானவர் ஒரு தநவணிகன்போல வேஷம் பூண்டு, ஆடையாபரணாதிகளால் மிகுதியாய் அலங்கரிக்கப் பெற்ற தமது தேவியாரை ஒரு வண்டியி லேற்றிக் கொண்டு அவ்வழியாய் வந்தார். இவர் அவர்களைக் கண்டவுடனே அதிக சந்தோஷத்தோடு அவர்களுக் கெதிரேபோய் அம்பு, வில் இவைகளைக் காட்டி, உங்களுடைய ஆபரணாதிகளை யெல்லாம் கொடுத்து விடுங்கள், இல்லாத பக்ஷத்தில் உங்களைக் கொல்லுவேன் என்றார். அதைக்கேட்ட வணிகர், ஐயா, எங்களைக் கொல்லவேண்டாம், எங்களுடைய ஆபரணங்கள் முழுதும் தருகிறோம் என்று சொல்லி, ஆபரணங்க ளெல்லாவற்றையும் கழற்றிக் கொடுக்க, தாசரானவர் வாங்கிக்கொண்டு தம வீட்டுக்கு வந்து, சாதுக்களுக்கு அன்னமிட்டு உபசரித்து மகிழ்ந்திருந்தார். இவர் இப்படியிருக்க, கமலவாசினியாகிய திருமகள் பகவானை நோக்கி, உமது தாசன் நம்முடைய ஆபரணங்களையெல்லாம் பறித்துக்கொண்டு போனானே, அவன் தான் உமக்கு பிரியமானவனும், யோக்கியனும போலக் காணப்படுகின்றது என்று சொல்ல, பகவானானவர் நகைத்து, அவன் நம்மைக் கொல்லாமல் விட்டுப்போன வுபகாரத்தைச் சற்றாகிலும் யோசிக்காமல் பேசுகிறாய், அவன் என்பேர் சொல்லாத தீயோரை வருத்தி அவர்களுடைய பொருளைப் பறித்து என்பேர் சொல்லுகிற சாதுக்களுக்கு உபகரிக்கிறா னென்பதையும் நினைத்தாயில்லை என்றுசொல்ல, பிராட்டியார், அப்படியானால் அவன் கருத்தை யறிவோ மென்றார். அதற்குப் பகவானும் சம்மதித்து, இருவரும் சாதுக்களுடைய வேஷங்கொண்டு தாசருடைய வீட்டுக்கு வந்து, சீதாராம் என்று சொல்ல, வீட்டுக்குள்ளே யிருந்த தாசர் விரைந்து ஓடிவந்து இவர்களை யழைத்துப் போய், ஆசநம் கொடுத்து, உபசாரத்தோடு அமுது படைத்து புஷ்பம் சந்தந தாமபூலங்களையும் கொடுத்து, நீங்கள் என்னை நாடிவர நான் என்ன தவஞ் செய்திருந்தேனோ வென்று புகழ்ந்து, உங்களுக்கு எந்தப்பொருள் வேண்டுமோ அதைத் தருகிறேன் கேளுங்கள் என்றார். அதைக் கேட்ட பகவானானவர், தாசரை நோக்கி, ஓசாது பூஜா துரந்தரரே, நான் ஒரு வணிகன், இவள் என் மனைவி, நாங்களிருவரும் ஒருகாட்டில் போகும்போது, அவ்விடத்தில் ஒரு திருடன் வந்து எங்களை அதட்டிப் பயமுறுத்தி, எங்களுடைய பொருள்களெல்லா

வற்றையும் பறித்துக்கொண்டு போனான். அதனால் நாங்கள் இந்த வேஷம் பூண்டு வரும்படி நேரிட்டது என்று சொன்னார். அதைக்கேட்ட தாசர், உங்களுடைய பொருள்களைக் கொள்ளைகொண்டுபோன திருடன் எங்கேயிருந்தாலும் அவனைக் கைப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு வருகிறே னென்று சொல்ல, பகவானனவர், தாம் முன் பூண்டிருந்த வணிக வேஷத்தைக் காட்டினார். அந்த வேஷத்தைக் கண்ட தாசரானவர், ஐயோ, இவர்களுடைய பொருள்களைப் பறித்தவன் நான்தானே யென்று மனமஞ்சி நாணமடைந்து, அநுதாபப்பட்டு, ஸ்ரீ வைகுண்டநாதனே இந்த வேஷங்கொண்டு இந்த நிலத்தின்மேல், வேதாந்தத்தில் விளங்குகிற தமது திருவடி தோயும்படி யெழுந்தருளினாரென்று தெளிந்து, தேவர் முநிவர் முதலியோரும் காண்பதற் கருமையான திருக்கோலத்தைக் காணப்பெற்றேன், ஆதலால் என் பாக்கியமே பாக்கியம் என்று, தமது கண்களில் ஆநந்த பாஷ்ப மொழுக நின்று, ஸ்வாமீ, தேவரீருடைய பொருளை அபஹரித்தவன் நானே, இந்தப் பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, பகவானும் இவரைக் கருணையோடு நோக்கி, தமது நிஜரூபத்தைக் காட்டி, தழுவிக்கொண்டு, இன்றுமுதல் இந்தச் சோர க்ருத்யத்தை விட்டுவிடுவாயாக, உனக்கு அஷ்டமாஸித்திகளும் கைகூடும், அவற்றைக்கொண்டு சாது பூஜையைக் குறைவற நடத்திக்கொண்டு சுகமா யிருக்கக் கடவை யென்று நியமித்துப் போய் விட்டார். பிறகு தாசரும் அப்படியே சாது பூஜை முதலான கைங்கர்யங்களைச் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ஜம்பு தாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஹரிபாலதாசர் சரித்திரம் முற்றிற்று.

## ௬௪-வது ஜம்புதாசர் சரித்திரம்.

முற்காலத்தில் ஓரூரில் ஜம்புதாசர் என்கிற ஒரு குடியானவர் இருந்தார். அவர் ஸ்ரீஹரியின் திருவடியை இடையறாமல் தியானித்துக்கொண்டும், சாதுக்களைப் பூஜித்துக்கொண்டும் இருப்பதே தமக்குத் தொழிலாகக் கொண்டவர். இவர் பயிர்த் தொழில் செய்து அதனா லுண்டாகும ப்ரயோஜநத்தைக்கொண்டு, தம உறவின்ரையும், சாதுக்களையும் ஆதரித்து வருவார். இப்படி இவர் வாழுங் காலத்தில், ஒருநா ளிரவில் இவருடைய உழமாடுகளிரண்டையும் திருடர் கொண்டு போனார்கள். அதைப் பகவானனவர் அறிந்து, நம்மிடத்தில் அன்பு செய்பவனாகிய ஜம்புதாசன் எருதுக ளில்லாமல் வருந்துவானே யென்று திருவுள மிரங்கி, அப்பொழுதே இரண்டெருதுகளைப் படைத்து, தாசருடைய மாட்டுத் தொழுவத்திற் கட்டிப் போய்விட்டார். தாசரானவர், தமது வழக்கம்போல விடியற்காலத்தி லெழுந்து, தொழுவத்திலிருந்து எருதுகளைக் கொண்டுபோய்த் தமது கொல்லையை யுழுது

கொண்டிருக்கும்போது, நேற்றிரவில் எருதுகளைக் களவுசெய்த கள்வர் கண்டு, இது என்ன ஆச்சரியம் என்று தம வீட்டிற்போய்த் தாங்கள் களவு செய்த மாடுகளிருக்கக்கண்டு, நல்லது இன்றும் போய் இவர் உழுகிற இந்த மாடுகளையும் கொண்டுபோவோமென்றெண்ணியிருந்து, அன்றிரவில் போய், இவர் தொழுவத்தி லிருந்த மாடுகளைக் கொண்டுபோய் விட்டார்கள். அன்றும் பகவானானவர் நேற்றுச் செய்ததுபோலவே செய்தார். தாசரும் வழக்கம் போலவே எருதுகளைக் கொண்டுபோய் உழுது கொண்டிருந்தார். சோரர்கள் கண்டு வியந்து அன்றிரவிலும் அப்படியே செய்ய, பகவானும் அப்படியே செய்துகொண்டு வர, இப்படி பலநாள் கழிந்த பிறகு, அந்தத் திருடருக்கு இந்தத் தாசரிடத்தில் அன்பும் அச்சமும் உண்டாகி, இவரிடத்துக்கு வந்து, உமது பெருமையை யறியாமல் உமது எருதுகளைத் தினந்தோறும் நாங்கள் திருடிக்கொண்டுபோக, பகவான் படைத்து உமது தொழுவத்தில் கட்டிக்கொண்டிருந்தார். நீர் பகவானை ஆசிரயித்திருப்பவராதலால் உமக்கு யாதொரு குறையும் நேரிடாது. உமக்குத் தீங்குசெய்த எங்களுடைய பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து வணங்க, தாசரும் அவர்கள் பிரார்த்தனைக் கிரங்கி, பகவானைத் தோத்திரஞ்செய்து, அடியேன் பொருட்டுத் தினந்தோறும் இப்படிப்பட்ட காரியம் செய்துவந்தீரே, இந்தவிஷயத்தில் அடியேன் அபராதியானேனென்று மிகவும் அநுதபித்து நிற்க, பகவானானவர் இவர் அநுதாபத்திற் கிரங்கி இவருக் கெதிரே எழுந்தருளி, இவரைத் தழுவிக்கொண்டு, இவர் வணக்கத்தை யேற்று அபயம் தந்து போய்விட்டார். பிறகு தாசரானவர் அந்தத் திருடர்களுக்கு அருள் செய்தனுப்பிவிட்டு, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே தனுசாடர் வைபவத்தைச் சொல்லத் தொடங்குகிறார்.

ஜய்புதாசர் சரித்திரம் முற்றிற்று.

# ௯௫-வது தனுசாடர் சரித்திரம்

பூர்வகாலத்தில், ஓரூரில், தனுசாடர் என்னும் பெயருள்ள குடியானவர் ஒருவரிருந்தார். அவர்க்கு பாலவயது நிறைந்த காலத்தில், ஸ்ரீஹரிதாசர்களிடத்தில் அன்புடையவராய் அவர்களைப் பூஜிப்பதில் மிகவும் ஊக்கமுள்ளவராயிருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், சில ஹரிதாசர்கள் இவரிடத்தில் வந்து நீராடி, சாளக்கிராம பூஜை செய்வதைப் பார்த்து, அவர்களை வணங்கி, நானும் இப்படிப் பூஜை செய்யும்படி க்ருபை செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அந்த ஹரிதாசர்கள், இவனோ சிறுவனாயிருக்கிறான், இவன் சாளக்கிராம பூஜை செய்யும் பருவமுள்ளவனல்லவென்று, இவர் வயதுக்கேற்க, ஒரு சிறு கருங் கல்லை இவரிடத்தில் கொடுத்தார்கள். அதை இவர் மிகுந்த அன்போடு இருகையாலும் ஏற்று, நாள்தோறும் தாம் மாடு மேய்க்க

ப் போகிற வனத்தில் ஒரு பக்கத்தில் வைத்து, நீராடி மலர்களைக் கொண் டர்ச்சித்து, தாம் உண்ணும் கட்டமுதை நிவேதித்து, ஸ்ரீ கண்ணபிரானே, இதை அன்போடு அமுதுசெய்யக் கடவீரென்று ப்ரார்த்திக்க, பகவானு மவர் இவருடைய பக்திக்குத் திருவுளமுவந்து அமுது செய்தருளினார். சேஷ த்தை இவரும் உண்டார். இப்படி நடந்துகொண்டிருக்கும்போது ஒருநாள் இவர் வயலில் விதைவிதைக்கப் போகையில், சில ஹரிதாசர்கள் வந்துகூடி இவரை நோக்கி, நீர் நாள்தோறும் ஹரிதாசர்களை உபசரித்து அன்னமிடுகிறீ ரென்று கேள்விப்பட்டு வந்தோம், எமது பசியைத் தணிக்கவேண்டுமென்று சொல்லக்கேட்ட இந்தத் தாசர், இவர்களுக்கு எவ்விதமாய்ப் பசியைத் தணி க்கலாம், இந்த விதையல்லாமல் வேறொன்றும் நம்மிடத்தில் இல்லையே யென்று மனத்தில் நினைத்து, அந்த விதையை அரிசியாக்கிச் சமைத்து அந்த ஹரிதாசரை யழைத்து உபசரித்துப் படைக்க, அவர்களும் உண்டு பசிதணிந்து, இவரைநோக்கி, நீர் எமதுபசியைத் தணித்தீராதலால், உமக்கு மேன்மேலும் ஸ்ரீலக்ஷ்மீநாதருடைய அருள் உண்டாகக்கடவதென்று ஆசீர் வதித்துப் போனார்கள். அவர்கள் போனபிறகு, அவ்வூரிலுள்ளவரெல்லாரும இல்லறத்தைநடத்தியல்லவோ பாரமார்த்திகமானவற்றைச்செய்யவேண்டும், இவர் விதை முழுதும் ஹரிதாசருக்கு உபயோகித்துவிட்டாரே, இனி இவர் பயிரிடுவது எப்படியென்று இகழ்ந்து பேசிக்கொண்டார்கள். அவர்கள் இப்படி பேசிக்கொள்வதைக் கேட்ட தாசரானவர், விதையை நிலத்தில் இடுவதைப பார்க்கிலும் உயிர்களின் வயிற்றிலிடுவது புண்ணியம், அதிலும ஹரிதாசர் வயிற்றிலிடுவது சிறந்த புண்ணியமென்று துணிந்து, ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்த நம் செய்து கொண்டும், முன்பு தாம் செய்துகொண்டிருந்த பூஜையையும் விடாமல் செய்துகொண்டும் இருந்தார். இதை யறிந்த ஸ்ரீபகவானுனவர் இவரது விளைவு நிலத்தில் விதைவிதைத்து முளைத்துச் செழிக்கச்செய்தார். இவரை யிகழ்ந்த யாவரும் இவர் பயிர் செழித்திருக்கக் கண்டு, இவர் ஹரி பக்தராதலால் இவர்க்கு அந்தப்பகவானே உதவிசெய்ததாகத் தோன்றுகின்ற தென்று பேசிக்கொண்டார்கள். இவருமஅந்தப பயிரை நோக்கி, இது இறைவ னது திருவருளேயன்றி வேறல்லவென்று மனத்திற்கொண்டு பகவானைத் தோத்திரம் பண்ணி, விளைந்திருந்த கோதுமையைக் கொண்டுவந்து, ஹரி தாசர் விஷயத்தில் உபயோகப்படுத்தி, பகவானை யிடைவிடாமல் ஸ்மரித்துக் கொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே சுகாநந்தர் வைபவ த்தைச் சொல்லத் தொடங்கினார்.

தனசாடர் சரித்திரம் முற்றிற்று.

## கூகூ-வது சுகாநந்தர் சரித்திரம்.

முன்னாளில், ஓரூரில், சுகாநந்தர் என்றொருவரிருந்தார். இவர், திருமா லடியாராகவும், சாதுக்களைக் கண்டால் அன்போடு உபசரித்து அமுதளிப் பவராகவும் இருந்தார். இவர் மனைவியாராகிய சுரசுரீ என்பவர் பதிவிரதா சிரோமணியாயும்,சாதுபக்தியிற் சிறந்தவராயும், அவர்களுக்கு வேண்டுமவற்

றையெல்லாம் கொடுத்து உபசரிப்பவராயும் இருந்தார். இந்த இருவரும் மனவொற்றுமை யுள்ளவராய் இல்லறத்தை நடத்திவருங் காலத்தில், சில துஷ்டர்கள் இவரைச் சோதிக்க விரும்பி, கடையில் இலட்டுக வர்க்கத்தை வாங்கிக் கொண்டுவந்து, இது பகவத் ப்ரஸாதம், இதனை உண்ணக்கடவீரென்று இவர் கையிற் கொடுக்க, இவர் களங்கமில்லாமல் வாங்கி யன்போடுண்டார்; அப்போது அந்தத் துஷ்டர்கள் இவரை நோக்கி, கடையில் வாங்கிவந்ததை உண்டீரே, நீர் வேதிய ராவீரோவென்று பரிஹஸித்து நகைத்தார்கள்! அன்றியும் நீர் பிராயச்சித்தம் செய்துகொள்ளாத பக்ஷத்தில் உம்மை ஜாதியார் நீக்கிவிடுவார்கள் என்றுசொன்னார்கள். இதைக்கேட்ட சுகாநந்தர் தாம் ஒரு நாழிகை நேரம் மென்று விழுங்கின இலட்டுக வகையை யெல்லாம் பழையபடியே செய்து வாயிலிருந் தெடுத்துக் கொடுக்க, அந்தத் துஷ்டர்கள் பயந்து, இவர் திருவடியை வணங்கி, உமக்குப் பகவத்ஸஹாயமிருப்பதனால் உமக்கு எல்லாக்காரியமும் கைகூடுகின்றது; அடியேங்கள் செய்தபிழையைப்பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து விடை பெற்றுப் போய்விட்டார்கள். அப்பால் சிலநாள் கழிந்தபிறகு, சுகாநந்தர் தமது மனைவியாராகிய சுரசுரி யென்பவரை நோக்கி, நம்மிடத்துக்கு வருகிற சாதுக்களைச் சகல உபசாரங்களோடு அமுதளித்து மகிழ்வித்துக் கொண்டிருக்கக் கடவாயென்று சொல்லிவிட்டு யாத்திரைபோனார். அந்தச்சமயத்தில் ஒருவன் சாது வேஷம் பூண்டுவந்தான்; அவனைக்கண்ட சுரசுரியானவர் மிகவும் அன்போடுபூஜித்துக் கொண்டிருக்கும்போது, இவரது சௌந்தரியத்தினால் மதிமயங்கி, பெண்ணே, உனது ரூப சௌந்தர்ய சாகரத்தில் மூழ்கிவிட்டேன், என்னைக் கரையேற்றி, போகதானங் கொடுக்கவேணுமென்றான். அதற்குச் சுரசுரீயார் சற்றும்மனங் கலங்காமல், சுவாமீ! அப்படியே யாகட்டும், முன்னே அமுது செய்தருளும் என்று ப்ரார்த்தித்து அமுது பரிமாற, அவன் இனிதாக வுண்டான்; உண்ட பிறகு, அவன் இன்று நமது எண்ணம் பலித்ததென்று பொழுது போகிற வரைக்கும் அவ்விடத்திலேயே காத்திருந்தான். சுரசுரீயென்பவரும் அஸ்தமித்து ஒருஜாம நேரம் கழிந்தபிறகு, புஷ்ப சயநம் அமைத்து அதின்மேல் தாமிருந்துகொண்டு, அந்தச் சாது வேஷம் பூண்டுவந்த துஷ்டனைப் பள்ளியறைக்குள்ளே வரவழைக்க, அவனும் மிகவும் ஆவலோடு பள்ளியறைக்குள்ளேபுகுந்து, சயநத்தின்மேல் ஒரு புலியிருப்பதாகத் தன் கண்ணுக்குத் தோன்றினதனால் மிகவும் நடுநடுங்கி, வெளியே புறப்பட்டு ஓடி, பொன்னாமென்று நினைத் தெடுத்தது பாம்பாய் முடிந்த கதைபோலவும், அமுதமென்று நினைத்தருந்தினது நஞ்சாய் முடிந்த கதைபோலவும், ஒரு பெண் ணென்று நாம் நினைத்தது புலியாய் முடிந்ததேயென்று ஏங்கி நின்றான். அப்போது சயநத்தின்மே லிருந்த புலியானது இவனை உறுமிப் பார்க்க, இவன் மிகவும் அஞ்சி, தாயே! நான் செய்த அபராதத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று வணங்கி, தூரமாகப்போய் ஓரிடத்தில் நித்திரை செய்தான். மறுநாள் உதயத்தில் சுரசுரீயார் சாணந் தெளிக்க வெளியே வர, இவன் தூரத்தே யிருந்து

பார்த்துக் கிட்டிவந்து வணங்கித் தோத்திரஞ்செய்து நிற்க, சுரசுரியார் மன மிரங்கி, அவனைக் கருணைசெய்து தமது ஊழியக்காரனாக வைத்துக்கொள்ள, அவனும் அவர் மனதுக் கிணங்க ஊழியஞ் செய்துகொண்டு நான்கு மாச கால மிருந்தான். பிறகு யாத்திரைபோயிருந்த சுகாநந்தர் வந்து சேர்ந்தார். சேர்ந்தவுடனே ஊழியக்காரன் இவரைக் கண்டு வணங்கித் தான் செய்த அபராதத்தை விண்ணப்பம் பண்ணக்கேட்ட சுகாநந்தர், அவனுக்கு அபயங் கொடுத்து, அநுக்ரஹஞ்செய்து, அவனை ஹரிதாசனாக்கி, தாமும ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே மாதவதாசர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

சுகாநந்தர் சரித்திரம் முற்றிற்று.

## ௬௭-வது மாதவதாசர் சரித்திரம்.

முன்னாளில் வேதசாஸ்திர நிபுணராகவும், இல் வாழ்க்கையி லிருந்தும் பிரபஞ்சப்பற்றில்லாத நிர்மலசித்தராகவும், மாதவதாசரென்னும் பெயருள்ள வராகவும் ஒருவரிருந்தார். இவர், தமது மனைவியார் பரமபதமடைந்தவுடனே நமக்கு ஸம்ஸாரபந்தம் அற்றது என்று தமது வீட்டி லிருந்த தநதானிய சம் பத்துக்களெல்லாவற்றையும் வேதியர்க்குத் தத்தஞ் செய்துவிட்டு ஸ்ரீஜகந் நாத யாத்திரைபோனார். போய், சமுத்திரத்தில் ஸ்நாநம்செய்து, அங்கெழுந் தருளி யிருக்கிற ஸ்ரீஜகந் நாதனைக் கண்டு, வணங்கித் தோத்திரம் பண்ணி, ஸ்வாமீ! அடியேனுக்குத் துக்கரூபமாயிருந்த சம்ஸார பந்தம் நீங்கிவிட்டது. அடியேனுக்குத் தாய்தந்தை குரு தெய்வம் உறவினர் ஆகிய எல்லாம் தேவ ரீரேயென்று நம்பி யிருக்கின்றேன், அடியேனை ரக்ஷித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்து நின்றார். இவரது நிலைமையை அர்ச்சகன் கண்டு, ஏ! வெறுங்கை யோடு வந்து விழுந்து விழுந்து கும்பிடுகிறாய், வெளியே போவென்று இவ ரைப் பிடித்துத் தள்ளிவிட்டான். இவர் மனங்கலங்கி ஒரு தனியிடத்தி லிரு ந்துகொண்டு, பகவானே, உனது சகுணரூபத்தைக் காண விரும்பினேன். சேவைசாதித்தருளவேண்டுமென்று மூன்றுநாள் அந்நபாநங்களை வெறுத்து ஏகாக்ர சித்தரா யிருந்தார்; அப்போது பகவானுக்கு இவர்மீது கருணையுண் டாகித் தமது தேவியாராகிய ருக்மிணீ பிராட்டியாரை நோக்கி, இன்று நீ சகுணரூபங்கொண்டு மாதவதாசனுக்கெதிரேபோய், அவனுக்கு நல்லவுணவு கொடுக்க வேண்டு மென்று நியமிக்க, அப்படியே ருக்மிணீ பிராட்டியாரும தேவாமிர்தத்துக்குச் சமானமான திவ்யாந்நத்தை ஒருபொற்கிண்ணத்திலேந்தி க்கொண்டு வந்து, பகவத் தியாநத்தி லிருந்த தாசரை யெழுப்பி, அமுதைக் கொடுக்க, தாசர், பிராட்டியாருடைய வடிவழகைக்கண்டு, அதிசயித்து, தாயே! நீர் யாரென்று கேட்க, பிராட்டியார் தாசரை நோக்கி, நீ யாரைத் தியாநித்துக் கொண்டிருக்கிறாயோ, அந்தப் பகவானுடைய திருமார்பி லமர்ந்திருக்கிறவள்

நான், என் பேர் ருக்மிணியென்று சொல்லுவார்கள், நீ பசித்திருக்கிறா யென்று உனக்கு உணவு தரும்பொருட்டு என்னை யனுப்பினார். இன்னும் சில நாளுக்குள்ளே அவருடைய சகுணரூபத்தை உனக்குச் சேவைசாதிக்கருளுவார். நீ இந்த வுணவை விரைவில் உண்ணக்கடவையென்று சொல்ல, தாசர் மிகவும் அன்போடு அந்த வுணவை வாங்கி யுண்டார். உண்டபிறகு பிராட்டியாரே கைகால் பூசவும் நீர் தந்தார். பிறகு தாம் உணவுகொண்டுவந்த பொற்றட்டையும் ரத்நமயமான அகப்பையையும் அங்கேயே வைத்துவிட்டுப் போய்க் கோயிலை யடைந்தார். தாசர் அவைகளைச் சுத்தம் செய்து தமதிடத்தில் வைத்துக்கொண்டு நித்திரை செய்தார். மறுநாள் சூரியோதயகாலத்தில் கோயிற் பரிசாரகர்களாகிய அர்ச்சகர் முதலானோர் வந்து கதவைத் திறந்து ஆரதி செய்யும்போது, சொர்ணத்தட்டில்லாதிருப்பதைக்கண்டு, யாரோ வந்து களவு செய்தாற்போல் தோன்றுகிறதே யென்று ஆலோசித்துக் கொண்டு வெளியில் வந்து, உறங்குகின்ற தாசரிடத்தில் இருக்கக்கண்டு, இவன் யாரோ, கள்ளனாக, வெளிக்குப் பாவனையாக கண் மூடித் தியானித்துக் கொண்டிருந்தான். இவன் அபஹாரப் பிரயத்தனம் செய்திருந்தது இதைத் திருடிக்கொண்டுபோவென்று நிர்ணயித்து, அவரைக் கட்டிக்கொண்டு போய் ஒரு அறையில் அடைத்துவைத்தார்கள்.

அன்றிரவில் ஸ்ரீரங்கநாதஸ்வாமியானவர் அர்ச்சகருடைய கனவில் வந்து, அந்தத்தாசன் என்னைக்குறித்து மூன்றுநாள் உபவாசமாயிருந்ததனால், ருக்மிணியை நோக்கி, அவனது பசியைத் தணித்துவா வென்று சொல்லி யனுப்பினேன்; அவள் உணவிருந்த பொன்னாலான பொற்றட்டை அவ்விடத்தில் வைத்து மறந்து வந்தாள். இப்படியிருக்க, அவனை யேன் விரோதக வருத்துகிறீர்கள் என்று சொல்லி மறைந்தார். உடனே அர்ச்சகர், கண்விழித்தெழுந்து, ஹரிதாசனை விரோதிய வருத்தினோமே என்று அநுதபித்து, தாசனைக் கட்டவிழ்த்து விட்டு, திருவடியை வணங்கி, அறியாமற் செய்த எமது பிழையைப் பொறுத்தருள்க வென்று பிரார்த்தித்து, பகவத் ஸந்நிதியிற் கொண்டுவந்து பகவானை ஆலிங்கனஞ் செய்வித்தார்கள். அதன்பிறகு பகவத் பிரஸாதமுங் கொடுத்து உபசரித்தார்கள். தாசரும் உண்டு மகிழ்ந்திருந்தார். இப்படி நாள்தோறும் செய்துவருங் காலத்தில், ஒருநாளிரவில் அர்ச்சகர்கள் கோயில் வேலைகள் யாவும் முடிந்தவுடனே கோயில் வாசற் கதவை மூடி விட்டுப்போன பிறகு, வெளியிலிருந்த தாசர் ஸ்ரீஹரிபாதத் தியானத்தோடு நித்திரை செய்யும்போது, இவரது உடம்பு குளிரினால் நடுங்கக்கண்ட பகவானானவர், தமது மேற் போர்வையைக் கொண்டுவந்து இவர்மேல் போர்த்து விட்டுப்போனார். பிறகு அருணோதயத்தில் அர்ச்சகர் வந்து கதவைத்திறந்து பகவானது மேற்போர்வை யில்லாதிருக்கக் கண்டு மனங் கலங்கி, வெளியே விரைந்து வந்து, அந்தப் போர்வையானது தாசர்மேலிருக்கப் பார்த்து, ஸ்ரீ கண்ண பிரான் இந்த தாசர் மீது மிகுந்த கருணை வைத்திருக்கிறார் என்று இவரை வணங்கித் துதித்துப் போய்விட்டார்கள். பிறகு அந்த வூருக்கு

அரசனாயிருப்பவன் இவர் பெருமையைக் கேள்விப்பட்டு, இவரிடம் வந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்தான். அதைக்கண்ட தாசர், இவ்வளவு பெருமை நமக்கு வேண்டாமென்று அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வட மதுரைக்குப் போய், ஸ்ரீகண்ணபிரானைச் சேவித்து நின்றார். அப்போது அங்குள்ளார், இவர் கர்பப கிரகத்தில் பகவானுக் கருகே வரத் தகுமோ வென்று இவரைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்கள். பிறகு தாசர் அங்கே ஒரு தனிமையான இடத்தில் பகவானை த்யாநித்துக்கொண்டிருக்கும் போது, ஒரு தனவான், போஜநத்துக்குரிய பொருள்களெல்லாங் கொண்டு வந்து இவரிடத்தில் கொடுத்துச் சமைத்துண்ணக் கடவீரென்று ப்ரார்த்தித் தான். தாசர் அப்படியே பாகஞ் செய்து வைத்துக்கொண்டு பகவானை ப்ரார்த்தித்தார். உடனே பகவானானவர் இவர்க்கு ப்ரத்யக்ஷமாகி நின்றார். நிற்கவே தாசரானவர் வணங்கக் கண்ட பகவானானவர் இவரை யெடுத்து மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு, நீ யென் ப்ராண ஸ்நேஹன், உன் பெருமையை யறியாத அர்ச்சகர்கள் உன்னைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்கள், அதனால் உன்னைத் தேடிவந்தேனென்று கண்ணீர்விட்டார். அதைக் கண்ட தாசரும் கண்ணீர்விட்டார். பிறகு பகவானும் தாசரும் அமுதுசெய்து முடிந்த பிறகு பகவானானவர் கோயிலையடைந்திருந்தார். பிறகு கோயிலில் நாள் தோறும் பூஜிப்பவர்கள் வந்து நிவேதநஞ் செய்து எதிரே நிற்கக் கண்ட பகவானானவர், அவர்களை நோக்கி, நான் இப்போதுதான் மாதவ தாசரோடு கூடி யுண்டு வந்தேன், நீர் கொண்டு வந்த நிவேதநம் வேண்டாம், எனக்குப் பசியில்லை, என் அன்பராகிய மாதவ தாசரை வெளியில் தள்ளிவிட்டபோது அவர் கோபங்கொண்டு ஓரிடத்திலிருக்கிறார். அவரைச் சமாதானஞ் செய்து அழைத்துவந்தால்தான் நான் உண்பேன், இல்லாவிடில் உண்ணமாட்டே னென்று அசரீரியாய்ச் சொல்ல, அர்ச்சகர்கள் அப்படியே போய் மாதவ தாசரைச் சமாதானஞ் செய்து அழைத்து வந்தார்கள். வந்தவர் அந்த வட மதுரையில் நான்கு மாச காலம் ஹரிபஜனை செய்துகொண்டிருந்து, பிறகு கோகுல ப்ருந்தா வநத்துக்குப் போய், பகவானைச் சேவித்து, அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீஜகந்நாதத்துக்குப் போய், ஸ்ரீகண்ணபிரானைச் சேவித்துக் கொண்டு சிலநாள் அங்கே தங்கியிருந்தார். இருக்கும்போது இவர்க்கு அதிசார நோயுண்டானதனால் மிகவும் அசக்தராய், நடக்கவும் வலியில்லாமல் மெல்ல நடந்துபோய்க் கடற்கரையை யடைந்து, அடிக்கடி யெழுந்துபோய்ச் சௌசம் செய்யக்கூடாத இவரது நிலைமையை ஸ்ரீகண்ணபிரான்கண்டு, சகுண ரூபங் கொண்டுவந்து, கலசத்தில் நீர் மொண்டு கொண்டுவந்து கொடுப்பதையும், வஸ்திரம் தோய்த்து உலரவைத்துக் கொடுப்பதையும், மற்றுமுள்ள வேலைகள் செய்வதையும் தாசர் பார்த்து, ஓ பகவானே, தேவரீர் அடியேனை யொரு பொருளா யெண்ணி வந்து அடியேனுக்கு ஊழியம் செய்யத் தகுமோ, இந்த நோயைத் தீர்க்க உமக்குச் சக்தியில்லையோ வென்று சொல்ல, பகவானானவர், தாசரே, இந்த உடம்பெடுத்ததனால் ப்ராரப்த கர்ம பலத்தை

அநுபவித்தே தொலைக்கவேண்டுமே, இந்தக் குடல் நோயைத் தீர்க்கும் வல்லமை யெனக்கில்லாமற் போகவில்லை, அப்படி யென்றால் இந்த நோய் தீருமானால், இந்தப் பிராரப்த கர்மபலத்தை யநுபவிக்கும் பொருட்டு இனிமேலும் ஜன்மம் எடுக்கவேண்டி வரும், இன்னம் நாலுநாளில் இந்த நோய் நீங்கி ஆரோக்கியத்தையடைவீர் ஆதலால் இந்த நான்கு நாள் மாத்திரம் பொறுத்துக்கொண்டிரும் என்று சொல்ல, அப்படியே தாசர், நோயைச் சகித்திருந்தார். நோயும் நான்கு நாளில் தீர்ந்தது. தாசரும் ஆரோக்கிய மடைந்து சில நாள் கழிந்த பிறகு, தர்க்க சாஸ்திரத்தில் மிகவும் சமர்த்தனான வொருவன் தாச ரிடத்துக்கு வந்து, நீர் மஹா வேதாந்தி யானதால், உம்மோடு வாது செய்யவேண்டுமென்றெண்ணி வந்தேன் என்று சொல்ல, தாசர், அப்படியே யாகட்டும், இந்தச் சமயம் நான் கொல்லைக்குப் போய் வருமளவும் இங்கே யிரும் என்று சொல்லிக் கடற்கரையிலே போய் நின்று, ஓ பகவானே, வாது செய்யுங் காலத்தில் அந்தத் தர்க்க சாஸ்திரிக்கு அவமானம் நேரிட்டால் அதனால் எனக்கு உண்டாகும் பரயோஜனம் யாது? இதற்கு என்செய்வேனென்றும், இந்தக் கவலையை நீயே தீர்க்கவேண்டுமென்றும் பிரார்த்திக்க, பகவானனவர் தாச ருருவங் கொண்டு போய்த் தர்க்கஞ்செய்து, வந்த தார்க்கிகனை வென்று மறைந்துபோனார். பிறகு, தாசர் அவனிடத்திற்கு வரக் கண்டு, நான் இவ்வுலகத்தில் எப்படிப்பட்ட மஹா பண்டிதரையும் வென்று வந்தேன், அப்படிப்பட்ட என்னை ஒரு வார்த்தையால் வென்றுவிட்டீரே யென்று புகழ்ந்துசொல்ல, தாசர், நான் உம்மை வெல்லவில்லை, உம்மை வாதுசெய்து வென்றவர், உலகை முண்ட பெருவாயராகிய ஸ்ரீகண்ண பிரானே யென்றார். பிறகு பண்டிதன் தாசருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கி, அடியேனுக்கு அநுக்கிரகம் செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, தாசரும் அவன் விரும்பினபடியே அநுக்கிரகஞ்செய்து அவனை ஹரிபக்தனாக்கி, தாமும் ஹரிபஜனை செய்துகொண்டு அவனோடு கூடி இனிதுவாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே ஹரிவியாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

மாதவதாசர் சரித்திரம் முற்றிற்று.

## ௯௮-வது ஹரிவியாசர் சரித்திரம்.

வட மதுரையில் வாழ்பவரும், பகவத் பக்தியிற் சிறந்தவரும், சதுர்வேத பாரகரும், அன்பு அருள் முதலிய ஆத்ம குண பூர்த்தி யுள்ளவரும் ஆகிய ஹரிவியாசர் என்பவர் ஒருவரிருந்தார். இவர் தமது சீடர்களோடும் ஸ்ரீஜகந்நாத யாத்திரை போகும்போது, ஒரு மனோஹரமான பூஞ்சோலையைக்கண்டு அதில் இறங்கினார். அங்குள்ள ஒரு காளி கோயிலில் ஒருவன் ஒரு ஆட்டைக் கொண்டுவந்து பலியிட்டான். அதைக்கண்ட ஹரிவியாசர் இப்படி உயிர்க் கொலை செய்யத்தகுந்த இடத்தில் நாமிருக்கத் தகாதென்று தமது சீடரோடும் புறப்பட்டு, மிகுந்த துக்கத்துடனே, இந்தத் தேசத்தார் மிகவும் தீமை

யுள்ளவர்கள், இந்தச்சோலையில் நாம் இறங்கினதும் பாவம் என்று சொல்லிக் கொண்டு பசியோடு போகும்போது, காளியானவள் மனம் வருந்தி, ஸ்ரீஹரி பக்தரானவர் இவ்விடம் விட்டு நீங்கிப் பசியோடு போகிறாரே, அந்தப் பாவம் என்னைச் சேருமே யென்று விரைந்தோடி அவருக் கெதிரேபோய் வணங்கி, அவரைப் போகவொட்டாமல் நிறுத்தி, ஸ்வாமீ, தேவரீர், எனதிடத்தில் வந்து பசியோடு போவீரானால் எனது தெய்வத்தன்மை நீங்கும்; ஆதலால் கோயிலில் வந்து அமுது செய்துபோகவேண்டுமென்று ப்ரார்த்திக்க, தாசர் அந்தக் காளியைநோக்கி, நீ கொலைசெய்வதை விடுவாயானால், உன்னிடத்து க்கு வருவேன் என்றார். அதுகேட்ட காளியானவள் அப்படியே யாகட்டும் என்று உறுதிமொழி சொல்லியழைக்க, தாசரும் சம்மதித்து வந்தார்; வந்த வுடனே காளியானவள் தன் கோயிலைச் சுத்தம் செய்ய ஏற்பாடு செய்து, சமையல் செய்வித்துத் தாசருக்கு ஊட்டி மகிழ்வித்தாள். தாசரும் உண்டு மகிழ்ந்திருந்தார். அன்றிரவில் காளியானவள் அவ்வூர்க்கு அரசனாயிருப்பவ னுடைய கனவிற் போய், இனி இவ்வூரார் என் கோயிலில் ஆடு முதலியவற் றைப் பலியிடாதபடி கட்டளையிட்டு உயிர்வதையைப் பரிசுத்தமாய் நீக்கவே ண்டும், அப்படி நீ செய்யாத பக்ஷத்தில் உனக்கும் இவ்வூராருக்கும் அதிக துன்பத்தை யுண்டாக்குவேன் என்றாள். அரசன் உடனே விழித்து, தான் கண்ட கனவின் செய்தியை மந்திரிக்குத் தெரிவித்து, அவன் மூலமாக அந்த ஊராருக்கெல்லாம் கொலைப்பாவத்தைச் செய்தவர்கள் தண்டிக்கப்படுவார் கள் என்கிற ஏற்பாட்டையும் தெரிவித்த பிறகு, காளி கோயிலுக்குப் போய், அங்கே தங்கியிருக்கிற தாசரை வணங்கி, அடியேனுக்கு அநுக்ரஹம் செய் தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, தாசரும் அப்படியே அநுக்ரஹம் செய் து, இனிமேல் உன்னூரில் ஜீவ வதை நடக்க கூடாதென்று வற்புறுத்தி, ஹரிபஜனை செய்யும்படி நியமித்தருளினார். அப்படியே அரசனும் ஒத்துக் கொண்டு தாசரைத் தனதூருக் கழைத்துக் கொண்டுபோய் மிகவும் அன்பு டனே பூஜித்துக் கொண்டிருக்க, அவ்விடத்தில் தாசர் ஆறுமாசகாலம்வரை க்கும் தங்கியிருந்தார். அப்போது அரசன் அவ்வூரில் பஜனைமடம் ஒன்று கட்டுவித்து, யோகீசுவரர் முதலானோர் வந்து தங்கும்படி செய்து அவ்வவர்க ளுடைய வீடரும் தங்கும்படி செய்தான். பிறகு தாசர் ஸ்ரீஜகந்நாதக்ஷேத்திர த்துக்குப்போய்ப் பெருமானை வணங்க, பகவான் இவரைத் தழுவிக்கொண்டு அபயம் கொடுத்து மறைந்தருளினார். உடனே ஹரிவியாசர் புறப்பட்டு வட மதுரைக்குப்போய், ஸ்ரீகண்ணபிரானைப் பஜித்துக்கொண்டு இனிது வாழ்ந் திருந்தார் என்று சொல்லி, மேலே திரிபுரதாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

ஹரிவியாசர் சரித்திரம் முற்றிற்று.

## ௯௯ வது திரிபுரதாசர் சரித்திரம்.

மதுரா நகரத்துக்கு வேந்தனாயிருப்பவனுக்கு ஒரு மதிமந்திரியிருந் தார். அவர்பேர் திரிபுரதாசர் என்று சொல்லுவார்கள். அவர் அந்த மந்திரித் தொழிலை வெகு நீதியாய் நடத்திவந்து, சிலநாள் கழிந்தவுடனே அவருக்குப் பிரபஞ்சத்தில் வெறுப்புண்டாகி, தமக்குள்ள தந தாநியாதிக ளெல்லாவற் றையும் ஊரார் கொள்ளை கொள்ளும்படி விட்டுத் தமது தேவியரோடு ஸ்ரீ

ப்ருந்தாவநத்துக்குப்போய், அங்கே யெழுந்தருளியிருக்கிற ஸ்ரீகண்ணபிரானைக்கண்டு வணங்கி, அந்த க்ஷேத்ரத்திலேயே யிருந்தால் நலமென் றெண்ணிச் சிலகாலம் அங்கேயிருந்தார். அப்படியிருக்குங்காலத்தில் ஒருநாள் தமது தேவியாரை நோக்கி, பெண்ணே, ஸ்ரீகண்ணபிரானுக்கு ஒரு திருப்பரிவட்டம் சமர்ப்பிக்க எண்ணினேன் என்றார். அதைக்கேட்ட தேவியார், நம்மிடத்தில் அற்பமும் பொருளில்லையே; அயலார் கொடுக்கும் தண்டுல தாநியாதிகளைக் கொண்டு ஜீவிக்கின்றோமே; இப்படியிருக்கிற நமக்கு இந்த எண்ணம் ஏன்? பகவானுக்கு என்ன குறை? நீர் இந்த எண்ணங்கொண்டது தகுதியல்லவென்றார். அதுகேட்ட தாசர், பெண்ணே, பகவானுக்கு ஒரு குறையுமில்லையாயினும் என் மனத்துக்கிசைந்தபடி, என் சக்திக்கேற்ற வுபசாரம் செய்தே தீரவேண்டுமென்று சொல்லி, தமது வீட்டிலிருந்த மணிக் கூட்டை யெடுத்துக் கொண்டுபோய் விற்று ஒரு ரூபாய்பெற்று, அந்தத் தொகைக்கு ஒரு வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு கோயிலிற்போய், இந்த வஸ்திரத்தைப் பகவானுக்குச்சாத்தக் கடவீரென்று சொல்லி அர்ச்சகன் கையிற் கொடுக்க, அர்ச்சகன் அதைவாங்கி இந்தவஸ்திரத்தையா பகவானுக்குச் சமர்ப்பிக்கச்சொல்லி யென் கையிற் கொடுத்தாயே; உனக்குச் சிறிதும் நாணமில்லையோ! சிறந்த பீதாம்பரதாரிக்கு இது தகுமோ வென்று சொல்ல, தாசர் அந்த அர்ச்சகனைநோக்கி, நீரே பகவானுக்குத் தெரிவித்து இதை அங்கீகரிக்கும்படி செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்துப் போய்விட்டார். அந்த அர்ச்சகன் அந்தவஸ்திரத்தைக் கீழேவிரித்து அதின்மீது படுத்துறங்கினான். அப்போது பகவானானவர் அந்த அர்ச்சகன் முதலானோர்க்குத் தமது அன்பர் பெருமையைத் தெரிவிக்கும்பொருட்டு, தமது திருமேனி குளிரால் நடுங்கும்படி செய்தார். அந்த நடுக்கத்தைக்கண்டவர்யாவரும் அந்தநடுக்கத்தைத் தீர்க்கும்பொருட்டுப் பலவகையான வஸ்திரங்களைப் போர்த்தும் நடுக்கம் நீங்கவில்லை. தீசட்டி வைத்தார்கள்; அதினாலும் குளிர் நீங்கவில்லை. இவர்கள் இப்படி குளிரைநீக்க முயன்று கொண்டிருக்கும்போது, பகவானானவர், அந்த அர்ச்சகன் கனவிலே யெழுந்தருளி, என் அன்பன் கொடுத்த வஸ்திரத்தை என்மேல் போர்த்தக் கடவாயென்று நியமிக்க, அவனெழுந்து, கனவின் செய்தியைச் சொல்லக் கேட்டவர் யாவரும்வியந்து அப்படியே செய்வோமென்று அர்ச்சகன் விரித்துப்படுத்திருந்த வஸ்திரத்தைக் கொண்டுவந்து, பகவானுக்குச் சமர்ப்பித்தவுடனே குளிர்நீங்கின கண்ணபிரான் முன்போலப்பிரகாசித்துநின்றார். இந்தச்செய்தியைக் கண்டவர் யாவரும், இந்த வஸ்திரத்தைச் சமர்ப்பித்தவரே பகவானுக்கு மெய்யன்பர் என்று வியந்து கொண்டாடினதுமன்றி, தாசரிடத்திற்கு வந்து அவரை வணங்கி, நடந்த செய்தியையுஞ் சொல்லக் கேட்ட தாசரும் கோயிலுக்குள்ளேபோய், பகவானே, அடியேன் சமர்ப்பித்த வஸ்திரத்தைப் பீதாம்பரத்திலும் சிறந்ததாகத் திருவுளம் பற்றினீரே; உமது பெருங்கருணையை யென்னென்று சொல்லிப் புகழப்போகிறேன் என்று ஆநந்தக் கண்ணீர் பெருகவிழுந்து வணங்கினர். பகவானானவர் இவருக்கு ப்ரத்யக்ஷமாகி

அபயம் தந்து மறைந்தார். தாசரும் ஸ்ரீஹரி நாம ஸங்கீர்த்தநம் செய்து கொண்டு அவ்விடத்தில் வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே, லாடுபாவா வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

திரிபுராதாசர் சரித்திரம் முற்றிற்று.

## ௭௨-வது லாடுபாவா சரித்திரம்.

பலவளங்களும் நிறைந்த ஜோத்பூர் என்னும் ஊரில் லாடுபாவா என்றொருவர் இருந்தார். இவர் ஹரிபக்தியிற் சிறந்தவராகவும், எல்லாவுயிர்களையும் தம்முயிர்போலப் பாவிப்பவராகவும், ப்ரபஞ்சத்தில் விரக்தராகவும் இருந்தார். இவர் தீர்த்தயாத்திரை செய்ய விரும்பி புறப்பட்டு, வழியி லுள்ள அநேகமான க்ஷேத்ரங்களையும் கண்டு சேவித்தும், பல ஹரிதாசரைக்கண்டு வணங்கியும் மன மகிழ்ந்து, காலூர் என்னும் தேசத்தையடைந்து, அங்குள்ளார்யாவரும் சற்றும் இரக்கமில்லாதவராகவும், சக்தியை யாராதிப்பவராகவும், அந்தச் சக்திக்கு நரபலிமுதலியவற்றைச் செய்பவராகவும் இருப்பதை யறியாமல் அவ்வூரில் பிரவேசித்தார். அவ்வூரார் அன்றைக்கு நரபலிக்கு ஆள் அகப்படாமல் தேடிக்கொண்டிருந்தாராகையால் இவரைக் கண்டவுடனே பிடித்துக் கட்டிக்கொண்டுபோய்க் காளி கோயிலில் தேவிக் கெதிரே நிறுத்தி, மூன்றுபேர் அசையாமற் பிடித்துக்கொண்டிருக்க, ஒருவன் வாளேந்திவந்து இவரை வெட்டக்கிட்டினான். அப்பொழுது இவர் ஸ்ரீ கண்ணபிரானை த்யானித்து, இந்தச் சமயத்தில் நீ காப்பாற்றினாலுஞ்சரி, கைவிட்டாலுஞ்சரி என்று சொல்லி, திட சித்தத்துடனே நின்றார். அப்போது, காளியானவள் கோர ரூபங்கொண்டு கோயிலை விட்டு வெளியே வந்து, இவரைப் பிடித்துக் கொண்டும், வெட்ட வுத்தேசித்தும நின்ற நால்வரையும் கொன்று, சாந்த ரூபங்கொண்டு லாடுபாவாவின் திருவடியைவணங்கி ஹரி தாசராகிய வுமக்கு என்னால் நேரிட்ட அபராதத்தை க்ஷமித்தருளவேணுடு மென்றும, உமக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளுமென்றும ப்ரார்த்திக்க, தாசரானவர் காளியைநோக்கி, எனக்கு யாதொன்றும் வேண்டியதில்லை, நீ யிதுவரையில் கொலைக்கு இசைந்திருந்ததையும, இவ்வூரார் கொலை செய்து வந்ததையும், ஒழிவீர்களானால் போதும்; இதுவுமன்றி, இங்குள்ளவர் யாவரும ஹரிதாசராய் ஹரிபஜனை செய்யும்படி அவர்களை நீ திருத்தவேண்டும என்று சொல்ல, சக்தியும் நன்று! நன்று!! அப்படியே செய்கிறே னென்று சொல்லி, அந்த வூரரசன் கனவிற் போய், இன்று முதல் உன் ஊரா ரெல்லாரும் கொலைத் தொழிலைவிட்டு, என் கோயிலில் வந்து தங்கியிருக்கிற ஹரி தாசரை வணங்கி, அவர்க்கு அடியாராவதல்லாமல், என் கோயிலில் முன்போல நரபலிமுதலானவற்றைச் செய்தால் உன்னையும் உன் ஊரி லுள்ளாரையும் நாசஞ் செய்வேன் என்று சொல்லிமறைந்தாள். உடனே அரசன் விழித்தெழுந்து, தன்

ஊரார் யாவரும் உயிர் வதை செய்யாதிருக்கவேண்டுமென்றும், காளிகோயிலில் வந்திருக்கிற ஹரிதாசனைவணங்கி அவருடைய அநுக்ரஹம் பெறவேண்டுமென்றும் பறையறைவித்துத்தானும் காளிகோயிலுக்குப்போய் அங்கே மாண்டு கிடக்கிற நால்வரையும் கண்டு, அதிசயித்து, மிகுந்த அச்சத்தோடு தாசனைவணங்கி, அவர் அநுக்ரஹிக்கப் பெற்றான். அப்பால் ஊராரும் அப்படியே வந்துவணங்கி அவருடைய அநுக்ரஹம்பெற்று, ஹரிபஜனை செய்யத் தலைப்பட்டவர்களாய் ஏகாதசி விரதத்தையும் அநுஷ்டிப்பவரானார்கள்; பிறகு லாடு பாவாவானவர் பகவானை ஸ்மரித்து, ஸ்வாமீ, உமது சகுணரூபத்தைக் காட்டியருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, அப்படியே பகவானும் ப்ரத்யக்ஷமாகி அபயங்கொடுத்து மறைந்தார். தாசரும் பல தீர்த்த க்ஷேத்ரயாத்திரைசெய்து வந்து ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே திரிலோசநதாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

லாடுபாவா சரித்திரம் முற்றிற்று.

---

## ௭௧-வது திரிலோசநதாசர் சரித்திரம்.

பூர்வகாலத்தில் ஒரு ஊரில் திரிலோசநர் என்னும் பெயருள்ள ஒருகம்மாளரிருந்தார். அவர், குடும்பத்திலிருந்தும் மிகவும் விரக்தராயும், ஆபரணங்கள் செய்யும் பொருட்டு ஊரார் கொடுக்கிற பொன் வெள்ளிகளில் சிறிதும் அபஹரிக்க விரும்பாதவராயும் இருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், அவ்வூர்க்கு அரசன்வீட்டில் ஒருமணம் நேரிட்டது. அப்போது அரசன் இவரையழைத்து, ரத்னங்களால் ஒருநேமி என்னும் ஆபரணம் செய்துகொடுக்கவேண்டுமென்றுசொல்லி, பொன்னும் ரத்னங்களும் கொடுத்தான். கொடுத்து இந்த ஆபரணத்தை மூன்று நாளைக்குள்ளாகச் செய்துகொடுக்கவேண்டுமென்றுசொல்ல, இவர் அந்தப்பொன்னையும் ரத்னங்களையும் வாங்கிக்கொண்டுவந்து தமது வீட்டில் பத்திரப்படுத்திவைத்து வெளியே வந்தார். அப்போது சில ஹரிதாசர்கள் திரண்டு வந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே, வணங்கி, வீட்டிற்கு அழைத்துவந்து ஆசநம் கொடுத்து நல்ல உணவளித்து உபசரித்தார். அவர்களும் உண்டு மகிழ்ந்திருந்தார்கள். இப்படி யிரண்டுநாள் அவர்களிருந்து போய்விட்டார்கள். இந்தப் பாகவத கைங்கர்யத்திலேயே மனம் வைத்திருந்ததனால் அரசன் வேலையை மறந்துவிட்டார். மூன்றும் நாள் அரசன் சிலரை யேவினான். அவர்களைக் கண்டவுடனே இவர் மிகவும் பயந்து அரசனிடத்துக்குப்போக, அரசன் ஆபரணத்தை நாளைக் காலையில் கொடுக்காதபக்ஷத்தில் தண்டனை செய்வேன் என்றான். இவரும் நாளைக்காலையில்கொடுக்கத் தவறமாட்டேனென்றுசொல்லி, வீட்டுக்கு வந்து, இந்த நகையைச் செய்ய நாலுநாள் செல்லுமே, நாளைக்குக் கொடுக்காமற் போனால் அரசன் தண்டிப்பானே, என் செய்வோமென்று, ஒரு காட்டில்போய் ஒரு

இடத்திலிருந்து, ஸ்ரீலக்ஷ்மீநாதனுகிய பகவானை த்யானித்துக்கொண்டிருந்தார். அப்போது பகவானுனவர் தமது பக்தருடைய வார்த்தை பழுதுபடாம லிருக்கவேண்டி, தாசருடைய வடிவு கொண்டு அவர் வீட்டுக்குள்ளே போய்ப் பொன்னையும் ரத்நங்களையும் எடுத்துத் தக்ஷணமே அரசன் சொன்ன ஆபரணம் செய்து எடுத்துக்கொண்டு அரசனிடத்துக்குப் போய்ச் சலாமசெய்து ஆபரணத்தைக் கொடுத்தார். அந்த ஆபரணத்தைக் கண்ட அரசன் மிகவும் சந்தோஷித்து, இது மிகவும் நேர்த்தியா யிருக்கின்றதென்று அளவற்ற பொருள்களை வெகுமானங் கொடுத்தான். அவைகளை வாங்கிக்கொண்டு வந்து தாசர் மனைவியார் கையிற் கொடுத்து இன்று சாதுஜநங்களுக்கு நல்ல வுணவுகளைச் செய்யவேண்டுமென்று சொல்ல, அவரும் அப்படியே செய்ய, அதை வந்த சாதுக்களுக்கெல்லாம உபசரித்து உண்பித்து, அவர்கள் த்ருப்தியடைந்து போன பிறகு, தாமும உண்டு, தமது முன்றானையில் கொஞ்சம் உணவை யெடுத்து முடிந்து கொண்டு, காட்டில் வாழ்பவராகிய தமது அன்பரிடத்துக்கு, மற்றொரு தாசர் வடிவுகொண்டு சென்றார். சென்று தாசரைக் கண்டு, இந்தக் காட்டில் வழி தெரிய வில்லை. நீர் வழி காட்ட வேண்டுமென்று கேட்க, தாசர், இவர் யாரோ ஒரு பக்தரென்று நினைத்து வணங்கி, இந்தக் காட்டில் காறுமுகளை யெல்லாம கடந்து, இவ்வளவு தூரம் ஏன் வந்தீர் என்று கேட்க, பகவானுனவர் இந்தக் காட்டை யடுத்த நகரத்திலுள்ள தட்டானை அரசன் அழைத்துப் பொன்னையும் மணிகளையுங் கொடுத்து ஆபரணஞ்செய்யச் சொல்லிக் கட்டளையிட, அந்தத் தட்டான் அந்த ஆபரணத்துக்காகக் கொடுத்த பொருளைக்கொண்டு இன்று அளவற்ற சாதுஜநங்களுக்கு நல்ல வுணவளித்தான். அவ்விடத்தில் வந்துண்டவர்களில் நானும் ஒருவன், வயிறுரவுண்ட சோற்று மயக்கத்தால் வழிதப்பி வந்துவிட்டேன், அந்த வுண்டியில் இன்னம ஒரு வேளைக்கு ஆகும்படியா யெடுத்துக் கொண்டுவந்தேன், உன் முகவாட்டத்தை நோக்குமிடத்தில் நீயும் பசியினுல் வருந்தியிருக்கிறதாகத் தோன்றுகின்றது, ஆதலால் இந்த வுணவைநீ யுண்டு பசி தணிவாயாக வென்று சொல்ல, தாசரும அப்படியே சமமதித்து உண்டு கொண்டே, நாம இங்கேயிருக்க, நம்முடைய பெயரைக்கொண்டு அரசனுக்கு நகை செய்து கொடுத்தவர் யாரென்று யோசித்து வியந்து, உண்டு முடிந்த பிறகு, வந்த பகவானைத் தாசரானவர் அழைத்துக்கொண்டு தமது வீட்டுக்குப்போய், புறத் திண்ணையில் தாச வேஷங் கொண்டுவந்த பகவானை இருத்தி, தாம்வீட்டுக்குள்ளே பிரவேசித்து, தேவியாரை நோக்கி, இங்கே இன்றுநடந்த செய்தியென்னவென்று கேட்க, தேவியார் தாசரைநோக்கி, உமக்குச் சித்தப் பிரமையோ! அரசனுக்கு ஜேவர்செய்து கொடுத்ததற்கு அவன் பரிசாகக் கொடுத்த திரவியத்தைக் கொண்டுவந்து, சாதுஜநங்களுக்குநல்லுணவளித்து நீரும் உண்டு, கொஞ்சம் உணவை வஸ்திரத்தில் முடிந்துகொண்டு போனீர், அதை முழுதும் மறந்துவந்து என்னை யிப்படிக் கேட்பது ஆச்சரியமாயிருக்கின்றதென்று சொல்ல, தாசர் காட்டிலிருந்த நமமிடத்திற்கு வந்து ஒரு

சாது சொன்னபடியே இங்கே நடந்திருக்கின்றது, அவரைப் பார்ப்போமென்று புறந்திண்ணையில் வந்துபார்த்து அவரைக் காணாமையால், பகவானேயிப்படிவந்து இந்த அற்புதத்தை நடத்தியிருப்பாரென்று அறிந்து, ஸர்வலோகசரண்யராகிய பகவானானவர் என்பொருட்டு இவ்வளவுசிரமமெடுத்துக்கொண்டாரேயென்று அநுதபித்து, இந்த அபசாரத்தை நான் எப்படி தீர்த்துக்கொள்வேனென்று மனம் புழுங்கி, பகவானைத் தோத்திரஞ்செய்ய, உடனே பகவானானவர் இவர்க்குப் பிரத்யக்ஷமாகி அநுக்ரஹித்துச் சென்றார். இந்தச் செய்தியை யறிந்த அடியாரெல்லாரும் தாஸரை வணங்கி வாழ்த்திப்போனார்கள். இவரும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டும் வருடந்தோறும் இப்படியே ததீயாராதனம் செய்துகொண்டும் இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே சஜ்ஜநகசாருகர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

திரிலோசநதாசர் சரித்திரம் முற்றிற்று.

---

## ௭௰-வது சஜ்ஜநகசாருகர் சரித்திரம்.

முற்காலத்தில் ஒரூரில் சஜ்ஜநகசாருகர் என்றொருவரிருந்தார். இவர் சாருகராய் ஜநமித்தும் தமகுலத்துக்கேற்ற கொலைத்தொழிலைவிட்டு, மாமிசத்தை விலைக்குக் கொண்டுவிற்று அதனால் கிடைக்கும் லாபத்தைக்கொண்டு தமது இல்வாழ்க்கையைக் குறைவற நடத்திவருவாராகவும், பிரபஞ்சத்தில் பற்றில்லாதவராகவும், சாதுஜநங்களைப் பூஜிப்பவராகவும், இடைவிடாமல் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருப்பவராகவும் இருந்தார். இவர் இப்படித் தமது கற்புடைய மனைவியாரோடுகூடி இல்லறத்தை வழுவாமல் நடத்திவருங் காலத்தில், ஸ்ரீகோபால ஸ்வாமியின் வடிவாகிய சாளக்ராமமே இவர் மாமிசம் நிறுக்கும் கல்லாயிருப்பதை யறிந்த ஒரு வேதியன் இவரிடத்தில்வந்து, வேதியர் பூஜிப்பதற்குரிய சாளக்கிராமத்தை நீ பூஜித்தலும், அதை மாமிசம் நிறுக்கும் கல்லாக உபயோகப்படுத்துதலும் உனக்கு நன்மையல்ல, அதை என்னிடத்தில் கொடுத்துவிடு என்று கேட்க, இவர் ஒன்றும் தடை சொல்லாமல் கொடுத்துவிட்டார். அந்த வேதியன் அதைக்கொண்டுபோய்த் தன் வீட்டில் பிரதிஷ்டை செய்து, பிராம்மண போஜநம் முதலானவைகளுஞ் செய்வித்து, ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்து மகிழ்ந்திருந்தான். அன்றிரவில் ஸ்ரீகண்ணபிரான் எழுந்தருளி, சஜ்ஜனகசாருகர்வீட்டில் சுகமாய் வாழ்ந்திருந்த என்னைக் கொண்டுவந்து வைத்திருக்கிறாய், ஒரு க்ஷண காலமாயினும் இங்கேயிருக்க எனக்கு மனமில்லை, என்னை அவன் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடு, இல்லாதபக்ஷத்தில் உன்னை உன்குலத்தோடு நாசஞ்செய்வேன் என்று சொல்ல, வேதியன் விழித்தெழுந்து மிகவும் பயந்து, விடியற்காலத்தில் சாளக்ராமத்தைக் கொண்டுபோய் தாசரிடத்தில்கொடுத்துதான் கண்ட கனவையுஞ் சொல்லி, நான் ஜாதியபிமானத்தால் செய்த அபராதத்

தைப் பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தான். சாளக்ராமம் போன நாள்முதல் தீர்த்தத்தையும் உட்கொள்ளாமலிருந்த தாசரானவர் அதை மிகவும் ஆவலோடு வாங்கிப்பூஜித்துத் தீர்த்தம் ஸ்வீகரித்து, பிறகு கற்புடைய மனைவியாரும் தாமுமாக அமுது செய்து வாழ்ந்திருந்தார். இப்படி நெடுங்காலஞ்செல்ல, ஒருநாள் இவருக்கு ஸ்ரீஜகந்நாதனைச் சேவிக்கவேண்டுமென்ற எண்ண முண்டாகி, அந்த ஜகந்நாத யாத்திரை போகிறவர்களைத் தொடர்ந்துபோய், வழியில ஓரூரில் ஒரு நாளிரவில் தங்கும்படி நேரிட்டது. இவர் தங்கின இடத்தி லிருந்த ஒரு வ்யபிசாரியானவள் இவருடைய அழகுக்கு ஆசைப்பட்டு வந்து இவரை வணங்கி, சமையலுக்கு வேண்டிய பொருள்களெல்லாம கொண்டுவந்து கொடுத்து, ஸ்வாமீ! பாகம்செய்துண்டு இங்கேயே தங்கி நாளை யுதயத்தில் போகலாமென்று ப்ரார்த்திக்க, இவர் அவள் கருத்தை யறியாதவராய், அவள் செய்யு முபசாரத்துக்கு மனமகிழ்ந்து சமையல் செய்துண்டு நித்திரை செய்தார். அவள் நடுராத்திரியிலெழுந்து இவரிடத்துக்கு வந்து, இவரை யெழுப்பித் தன் கருத்தைத் தெரிவித்தாள். இவர் மஹாவைராக்யசாலியாகையால், அதற்குடன்படாமல், அவளைநோக்கி, பெண்ணே, உன் கணவன் அதோ தூங்குகிறான், அவனைக்கலந்து மகிழ்க்கடவாயென்றார். அவள் ஒரு வாள்கொண்டுபோய்த் தன் கணவனுடைய தலையை யறுத்துக் கொண்டுவந்து காட்டி, என் கணவ னிறந்தானே! இனியாயினும் என்னைப் புணரவேண்டும் என்றாள். தாசரானவர் இவள் மஹாபாபியென்று அவ்விடம் விட்டு வெளிப்பட்டார். அவள் இவரை நோக்கி, என் மனத்தை மகிழ்விக்காமற் போகிறாயாதலால் இதோ உன்னைக் கொல்லுவிக்கிறேன், பாரென்று உரத்த சத்தத்தோடு அலறியழுதாள்; அந்தச்சத்தத்தைக்கேட்ட அயலாரெல்லாரும் திரண்டுவந்து என்னசெய்தியென்று விசாரிக்கையில், அவள் இந்த மனிதன் இங்கேவந்து நான் தந்தபொருள்களைச் சமையல் செய்து உண்டு நித்திரைசெய்து, நடுராத்திரியில் என் கணவனைக் கொலைசெய்துவிட்டுப் போகிறானென்றாள். அவர்கள் இவரைக் கட்டிக்கொண்டுபோய் அரசனுக்கெதிரில்விட்டார்கள். அவளும வந்து அலறியழுதாள். அரசன் ஒரு வாளை அவள் கையினால் தீண்டுவித்து, தாசருடைய இரண்டு கைகளையும் அறுத்து விட்டான். தாசர் கைகளையிழந்து மிகவும்மனமவருந்தி ஜகந்நாதயாத்திரை செல்வோருடன்கூடி அவ்வூர்க்கருகே பகவந்நாமஸ்மரணை செய்துகொண்டிருந்தார். அப்போது ஸ்ரீஜகந்நாதப் பெருமான் இவரது நிலையை யறிந்து, அர்ச்சகர் கனவிற்போய், என் அன்பனாகிய சாருகசஜ்ஜநன் நமது ஊர்ப் புறத்தில் வந்திறங்கியிருக்கிறான்; அவனை நீங்கள் போய்வணங்கிப் பல்லக்கிலேற்றிக்கொண்டு வாருங்களென்று நியமிக்க, அர்ச்சகர் விழித் தெழுந்து பல்லக்குடன் போய் இவரைக்கண்டு தமக்கு பகவான் கட்டளையிட்டதைச்சொல்லி, இந்தப் பல்லக்கி லேறி யருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவர் அதிசயித்துப்பல்லக்கிலேற வுத்தேசித்தலும்,கண்டோர் யாவரும் கொலைசெய்த குற்றத்தின்பொருட்டுக்கையறுப்புண்டவன் பல்லக்கிலேறும்படி வாய்த்ததே,இது இறைவனது

கருணைவிசேஷமென்று ஆச்சரியமடைந்தார்கள். சிலர் இவருடைய மனநிலையை யறிந்தல்லவோ ஸ்ரீ பகவான் சொல்ல, அர்ச்சகர் பல்லக்குக் கொண்டு வந்தது? இதை யறியாமல் இவரை வீணாயிழந்து பெரும்பாவத்தைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டுமென்று பேசிக்கொண்டார்கள். அர்ச்சகர்கள் தாசரைப் பிரார்த்தித்து, தாமதம் பண்ணாமல் பல்லக்கில் ஏறும் என்று பார்த்தித்தார்கள். அப்போது தாசரானவர் கண்களில் நீர் பெருக நின்று, நான் ஒரு அபராதத்தையும் செய்யாமலிருக்கும்போது, பகவானானவர் என் கைகளை அரசன் சேதிக்கும்படி என்செய்தார் என்று ஹா தீன தயாளா! பக்தவத்ஸலா! ஆபத்ரக்ஷகா! இந்த ஆபத்காலத்தில் காப்பாற்றாமற் போவீரானால் உமக்குப் பதிதபாவனன் என்னும் விருது கூடாது என்று பலவாறாகப் புலம்பித் தோத்திரம்பண்ண, பகவானானவர் இவருடைய விஷயத்தில் மனமிரங்கி, இவர்க்கு ப்ரத்யக்ஷமானார். அந்தப் பகவானைக் கண்ட மாத்திரத்தில் இவருக்கு இரண்டு கைகளும் வளர்ந்து முன்போலாயின. அதைக்கண்ட சஜ்ஜநகர் மகிழ்ந்து, பகவானுடைய திருவடியில் வீழ்ந்து வணங்கினார். வணங்கின தாசரை பகவானானவர் தமது திருக் கரத்தால் எடுத்து மார்போடணைத்துக்கொண்டார். அப்போது இவர் பகவானை நோக்கி, நான் ஒருவருக்கும் ஒரு தீமை செய்யாதிருக்க, என் கை யறுப்புண்ணச் செய்தாயே! இதுதானோ உன் கருணைக் குணமென்று கேட்க, ஸ்ரீஜகந்நாதப்பெருமான் இவரை நோக்கி நீ பூர்வகாலத்தில் ஒரு வேதியன், ஒருநாள் கங்கா நதியில் முழுகி, அதின் கரையிலிருந்து என்னை மனத்திலிருத்தித் தியானம் பண்ணிக்கொண்டிருக்கும்போது, ஒரு கொலைஞன் வதைக்கும்பொருட்டுக் கட்டிவைத்த பசுவானது அறுத்துக்கொண்டுவர, அதை அவன் தேடிக்கொண்டு அந்தவழியாய் வந்து உன்னைக் கேட்டான்; அப்போது அந்தப்பசு இப்படி போயிற்றென்று வாயாற்சொல்லாமற் போனாலும் கையால் சுட்டிக் காட்டினாய், அப்படியே அவன் போய் அந்தப் பசுவைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்து கொலைசெய்தான். கொலை செய்யப்பட்ட அந்தப் பசுவானது ஒரு பெண்ணாய்ப் பிறந்தது, அதற்குச் சாருகன் கணவனானான், அவ்விருவரும் புணர்கின்ற வீட்டுக்குள்ளே நீ போனாய், உன்னைக்கண்ட மாத்திரத்தில் அந்தப் பெண்ணானவள் உன்மீது மோஹங்கொண்டு தன் கணவன் தலையை யறுத்ததுமன்றி உன் கைகளையும் அரசனைக்கொண்டு அறுப்பித்தாள், முற்பிறப்பில் என்னைத் தியானிக்கும் காலத்தில் கசாருகனைக் கண்ட பாவத்தால் இப்பொழுது கசாருகனாய்ப் பிறந்தாய், ஆனாலும் உன் தபோமஹிமையால் உனக்குக் காட்சி கொடுத்தேனென்று சொல்லி மறைந்தார். அப்போது அங்கே யிருந்தவர்களெல்லாம், இவருடைய அறுபட்ட கைகள் வளர்ந்ததைக் கண்டு மிகவும் ஆச்சரியமடைந்து இவர்க்குப் பகவானுடையக்ருபாவிசேஷத்தால் கைகள்முன்போலவளர்ந்தனவென்று இவரைப புகழ்ந்து கொண்டாடினார்கள். பிறகு இவர் சமுத்திரத்தில் நீராடி ஸ்ரீஜகந்நாதப் பெருமானைச் சேவித்து வணங்கி, அந்த க்ஷேத்ரத்தில் நான்கு மாச காலம் வரைக்கும் ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்

டிருந்தார். பிறகு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுத் தமது ஊருக்குவந்து, நாள்தோறும் சாதுசேவையும் ஹரிநாமஸங்கீர்த்தநமும் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்று சொல்லி, மேலே அங்கத பூபதி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

சஜ்ஜநகசாநகர் சரித்திரம் முற்றிற்று.

# ௭௩-வது அங்கதபூபதி சரித்திரம்.

முன்னாளில் ஒருநகரில், ராயசிங்க், அங்கதபூபதி என்னும் பெயர்கள் அமைந்த இரண்டு ஸகோதரர்கள் இருந்தார்கள். இவர்களில் மூத்தவர் ராயசிங்க், இளையவர் அங்கதபூபதி. இவர்கள் அவ்வூர்க்கு அரசர்களாயிருந்தார்கள். இவர்களில் இளையவராகிய அங்கதபூபதியின் மனைவியார் மிகவும் ஹரிபக்தியிற் சிறந்தவரும், சாதுபூஜைசெய்பவரும், ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்பவருமாயிருந்தார். இவருக்கு அநுக்ரஹம் செய்த குருவானவர் ஒருநாள் வரக்கண்டு, அவரைப் பூஜித்து வணங்கி வீட்டுக்கழைத்து உபசரிக்க யத்நம் செய்வதை இவர் கணவராகிய அங்கதபூபதிகண்டு, குலஸ்த்ரீகளுக்குத் தமது நாயகரன்றி வேறு தெய்வம் குரு என்போர் உண்டென்று யார் சொன்னார்கள் என்றுகோபித்து, நீ இப்படிச் செய்வது தகுதியல்லவென்று வற்புறுத்திச் சொன்னார். இதைக் கேட்ட மனைவியார் மறுமொழி சொல்லாமல், அந்ந பாநங்களை வெறுத்து மூன்று நாள் வரைக்கும் பட்டினியாயிருந்தார். அப்போது ஸ்ரீரங்கநாதரானவர் அங்கதபூபதியின் கனவில் வந்து எதிரே நிற்க இவர் அன்போடு வணங்கினார். பகவானானவர் இவரை நோக்கி, நீ உன் மனைவியின்மீது கோபங்கொண்டு, நீ வணங்கி வழிபடுகிற தெய்வத்தைக் காட்டென்று சொல்லி, வற்புறுத்தினையாதலால் நான் உனக்கெதிரே தோன்றினேன்; கண்டுகொள் என்று சொல்லி மறைந்தார். உடனே அங்கதபூபதியானவர் கண் விழித்து, மனைவியாரிடத்திற்கு வந்து, பகவானானவர் உன்பக்திக்கு மனமகிழ்ந்து எனக்குச் சேவைசாதித்தார். உன்னைக் கடுஞ்சொற்களால் வற்புறுத்தின எனது அபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தார். பிறகு மனைவியார்க்கு அநுக்ரஹித்த ஆசாரியரை யழைப்பித்து அவரிடத்தில் தாமும் அநுக்ரஹம்பெற்று, மனைவியாரும் தாமுமாக ஹரிசேவை குருசேவைகளைச்செய்துகொண்டிருந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில், இவர்க்கு மூத்தவராகிய ராயசிங்க் என்பவர், இவரைப் பகைவர்மேற் படையெடுத்துப் போய் வென்று வரும்படி யேவ, இவரும் அப்படியே போய்ப் பகைவரை வென்று, அநேகமான தந தாந்யாதிகளையும் ரத்நங்களையும் கொண்டுவந்து, ஸ்ரீவிஷ்ணு பக்தர்களுக்குத் தாநம் பண்ணி, மிகுதியான பொருள்களைத் தம்மனைக்குக் கொண்டுவந்து, அதில் ஒரு ஒளி

மிருந்த வயிரத்தைக்கண்டு, அதை ஸ்ரீஜகந்நாதப் பெருமானுக்குச் சமர்ப்பிக்கவேண்டுமென் றெண்ணியிருந்தார். அங்கிருந்தவர்கள்மூத்தவராகிய ராயசிங்கிடத்தில் இந்தச் செய்தியைச்சொல்ல, அவர் அந்த வயிரத்தை எனக்குத் தரவேண்டுமென்று சொல்லியனுப்ப, இவர், அதை ஸ்ரீஜகந்நாதப் பெருமானுக்குச் சமர்ப்பிக்கவேண்டுமென்று எண்ணி வைத்திருக்கிறேன், ஆகையால் அதைத் தரமாட்டேன், வேறு எந்தப் பொருளைக் கேட்டாலும் தருவேன் என்றார். அதுகேட்ட ராயசிங்கு மிகவும் கோபங்கொண்டு, தமது தங்கையை யழைத்து, அங்கதனுக்கு விஷங்கலந்த அன்னமிட்டுக்கொல்லக் கடவாயென்று நியமிக்க, அவளும் இவன் சொன்னபடி செய்யாவிடின், நம்மையுங் கொல்லுவானென்று பயந்து, விஷங்கலந்த அன்னத்தை அங்கத பூபதிக்குப் படைக்க, இவர் தமது வழக்கப்படியே அந்த அன்னம் முதலானவற்றைப் பகவ தர்ப்பணம் பண்ணி உண்ணும்போது, இவரது மனைவியை யறியும்பொருட்டு, நீ பகவ தர்ப்பணம் பண்ணின இந்த அன்னம் நஞ்சுகலந்தது, இதனை நீ உண்ண வேண்டாமென்று சொல்ல, இவர் பகவதர்ப்பணமானதை உண்ணாமலிருக்க மாட்டேனென்று சொல்லி விருப்பத்தோடு உண்டபிறகு, மனைவியாரிடத்துக்கு வந்த இந்தச் செய்தியைச் சொல்லி, இனி யிங்கேயிருக்கத் தகாது என்று மனைவியாரும் தாமும் புறப்பட்டு ஸ்ரீ ஜகந்நாதத்துக்குப் பிரயாணப்பட்டுப் போகும் போது, இவை யாவையும் சிலர் போய் ராயசிங்குக்குச் சொல்ல, அவன் இவர் போகிற வழியில் இவரைத் தடுத்து வயிரத்தைப் பறித்துக் கொண்டு வரும்படி தன் மந்திரியை யனுப்பினான். அந்த மந்திரி, தன் சேனைகளோடுகூடிவந்து இவர் போகும்வழியிலுள்ள ஒரு ஆற்றங்கரையில் வளைத்துக் கொண்டான். இதைக்கண்ட அங்கத பூபதியானவர் இவன் வயிரத்தைப் பறித்துக்கொண்டு போகவந்தானென்றறிந்து, அந்த வயிரத்தைத் தமது கையில் வைத்துக்கொண்டு அந்த மந்திரிக்குங் காட்டி, இது ஸ்ரீ ஜகந்நாதப் பெருமானுக்கு அர்ப்பணம் என்றுசொல்லி, அந்த யாற்றி லெறிந்துவிட்டார். அப்போது மந்திரியானவன் சிலரையேவினான். அவர்கள் யாற்றிலிறங்கித் தேடுவதைக்கண்ட இவர், நீங்கள் ஏன் ப்ரயாசப்படுகிறீர்கள்? அது உங்கள் கைக்கு அகப்படாது, அது ஸ்ரீ ஜகந்நாதப்பெருமானது திருமார்பில் ஆபரணமாய் அமர்ந்திருக்கிறது, நீங்கள் பார்க்க விரும்பினால் என்னோடுவாருங்கள், காட்டுகிறேன் என்றார். அதைக் கேட்ட மந்திரி முதலானோர் அப்படியே காட்டுமென்று இவரோடு தொடர்ந்துபோய் ஸ்ரீ ஜகந்நாதத்தையடைந்து கோயிலுக்குள்ளேபோய், பகவானுடைய திருமார்பின் பதக்கத்தி லமைந்திருப்பதைக் கண்டு, ஆற்றிலெறியப்பட்ட வயிரக்கல் இந்தப் பகவானுடைய மார்பின் பதக்கத்தில் வந்து அமைந்திருப்பது எப்படி யென்று அங்குள்ள அர்ச்சகர்களை வினவ, அவர்கள் மந்திரியை நோக்கி, ஐயா, இரண்டு தினத்துக்கு முன்னே இந்தப் பெருமான் எங்கள் கனவி லெழுந்தருளி, என் அன்பனாகிய அங்கத பூபதி, ஒரு வயிரக்கல்லை யென்பொருட்டு ஆற்றிலெறிந்தான், அது இங்கே வந்திருக்கும், அதை யெடுத்து என் பதக்கத்தில் சேருங்கள் என்று நியமித்

தார்; நாங்கள் எழுந்து பார்த்தபோது அது சந்நிதியில் காணப்பட்டது, அதைப் பகவான் நியமித்தபடியே பதக்கத்தில் அமைத்தோம் என்று சொன்னார்கள். அப்போது மந்திரிமுதலானோர், அதை உற்றுப்பார்த்து, இது ஆற்றிலெறிய ப்பட்டதல்லேயென்றறிந்து, இதென்ன அற்புதமென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு, இங்கே நடந்த செய்திகள் யாவையும் ஒரு கடிதத்தில் எழுதி ஒருதூதன் கையிற்கொடுத்து ராயசிங்குக்கு அனுப்பினார்கள். அந்தத் தூதன் விரைந்துபோய்க்கொடுத்த கடிதத்தை ராயசிங்க் படித்துப் பார்த்து, ஐயோ, பகவத் பக்தனாகிய என் தம்பியை வீணாய்வருத்தினேனே யென்று அநுதபித்து, ஒருகடிதத்தில், தம்பீ, நீ ஸ்ரீ ஜகந்நாதப் பெருமானுக்கு மிகுந்த அன்புள்ளவனென்று அறியாமல் நான் செய்த அபராதத்தைப் பொறுத்து, இந்த க்ஷணமே வந்து எனக்குத் தரிசநம் கொடுக்க வேண்டுமென்றெழுதித் தூதன் கையிற்கொடுத்தான். அதைத் தூதன்கொண்டுவந்து கொடுக்க ப்படித்துப் பார்த்த அங்கத பூபதியானவர், ஸ்ரீ ஜகந்நாதப் பெருமானானவர் என் தமையனுக்கு நற் புத்தியைத் தந்தருளினார் என்று மனமகிழ்ந்து, ஸ்ரீ ஜகந்நாதப் பெருமானை வணங்கி, விடைபெற்றுத் தமது ஊரையடைந்து தமையனைக் கண்டார். தமையனும் இவரை அன்போடு தழுவிக்கொண்டான். பிறகு ராயசிங்க், ஹரிபஜனையில் மிகவும் விருப்பமுள்ளவனாயிருந்தான். இவரும் தமது மனைவியரோடுகூடி ஹரிபஜனை செய்துகொண்டு இனிதுவாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே குணவதிபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

அங்கதபூபதி சரித்திரம் முற்றிற்று.

## எச-வது குணவதிபாயி சரித்திரம்.

பூர்வகாலத்தில் ஒரு நகரத்துக்கு அரசனாகிய மாதவசிங்க் என்றொருவனிருந்தான்; இவன் மனைவியாராகிய குணவதிபாயியார் என்றொருவரிருந்தார்; இவர் வயிற்றில் இரண்டு புதல்வர் பிறந்தார்கள். அந்தப் புதல்வரிருவரையும் அன்போடு வளர்த்துவருங் காலத்தில், இந்தக் குணவதியாருடைய தாதியர் பலருள்ளே ஒருதாதியானவள் எப்பொழுதும் ஸ்ரீ ஹரிநாமத்தை வாயினுள்ளே ஜபித்துக்கொண்டேயிருக்கையில் அவள் உதடு துடிப்பதைக் கண்டு, அவளைநோக்கி, எப்பொழுதும் உன் உதடு அசைந்துகொண்டேயிருக்கப் பார்க்கின்றேன், அதற்குக் காரணம் யாதென்று குணவதியார் கேட்க, தாதியானவள் குணவதியாரை நோக்கி, அம்மா, இந்தக் கரும சரீரத்தோடு கூடிவாழ்கிற வாழ்வையொழித்து மோக்ஷபதத்தையடைய விரும்பி எப்பொழுதும் மோக்ஷப்ரதமான ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநஞ் செய்துகொண்டிருக்கிறேன் என்றுசொன்னாள். அப்படிச் சொல்லக்கேட்ட குணவதியார் அந்தத் தாதியைநோக்கி, அப்படியானால் எனக்கும் அந்த ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநம்

செய்யவேண்டிய கிரமத்தை அநுக்ரஹம் செய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்க, அவரும் இவருடைய மனநிலையையறிந்து, சீராட்டி, இருக்கவேண்டிய முறையி லிருக்கச் செய்து, ஸ்ரீ கண்ணபிரானது உருவ மொன்றைக் கொடுத்து, அதைப் பூஜிக்குமவழியையும் விவரமாய்ப் போதித்து, ஸ்ரீஹரிநாமத்தையும் உபதேசித்தாள். அந்த வுபதேசம் பெற்ற நாள்முதல் குணவதியார் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்து கொண்டும், ஸ்ரீக்ருஷ்ண விக்ரஹத்தை பூஜித்துக்கொண்டும், தம்மை நாடிவருகிற சாதுக்களாகிய ஹரிதாசர்களை உபசரித்து அமுதளித்தல் முதலியவற்றால் மகிழ்வித்துக்கொண்டும் இருந்தார். இப்படி நாளுக்குநாள் ஸ்ரீஹரிபக்தி விருத்தியடைந்து வருதலால் இவர்க்குப் பிரபஞ்ச விவகாரங்களில் சிறிதும பற்றில்லாமல் ஒழிந்து போயிற்று. இப்படி இவர் பிரபஞ்ச விவகாரங்களில் சிறிதும பற்றில்லாம லிருப்பதை அரசனறிந்து, இவருக்கு யாதோ வெறி யுற்றதென்றெண்ணி, அதை யொழிக்கப் பல வகையாய் முயற்சி செய்து பயன் படாமையால், குணவதியாரை நோக்கி, நீ பிரபஞ்ச விவகாரத்தை முழுதும் மறந்திருக்கிறாயே, இதற்குக் காரணம் யாதென்று கேட்க, இவர் அரசனாகிய தம கணவனைநோக்கி, ஸ்ரீவநமாலாதரராகிய பகவானை இடைவிடாமல் எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருக்கிறேன், அந்தப் பகவானனவர் எனக்குப் பிரத்தியக்ஷ மாகாமலிருக்கிறார், ஆகையால் இப்படிப் பிரபஞ்ச விவகாரங்களைமறந்து அந்தப்பகவத்விஷயத்திலேயே மனம் பதிந்தவளாயிருக்கிறேன் என்று அழுதுகொண்டே சொன்னார். இப்படிக் குணவதியார் சொல்லக்கேட்ட அரசன் மிகவும் கோபங்கொண்டு, கண்சிவந்து நோக்குதலும், குணவதியார் கணவன் முகத்தை நோக்க அஞ்சிக் கண்களை மூடிக்கொண்டார். அப்பொழுது ஸ்ரீ கண்ணபிரானனவர் இவரது பயத்தை நீக்கும் பொருட்டு இவர்க்குக் காட்சி கொடுத்தருளினார். குணவதியாரும் அந்தப் பகவானுடைய திருவுருவத்தைத் தரிசித்துத் திருவடியில் வீழ்ந்து வணங்கினார். வணங்கினவுடனே பகவானனவர் இவர் சிரசின் மீது கை வைத்து நீ மனந் தளரவேண்டாம, உனக்கு யாதொரு துன்பமுமில்லை, உன்பக்ஷத்தில் நானிருக்கிறேன் என்றுசொல்லி மறைந்துபோனார். அதின்பிறகு குணவதியார் மனமகிழ்ந்து, சற்றும் அஞ்சாமல் கணவன் முகத்தை நோக்கி யெதிரேநின்றார். பகவானனவர் குணவதியாருக்குக் காட்சி கொடுத்து மறைந்துபோன செய்தியையறியாத அரசன், இவரைநோக்கி, நீ இப்படியேயிருந்தால் உன்னைத் தண்டிப்பேன் என்று அதட்டிச் சொல்லிவிட்டு, வெளியில்வந்து, வாயிற்காவலரைநோக்கி, இவள்யாரோ வொரு துறவியின் மொழி வழியி லிருக்கிறாள், ஆகையால், உள்ளே யாரையும விடவேண்டாமென்று கட்டளையிட்டு, தன் பரிவாரங்களோடுகூடி, மந்திரியைநோக்கி, நீ யிங்கே ராஜரீகத்தைப் பார்த்துக்கொண்டிரு, நான் வேட்டையாடப் போகிறேனென்றுசொல்லி, வனத்துக்குப் போய்விட்டான். இங்கே குணவதியார் ஸ்ரீ கண்ணபிரானை ஆராதித்துக்கொண்டும் அவனது திருநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டும் அடியார்களைப் பூஜித்துக்கொண்டும் இருப்பதைக்

கண்ட மந்திரியானவன், இந்தச்செய்தியை யெழுத்துமூலமாய் அரசனுக்குத் தெரிவித்தான். அரசன் உடனே கொலைசெய்வோர் நால்வரையழைத்து, நீங்கள் விரைந்து நகரத்துக்குப்போய், என் மனைவியைக் கொலைசெய்து வாருங்கள் என்று ஏவ, அவர்களும் அப்படியே போய்க் குணவதியாரைக் கொலைசெய்ய வுத்தேசிக்கும்போது, இவர் ஸ்ரீஹரிபூஜை செய்துகொண்டிருந்ததைக்கண்டு சற்று நிதானித்தார்கள். இதையறிந்த ஸ்ரீ கண்ணபிரானவர் ஒரு புலியுருவங்கொண்டுவந்து இவர் பூஜைசெய்கிற விக்ரஹத்திலிருந்து வெளிப்பட்டுநிற்க, இவர், நீ யிவ்வுருவங் கொண்டுவந்ததற்குக் காரணம் யாதென்று கேட்க, அதற்குப் புலியுருவங்கொண்டுவந்த பகவானவர் மறுமொழி சொல்லாமல், கொலையாளர் நால்வரையுங் கொன்று மறைந்துபோனார். அருகேயிருந்தவர்கள் இந்தப்புலிக் குரலைக்கேட்டு வந்துபார்த்துக் கொலையாளர் இறந்து கிடப்பதைக்கண்டும் புலிக் குரலுக்கஞ்சியும் அழுதுகொண்டுநிற்க, குணவதியார் தமது பூஜையை நிறைவேற்றி, அடியாரைப் பூஜிக்கும் பொருட்டு வெளியே வந்து கொலையாளர் இறந்து கிடப்பதைப் பார்த்து, ஓ பகவானே, இவர்களைக் கொல்லத்தானோ தேவரீர் புலியுருவங் கொண்டு வந்தீர் என்று சொல்லி நிற்கும்போது, சாதுக்களும் மற்றவர்களும் இந்தக் கொலையாளர் மாண்டு கிடப்பதைநோக்கியும் இவர்களைக் கொல்லவந்தபுலியைக் குறித்தும் அதிசயித்து, இந்த அதிசயங்களெல்லாம் ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவருளாலேயே நிகழ்ந்தனவென்று, குணவதியாருடைய பக்தியைக்குறித்துப் புகழ்ந்து கொண்டாடினார்கள். இந்தச் செய்திகள் யாவும் மந்திரியானவன் அரசனுக்கு எழுதியனுப்பினான். அரசன் உடனே குணவதியாருடைய மஹிமையை யறியாமல் அபராதம்செய்தேன், இனிஅவர் இஷ்டம்போல ஹரிபூஜை முதலியவற்றைச் செய்துகொண்டிருக்கட்டும், அவர்க்கு வேண்டிய பொருள்களைத் தடையில்லாமல் அமைத்துத் தரும்படி மந்திரிக்கு எழுதியனுப்பினான். அதின்பிறகு அரசனும் தன் சேனைகளோடும் நகரத்துக்கு மீண்டு வரும் வழியிலுள்ள ஒரு நதியில் வெள்ளம பெருகி யோடுவதைக் கண்டு, அந்த நதியைக் கடப்பதற்கு ஒரு ஓடம் அமைத்து அதிலேறிச் செலுத்திக் கொண்டுவரும்போது, அது நட்டாற்றில் ஒரு பெருஞ் சுழியில் அகப்பட்டுப் பம்பரம்போலச் சுழன்று நீரில் அழுந்தும்படியான நிலையைக்கண்ட அரசனும சேனைகளும அருகிக் கரைசேர்வதற்குத் தகுந்த வுபாயமொன்றும் தோன்றாமல் மனங் கலங்கும்போது, அரசன் தன மனைவியாகிய குணவதியாரை நினைத்தான்; நினைத்தவுடனே நீர்ச் சுழியிலகப்பட்டுச் சுழன்றுகொண்டிருந்த ஓடம் அந்தச் சுழியிலிருந்து விலகிப்போய்க் கரையை யடைந்தது; அரசனும் சேனைகளும் சந்தோஷத்தோடு நகரத்தை யடைந்தார்கள். அப்போது அரசன் தன் அரண்மனையைச் சேர்ந்து மனைவிமக்களைக் கண்டு பெருங்களிப்படைந்து, குணவதியாரைத் தழுவிக்கொண்டு, நீஹரி பக்தியிற் சிறந்தவள் என்பதையும் உன் மஹிமையையும் சற்றும் அறியாமல் உனக்குத் தீமை செய்யத் துணிந்தேன்; உனக்கு ஸ்ரீபக

வானானவர் கைவசமாயிருப்பதை இப்பொழுது அறிந்துகொண்டேன்; ஆற்றில் அழுந்திப்போகிற சமயத்தில் உன்னை நினைத்ததனால் நாங்கள் யாவரும் கரையேறிச் சுகமாய் வந்துசேர்ந்தோம், உன் பெருமையைச் சொல்ல வல்லவர் யாவர்? நான்செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்து, அன்றுமுதல் தானும் ஸ்ரீஹரிபக்தியிற் சிறந்தவனாய்க் குணவதியாராகிய தன் பத்நியாரோடும் மக்களோடுங்கூடி இனிது வாழ்ந்துகொண்டிருந்தான் என்று சொல்லி, மேலே குபாராபாயி வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

குணவதிபாயி சரித்திரம் முற்றிற்று.

---

## ௭௫-வது குபாராபாயி சரித்திரம்.

பூர்வகாலத்தில் சரவாகநன் என்னும்பெயருள்ள ஒரு அரசனிருந்தான்; அவன் சபையில் இனிவரும் காரியத்தை முன்னையறிந்து சொல்ல வல்லவராகிய புரோஹிதர் ஒருவரிருந்தார்; அவருக்கு ஒருபுதல்வியுண்டாக, அந்தப் புதல்விக்குக் குபாராபாயியென்று பெயரிட்டு அன்போடு வளர்த்துவருங்காலத்தில், குபாராபாயியார் தமது இளமைப்பருவ முதற்கொண்டு, ஸ்ரீஹரிபக்தியிற்சிறந்தவராய், ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இவர்க்கு யவ்வந பருவம் வந்தது. இந்தச் செய்தியை, இளமைப் பருவத்திலேயே இவரை மணஞ்செய்துகொண்ட மாப்பிள்ளை வீட்டார் அறிந்து, இவரை அழைத்துக்கொண்டுபோக வந்தார்கள். அழைத்துக்கொண்டு போகவந்த சங்கதியை இவர் அறிந்து, மனவருத்தத்தோடு ஆலோசிக்கிறார். எப்படியென்றால், நமது சுற்றத்தார் என்னை யழைத்துக் கொண்டுபோய் என் கணவனிடத்தில் சேர்த்தால் எனக்குக் கிடைக்கும் லாபம் விஷயாநுபவம், அந்த விஷயாநுபவத்தால் மக்கட்பேறு உண்டாகும், அதனால் உண்டாகிற துன்பங்களுக்கு ஒரு எல்லையில்லை, அந்தத் துன்பமிகுதியால் நமக்கிருக்கிற ஹரிபக்தியும் குறையும், அப்படிக் குறைவதனால் மேலே நற்கதியும் லபிக்காமற்போகும்; இதற் கென்னசெய்யலாமென்று பலவாறு நினைந்து வருந்தியிருக்கும்போது, வீட்டைவிட்டு வெளிப்படுவதே நன்மையென்று ஒருமுடிவான எண்ணமுண்டாயிற்று. அப்படியே இவர் நடுராத்திரியி லெழுந்து யாருக்குந் தெரியாமல் வெளியேவந்து, ஸ்ரீஹரி தியானஞ்செய்துகொண்டே நகர்வாயிற் கதவினருகே நின்று, கதவு மூடப்பட்டிருப்பதைக்கண்டு, ஸ்ரீபகவானை நினைக்க, அவர் ஒரு பெண்ணுருக்கொண்டு வந்து கதவைத் திறந்தவுடனே, இவர் வெளியே வந்து, மனமகிழ்ச்சியோடு, தம்மீதிருந்த ஆபரணங்களெல்லாவற்றையுங் கழற்றி மடியில் வைத்துக்கொண்டு ப்ருந்தாவனத்துக்குப்போய், யமுநாநதியில் சிரகாட் என்னும் துறையில் நீராடி, அங்கேயிருந்த சாதுக்களுக்குத் தமது ஆபரணங்களைக் கொடுத்துவிட்டு, கோயிலினுள்ளே

பிரவேசித்து, ஸ்ரீகண்ணபிரானைக்கண்டு, அஞ்சலிசெய்து, ஓ பகவானே! தேவரீர் இன்று அடியேனை இந்த ஜன்மபந்தத்தினின்றும் நீக்கி ரக்ஷிக்கவேண்டும் என்று சொல்லிச் சாஷ்டாங்கமாக வணங்கினார். பிறகு ஒரு ஏகாந்த ஸ்தலத்திலிருந்துகொண்டு, பகவானே! உனது திவ்ய விக்ரஹத்தைக்காண விரும்பினேன், சேவைசாதித்தருள வேண்டுமென்று ப்ரார்த்திக்க, பகவானானவர் இவர் மனநிலையைக்கண்டு, இவரது தியானத்தி லெழுந்தருளிச் சேவைதந்தருளி, நீ வருந்தவேண்டாம், ராதாகுண்டத்தை யடைந்து சுகமாக வாழ்ந்துகொண்டிரு என்று சொல்லி மறைந்தார். உடனே இவரும் ராதாகுண்டத்தையடைந்து, அங்குள்ள ஸ்ரீகண்ணபிரான் நாள்தோறும் உணவுகொண்டு வந்து கொடுக்க, உண்டு மகிழ்ந்திருந்தார். இப்படி யிருக்க, தந்தையானவர் இவரை வீட்டிற்காணாமல் பல இடங்களிலும் தேடிக்கொண்டேவந்து, ராதாகுண்டத்திற்கண்டு, குழந்தாய்! நீயிங்கே தனியே வந்திருப்பதற்குக் காரணமென்ன? உன் கணவனுக்கு என்ன சொல்லுவேன்? பருவம் வந்தபிறகு நீ யிப்படி தனிமையாயிருப்பது எமக்கெல்லாம் குறைவல்லவா? நமது குலத்துக்குத் தகாத காரியம் செய்தாயே என்று இப்படிச் சொல்லுகிற தந்தையாரைக் குபராபாயியார் நோக்கி, உமக்கு அறுபது வயதாகியும் நீர் இன்னும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்து பிறவிக்கடலைக்கடக்க முயற்சிசெய்யாமல் இல்லறவாழ்வில் உழன்றுகொண்டிருக்கிறீர், ஸ்ரீஹரிபக்திசெய்து ஈடேற நினைத்திருக்கிற என்னையும் கெடுக்க முயல்கின்றீர், இது உமக்குத் தகுதியல்ல, என்னைவிட்டு, நீர் ஹரிநாமஸங்கீர்த்தனம்செய்து ஈடேறக் கடவீரென்று சொன்னார். இப்படிக் குபராபாயியார் சொல்லுவதைக் கேட்ட தந்தையார் மனமகிழ்ந்து, என் தாயே! அப்படியே செய்கிறேன், நீயிந்தக் காட்டைவிட்டு நமது வீட்டிலிருந்து ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருக்கவும், வாவென்றழைக்க, ஸ்ரீகண்ணபிரானும் இவரை நோக்கி, உன் தந்தையின் விருப்பப்படி வீட்டிலிருந்துகொண்டு இடைவிடாமல் என்னை ஸ்மரித்துக்கொண்டிருப்பாயாக வென்று நியமிக்க, இவரும் தந்தையாரோடு சென்று மனையையடைந்து, ஹரிபூஜை சாதுபூஜை முதலானவற்றைப் பகற்காலத்திலும், ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தனத்தை இராக்காலத்திலும் செய்துகொண்டிருக்குங்காலத்தில், இவர் செய்யும் ஹரி பஜனையை யெல்லாரும் வந்து கேட்டு ஆநந்த பரவசராய் மகிழ்கின்றார்கள் என்பதை அந்த ஊரரசன் கேட்டுப் புரோஹிதரை வரவழைத்து, உமது புதல்விசெய்யும் ஹரிபஜனை மிகவும் செவிக் கின்பமாயிருப்பதாகக் கேள்விப்பட்டேன், ஆகையால் நானும் ஒரு நாள்வந்து அந்தப் பஜனையைக் கேட்டு ஆநந்திக்க விரும்பினேன் என்றுசொல்லி, ஒருநாள் இராக்காலத்தில் புரோஹிதர் வீட்டுக்குப்போய், குபராபாயியார்செய்யும் பஜனையைக் கேட்டு ஆநந்தித்ததுமன்றி, இவர் கட்டழகைக் கண்டு மோஹித்து மெய் மறந்து நிற்க, இவனுக்கு ஒரு கன வுண்டாயிற்று; அதில் ஒரு நதிபெருகி யோடுவதாகவும், அந்த நதியின் அக்கரையில் குபராபாயியார் இருந்துகொண்டு, பாவீ! நீ இக்கரைவந்து சேரக்கடவாயென்று

அழைப்பதாகவுங்கண்டு அஞ்சி, இந்தக்கனவின் ப்ரயோஜனமும் அர்த்தமும் என்னவென்று ஆலோசித்து, இப்போது நாம் கனவிற்பார்த்த நதி, பிறவிக் கடல், குபாராபாயி முக்திகாந்தை, அவள் நிற்கும் அக்கரையே முக்தி, நாம் பிறவிக் கடலின் இக்கரையி லிருக்கிறோம், நம்மை இந்தப் பிறவிக் கடலைக் கடந்து அக்கரையாகிய முக்தியை யடைந்து சுகிக்கும்பொருட்டு அழைக்கிறாள் என்று தீர்மானித்து நிற்குமளவில், அரசனுக்கு மெய்ஞ்ஞானம் உண்டாகி, குபாராபாயியாரைத் தான் விரும்பினதைப்பற்றி அநுதபித்து, பயபக்திகளோடு திருவடி வணங்கி, உம்மிடத்தில் நான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்ததுமன்றி, உபதேசித்து என்னை யீடேற்ற வேண்டுமென்று தோத்திரம் செய்து, குபாராபாயியாரால் உபதேசிக்கப் பெற்று, தன் அரண்மனையை யடைந்து, நாள்தோறும் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்து, ஹரிபக்தனாய் வாழ்ந்திருந்தான் என்று சொல்லி, மேலே கிரிதரலால் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

குபாராபாயி சரித்திரம் முற்றிற்று

---

# ௪௬-வது கிரிதரலால் சரித்திரம்.

க்ஷேத்ரங்களெல்லாவற்றிலும் மிகவுஞ் சிறந்ததாகிய ப்ருந்தாவனம் என்னும் திவ்யக்ஷேத்ரத்தில், கிரிதரலால் என்னும் பெயருள்ள ஒருவர் முற்காலத்திலிருந்தார். இவர் பரமபக்த சிரோமணியாயும், மெய்ஞ்ஞானம், நல்லொழுக்கம் முதலிய உத்தம குணங்களுள்ளவராயும், ஸ்ரீ ஹரிபக்தராயும், பூததயையுள்ளவராயும் இருந்தார். இவர் நாள்தோறும் சாது பூஜை செய்வதில் மிகவும் விருப்பமுள்ளவர். காலில் சிறு சதங்கை கட்டிநின்று, கையில் தம்புரு பிடித்து, சங்கீதசாஸ்திரத்தின் விதிப்படி நடந்துக்கொண்டு ஹரிபஜனை செய்வது வழக்கம்; ஒருநாள் இவர் ஸ்ரீ கண்ணபிரானது திருக்கோயிலில் பிரவேசித்துப் பஜனை செய்யத் தொடங்கும்போது, அங்கே வந்து கூடின சாதுக்களெல்லாரும் முற்காலத்தில் ஸ்ரீ கண்ணபிரான் செய்தருளின ராஸக்ரீடையைக் கீர்த்தனத்தி லமைத்துப் பாடும்படி ப்ரார்த்திக்க, இவர் அப்படியேயாகட்டுமென்று சொல்லி, அதற்குத் தகுந்த ஆடை வீட்டி லிருக்கின்றது, போய் எடுத்துவரலாமென்றால் நேரஞ்செல்லுமே யென்று ஸ்ரீ கண்ணபிரானுக் கெதிரே நிற்க, ஒரு பீதாம்பரம் ஆகாயத்திலிருந்து இவர் கைக்கு நேரே வர, இவர் அதை யேற்றுக்கொண்டார். இதைக்கண்ட சாதுக்களெல்லாரும் இவரது பக்தியையும் கண்ணபிரானுடைய பெருங்கருணையையும் குறித்துக் கொண்டாடினார்கள். பிறகு இவர் அந்தப் பீதாம்பரத்தையுடுத்து, சாதுக்கள் நியமித்தபடியே ராஸக்ரீடைக் கீர்த்தனத்தைப்பாட, கேட்டவர் யாவரும் ஆனந்த சாகரத்தில் மூழ்கினார்கள். மற்றொருநாள் ஒரு பைராகியானவர் துவாதச நாமங்களையும் தரித்து, அவ்வூர்ப் புறத்திலிருந்து வரக்கண்டு,

அந்தப் பைராகியின் திருவடி விளக்கி, ஸ்ரீபாததீர்த்தம்கொண்டு, மனமகிழ்ந் திருந்தார். இதைக்கண்ட யாவரும் கோவங்கொண்டு, இவன் பிணம்பட்ட தீரையுண்டான், இவன் வேதியனல்லன், இவன் இனி வேதமோதத் தகுந்த வனுமல்லன் என்று நிந்தித்துப் பேசினதைக் கிரிதரர் கேட்டு, இவர் இவ் வுலகத்துக்குநன்மைசெய்ய வந்தவர், இறப்பும் பிறப்பு மில்லாதவர், இவரை நீங்கள் நிந்திக்கத் தகாது என்றார். அதைக் கேட்டவர்கள், நீர் பேசுகிற வார் த்தைகளால் ப்ரயோஜநம் ஒன்றுமில்லை, இந்தப்பிணத்தைப் பிழைப்பித்தால் உம்முடைய ஞானத்தை நம்பலாம், இல்லாத பக்ஷத்தில் உம்மை ஜாதியிலிரு ந்து நீக்கிவிடுவோ மென்றார்கள். அதைக்கேட்ட கிரிதரர் ஸ்ரீகண்ணபிரானைத் தியானித்துக்கொண்டே, அவர்கள் கொண்டுவந்த பிணத்தை நோக்க, அந்தப் பிணமா யிருந்தவன் உயிர் பெற்றெழுந்தான். எழுந்தவன் எதிரேயிருக்கிற கிரிதரரை வணங்கிக் கண்ணபிரானைத் தியானித்துக்கொண்டே தன் ஊருக்குப் போய்விட்டான். வந்திருந்த சாதுக்களெல்லாரும் தாசரைப்புகழ்ந்துகொண் டாடி வணங்கி, ஸ்வாமீ! தேவரீருடைய பெருமையைப் புகழவல்லார் யாவர்? ஒருவரு மில்லை யென்று தோத்திரம் செய்து தந்தம் இடங்களுக்குப் போய் விட்டார்கள். கிரிதரர் தமது வழக்கம்போல ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து கொண்டு இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே பலக்புகார் வைபவ த்தைச் சொல்லத் தொடங்கினார்.

கிரிதரலால் சரித்திரம் முற்றிற்று.

## ௭௭-வது பலக்புகார் சரித்திரம்.

பூர்வகாலத்தில் பலக்புகார் என்னும் பெயருள்ள துருக்க அரசன் ஒரு வனிருந்தான்; இவன் பதினெட்டு லக்ஷம் குதிரைகளுள்ளவன்; ஆயிரத்தறு நூறு என்னுந் தொகையையுடையவரும் அரம்பைப் பெண்கள்போன்ற கட் டழகுடையவரும் ஆகிய மனைவியரை யுடையவன்; தன்குடை நிழலில் வா ழும் உயிர்களுக்கு ஒரு துன்பமுண்டாகாதபடி காத்தருளுவோன்; இப்படிப் பட்ட உயர் குணங்க ளெல்லாவற்றையும் உடையவனுனும் மாதர் மேல் அதிக மோஹமுள்ளவனா யிருந்தான். இப்படி யிருக்குங்காலத்தில், ஒருநாள் தன் எட்டு மந்திரிகளையும் அழைப்பித்து, அவர்களை நோக்கி, எனக்கு நற் கதி யடையும் விருப்ப முண்டா யிருக்கின்றது, அதற்கு உபாயம் யாதோ அதனை நீங்கள் ஆராய்ந்து சொல்லவேண்டுமென்று சொல்ல, அவர்கள் ஆலோசித்து, ஓ மஹா ப்ரபுவே! காசீ க்ஷேத்ரத்தில், கபீர்தாச ரிருக்கிறார், அவர் திருவடியை ஆசிரயித்தால் நற்கதி யடையலாமென்று சொல்லி, கபீர் தாசருடைய மஹிமையையும் சொன்னார்கள். அதைக்கேட்ட அரசன் மன மகிழ்ந்து, ஒருநாள் காசிநகரத்துக்குவந்து, கபீர்தாசருடைய மனைக்குள்ளே பிரவேசித்து, தாசரை அடிவணங்கிநின்று, அடியேனைக் கடைத்தேற்றவே

ண்டுமென்று ப்ரார்த்திக்க, தாசரானவர் அரசனுடைய ப்ரார்த்தனைக்கிரங்கி
அவனுக்கு ஸ்ரீராமதாரக மந்த்ரத்தை உபதேசித்து அதை அநுஷ்டிக்கும்
விதத்தையுஞ் சொல்லி விடைகொடுக்க, அவனும் வணங்கி விடைபெற்றுத்
தன் ஊருக்குப் போய், தாசர் சொன்னபடி ஸ்ரீராம நாமத்தை அநுஷ்டிக்கா
மல் சிலநாள் கழித்தான். பிறகு ஒருநாள், இவன் படுத்து நித்திரைசெய்கிற
கட்டிலை அலங்கரித்த தாசியானவள், அந்தக் கட்டிலின் படிமேல் உட்கார்
ந்து, கட்டிலின்மேல் தலைசாய்த்து நித்திரை செய்தாள். அப்படி அவள் படு
த்து நித்திரை செய்யும்போது, அரசன் வந்து பார்த்து மிகவுங் கோபங் கொ
ண்டு, சேவகரைக்கொண்டு நான்கு சவுக்குகள் துணிக்கைகளாய்த் தெறிக்கு
மளவும் மாறிமாறி யடிக்கச்செய்தான். அந்த அடிகளால் தன் உடம்பு முழு
தும் ரத்தம் பெருகியோடக் கண்டும் அந்தத் தாசியானவள் துன்பப்படாமல்
நகைத்துக்கொண்டிருந்தாள். இதைக் கண்ட அரசன் அதிசயித்து அவளை
நோக்கி, நீ யேன் நகைத்தாயென்று கேட்க அவள் அவனை நோக்கி, ஓ மஹா
ப்ரபுவே! உனது புஷ்பசயநத்தினருகே சற்று நேரம் மெய்மறந்து நித்திரை
செய்த எனக்கு இந்தத் தண்டனை யுண்டானபோது, அந்தப் புஷ்பசயநத்
தின்மேல் எப்பொழுதும் படுத்து நித்திரைசெய்கிற உமக்கு எப்படிப்பட்ட
தண்டனை கிடைக்குமோ வென்பதைக் குறித்து நகைத்தேன் என்று அச்ச
மில்லாமல் மறுமொழி சொன்னாள். அவள் இந்த ப்ரகாரம் சொல்லக்கேட்ட
அரசன், உடனே ஞானவானாகி, தனது சிறந்த சம்பத்தையெல்லாம் வெறு
த்துத் தனியனாகி நகரத்தைவிட்டு நீங்கும்போது, தன்னைப் பின்தொடர்ந்த
வர்களை நோக்கி, நான் இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையைப் பொய்யென்றறிந்து
துறந்துபோகிறேன், நீங்கள் என்னைத் தொடர்ந்து வருவதில் உங்களுக்குப்
ஒரு பிரயோஜனமுமில்லையென்று சொல்லி நிறுத்திவிட்டு, ஸ்ரீராமநாமத்தை
யுச்சரித்துக்கொண்டே ஒரு ஆரணியத்தை யடைந்தான்; அவ்விடத்தில்
நான்கு நாள்வரைக்கும் தங்கியிருக்க, ஸ்ரீபகவானானவர் தமது திவ்யாயுதங்க
ளாகிய சங்க சக்ராதிகளோடும் இவ்வரசனுக்கு ப்ரத்யக்ஷமாகி, அபயந் தந்து
மறைந்துபோனார். பிறகு சாதுக்களோடுகூடி, பதிதாகங்களைப் பொறுத்து,
ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனங்களையும் குருநுபவத்தையும் கேட்டுக்கொண்டிரு
ந்தான். இப்படியிருக்கும்போது அவ்விடத்தில் ஒரு பக்கிரானவர் வாழ்ந்து
கொண்டிருப்பதை யறிந்து அவரிடத்தை யடைந்தான்; அந்தப் பக்கிரான
வர் நெடுநாளாய்ப்பகவத் தியானம் பண்ணிக்கொண்டிருப்பதனால் அவருடைய
பக்திக்கு ஸ்ரீ பகவானானவர் திருவுளங் கனிந்து, அவர் பசி தணிந்திருக்கும்
பொருட்டு நாள்தோறும் இரண்டு அப்பங்களும் கீரையும் அருள் செய்வது
வழக்கம். ஆகையால் அன்றும் அப்படியே இரண்டு அப்பங்களும் கீரையும்
பகவானால் அருள்செய்யப்பெற்ற அந்தப் பக்கிரானவர் அவற்றை உண்ணப்
போகிற சமயத்தில் இந்த அரசன் வரக்கண்டு, நீ யார், நீ யெத்தனை
நாளாக இந்த வேஷங்கொண்டிருக்கிறாய் என்று கேட்க, நான் க்ஷீராப்திநாத
னாகிய பகவானை நம்பி இந்த வேஷம்பூண்டு எட்டுநாளாயிற் றென்றான்.

இதைக் கேட்ட பக்கிரானவர், நீ நல்லவன் என்று சொல்லி விட்டு, இவனை நாம் நம்மிடத்தில் சேர்ப்போமானால் நமது இரண்டு அப்பத்தில் இவனுக்கு ஒரு அப்பம் கொடுக்கவேண்டி வரும் என்று மனத்தில் ஆலோசித்து, அரசனை நோக்கி, நீ நூதனமான பக்கிராதலால் இங்கிருக்கவொண்ணாது, வெளியே போவென்று சொல்ல, அரசனும் அப்படியே வெளியேவந்து தங்கியிருந்தான். அப்போது ஸ்ரீலக்ஷ்மீ நாதராகிய பகவானானவர் பெரியபிராட்டியாரை நோக்கி, என் அடியானொருவன் எட்டு நாளாகப் பசிதாகங்களைப் பொறுத்து என்னையே தியானித்துக்கொண்டிருக்கிறான், அவனுக்கு நல்ல உணவு கொண்டுபோய்க் கொடுத்துவாவென்று நியமிக்க, அப்படியே பிராட்டியாரும் ஒரு பொற்கலத்தில் சிறந்த வுணவையேந்திக் கொண்டுபோய் அரசனாகிய பலக்புகாரை நோக்கி, இந்த வுணவை யுண்ணக்கடவாயென்று சொல்ல, அரசன் அந்தப் பிராட்டியாரை உற்றுநோக்கி, இவர் லோகமாதாவாகிய திருமகளே யென்று துணிந்து, அவரை வணங்கி, அவர் அளித்த அமுதைப் பெற்று உண்டு பசியாறி மகிழ்ந்திருந்தார். இதைக் கண்ட பக்கிரானவர் மனம் பொறுக்காமல், பகவானானவர் எட்டுநாளாகத் துறந்திருப்பவனுக்குப் பொற் கலத்தில் சிறந்த இனிதாகிய அமுதத்தைக் கொண்டுவந்து உண்பித்தார், நான் நெடுநாளாகத் துறவியாய்த் தம்மையே பஜித்துக்கொண்டிருக்கிறேன், எனக்குத் தினந்தோறும் இரண்டுரொட்டியையும் கீரையுங்கொடுக்கிறார், இப்படி வஞ்சனை செய்வது இந்தப் பகவானுக்குத் தகுமோ? இனி இவர் கொடுக்கிற அப்பங்களை நான் உண்ணமாட்டேனென் றுசொல்லி, மனவருத்தத்தோடு நித்திரை செய்யும்போது, அந்தப் பக்கிருடைய கனவில் பகவானானவர் ஒரு பக்கிர் வேஷம்பூண்டு வந்து, எதிரே நின்று, இவன் அரசனாயிருந்து சகல சம்பத்தோடும் வாழ்ந்திருந்தவன், இவன் அப்படிப்பட்ட பெருஞ் செல்வத்தை யெல்லாம் வெறுத்து என்னிடத்தில் அன்பு செய்து தியாகித்து வைராக்ய சீலனாயிருக்கிறான், நீ சாதாரண மனிதன், ஆனால் நீயும் என்னை நம்பிப் பஜித்துக்கொண்டிருக்கிறாய், நீங்களிருவரும் என்னிடத்தில் பக்தி செய்வதில சமானமானவர்களாயிருந்தாலும், உங்களுடைய பூர்வாசிரம நிலைகளுக்குத் தகுந்தபடியே உங்களிருவருக்கும் உணவளிப்பது எனக்குக் கடமையாதலால் இப்படிச் செய்தேன், இதைக்குறித்து நீயென்னை வெறுத்துக் கொள்ளத் தகாதென்று சொல்லி மறைந்தார். உடனே பக்கிரானவர் விழித்தெழுந்துவந்து, பலக்புகார் திருவடியில் வீழ்ந்து வணங்கிப் பலவகையாய்த் தோத்திரம் செய்தார். பிறகு பலக்புகார் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போகும்போது, ஒரு பெரிய நகரத்தைக் கண்டு, அதனுள்ளே பிரவேசித்து, அங்கிருந்த ஒரு மடத்தில் அநேகம் பக்கிர்கள் இருக்கப்பார்த்து, அவர்களைக்கிட்டும்போது, அவர்கள் இவரைப் பார்த்து, இவன் உண்மையான பக்கிராயிருந்தால் இவன் கையில் ஜபமாலை முதலிய சின்னங்களிருக்கவேண்டுமல்லவா? அவைகளில்லாமையால் இவனை நாம் சேர்க்கக் கூடாது என்று ஆலோசித்து, உள்ளே வரவேண்டாமென்று தடுக்க, இவரும் வெளியேவந்து தங்கி

யிருந்தார். அப்போது, கருணைக்கடலாகிய பகவானானவர் ஒரு சிறந்த பக்கீர் வேஷம் கொண்டுவந்து, மடத்திலிருந்த பக்கீர்களை நோக்கி, பலக்புகார் போலத் திரிகரண சுத்தியுள்ளவர்களும், வைராக்ய சீலர்களும், நிஷ்டை ஜீவகாருண்ணிய முதலானவையுள்ளவர்களும் இவ்வுலகத்திலிருக்கமாட்டார்கள். ஆகையால் அந்தப் பலக்புகாருடைய மனத்தில் ஜபமாலை முதலானவைகள் அமைந்திருக்கின்றனவென்று சொல்லி விலகினார். இதைக்கேட்ட பக்கீர்களெல்லாரும் அதிசயித்து, வெளியில் வந்து பலக்புகாரைப் பார்த்து, ஒன்றான கடவுளை இதுவரையும்பூண்டு வாழ்ந்திருக்கிறீரென்று இவரிடத்தில் பக்தியுள்ளவர்களாய், மடத்துக்குள்ளே அழைத்துவந்து, பலவகையாய்த் தோத்திரம் செய்து வணங்கினார்கள். பலக்புகாரானவர் அன்று முதலாகத் தாம் நினைத்தபோதெல்லாம் பகவானுடைய பாதந்தருளிச் சேவை சாதிக்கப் பெற்று, அந்தமடத்தில் இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே ஷேக்பரீத் தாசர் வைபவத்தைச் சொல்லத் தொடங்கினார்.

பலக்புகார் சரித்திரம் முற்றிற்று.

# ௭௮-வது ஷேக்பரீத் தாசர் சரித்திரம்.



முற்காலத்தில் ஓர் நகரில் கணவனைப் பிரிந்த ஒரு மாதுசிரோமணியின் வயிற்றில் ஒரு நற்புதல்வர் அவதரித்தார்; அவருக்கு ஷேக்பரீத் என்று பெயரிட்டு அன்போடு வளர்த்துவருங்காலத்தில், இவருக்குப் பருவம்நிரம்பி அறிவுக்கிளர்ச்சியுண்டாயிற்று. இப்படியிருக்கையில், இவர் ஒருநாள் தமது தாயை நோக்கி, அம்மா! எனக்குப் பகவானைக்கண்டு சேவிக்கவேண்டுமென்கிற விருப்பம் உண்டாயிருக்கின்றது; ஆகையால் அவரைக் காட்டவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இதைக்கேட்ட தாயானவள் இவரை நோக்கி, அப்பா குழந்தாய்! அந்த ஜகந்நாதனாகிய பகவானை யெளிதாகக் காணவொண்ணாது; அநேகம் பெரியோர்கள் அவரைத் தரிசிக்க விரும்பிக் காமக்ரோதாதிகளாகிய உட்பகைவரை வென்றும், காடுகளிற்போய்க் கடுந்தவம் புரிந்தும், வைராக்ய சாலிகளாய்ப் பாலைவனத்திற் பயின்று திரிந்தும், ஸாங்க்யதாரக அமநஸ்கங்கள் என்றும் மந்த்ரலய ஹடங்கள் என்றும் அநேகவேறுபாடுகளோடுகூடின யோகங்களைச் செய்தும், ஆத்ம விசாரணை செய்தும், ப்ரபஞ்ச வாழ்வையும் அந்நபாநாதிகளையும் வெறுத்தும், ஹரிதினமாகிய ஏகாதசி விரதம் முதலானவற்றை நியமமாய் அநுஷ்டித்தும், பல வகையான யாகங்களைச் செய்தும், பலவகையான தாந தர்மங்களைச் செய்தும், எல்லா வுயிர்களையும் தம்முயிர்போலப் பாவித்தும், ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநஞ்செய்தும், இன்னம் அநேகமான வழிகளில் முயன்றும் கடவுளைக்கண்டு உஜ்ஜீவிக்கிறார்கள்; ஆகையால் அந்த மார்க்கங்களில் உனக்கநுகூலமான மார்க்கமொன்றை அவலம்பித்து

நீ அந்தக் கடவுளைக் காணக்கடவாயென்றாள். இப்படி தம் தாயார் சொல்லக் கேட்ட ஷேக்பரீத் தாசரானவர், உடனே வைராக்ய சீலராய், உணவு முதலியவற்றைவெறுத்து, தாயைநோக்கி, அம்மா! நான் அரண்யத்துக்குப்போய்க் கடவுளைக் காண்பேன், நீ எனக்கு ஒரு அடை சுட்டுக் கொடுக்கவேண்டுமென்றார்; அதுகேட்ட தாயார் இவரை நோக்கி, அப்பா குழந்தாய்! அன்னபானாதிகளை வெறுத்த வுனக்கு அடை யாதுக்கு என்று சொல்ல, இவர் என் மனச் சலனம் அற்றொழியுமளவும் என் கையில் ஒரு அடை யிருக்கவேண்டுமென்றார். அப்படியே அந்தத் தாயாரும் ஒரு அடை சுட்டுக்கொடுக்க, அதை வாங்கி, ஒரு வஸ்திரத்தில் முடிந்து, அந்த வஸ்திரத்தைத் தமது வயிற்றிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு வனத்திற் போய், ஒரு மலைமேலேறி, பகவத் தியானம் செய்துகொண்டிருந்தார். பிறகு தமது தியானத்துக்கு இரங்கிப் பகவானானவர் காட்சி கொடுக்கவில்லையே யென்னும் துக்கத்தோடிருக்கும்போது இவருக்குப் பசி அதிகரித்தது, அந்தப்பசிக்குத் தாம்வைத்திருக்கிற அடையை யுண்ணாமல், அங்குள்ள தழைகளைப் பறித்துண்டு பசிதணிந்திருந்தார். இப்படியிருக்கும்போது, அங்கே ஒருசெட்டியானவன் எருதுகளின்மேல் சர்க்கரைப் பொதிகளை யேற்றிக்கொண்டுவர, அவனைத் தாசரானவர் நோக்கி, இவ் வெருதுகளின்மே லிருக்கிற பொதிகளில் என்ன சரக்கு அடங்கியிருக்கிறதென்று கேட்டார். அதற்கு அந்தச்செட்டியானவன் ஏளனமாக இவை மண் பொதிகளென்று மறுமொழி சொல்லிவிட்டு, எருதுகளை யோட்டிக்கொண்டுபோய் ஊரை யடைந்து, பொதிகளை யவிழ்த்துப்பார்த்து எல்லாம் மண்ணாயிருக்கக்கண்டு பயந்து, ஐயோ! அந்தப்பகீர் கேட்டதற்கு உண்மையைச் சொல்லாமல் மண்ணென்று ஏளனமாகச் சொன்னேமே, அந்தப் பாவத்தால் இப்படி நேரிட்டது, அந்தப பகீர் மிகவும பகவத் பக்தியுள்ளவராகவும், மஹானாகவும் காணப்படுகின்றது. ஆகையால் அவரிடத்துக்குப் போய் நமது குறையை நீக்கிக்கொள்ள வேண்டுமென் றெண்ணி, அந்தப் பொதிகளை முன்போலவே எருதுகளின் மேலேற்றிக்கொண்டு தாசரிருக்கும் இடத்துக்கு வர, தாசரானவர் அவனை நோக்கி, முன்போலவே இந்தப் பொதிகளில் என்ன சரக்கு அடங்கியிருக்கிறதென்று கேட்டார். அதற்கு அவன் சர்க்கரைப் பொதிகளென்று மறு மொழி சொல்லிவிட்டு, அங்கே தானே அந்தப்பொதிகளை அவிழ்த்துப் பார்த்து, முழுதும் சர்க்கரையாயிருக்கக் கண்டு, இவர் மஹாத்மாவென்று அதிசயித்து, ஒரு பொற்றட்டில் சர்க்கரையை யேந்திக்கொண்டுவந்து, தாசருக்கெதிரே வைத்து, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்து வணங்கினன். தாசரானவர், ஓ பகவானே! இந்தச்சர்க்கரைச் சுவையைக்காட்டி என் மனத்தை மயங்கச் செய்கிறாயோ வென்று, அதைப் பெற்றுக்கொள்ளாமல், அவ்விடத்தைவிட்டு ஓடிப்போனார். பிறகு செட்டியானவன் தன் ஊரை யடைந்தான். தாசரும் முன்போலவே வந்து முன்னிருந்த இடத்திலேயே பன்னிரண்டு வருஷம் வரைக்கும் உணவில்லாமல் பகவானைத்

தியாகம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்படியிருந்தும் ஸ்ரீகண்ணபிரானானவர் இவர்க்குப் பிரத்தியக்ஷமாக வில்லை. பிறகு இவர் பகவானைக் காணாமையா லுண்டான மனவருத்தத்தோடு மீண்டுவந்து தமது நகரத்தையடைந்து, தாயைக் கண்டு வணங்கி, நடந்த செய்தியைச் சொன்னார். அதைக் கேட்ட தாயானவள், இவரை அருகி லழைத்து, இப்படியல்லவா மரத்தினிலைகளை யுருவினை யென்று சொல்லி இவருடைய சடையைப் பற்றி யிழுத்துத் தலையைக் குலுக்கினாள். அப்போது தாசரானவர், தாயே, தலை நோகிறது, விட்டுவிடு என்றார். அதைக்கேட்ட தாயானவள், இவரை நோக்கி, அப்பா, உன் சடையைப் பற்றி யிழுத்தால் உனக்கு இவ்வளவு சிரமமா யிருக்கின்றதே, அந்த மரத்திலைகளை யுருவினபோது அந்த மரத்துக்கு எவ்வளவு துன்பமுண்டா யிருக்கும், அதை நீ சற்றும் யோசித்தா யில்லையே யென்றும், இந்த ஹேதுவினாலேயே உனக்குப் பகவானானவர் பன்னிரண்டுவருஷ காலமாகச் சேவை சாதிக்கவில்லை யென்றும் சொல்ல, தாசரானவர், தமது தாய் சொன்னது உண்மைதானென்று மனத்தில் ஆலோசித்து, தமது அரையிற் கட்டிவைத்திருந்த அடையை அவிழ்த்துத் தாயின் கையிற் கொடுத்து வணங்கினார்; வணங்குதலும் தாயானவள் ஆசிர்வதித்து விடைகொடுக்கப்பெற்று, மறுபடியும முன்போலவே காட்டிற் போய், தழைகளைப் பறிக்காமல், மரங்களின் கீழே உதிர்ந்து கிடக்கிற சருகுகளைத் தின்று சிலகாலம் தங்கிப் பகவத் தியானம் செய்துகொண்டிருந்தார். அப்படிச்செய்தும் பகவானானவர் இவர்க்குச் சேவை சாதிக்காமையால், இவர் சில கொடிகளைக் கொண்டு தமது காலைக் கட்டி, அந்தக் கால்களை மரத்தின் கிளையில் மாட்டிக்கொண்டு, தலைகீழாகத் தொங்கிக்கொண்டும பகவத்தியானம் செய்துகொண்டும் இருந்தார். இப்படி அநேக நாள் கழிந்தும், பகவானுடைய தரிசனம் இவர்க்குக் கிடைக்கவில்லை. அந்நபானாதிக ளில்லாமையால் இவருடைய சரீரம் வற்றி அசைவறத் தொங்கிக்கொண்டிருந்ததைக் கண்ட பறவைகளெல்லாம், இது உயிர் நீங்கின உடம்பென்று நினைத்து, உடம்பு முழுதும் கொத்தக்கண்ட தாசர், அந்தப் பறவைகள் கொத்துவதனால் தமக்குண்டாகிற துன்பத்தைப் பாராட்டாமல் சஹித்துக்கொண்டு, அந்தப் பறவைகளை நோக்கி, நான் பகவானைக் காணவேண்டுமென்கிற பேராவலுடையேனாதலால், காண்பதற்குக் கருவியாயிருக்கிற கண்களை மாத்திரம் விட்டு, என்சரீரம முழுதும் கொத்தித் தின்று நீங்கள் பசியாறுங்கள் என்றுசொன்னார். அப்படிச் சொல்லியும் பறவைகள் கேளாமல், தம் பசி மிகுதியால், கண்களையும் கொத்தத் தொடங்கின. அப்போது தாசரானவர், ஓ கருணைக் கடலே, ஸ்ரீ கஜேந்திர வரதனே, உன்னைக் காணவேண்டுமென்கிற பேராவலுடையேனுடைய கண்களும் போய்விட்டால் இனி உன்னை யெப்படிக் கண்டு களிகூர்வேன் ? தாயினுஞ் சிறந்த தயாளுவே யென்று தோத்திரம் செய்தார்; செய்தலும், பகவானானவர் திருவுளமிரங்கித் திருமுடி விளங்கவும், குண்டலங்கள் பிரகாசிக்கவும், பஞ்சாயுதங்கள் ஜொலிக்கவும், நான்கு திருத்

தோள்களும், அவற்றி லணிந்த திருத்துழாய் மாலையும், பொன்னுடையும் விளங்க இவருக்கு ப்ரத்யக்ஷமாகி, தமது திருக்கரங்களால் இவரது காற் கட்டை யவிழ்த்து, உடம்பு முழுதும் தடவினவுடனே, இவர் திவ்ய சரீரியாய் விளங்கினார். பிறகு பகவானுடைய ஸ்ரீபாத கமலங்களை வணங்க, பகவானும் இவரைத் தழுவிக்கொண்டார். பிறகு தாசரை நோக்கி, நீ என்னைக் காண விரும்பி இருபத்து நான்கு வருஷம் கடுந்தவம் புரிந்து வருந்தினாய், இனி நீ உன் ஊருக்குப்போய் என்னைத் தியானித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திரு என்று இவருடைய சிரசின்மேல் கையை வைத்தார். பிறகு தாசர் வாழ்த்திக்கொண்டிருக்க மறைந்துபோனார். போனபிறகு தாசரும், பகவான் தமக்குச் சேவை சாதித்த திருவுருவத்தை மனத்தி லமைத்துக்கொண்டு, தமது ஊருக்குப்போய்த் தமது தாயைக் கண்டு, தாயே! உன் அநுக்ரஹத்தால் மேகவண்ணனாகிய பகவானைக் கண்டு, என் துன்பமுழுதும் நீங்கப் பெற்றேன் என்றார். அதைக்கேட்ட தாயும் மிகவும் மனமகிழ்ந்திருந்தாள். பிறகு தாசரும் அன்றுமுதல் பகவந்நாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டும், தம்மை வந்தடுத்தோரையும் ஹரிபக்தராகச் செய்துகொண்டும் இனிது வாழ்ந்திருந்தார் என்றுசொல்லி, மேலே சக்குபாயி வைபவத்தைச்சொல்லத் தொடங்கினார்.

ஷேகபாரீந் தாசர் சரித்திரம் முற்றிற்று

# ௪௩-வது சக்குபாயி சரித்திரம்.

ஸ்ரீ க்ருஷ்ணாநதிக்கரையிலே, கரவீரம் என்னும் நகரத்தில், ஒரு வேதியனிருந்தான். இவனை தன் மனைவி மக்களோடுகூடி வாழும் நாளில், மகனுக்குப் பருவம் வாய்க்கக் கண்டு அவனுக்குச் சக்குபாயி என்னும் பெயருள்ள ஒரு பெண்ணை மணம் புணர்வித்தான்; அந்தச் சக்குபாயி என்னும் பெண்ணணங்கானவர் நன்மை தீமைகளை நாடாமல், எப்பொழுதும் ஸ்ரீ விட்டலப் பெருமானை மனத்திலிருத்தித் தியானித்துக்கொண்டு, மாமிமாமனார் செய்யும் கொடுமைகளை மனத்தில் கொள்ளாமல் அவர்களிட்ட வேலைகளைக் குறைவறச் செய்துகொண்டு, அன்பு, அடக்கம், அருள், பொறுமை முதலாகிய நற்குணங்களுடன் கணவனோடு கூடி வாழ்ந்துகொண் டிருக்குங் காலத்தில், ஒருநாள் அயலார் சிலர் வந்து, அந்த வேதியனை நோக்கி, அறியாத பெண்ணாகிய உன் மருமகளை இப்படி வருத்துவது நன்மை யல்லவென்று சொல்ல, வேதியனும் அவன் மனைவியும், முன்னிலும் அதிகமாகச் சக்குபாயியை வருத்தினார்கள். அதைக்கண்ட சக்குபாயியானவர் விட்டலப்பெருமானைக் குறித்து, ஓ பகவானே, அடியேன் முன்செய்த தீவினையால் இப்படிப்பட்ட மாமிமாமனார் வசத்தில் அகப்பட்டு வருந்துகிறேன்; இவ்வளவு துன்பத்தி லகப்

பாடாத பக்ஷத்தில், இந்த இல்வாழ்க்கையையே சுகருபமாய் நினைத்து, உன்னை மறந்துவிடுவேனென்றுதானே, இவ்வளவு துன்பப்பட வைத்தாய் என்று பலவாறு தோத்திரம் செய்துகொண்டிருந்தாள். இப்படியிருக்கும்போது ஒருநாள், அயல்வீட்டுக்காரியாகிய ஒருத்தி இவளிடத்துக்குவந்து, அம்மா, உனக்குத் தாய் தந்தையர் இல்லையா? உன்னூர் எது? நீ வந்து வெகுநாளாயிற்றே; தாய் தந்தையர் இருந்தால் அவர்களைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையுண்டாகாதா என்றுகேட்க, இவள் அவர்களைநோக்கி, என்னூர் பண்டரிபுரம், ரகுமாயியும் விட்டோபாவும் எனக்கு மாதா பிதாக்கள் என்று சொல்லிவிட்டு மௌனமாயிருந்தாள். பிறகு சிலநாள் கழித்து, பண்டரி யாத்திரை போவோர் சிலர் கிருஷ்ணாநதிக்கரையில் வந்திறங்கி ஸ்நானம் செய்துகொண்டிருக்கும்போது, இந்த சக்குபாயியும், அண்டைவீட்டுக்காரியும் நீர் முகந்துவரப் போனார்கள். அந்தச் சமயத்தில் யாத்திரைக்காரர் மிகவும் இனிமையான ஸ்ரீ ஹரி கீர்த்தனைகளைப் பாடினார்கள். அந்தக் கீர்த்தனைகளைக்கேட்ட சக்குபாயியார், மிகவும் மனமுருகி அண்டைவீட்டுக்காரியை நோக்கி, நீ வீட்டுக்குப் போ நான் அவர்களைப் பின் தொடர்ந்துபோய்ப் பண்டரிபுரத்தைச் சேவிக்கிறேனென்று சொல்லி, அவளை யனுப்பிவிட்டு, யாத்திரைக்காரர் இருக்குமிடத்தில் போய் அமர்ந்திருந்தாள். அண்டைவீட்டுக்காரி போய், இந்தச் செய்தியை, இவளுடைய மாமி மாமனுக்குத் தெரிவித்தாள். அந்தச் செய்தியைக்கேட்ட சக்குபாயி கணவனானவன் மிகுந்த கோபங்கொண்டு, ஆற்றங்கரைக்கு வந்து, அங்கிருந்த சக்குபாயியைக் கூந்தலைப் பிடித்திழுத்து அடித்து வீட்டுக் கழைத்து வந்தான்; வந்து, தாய் தந்தையருக்குத் தெரிவித்தான்; அவர்களும் நிந்தித்தடித்து, ஒரு தூணிற்கட்டி, உணவு முதலியவற்றையும் கொடாதிருந்தார்கள் அப்போது சக்குபாயியார், விட்டலபெருமானை மனத்தில் தியானித்து, பகவானே, உன் உத்ஸவத்தைத் தரிசிக்கப்பெறாமல் நான் மனம் வருந்துவது அழகோ! அடியேன்மீது கிருபை செய்யலாகாதோ வென்று தோத்திரம் பண்ணினார். இவளது தோத்திரத்துக்கு விட்டலபெருமான் திருவுளமிரங்கி, ருகுமாயியை நோக்கி, காவீரம என்னும் ஊரிலுள்ள சக்குபாயி யென்பவள் என்னை யோயவிடாமல் நினைத்துக்கொண்டும் பஜித்துக்கொண்டும் இருப்பவள்; அவளை அவள் கணவன், மாமி, மாமன் முதலானோர் மிகவும் வருத்தியும் வைதும் அடித்தும் ஹிம்ஸை செய்தது மல்லாமல், தூணிற் கட்டிவைத்து அன்னபானாதிகளும் கொடாமலிருக்கிறார்கள்; ஆகையால், அங்கே போய் அவளது கட்டவிழ்த்து மீட்டு வரவேண்டும், நான் போகிறேனென்று சொல்லி, நடுராத்திரியில் சக்குபாயி போலவே உருவம் கொண்டுவந்து சக்குபாயிக் கெதிரே நிற்க, சக்குபாயியார், நீயாரென்று கேட்க, பகவானானவர், நான் பண்டரிபுரத்துக்குப் போகிறவள், மிகவும் பகவத்பக்தியுள்ளவளாகிய உன்னையும் அழைத்துக்கொண்டு போகவந்தேன் என்றார். அதைக்கேட்ட சக்குபாயியார் பகவானை நோக்கி, நீ என்னை அழைத்துக்கொண்டுபோனால், என் கணவன் முதலானோர் பின்

தொடர்ந்து கடிந தண்டனை செய்வார்கள், ஆகையால் நான் உன்னோடு வரத்தகாது என்று சொல்ல, பகவானனவர், நீசொல்லுவது சரிதானென்று சக்குபாயியாரைக் கட்டவிழ்த்துவிட்டு, அவரிருந்த இடத்தில் அவருக்குப் பதிலாகத் தாம் கட்டுண்டு நின்று, சக்குபாயியை நோக்கி, நீ பண்டரிபுரத்துக்குப் போகிறவர்களோடு சேர்ந்து போகலாம் என்றார். அதைக்கேட்ட சக்குபாயியார் மிகு மகிழ்ச்சியோடுபோய் விட்டார். அப்படி யிவர் போனபிறகு இங்கே கட்டுண்டிருக்கிற பகவானாகிய பொய்ச் சக்குபாயியை மாமன் முதலானோர் பதினைந்துநாள் வரைக்கும் மிகவும் ஹிம்ஸை செய்துகொண்டிருக்கும்போது, கணவனானவன் மனமிரங்கி, ஐயோ, இவளை யிப்படி வருத்தினால் இவள் இறந்துபோகவுங் கூடும், அப்படி யிறந்துபோனால் இவளைப்போல நன்மனைவி நமக்கு எங்கே கிடைப்பாள் என்று அன்போடு இவள் கட்டவிழ்த்துவிட்டு, நீபோய் நீராடிச சமையல் செய்யக் கடவாயென் றனுப்ப, சக்குபாயி ரூபங்கொண்ட பகவானனவர், உடனேபோய் நீராடிவந்து சமையல் செய்தழைக்க கணவன், மாமி, மாமன் என்று மூவரும் வந்துண்டு முடிந்தபிறகு, வீட்டு வேலைக ளெல்லாம செய்து, இரவில் கணவனோடு சயனித்துக் கொண்டிருந்தார். இப்படி யிவ்விடத்தில் நடந்துகொண்டிருக்க, பண்டரிபுரத்துக்குப்போன சக்குபாயியார், சந்திரபாகையில் மூழ்கி, விட்டலப்பெருமானைப் பஜித்துக்கொண்டேபோய்க் கோயிலுக்குள்ளே பிரவேசித்து, விடோபாவின் திருக்கோல முழுதும் கண்குளிர நோக்கி, சந்நிதிக் கெதிரே நின்று வணங்கி, திருமேனியைத் தழுவிக்கொண்டு, திருவடியைப் பற்றியிருந்து, அச்சுதா, முகுந்தா, பரமோதாரனே, பச்சைமுகில் வண்ணனே என்று பலவகையாய்த் தோத்திரம்செய்து, பிரதக்ஷிணமசெய்து, ஆநந்தத்தோடு வெளியே வந்து கருட ஸ்தம்பத்தை வணங்கி, பக்தர்கள் பாடுகிற கீர்த்தநங்களைக் கேட்டு, அன்றிரவில் ஒரு பக்கத்தில் நித்திரை செய்துகொண்டிருந்து, மறுநாள், நகரை வலம்வந்து எல்லா விபவங்களையும நோக்கி, விட்டலன் சந்நிதிக் கெதிரே வந்து வணங்கி, பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளில் அழுந்தி, ஓ பகவானே, அடியேனை உன் திருவடியில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ப்ரார்த்திக்கும் சமயத்தில, இவரது உயிரானது உடம்பை விட்டு நீங்கி, பகவானாகிய விடோபாவின் திருவடியில் ஐக்யமாய் விட்டது. உடம்பு சந்நிதிக்கெதிரே விழுந்தது. அப்போது, அங்கிருந்த ஒருவேதியன், இந்த உடம்பைக்கண்டு, இன்னாரென் றறிந்து, சில வேதியர்களோடு ஆலோசித்து, சந்திரபாகா நதிக் கரையில் கொண்டுபோய், அங்கிருக்கிற மயானத்தில் நெருப்பு மூட்டி யெரித்து நீறாக்கினபிறகு, எல்லாருமநீராடி, தத்தம் வீடுகளை யடைந்தார்கள். அப்போது ரகுமாயியார், சக்குபாயியார்க்குப் பதிலாக, என் ப்ராணநாதராகிய பகவானனவர் அவள்போல வுருவங்கொண்டு, குடும்பினியாய் வீட்டுவேலைகள் யாவும் செய்துகொண் டிருக்கிறாரே, இதற்கு என்செய்வதென்று நெருப்பினால் சுட்டெரித்து நீறாக்கப்பட்ட சக்குபாயியாருடைய எலும்புகளைக் க்ருபா த்ருஷ்டியால் நோக்குதலும், சக்கு

பாயியார் பூர்வாநுபத்தோடு எழுந்து நின்றார். அவரை நோக்கி, உத்ஸவம் முடிந்துவிட்டது, இனி நீ உன் ஊருக்குப் போவென்று ருக்குமாபாயியார் நியமித்தார். அதைக் கேட்ட சக்குபாயியார், அப்படியே யாகட்டுமென்று புறப்பட்டுத் தமது ஊராகிய கரவீரபுரத்தில் பிரவேசிக்கும்போது, இவர்போல வுருவங்கொண்டிருக்கிற விட்டலபெருமானையவர், நீர்க்குடங்கொண்டு எதிரே வந்து, இவரைக் கண்டு, உத்ஸவம் முழுதும் நன்றாய்ச் சேவித்து வந்தீரா வென்று கேட்க, இவரும் ஆம், நன்றாய்ச் சேவித்தேன், இப்படியே வருஷந்தோறும் வந்து உதவி செய்யவேணுமென்று பிரார்த்திக்க, பெருமாளும் அப்படியே செய்கிறேனென்று சொல்லி, இவர் கையிற் குடத்தைத் தந்து மறைந்தருளினார். இவரும் நீர் கொண்டு கொண்டு வீட்டில் வந்து புகுந்தசமயத்தில், பண்டரிபுரத்தில் இவரைச் சுட்டெரிக்க, இவளைத் துப்பார்ப்பான் வந்து இவரைக் கண்டு, இறந்து போனவள் இங்கே வந்திருக்கிறாளே, இது என்ன ஆச்சரியமென்று மனத்திலெண்ணிக்கொண்டு, மாமன் மாமிகளை நோக்கி, இவள் பண்டரிபுரத்துக்கு வந்து உத்ஸவம் சேவித்து இறந்துபோக, நான் கண்டு, உங்களுடைய மருமகளென்றறிந்து தகனஞ்செய்துவிட்டு, அந்தச் செய்தியை உங்களுக்குத் தெரிவிக்கவந்தேன், இங்கே இவள் வந்திருப்பதைக் குறித்து யோசித்தால், மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது என்றான். இதைக் கேட்ட மாமன் மாமியார், இவரைத் தூணிற் கட்டி, ஆம் உன்னை நாங்கள் வைது அடித்து, பெரிய கம்பத்திற் கட்டியிருந்தோமே, அப்படியிருக்க, நீ பண்டரிபுரத்துக்கு எப்படிப் போனாய்? அங்கே யிறந்து கிடந்தவள் இங்கே யெப்படி உயிர்பெற்று வந்தாய்? இங்கே வீட்டு வேலைகளையும் குறைவில்லாமற் செய்து வந்தாயே, இதுவெல்லாம் ஒரு மாயா விசித்திரமாய்க் காணப்படுகின்றது, உண்மையைச் சொல்லென்று வற்புறுத்திக் கேட்க, இவர் அந்த மாமியாரை நோக்கி, மாமீ, நீங்கள் என்னைத் தூணிற் கட்டின அன்றிரவிலேயே, யாரோ ஒருத்தி வந்து, கட்டவிழ்த்துவிட்டு, நீ போய்ப் பண்டரிநாதனுடைய உத்ஸவத்தைச் சேவித்து வருமளவும் நான் இவ்விடத்திலிருப்பேனென்று சொல்ல, நான் போனேன், இன்று திரும்பி வரும்போது நீர்க்குடத்தை என் கையிற் கொடுத்து அவள் மறைந்து போனாள், நான் அந்தக் குடத்தில் நீர் முகந்து வந்தேன்; இதுதான் நடந்த செய்தியென்று சொல்லக் கேட்ட மாமி மாமன் முதலானோரெல்லாரும், வியந்து, இங்கே இவள் போல வந்திருந்தது விட்டலப்பெருமானேயென்று இவரது மஹிமையைப் புகழ்ந்து, இவருடைய மஹிமையை யறியாமல் இவரை மிகவும் வருத்தினோமே யென்று அநுதபித்து, இவர் கணவன் முதலானவர்களும் ஹரிபக்தர்களாகி, வருஷந்தோறும் பண்டரிநாதனுடைய உத்ஸவத்தைத் தவறாமற் சேவித்துக் கொண்டு இனிது வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே குபாகும்பார் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

சக்குபாயி சரித்திரம் முற்றிற்று.

# ௮௦-வது குபாகும்பார் சரித்திரம்.

மாரவாட தேசத்தில்; சிதடம் என்னும் ஊரில், குபாகும்பார் என்றொரு குயவர் இருந்தார். இவர், பொறுமை, சாந்தி, தயை, வைராக்கியம் முதலானவைகள் அமையப்பெற்றவர்; அன்றியும் ஸ்ரீ ஹரிபஜனையில் மிகு விருப்புள்ளவர். இவர் தமது மனைவியோடும் கூடி வாழுங் காலத்தில், தினந்தோறும் ஒவ்வொரு பாண்டம் செய்து முப்பது நாளானவுடனே முப்பது பாண்டத்தையும் சூளைபோட்டெடுத்து வைத்துக்கொண்டு, நாளொன்றுக்கு ஒவ்வொரு பாண்டத்தை விற்று, அதனால் வரும் பணத்தில் ஸ்ரீ விஷ்ணு பக்தர்க்கு வேண்டியவற்றைக் கொடுத்துத் தாமும் புசித்து, சுக துக்கங்களைச் சமமாயெண்ணி, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருப்பார். இப்படியிருக்குங் காலத்தில், அவ்வூர்க்கு அரசனானவன், இவர் சூளைபோட்டு ஜீவனம் செய்வதற்காகப் பத்துப் பாண்டம் மாதந்தோறும் வரிகொடுக்கவேண்டுமென்று கட்டளை பிறப்பித்தான். அப்படியே சூளை பிரித்தவுடனே பத்துப் பாண்டம் கொடுத்துவிட்டார். பிறகு பத்துப் பாண்டம் குறையுமே, இந்த மாதம் பத்துநாள் செலவுக் கில்லையே யென்று இவர் கவலை கொள்ளாதபடி விட்டலப் பெருமானானவர் பத்துப் பாண்டம் இவர் சூளையில் அதிகமாயிருக்கும்படி சங்கற்பித்தார். தாஸரானவர் சூளை பிரித்து எண்ணிப் பார்க்கும்போது முப்பது பாண்டமும் சரியாயிருக்கக் கண்டு, அதிசயித்து, விட்டலப்பெருமானே இப்படிச் செய்தாரென்று அறிந்து, எனக்காகப் பகவான் இவ்வளவு பிரயாசை யெடுத்துக்கொண்டாரே யென்று அநுதபித்துக் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்தார். அப்போது விட்டலப்பெருமானானவர் இருநூறு சாது ஜநங்களில் தாமும் ஒருவராகக் கலந்துகொண்டு வந்து, இவ்வூரில் யாராவது அன்ன தானம் செய்வாருண்டோவென்று விசாரிக்கையில், பணக்காரரெல்லாரும் சிறிதும் இரக்கமில்லாமல், குபாகும்பாரைச் சுட்டிச் சொன்னார்கள். அதைக்கேட்ட விடோபாவானவர் சாதுக்களோடு கூடி, குபாகும்பார் வீட்டு வாயிற்படியிற் போய் நின்று, சீதாராம் என்று கூவ, வீட்டினுள்ளேயிருந்த குபாகும்பார் இந்தச் சத்தத்தைக் கேட்டு வெளியே வந்து சாதுக்களை நோக்கி வணங்கி, வாருங்கள் வாருங்கள், நீங்களெல்லாரும் என்னை நாடிவர நான் என்ன தவம் செய்திருந்தேனோவென்று சொல்லி, நீங்கள் வந்தகாரியத்தைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, சாதுக்களெல்லாரும் இவரை நோக்கி, எங்களுடைய பசியைத் தீர்க்க வேண்டுமென்றார்கள். அதைக் கேட்ட குபாகும்பார், அப்படியேயாகட்டும் என்று அவர்களை யிருக்கச்சொல்லி, வெளியேவந்து இத்தனை பேருக்கும் உணவளிப்பது எப்படி யென்றெண்ணி, ஒரு வணிகனிடத்திற்போய், என் வீட்டில் சில சாதுக்கள் வந்திருக்கிறார்கள், அவர்களுக்கெல்லாம் அமுது படைக்கவேண்டும், அதற்கு வேண்டிய பொருள்க

ளெல்லாம் கொடுத்தீரானால், விலை கொடுக்கிறேன் என்று சொல்ல, வணிகன் இவரை நோக்கி, நீர் ஏழை, நீர் எப்படிக் கொடுப்பீர்? அது இருக்கட்டும், நான் ஒரு கிணறெடுக்கவேண்டும், அந்தக் கிணறு தோண்டிக்கொடுத்தால் போதும் என்றான். அதைகேட்ட தாசர் அப்படியே செய்கிறேன் என்று உறுதி சொல்லி, வேண்டிய சரக்குகளெல்லாம் பெற்றுக்கொண்டு போய்ச் சாதுக்களுக்குக் கொடுக்க, அவர்கள் கைக்கொண்டு, இவரை நோக்கி, உமக்கு மிகவும் ஐசுவரிய முண்டாகக் கடவதென்றும், ஸ்ரீ வைஷ்ணவ சேவையும் லபிக்குமென்றும் வாழ்த்திப் போய்விட்டார்கள். மறுநாள் இவர் தாமும் தமது தேவியாருமாகக் கட்டப்பாரை, மண்வெட்டி, கூடை இவைகளை யெடுத்துக்கொண்டு, வணிகனிடத்துக்குப் போய், அவன் காட்டின இடத்தில் கிணறு கல்லத் தொடங்கி, மண்ணைத் தோண்டி யெடுக்கும்போது நீரும் காணப்பட்டது, அதைக் கண்டு வணிகனும் இவர்களும் களிப்படைந்திருக்கையில், இவர் நிற்கு மிடத்தில் நிலமானது குடைவறையாய் அடியற்று இடிந்து விழ்ந்தது. இவரும் அந்த இடி கிணற்றில் வீழ்ந்தழுந்தினார். இதைக்கண்ட இவரது தேவியார், கரைமேலிருந்து ஓலமிட்டலறும்போது, எல்லாரும் அவ்விடத்தில் வந்து கூடி, இவர் கிணற்றில் அழுந்தியிருப்பதையும், மேலே மணலால் மூடப்பட்டுக் கிணறு தூர்ந்திருப்பதையும் கண்டு, இவரை யெடுப்பதற்கு சாத்தியப் படவில்லையே யென்று வருந்தி, அவரவர்களுடைய விதிப்படி யெல்லாக் காரியங்களும் நடக்கின்றன வென்றுதேறி, இவரது தேவியாரை நோக்கி, அம்மா, நீ துக்கிக்கவேண்டாம், எல்லாம தெய்வச செயலேயன்றி வேறல்ல, நம்மால் செய்யக்கூடிய காரியம ஒன்று மில்லையென்று தேற்றி வீட்டுக் கனுப்பினார்கள். பிறகு, கூட்டமாய்க் கூடினவரெல்லாரும், ஸ்ரீ ஹரிதாசருக்கு இப்படிப்பட்ட கதி நேரிடலாமோ வென்றும, பட்கலம் வனையும் குயவன் கிணறுவெட்ட வரலாமோவென்றும, யாராயிருந்தாலும அவரவர் செய்த வினைப்பயனை அநுபவித்தே தீரவேண்டும் என்றும், எப்படிப்பட்ட துன்பங்கள் நேரிட்டாலும் அவைகளைத் தீர்த்தருள வல்லவன் விட்டோபாவேயன்றி வேறொருவனுலாகாதென்றும் இப்படிப் பலவாறாகப் பேசிக்கொண்டு தத்தம் இருப்பிடங்களுக்குப் போய் விட்டார்கள். ஒரு வருஷ காலம கழிந்த பிறகு, அந்தக் கிணற்று வழியாய் வருவோர் அவ்விடத்திலிறங்கிச் சமையல்செய்து உண்டு இராக் காலத்தில் அங்கே தானே படுத்து உறங்கும் வழக்கம் ஏற்பட்டது. அப்படிப் படுத்துறங்குவோர், நிலத்துக்குள்ளே தாளம், மிருதங்கம், வீணை முதலிய வாத்யங்கள் முழுங்கப் பஜனை செய்யும் தொனியைக் கேட்டு அதிசயித்து அரசனுக்கு அறிவித்தார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட அரசன், உடனே அவ்விடத்திற்கு வந்து, அவர்கள் சொன்னபடியே நிலத்தின் கீழ்ப் பஜனைசெய்யும் ஒலியைக்கேட்டு அதிசயித்து, அந்தக் கிணற்று மணலைத் தோண்டி யெடுக்கும்படி ஏவலாளரை யேவினான். அவர்களும் அப்படியே மணலையெல்லாம் தோண்டி யெடுத்தபிறகு, உள்ளே பஞ்சாயுதங்க

ளோடும், சதுர்ப்புஜங்களோடும், ரத்நகிரீட குண்டல கேயூராதிகளோடும் ஸ்ரீ விட்டலப்பெருமானனவர் எழுந்தருளியிருக்கவும், அந்தப் பகவானுக்கெதிரே குபாகும்பார் நின்று ஹரி நாம ஸங்கீர்த்தநம் செய்யவும் கண்டு, அந்தவிட்டல விக்ரஹத்தையும் குபாகும்பாரையும் மேலெடுத்து, மிகவும் அன்போடு வணங்கி, இவர் மனிதர் அல்லரென்று மிகவும் புகழ்ந்துகொண்டாடி, அங்கே ஒரு மடம் ஏற்படுத்தி, அதில் விட்டல விக்ரஹத்தைப் பிரதிஷ்டை செய்து, அரசனேடு அவ்வூராரெல்லாரும் குபாகும்பாருக்குச் சிஷ்டர்களாகி, அளவற்ற திரவியத்தை அந்த மடத்துக் குரிமையாக்கினர்கள். பகற்கால முழுதும் விஷ்ணு பக்தர்களுக்கும் அதிதிகளுக்கும் போஜநமிடுதலாலும் இராக்கால முழுதும் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநத்தாலும் கழித்துக்கொண்டும், வருஷந்தோறும் ஆடிமாதம் கார்த்திகைமாதம் இவ்விரண்டு மாதத்து ஏகாதசிகளில் பண்டரிபுரத்துக்குப்போய் ஸ்ரீ கண்ணபிரானைத் தரிசித்துக்கொண்டும் இனிது வாழ்ந்திருந்தார்கள் என்று சொல்லி, மேலே கமலாகரர் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினர்.

குபாகும்பார் சரித்திரம் முற்றிற்று.

# அக-வது கமலாகரர் சரித்திரம்.

ஸ்ரீ பண்டரிபுரத்தில், கமலாகரர் என்றொருவர் இருந்தார்; அவர்க்கு சுமதி யென்கிற பெயருள்ள மனைவியும், பதுமாகரர் என்கிற பெயருள்ள ஒரு ஐந்து வயது புதல்வனும் இருந்தார்கள். இவர் நாள்தோறும் நதிக்குச் சென்று நீராடி, நித்ய கர்மங்களை முடித்து, அந்த வூரிலுள்ள வீடுகள் தோறும்போய்ப் பிக்ஷையெடுத்துக்கொண்டு தம் வீட்டுக்குவந்து, சமையல் செய்வித்து, திருமாலடியாரை முன்னே புண்பித்து, பிறகு தாமும் தமது மனைவிமக்களோடிருந்துண்டு வாழ்ந்திருந்தார். இப்படியிருக்குங்காலத்தில், புதல்வனேடும் புறப்பட்டுப் பிக்ஷைக்குப் போகும்போது, ஒரு இடத்தில் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தந வொலி கேட்டது; அதைத் தேடி வருகையில், நிவர்த்தியும், ஞானதேவரும், சோபாநதேவரும், முக்தாபாயியாரும், நாமதேவரும், கோராகும்பாரும், சாங்க தேவரும், கபீர்தாசர் முதலான சாதுக்களுங்கூடி, ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு ஒரு பக்கத்திலிருப்பதைக்கண்டு, தாமும் தமது புதல்வனுமாகப்போய், அந்தச் சாது கோஷ்டிக்கெதிரே விழுந்து வணங்கித் துதித்து நின்று, ஸ்வாமிகளே! நான்செய்த தவப்பயனல் உங்களைக் காணப்பெற்றேன், நீங்களெல்லாரும் அடியேன் வீட்டுக்குவந்து அடியோங்களை ஈடேற்றவேண்டும் என்று ப்ரார்த்தித்தார். அப்போது அந்தச் சாதுக்களெல்லாரும் இவரை நோக்கி, தாசரே நீர் அடியாரிடத்தில் பக்தியுள்ளவர் என்பதற்குச் சந்தேஹமில்லை; ஆனல், லௌகிக விஷயத்தில் மிகவும் எளியவர், நாங்கள் சிலருமல்ல, பலராயிருக்கிறேம்,

இத்தனை பேரையும் நீர் திருப்தி யடைவிப்பது வருத்தம்; ஆகையால், நீர் பேசுகிற இந்த வுபசார வார்த்தைகளே எங்களை மிகவும் மனங்களிக்கச்செய்தன; இதுவே போதும் என்றார்கள். அதைக்கேட்ட கமலாகரர், சாதுக்களை நோக்கி, ஸ்வாமிகளே! ஸ்ரீபாண்டுரங்க பகவானும் ரகுமாயியும் அடியேனுக்குத் தந்தை தாயராய் அமைந்திருக்கிறார்கள். ஆதலால் அடியேனுக்கு ஒரு குறைவுமில்லை, அடியேனிடத்தை உமது இடமாகப் பாவித்து சந்தோஷத்தோடு எழுந்தருளி, அடியேன் செய்யும் பூஜையை அங்கீகரித்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, சாதுக்கள் இவருடைய பிரார்த்தனையை மறுக்கமாட்டாமல், ஓ கமலாகரரே! உமதிஷ்டம்போலவேயாகட்டும், நாங்கள் நீராடி வருகிறோம், நீர் முன்னே போகலாம் என்று சொல்ல, இவர் மிகவும் மனக்களிப்போடு விரைந்துபோய்த் தமதிடத்தை யடைந்து, மனைவியாராகிய சுமதியை நோக்கி, பெண்ணே! இன்றைக்கு விசேஷமான பாகவத கோஷ்டிகள் நம்மிடத்துக்கு வருவார்கள், அவர்களுக்கெல்லாம் நல்ல வுணவுகளை யமைத்து வைக்க வேண்டுமென்று சொல்ல, தேவியாரும் அப்படியே யாகட்டுமென்று சொல்ல, தாசர் அந்தச் சாதுக்களை யழைத்து வரப் போனார். வருவதற்கு முன்பே, சுமதி தேவியார், அயல் வீட்டில் தமக்கு வேண்டும் பொருள்களெல்லாம் கடனாக வாங்கிவந்து பாகஞ்செய்து, முடிவில் பாயசஞ் செய்துகொண் டிருக்கும்போது, விறகு பற்றாமற் போக, வேறொரு உதவியில்லாமையால், புதல்வனை யழைத்து, நமது புழக்கடையிலிருக்கிற எருமுட்டைகளிற் சிலவற்றை யெடுத்து வாவென்றேவ, அவன் போய் எடுக்கும் போது, அந்த எருமுட்டைக் குவியலினுள்ளே பதுங்கியிருந்த ஒரு பாம்பானது சீறி யெழுந்து இச்சிறுவனைக் கடித்தலும், சிறுவன் பெருங் கூரலிட்டலறினன்; இந்தச் சத்தத்தைக் கேட்ட சுமதி தேவியார் விரைந்தோடி, மைந்தனைக் கண்டு, விசாரித்துச் செய்தியை அவனாலே கேள்விப்பட்டு, மிகவும் மனங்கலங்கி நிற்கும்போது, மைந்தனும் விஷவேகத்தால் கிறுகிறுத்து விழுந்திறந்தான். அதைக்கண்ட சுமதி தேவியார் பூர்வகாலத்தில் மைந்தனாகிய லோஹிதனை யிழந்துவருந்தின சந்திரமதியைப் பார்க்கிலும் அதிக துக்கமுள்ளவளானாலும், ஹரிதாசர்களுடைய பூஜைக்கு விரோதமுண்டாகாமல், குழந்தையை யெடுத்துக்கொண்டுவந்து தொட்டிலில் வளர்த்திவிட்டு நீராடி, பாயச வேலையையும் முடித்து, சாதுக்களுடைய வரவை யெதிர்பார்த்திருந்தார். இப்படி யிருக்கும்போது, கமலாகரரும் சாதுக்களை அழைத்து வந்து அவருடைய திருவடியை விளக்க, பிறகு சுமதி தேவியாரும் விளக்கினார். அதின் பிறகு சாதுக்களெல்லாருக்கும் ஆசநம் தந்து, அவர்கள் உட்கார்ந்த பிறகு, இலைபோட்டு, கறிவகைகள் பரிமாறி, அமுதுபடைத்து, அதின்மேல் பருப்புப்பெய்து, நறுநெய்வார்த்து, சாதுக்களே! அமுதுசெய்யுங்களென்று பிரார்த்திக்க, அவர்களுள்ளே நாமதேவர், ஸ்ரீகண்ணபிரானைத் தியானித்தார். அவர் தியானிப்பதற்கு முன்னே யெழுந்தருளுகிற ஸ்ரீ கண்ணபிரான் அன்றைக்கு எழுந்தருளவில்லை; அப்போது நாமதேவர் கண்ணபிரான் எழுந்தரு

ளாமைக்குக் காரணமாகிய தடை யேதோ இருக்கின்றதென்றறிந்து, கமலாகரரை நோக்கி, உங்கள் புதல்வனை எங்களோடிருந் துண்ணுதற்கு அழையுங்களென்று சொல்ல, சுமதி தேவியார், அவன் இப்பொழுதுதான் உண்டு தொட்டிலில் உறங்குகிறானென்றார்; அதற்கு நாமதேவர் உமது புதல்வனை விட்டு நாங்கள் உண்ணமாட்டோம்; அவனை யெழுப்பிக்கொண்டு வாருங்களென்று சொல்ல, சுமதி தேவியார், இந்த நாமதேவரை நோக்கி, ஸ்வாமீ! அவனை யெழுப்பினாலும் எழுந்திருக்காமல், மஹாநித்திரைசெய்கிறான், நீங்கள் அமுது செய்யுங்கள் என்றார்; அதுகேட்ட நாமதேவர், வீணையோடெழுந்துநின்று, ஸ்ரீவிட்டலப் பெருமானுடைய திருவடியை நினைத்து, எமக்குக் காட்சிகொடுத்தருளவேண்டும் என்று கையில் தாளத்தை யேந்தி, திருநாம ஸங்கீர்த்தநம் செய்து, ப்ரஹ்லாதவரதா! நீ யெழுந்தருளாவிட்டால் நாங்கள் உண்ணமாட்டோம் என்று சொல்ல, பகவானானவர் எழுந்தருளி அருளோடு இவரைத் தழுவிக்கொண்டு, உன் கருத்தென்னவென்று கேட்க, நாமதேவர், ஓ பகவானே! இந்தச் சுமதி தேவியாருடைய புதல்வன் உறக்கமொழிந்தெழுந்து எம்மோடிருந்துண்ணும்படி அருள்செய்யவேண்டும் என்று திருவடியை வணங்கினார். அப்போது அந்தப் பகவத்க்ருபாவிசேஷத்தால் தொட்டிலிலிருந்த பாலகன் விழித்து, தெளிவோடு தாயை யழைத்து, தாகத்துக்கு விரைவாக நீர் கொண்டுவா வென்றான். அந்தக் குரலைக் கேட்ட சுமதி தேவியார் விரைந்து போய், மைந்தனை யெடுத்து மார்போடணைத்து, உச்சிமோந்து, முத்தமிட்டு, ஹரிதாசர் சந்நிதியிற் கொண்டுவந்து, நாமதேவர் திருவடிமேற் கிடத்தி, நீங்கள் எழுந்தருளினதனால் எங்களுடைய துன்பம் நீங்கிவிட்டதென்று சொல்ல, சாதுக்களெல்லாரும் உமது புதல்வனுக்கு நேர்ந்தது என்னவென்று கேட்க, சுமதி தேவியார், உண்மையைச் சொல்லிவிட்டார். அதைக்கேட்ட சாதுக்கள், இது மிகவும் அற்புதமென்று, நாமதேவரை நோக்கி, நீர் ஸாக்ஷாத் பகவதம்சமே யென்பதற்கு ஐயமில்லை யென்று புகழ்ந்தார்கள். பிறகு புதல்வனோடிருந்து அமுதுசெய்து சந்தனபுஷ்ப தாம்பூலாதிகளைப் பெற்று, கமலாகரரையும் தேவியாரையும் புதல்வனையும் ஆசீர்வதித்த பிறகு, மூவரும் நாமதேவரிடத்தில் உபதேசம் பெற்று, ஹரி நாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டு, இல்லறம் வழுவாமல் நடத்தி, இனிது வாழ்ந்திருந்தார்கள் என்றுசொல்லி, மேலே துக்காராம சுவாமிகள் வைபவத்தைச் சொல்லத்தொடங்கினார்.

கமலாகரர் சரித்திரம் முற்றிற்று.

## ௮௨-வது துக்காராம் சுவாமிகள் சரித்திரம்.

தேகு என்னும் ஊரில் வாழ்வோரும், மராட குலத்தில் அவதரித்தவரும், சாது சேவையில் விருப்பமுடையவரும், இடைவிடாமல் ஹரி நாம ஸ்மரணை செய்பவரும், விசுவம்பரர் என்னும் பெயருள்ளவரும் ஆகிய ஒருவரிருந்தார். இவர் தினந்தோறும் அஸ்தமித்தவுடனே தாளம் வீணை மத்தளம் முதலிய வாத்ய விசேஷங்களோடு, ஹரி பக்தர்களாகிய அநேகருக்கு

முன்னே, பகவத் வைபவத்தை விஸ்தாரமாகப் பிரஸங்கித்துக்கொண்டிருப்பார். இப்படியிருக்கையில் ஒருநாள், இவர் தாயார் இவரை நோக்கி, அப்பா குழந்தாய்! உன் குலத்து முன்னோர்களெல்லாம் வருஷந்தோறும் பாண்டுரங்கனது புராதந ஸ்தலமாகிய பண்டரிபுரத்துக்குப் போவது வழக்கம்; ஆகையால், நீயும் அவ்வாறு செய்தல் நன்மையென்று சொல்ல, உடனே இவர் ஆவலோடெழுந்து, பண்டரியாத்திரை போவோரைப் பின்தொடர்ந்து போய்ப் பண்டரிபுரத்தையடைந்து, சந்த்ரபாகாநதியில் நீராடி, புண்டரீகரைக் கண்டு, அடி வணங்கி, அந்த நகரத்தை வலம் வந்து, கோயிலுள்ளே சாதுக்கள் பாடுகிற கீர்த்தனங்களைக் கேட்டு, ஆநந்த மடைந்து, நிர்மலராகிய பாண்டுரங்க பகவானைக் கண்டு, கண்ணீர்சொரிந்து, பிறகு ஷோடசோபசாரங்களும் செய்து, ஆலிங்கநம் செய்துகொண்டு, பலவகையாய்த் தோத்திரம் செய்துவணங்கி, ஒருநாள் அவ்விடத்தில் தங்கியிருந்து, ஹரிநாம ஸங்கீர்த்தநம் கேட்டு, அங்குள்ள சாதுக்களையும் ஸ்ரீ கண்ண பிரானையும் திருவடி தொழுது விடைபெற்றுத் தாயினிடத்துக்குப் போய் வணங்கி, பண்டரிபுரத்தின் பெருமையெல்லாம் சொல்லி, அந்தப் பகவானுடைய திருவடியின்மேல் என் மனம் செல்லாநின்றது, அந்தத்திருவடியை எக்காலத்திலும் கண்டு களிப்பேனென்று கண்ணீர்பெருக்கினார். தாயாரும் இவரைக் குறித்து மனமகிழ்ந்து, நம்புதல்வனுக்கு நம் முன்னோர்செய்கை யமைந்ததே பெரும் புண்ணியமென்று நினைத்திருந்தார். பிறகு ஒருநாள், விசுவம்பரர் பண்டரிபுரத்துக்குப் போய், சந்த்ரபாகையில் நீராடி, நியமமாகச் சென்று விட்டலமூர்த்தியைச் சேவித்து வாழ்த்தி, தாம் ஒருபொழுதிருந்து, மறுநாள் ஏகாதசியில் உணவில்லாமல் உபவாசமிருந்து, இராமுழுதும் ஹரிகதா சிரவணஞ்செய்து, அதற்கடுத்த மறுநாள் துவாதசி யுதயகாலத்தில் பாரணை செய்து, மூன்றுநாள் அங்கே தங்கியிருந்து நாலாநாள் ஸ்ரீகண்ணபிரானைத் தொழுது விடைபெறுஞ் சமயத்தில், கண்ணீர் பெருக்கிநின்று, பகவானே! நீரைவிட்டுப் பிரிகிற மீனைப்போல உம்மைவிட்டுப் பிரிகிறேன், இனி யெக்காலம் உம்மைக் காணப்போகிறேன் என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, பகவானானவர் இவர்க்கெதிரே யெழுந்தருளி, உன் பக்திக்கு மெச்சினேன்; நான் சர்வ வியாபகனாகையால், நீ உன் ஊரிலிருந்து நினைத்தாலும் அவ்விடத்துக்கு வருவேன் என்றுசொல்ல, விசுவம்பரர், ஓகருணைக்கடலே! உன் சகுண ரூபத்தை என்றும் காண நான் விரும்புகிறேன். இதையன்றி நான் வேறொன்றையும் விரும்பிலேன் என்று சொல்ல, விட்டலப்பெருமானானவர் இவர் சிரமீது கை வைத்து, தமது பரிசுத்தமான திரு நாமத்தை இவர் செவியில் உபதேசித்து, நீ நினைக்கும்போதெல்லாம் உனக்குக் காட்சி கொடுப்பேன், அஞ்சவேண்டாமென்று விடைகொடுத்து ஊருக்கனுப்ப, இவர் அப்படியே ஊருக்குவந்து, கார்த்திகை மாதமுதல் எட்டுமாதமும் பண்டரிநாதனைச் சேவித்து வந்தார்; அன்றியும் பதினாறு ஏகாதசி விரதம் நியமமாய் அநுஷ்டித்துவந்தார்; ஒன்பதா மாசத்தில் பூர்வபக்ஷத்து அஷ்டமி

திதியில் பகவானானவர் இவரது கனவில்வந்து, நீ யெட்டுமாதந் தொடர்ச்சியாய் என்னூருக்குவந்து நியமமாய் என்னைச் சேவித்தாய், ஆகையால் உன்னூருக்கு வந்தேனென்று சொல்லி, ஒரு மாமரச் சோலையில் அமர்ந்திருந்தார். உடனே இவர் கண் விழித்து, அவ் ஊரிலுள்ள வைணவர்க்கெல்லாம் இந்தச் செய்தியைத் தெரிவித்து, நாம் போய், மாஞ்சோலையி லெழுந்தருளியிருக்கிற கண்ணபிரானை, இவ்வூருக்குக் கொண்டு வருவோ மென்று சொல்லி, அவர்களை யழைத்துக்கொண்டு போய், மாஞ் சோலையில் தேடிக் காணாமல் நிற்கையில், அவ்விடத்தில் திருத்துழாய் மணமும் அபீர்மணமும் வீசக்கண்டு, நாம் கண்ட கனவு பொய்த்துப்போகவில்லை; கண்ணபிரான் இவ்விடத்திலிருக்கிறார், இந்த மண்ணைத் தோண்டியானாலும் அவரைக் காண்போம் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, ஆகாசவாணி இவரன்பைக்குறித்து மகிழ்ந்து, விசுவம்பரரே! விட்டலப்பெருமான் வந்தது மெய்யே, அவர் இவ்விடத்திலிருக்கிறார், நீங்கள் நிலத்தைத் தோண்டினால் காணலாம், இனிமேல் உங்கள் வம்சத்தில் வைணவகுலதிலகனாய் ஒருவனுண்டாவான், அவனால் உலக முழுதும் ஸ்ரீஹரிபக்தி மேன்மேலும் ஓங்கி வளரும் என்று சொல்ல, கேட்டவர் யாவரும் ஆச்சரியப்பட்டுக் கைகொட்டி, ஹரி நாமங்களை யுச்சரித்துக்கொண்டே நிலத்தைத் தோண்ட, திருத்துழாயும், அபீர்ப்பொடியும் காணப்பட்டன. அவற்றை விலக்கவே, ஸ்ரீருக்மிணீபிராட்டியாரோடும் கண்ணபிரான் எழுந்தருளி யிருப்பதைக்கண்டு, களிப்படைந்து, அந்த ருக்மிணீ சமேதனான பகவானை யெடுத்துக்கொண்டுபோய், இந்திராயணி நதிக்கரையில் பிரதிஷ்டைசெய்து, பிரதிஷ்டாகாலத்தில் நடத்தவேண்டிய க்ரியைகளெல்லாவற்றையும் வேதோக்தமாய் நடத்தி, சந்நிதிக்கெதிரே நின்று பெருமானைத் தோத்திரம் செய்து, ஒருதுரும்புக்கும் சமானனல்லாத என்னை யொருபொருளாக்கி யெழுந்தருளினதைக் குறித்து நான் என்னென்று புகழப்போகிறேன் என்றார். அப்போது விட்டலப்பெருமான் எழுந்தருளி, உனக்கு வேண்டுமவற்றைச் சொல்லென்று நியமிக்க, விசுவம்பரர், ஸ்வாமீ! அடியேன் உன்னிடத்தில் நீங்காத அன்புடையவனாகவும், என் சந்ததியாரும் அப்படியேயாகவும் அருள் புரியவேண்டும் என்றுகேட்க, அப்படியே பகவானும் வரங்கொடுத்தார். விசுவம்பரர், ஸ்வாமீ! இவ்விடத்தில் தேவரீர் எந்நாளும் வீற்றிருக்க வேண்டும் என்று வணங்கி விடைபெற்றுப் போய்த் தமதிடத்தை யடைந்தார். சில நாள் கழிந்த பிறகு, ஒரு நாள் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஒரு திவ்ய விமானத்தோடு விஷ்ணு தூதர்கள் இவர்க்கெதிரே வந்து, ஓ பகவத் பக்தரே! வைகுண்டத்துக்கு வாரு மென்றார்கள். இவர் பண்டரிநாதனை நோக்கி, அடியேனுக்கு இரண்டு புதல்வரும் மனைவியும் உண்டு; அவர்கள்மீது உனக்குக் கிருபையிருக்கவேண்டும் என்று சொல்லி, விமானத்தின் மேலேறி வைகுண்டத்துக்குப் போய்விட்டார். பிறகு ஹரி, முகுந்தன் என்னும் இரண்டுபுதல்வர்களும் மனைவியும் இவருடைய சரம கைங்கர்யங்களெல்லாம் நிறைவேற்றி, ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்

த்தசபரராய் வாழுங் காலத்தில், இவருடைய பக்திக்கு ஸ்ரீ பாண்டுரங்க பகவானானவர் மகிழ்ந்து, கனவில் எழுந்தருளி, உமக்கு வேண்டியதென்ன? சொல்லுமென்று நியமிக்க, அடியேன் உன் பொன்னடியை யன்றி வேறொன்றையும் விரும்பேன் என்றார். பகவானும், அவரைத் தழுவி மறைந்த பிறகு கனவுதெளிந்து மிகவும் மகிழ்ந்து ஹரிபஜனை செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்கையில், புதல்வ ரிருவரும் தாயாரை வணங்கி தாயே, வீட்டிலுள்ள பொருள்கள் உமக்கு இருக்கட்டும், நாங்கள் அரசனிடத்திற் போய்ச் சேவகம்செய்து பொருள் தேட விரும்பினோம், விடைகொடுக்கவேண்டு மென்றார்கள். அதற்குத் தாயார் பலவிதமாகச் சொல்லித் தடுத்தும் கேளாமையால் விடை கொடுத்தார். உடனே இருவரும் அரசனிடம் போய்ப் போர்ச்சேவகரா யமர்ந்து தாயையும் அழைத்தார்கள். தாயார், பாண்டுரங்கனைப் பிரிந்து போவது எப்படி யென்று நினைத்துக் கண்ணீர் பெருக்கிக் கொண்டு, கோயிலிற் போய், வணங்கித் தோத்திரஞ் செய்து, பகவானே, உன்னை இனி யெக்காலங் காணப் போகிறேன்? என் புதலவரால் உன்னைப் பிரிய நேரிட்டது என்று சொல்லி விடை பெற்று, மருகிமா ரிருவரையும் அழைத்துக்கொண்டு, புதல்வரிடத்துக்குப் போனார். போய், இடைவிடாமல், விடோபாவின் திருவடியை ஸ்மரித்துக்கொண்டிருக்கச் சிலநாட்கள் கழிந்தன. பிறகு ஒருநாள் பகவானானவர் இவர் கனவில் வந்து, நீர் உமது புதல்வரிடத்திலுள்ள அன்பினால் என்னைப் பிரிந்தீரல்லவா? உங்கள்பொருட்டாயல்லவோ நான் உம்மூருக்கு வந்தது? ஆகையால் நீர் உமது புதல்வரைவிட்டு, உடனே என்னிடத்துக்கு வந்துசேரக் கடவீர் என்று சொல்லிப் போய்விட்டார். இவர் உடனே யெழுந்து, மக்களைப் பார்த்து, உங்கள் தந்தை விரும்பினபடியே, ஸ்ரீ கண்ணபிரான் நமது ஊரில் வந்து நிலைபெற்றிருக்கிறார்; இன்று என் கனவில் வந்து ஊருக்கு வரும்படியாய் நியமித்துப்போனார்; ஆகையால் நான்போகவேண்டுமென்று சொல்ல, புதல்வர்கள் நகைத்து, கனவும் உண்மையாகுமோ! நீ போக வேண்டாமென்று தடுத்தார்கள். நாலு நாள் கழிந்த பிறகு, புதல்வர்கள் தாயாரை நோக்கி, விடோபா உமக்குச் சொன்னது உண்மைதானோ வென்று நகைத்து இகழ்ந்தார்கள். அதற்கு அமாபாயியார், பொறுக்காமல் பகவான் சொன்னதைக் குறித்து நீங்கள் இகழலாகாது என்று சொல்லவும் அவர்கள் கேட்காமல் தாயைக் கடிந்துகொண்டார்கள். அப்போது பகவானானவர் அவர்கள்மேல் கோபங்கொண்டு, அமாபாயியாரது கனவில்வந்து நான் உமது கனவில் முன் ஒருதரம் வந்து சொல்லியும் உமது மக்களிடத்திலுள்ள வாஞ்சையால் என்னிடத்துக்கு வராமற்போனீரல்லவா! நாளைக்கு இரண்டு சாமத்துக்குமேல், உமது மக்களிருவரும் இறந்துபோவார்கள், அதின் பிறகு யாரிடத்தில் அன்பு பாராட்டப்போகிறீர் என்று சொல்ல, அமாபாயியார் பதறி யழுது, ஐயனே, என் மக்கள் மரணமடைந்தால், எனக்குச் செய்ய வேண்டிய கடன்களை யார் செய்வார்கள் என்று சொல்ல,

ஸ்ரீகண்ணபிரானானவர், அவரை நோக்கி, நீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டிய தில்லை, உமக்குச் செய்கடன்களை நானே செய்கிறேன் என்று சொல்லி மறையுமுன்னே யெழுந்து, மக்களை நோக்கி, என்சொல்லைக் கேட்காமலும் என்னைப் போகவொட்டாமலும் தடுத்தீர்கள்; ஆகையால், பாண்டுரங்கர் கோலங்கொண்டு, இன்று இரண்டு சாமத்துக்குமேல் நீங்க ளிருவரும் மரணமடைவீர்கள் என்று என் கனவில் வந்து சொல்லிப்போனார் என்று சொல்லவே, மக்க ளிருவரும் நகைத்து, இவருக்கு முதுமைப் பருவ மாகையால் பித்தம் அதிகரித்து வாய்க்குவந்தபடி பிதற்றுகிறாரென்றுநினைத்து, தாயை நோக்கி, தாயே, இன்று நாங்கள் இறப்பது மெய்யே, உன் கையால் அன்னமிடக்கடவாயென்றார்கள். அப்படியே இவர் அழுதுகொண்டே அன்னமிட்டார். மக்களிருவரும் உண்ட பிறகு, தாம்பூலங் கொடுக்குஞ் சமயத்தில் அரசனிடத்திலிருந்து சில தூதர்கள் வந்து, பகையரசர் சேனைகளோடுவந்து நம்மூரைச் சூழ்ந்துகொண்டார்கள், ஆகையால் அவர்களோடு போர்செய்ய உங்களைப் போகும்படி சொல்லச்சொல்லி அரசன் எங்களை யேவினான் என்று சொன்னார்கள். அதைக் கேட்ட இருவரும், நல்லதென்று போர்க் கோலங்கொண்டு சதுரங்க சேனைகளோடும் போய்ப் பகைவரோடு யுத்தம் செய்து, அந்தப் பகைவர்களால் அடிக்கப்பட்டு விழுந்து, நாம் நமது தாய் வார்த்தையைக் கேளாமல் இகழ்ந்ததனாலே இப்படி நேரிட்டதென்று, பகவானை நினைத்து, ஓ கஜேந்த்ர வரதா, ஓ தயாநிதி, எங்களை இப்பொழுது நீயே காத்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, பகவானானவர் திருவுள மிரங்கி, இவர்களுக் கெதிரே தோன்றி, இவர்களைத் தழுவிக் கொண்டு, நீங்கள் ஒளி விசும்பாகிய பரமபதத்துக்குச் செல்லுங்களென்று விடை கொடுக்க, அப்படியே இருவரும் பரமபதமடைந்தார்கள். இந்தச் செய்தியைத் தாயாகிய அமாபாயியார் அறிந்து துக்கசாகரத்தி லழுந்தினார். முகுந்தன் மனைவியானவள், கணவன் பிரிவுக் காற்றாதவளாய் ஸஹகமநம் செய்தாள். (உடன்கட்டை யேறினாள்) பகவானானவர் அவளுக்கும் காட்சி கொடுத்துப் பரந்தாமத்திற் சேர்த்தார். அந்தச் சமயத்தில் ஹரியின் மனைவி கர்ப்பமாயிருந்ததனால் அமாபாயியார், அவளை யழைத்துக்கொண்டு, ஸ்ரீகண்ண பிரான் கோயிலுக்குப் போய், பகவானை நோக்கி, திருவடியைப் பிடித்துக்கொண்டு, குடும்ப நாசம் பண்ணுகின்ற குடிலனே, கொஞ்சமாகிலும் இரக்க மில்லாமல் என் மக்களை மரணமடைவித்தாயே! பக்தவம்சத்தையெல்லாம் அழித்தப்பொருட்டே விருது பூண்டிருக்கிற கேசவா! யான் என் செய்வேன்! இந்த மூப்புக்காலத்தில் என்னை யாதரிப்பவர் யார் என்று பலவாறு புலம்பித் துன்பக் கடலி லழுந்தி வீட்டுக்கு வந்து, மருகியைத் தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டுக் கண்ண பிரான் திருவடியை மறவாமல் ஸ்மரித்துக்கொண் டிருந்தார். இவரது துன்பத்தைப் பாண்டுரங்க பகவானானவர் பார்த்துத் திருவுளமிரங்கி, தமது சகுண ரூபங்கொண்டு இவர்க் கெதிரே தோன்றி, என் துக்கிக்கிறீர்! எந்தக் காலத்தில் எதை யநுபவிக்கவேண்டுமோ அந்தக் காலத்தில் அதை

யநுபவித்தே தீரவேண்டும், இப்பொழுது உமக்கு என்ன பொருள் வேண்டு மென்றாலும் கேளும் தருகிறேன் என்று சொல்ல, அமாபாயியார், ஓ பகவானே, உன்னை யன்றி வேறொரு பொருளும் எனக்கு வேண்டிய தில்லை, ஆனால் நீர் அன்று சொன்னதை மறந்தீரோ என்றார். அதைக் கேட்ட பகவானவர், இவரை நோக்கி, இனி உமக்கு நான் பேரன், திருமகள் உன்மருமகி, நாங்களிருவரும் உமது பணிவிடையைச் செய்துகொண் டிருப்போம், நீர் அஞ்சவேண்டியதில்லை யென்றார். அதைக் கேட்ட அமாபாயியார், நல்லது என்று வணங்க, அது முதல் பகவான் பேரனாகவும் பிராட்டி மருமகியாயும் பணிவிடை செய்துகொண் டிருந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில் அமாபாயியாருக்கு மரண சமயம் வாய்த்தது; அப்போது அவரைப் பகவானானவர் தமது திருத்தொடையின்மேல் படுக்க வைத்து, உயிர் நீங்கினவுடனே அந்த வுயிரைப் பரமபத மடையச்செய்து, சரம கைங்கர்யங்க ளெல்லாவற்றையும் முடித்து, தாய்வீட்டிற்குப் போயிருந்த மருமகிக்கு இந்தச் செய்தியைத் தெரிவித்தலும், அந்த மருமகி, தானும் தன் குழந்தையுமாக வந்து, மிகவும் துக்கித்து, என் அருமையாகிய மாமிக்குச் சமீபத்திலிருந்து உதவிசெய்யாமற் போனேனே யென் றழும்போது, சுற்றத்தா ரெல்லாரும், அவளை நோக்கி, நீயும் உன் பிள்ளையும் இருந்ததானே எல்லாக் காரியங்களும் நிறைவேற்றினீர்கள் என்று சொல்ல, ஹரியின் மனைவியானவள் அதிசயித்திருந்தாள்! அவள் பிள்ளையாகிய விடோபா இது பகவானுடைய திருவிளையாடலென்று தீர்மானித்து, கோயிலுக்குப் போய், கண்ணபிரானை நோக்கி, உன்னை யாசிரயித்திருக்கவொட்டாமல் என் தந்தையரைக் கொன்றாயே! இது வுனக்குத் தகுதியோ! உன் அருகிலும் இருக்கலாகாது என்று சொல்லி, தன் கையிலிருந்த ஆயுதத்தால் மார்பைப் பிளந்துகொண்டு இறக்க வுத்தேசிக்கக் கண்டு, ஸ்ரீகண்ணபிரானவர் ஓடிவந்து அவன் கையைப் பிடித்துக்கொண்டு, வீணாய் என் உயிரை நீக்கிக்கொள்ளுகிறாய்! என்மீது கோவம் கொள்வது தகுதியல்லவென்று கண்ணீர் துடைத்து, வருவது வந்தே தீரும்என்று சொல்லித் தேற்ற, அவன் மனந் தெளிந்து, பகவானை வணங்கி, அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, கண்ணபிரானும் அவனுக்கு நவவித பக்திகளையும் உபதேசஞ்செய்தருளினார். அவன் அந்த உபதேசம் பெற்று, தாயும தானுமாகப் பாண்டுரங்கனைப் பூசித்துவருங் காலத்தில், அவனுக்குப் பதாஜியென்று ஒரு புதல்வன் உண்டானான். இவனும் ஹரிபக்தியிற் சிறந்தவனாயிருந்தான். இவனுக்குக் கான்ஹாயாசங்கரன் என்றொரு புதல்வன் பிறந்தான். இவனுக்குப் போளோபா வென்றொரு புதல்வன் பிறந்தான். இவன் இருபத்து நான்கு வருஷ காலம் பாண்டுரங்க பகவானை நியமமாய்ப் பூஜித்துக்கொண் டிருந்தான். அன்றியும், இவன் தன்னுயிர்போலவே எல்லா வுயிர்களையும் நினைப்பவனும், சாதுபூஜை செய்பவனும், ஸத்யத்தை யுடையவனும், சாந்த சீலனும் ஆகி யிருந்தான். இப்படி யிருக்குங்காலத்தில் ஒருநாள் உருத்திரன், திருமால், பிரமன் என்னும்

மூவரும் இவன் கனவில் தோன்றி, உன் விருப்பத்தைச் சொல்லென்று கேட்க, எனக்கு நன்மகன் வேண்டும் என்றான். அப்படியே மூவரும் வரந் தந்து போனார்கள். உடனே தன் மனைவியாகிய கனகாயியை யெழுப்பி, பகவான் சொன்ன செய்தியைச் சொல்லி மகிழ்ந்து வாழ்ந்திருக்குங் காலத்தில், சிலநாள் கழிந்த பிறகு, கனகாயியார் வயிற்றில், ருத்திரமூர்த்தி வரத்தால் சாம்பஜியென்றொரு புதல்வன் பிறந்தான். அதின் பிறகு, கண்ணபிரானனவர் நாமதேவரை யழைத்து, நீ, முன்னே இவ்வுலகத்தில் தோன்றினகாலத்தில், என்பேரில் நூறு கோடி கிரந்தம செய்வேனென்று சொல்லி, பிரதிஞ்ஞை செய்தாய், அதில் ஐந்துகோடி ஐம்பத்தொருலக்ஷம கிரந்தம் குறைவாயிருக்கின்றதல்லவா? அதைப் பூர்த்திசெய்யவும், சில கோடிகளை நல்லொழுக்கத்தில் நடத்தவும் போளோபாவுக்கு நீ யொரு புதல்வனாக அவதரிக்கக் கடவாயென்று நியமிக்க, நாமதேவரும் அப்படியே செய்கிறேனென்று வணங்கிப் போய், கனகாயி வயிற்றில் அவதரித்தார். இந்தக் குழந்தையைத் தாய் தந்தையராகிய கனகாயியும் போளோபாவும் எடுத்துக்கொண்டு சந்நிதிக்குப் போய், பாண்டு ரங்கன் திருவடியில் கிடத்தி, வாழ்த்தி வணங்கி நிற்க, பக்த வத்ஸலராகிய பகவானனவர் ஸ்ரீருக்மிணீ பிராட்டியாரை நோக்கி, இந்தச் சிறுவனை உன் கையால் தீண்டியெடுத்து, பெற்ற தாயாகிய கனகாயிகையில் கொடுக்கக் கடவாயென்று நியமிக்க, அப்படியே பிராட்டியாரும் கனகாயி கையில் குழந்தையைக் கொடுத்து ஆசிர்வதித்தார். தாய் தந்தையரும் பகவானை வணங்கி, குழந்தையைக் கொண்டுபோய்த் தொட்டிலிற் போட்டு என்ன பெயரிடலாமென்று யோசிக்கும்போது, ஸ்ரீருகமிணீ பிராட்டியார் எழுந்தருளி, துக்காராம் என்று பெயரிட்டு, நாமகரணச் சடங்கு முழுதும் நிறைவேற்றிப்போனார். அதற்குமேல் சிலநாள் கழிந்தபிறகு, கனகாயி வயிற்றில் பிரமதேவனது வரத்தால் கான்ஹயா என்று ஒருபுதல்வன் பிறந்தான். இந்த மூன்று சிறுவரையும் தாய்தந்தையர் அன்போடு வளர்த்துக்கொண்டும், ஸ்ரீ ஹரிபஜனை செய்துகொண்டும் மகிழ்ந்திருந்தார்கள். இந்த மூவரும் வளர்ந்து பருவமடைந்தவுடனே, விவாஹம் முடித்துவைக்க அவர்கள் சுகித்திருக்குங் காலத்தில், போளோபாவுக்கு மிகவும் முதுமைப் பருவம் நேரிட்டதனால், மூத்த பிள்ளையாகிய சாம்பஜியை யழைத்து, இனி நீ குடும்பவாழ்க்கையை நடத்தக்கடவாயென்றான். அதற்கு அவன் சம்மதிக்காமல், தந்தையை வணங்கி, ஐயனே, எனக்கு இவ்வுலக வாழ்க்கையில் சிறிதும் விருப்பமில்லை, தீர்த்த யாத்திரையில் விருப்பமுள்ளேன், ஆனாலும் உமது வார்த்தையைக் கடந்து போகமாட்டேன்,உமது திருவருள்யாதோவென்று சொல்லக்கேட்ட தந்தையானவர், இவன் சிவன் வரத்தால் தோன்றினவனாகையால் இவனுக்கு இப்படிப்பட்ட வைராக்கிய முண்டாயிற்றென்றெண்ணி, பிறகு துக்காராமரை யழைத்துத் தன் கருத்தையறிவிக்க, இவர் அதற் கிசைந்தார். அப்போது துக்காராமருடைய மனைவிக்குக் காசரோகமுண்டாகி வருத்துவதைக்கண்ட போளோபா,புனவிலிருக்கும்அப்பாஜியின்புதல்வியாகியஜிஜாயியை

யழைப்பித்து இவருக்கு மணமுடித்துவைக்க, துக்காராமர் மனைவியோடு கூடி இல்லறம் வழுவாமல் நடத்திவருங் காலத்தில், இவரது இல் வாழ்க்கையைத் தாய் தந்தையரும் உறவினரும் கண்டு களித்தார்கள். இப்படி சிலநாள் கழியவே, தாய் தந்தையர் ஸ்ரீ விஷ்ணுலோகத்தை யடைந்தார்கள். அவர்கள் விஷயத்தில் சிறிது மனம்வருந்தி, பிறகு தெளிந்து ஹரி பஜனையை மறவாமல் இல்வாழ்க்கையும் நடத்திவந்தார். சிலநாள் கழிந்தபிறகு மூத்த பிள்ளையாகிய சாம்பஜியின் மனைவியும் பரமபத மடைந்தாள் உடனே சாம்பஜி தீர்த்தயாத்திரை செல்ல விரும்பிப் போய், முக்தியைத் தருகிற சப்தபுரிகளையும், த்வாதச ஜோதி லிங்கங்களையும், புஷ்கரம் முதலான தீர்த்தங்களையும் கண்டு, ஒரு அரண்ணியத்தை யடைந்து, காமாதிகளை வென்று, சாதுக்களோடு கூடி, ஆத்ம விசாரம்செய்து உண்மை நிலையில்நிற்க, இல்வாழ்க்கையில் அமர்ந்திருக்கிற துக்காராமர், பண்டரிநாதா, தாய் தந்தையர் இருக்குமளவும் ஒரு கவலையுமில்லாதிருந்தேன், அவர்கள் சம்பாதித்துவைத்த திரவியமும் செலவாகி விட்டதனால் இனிக்குடும்ப ஸம்ரக்ஷணமும நிறைவேறுவது அருமையாயிருக்கின்றது, என்ன க்ருஷி செய்தாலும பலிக்காமல் அந்த வஸ்திரங்களுக்கே தரித்திரமாயிருக்கின்றது, என் செய்வேனென்று, ஒரு கடைவைத்து வர்த்தகம்செய்தார்; அதிலும்நஷ்டம்நேரிட்டது. பொதியெருதுவியாபாரம்செய்தார்; அதிலும நஷ்டமநேரிட்டது. இப்படி யெந்தத்தொழிலிலும் நஷ்டமே நேரிட்டதனால், வரவர வறுமைமிகுந்தது. இவர் பகவந்நாமஸ்மரணைசெய்து கொண்டிருந்தார். இப்படியிருக்கையில் கடன்கொடுத்தவர்கள் வந்து சூழ்ந்து இவரைவருத்த, இவர் மிகவும மனங்கலங்கி ஒன்றும் தோன்றாமல் சும்மா விருந்தார். அந்தச் சமயத்தில் இவருக்கு ஸ்நேஹிதராயிருப்பவர்கள்வந்து, கடன்காரருக் கெல்லாம் சமாதானம் சொல்லி, இவருக்கும் கொஞ்சம் முதற்பொருள்கொடுத்து, இவரைநோக்கி, இவ் வுலகத்தில் யார் இடைவிடாமல் பகவந்நாம ஸ்மரணைசெய்கிறார்களோ, அவர்களெல்லாரும் வறியராயிருக்கக் காண்கிறோம், ஆதலால் நீ ஹரி பக்தியை விட்டுவிடக் கடவாய், விடா திருந்தாயானால் இன்னம வறுமையால் வருந்தும்படி நேரிடும் என்று பலவகையான புத்திகளைச் சொல்லிப்போனார்கள். இவர் மனைவியாரும் வேண்டிய புத்திசொல்லவும கேட்காமல் அல்லும்பகலும ஹரிபஜனையையே மேற்கொண்டிருந்தார். இவர் வீட்டிலிருந்த பொதியெருதுகள் நான்கில் மூன்று இறந்துபோக, மிச்சமாயிருந்த ஒரு எருதைக்கொண்டு வியாபாரம் நடத்திவரும்போது, ஒருநாள் சில வியாபாரிகளோடுகூடி வேறோர் ஊருக்குப்போகுங்கால், அந்த வியாபாரிகள் யாவரும் கடுகி நடந்து முன்னே போய்விட, இவர் மாத்திரம் தனியாகிப் பொதியெருதை யோட்டிக்கொண்டு காட்டின் வழியாய்ப் போகும்போது பொழுதுபோயிற்று; அதனோடு மழைக்கா லிருட்டும் மிகுந்தது. அப்படிப்பட்ட சமயத்தில் எருதின்மேலிருந்தபொதிநழுவிக் கீழேவிழுந்தது. அதைத் தாம் தனியாய்த் தூக்கி யெருதின்மேல் போடுவதற்குச் சக்தியில்லாமல் நின்று, குடும்ப வாழ்க்கைக்கு உடன்பட்டல்லவா

இவ்வளவு துன்பங்கள் அநுபவிக்க வேண்டி யிருக்கிறது என்று சொல்லி, பிறகு பாண்டுரங்கனைத் தியானித்து, ஓ பகவானே, இந்தச் சமயத்தில் என்னைக் காத்தருள வேண்டுமே என்று கண் கலங்கி யழுதார். இதைக் கண்ணபிரானானவர் அறிந்து, ஒருவழிப்போக்கனாய்வந்து இவரைக்கூடி, இந்த இருளில் திரிகிற நீ யாரென்று கேட்க, இவர், நான் செட்டி, நான் நெடுந் தூரம் போகவேண்டும், மாட்டின் மேலிருந்த பொதி நழுவிவிழுந்தது, அதைத் தூக்க உதவியில்லாமல் திகைக்கும்போது நீர் வந்தீர் என்று சொன்னார். சொன்னவுடனே வழிப்போக்கன்போல வந்த பகவானானவர், பொதியைத் தூக்கி எருதின் மேல் ஏற்றி, இருட்டில் உனக்கு வழி தெரியாது, என் பின்னே வாவென்றழைத்துக்கொண்டு இந்திராயணிநதிக் கருகேபோய், அதில் நீர்பெருகி வருவதைக்கண்டு, முந்திச் சக்ராயுதத்தைவிட்டு, நீரானது முழங்காலளவாக வரச்செய்து, அதன்மேல் அழைத்துக் கொண்டு போய் வீட்டில் பிரவேசிக்கச் செய்து மறைந்தார். சிலநாள் சென்றபிறகு மூன்றுமாடுகள் சேகரித்து, அவற்றின்மேல் மிளகாய்ப் பொதிகளையேற்றிக்கொண்டு, கொங்கண தேசத்துக்குப்போய் அவ்விடத்தில் ஒரு கடை வைத்தார். இவர் கடை வைத்ததைக் கண்டு அவ்வூரா ரெல்லோரும், ஒரு மணங்கு என்ன விலையென்று கேட்க, இவர் பாண்டுரங்க பகவானை ஸ்மரித்துக்கொண்டே, வேண்டிய மட்டும் எடுத்துக்கொண்டு உங்களுக்கு இஷ்டமான விலையைக் கொடுங்களென்றார். அப்படியே சிலர் இஷ்டமான விலை கொடுத்தார்கள் அதுவுமில்லாமல் சிலர் சும்மா எடுத்துக்கொண்டும்போனார்கள். இப்படி யிருக்கும்போது ஒரு துஷ்டன் வந்து, ஒருபொதி மிளகாய் வேண்டுமென்று கேட்க, இவர் அப்படியே எடுத்துக்கொண்டு போவென்றார். அவன் அந்தப் பொதியை யெடுத்துக்கொண்டு விரைந்துபோகும்போது அவனை இவர் அழைத்து, மிளகாயை யெடுத்துக்கொண்டு கோணியை மாத்திரம் கொடுத்துவிடு என்றார். அதற்கு அவன் நான் இனியொருக்கால் வரும்போது கொண்டுவருகிறேனென்று சொல்லிப் போய்விட்டான். இப்படி மிளகாய் முழுதும் செலவான பிறகு, போய் நீராடி அமுதருந்தி ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ கண்ணபிரானானவர், இவன் கொண்டுவந்த மிளகாய் முழுதும் அவ்வூரார் விலைகொடாமல் கொண்டு போனார்களே, இவன் அங்கேபோய்க் கடன்காரர்களுக்கு முதற் பொருளை யெப்படி செலுத்துவான்? இவன் குடும்பத்தோடு எப்படி ஜீவிப்பான் என்று ஆலோசித்துத் திருவுள மிரங்கி, மானிடவேடங் கொண்டுவந்து, மிளகாய் வாங்கினவர்களிடத்திற் போய், நீங்கள் வாங்கின மிளகாயின்விலைப் பொருளை என் இன்னம் தராம லிருக்கிறீர்கள் என்று கேட்க, அவர்கள் நீ யாரென்றுகேட்க, பகவானானவர், நான் துக்காராம்செட்டியார் கடையிலிருக்கிற குமஸ்தா, நான் பணம் தண்டுதற்காக வந்தேனென்றார். அவர்கள் இவரைநோக்கி, நீ உண்மையாய் அந்தச்செட்டியின் குமஸ்தாவானால், அவன் தூக்கிக்கொடுத்தானா, விலை மதித்துக்கொடுத்தானா, சொல் என்றார்கள். அதற்குப் பகவானானவர் எங்கள் எஜமானாகிய செட்டியார் தூக்கி

க்கொடுப்பதனாலேயே அவருக்குத் துக்காராம் எனப்பெயர் வழங்குகின்றது என்றார். அவர்கள், உங்கள்செட்டி துக்கிக்கொடுத்த நிறையைச்சொல்லென்று கேட்க, அவரவர்கள் எடுத்துக்கொண்ட மிளகாய் நிறையை இவர் சரியாய்ச் சொல்லவே, அவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டு, விலைகொடுத்துவிட்டார்கள். பொதியைக் கொண்டுபோனவன் மாத்திரம், இவர் கேட்டவுடனே, நீபோ, உன்னிடத்தில் தரமாட்டேன், உன் யஜமானனிடத்தில் தருவேன் என்றான். அதுகேட்ட இவர், நான் பணம்வாங்காமல் போகமாட்டேன், போவேனானால் யஜமானர் கோவித்துக்கொள்ளுவார் என்றார். அதற்கும் அவன் வழிக்கு வராமல், சண்டித்தனம் செய்து நான் உன்னிடத்தில் கொடுக்கவே மாட்டேனென்றான். அதுகேட்ட பகவானனவர், நீ கொடாதபக்ஷத்தில் உன் வீட்டிலேயே நான் உயிர்விடுகிறேனென்று சொல்லிநிற்க, அவன் இதுதான் அநர்த்தமாய் முடிந்ததென்று, உனது பொதியையாயினும் கொண்டுபோவென்றான். அதற்கு இவர், உலகத்தில் கொண்ட சரக்கைத் திருப்பிவிடுகிறவர்களுமுண்டோ? அப்படிச் செய்வது உனக்குத் தகாது என்றுசொல்ல, அவனுக்குக் கோபமுண்டாகி, நீ எப்படிப் பணம்வாங்கப்போகிறாயோ பார்ப்போமென்றான். உடனே இவர் அங்கிருந்த ஒரு தாம்புக்கயிற்றை அவன் வீட்டு உத்திரத்தில் கட்டித் தம் கழுத்தில் அந்தக் கயிற்றைச் சுருக்கிட்டுக்கொள்ள, அவன் மிகவும் ஆரவாரஞ்செய்தான். அந்த ஆரவாரத்தை அண்டை அயலிலுள்ளோர் யாவரும்கேட்டு வந்துகூடி, பணம் தராதபக்ஷத்தில் இவன் இறப்பான், அதனால் பழியுண்டாகுமென்றுசொல்லி அவன்பணம் கொடுக்கும்படி செய்து, இவர் கழுத்திலிட்ட சுருக்கையும் அவிழ்த்து விட்டார்கள். அதன்பிறகு, பகவானனவர், தாம் தண்டினபணத்தை யெண்ணித் தொகைபோட்டு, எடுத்துக்கொண்டு துக்காராம் செட்டியாரிடத்துக்குப்போய், பணத்தைக்கொடுத்தார். செட்டியார், நீயார்? இந்தப்பணம் ஏது என்று கேட்க, பகவானனவர், நான் இவ்வூர் விசாரணைக்காரன், உன் மிளகாயை இவ்வூரிலுள்ளோர் பணங் கொடாமல் கொண்டுபோன செய்தியைக் கேள்விப்பட்டு, நான்செய்யவேண்டிய காரியமாகிய விசாரணையைச்செய்து அவர்களிடத்தில் அந்த மிளகாய்க் கிரயமாகிய பண முழுதும் தண்டல் செய்துகொண்டு வந்தேன் என்றார். செட்டியாரும், அப்படியா, நல்ல காரியம் செய்தாய் என்று சொல்லி, இவர்கையில் ஒரு பணத்தைக்கொடுத்து நெய் வாங்கிவரும்பொருட்டு அனுப்பினார். இவர் போய் ஒரு செம்பு நிறைய நெய்கொண்டுவந்தார். அதைப்பார்த்த செட்டியார், மிகவும் மலிவாய் வாங்கிவந்தாயென்று சந்தோஷித்து இந்தநெய்ச்சோற்றை உண்டுபோவென்று சொல்ல இவரும் உண்ணச் சம்மதித்தார். அந்தச் சமயத்தில், சதாசிவ மூர்த்தியானவர் ஒரு அதிதி வேடங் கொண்டு வந்து, எனக்கு இவ்வளவு அன்னம் தரவேண்டுமென்றார். அப்படியே நல்லதென்று அவரையும் சேர்த்துக்கொண்டு மூவரும் உண்ட பிறகு, ஸ்ரீ கண்ணபிரானும் சதாசிவ மூர்த்தியும் போய்விட்டார்கள். பிறகு இவர் தனித்திருக்கும்போது, அவ்வூரார் சிலர்வந்து, யாரோ ஒருவன் உமது

தண்டற் காரனென்று சொல்லிக்கொண்டு வந்து, ஊர் முழுதும் மிளகாய்ப் பணம் தண்டல் செய்தபிறகு, பொதிமிளகாய் கொண்டுபோனவனிடத்தில் போய்ப் பணம் கேட்க, அவன் கொடேனென்று சண்டித்தனம்செய்ய, உன் குமஸ்தா ஆனவன், கழுத்தில் கயிறு சுருக்கிட்டுக்கொண்டு இறக்கப் போக, நாங்கள் யாவருமவிசாரந்துவந்து அவன் பணம் கொடுக்கும்படிசெய்து, இவனையும் உயிர் பிழைப்பித்தோம், உன் வர்த்தகத்தால் இவ்வளவு அநர்த்தம் நேரிட்டதுஎன்றார்கள். அந்தவூரார் சொல்லுவதையும், பணம் வந்து சேர்ந்ததையும் இவர் ஆராய்ந்து, இது விடோபாவின் லீலை யென்று தெரிந்துகொண்டு, ஸ்ரீகண்ணபிரானனவர் என் பொருட்டு இவ்வளவு ப்ரயாசையெடுத்துக்கொண்டாரேயென்று மனம்வருந்தி, பகவந்நாமஸ்மரணை செய்துகொண்டிருந்தார். இவரதுபகவத்பக்தியைக்கண்டுஎல்லாரும்புகழ்ந்தார்கள். பிறகு இவர் தமது ஊருக்கு வரும்போது, வழியில், ஒரு மோசக்காரன், பித்தளைக் காப்புக்குப் பொன் முலாம பூசிக் கொண்டுவந்து, இவருக்குக் காட்டி, இதை விற்கிறேன், வாங்க விருப்ப முண்டாவென்று கேட்டான். இவர் அந்தக் காப்பை வாங்கிப் பார்த்து, மதிப்பிட்டு, இதை வாங்கிக்கொள்ள விருப்பமுண்டு, ஆனால் இப்போது பணம் கையிலில்லை யென்றார். அதுகேட்ட அந்த மோசக்காரன், இப்பொழுதே பண முழுதும் கொடுக்கவேண்டியதில்லை, தற்காலம் எவ்வளவு பணம் கையிலுண்டோ அவ்வளவும கொடுத்துவிட்டு, மிச்சத்தை வீட்டிற்போய்ச் சேர்ந்த பிறகு நான் அவ்விடம வந்து பெற்றுக்கொள்ளுகிறேன் என்றான். அதற்கு இவர் சம்மதித்து, கையிலிருந்த பண முழுதும் கொடுத்து, அந்தக் காப்பை யெடுத்துக்கொண்டுபோய் வீடு சேர்ந்தார். சேர்ந்த பிறகு, அந்தக் காப்பைக் கடன்காரனுக்குக் காட்டி, இதனை விற்றுவரும் பணத்தில் உன் கடன் பொருளெடுத்துக்கொண்டு, மீதியை எனக்குக் கொடுப்பாயாக என்றார். அவன் அந்தக் காப்பை வாங்கிக்கொண்டு போய், எல்லாருக்கும் இந்தச் செய்தியைச் சொல்ல, இவர் மனைவியார், தலையில் அறைந்துகொண்டு, இது என்ன விபரீதம்! உன்னைப பண்டரிநாதன் ஏன் சிருஷ்டித்தான், இப்படிப பிறந்து உழல்வதைப் பார்க்கிலும் இறப்பதே நன்மை. என்று பல வன்சொற்களை வழங்கிக் கணவனைக் கடிந்துபேசுவதைக் கண்ட கடன்காரன், ஒன்றும் பேசாமல் போய்விட்டான். பிறகு ஜிஜாயியார், குடும்ப ஸம்ரக்ஷணத்தின் பொருட்டு ஒரு வணிகனிடம் போய், வாக்குநாணயத்தின்மேல், எனக்குக் கொஞ்சம் பொருள் தரவேண்டுமென்றார். அந்த வணிகன், இவர் சகோதரர் பணக்காரர் என்கிற மதிப்பினால் கொடுக்கிறேன், எவ்வளவு வேண்டுமென்றான்; இருநூறு பொன் வேண்டுமென்று சொல்லி வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து, கணவனை நோக்கி, நீ இனியாகிலும் மோசம் போகாமல் வர்த்தகம செய்யென்று, தாம் கடன்வாங்கிக் கொண்டுவந்த இருநூறு பொன்னையும கொடுத்தார். இவர் அந்தப் பொருளைக்கொண்டு உப்பு வாங்கிப் பொதி யெருதுகளின்மேலேற்றிக் கொண்டு, பாலேகாட்டுக்குப் போய் விற்று, அந்தப் பணத்தைக்கொண்டு வெல்லம் வாங்கி விற்று,

அதனால் கிடைத்த பொருளெல்லாம் கொண்டு, வர்த்தகர்களோடு கூடிவரும் போது, வழியில், ஒரு குடும்பியானவன், தன் கழுத்தில் சங்கிலியோடுகூடிய கலப்பையை மாட்டி யிழுத்துக்கொண்டு இந்த வர்த்தகர்களுக்கெதிரே வந்து, நான் ஒரு அந்தணன், அரசிறை கொடுக்கச் சக்தி யில்லாமையால் இப்படி வந்து இரக்கிறேன் என்றான். அவனை அந்த வர்த்தகரெல்லாரும் வெறுத்துக்கொண்டார்கள். பிறகு இவரிடத்தில் வந்து, தன் செய்தியைச் சொல்லி, எனக்கு வேண்டியது இருநூற்றைம்பது பொன், இதைத் தந்தீரானால் என் குடும்பமும்வாழும், நானும் இந்தத் தண்டத்திலிருந்து நீங்குவேன் என்றான். அதைக்கேட்ட துக்காராமர், அவன் கேட்ட இருநூற்றைம்பது பொன்னும் கொடுத்தார். இதைக் கண்ட மற்ற வர்த்தகர்கள் இவரைக் கடுத்துப் பேசி, இப்படிச் செய்தாயே; கடன்வாங்கிக் கொடுத்த உன்மனைவிக்கு என்னசொல்வாய் என்று இவரைப் பிரிந்து, முன்னே விரைந்து போய்விட்டார்கள். பிறகு அந்த வேதியனை நோக்கி, அரசிறை செலுத்தி, தண்டமும் தீர்ந்து, உன் குடும்ப ஸம்ரக்ஷணமும் செய்துகொள் ளென்று அவனுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுக்க, அந்த வேதியன், இவரை நோக்கி, உம்மைப்போன்ற ஹரிபக்தர்கள இவ்வுலகத்திலில்லை, ஆகையால் உன்னை ஸ்ரீ ஜகந்நாதன் காக்கக்கடவனென்று ஆசீர்வதித்துப் போய்விட்டான். பிறகு இவர், ஒரு வேதியனுடைய ஆபத்துத் தீர்வதற்கு நமது பொருள் உதவியாயிற்றே யென்று மன மகிழ்ந்து, வீட்டிற்குப் போய் மனைவிக்கு என்ன சொல்லலா மென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, ஸ்ரீ பக்தவத்ஸலராகிய பகவானானவர், இவருடைய நிலைமையை யறிந்து, இவன் வீட்டிற்குப்போனால் வர்த்தகர்களால் கேள்விப்பட்ட இவன் மனைவி மிகவும் கடிந்து பேசுவாளே, இவன் என்ன செய்வானென்று மனமிரங்கி, துக்காராமரைப்போல உருவம் கொண்டு முன்னே போய், அந்தக் கடன்காரனுக்கு இருநூறு பொன்னும் வட்டியும் கொடுத்து, வேறே ஐந்து பொன் கொடுத்து, இதை ஜிஜாயி யிடத்தில் கொடுத்து விடு என்று சொல்ல, அந்தக் கடன்காரன் இவரை நோக்கி, நீரே கொண்டுபோய்க் கொடுமென்றான். அதற்கு இவர், நான்போய் வெகு நாளானபடியால், நீயே கொடுத்துவிடு என்று சொல்லிப் போய்விட்டார். அந்த வணிகன், ஐந்து பொன்னைக் கொண்டுபோய், ஜிஜாயி கையில் கொடுத்து, செய்தியைச் சொன்னான். ஜிஜாயி, அந்த ஐந்துபொன்னை வாங்கிக்கொண்டு, அவர் எங்கே யென்று கேட்டாள். அப்போது, அந்த வணிகன், உன் கணவன் எங்கேயாகிலும் ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டு திரிவான், அவனைக் கோபிக்கவேண்டாமென்று சொல்லிப் போய்விட்டான். துக்காராமரும் மறுநாள் வீடுவந்து சேர்ந்து ஹரி பஜனை செய்துகொண்டிருந்தார். அதன் பிறகு, இவரோடு கூடவந்த வர்த்தகர்கள் வந்து ஜிஜாயி யிடத்தில் இவருடைய செய்தியையெல்லாம் சொல்ல, அவர், கடன்காரனுக்குப் பொன் செலுத்தினது முதலானவைகளை ஆலோசித்து, இதுவும் ஸ்ரீகண்ண பிரான் செய்த லீலையே யாகுமென்று மதித்து, தன் கணவனோடு பிணங்

காம லிருந்தாள். இப்படிச் சில நாள் கழிந்த பிறகு, அவ்வூரில் பஞ்சகாலம் நேரிட்டது. அதனால் இவருடைய எருதுகள் தீனி யில்லாமல் இறந்து போனதனால் வ்யாபாரம் செய்ய உதவி யில்லாமலும், கடன் கொடுப்பாரில்லாமலும், வறுமையால் மிகவும் வருந்திப் பசிக்குக் கீரை முதலான வற்றை அவித்துண்டும் பசி தொலையாமல் வருந்துகிற காலத்தில், இவர் மூத்த மனைவியும் பிணியால் இறந்தாள். அப்போது எல்லாரும் வந்து இவரை நோக்கி, ஹரிபஜனை செய்வோர் தரித்திரராவாரென்னும் உண்மையை முன்பே நாங்கள் உனக்குச் சொன்னோம்; அதைக் கேளாமையால் இந்தத் துன்பத்துக்கு ஆளானீர்; இனியாகிலும் அதை விடுவீரானால் சுகப் படுவீர் என்றார்கள். அதைக் கேட்ட இவர், அவர்களை நோக்கி, பாண்டுரங் கனைப் பஜிக்காதவர்கள், தீமையை யடையாமலும் சாவாமலும் இருக்கிறார் களோ? இப்படி நீங்கள் சொல்லத்தகாதென்று சொல்லி, பகவந்நாமஸ்மரணை செய்துகொண்டே சிலநாள் கழித்தார். பிறகு இவர் மூத்த குமாரனாகிய சந்தோபா என்பவனும் பரகதியை யடைந்தான். அவனிடத்தில் மிகவும் அன்புள்ளவராதலால் இவர் சற்று மனம் வருந்தி, இந்த ப்ரபஞ்ச வாழ்க்கை யானது இத்தன்மையதே யென்று மனந் தெளிந்து, இந்த இல்லறத்திலிரு ந்து ஈடேறினவர் யார்? ஒருவருமில்லை; ஆகையால் இதைவிட்டு நீங்குவதே நன்மை யென்று இல்வாழ்க்கையை வெறுத்து ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டே போய், போபநாத் என்னும் மலையின்மேலேறிக் கண்களை மூடிக்கொண்டு ஏழுநாள்வரைக்கும் பகவத் தியாநத்திலிருந்தார். அப்படி யிருக்கும்போது, பகவானனவர், ஒரு பாம்பின் உருவங் கொண்டுவந்து, துக் காராமரை வளைந்து கோவமாகச் சீறுவதை யறிந்தும், சிறிதும் மனங் கலங் காமல் கண்மூடிக்கொண்டு ஸ்ரீ ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். அப்போது திருமாலே ஒரு பாம்பின் உருவங் கொண்டு உன்னை வளைந்து கொண்டிருக்கிறாரென்று அசரீரி துக்காராமரை நோக்கிச் சொல்லக்கேட்ட இவர், அப்படித் திருமாலே பாம்புருவாய் வந்தது உண்மையானால், அந்த வுருவை விட்டுப் பாண்டுரங்க மூர்த்தியாய்ச் சேவை சாதித்தால், நான் கண் களைத் திறந்து பார்ப்பேனென்று சொல்லி, ஸ்ரீ ஹரியைத் தியானித்துக் கொண்டிருந்தார். பிறகு இவரது மன வுறுதியை யறிந்த பாண்டுரங்க பக வானனவர் தமது நிஜஸ்வரூபத்தோடு இவருக்குப் பிரத்தியக்ஷமாகி, என் னைக் காணவிரும்பின துக்காராமா, என்னைச் சேவிக்கலாம் என்று சொல்ல, இவர் பகவானுடைய தேஜோராசியாகிய திவ்யமங்கள விக்ரஹத்தைக் கண்டு பேரானந்த மடைந்து, அந்தத் திவ்ய ரூபத்திற் கலந்திருந்தார். இப்படியிரு க்க, ஊரிலிருந்த இவரது சகோதரராகிய கான்ஹயா என்பவர், தமையரைக் காணாமல், இவர் வெளிப்பட்ட நாள்முதலாக ஜல பாநமும் செய்யாமல், ஸ்ரீ ராம பிரானது பிரிவினால் பரதாழ்வான் வருந்தித் தேடிவந்தாற் போலத் தேடிவந்து, காடு மலைகளெல்லாங் கடந்து, இவரிருக்கும் மலைமேலேறி, அவ் விடத்தில் பகவானையும் தமையனையும் கண்டு, மெய் மறந்து, செய லற்றவ

ராய், ஸ்ரீ ஹரிசேவை கிடைத்ததென்று சொல்லிக்கொண்டே, விழுந்து சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்தார். அப்போது ஸ்ரீ சக்ரபாணியாகிய பகவானனவர் துக்காராமரைத் தழுவி யெடுத்துத் தம் பக்கத்தில் இருத்திக்கொண்டு, உனக்கு வேண்டியதைச் சொல்லென்று கேட்க, இவர், தாயை மறவாத குழந்தையைப்போல உன்னை மறவாதிருக்க வரந்தரவேண்டுமென்றார். அதற்குப் பகவானனவர் அப்படியே தந்தோம், நீங்கள் உங்களுடைய ஊரை யடைந்து, என்னைப் பஜித்துக்கொண் டிருங்கள் என்று நியமித்து, மறைந்தார், அங்குப் பகவானது திருவடிச் சுவட்டை இப்பொழுதும் காணலாம். பிறகு இவர் தமது தம்பியாரோடும் மலையைவிட்டிறங்கி, ஊரை யடைந்து, ஊருக் கருகே யிருக்கிற இந்திராயணி நதிக்கரையி லிருந்து, பொழுது பட்டு விடிந்த வுடனே, அந்த நதியில் நீராடி, நியமங்களை முடித்து, எட்டா நாள் பாரணையும் செய்தார். பிறகு தம்பியாரை நோக்கி, நமது தந்தைக்கு அநேகர் பணங்கொடுக்கவேண்டி யிருக்கின்றது, அவர்கள் எழுதிக்கொடுத்த கடன் சீட்டுகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு வாவென்று அனுப்பி, அப்படியே அவர் வீட்டுக்குப் போய் எடுத்துக்கொண்டு வந்தபின்பு, கடன் வாங்கினவர்கள் இனிக் கொடுக்கப் போகிறார்களா? இவற்றை உன் கையிற் கொடுத்தால் நீ போய் அவர்களைக் கேட்டு நிர்ப்பந்தம் செய்வாய், அது வேண்டியதில்லை, இவற்றை இந்த நதியில் விட்டுவிடுகிறேன் என்றார். அதைக் கேட்ட தம்பியார், நீரோ விரக்தர், உமக்கு நிமித்த மில்லை, நான் குடும்பி, நான் எப்படி ஜீவனம் செய்வேன் என்று சொல்லக் கேட்ட இவர், அவற்றை இரண்டு பங்காக்கி, ஒரு பங்கைத் தம்பியார் கையிற் கொடுத்து, தமக்குரிய ஒரு பங்கை நதியில் விட்டுத் தமபியாரை நோக்கி, ஒருவரையும் வருத்தவேண்டாமென்று சொல்லி யனுப்பிவிட்டு, பகவத் ஸந்நிதியிற்போய்ப் பாண்டுரங்க பகவானைச் சேவித்தார். சேவித்த பிறகு, காட்டுக்குப் போய்க் கிடைத்த காய் கனிகளை யுண்டு, தமது ஊருக்கு மூன்று கோசு தூரத்திலுள்ள பாண்டார மலைமே லேறி, ஹரிநாம ஸ்மரணை செய்து, விட்டல பகவானை மனத்தில் இருத்திக்கொண்டு அங்கே யொருபக்கத்திலிருந்து, அஸ்தமித்த பிறகு இராமுழுதும் பகவந் நாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்து, விடிந்தவுடனே இந்திராயணியில் நீராடிப் பூஜையை முடித்து, மலைமே லேறி, ஒரு பக்கத்தில் தங்கி ஸ்ரீஹரி பஜனை செய்துகொண் டிருந்தார். இப்படி யிருக்கையில் ஒரு நாள் இவரிருக்கு மிடத்துக்குச் சமீபத்தில் உள்ள ஒரு சோளக் கொல்லைக்காரன் வந்து இவரை நோக்கி, நீ சும்மா ஒருவேலையு மில்லாம லிருக்கிறாயே, என் சோளக் கொல்லையைக் காத்துக்கொண் டிருந்தாயானால், முடிவில் உனக்கு அரை மணங்கு சோளம் கொடுக்கிறேன் என்றான். அதற்கு இவர் மனமிசைந்துபோய் அவனது சோளக்கொல்லையைக் காவல் செய்வாராயினார். எப்படியென்றால், சோளத்தைத் தின்ன வருகிற பறவைகளைப் பார்த்து இவற்றுக்குள்ளே பரமாத்மாவாகிய பகவான் நிறைந்திருக்கிறார், ஆகையால் இவற்றை யோட்டுவது மிகுந்த பாவ மென்று நினைத்து அவைகள் வயிறு நிறையத்

இன்னுமளவும் பார்த்திருந்து, பிறகு, ஓ பறவைகளே, இனி நீங்கள் போய் நீர் பருகுங்கள் என்று சொல்லிவிட்டு, ஹரிபஜனை செய்துகொண்டிருந்தார். இதுதான் இவர் காவல் காக்கும் விதம். இப்படியிருக்கையில், வீட்டிலிருக்கிற ஜிஜாயி, தன் கணவரைக் காணுமல் வருந்தி, தன் மகளைப் பார்த்து, எனக்கு மிகுந்த பசியாயிருக்கின்றது, நான் அவருக்கிடாமல் அன்னமுண்ணமாட்டேன், ஆகையால் நீ விரைந்து போய்த் தேடி அவரை யழைத்துவா வென்று சொல்ல, காசிபாயி என்கிற மூத்தமகள் போய்ப் பலவிடங்களிலும் தேடிக் காணுமல், முடிவில் சோளக் கொல்லையைக் காவல் காத்திருப்பவரைக் கண்டு, என் தாயார் நீர் வருமளவும் உண்ணேனென்று பசியோடிருக்கிறார், வாருமென் றழைக்க, இவர் மகளை நோக்கி, அம்மா, கொல்லைக்காரன், சூரியன் அஸ்தமிக்கிற வரைக்கும் கொல்லையை விட்டு நீங்க வேண்டாமென்று எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறான், ஆகையால் உன் தாயாரை உண்ணச் சொல்லென்றார். அவள் போய்ச் சொல்லியும், ஜிஜாயிக்கு அப்படிச் செய்ய மன மில்லாமையால், கணவனுக்கு அனுப்பி, அவர் உண்ட செய்தியைத்தெரிந்துகொண்டபிறகு தான் உண்ணலானார். இப்படி ஒருமாச காலம் வரைக்கும், நடந்து வருகையில், ஒருநாள் கொல்லைக்காரன் வந்து பார்த்து, ஒரு கதிரிலாயினும் சோள மில்லாதிருப்பதைக் கண்டு, மிகவும் கோவங் கொண்டு இவரை நோக்கினன். அந்தச் சமயத்தில் இவர் பரண் மேலிருந்து விட்டலப்பெருமானைப் பஜித்துகொண்டிருந்தார். அதைக் கண்ட கொல்லைக்காரன், உன்னைக் காவல் வைத்ததனுல் என் கொல்லை பாழாகி, என் குடி முழுகிப்போயிற்று என்று மிகவும் வைது, இவரை இழுத்துக்கொண்டு போய் அந்த ஊருக்குத் தலைவனாய் இருப்பவனுக்கு எதிரில் நிறுத்தி, அவன் பார்க்கும்படி வயிற்றில் அடித்துக்கொண்டு உண்மையான செய்தியைச் சொன்னுன். அப்போது அந்த அதிகாரியானவன் இவரை நோக்கி, உண்மையைச் சொல்லென்று கேட்க, இவரும் ஒளிக்காமல் தாம் காவல்காத்த விதத்தைச் சொன்னுர். இவர் சொன்னதைக் கேட்டவர் யாவரும் கல்லென்று நகைத்தார்கள். அதின் பிறகு அதிகாரியானவன் கொல்லைக்காரனை நோக்கி, உன் கொல்லையில் எவ்வளவு விளையும் என்று கேட்க, கொல்லைக்காரன் நாற்பது மணங்கு விளையும் என்றுன். அதைக் கேட்ட அதிகாரி யானவன் துக்காராமரை நோக்கி, நீ பெரிய நஷ்ட முண்டாக்கினுய், உனக்கு அந்த நஷ்டத்தைக் கொடுக்கச் சக்தியில்லை, ஆகையால் ஒரு ஆதாரவுச் சீட்டு எழுதி அவனுக்குத் தாவென்றுன். இவரும் அப்படியே யெழுதிக்கொடுத்தார். பிறகு அதிகாரியானவன் அந்தக் கொல்லையைப் பார்க்கப் போய், அளவற்ற விளைச்சல் விளைந்திருப்பதைக்கண்டு, ஆச்சரியப்பட்டு நின்றுன். கொல்லைக்காரன், இந்த விளைச்சல் முழுதும் எனக்குத் தந்தால், சீட்டைக் கொடுத்து விடுகிறேன் என்றுன். அப்போது அதிகாரியானவன், இந்தத் துக்காராமர் பகவத் பக்தராதலால், பகவானே இப்படிப்பட்ட விளைவுண்டாகச் செய்தார் என்று ஆலோசித்து, கொல்லைக்காரனை நோக்கி, இதையெல்லாம் அறுத்துச் சேர்த்து

உனக்குச் சேரவேண்டிய பலனை நீ யெடுத்துக்கொள் என்றான். அப்படியே கொல்லைக்காரன் செய்து மூன்றாற்று நாற்பது மணங்கு சோளம் இருக்கக்கண்டு, அதிகாரிக்குத் தெரிவித்தான்; அதிகாரி, அவனுக் குரிய நாற்பது மணங்கு சோளத்தைக் கொடுத்துவிட்டு, மீதியைத் துக்காராமருக்குக் கொடுத்து, நீர் பகவத் தாசராகையால் பகவான் உமக்கு அருள் செய்தார் என்று சொல்ல, இவர் நான் சிறிதும் அபேக்ஷிக்காமலிருக்கும்போது இப்படி விளைந்தது, இதையெல்லாம் நான்கொண்டுபோனால் எப்படி முடியுமோ, எனக்கு வேண்டாம் என்றார். அதைக்கேட்ட அதிகாரி அந்தச் சோளமெல்லாம் மகதாஜி பண்டிதர் வீட்டில் பொதுக் கட்டி வைத்தான். துக்காராமர் வழக்கம் போலவே ஹரி பஜனை செய்துகொண்டு மகிழ்ந்திருந்தார். பிறகு ஒரு நாள் இவர் விடோபாவைச் சேவிக்கப்போனபோது, கோவில் பழுதாயிருப்பதைக் கண்டு அதைத் திருத்த முயன்று, மனையைக் குழைத்துப் பழுதா யிருக்கிற இடங்களில் தடவி, மனமவருந்தி யிருக்கும்போது, விடோபாவானவர் இவரது மன வருத்தத்தைக் கண்டு, தாம் மனம் வருந்தி, மகதாஜி பண்டிதருடைய கனவிற்போய், துக்காராமருடைய தானியம் உம்மிடத்தி லிருக்கின்றதே, அதைவிற்றுப் பொருளாக்கி, அந்தப் பொருளைக்கொண்டு என் கோயிலைப் பழுது பார்க்க வேண்டும் என்று நியமித்தார். பண்டிதர் உடனே கண் விழித்து, கனவின் செய்தியை அவ்வூராருக்குச் சொல்லிக் கோயிலுக்குப் போய், துக்காராமர் வேலைசெய்வதைக் கண்டு, நாம்கனாக்கண்டதற்கு இதுவே அத்தாக்ஷியென்றறிந்து, சுண்ணச் சாந்து முதலியவற்றைக்கொண்டு வேலை செய்து பழுது திருத்தி, இன்னம் கொஞ்சம் வேலைக்குப் பொருள்பற்றாதிருக்கக்கண்டு துக்காராமர் வருந்த, விடோபாவானவர், மறுபடியும் பண்டிதர் கனவிற் போய், கொல்லைக் காரன் துக்காராமருக்குக் கொண்டுக்க வேண்டிய அரைமணங்குச் சோளத்தைக் கொடாமற் கொண்டுபோயிருக்கிறான்; அதை வாங்கிவந்து மற்ற மீதிவேலையையும் நிறைவேற்றக்கடவீர் என்று சொல்ல, அப்படியே பண்டிதர் கொல்லைக்காரனிடத்தில வாங்கினதுமல்லாமல் ஊரார்க்கெல்லாம வரிமுதலியவையேற்படுத்தி பணம்தண்டிக் கோயில்வேலையைத் திருத்தமாக்கி முடித்தார். பிறகு துக்காராமர், கோயிற் சபா மண்டபத்தில் நின்று ஹரிகீர்த்தநம பாடி, நடநம செய்து, நாம தேவர் ஞான தேவர் முதலான மேலோர்கள் செய்த கிரந்தங்களெல்லாவற்றையும் சேகரித்துக்கொண்டு, பாண்டார மலைமேலேறி யிருந்து அவற்றை இடை விடாமல் மநநம் செய்துகொண் டிருந்தார். இவர் மனைவியார் தினந்தோறும் ரொட்டியும் சுரைக்குடுவை நீரும் கொண்டுபோய்க் கொடுத் துண்பித்துப் பிறகு வீட்டுக்குவந்து தாம் உண்பது வழக்கமாகக்கொண்டிருந்தார். இப்படியிருக்குங் காலத்தில், ஒருநாள் இவர், விசுவம்பரர் தெய்வமாகக் கொண்டுவந்து இவ்வூரில் ஸ்தாபித்து நம்முடைய குலநாசம்செய்தார், அந்தக் கருங்குறளனைத் தெய்வமாகக்கொண்டு நமது கணவரும் அவனையே ஸ்மரித்துக்கொண்டு பித்தம் பிடித்துத் திரிகிறார்; ஆகையால் என் உடைமைகளெல்லாம் தோற்

றேன், நானும் என் மக்களும் உணவில்லாமல் சாகிறோம், இப்படிச்செய்த இவனையும் தெய்வமென்று எப்படி மதிக்கலாம்! இனி இவனைக் கண்ணாலும் நோக்கலாகாது; நமது கணவரோவென்றால், பகலெல்லாம் காட்டிலும மலையிலும் தங்கி, இரவில் கோயிலுக்குவந்து ஹரிகீர்த்தநம் பாடிக்கொண்டிருந்து உதயத்தில் காட்டுக்குப் போய்விடுகிறார். தினந்தோறும் அவருக்கு உணவுகொண்டுபோய் மலைமேலேறிக் கொடுக்கவேண்டியிருக்கின்றது; கால்களும அயர்ந்துபோயின, இனி மலைமேறவும சக்தி யில்லை, என்செய்வேன் என்று இவ்வாறு புலம்பிக்கொண்டே, அப்பமும் நீருங் கொண்டு போகும்போது, காலில் பாம்பின் பல்லைப்போலக் கூர்மையாகிய ஒரு முள்ளானது தைத்தது; அதனால் வருந்தி விழவே, குடுவை கவிழ்ந்து கொட்டுண்டு நீர்போயிற்று. இவர் மயங்கிச் சிறிது நேரத்தில் தெளிவடைந்து காலைநோக்கி, மிகுதியாய் உதிரம் பெருகக் கண்டு, அந்த முள்ளைப் பற்றி யிழுக்க, அது வாராமைமையால் இதுவும் கருங் குறளன் செயலென்று ஆலோசித்து, இவ்வாறு இவன் செய்வதற்கு, நான் இவனுக்கு என்ன தீமை செய்தேன் என்று சொல்லி வருந்தும போது, ஸ்ரீகண்ணபிரான் மன மிரங்கி இவருக் கெதிரே எழுந்தருளக்கண்டு, அவரை நோக்காமல் மற்றொரு திக்கை நோக்க, கண்ணபிரான் அந்தத்திக்கில் எழுந்தருள, இவர் அந்தத் திக்கை விட்டு மற்றொரு திக்கை நோக்க, அங்கும் வந்துநிற்கவே, இவர் இரண்டு கண்களையும மூடிக்கொண்டு, பலவகையாய் நிந்திக்க, பகவானானவர், அம்மா! என்மீது இவ்வளவு கோபமேன் என்று ஹிதவசநங்களைச் சொல்லிச் சமாதாநப்படுத்தி, இவர் காலைப்பற்றித் தமது திருத் தொடைமேல் வைத்துக்கொண்டு, சிறிதும் வருத்த மில்லாமல் முள்ளை வாங்கி, க்ருபாநோக்கம செய்ய, ஜிஜாயியார் துன்பம் நீங்கி, பகவானை நேரே நோக்கி, என் கணவர் உன்னை மனத்திற்கொண்டிருத்தலால், இன்னம உணவில்லாமலிருக்கிறார், நான் அவரிடம் போகிறேன் என்று சொல்லிப்போக, பகவானும் பின் தொடர்ந்து செல்ல, துக்காராமர் இவ் விருவரையும் கண்டு, இவர்கள் சேர்த்தி நீரும் நெருப்பும் சேர்ந்தாற் போலவும் அமுதும் நஞ்சும் சேர்ந்தாற் போலவும் இருக்கிறதென்று அதிசயித்து நிற்க, இருவரும் சமீபித்தார்கள். அப்போது பகவானை வணங்கினர். பகவானும் இவரைத் தழுவிக்கொண்டார். பிறகு தாசர் தமது மனைவியை நோக்கி, விட்டலனுக்கு உண வளிக்கவேண்டும் என்றார். இவர், ஒரு அப்பத்தை இருவருக்கு எப்படிப் பகிர்வேன் என்று நாணமடைந்து, நமது கணவர் உண்டியில் மண் போட இவன் வந்தானென்று, அப்பத்தையெதிரேவைக்க, பகவானானவர் உண்டு, அந்தக்கலத்தில் சிறந்தவுணவும் கறிவகைகளும் வைத்து, ஆடையால் மூடிவைத்தார். இவர் அந்த ஆடையேதென்று திறந்துபார்த்து, அந்தக் கலத்திலிருந்த வுணவுகளைக்கண்டு, இது இந்தக்கருங் குறளன் செயலென் றறிந்து, அதை இருவருக்கும் படைத்து உண்டபிறகு, கைகால் சுத்திசெய்ய நீர் தேடும்போது, இவ்விடத்தில் கையினால் தோண்டினால் நீர் வருமென்று பகவான் சொல்ல, அப்படியே தோ

ண்ட, நீர் பெருகி வந்தது; அந்த நீரைக்கொண்டு இருவரும் சுத்தி செய்து கொண்ட பிறகு, ஜிஜாயியாரும் உண்டு, வெறுங்கலத்தில் போஜன பதார்த்தங்கள் நிறைந்திருந்ததும், வெறுந்தரையில் நீர் சுரந்ததும் இந்தக் கருங்குறளன் செயலேயாம். இவன் மந்திர சக்தி யுள்ளவனாகத் தோன்றுகின்றது. இப்படிப்பட்ட சக்தியிருக்கையாலல்லவோ நமது கணவருக்குப் பித்தேற்றினான் என்று வியந்திருந்தார்! அப்போது பகவானானவர், துக்காராமனை நோக்கி, நீ இந்த மலைமேலிருந்தால், ஜிஜாயி வந்துபோவது மிகவும்வருத்தம், ஆகையால் நீ இன்று தொட்டு இந்த மலைமேலிருக்கவேண்டாம் என்று நியமிக்க, அப்படியேயாகட்டுமென்று இவர்வணங்க, இவரைத்தழுவிக்கொண்ட பிறகு, கோயிலுக்கு எழுந்தருளினார். பிறகு தாசரும் ஜிஜாயியாரோடு தமது ஊருக்கு வந்து ஹரிபஜனை செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார். இப்படியிருக்குங்காலத்தில், இவர் செய்யும் ஹரிநாமஸங்கீர்த்தனத்தைக் கேட்க வருவோர்கள் விடுகிற செருப்பை யெடுத்து பத்திரப்படுத்தி, அவர்கள் போகும்போது எடுத்து எதிரேவைத்து வணங்குதல் முதலாகிய உத்தம குணங்களை யுடையவராய், ஒருநாள் தமது வீட்டுத் திண்ணையி லுட்கார்ந்து, ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். அப்போது ஜிஜாயியார் தமது ஆடையைக் களைந்து வீட்டின் சுவர்மேல் வைத்துவிட்டு நீராடிக்கொண்டிருக்க, ஒரு ஏழைப் பார்ப்பினி இவரிடத்தில்வந்து, ஐயா! உடுக்க வஸ்திரமில்லாமல் மிகவும வருந்தப்படுகிறேன், ஒரு வஸ்திரம் கொடுத்தால் உமக்குப் புண்ணியமுண்டு என்றாள். அவளை நோக்கி, அதோ சுவரின் மேல் வைத்திருக்கிற வஸ்திரத்தை யெடுத்துக்கொண்டு போவென்று கண் சாடைசெய்ய, அவளும் அப்படியே யெடுத்துக்கொண்டு, உமக்கு ருக்மிணீ நாதர் க்ருபைசெய்வார் என்று சொல்ல, இவர், ஓ பார்ப்பினீ! கூவாமற்போகக்கடவையென்று சொல்லி அனுப்பிவிட்டு, நதிக்குப்போய் நீராடி, அந்த நதிக்கரையில் ஹரிநாம ஸ்மரணை செய்துகொண்டிருந்தார். ஜிஜாயியார் நீராடி வஸ்திரத்தைப் பார்த்துக் காணாமையால் திகைத்து, இருந்த ஒரு வஸ்திரத்தையும் யாரோ கொண்டுபோனார்களே, என் செய்வேன் என்று இரைச்சலிடும்போது, அயல் வீட்டுக்காரன் இவர்க்குக் கேட்கும்படி, யாரோ ஒரு பார்ப்பினி வந்து தெருவில் நின்று, எனக்கு உடுக்க ஆடை யில்லையென்று சொன்னதைக் கேட்டேன் என்றான். அதைக்கேட்ட ஜிஜாயியார் அந்தச் சமயத்தில் பைத்தியங்கொண்ட என் கணவர் திண்ணையில் இருந்தார், அவர் ஒருவேளை அவளுக்குக் கொடுத்திருக்கலாமென்று நிச்சயித்து வருந்தும்போது, இவர் சம்பந்தி வீட்டார் மணச்செய்தி சொல்லவந்து கதவைத்தட்டி, ஜிஜாயி என்று அழைக்க, இவர்கேட்டு மிகவும் மனம்வருந்தித் தத்தளிக்கும்போது, ஸ்ரீருக்மிணீ பிராட்டியார் தமது ஆடையொன்றை இவர் தலைமேலெறிய, அதைப் பெற்றுடுத்து, வியந்து, இதுமானிடர் உடுத்தும் ஆடையல்லவென்றும், இதுசெய்தவன் பகவானேயென்றும்நிச்சயித்து, அந்தஆடையையுடுத்துக்கொண்டு, கதவைத்திறந்தார். வந்தவர்கள் இந்தஆடையின் ஒளியைக்கண்டு

வியந்து, கலியாணசங்கதியைச் சொல்லிவிட்டுப் போனார்கள். பிறகு, துக்காராமர்,நாம் வீட்டுக்குப்போனால் ஜிஜாயி கோவிப்பாளென்று நினைத்துக் காட்டுக்குப்போய், ராத்திரிமுழுதும் கழித்து, உதயத்தில் கோயிலுக்குவந்து பகவானைக் கைகூப்பிவணங்கி, வெண்கற்களைத் தாளமாகக்கொண்டு ஹரிபஜனை செய்தார்.இவர்குரலைக்கேட்டஜிஜாயியார்,உடனே தம்மகள் கையில்அப்பமும் நீரையும் தந்தனுப்ப, தாசர் வாங்கி யுண்டு, ஹரிபஜனை செய்திருந்தார். இருக்கையில் உறக்கம் மிகுந்ததனால், கண்கசக்கிக்கொண்டும், குடுமியில் கயிறு கட்டித் தூணில் தொடுத்தும் விடியுமளவும் தூங்காமல் ஹரிநாம ஸ்மரணை செய்திருந்தார். இன்னமும் இவர் செய்யும் வேலைகள் எவையென்றால், யாத்திரைக் காரருக்குக் கால்பிடித்தல், ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்வோருக்கு வேர்த்தால் கையில் விசிறி கொண்டு விசிறுதல், அவர் இட்ட வேலைகளைச் செய்தல், வெயிற்காலத்தில் வழிநடப்பவர்க்குத் தாகமதணித்தல், அவ்வூரார் எதைச் செய்யச் சொன்னாலும அதைச் செய்து அவரை மகிழ்வித்தல் என்பவைகளே. இப்படி யிருக்கும்போது ஒருநாள், ஒரு கிழ வேதியன் கையிலுள்ள தடியை யூன்றிக்கொண்டு வருத்தத்தோடு வீதிவழியாய் வரக்கண்டு, மனம் பொறுக்காமல் அவனுக்கெதிரேபோய் நின்று, ஐயரே, நீர் நடக்கமாட்டாமல வருந்துகிறீர், என் முதுகில் ஏறிக்கொள்ளும, நீர் விருமபுமிடத்தில் கொண்டுபோய் விடுகிறேன் என்றார். அவன் நான் விளக்கு நெய் வாங்கப் போகிறேன், என்று சொல்ல, அதைக்கேட்டு, நீர் வீட்டுக்குப் போமென்று, பணமும பாத்திரமும் தாம் வாங்கிக்கொண்டு அவனை யனுப்பிவிட்டு, கடைக்குப் போய் விளக்குநெய் வாங்கிக்கொண்டு போய் அவன் வீட்டிற் கொடுத்தார். சிலநாள் கழிந்த பிறகு, அந்தக் கிழ வேதியன், நான் வாங்குகிற விளக்கு நெய் எட்டு நாளைக்கு வருவது வழக்கம், அப்படி யிருக்க, இந்தத் துக்காராமர் வாங்கி வந்து கொடுத்தது அநேக நாள்களுக்கு ஆயிற்று என்று வியந்து ஊரார்க்கெல்லாம் அறிவித்தான். இதைக்கேட்ட மற்றொருவன் இவரைக்கொண்டு வாங்கி அநுபவமாய் எல்லாருக்கும் தெரிவிக்க, ஊராரெல்லாரும் இவரைக்கொண்டே வாங்க விரும்பிப் பணமும் பாத்திரமும் கொண்டுவந்து கொடுக்க, இவர் எடுத்துக்கொண்டுபோய், வணிகனுக்கெதிரே வைக்க, அவன், எந்தப் பணத்துக்கு எந்தப் பாத்திரத்தில் வாக்கிறதென்று கேட்டான், இவர் அதெல்லாம் உனக்கேன் ? பணத்தை யெல்லாம் எடுத்துக் கொண்டு, உன் இஷ்டம்போல வார்க்கக்கடவாயென்றார். அவன் சிரித்து, எல்லாப்பாத்திரங்களிலும் தன்னிஷ்டம்போல வார்த்து வைத்தான், அவற்றையெல்லாம் இவர் ஒரு கயிற்றாற் சுருக்கிட்டு, ஒரு கோலிற் கட்டித் தோளின்மேல் வைத்துக்கொண்டு வரும்போது, அவரவர் கொடுத்த பணத்துக்குத் தகுந்தாக அவரவர் பாத்திரத்தில் விளக்குநெய் யிருக்கும்படி ஸ்ரீகண்ணபிரானவர் க்ருபை செய்ய, இவர் கொண்டுபோய்க் காட்டுதலும், அவரவர், தத்தம் பாத்திரங்களைத் தெரிந்தெடுத்துக்கொண்டார்கள். தாசர், கோயிலுக்குவந்து ஹரிபஜனை செய்துகொண்டிருந்தார். இப்படி, ஊராரெல்லாரும் தம் கணவ

ரிடத்தில் ஊழியம் கொள்வதை ஜிஜாயியார் அறிந்து ஊரார்மீது வைதார். அதைக்கேட்ட சில பெண்கள், ஜிஜாயியாரை நோக்கி, உன் கணவன் செய்யச் சம்மதித்ததனாலே யல்லவா ஊரார் வேலையிடுகிறார்கள்? அதற்காக நீ வைவது தகாது என்றார்கள். பிறகு ஒருநாள் ஜிஜாயியார், துக்காராமருடைய முகத்தைப்பார்த்து, உமது பிதாவுக்கு இவ்வருஷத்திற்குச் சிராத்தமாதலால் அதற்கு வேண்டிய பொருள்களைச் சேகரிக்க வேண்டுமென்றார். அதுகேட்ட தாசர், நான் காட்டிற்போய்க் கீரை பறித்துவந்து கொடுக்கிறேன், அதை வேகவைத்துப் பிதிரர்களுக்குத் திருப்தி செய்யக்கடவாயென்று சொல்லிப்போய், ஒரு கோதுமைக் கொல்லைக் காரனிடத்தில் கூலியாளாய் அமர்ந்து வேலைசெய்துகொண்டிருந்தார். இவர் வரக் காலதாமதமானதால் ஜிஜாயியார் வைதுகொண் டிருந்தார். இந்தச் சமயத்தில் நாம் உதவ வேண்டுமென்று பாண்டுரங்கர் துக்காராமர்போல வேடம்பூண்டு, சிராத்தத்துக்கு வேண்டிய பொருள்களெல்லாம் ஒரு மூட்டையாய்க் கட்டித் தலைமேல் வைத்துக்கொண்டுவந்து, ஜிஜாயியாரிடத்தில் கொடுத்து, விரைவாய்ச் சமையல்செய்யக்கடவாயென்று சொல்லி, தெருவிற் போய், இன்று என் வீட்டில் திதியாகையால், நீங்கள் அமுது செய்ய வாருங்களென்று வேதியரை யழைக்க, அவர்கள் அதிசயித்து, இன்றுதான் துக்காராமருக்குக் குடும்ப விஷயத்தில் மனம் திரும்பிற்றென்று மகிழ்ந்து வந்தார்கள். வந்தவர்களுக்கு ஆசனங்கொடுத்து உபசரித்து இருத்தி, வேத விதிப்படி சிராத்தத்தை முடித்துப் பிறகு போஜனாதிகளும் நடத்தி, எல்லாரையும் அனுப்பின பிறகு, அங்கங்கே வாங்கிவந்த பாத்திரங்களைத் துலக்கி அவரவர்களிடத்தில் சேர்த்து வருகிறேனென்று சொல்லிப்போய்ச் சேர்த்துவிட்டு வீட்டுக்கு வராமல் அப்படியே மறைந்து போனார். பிறகு கூலிக்குப்போன துக்காராமர் நாலரிசை கோதுமையைக் கூலியாகப் பெற்று, உடம்பெல்லாம் தூளிபடிந்து வந்து, மனைவி கையிற் கொடுத்து, இந்தக் கோதுமையைக் கொண்டு, திதியை நிறைவேற்றக் கடவாயென்றார். அப்போது ஜிஜாயியார் இவரை நோக்கி, உமது பித்ரு சிராத்தத்தை முடித்து, வந்தவர்களுக் கெல்லாம் அன்னமிட்டுப்போன நீர், மறுபடியும் இப்படிச் சொல்லுதலுக்கு உமது பைத்தியமே காரணமென்று நினைக்கிறேனென்றாள். அதைக் கேட்ட துக்காராமர் கண்ணீர் பெருக்கி, விட்டலப் பெருமானே, நீர் வந்து என் பித்ரு சிராத்தத்தை முடிக்க நான் என்ன தவம் செய்திருந்தேனோ வென்று மன முருகி, உடனிருந் துண்ணாமற் போனதற்காக மிகவும் மனம் வருந்தினார். வருந்தினதேயன்றி, நீர் வந்து என்னுடன் உண்டாலன்றி உண்ணமாட்டேனென்று பிடிவாதஞ் செய்ய, பகவானானவர் இவர்க்குப் பிரத்தியக்ஷமாகிப் பகவானும், தாசரும், ஜிஜாயி முதலானோரும் கூடியிருந்துண்ட பிறகு, பகவானானவர் தமது கோயிலுக் கெழுந் தருளினார். பிறகு ஒரு நாள் இரவில் தாசருக் கெதிரே யெழுந்தருளி, தாசரை நோக்கி, நீ முன்னே நாமதேவனாய்ப் பிறந்த காலத்தில், என் விஷயமாகச் சத கோடி கிரந்தம் செய்வதாக

ப்ரதிஜ்ஞைசெய்து, எழுதவுதவியில்லையென்றபோது நான் உதவியாயிருந்து எழுதினேனல்லவா? அதில் ஐந்துகோடியே ஐம்பத்தொருலக்ஷம் கிரந்தம் குறைவாயிருக்கின்றதாகையால் அதை யின்று தொடங்கி முடிக்கக் கடவா யென்று நியமிக்க, இவர் மஹா பாக்கியமென்று வணங்கி நின்றார். வணங்கி நின்ற இவரைப் பகவானானவர் தழுவிக்கொண்டு மறைந்து போனார். பிறகு துக்காராமர், முன்னாளில் வேதவியாஸர் செய்த பாகவதத்தில், தசம ஸ்கந்தத்தில், ஸ்ரீ கண்ண பிரானுடைய பால க்ரீடைகளைப் பிராக்ருத பாஷையிற் பாடுவதாக வுத்தேசித்துக் கவிகள் செய்தும, இடைவிடாமல் ஹரிநாம ஸ்மரணைசெய்தும், ஏகாதசியாகிய ஹரிதிநவிரதத்தை நியமமாய் அனுஷ்டித்தும் தம் புகழ் விளங்க அமர்ந்திருக்குங்காலத்தில், சிஞ்சுவடி மம்பாஜிபாவா என்பவன், அவ்விடத்தில் வந்து மடங் கட்டித் தனது குடும்பத்தோடும் மாணுக்கரோடும் வாழ்ந்திருந்தான். அவன் இவரது வைபவத்தைக் கேட்டு, மனம் பொறாமல், இவன் நமக்கெதிரே பாடங்கேட்ட ஒரு சூத்திரன், நான் வேதியனும் அளவற்ற கல்விகற்றவனும் இருந்தும் என்னை யொருவரும் மதிப்ப தில்லை. இவனை ஒருநாள் அவமானப்படுத்தவேண்டும் என்று சமயம பார்த்திருந்தான். இருந்தவன் ஒரு ஏகாதசி தினத்தின் இரவில், இவர் சாதுக்களோடுகூடி ஹரிபஜனை செய்து, கநக விமாநத்தை வலம் வருமவழியில் முட்களை யிறைத்து வைத்தான். அவற்றில் ஒரு முள் இவர் காலில் தைத்தவுடனே அதை வாங்கி யெறிந்து, மற்ற முட்களையும் எடுத் தெறிந்தார். இதைக் கண்ட மம்பாஜி ஒரு முள்ளா தடியைக் கொண்டு தாசரை யடித்தான். அந்தத் தடி முறிய மற்றொரு தடியைக்கொண்டும், அதுமுறிய மற்றொரு தடியைக்கொண்டும் கை சலிக்க அடித்துவிட்டு, மடத்துக்குப் போனான். பிறகு தாசரானவர் முள்தைத்தவருத்தத்தையும் மம்பாஜியடித்ததனு லுண்டான வருத்தத்தையும் நோக்காமல், ஹரிநாம ஸ்மரணை செய்து கொண்டு விட்டலனைக்கண்டு வணங்கி, மூன்று அபங்கக் கவிகளைச் சொல்ல, பகவானானவர் கண்ணீர் பெருக்கி நின்றார். இதை யறிந்த ஜிஜாயியார் வந்து, தம் கணவருடம்பில் தைத்திருந்த முட்களையெல்லாம வருத்தமில்லாமல் வாங்கிச் சாதுக்களோடு நிற்க, பகவானுடைய அருட்கண் பார்வையால் தாசர் வருத்தம் நீங்கி, ஹரிகீர்த்தநம் செய்தார். அப்போது பாகவதர் யாவரும் கூடினார்கள். அந்தக் கூட்டத்தில் மம்பாஜி யில்லாததை யறிந்த தாசர் அவனிருக்கும் மடத்தை யடைந்து, என்னை அடித்ததனால் கை வருந்தின்றதோ, உடம்பு நோகின்றதோ என்று உபசார மொழிகளைச் சொல்லி, உடம்பைப் பிடிக்க, அவன் மிகவும் நாண மடைந் திருந்தான். மறுபடியும் இவர் அவனை நோக்கி, அடியேன்மீது கோவஞ் செய்தல் தகுதி யல்ல வென்று சொல்ல, அவனும் கீர்த்தநம் செய்ய வாருமென்று கூட இருந்தான்; இவரும் கீர்த்தநம் செய்யத் தொடங்கினார். அதில் குற்றம் எங்குண்டோவென்று ஆராய்ந்துகொண் டிருந்தான். தாசரும் விடியு மளவும் கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்க, வீட்டில் ஜிஜாயியார்

உறங்கும்போது இரண்டு கள்ளர்வந்து, அப்பாஜிகுளவே, ஜிஜாயிக்கு வாங்கிக்கொடுத்த எருமையை அவிழ்த்து ஓட்டிக்கொண்டு, மேற்கு முகமாகப் போகும் போது, ஸ்ரீ கண்ண பிரானனவர் துக்கா ராமர் கீர்த்தனம் பாடிக் கொண்டிருக்கிறார், ஜிஜாயி உறங்குகிறார்; நாம் சும்மாவிருக்கோமானால், ஜிஜாயியானவள் விடிந்த வுடனே எருமையைக் காணுமல் துக்காராமரைக் கடிந்துபேசி வருத்துவாளென்று, அந்த நடுராத்திரியில் கையில் ஒரு பெரிய தடியை யெடுத்துக்கொண்டு கோர ரூபத்தோடும், அந்தக் கள்ளர் போகும் வழியில் எதிர்ந்து, அடிக்க வருகிறவன்போலத் தோன்றுதலும், திருடர் கண்டு பயந்து, நம்மை யடிக்க ஏதோ ஒரு பூதம் வருகின்றதென்று அந்த வழியை விட்டு விலகிப் போக, அங்கும் வர, அஷ்ட திக்குகளிலோடி அங்கங்கும் வரப்பார்த்து, இது பூதமோ, பிசாசமோ, பிரமராக்ஷஸோ, நாம் பகவத் தாசருடைய மாட்டைக் கொண்டுபோவதைக்கண்டு மனம் பொறுக்காமல் ஸ்ரீகண்ண பிரானே நம் முயிரை வாங்கும்பொருட்டு இந்தப் பூதத்தை யனுப்பினாரோ வென்று, திரும்பி வந்து எருமையைத் துக்க ராமர் வீட்டுத்தோழத்தில கட்டிவிட்டுத் தமமூர்க்குப் போகும்போது, முன்போலவே வந்து எதிரே நிற்கக் கண்டு, இது நாம எங்கே போனாலும் விடாது; தாசரிடத்துக்குப் போய் விண்ணப்பம பண்ணிக்கொண்டாலன்றி நமது துன்பம் தீராது என்று நிர் மானித்துக்கொண்டு கோயிலுக்குவந்து, தாசருடைய திருவடியை வணங்கி, இதுவரைக்கும் நடந்த செய்தியைச் சொல்லிச் சரணடைந்தார்கள். அப்போது தாசர் பகவானைத்தியானித்தார். உடனே பகவான் எழுந்தருளாமையால் அவர்கள் சொலலுவது உண்மையென் றறிந்து, ஓ பாண்டுரங்கா! அடியேன்மீது என்ன கோவம்! அடியேன் நினைக்கு முன்னே யெழுந்தருளுகிற நீர் இன்றைக்கு எங்கே போயிருக்கிறீர்? சூரியன் உதிக்குங் காலமாயிற்றேயென்று மிகவும் பிரார்த்தித்து வணங்க, பாண்டுரங்கர், கைத்தடியோடு எதிர்ந்ததைக் கண்ட தாசர், சோரரைநோக்கி, இப்பொழுது அந்த எருமைமேல் விருப்பமுண்டானல் கொண்டுபோகலாமென்றார்; அந்தச் சோரர்கள், எங்களுக்கு உயிர் தந்ததே போதும், எருமை வேண்டாமென்று சொல்லிப் போய்விட்டார்கள். சோரர்வந்து தாசரிடத்தில் சொல்லிக்கொண்டதுமுதல் நடந்தசெய்தி யெல்லாம அங்கேயிருந்து பார்த்தவரெல்லாரும் அதிசயித்து, தாசரைப புகழ்ந்துகொண்டாடினார்கள்.

இந்த அற்புதங்களை யெல்லாம் கண்ட மமபாஜி, அஞ்சி, தன் செருக்கிழந்து அதிசயித்து நின்றான்! பிறகு தாசரும பகவானுக்கு ஹாரதிசமர்ப்பித்தார். பொழுது விடிந்த பிறகு இந்திராயணி நதியில் நீராடி, ஸ்ரீஹரி பூஜை செய்து பஜனை செய்துகொண் டிருந்தார். கோயிலில் நடந்த செய்தியைச் சிலர் போய் ஜிஜாயியார்க்கு அறிவிக்க, அவரும் மிகவும் மனமகிழ்ந்து எருமையானது கட்டாமல்நிற்பதையும்கண்டு வியந்து, கணவன்மீது மிகுதியான அன்புபூண்டு, கீரையும் அப்பமும் ஒரு கிண்ணத்தில் பாலும் அமை

த்துவைத்து, இவர் வீட்டுக்கு வந்தவுடனே எதிரே வைத்து உபசரித்தார்; இவர் அந்த அப்ப முதலியவற்றைக் கண்டு, என்று மில்லாத வுபசாரங்கள் இன்று இவள் செய்கிறாளே, இது என்னென்று அதிசயித்து, ஜிஜாயியாரை நோக்கி, தினந்தோறும் திரிகாணசுத்தியாய் ஒரு கிண்ணத்தில் பால்தருவை யானால், நான் விட்டலப்பெருமானுக்குச் சமர்ப்பிப்பேனே என்றார். அப்படி சொன்னவுடனே ஜிஜாயியார் ஒரு செம்பு நிறையப் பால் வார்த்துக்கொடுத் தார். இவர்அதைக்கொண்டுபோய்ப் பகவானுக்குச் சமர்ப்பித்தபிறகு தாமும உண்டார். இப்படிச் சிலநாள் கழிய, ஜிஜாயியார், ஒருநாள், இதென்ன விப ரீதம்! வீட்டில் பால் தயிர் சிறிதுமில்லாதபடி தினந்தோறும் ஒரு செம்புப் பால் கொண்டுபோய் விட்டலனுக்குக் கொடுப்பது முறைமையோ என்று ஆலோசித்து, நாள்தோறும் தாசரோடுகூடப்போகிற மகளாகிய பாகீரதியை நோக்கி, நீ உன் தந்தையோடு போகிறாயே, அவர் அந்தப் பாலைக் கொண்டு போய் விட்டலனுக்கு ஊட்டுவது உண்மைதானோ என்று கேட்க, பாகீரதி, உண்மைதான், தினந்தோறும் விட்டலன் குடித்துக் கொஞ்சம் பாலை என் தந்தைக்கும் கொடுக்கிறானென்றாள். அதுகேட்ட ஜிஜாயியார், அப்படியா னால், நான் கொண்டுபோய்க் கொடுக்கிறேனென்று, ஒரு செம்பு நிறையப் பால்வார்த்துத் தூக்கிக்கொண்டுபோனார். இதையறிந்த பகவானானவர், இந்த ஜிஜாயி நம் மிடத்தில் சிறிதாயினும் அன்பில்லாதவள், இவள் கொடுக்கும் பாலையும் உண்பது தகுதியோ? தகுதியல்லவென்று மறுத்தால், தன் கணவ னைக்கோபித்துப் பொய் சொன்னாயென்று கடிவாளே! இதற்கென்ன செய்ய லாமென்று ஆலோசித்துக்கொண்டிருக்கும்போது, ஜிஜாயியார் வந்து, தாம் கொண்டுவந்த மிகவும் சூடாயிருக்கிற பாலைக் குடிப்பித்தார். அந்தச் சூடு பொறுக்காமல் விட்டலப்பெருமானுடைய இதழ் கொப்புளங்கொண்டு, அந்த வருத்தத்தினால் தலையை யசைத்தார். அன்றியும் கழுத்தும் ஒரு பக்கம் கோணலாய்விட்டது. இதைக்கண்ட ஜிஜாயியார் கல் லுருவாகிய இதற்கும் உயி ரிருக்கிறதேயென்று அதிசயித்து, பகவானது திரு முகத்தை நோக்கி, உதட்டில் கொப்புளமிருக்கக் கண்டு, இது மிகவும் அதிசயமா யிருக்கிறதெ ன்று வியந்து வீட்டுக்குப் போன பிறகு, பகவானானவர் தாசரது மனத்தில் எழுந்தருளி, உன் அன்புக்கிரங்கி, உலகவியற்கையை மறந்து, நீ குடிப்பிக் கிற பாலைக் குடித்து வருகிறேன்; இதைக் குறித்து உன் மனைவி யென்னை வைவதும் உன்னைக் கோவிப்பது மன்றி, இன்று அதிக வெப்பமா யிருக்கிற பாலைக் கொண்டுவந்து குடிப்பித்து என் உதட்டில் கொப்புள முண்டாகவும் என் கழுத்தில் கோண லுண்டாகவும் செய்து போனாள்; எனக்கு இவ்வளவு துன்பம் உன்னால் உண்டாயிற்று என்று சொல்ல, தாசர் மிகவும் மனம் கலங்கி, மனைவியை நோக்கி, பகவானுக்குச் சூடான பாலை யூட்டி வருத்த முண்டாக்கினாய்; இது உனக்குத் தகுதி யல்ல வென்றார். அதைக் கேட்ட ஜிஜாயியார், கணவரை நோக்கி, நன்று சொன்னீர்! நீர் நாள்தோறும் கோயி லில் ஹரிகீர்த்தநம் செய்யும்போது, ப்ருந்தாவநத்தில், பன்னிரண்டு யோச

னைப் பாப்பாகிய நெருப்பை யுண்டான் என்று அந்த விட்டலனது பெருமையைச் சொன்னீர்; அப்படிப்பட்டவனுக்கு இந்தப் பாற் சூடு பொறுக்காமல் உதடு கொப்புளங் கொண்டதென்று சொல்லுவது மிகவும் ஆச்சரியம்! இது உண்மை யானால் நீர் சொன்ன பிருந்தாவனத்தின் செய்தி பொய்யாய் முடியும் என்றாள். இதைக்கேட்ட தாசர் ஒன்றும் பேசாமல், விரைந்துபோய் ஸ்ரீ கண்ணபிரானைக் கண்டு, உதடு கொப்புளங்கொண்டிருப்பதை நோக்கி, மிகவும் மனம் வருந்திக் கண்ணீர் பெருகிப் புலம்பி நிற்க, பகவானானவர் அந்தக் கொப்புளத்தை மறைத்துப் பழையபடியே சேவை சாதித்தருளக் கண்ட தாசர் மனமகிழ்ந்து, பகவானைத் தோத்திரஞ்செய்து தமது வீட்டுக்குப்போய் விட்டார். கழுத்துக் கோணல் மாத்திரம் இப்பொழுதும் உண்டு. அதுநிற்க, ஒருநாள் தாசர்காட்டுக்குப்போய்த் தங்கியிருந்தார், அவ்விடத்தில் கொசுகு அதிகமாய்வந்து இவரை மொய்த்துக் கடித்து உதிரத்தை யுறிஞ்சத் தொடங்க, இவர் அதற்கு மனம் வருந்தாமல், இந்தச் சரீரமெடுத்தது பிறவுயிர்களுக்கு உபகாரஞ்செய்தற் பொருட்டல்லவா? ஆகையால் அந்தப்பிராணிகள் பசி தீர உதிரமருந்தப்பட்டது நமக்குப் பெரிய புண்ணியம் என்று சகித்துக்கொண்டும், பகவானை ஸ்மரித்துக்கொண்டும் இருந்தார். இப்படி யிருக்கும்போது, பகவானானவர் இராவழிச்செல்வோன் போல அவ்வழியாய்வந்து, ஒரு ஈச்சந் தோகையைக் கைக்கொண்டு, இவரை நெருங்கி, இவரை மொய்த்துக்கொண்டிருக்கிற கொசுகை விடியுமளவும் ஓட்டிக்கொண்டிருந்தார். விடிந்த பிறகு, தாசரானவர் தெருவுக்குவந்து, நீராடிப் பூஜைமுடித்து, ஹரிபஜனை செய்துகொண்டிருந்து, அஸ்தமித்தவுடனே திருக்கோயிலுக்குப்போய்ப் பகவானைக்கண்டு வணங்கி, இராமுழுதும் பஜனை செய்துகொண்டிருந்து, விடியற்காலத்தில் ஹாரதி சமர்ப்பித்துத் துதித்தார். இப்படி நாள்தோறும் நடந்துவருங்காலத்தில், இவர்க்கு மூத்தவனாகிய மாதேவனுக்குக் கல்லடைப்புக் கண்டு மிகவும் வருந்துவதைக் கண்ட தாயாகிய ஜிஜாயியார் அதற்குப் பலவகையாகிய பரிகாரங்கள் செய்தும் தீரா திருக்க, ஐயோ! இந்த மகன் இவ்வளவு வருந்துவதைச் சற்றும் நோக்காமல் பஜனைசெய்துகொண்டு திரிகிறாரேயென்று கணவரை வெறுத்துக் கொண்டு, அண்டை வீட்டுக்காரியோடு சொல்லிப்புலம்ப, அவள் இவரைநோக்கி, அம்மா, நீயேன் துக்கிக்கிறாய்? உன் கணவர் என்றைக்கு விட்டலனைப் பஜிக்கத்தொடங்கினாரோ அன்றைக்கே உனக்கு எல்லாத் துன்பங்களும் நேரிட்டன இனி வருந்துவதனால் பயனில்லையென்று தேற்றினாள். அயல்வீட்டுக்காரி இவ்வளவு சொல்லவே, கள்ளுண்டு வெறிகொண்ட குரங்கைத் தேள் கொட்டினாற்போலத் துள்ளித் துடித்துக் கடுங் கோபங் கொண்டு, இந்த விட்டலன் என்னும் வஞ்சகன், என் கணவரைக் கைவசப்படுத்திக் கொண்டதுமன்றி, என் குடும்பத்தையும் நாசமாக்கினானே என்று பலவாறாகப் பகவானை நிந்தித்துக்கொண் டிருந்தார். இப்படி யிருக்கும்போது, மகனுக்கு நோய் வரவர அதிகரித்து, இனிப் பிழைக்கமாட்டானென்று, கண்டோர்சொல்லும்படியான திசையுண்டாக, ஜிஜாயி

யார் அந்த மகனைத் தூக்கிக்கொண்டு, கண்ணபிரான் கோயிலுக்குப் போய் அவன்மேலெறிந்து உயிர் விடச்செய்கிறேன் என்று புறப்பட்டார். அதை யறிந்த கண்ணபிரான், ஸ்ரீருக்மிணீ பிராட்டியை நோக்கி, ஜிஜாயியானவள், தன் மகனை யென்மேலெறிந்து கொல்லவேண்டுமென் றெண்ணி வருகிறாள், அவள் அப்படிச் செய்து அந்தப் பிள்ளை யிறந்தால், என்மேல் பழிசுமக்குமே, இதற் கென் செய்யலாமென்று கேட்க, பிராட்டி நகைத்து, சர்வஜ்ஞரும், சர்வசக்தருமாகிய தேவரீர், என்னைக் கேட்பது மிகவும் நன்றாயிருக்கின்றது! இது, சூரியன் இருளை நீக்குவதற்கு வேறொரு உதவி தேடுவதுபோலிருக்கிறது! நீர் கருணை செய்தால் அவன் பிழைக்கமாட்டானோவென்று சொல்லிக்கொண்டேயிருக்கும்போது,ஜிஜாயியாரும்வந்து,மகனைக்கண்ணபிரான் மேல் எறியும்பொருட்டு நெருங்கி வந்தார். அப்போது அங்கே எறியாதே, நில்நில்என்று ஒரு அசரீரியுண்டாயிற்று. அதைக்கேட்ட ஜிஜாயியார்,இங்கேயிந்தக் கல்லையன்றி வேறொன்றையும் கண்டிலோம், இந்தச் சத்தம் எங்கேயிருந்து உண்டாயிற்றென்று சுற்றிலும்பார்க்கும்போது, பிராட்டியார் உன் மகனுக்கு நல்லகாலம் வாய்த்தது, அஞ்சவேண்டாம், போவென்று சொல்லவே, மகனை நோக்கினார். மகனும் நோய் நீங்கப் பெற்று, எனக்குப் பசியாயிருக்கிறது என்றான். அப்போது ஜிஜாயியானவர், கல்லும் பிள்ளையும் பேசினதைக் கண்டு மன மகிழ்ந்து, இந்த விட்டலன் தன் மேற் பழிசுமத்துவேனென் றஞ்சியல்லவோ இவனைப் பிழைப்பித்தான்? நான் இவ்வளவு செய்யாமற்போனால் இவன் வழிக்கு வருவானா? இவன் மாயையில் வல்லவன் என்று சொல்லி, தன் மகனைத் தூக்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து, நல்லுணவையூட்டி மகிழ்ந்திருந்தார். இந்தச் செய்தியை யறிந்த தாசர், பகவானுக்கு இவ்வளவு துன்பத்தை யுண்டாக்கினாளே யென்று மனைவியை வெறுத்துக் கொண்டு, அஸ்தமித்தவுடனே கோயிலுக்குப் போய்ப் பகவானைச்சேவித்துக் கீர்த்தனம் பாடிக்கொண்டிருக்க, கங்காஜிமவாளா என்பவர் ஒருவர், எவ்வளவு சாயித்தியம் செய்தாலும் எழுதவல்லவரோடும், உதவிபாடகரோடும், சாங்கணம் என்னும் ஊரில் வாழ்பவராகிய சந்தாஜியென்னும் வணிகரோடும், மற்றும் சிலவேதியரோடும் வந்து இவரைக் கண்டு, ஒருவர்க்கொருவர் நட்புக்கொண்டு, கேட்பவரெல்லாரும் ஆநந்தசாகரத்தில் மூழ்கும்படி ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தனம செய்துகொண்டிருந்தார். பகவானும் இவர் செய்யும் பஜனையைக் கேட்டு, ஆநந்தமடைந்து, சாமங்கள்தோறும் இவரைத் தழுவிக் கொண்டார். விடியற்காலத்தில் ஹாரதி சமர்ப்பித்து எல்லாரும் தத்தம் இடங்களுக்குப் போய்விட்டார்கள்.

அப்பால், பகவானானவர், ஸ்ரீருக்மிணீபிராட்டியை நோக்கி, என் அன்பராகிய துக்காராமருக்கு அருள் செய்யவேண்டி யிருக்கின்றது என்று சொல்ல, பிராட்டியார், பகவானை நோக்கி, ஆதியில் விபீஷணாழ்வான், அநுமான் என்பவர்கள், உனது ஹிதோபதேசத்தால், உலகம் யாவும் அழியுங்காலத்தி

மும் அழியாத நிலையை யடைந்தார்கள். அப்படியே இந்தத் துக்காராமனும் உன் அருளுக்கு உரியவனானால் உபதேசித்தருளலாம் என்றார். அதுகேட்ட ஸ்ரீகண்ணபிரானும், மாகசுத்த தசமி வியாழக்கிழமையில், நித்திரை செய்து கொண்டிருக்கிற துக்காராமர் கனவில், ஒருவேதிய வுருவங்கொண்டு வந்தார். அவரைக் கண்டவுடனே திருத்துழாய் மாலையைக் கையிலேந்தி எதிரே வந்த துக்காராமர் அந்த வேதியரைப் பார்த்து, வணங்கி, கையிலிருந்த திருத்துழாய் மாலையை அந்த வேதியர் கழுத்தி லணிந்து, சாஷ்டாங்க தண்டம் சமர்ப்பித்துத் தோத்திரம் செய்தார். அப்போது அந்த வேதியர் மனமகிழ்ந்து, தாசருடைய சிரசின்மேல் கைவைத்து, செவியில் தமது திருநாமத்தை உபதேசித்தருளினார். உபதேசித்தருளின பிறகு, இந்த மந்திரத்தை, இவ்வுலகத்தில் உமது மனத்துக் கிசைந்தவர்களுக்கு உபதேசித்து, குருபரம்பரை தவறாமல் வரும்படி செய்யக் கடவீரென்று நியமிக்க, தாசரும அப்படியே யாகட்டும, தேவரீர் என் மனைக்கு எழுந்தருளி என்னைப் புனிதனாக்கவேண்டும என்று பிரார்த்திக்க, வேதியர், உன் விருப்பத்தின்படியே நான் வருகிறேன், எனக்குக் காற்சேர் நெய் கொடுத்தால், சமையல் செய்துண்டு மகிழ்வேனென்றார். அதைக்கேட்ட தாசர், அப்படியே தருகிறேன், வாருமென்று சொல்லி அழைத்துப்போய் வீடுசேர்ந்து, மனைவியைநோக்கி, ஒரு வேதியர் நமது வீட்டுக்கு எழுந்தருளினார், அவருக்குச் சமையல்செய்துண்பதற்கு வேண்டிய பதார்த்தங்க ளெல்லாம் கொடுப்பதோடு, காற்சேர் நெய்யும் கொடுக்கவேண்டும் என்றார். அதைக்கேட்ட ஜிஜாயியார், மிகவும் கோபித்து, இந்த வேதியன் எங்கேயிருந்து வந்தான், வறுமையால் வருந்துகிற நான் இவனுக்கு வேண்டிய வுணவைச் சேகரிப்பதோடு காற்சேர் நெய்யை எப்படிச் சம்பாதித்துக்கொடுப்பேன்? சமையல் செய்வதற்குரிய பாத்திரங்களெல்லாம் ஓட்டையாயிருக்கின்றன, எதையாகிலும விற்றுச் சரிப்படுத்தலாமென்றால் மட்கலங்களேயன்றி நமமிடத்தில் வேறொரு பொருளு மில்லையே, இப்படி யிருக்கையில், வருவோருக்கெல்லாம எப்படியுண வளிப்பேன்? என் மக்களும நானுமே வயிறு வளர்ப்பது துர்லபமாயிருக்க, என்னிடத்தில் வந்து இப்படி நிர்ப்பந்திப்பது வேதியர் முதலானோர்க்குத் தகுதியோ என்று இப்படிப் பலவகையாய்ச் சொல்லி அதட்டினாள். இதைக் கண்ட அந்த வேதியன், இவ்விடத்தில் நமக்குப் பிக்ஷை கிடைக்காதென்று தீர்மானித்துக்கொண்டு போய்விட்டான். உடனே துக்காராமர் விழித்துக்கொண்டு, உத்தமகுருநாதர் நமக்கு ப்ரத்யக்ஷமாகி, நமது பிறவிக் கடலைக் கடத்தினார். அப்படிப்பட்டவருக்குக் காற்சேர் நெய்யை அவர் விரும்பினபடியே கொடுக்கப் பெற்றிலேன். தமது பெயர் கேசவசைதந்யர் என்று சொல்லி, எனக்கு உபதேசமும் செய்தருளினார் என்னும் பொருளமைந்த மூன்று கவிகளைச் சொன்னார். பிறகு பகவத் குணாநுபவமாகிய பேரின்பத்தை யடைந்து, தம்மை வந்து அடுத்தவர்களுக்கெல்லாம் உபதேசித்து வந்தார். பிறகு தமது மனைவியாராகிய ஜிஜாயியார் கனவிலும் நல்ல வார்த்தை

களைப் பேசுவதில்லை யென்பதைக் குறித்து மிகவும் மனம் வருந்தி, இவளை விட்டு நீங்கினாலல்லது நமக்கு நன்மை கிடைப்பதருமை, அன்றியும். பகவத் பக்தர்களுக்கு அபராதியுமாவேனென்று ஆலோசித்து, குடும்பத்தை விட்டு நீங்கி, ஒரு அரணியத்தை யடைந்து, பகற்கால முழுதும் ஹரிபஜனை செய்துகொண்டிருந்து, அஸ்தமித்த பிறகு பகவத் ஸந்நிதியை யடைந்து, நான்கு சாமமும் ஸ்ரீ ஹரிநாம ஸங்கீர்த்தநம் செய்து, சூரியோதயத்தில், நதியில் நீராடி அரணியத்தை யடைந்தார். இப்படி நாள்தோறும செய்துகொண்டும, யாவராயினும உணவளித்தால் அதிற் சிறிது உண்டுகொண்டும், வீட்டிற்கு வாராமலே இரண்டு மாசகாலம் கழித்தார். இப்படி யிருக்கையில், ஜிஜாபியார் அயலாளொருத்தியை நோக்கி, என் கணவர் இரண்டு மாசகாலமாய் வீட்டுக்கு வாராமல் அரணிய வாசம் செய்துகொண்டிருக்கிறார். நான செய்த பாவத்தின் பயன் இது வென்று சொல்லிப் புலம்பினாள். பிறகு ஒருநாள் இந்திராயணி நதியில் நீர்கொண்டுவரப் போய், அந்த நதியில் நீராடிக்கொண் டிருந்த தன் கணவரை நோக்கி, அவரைக் கிட்டி வந்து, நீர் இரண்டுமாசகாலமாய் வீட்டுக்கு வாராமல நீர்மாத்திரம வயிறு வளர்த்துக்கொண்டு சுகமாயிருந்தால், நானும் என் மக்களும எப்படி ஜீவிப்போம? வீட்டுக்கு வந்து எங்களுக்கு ஒரு ஏற்பாடு செய்துவிட்டுப் போம என்று சொல்லி மடியைப் பிடித்துக்கொண்டார். அப்போது தாசரானவர் மனைவியாரை நோக்கி, எல்லாச் சீவர்களுக்கும நித்யமான தாய் தந்தையராகிய பிராட்டியையும் பெருமாளையும் இடைவிடாமல் பஜித்துக்கொண்டிருப்பாயானால் உனக்கும உன் மக்களுக்கும் ஒரு குறையு மிருக்காதென்றார். அதைக்கேட்ட ஜிஜாபியார் அப்படியே செய்கிறேன், நீர் வீட்டுக்கு வாருமென் றழைக்க, தாசர், நான் சொன்னபடியே நீ நடப்பதாக நீ ஒரு பிரதிஜ்ஞை செய்வாயானால் உன் விருப்பத்தின்படியே வருவேனென்றார். அப்படியே ஜிஜாபியாரும ப்ரதிஜ்ஞை செய்துகொடுத்துக் கணவரை வீட்டுக் கழைத்துக்கொண்டு போனார். தாசரும ஹரி பஜனை செய்து கொண்டு இனிது வாழ்ந்திருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள், ப்ருந்தாவனத்திலிருந்து அநேக சாது ஜநங்கள் இவர் செய்யும ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்தநத்தைக் கேட்கவந்தார்கள். அவர்களைக் கண்ட ஜிஜாபியார் மிகவும் கோவங் கொண்டு சீறுதலும, தாசர், ஜிஜாபியாரை நோக்கி, நான் செய்யும் பஜனையைக் கேட்க வருவோர்களை நீ வெறுத்துக்கொள்வதினால் உனக்கென்ன லாபம? அவர்கள் வருவதினால் உனக்கென்ன கஷ்டம என்று ஹித வசநங்கள் சொல்ல, ஜிஜாபியாரும கோவந் தணிந்து அடங்கியிருந்தார். இந்தச் செய்தியை யறிந்த சாதுக்களெல்லாரும் அஞ்சி இவரிடத்துக்கு வராதிருந்தார்கள். அவர்கள் வராமைக்குக் காரணம் தமது மனைவியாரென்றறிந்த தாசரானவர், ஜிஜாபியாரை நோக்கி, பெண்ணே, இனி நாள்தோறும் நான் செய்யும் பஜனையைச் சிரத்தையோடு கேட்கக்கடவையென்றார், அதைக் கேட்ட ஜிஜாபியார், இவர்சொற்படி நாம் கேட்காமற்போனால், நாம் இவரை

யழைக்கும் போது செய்த ப்ரதிஜ்ஞை தவறும் என்று நினைத்து, தாசருக் கருகே வர, தாசர் ஜிஜாயியாரை நோக்கி, பெண்ணே, இந்தச் சரீரம் அநித்ய மாகையால், நமது வாழ்நாள் வீணாகாமல், நம்மிடத்திலுள்ள பொருள்களெல்லாவற்றையும் அஸ்திரமானவை யென்று அவற்றில் விருப்பமற்று, மக்கள் மேலும் அப்படியே நிராசை யுள்ளவளாய், பாண்டுரங்க பகவானே தாய், தந்தை, குரு, செல்வம் என்று, அவன் திருவடியை இடைவிடாமல் ஸ்மரித்துக்கொண்டு வருவையானால், இம்மையில் புகழும், மறுமையில் மோக்ஷபதமும் அடையலாம், இனி வேறுவகைகளைக்குறித்து வருந்தவேண்டாம், இன்று ஏகாதசி, நாளை துவாதசியாதலால் சூரியோதயத்தில் நீராடி வீட்டுக்கு வந்து, உள்ள பொருள்களெல்லாவற்றையும் திருமாலடியார்களுக்குக் கொடுத்து, நமது விட்டலப்பெருமானை இடைவிடாமல் தியானித்துக்கொண்டிருக்கக் கடவாயென்றும் பொருளமைந்த பதினொரு கவிகளை யருளிச் செய்தார். அந்தக் கவிகளுக்குப் பூர்ண போதம் என்னும் பெயர் வழங்குகின்றது. அதைக்கேட்ட ஜிஜாயியார் முதலானவர் யாவரும் மிகவும் விரக்தியடைந்தார்கள், ஜிஜாயியார்க்குத் திவ்யஞானம் உதயமானதனால், சூரியோதயத்தில் இந்திராயணி நதியில் நீராடி, வீட்டுக்கு வந்து, வேதியரை வரவழைத்து, மனப்பூர்த்தியாய் அவர்களுக்குத் தமது பொருள் முழுதும் கொடுத்து, நனைத்துக்கொண்டு வந்த ஒரு பழைய வஸ்திரத்தை வெயிலில் உலர்த்தினார். அந்தச் சமயத்தில் திருமகள் ஒரு புலைச்சி யுருவம் கொண்டு, தாசரிடத்தில் வந்து, ஒரு வஸ்திரம் கொடுப்பீரானால் உமக்குப் பெரும் புண்ணியம் உண்டாகுமென்று சொல்ல, தாசர், உலர்த்துக்கொண்டிருக்கிற வஸ்திரத்தை யெடுத்துக்கொடுத்து, இதை நான் கொடுத்ததாகப் பிறர் அறியும்படி சொல்லாதே, விரைவாய்ப் போய்விடு என்றார். இந்தச் செய்தியை அருகே பார்த்திருந்த மக்கள்போய் ஜிஜாயியாரிடத்தில் சொல்ல, ஜிஜாயியார் கோபங் கொண்டு, என் கணவரென்று அன்போடு வீட்டுக்கழைத்து வந்து அவர் சொன்ன கவிகளின் கருத்தை யறிந்து ஒரு கரியனாகிய பாவியின் பாதத்தை நினைத்தேன், நினைத்தவளவில் வீட்டிலிருந்த பொருள் முழுதும் தொலைபட்டது, அந்தக் கரும பாவியை நினைத்தால் உடனே வறுமையுண்டாகும் என்று ஊராரெல்லாரும் சொன்ன சொல் உண்மையாயிற்று, ஆதலால் எந்தப் பாதங்களை நினைத்தவுடன் எனக்கு இப்படிப் பட்ட அநர்த்தம் நேரிட்டதோ, அந்தப் பாதங்களை இந்தக் கல்லினால் முறிக்கிறேனென்று ஒரு கருங்கல்லைக் கைக்கொண்டு கோயிலுக்குப்போய், விட்டலப்பெருமானுக் கெதிரே நிற்க, பகவானானவர் தமது அருமைத் திருமேனி நடுங்க, பிராட்டியை நோக்கி, ஜிஜாயி என் காலை முறிக்கக் கருங்கல்லைக் கைக்கொண்டு நிற்கிறாள். இதற்கு நான் என்செய்வேன் என்று சொல்ல, பிராட்டி, ஜிஜாயியை நோக்கி, நீ இப்படிக் கடுஞ்சினம் கொண்டு என்பிராணநாதரைக் காலைமுறிக்க வந்ததற்குக் காரணமென்னென்றுகேட்க, ஜிஜாயியார், பிராட்டியை நோக்கி, நேற்றிரவில் என் கணவர் தந்திரமாய்ப்

போதித்ததை நம்பி, இவன் பாதத்தைச் சற்று நினைத்தேன். பொழுது விடியு முன்னே வீட்டி லிருந்த பொருள் முழுதும் தொலைந்து இந்தத் துன் பத்துக்கு ஆளானேன், ஆதலால இவன் பாதங்களை முறிக்கத் துணிந்துவந் தேன் என்று சொல்லுதலும், பிராட்டியார், ஸ்ரீஜாயியாரை நோக்கி, நீ உன் சிறு வாழ்க்கையை நினைத்து வருந்த வேண்டாம் என்று சொல்லி, நாலு பொன் விராகனும், பொற்கச்சும், பொற்சரிகையாடையும்கொடுக்க, பெற்று க்கொண்ட ஸ்ரீஜாயியார் மனக் களிப்போடு அந்த ஆடையை யுடுத்து வெளி யேவந்தார். இவரைக்கண்ட தாசர் நகைத்து, இந்தச் சரிகைச் சேலையேது? உன் கையி லுள்ளது யாது சொல்லென்று கேட்க, ஸ்ரீஜாயியார் உண்மையைச் சொன்னார். தாசர் நன்றென்று சொல்லிக் கையி லிருக்கிற பொருளில் சில பொருளை மாத்திரம் மனைவியா ரிடத்தில் கொடுத்து மற்றதைச் சாதுக்களு க்குக் கொடுத்துவிட்டார். பிறகு ஸ்ரீஜாயியார், கணவர் கொடுத்த சில பொரு ளைக்கொண்டு வீட்டுக்கு வந்து சுகமாய் வாழ்ந்திருந்தார். பிறகு, தாசர் பூனா வென்னும் ஊருக்குப் போய், அங்குள்ள ஒரு செட்டி வீட்டில் ஹரி பஜனை செய்துகொண்டிருந்தார். இப்படி இவர் இருப்பதை சிவாஜிராஜன் அறிந்து, இவர் செய்யும ஹரிநாம ஸங்கீர்த்தநத்தைக் கேட்க விரும்பி, அந்த ப் பூனாவிலுள்ளார் தனக்குப் பகைவராதலால் வேற்றுருக்கொண்டு போய், தாசரைக் கண்டு வணங்கி, ஒரு பொற்றட்டு நிறையப் பொன் மொஹரா க்களைக் கொட்டி, தாசருக் கெதிரே வைத்துத் தோத்திரம் பண்ணினான். அதைக் கண்ட தாசரானவர், ஸ்ரீலக்ஷ்மீநாதராகிய பகவானை யன்றி வேறொரு பொருளையும் நான் விரும்பிலேன், நீ யென்னை மகிழ்விக்க விரும்புவை யானால், திருத்துழாய் மாலையைக் கழுத்திலணிந்து, பகவந்நாம ஸ்மரணை செய்துகொண்டும, ஏகாதசி விரதத்தை யனுஷ்டித்துக்கொண்டும, திருமா லடியவன் என்கிற பெயர் புனைந்தும் இருக்கக்கடவாய் என்றார். அதைக் கேட்ட அரசனும் அப்படியே யாகட்டுமென்று ஒருபக்கத்திலிருந்து ஹரி நாமஸங்கீர்த்தநத்தைக் கேட்டுக்கொண்டிருந்தான். இப்படி யிச்சிவாஜிராஜன் உருமாறிவந்துஹரிநாமஸங்கீர்த்தநத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிற செய்தி யைக் காவலாளரால் அவ்வூர்க் கரசன அறிந்து, இரண்டாயிரம் வீரராகிய படாணிமாரோடும் உருவிய வாளோடும் வந்து, தாசரிருக்கும் செட்டி வீட்டை வளைந்துகொண்டு, தாசரைநோக்கி, இந்தக் கோஷ்டியில் சிவாஜி இன்னானென்று எங்களுக்குக் காட்டவேண்டு மென்றான். அப்போது தாசர் இந்தச் செய்தியைச் சிவாஜிக்குக் குறிப்பாகத் தெரிவிக்க, சிவாஜி, நாம் வெளிப்படுவதற்கு மார்க்க மெது வென்று ஆலோசித்துக்கொண் டிருக்கும் போது, தாசர், பகவானைக்குறித்து, ஓ பக்தவத்ஸலா, என்னிடத்தில் அன்பு மிகுந்தவனும் இங்குவந்த சிவாஜிராஜன் இறப்பானானால் நானும் உயிர் விடு வேன் என்று சொல்லி, முன் போலவே ஹரி நாம ஸங்கீர்த்தநம செய்து கொண்டிருந்தார். இப்படி யிருக்க, வந்த துலுக்கவீரர், இந்த வீட்டில் உள்ளவர்களைக் கொன்று லல்லது அரசனைக் காட்ட மாட்டார்களென்று

ஆரவாரித்தார்கள். அப்போது பகவானுனவர், ராஜவேஷங்கொண்டு வெளியே வந்து, சிவாஜிகான்தான், இதோ என்னூருக்குப்போகிறேனென்றுசொல்லி, ஒரு குதிரைமேலேறி விரைவாகச் செல்லக் கண்ட பட்டாணி வீரரெல்லாரும் தொடர்ந்துபோய், இவரைப் பிடிக்கமாட்டாமல் அயர்ந்து நின்றார்கள். இவர்கள் அயர்ந்து நிற்கக்கண்ட பகவானுனவர், இவர்களை இம்மட்டில் விடக்கூடாதென்று தமது குரல் காட்டினார். குரல் கேட்டவுடனே அயர்ந்து நின்றவர்கள் மறுபடியும் தொடர்ந்தோடி, இருட்டில் வழி தெரியாமல் முட்களிலும் கற்களிலும் முட்புதர்களிலும் சிக்கித்தும், மோதியும் சரீர முழுதுங் காயப்பட்டு மிகவும் வருந்தி அலுத்திருக்க, பகவானுனவர் அவர்களை அவ்விடத்தில் விட்டு, தாசரிடத்திற்கு வந்து, பகைவர் யாவருந் தொலைந்தார்கள், நீ பஜனை செய்யென்று சொல்லி, தாமும் நடனம் செய்துகொண்டிருந்தார். தாசர் சிவாஜியை நோக்கி, உனது துன்பம் நீங்கிவிட்டது என்று சொல்லி, சூரியோதயத்தில் பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்து, சிவாஜியை ஊருக்குப் போகும்படி நியமித்தார். அரசனும் அப்படியே விடைபெற்றுப் புறப்பட்டான். அவனைக் கண்டயாவரும் இவனைநோக்கி, நேற்றிரவில் துலுக்கவீரருக்கெதிரே குதிரையேறிப்போனவர் நீர், மறுபடியும் ஹரிநாம ஸங்கீர்த்தனம்கேட்க எப்படிவந்தீர்? அந்தத் துலுக்கர் போனவழி யாது என்றுகேட்க, அரசன் அவர்களை நோக்கி, எனக்கொன்றும் தெரியாது, நடந்ததெல்லாம் பகவான்செயலேயென்று சொல்லிவிட்டுத் தன்னூரையடைந்து சுகமாய் வாழ்ந்திருந்தான். துலுக்கவீரர், விடியுமளவும் காட்டில் வருந்தியிருந்து, விடிந்த பிறகு தம் அரசனிடத்திற்போய் நடந்த செய்தியைச் சொன்னார்கள். இப்படியிருக்க, ஊரையடைந்த சிவாஜிராஜன் தாசருடைய பெருமையை நினைத்துக்கொண்டபடி, தாசருக்குப் பொருள்கொடுத்தால் பெற்றுக்கொள்ள மாட்டாரென்று, ஒரு பெரிய எருது சுமக்கும்படியான நெற்பொதியைக் கொண்டுவந்து தாசர்வீட்டிலிறக்கி, தாசரை வணங்கி, தேவரீர் பொன் முதலிய பொருள்களை விரும்பாமற்போனாலும், உணவுக்குரிய இந்தத் தானியத்தையாவது அங்கீகரிக்கவேண்டுமென்று சொல்லிப் போய்விட்டான். தாசரும் தமது தேவியாரை யழைத்து, இந்த நெற் பொதியை சிவாஜிராஜன் கொண்டுவந்து கொடுத்துப் போனான்; இதை யவிழ்த்து, இதிலுள்ள தானியத்தில் இன்றைக்கு மாத்திரம் நமக்கு வேண்டியதை யெடுத்துக்கொண்டு, மற்றத் தானியத்தை யாசகர்களுக்குக் கொடுத்துவிடு, நாளைக்கு வேண்டுமென்று எடுத்து வைக்கவேண்டாம் என்றார் இப்படி யிவர் சொல்லக்கேட்ட ஜிஜாயியார் கோபங்கொண்டு, கை தலைபுடைத்துச் சொல்லுகிறார். நீர் உழைத்துச் சம்பாதிக்கவில்லையே, அரசன் கொண்டுவந்து கொடுத்ததை நானும் என் மக்களும் உண்டு சுகித்திருக்க உமக்கு மனம் பொறுக்கவில்லையே, இதென்ன அநியாயமென்று, தானியமுழுதும் எடுத்து வீட்டில் நிறைத்துவைத்தார். மற்றொருநாள் இந்தத் துக்காராமர் ஹரிகதை செய்வதை ஒரு வளையல் விற்போன் வந்து கேட்டு ஆநந்தமடைந்து, அது முதல்

திநந்தோறும் அப்படியேவந்து கேட்டுக்கொண்டு போகிறவனுயிருந்தான். ஒரு நாள் அவன் மகன் நோயால் வருந்தி யிறக்குந்திசையா யிருப்பதையும் யோசிக்காமல் ஹரிகதைகேட்கப் புறப்பட்டான். அப்போது அவன் மனைவி எவ்வளவுசொல்லித் தடுத்தும் கேளாமல்போய், தாசர் செய்யும ஹரிகதை கேட்டுக் கொண்டிருந்தான். வீட்டில் பிள்ளை யிறந்து போனன். அவனைத் தாயானவள்யெடுத்துக்கொண்டுதாசர்ஹரிகதை செய்யுமிடத்துக்குவந்து மேலே விழுந்து, தாசரை நோக்கி, இந்தக்கதையை எம் முன்னோர் ஒருவருங்கேட்கும வழக்கமில்லை, என் கணவன் நூதநமாய் இந்தக் கதையைக்கேட்க வந்ததனுல் என் மகனிறந்தான், இவன் இறப்பதற்குக் காரணமாயிருந்தவர் நீர்தானென்று தாசர்மீது பழி சுமத்தினுள். அப்போது அங்கிருந்தவரெல்லாரும் அவளைநோக்கி, உண்ணுஞ் சோற்றில் மணவிழுந்ததுபோல் ஹரி கதைகேட்குஞ் சமயத்தில் பிணத்தைக் கொண்டு வந்தாய், இது உனக்குத் தகாதென்றும், இறந்த பிள்ளையை நீ கொண்டுவந்ததனுல் ப்ரயோஜநம் யாது? தாசர் இறந்த பிள்ளையைப் பிழைப்பிக்கும்படியான மருந்து வைத்திருக்கிறரோ! போபோ, பைத்தியக்காரியென்றும் சொன்னர்கள். அப்போது தாசரானவர், அவர்களை நோக்கி, ஸ்ரீ ராமநாமாம்ருதத்துக்கு மற்ற அமுது ஒப்பாகுமோ! ஆகாது! நீங்கள் ஹரிநாமத்தின் ஏற்றத்தை யறிய விருமபினுல், ஹரிநாமத்தை நீங்களெல்லாரும ஓதுங்கள்! இறந்த இந்தச்சிறுவன் பிழைப்பான் என்ருர்! இதைக் கேட்ட எல்லாரும் அப்படியே ஓததலும், இறந்த சிறுவன் பிழைத்தெழுந்தான்! இதைக் கண்டவரெல்லாரும் அதிசயித்தார்கள். சிறுவனைப்பெற்ற தாயானவள் தாசரைவணங்கி, தன் மகனையெடுத்துக்கொண்டு வீட்டுக்குப்போய்விட்டாள். இப்படிப்பட்ட இவரது இணையில்லாத பக்திக்கு மேக வண்ணராகிய பகவானனவர் மிகவும் மன மகிழ்ந்து, அன்றுமுதல் தாக்காராமரோடு கூடியிருந்து அமுதுசெய்து வருவாராயினர். இப்படி யிருக்குங் காலத்தில், சிஞ்சுவடியென்னும் ஊரிலுள்ள வேதியர் யாவரும், தாசருடைய பெருமையைக்கேட்டு, நாமெல்லாரும் விநாயகவுபாசனையைநியமமாய்ச் செய்தும், விநாயகர் வெளியாகவில்லையே, இதற்குக் காரணம் யாதென்று வினவினல், பகவான் தம்மோடு கூடியிருந்து அமுதுசெய்யும்படியான பெருமபாக்கியம் பெற்றவராகிய தாசர் சொல்லக்கூடுமென்று இவரை யழைத்து வரும்படி, அந்த வேதியர்க்குத் தலைவராகிய சிந்தாமணி யென்பவர் ஒரு ஆளனுப்ப, அந்த ஆள் வந்துசொல்லுதலும் தாசர் புறப்பட்டு, சிஞ்சுவடிக்குப்போகும்போது, வழியில், வந்த ஆளானவன் வேதியர் செய்திமுழுதுஞ் சொல்ல, தாசர் நல்லதென்று அவ்வூரை யடைந்து, வேதியர் தலைவன் வீட்டுக்குப்போனர், அந்தச் சமயத்தில் அந்த வேதியன் விநாயகபூசையிலிருந்தான். ஆனல் அவன் மனமானது அவனது நந்தவநம் அசுத்தமாயிருப்பதைக்கண்டு அதைச்சுத்தப்படுத்தக் கடவாயென்று வேலைக்காரனைக் கோவித்துக்கொள்ள, அதைத்தடுத்துத் திருப்பிப் பழையபடியே விநாயகர்மீது நிறுத்திப்பூசையை முடித்து வெளியேவந்து, தாசரைக்கண்டு, எப்பொழுது வந்தீரென்றுவினவ, தாச

ரும் அவனை நோக்கி, நீர் விநாயகபூஜைசெய்யும்போது, உமதுமனம் கந்தவனத்துக்குப் போனபோது வந்தேனென்றார். அதைக்கேட்ட வேதியன் வியந்து, இவரை உலக முழுதும மெச்சுவது சகஜமேயாமென்று மதித்து, இவரோடு பகவான் கூடியிருந்து உண்பதைமாத்திரம் தெரிந்துகொள்ள வேண்டுமென்றெண்ணி, வேதியர் பந்திக்கருகே இவருக்கு இலைக்கலமும போட அதைக் கண்ட தாசர், என்னோடு பகவானும வந்து உண்பார், அவருக்கும் இலை பரப்பும் என்றார். அப்படியே வேதியரும பரப்பினார்கள். பிறகு அந்த வேதியர்கள் இவரை நோக்கி, நீ ஜாதி, ஆசார முதலியவற்றால் இழிந்தவன், அப்படியிருக்க, பகவான் எப்படி உன்னோடு கூடியிருந்துண்பார் என்று கடிந்து கேட்க, இவர் அவர்களை நோக்கி, ஓ அந்தணரே, பகவானானவர் நமது ஜாதியாசாரமுதலியவற்றில் அகப்படமாட்டார், சித்த சுத்தியோடுகூடின பக்தி வலையில் அகப்படுவார் என்று சொல்ல, அவர்களும் இன்னம் சற்று நேரத்தில் அறிவோமென்று, இலைகளில் அன்னம் பதார்த்தவகைகள் முதலிய வெல்லாவற்றையும படைத்துப் பார்த்திருந்தார்கள். அப்போது பகவானுக்கு அமுது படைத்த இலையிலுள்ளவைகள் வரவரக் குறைவதைக் கண்டு அதிசயித்து, இந்த இழிந்தசாதியாரோடு பகவானானவர் கூடியிருந்துண்ணும்போது, உயர்ந்த ஜாதியாராகிய நம்மோடு விநாயகர் ஏன் கூடியிருந்துண்ணலாகாது என்று, தமது குலச் செருக்கோடு நின்று விநாயகரைத் தோத்திரஞ்செய்து, அவர் வாராமையைக் கண்டு நாணி, தாசரை வணங்கி, நீர் திருமாலை யழைத்தது போல விநாயகரையும் அழைக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, இவர் அப்படியே யாகட்டுமென்று சற்று நேரம சும்மா இருந்தார், அப்போது வேதியர் இவரை நோக்கி, வரவழைக்காமல் ஏன் சும்மா இருக்கிறீர் என்றார்கள், அதற்குத் தாசர், விநாயகர் இப்பொழுது விக்ரஹத்திலில்லை, ஒரு பக்தனது துன்பத்தைத் தீர்க்கும்பொருட்டுக் கடலையடைந்திருக்கிறார், சற்று நேரம்பொறுங்களென்று சொல்லி, விநாயக மூர்த்தி, தமது விக்ரஹத்தில் பிரவேசித்தவுடனே தோத்திரஞ்செய்ய, உடனே விநாயகர் வந்து அமுதுண்பதை அவ்வேதியருக்கு அறிவிக்க, அவர்களும அவருக்கிட்ட இலையிலுணவு முதலியவை குறைந்து வருவதைக் கண்டு, விநாயகர் ஆலயத்திற் போய், விக்ரஹத்தின் ஆடை நனைந்திருப்பதைக் கண்டு, அதிசயித்து, வெளி யேவந்து, தாசரை நோக்கி, இந்த ரஹஸியத்தை நீர் எப்படியறிந்தீர் என்றுகேட்க, தாசர், அவர்களை நோக்கி, எல்லாம பகவத் கடாக்ஷத்தால் நடக்கின்றனவென்று சொன்னார். அவர்களும் உமது பக்தியின் பெருமையைச் சொல்ல ஒருவராலும் முடியாதென்று புகழ்ந்து கொண்டாடினார்கள். தாசர் அன்றிரவில் ஹரிகதை செய்து, சூரியோதயத்தில் விடைகேட்க, அவ்வூரிலுள்ள மறையோரெல்லாரும் இன்னமொருதரம் இவ்விடத்துக்கு எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். தாசரும அப்படியே யாகட்டுமென்று புறப்பட்டு வரும் வழியில், ஒரு கருப்பந்தோட்டக்காரன், இவரைக்கண்டு வணங்கி, ஸ்வாமீ! தேவரீர் அடியேன் குடிசைக்கெழுந்தருளி, அடியேனையும் அந்தக்குடிசையையும்

பரிசுத்தமாக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்தான்; அவன் ப்ரார்த்தனைக்கு இவர் இசைந்துபோனார். போதலும், அவன் தன்னாலியன்றவளவு உபசரித்துக்கருப்பஞ் சாற்றைப் பருகும்படி யெதிரே வைத்தான்; ஸ்ரீ ஹரிநாமாம்ருதத்தை இடைவிடாமல் பருகிக்கொண்டிருப்பவராகிய இவர் நாவுக்கு மற்றொன்றும் இனிதாயிராதாயினும், அவனது அன்புக் கிரங்கி, அந்தக் கருப்பஞ்சாற்றைப் பருகிமகிழ்ந்தார். பிறகு அந்தத்தோட்டக்காரன் ஒருகட்டுக் கரும்பைக் கொண்டுவந்து எதிரேவைத்து, இதைக் கொண்டுபோய், மக்களுக்குக் கொடுமென்று ப்ரார்த்தித்தான். அதை தாசர் தோளின்மீது சுமந்து கொண்டுவந்து ஊரில் பிரவேசித்தவுடன், ஊரிலுள்ள சிறுவர் யாவரும் இவரை வந்து சூழ்ந்துகொள்ள, அவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு கரும்பாகக் கொடுத்து, மிச்சமாயிருந்த ஒரு கரும்பைமாத்திரம் வீட்டிற்குக் கொண்டுவந்தார். இவர் ஒருகட்டுக் கரும்பைக் கொண்டுவந்ததும், ஊரிலுள்ள சிறுவர்களுக்குக் கொடுத்ததும் ஆகிய இந்தச் செய்தியாவும் கேட்டறிந்திருந்த ஜிஜாபியார், தம் கணவரைநோக்கி. ஒரு சுமைக்கரும்பில் இந்த ஒன்றைத்தானோ கொண்டுவந்தீர் என்று கோபித்து, இவர்கையிலிருந்த கரும்பைப்பறித்து இவர் முதுகின்மீது ஓங்கியடித்தவுடன், அந்தக் கரும்பு முறிபட்டு இரண்டு சிறு துணிக்கைகள் பூமியில் விழுந்தன. ஒரு துணிக்கை ஜிஜாபியார் கையிலிருந்தது, இதைக்கண்டும் சிறிதும் கோபம் கொள்ளாதவராகிய தாசர், தேவியார் முகத்தை நோக்கி, உன் கையிலிருக்கிற துணிக்கை உனது, கீழேவிழுந்த துணிக்கைகளிரண்டில் ஒன்று என்னது, ஒன்று நம் மக்களது என்றார், அதைக்கேட்ட ஜிஜாபியார், லோக விவகாரங்கள் யாவையுமொழித்து இவ்வளவு சாந்தசீலராயிருப்பது மிகவும் அருமை, இப்படிப்பட்ட பரமபாகவதராகிய நமது கணவனை யான் வீணாய் நிந்தித்தும் அடித்தும் வருத்தினேம்! இதனால் நமக்கு என்ன தீமை விளையுமோவென்றஞ்சி, இவர் திருவடியை வணங்கி, என் பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தார். பிறகு தினந்தோறும் கணவருடைய பணிவிடையில் மிகவும் சிரத்தையுடையவராயிருக்குங்காலத்தில், இவர்புதல்வியாகிய, காசி, பாகீரதி, கங்கா என்னும் பெயர்களையுடைய மூவரும் புஷ்பவதிகளானார்கள். அப்போது ஜிஜாபியார், கணவரைநோக்கி, நமது புதல்வியர் மூவரும் பருவமடைந்து விட்டார்களே, இனி அவர்களுக்குக் கலியாண முடிப்பதற்கு யோசிக்காமலிருக்கலாமா என்று சொல்ல, தாசர் உடனே புறப்பட்டுப்போய், தமது ஸ்வஜாதியிற் பிறந்த மணவாளர் மூவரைத் தேடிக்கண்டு அழைத்துவந்து மண முடித்துவைக்க, அவர்கள் சுகமாய் வாழ்ந்திருந்தார்கள். இப்படியிருக்க,

பீடபரகணம் என்னும் ஊரில் ஒரு வேதியன், ஸ்ரீ பண்டரிபுரத்திலுள்ள பகவத்ஸந்நிதியை யடைந்து, ஓ பகவானே, அடியேனுக்கு இம்மை மறுமையின் பயன்களை அநுக்ரஹிக்கவேண்டும் என்று அடஞ் செய்து, அந்நபாநாதிகள் இல்லாமல் பத்துதினமிருந்தான். பத்துநாள் கழிதலும், விடோபாவானவர் அவன் கனவில் வந்து, அளிந்தி யென்னும் ஊரில் ஞான

ருக்குப் போய்விட்டான். இந்தச் செய்தி முழுதும் சிவாஜி ராஜன் கேட்டு, அறிவில்லாத மூடனுக்கு இப்படிப்பட்ட நன்மையைத் தந்த துக்காராமரை இன்ன மொருதரம் கண்டு வணங்க விரும்பியிருந்தான். அப்போது லோகம் என்னும் ஊரிலுள்ள வேதியரெல்லாரும தாசரை யழைத்துக்கொண்டுபோய், ஒருமாசகாலம ஹரிபஜனைசெய்திருக்கப் பிரார்த்திக்க, இவரும் அதற் கிசைந்து அப்படியே பஜனை செய்திருந்தார். அந்தச் சமயத்தில், அவ்வூரி லுள்ள ஒரு கிழப்பார்ப்பினி வறுமையும முதுமையு முடையவளா யிருப்பவள், இவரிடத்தில் வந்து, நான் விரும்புகிற நாளில் என் வீட்டுக்கு வந்து, அமுது செய்து ஹரிநாமஸங்கீர்த்தநம செய்யவேண்டும் என்று ப்ரார்த்தித்து, இவர் இசைந்த வுடனே போய், ததீயாராதநத்துக்கு வேண்டிய பொருள்களெல்லாம் சேகரித்து வைத்துக்கொண்டு, தாசரை யழைக்கத் தகுந்த நாள் பார்த்தாள். அன்று அவள் வீட்டுச் சுவர் அதிக மழையால் நனைந்து சாய்ந்திருப்பதைப் பார்த்து, துக்காராமரிடம் வந்து, கண்ணீர் பெருக அழுது நின்று, ஸ்வாமீ, தேவரீருக்கு அமுது அளிக்கவேண்டுமென்று, அதற்கு வேண்டிய பொருள்களெல்லாம் சேகரித்தேன், மழைபெய்து வீட்டுச் சுவர் சாய்ந்திருக்கின்றது, இதற்கென்செய்வே னென்றாள். அதைக்கேட்ட துக்காராமர், அந்தப் பார்ப்பினியை நோக்கி, நீ அழ வேண்டாம், நான் ஹரி பஜனை செய்து வெளிப்படுமளவும் அந்தச் சுவர் விழாது, நீ அஞ்சாமல் எல்லாம் சித்தம் செய்யலாமென்றார். அப்படியே அவளும்போய், பத்துநாள் கழித்து,ஒருநாள் உணவு முதலிய எல்லாம் சித்தப்படுத்தி வைத்துக்கொண்டு, துக்காராமரை யழைக்க, இவரும் போய், வேதியரோடும் உண்டு, கீர்த்தநம் செய்து முடிந்த பிறகு, பார்ப்பினியை நோக்கி, அம்மே, நீ சமையல்செய்த பொருள்களெல்லாவற்றையும் கொண்டு வெளியே வாவென்று நியமித்தார். அப்படியே அவள் செய்தவுடனே, சாய்ந்திருந்த சுவர் இடிந்துவிழுந்தது. அதைக்கண்ட துக்காராமர் அவ்வூர்த் தலைவனை நோக்கி, இந்த ஏழைப்பார்ப்பினி கைம்மையும் முதுமையுங்கொண்டவள், இவள் வீட்டை நன்றாய்க் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று நியமிக்க, அவனும் அப்படியே வீடுகட்டிக் கொடுத்து, க்ருஹப்ரவேசம் செய்யுந் தினத் திரவில், துக்காராமரைக் கொண்டு ஹரிகதா கால க்ஷேபமும் நடத்துவித்தான். பிறகு தாசரானவர், அவ்வூரா ரிடத்தில் விடைபெற்றுத் தம்மூரையடைந்து ஹரிநாமஸங்கீர்த்தநம் செய்துகொண்டு இருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில், வாகோளியென்னும் ஊரில் வாழ்பவனும், ஆறு சாஸ்திரங்களில் வல்லவனும், ராஜஸம்மாநம பெற்றவனும்ஆகிய ராமேச்சுரபட்டன் என்பவன், பரமசாதுவாகிய துக்காராமருடைய ப்ரபாவத்தைக் கேள்விப்பட்டு, இவரிடத்தில் த்வேஷமுள்ளவனாய், இவரை யவமாநம்செய்ய வெண்ணி, அரசனிடத்திற்போய், துக்காராமன் என்றொரு சூத்திரன் தேகுவில் தோன்றி, வேதசாரங்களையெல்லாம் வெளிப்படையாய் எல்லாருக்குஞ் சொல்லி, அநேகமான ஹரிகீர்த்தநங்கள் பாடி, வேதியரையும் மோஹிக்கச்

செய்து, வேதியர் முதலானோர் யாவரும் தன்னைவணங்கும்படிசெய்து, தர்ம மார்க்கங்கள் பலவற்றையும் நீக்கி, திருமாலின் திருநாமமே சிறந்ததென்று சொல்லி, எல்லாரும் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்யும்படிசெய்தான். ஆகையால், நான்கு வர்ணத்தாரும் தங்கள் தங்களுக்குரிய கர்மங்களை விட்டொழிந்தார்கள். நீ அரசனுதலால் இப்படிப்பட்ட செய்தியை விசாரிக்காமலிருப்பது உன் அரசாட்சிக் குரிய தர்ம மல்லவென்று, அரசன் மனம் கலங்கும் படி சொன்னான். அதைக் கேட்டவுடனே, அரசன் கோவங் கொண்டு, அவ்வூர் அதிகாரிக்கு, நீ இந்தக்ஷணமே துக்காராமனை கமஹூர்விட்டு நீங்கும்படி செய்யக் கடவையென்று ஒரு நிருபம் எழுதியனுப்பினன். அவ்வதிகாரி, பயந்து, அந்த நிருபத்தைத் துக்காராமரிடத்திற் கொண்டுபோய்க் காட்ட, துக்காராமர் அந்த நிருபத்தைப் படித்துப்பார்த்து, கோயிலிற்போய், விட்டலப் பெருமான் மீது ஒரு அபங்கக் கவி சொல்லி வாழ்த்தி, பட்டனைக் காணும் பொருட்டு வாகோளிக்குப் போனர். இவர் போனசமயத்தில் பட்டன் பூஜை செய்து கொண்டிருந்தான். இவர் அவனுக் கெதிரேபோய் நின்று கீர்த்தனம் பாடினர். அவன் இவர் முகத்தைநோக்கி மிகு கோவங்கொண்டு, சூத்திரனுகிய நீ ஹரி நாம ஸங்கீர்த்தனம் செய்கிறாய், அந்தக் கீர்த்தனங்களில் வேதார்த்தங்கள் அநேகமாயடங்கி யிருக்கின்றன, இப்படி நீ செய்வது தகாதகாரியம், உன் கீர்த்தனத்தைக் கேட்பவர்களுக்கு நரகமே யுண்டாகும், ஆதலால் இனி நீ கவி பாடவேண்டாம், இதற்கு முன்னே பாடினகவிகளை நதியில் விட்டுவிடு, போவென்றான். துக்காராமர் அவன் சொன்னதைக் கேட்டு, உடனே தமது ஊருக்குப் போய், அவ்விடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிற விட்டலனைக் கண்டு, கண்ணீர் பெருக்கி நின்று, தேவரீருடைய நியமனத்தால் அடியேன் செய்த கவிகளை யெல்லாம நதியில் விடும்படி நேரிட்டது என்று விண்ணப்பம் பண்ணி, தாம செய்த கவிப் புத்தகத்தை இந்திராயணி நதியில் விட்டுவந்து, பாண்டுரங்க பகவானைப் பணிந்து நின்றார். இந்தச் செய்தியை யறிந்த நல்லோ ரெல்லாரும், பரம துஷ்டனுகிய பட்டனால், அற்புதமான துக்காராமருடைய கவிப் புத்தகம் நதியில் விட நேரிட்டதேயென்று துன்ப மடைந் திருந்தார்கள். துஷ்டர்கள், இந்தத் துக்காராமன் சூத்திரன், இவன் வேதார்த்தங்களைத் தன் கவியி லமைத்துப் பாடலாமோ, பட்டர் நல்ல வேலைசெய்தார், இவனது செருக்கை யழித்துவிட்டார் என்று பேசிக்கொண்டு மனமகிழ்ந்திருந்தார்கள். அன்று கோயிலிற்போய், பகவானை வணங்கிப்போன தாசர், சந்நிதிக் கெதிரே நின்று, பகவானைநோக்கி, நான் கவி சொன்னது என்னிஷ்டத்தினுலேயோ, தேவரீருடைய நியமனத்தாலன்றோ? பட்டர் முதலானோர் என்னை யிகழ்வது நீதியோ என்று அழுது கொண்டே சொல்லி, கோயிற் புறத்திலுள்ள ஒரு நந்த வனத்தில் வந்து, அங்குள்ள ஒரு பாறையின் மேல், ஸ்ரீ ஹரி நாம ஸ்மரணையுடனே எழுந்தருளி யிருந்தார். ஆனல் இவர் ஊணுறக்கங்களை யொழித் திருப்பதை யறிந்த சாதுக்கள் பலரும் வந்து இவரை உபசரித்தும் இவர் மனமிசையப் பெற்றாரில்லை. இந்தப்

பிரகாரமான துன்பத்தை இவர்க்கு உண்டாக்கின பட்டனது நற் செய்கைக ளெல்லாம் நீங்கி விட்டன. பிறகு ஒருநாள் புனவிலுள்ள சிவபெருமானைக் கண்டுவணங்கவேண்டுமென்றெண்ணிப் பரிஜநங்களோடு புறப்பட்டுப்போன பட்டன், அன்று துவாதசியாதலால், அங்குள்ள வனகட சித்தர் பூந்தோட்ட த்திற்போய், அதிலுள்ள தடாகத்தில் முழுகும்போது, அந்தச் சித்தர் கண்டு, இவன் யார்? இவன் என்னமந்திரத்தையோ வாயினாற்சொல்லி, நான் நிமாஜ செய்யுங் குளத்தில் முழுகி, குளத்தைக் கெடுத்தான் என்று கோவித்து, ஒரு சாபமிட்டார். அந்தச் சாபத்தியால் பட்டனுடைய சரீரமுழுதும் எரிக்க ப்பட்டபோது, பட்டன் சஹிக்கமாட்டாமல், குளக்கரையி லிருப்பவரை நோக்கி, இந்தக் குளத்து நீர் என்னை யிப்படி சுடுவதற்குக் காரணமென்ன வென்றுகேட்க, அவர்கள் பட்டனைநோக்கி, இந்தக்குளம் இந்தப் பக்கிரினால் உண்டானது, இவர் நிமாஜ செய்வதும் இதில்தான், இதில் நீ முழுகின தைப் பொறுக்காமல், அவர் சபித்ததை நாங்கள் காதாரக் கேட்டோம், ஆத லால் அந்தப் பகீரை வணங்கினால் சாபம் நீங்கும் என்று சொன்னார்கள். இதைக் கேட்ட பட்டன், நான் சிறந்த வேதியன், ஆதலால் இவனை வணங்க மாட்டேன் என்று அந்தத் தடாகக் கரையில் வந்து நனைந்த ஆடையைப் போர்த்தும் நெருப்புச் சூடு தணியாமல் வருந்துவதைக் கண்ட பரிஜநங்கள் நீரை முகந்து அவன் தலைமேல் வார்த்தும் அழல் வெப்பம் தணியாமை யால், வேதியன் மிகவும் வருந்தித் தன்னைச் சேர்ந்தோரை நோக்கி, நான் பிழைப்பது அருமை, நான் பிறந்த நாள்முதல் நான் செய்த தவமும் தர்ம மும் அழிந்து பயன்கொடாதனவாக, இந்தத் துன்பம்வந்து வாய்த்ததென்று சொல்லிப் புலம்பிக்கொண்டே ஊருக்குவந்தான். இவன் வருவதைக்கண்ட வரெல்லாரும் ஒருதுறவிக்கனிட்டசாபத்தை வேதியன் தன்தவவலியால் நீக்கி க்கொள்ள மாட்டாமல் வருந்துகிறானே, இதற்குக் காரணம் யாதென்றால், பரம பாகவதராகிய துக்காராமரை நிந்தித்து அவர் செய்த கவிகளையும் அழி த்ததே யாகும் என்று பேசிக்கொண்டார்கள். இப்படியிருக்கையில், பட்டன் ஞான தேவரிடத்துக்கு வந்து வணங்கி, தன் சரீர தாபத்தைத தீர்க்கும்படி ப்ரார்த்தித்து, ஒரு புறத்தி லிருந்தான், பிறகு துக்காராமர் பதின் மூன்று நாள்வரைக்கும் அன்ன பாநாதிகளில்லாமல் பகவந்நாம ஸ்மரணை செய்துகொ ண்டிருந்ததனால் பகவானவர் இவருக்குப் பிரத்தியக்ஷமாகி நீ என் குணங்க ளைப் புகழ்ந்துபாடின நிர்த்தோஷங்களான கவிப்புத்தகங்களில் ஒன்றாயினும் அழியாமல் வைத்திருக்கிறேன், அதைக் குறித்து நீ கவலைப் படவேண்டாம் என்று இத வசநங்களைச் சொல்லி மறைந்தார். அப்படி மறைந்தவர் அவ் வூரிலுள்ள சாதுத் தலைவருடைய கனவில் அழகான வுருவத்தோடு போய், என் அன்பனாகிய துக்காராமன் யாற்றில் விட்ட புத்தகங்களெல்லாம் நீரில் மிதந்து கொண்டிருக்கும், நாளை உதயத்தில் அவற்றை யெடுத்துக் கொள் ளுங்கள் என்று சொல்லிக் கோயிலுக் கெழுந்தருளினார். கனவு கண்டவரெ ல்லாரும் விழித்தெழுந்து, காலையில் நதிக்குப்போய், மிதந்துகொண்டிருந்த

புத்தகங்களை யெடுத்துக் கொண்டுவந்து, படுத்திருந்த துக்காராமரைக்கண்டு வணங்கி, ஸ்வாமீ, த்ரிவிக்ரமனாகிய பகவானானவர் உமது அன்புக்கு எளியவரானார். அவரது கருணையால் உமது புத்தகங்களெல்லாம் ஆற்றில் மிதந்து வரக்கண்டு எடுத்துவந்தோம், இவற்றைப் பாரும் என்று சொல்ல, துக்காராமர் கண் விழித்துப் புத்தகங்களைப் பார்த்து, ஓ பகவானே, ஆற்றில் விட்ட புத்தகங்களை அழியாமற் காத்ததும், பதின் மூன்று நாளளவும் அன்னபானாதிகளை வெறுத்திருந்த என்னுயிர் நீங்காமற் காத்ததும் ஆகிய இந்த ப்ரயாசையைத் தேவரீர் எடுத்துக்கொண்ட விஷயத்தில் அடியேன் அபராதியானேன், என் அபராதத்தை க்ஷமித்தருளவேண்டுமே என்று பல அபங்கக் கவிகளால் தோத்திரம் செய்து, பகவத்தியானத்தோடிருந்தார். இவர் இப்படியிருக்க, ராமேச்சுர பட்டன் நோய் பொறுக்கமாட்டாமல், இக் கலியுகத்தில் உலகத்தை யுத்தரிக்க எழுந்தருளவேண்டும் என்று, ஞான தேவரை ப்ரார்த்திக்க, ஞானதேவர் வேதியன் கனவில் வந்து, நீ செருக்கினால் திருமாலடியார்க்குத் துன்பஞ்செய்தாயாதலால் உனக்கு இந்தத் தீமைவிளைந்தது, இனியாகிலும் போய், துக்காராமரைச் சரணமடையக் கடவாய்; அடைவாயானால், இந்தத் துன்பக்கடலைமாத்திரமே யல்ல, பிறவிக் கடலையும் கடப்பாய்; பகவத்தாசரிடத்தில் ஒருவன் குற்றம் செய்தால், அதனால் வருந் துன்பம் அந்தத் தாசராலே யன்றி மற்றையரால் நீங்காது; ஆதலால் நீ துக்காராமரிடத்துக்குப் போவென்றார். வேதியன் உடனே விழித்தெழுந்து, ஞான தேவர் சொன்னபடி செய்ய விருப்பினவனாயினும், துக்காராமரிடத்துக்கு நேரே போகப் பயந்து, தன் கனவில் ஞானதேவர் சொன்னதையும், தனக்குள்ள சரீர வெப்பத்தை நீக்கவேண்டுமென்பதையும் ஒரு கடிதத்தி லெழுதி ஒற்றரிடத்தில் கொடுத்தனுப்பினான். அதைத் துக்காராமர் பார்த்து, பட்டனுக்கு இந்த நோயுண்டாகலாமோ வென்று மனம் வருந்தி, சித்த சுத்தி யுண்டானால், பகையும் நட்பாகும், புலி பாம்பு முதலிய துஷ்ட ஜெந்துக்களும் துன்பஞ் செய்யமாட்டா, நஞ்சும் அமிர்தமாகும், துன்பமும் இன்பமாகும், நெருப்பும் குளிர்ந்திருக்கும் என்னும் பொருளமைந்த ஒரு அபங்கக் கவி யெழுதிப் பட்டனுக் கனுப்பினார். அதைக் கண்ட பட்டனுக்கு, உடனே சரீர தாபம் நீங்கிவிட்டது. அதனால் பட்டன் ஆரோக்கியம் அடைந்து மன மகிழ்ச்சியோடு, துக்காராமரைக் காண வருவதை யிவர் அறிந்து, வேதியனை நாம் எதிர்கொள்வது நன்றென்று எதிரே போனார். இவரைக் கண்ட பட்டன் வீழ்ந்து அடி வணங்கினான். வணங்கி, என் பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தான். துக்காராமர் இவன் ப்ரார்த்தனைக் கிரங்கி, ஐயோ, அடியேன் தாழ்ந்த சாதியான், நீர் உயர்குலத்தீர், நீர் என் அடியைப் பணிதல் தகுதியோ வென்றார். அதற்குப் பட்டன் துக்காராமரை நோக்கி, நீர் எனக்கெழுதி யனுப்பின கவியினால் அடியேன் புநிதனானேன், ஆதலால் உமது அடியை வணங்குதல் எனக்குத் தகுதியே யாமென்று சொல்லி இவரது அடியைப் பிடித்துக் கொண்டான். தாசர் அவனுடைய மன நிலையை

யறிந்து,[1] அவனை யழைத்துக்கொண்டு தமது ஊரை யடைந்தார். அவ்வூரி லுள்ளார் எல்லாரும், இவர் கவிப் புத்தகங்கள் நீரில் நனைந்து அழுந்தாம லிருந்ததையும்,பட்டனுக்குச் சாபம் நீங்கினதையும் நினைத்து இவரைப் புகழ்ந்து கொண்டாடினார்கள்.

பிறகு, முன் சொல்லப்பட்ட அனகட சித்தர் இந்தச் செய்தி யெல்லா மறிந்து, நான் பட்டனுக்கிட்ட சாபத்தைப் போக்கின மஹாபுருஷரை நாம் காணவேண்டுமென் றெண்ணி, புனாவை விட்டு, வரும் வழியில், சிஞ்சுவடி யென்னும் ஊரை யடைந்து, அவ்வூர்க்குத் தலைவனான சிந்தாமணி யென்பவனது வீட்டின் முற்றத்தில் நின்று, தமகை யிலுள்ள பாத்திரம் நிறையப் பிக்ஷையிடவேண்டு மென்றார். அதைக் கேட்ட வுடனே அந்தச் சிந்தாமணி யென்பவனுடைய காரியக்காரன் வந்து இவர் பாத்திரத்தில் போஜந சாமக்ரிகளைப்போட, அந்தப் பாத்திரம் நிறையாதது கண்டு இன்னம் சிலவற்றைக் கொண்டுவந்து போட்டான். அப்போதும் அது நிறையாதிருக்கக்கண்டு தன் தலைவ னிடத்திற் போய் இந்தச் செய்தியைச் சொல்ல, அந்தத் தலைவன், அவனை நோக்கி, அதிதிகளுக்கு அவர்கள் விருப்பத்தின் படியே யிடுவதே பிக்ஷையாதலால், இன்னமும் ஐயம பெய்யென்று நியமித்தான். அதைக் கேட்ட காரியக்காரன், வீட்டிலுள்ள தாநியங்களெல்லா வற்றையும் பெய்தான்; பெய்தும் பாத்திரம் நிறையவில்லை. அவன் மறுபடியும் தலைவனுக்குச் சொல்ல, தலைவன், கணபதி யுபாஸநத்தால் பாத்திரம் நிறையும்படி செய்தான். பிறகு சித்தர் அங்கிருந்து புறப்பட்டுத் தேகு வென்னும் ஊரை யடைந்து, தாசர் வீட்டின் முற்றத்தில் நின்று, எனது பாத்திரத்தில் பிக்ஷை போடவேண்டு மென்று கேட்க, ஜிஜாயியார் கேட்டு, கோவித்து, இவன் எங்கிருந்து வந்தான்? இவனுக்கு என்னசெய்வேன் என்று கடுஞ்சொற்சொல்ல, இதைக் கேட்டுக்கொண்டிருந்த சிறுமியாகிய கங்கா என்பவள், வீட்டினுள்ளே போய், பானையி லிருந்த மாவில் ஒரு பிடி யெடுத்துக் கொண்டு வரக் கண்ட ஜிஜாயியார், அவள் கையைப்பற்றித்திருகி மாவை வாங்க, இச்சிறுமி யிறுகப் பிடித்திருந்ததனால் ஜிஜாயியார் பறித்துக்கொண்டதுபோக மிச்சமாய்க் கையிலிருந்த கொஞ்சம மாவைக்கொண்டு வந்து சித்தர் பாத்திரத்திற் போட்டாள்; உடனே பாத்திரம் நிறைந்தது. இதைக்கண்ட சித்தர் அதிசயித்துக் கங்காவை நோக்கி, நீர் துக்காராமரோ என்றார். அதைக்கேட்ட, கங்கா நீர் என்ன பயித்தியக்காரரோ, நான் பெண்ணாயிருக்க, என்னைத் துக்காராமர் என்கிறீர், ஆனால் துக்காராமர் என் தந்தையார் தான், அவர் தினந்தோறும் உதயத்தில் நீராடி ஹரி பஜனை செய்துகொண்டு கோயிலிலிருக்கிறார் என்று சொல்ல, அனகட சித்தர் கோயிலுக்குப் போய்த் துக்காராமரை நோக்க, அவர் பெரிதாகிய ஞாநாகாரமான தேஜோராசியாய் விளங்கக்கண்டு அடி வணங்குதலும், துக்காராமர் இந்தச் சித்தரை யுபசரித்து இருமென்று சொல்ல, சித்தரும் அப்படியே இரண்டு நாளளவும் கீர்த்தநம் கேட்டு ஆநந்த பரவசராய், விடைபெற்றுத் தமது ஊரை யடைந்தார்.

அதின்பிறகு, துக்காராமர்செய்யும் ஹரிநாமஸங்கீர்த்தனம் கேட்டு ஆநந்தித்து, இவரைப் புணர்ந் தநுபவிக்க வேண்டுமென் றெண்ணினவளாய் ஒரு மாதானவள் சமயம் பார்த்துவரும் நாளில், தாசர் பகவத் தியானஞ் செய்து கொண்டு ஒரு ஏகாந்தஸ்த் தலத்தி லிருக்கும்போது அந்த மாதானவள் வந்து, ஸ்வாமீ, உம்மைப் புணர்ந்து இன்புற வெண்ணிச் சமயம் பார்த்திருந்தேன், என் எண்ணத்தை நிறைவேற்ற வேண்டுமென்றாள். அதைக்கேட்ட தாசரானவர், அம்மா நீ யென் தாய்க்குச் சமானம், நான் இந்த்ரிய நிக்ரஹம் செய்தவன், வேண்டுமானால் ஒரு பரீக்ஷை காட்டுகிறேன், ஒரு வைக்கோல் கொண்டுவா வென்றார். அப்படியே அவள் கொண்டுவர, அதைத் தமது சரீரத்தின்மேல் வைக்கச் சொன்னார்; அப்படியே அவள் வைக்க, அதுபற்றி யெரிந்துபோகக்கண்டு அஞ்சி யொதுங்கிப்போய்விட்டாள். இவரும் பழையபடியே ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார்.

இப்படி யிருக்குங்காலத்தில், இவர் ஹரிகதை செய்வதை லோகம் என்னும் ஊரிலுள்ளார் கேட்டு வந்து, ஸ்வாமீ, எம்மூருக்கு எழுந்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவரும் இசைந்து, புறப்பட்டு அவர்க ளூருக் கருகே போகும்போது, அவ்வூரார் அறிந்து எதிர்கொண்டு வந்து இவரை யழைத்துப்போய் உபசரித்து அமுதுசெய்வித்து நாள்தோறும் ஒவ்வொருவீட்டில் ஹரிகதை செய்யும்படி ப்ரார்த்திக்க, இவரும் அப்படியே செய்து வந்தார். வரும் நாளில், வளையல் விற்பவனாகிய சிவாஜி யென்பவன் மாத்திரம் இவர் செய்யுங் கதைக்கு வராமல் நிந்தித்துக்கொண்டு திரிவதை யிவரறிந்து, அவன் வாராமைக்குக் காரணமென்னவென்று கதைக்கு வருவோரைக் கேட்க, அவர்கள், ஸ்வாமீ, அவனை நாங்கள் அழைத்தாலும் வரமாட்டேனென்று சொல்லுகிறான் என்றார்கள். இப்படி யிருக்குங் காலத்தில், ஒரு வேதியன் கடனால் மிகவும் வருந்தி, ஞானதேவரிடத்துக்கு வந்து தோத்திரம் பண்ணித் தன் குறையைச் சொல்லி ப்ரார்த்திக்க, ஞானதேவர் அவன்கனவில் எழுந்தருளி ஓ அந்தணனே, நீ துக்காராமரிடத்திற்போய் உன் குறையைச் சொல்லிக் கொள்வாயானால், அவர் உன் கடன்தீரும் வகையை யருள்செய்வாரென்றார். அந்த வேதியன் துக்காராமரிடம் வந்து தன் குறையைச் சொல்லிக்கொள்ள, இவர் அவ்வூருக் கதிகாரியை யழைத்து, இந்த வேதியர் கடன் மிகுதியால் வருந்துகின்றார். உமது ஊரிலுள்ளார்க்கு வரிபோட்டு, வளையற்காரனையும் விடாமல் பணம் தண்டல் செய்து இவர் கடன் தீரும்படி யாய்ச் செய்தால் புண்ணியமுண்டென்று சொல்ல, அதிகாரியும் அப்படியே சம்மதித்து, எல்லார்க்கும் வரிபோட்டு வாங்கி வரும்போது வளையற்காரன் இரண்டு காசு கொடுத்தான். அதிகாரியானவன் தாசரிடத்துக்கு வந்து எல்லாரும் கொடுத்த பணம் இது, வளையற் காரன் கொடுத்த இரண்டு காசு இவை யென்று சொன்னான். தாசர் அந்த வளையற்காரன் கொடுத்த இரண்டு காசையும் ஒரு சிறு கல்லாற் கீறி, அவற்றைப் பொன்னாக்கி, வேதியன் கையிற் கொடுத்து

க் கடன் தீர்த்துக்கொள் என்றார். இந்தச் செய்தியை வளையற்காரன் கேள்விப்பட்டு, இவரிடத்திலிருக்கிற அந்தப் பரிசக் கல்லை எப்படியாயினும் வாங்குவேனென்று இவரை வந்து அடுத்துப் பணிவிடைசெய்துகொண்டிருந்தான். இப்படி யிருக்குங்காலத்தில், இவன் ஈயம் வாங்கி வரும்படி பொதி யெருதுக்காரரை யனுப்ப, அவர் போய்க் கொண்டுவந்த பொதிகளை யவிழ்த்து எல்லாம் வெள்ளியா யிருக்கக் கண்டு, இந்த வெள்ளியைக் கொடுத்தவனிடத்தில் கொடுத்து ஈயத்தையே வாங்கி வாருங்களென்றான். அவர்கள் கொண்டுபோய்க்கொடுத்தவ னிடத்தில் கொடுக்க, அவன், நான் கொடுத்தது ஈயமேயன்றி வெள்ளி யல்லவென்று திருப்பிவிட்டான். அவர்கள் மறுபடியும் வளையற்காரனிடத்தில் வந்து சொன்னார்கள். அவன் அதிசயித்து, தாசரிடத்தில் சொல்ல, தாசர் அவனை நோக்கி, இது பகவானுடைய க்ருபாவிசேஷத்தாலானது, இதை நீ யெடுத்துக் கொண்டுபோய், பகவத் தாசர்கள் கையிற் கொடுத்து அவர் வேண்டிய கருமங்களும் செய்து, உன் பாவத்தை நீக்கி, இஹபரசுகங்களை யடையக்கடவா யென்றார். அவனும் அப்படியே பொருள் முழுதும் பகவத் பாகவதர் விஷயத்தில் செலவு செய்து, வைராக்ய சீலனாய், அன்பருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். இதை அவன் மனைவி யறிந்து, நமது கணவனுக்கு இந்தப் பித்தேற்றியவனைக் கொலை செய்வதே தகுதியென்று, ஆலோசித்து, ஒரு கொப்பரை நிறைய நீர்வார்த்துக் கொதிக்க வைத்து, அதைப் பரண்மேலேற்றி, தாசரை வணங்கி யழைத்துக் கொண்டு வந்து உபசரித்துப் பரண்கீழே யிருத்தி, கொப்பரைநீரை அவர்மேல் விழும்படி கவிழ்த்தலும், அவர் திருமேனி முழுதும் கொப்புளங்கொள்ள, தாசர் மனஞ் சலிக்காமல் பகவானைக் குறித்து ஒரு கவி சொன்னார்; உடனே கொப்புளம் ஆறி, ஆரோக்ய மடைந்தார். பிறகு அவள் வீட்டு அவளைப் பந்தவின்மேல் விழும்படி தமது கழுத்திலிருந்த மாலையை வீசி யெறிந்துவிட்டுத் தம்மிடத்தை யடைந்திருந்தார். இப்படி யிருக்க, பகவானானவர், அவளுடைய தீச்செய்கைக்குச் சகிக்காதவராகி, அவளுக்குச் சுர முண்டாக்கினார். அதனால் அவள் மிகவும் வருந்தித் துன்பமடைந்திருந்தாள். அப்போது சிவாஜி யென்பவன் வந்து, இவளுக்குச் சுரநோ யுண்டானதற்குக் காரணம் யாதென்று ஆலோசித்து, அவளைப்பந்தலில் மாலை தொங்குவதைக் கண்டு, இது நமது குருநாதராகிய துக்காராமருடைய கழுத்திலிருந்த மாலை, இவள் அவரை யழைத்து வந்து என்ன தீமை செய்தாளோ வென்று வருந்த, கூட வந்த ராமேச்சுரபட்டன் இங்கே சேறு யிருப்பதற்குக் காரணம், யாதென்று ஆலோசித்து, இவள் வெப்பமான நீரை அவர் திருமேனியின் மேல் வார்த்ததனால் உண்டான சேறு இது. இந்தச் செய்கையாலே இவளுக்கு உடல் வெதுப்பமுண்டாயிற்று என்று அந்தச் சேற்றை அவளுடம்பிற் பூசுதலும் அவள் சுரநோய் நீங்கிச் சுகத்தை யடைந்தாள். பிறகு துக்காராமர் செய்யுங் கதையை நாள்தோறும் கேட்டு அவரிடத்தில் அன்பு மிகுந்து பல பணிவிடைகள் செய்துகொண்டிருந்தாள்.

இப்படி யிவர் இருப்பதைச் சிவாஜி ராஜன் அறிந்து, லோகம் என்னும் ஊருக்கு வந்து, ஊரார்எல்லாரும் அன்பராயிருப்பதைக் கண்டு ஆநந்தமடைந்து, துக்காராமரை யடைந்து, வணங்கி, அவர் கழுத்தில் மாலை யணிந்து தோத்திரம்பண்ண, தாசரும் அவனை யிருக்க நியமித்து, அவனிருந்து ஹரிகீர்த்தனம் கேட்டுக்கொண் டிருக்கும்போது, துக்காராமர், பகவானை நோக்கி, தேவரீரே அடியேனுக்குத் தாய் தந்தை முதலிய எல்லாம் என்று சொல்லி, பிறகு அரசன்முதலானோரை நோக்கி, நீங்கள் குடும்ப வாழ்வை மெய்யென்று நம்பாமல் எந்நாளும்ஹரிபஜனை செய்வீர்களானால், பிறவிக்கடலைக் கடக்கலாமென்றுவிரக்திமார்க்கத்தைச்சொல்லுதலும்அரசன்கேட்டுவிரக்தனாகி,மங்களாரதி செய்யுமளவுமிருந்து, துக்காராமரைவணங்கி ராஜரீகத்தில் விருப்பத்தைவிட்டு, ஒருவனத்திற்போய், ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்து, அஸ்தமித்த பிறகு, துக்காராமர் கதை செய்யுமிடத்துக்குவந்து, கீர்த்தனம் கேட்டு மகிழ்ந்து, மந்திரிகளை நோக்கி, என்னிடத்துக்கு நீங்கள் வரவேண்டாமென்று சொல்லி யிருக்கும் நாளில், இந்தச் செய்தியெல்லாம் மந்திரிமார்கள் ஆலோசித்து, ஒரு கடிதத்திலெழுதி தாசருடைய மனைவிக்குத் தெரிவித்தார்கள். அவர் அக்கடிதத்தைப் பார்த்து மிகவும் அநுதபித்து, இதுவரைக்கும் ஒவ்வொரு குடியாய்க் கெடுத்து வந்தார்; இப்பொழுது ஒவ்வொரு அரசாட்சியைக் கெடுக்கத் தொடங்கிச் சிவாஜியைக் கெடுத்தார். இதனால் பெரும் பழி யுண்டாகுமென்று, மந்திரிகள் அநுப்பின பல்லக்கிலேறிப்போய்த் தமது கணவராகிய தாசரைக் கண்டு வணங்கி, சுவாமீ, ஒரு தாய்க்கு ஒரே பிள்ளையாகிய சிவாஜி ராஜனை நீர்கெடுத்தீர், அவனுக்கு அரசாட்சி செய்தற்குரிய ஒரு பிள்ளையுமில்லை, ஆதலால் அவன் முன்போலவே அரசாட்சி செய்யும்படி அவனுக்குப் புத்தி மதி சொல்லி யருளவேண்டும் என்றார். அதைக் கேட்ட தாசர், தமது மனைவியை நோக்கி, இன்றிரவிலும் சிவாஜி என் கதை கேட்க வருவான், அவனுக்கு ஹிதவசநங்களைச் சொல்லி, அவன் அரசாளும்படி செய்கிறேன் என்று சொல்லி, அன்றிராக் கதை கேட்க வந்த சிவாஜி ராஜனுக்கு, உலக வாழ்க்கையில் பற்றற்றிருந்த மனம் திரும்பும்படி, உலகவாழ்க்கையி லிருந்தாலும் ஸ்ரீஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண் டிருப்பவர்களைப் பிறவித் துன்பங்க ளொன்றும அணுக மாட்டாவென்றும், அவரவர்களுடைய வர்ணாசிரம தர்மங்களை ஒவ்வொருவரும் செய்தே தீரவேண்டுமென்றும் விசேஷமாய் உபந்யாஸம் செய்தார். அதைக் கேட்ட சிவாஜி ராஜன், மங்களாரதி வரைக்கும் இருந்து ஆநந்த மடைந்து தாசரை வணங்கி, உலகத்தை யாண்டுகொண்டும் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டும் இருப்பதே நமக்கு உசிதமான கர்மம் என்றறிந்து கொண்டான். இவன் கருத்தை இவன் தாயானவள் அறிந்து, தாசருடைய பாதங்களை வணங்கி, நீர் செய்த உதவிக்கு ஒருதவியு முண்டோ என்று தோத்திரம் பண்ணித் தன் மகனாகிய சிவாஜி ராஜனை யழைத்துக் கொண்டு தன்னூருக்குப் போய்விட்டான்.

அதின் பிறகு, நாவஜி யென்னும் பெயருள்ள ஒரு குடியானவன், இவர் செய்யுங் கதையைக் கேட்கவந்து, இவர் நெடுநேரமாய்க் கதைசெய்து இளைப்படைவதைக் கண்டு, இவரை நோக்கி, ஸ்வாமீ, தேவரீர் சற்றுநேரம் இளைப்பாறும், அதுவரைக்கும் அடியேன் நடனஞ் செய்துகொண் டிருக்கி றேன் என்றான். அதற்கு இவர் சமமதிக்க, அவன் நடித்துக்கொண் டிருந் தான். இவர் இளைப்பாறி வந்து நடனத்தை நிறுத்தி, தாம் செய்யும் கதையை நடத்திக்கொண்டிருந்து, அந்தக் குடியானவன் முகத்தை நோக்குந்தோறும் நமது சிரமபரிகாரி என்று சொல்லுவாரானார்.

இப்படி நான்கு மாச காலம் அவ்வூரி லிருந்து, பிறகு தேகு என்னும் ஊருக்கு வந்து, ஸ்ரீ ஹரிநாமஸங்கீர்த்தநம செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில், சிஞ்சுவடி யென்னும ஊரில் வாழ்பவனாகிய சிந்தா மணி யென்னும வேதியன், தலயாத்திரையாய்ப் புறப்பட்டு வரும வழியில் தேகுவுக்கு வர, தாசர் அவன் வருதலை யறிந்து எதிர்கொண்டு போக, இவரை வேதியனும், வேதியனை யிவரும் தழுவிக்கொண்டு சந்தோஷித்த பிறகு வேதியன் தாசர் முகத்தை நோக்கி, ஒரு வேதியனுக்கு உணவளிக்கக் கடவீர் என்றான். தாசர் அதற் கிசைந்து வீட்டுக் குள்ளே போகும்போது இன்னம் சிலவேதியர் வந்தார்கள். அவர்களைத் தாசர் பார்த்தவுடனே, பகவா னைக் குறித்து, ஓ பக்த பரிபாலநா, ஒருவருக்குரிய உணவுபொருள்களிரு க்கின்றன. இத்தனை பேருக்கு என்ன செய்வேன்! தேவரீர் கருணை செய்ய வேண்டும் என்று ப்ரார்த்திக்க, பகவானவர், ஒருவர்க்குப் போதுமான போஜந பதார்த்தங்களே அத்தனை பேருக்கும ஆகும்படி பெருகச் செய் தார். அதைக்கண்ட தாசர், அவர்களெல்லாருக்கும பகிர்ந்து கொடுத்துத் திரு ப்தி யடைவித்தார். இதைக்கண்ட சிந்தாமணி முதலானோர் அதிசயித்து, தாசரைப் புகழ்ந்து, அன்றிராக்கதை கேட்டு ஆநந்தித்துச் சூரியோதயத்தில் புறப்பட்டுத் தலயாத்திரை போய்விட்டார்கள். அதின் பிறகு ஒரு வேதியன் ஞான தேவர் சமாதியருகே வந்து நின்று, சுவாமீ, அடியேனுக்குக் கொஞ் சம் பொன் கொடுக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்தான். அவன் இப்படி ப்ரா ர்த்தித்து அவ்விடத்தில் படுத்து நித்திரை செய்யும்போது அவன் கனவில் ஞானதேவர் தோன்றி, உன் கருத்தைத் துக்காராமருக்குத் தெரிவிக்கக் கடவா யென்றார். அவன் விழித்தெழுந்து, துக்காராமரிடத்துக்குப் போய்த் தான் கண்ட கனவைச் சொன்னான். அதைக் கேட்ட தாசர் மனம வருந்தி, பாண்டுரங்கா, அடிக்கடி யிப்படிப்பட்ட துன்ப முண்டாக்கினால், துர்ப்பல னும் தீநனுமாகிய அடியேன் என் செய்வேன் என்று சொல்லி, வேதிய னைநோக்கி, நீ, சிவாஜி யென்னும் வளையற்காரனிடத்திற்போய், உன் கருத் தைச் சொல்லி, அவன் கொடுப்பதைப் பெற்றுக் கொள் என்றார். வேதியன் அப்படியே, லோகம் என்னும் ஊரிலிருக்கிற வளையற்கார னிடத்திற்குப் போய்த் தன் கருத்தைச் சொல்ல, அவன் நான்கு இருப்புப் பாளத்தைத்

தந்து போவென்றான். வேதியன், நான் ஞான தேவரை யடுத்து என் கருத்தைச் சொன்னதற்கு, இவ்வாறாகிய லாபம் கிடைத்ததென்று, நான்கையும் ஒருமிக்கச் சுமக்கமாட்டாமல் சுமந்துவந்து, வழியிலுள்ள, கோண்ஹோர மலையில், மூன்று பாளத்தைப் போட்டுவிட்டு, ஒரு பாளத்தை மாத்திரம் சுமந்துகொண்டு துக்காராம ரிடத்தில் வந்து எதிரே நிற்க, தாசர், என்ன கிடைத்ததென்று கேட்க, இதுதான் கிடைத்ததென்று காட்டினான். அந்தப் பாளத்தை தாசர் கடாக்ஷித்த மாத்திரத்தில் அது பொன்னாயிற்று; அதைக் கண்ட வேதியன் அதிசயித்து நிற்க, தாசர் அவனை நோக்கி, உனக்கு ஞானதேவருடைய அருள் சுரந்ததென்றும், உன் குடும்பத்திற்போய்ச் சுகித்திருக்கக்கடவாயென்றும் சொல்ல, வேதியன் அப்படியே அந்தப்பொற் பாளத்தை யெடுத்துக்கொண்டு, தான் வழியில் கோண்ஹோரமலையில்வைத்து வந்த மூன்று பாளங்களைப் போய்ப் பார்த்து, அவை யில்லா திருக்கக் கண்டு, நமக்கு இதுதான் பராப்தமென வெண்ணித் தன்னூரை யடைந்து, வறுமை நீங்கினவனாய், குடும்பத்தோடுகூடிச் சுகமாய் வாழ்ந்திருந்தான்.

அதின் பிறகு முளா, மீவரா என்னும் நதிக ளிரண்டின் சங்கமமாகிற இடத்தில், தேகுவென்னும் ஊரிலுள்ளா ரெல்லாரும் போய் முழுகும்படியான விசேஷ காலம் நேரிட்டது. அதற்கு எல்லாரும் போவதைப் பார்த்து, தாசரும் போனார். போகும் வழியில், ஒரு ஆட்டுக்கிடைக்குக் காவலாயிருந்த ஒரு துஷ்ட நாயானது யாரைக் கண்டாலும் விரைந்து வந்து அவர்களுடைய கழுத்தைக் கடித்து, ரத்தபானம் செய்வதாயும், ஒருவருக்கும் அடங்காததாயும் இருந்தது; அது இவரைக் கண்டு கடிக்க வோடிவர, இவர் அதைப்பார்த்து, ஓ நாயே, நான் உன்மேல் மாத்திரமல்லாமல் எல்லா வுயிர்களின்மேலும் வெறுப்புடையே னல்லேன்; அப்படி யிருக்க, உனக்கு என்மேல் வெறுப்புண்டானதற்குக் காரணம் யாதென்றார். இதைக்கேட்ட நாயானது சாந்தத்தை யடைந்து நின்றது. பிறகு தாசரானவர் அவ்விடம் விட்டு நதி சங்கமத்தில் முழுகி, பாண்டு ரங்கனைத் துதித்துக்கொண் டிருந்தார். இடையர் இந்த நாய் இப்படி சாந்தமடைந்திருப்பதனால் இனி நமது கிடைக்குதவாதென்றார்கள். பகவந்நாம ஸ்மரணை செய்துகொண் டிருந்த தாசர் மத்தியான காலமானவுடனே, ராஞ்சணம் என்னும் ஊரில் ஒரு வேதியன் வீட்டிற்குப் போனார்; இவரைக்கண்டவேதியன், இவர் பகவத் தாசர் என்றறிந்து இவர்க்கு அமுதளித்து, தன் பிள்ளையைச் சுட்டிக்காட்டி, இவன் எட்டுவயதாகியும் பேசாமல் ஊமையாயிருக்கிறான், உபநயநம்செய்து வேதமோதுவிக்காம லிருக்கிறோம் என்று விசனத்துடன் சொல்ல, தாசர் அந்தப் பிள்ளையைக் கருணையோடு நோக்கி, அருகே யழைத்து, விட்டலன் பேர் சொல்லக் கடவாய் என்றார். உடனே அந்தச் சிறுவன் விட்டல விட்டல வென்று சொல்ல, சூழ்ந்திருந்த தாய் தந்தையர்முதலானோர் வியந்து, இந்த ஹரிதாசரது கருணையால் நமது சிறுவன் பேசத் தொடங்கினானே யென்று இவரைப் புகழ்ந்து, தமது வீட்டில் வைத்துக் கொண்டு, சிறுவனுக்கு உப

நயந விவாஹம் செய்தார்கள். பிறகு தாசரானவர் மீண்டு வரும் வழியில் ஆட்டிடையன் கண்டு, இந்த நாய், எங்கள் கிடைக் குதவாமற் போயிற்று, இதை நீரே கொண்டு போம் என்றான். தாசரும் அந்த நாயை அழைத்துக் கொண்டு தம்மூரையடைந்தார். ஏகாதசி நாட்களில் அந்த நாயானது ஹரி நாமஸங்கீர்த்தநம் கேட்டு உண்ணாதிருக்கக் கண்டு யாவரும் இது ஒரு புண்ணிய ஜன்ம மென்று சொல்லி மகிழ்ந் திருந்தார்கள். இப்படி யிருக்கையில், ஒருநாள் எலவடலூர் மால்ஜீ, அங்குவந்து, தாசருடைய முகத்தை நோக்கி, நான் நித்திய நியமஞ் செய்யும்படி எனக்கு அநுக்ரஹம் செய்யவேண்டு மென்று ப்ரார்த்திக்க, தாசர் அவனது மன நிலையை யறிந்து, ஸ்ரீ பகவத் கீதையைத் திநந்தோறும் பாராயணஞ் செய்யக் கடவா யென்று நியமிக்க, அவனும் அப்படியே தன்னூருக்குப் போய்ப் பகவத் கீதையை நியமமாகத் திநந்தோறும் பாராயணஞ் செய்து வருகையில், அதைக் குறித்துப் பாண்டு ரங்கபகவானும் திருவுள முவந்திருந்தார். அப்போது, கேடம் என்னும் ஊரி லுள்ள ஒரு ஜோதிஷன் மால்ஜி யிடத்துக்கு வந்து, நீ இதைப் பாராயணம் பண்ணுவதனால் உனக்கு நரகம் சித்திக்குமென்று சொல்லிப் போய்த் தன்னூரை யடைந்திருந்தான். இவன் சொல்லைக்கேட்ட மால்ஜீயானவர் பகவத் கீதா பாராயணத்தை விட்டுவிட்டார். இப்படி யிருக்க, பாண்டுரங்க பகவானவர், ஜோதிஷன் கனவில் தோன்றி, மால்ஜீ செய்யும் பாராயணத்தால் மகிழ்ந்திருந்தேன், அவனைப் பாராயணஞ் செய்யவொட்டாமல் பயமுறுத்தினாய், அவனை முன்போலப் பாராயணஞ் செய்யும்படி பண்ணாமற் போனால், உனக்கு அநேகமான ஆபத்துக்கள் நேரிடுமென்று சொல்ல, ஜோதிஷன் உதயத்தி லெழுந்துபோய் மால்ஜீயைக்கண்டு, நீ முன்போலவே கீதா பாராயணஞ் செய்யலாம் என்று என் கனவில் பாண்டுரங்க பகவானானவர் தோன்றி நியமித்தார்; ஆதலால் நீ பாராயணஞ் செய்யக்கடவாயென்றான். அப்படியே மால்ஜீ பாராயணஞ்செய்து கொண்டிருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில், துக்காராமர் ஸ்ரீ கண்ணபிரானுடைய பாலலீலைகளை யடக்கிச் செய்த அபங்கக்கவிகளை, ராமேசுவர பட்டன் திருத்தி, வேறுவகையாய் வாசிக்கத் தொடங்கினான். இவ்விஷயத்தைப்பற்றிப் பாண்டு ரங்கர், பட்டன் கனவில் வந்து, துக்காராமன் சரியாய்ச் செய்த கவிகளை நீ திருத்திக் கெடுத்துவிட்டாய், அப்படி நீ செய்தது எனக்குச் சம்மத மல்லவென்று சொல்ல, பட்டன் மிகவும் வியந்து, இந்தச் செய்தியைத் துக்காராமருக்குத் தெரிவித்து அவரிடத்தில் மிகுதியான அன்பு செய்திருந்தான். இப்படி சிலநாள் கழிந்த பின்பு தாசரானவர், கங்காஜி மவாளே யென்னும் வேதியரோடு, சந்தாஜி யென்னும் வாணிபரும் தொடர்ந்துவர, அவர்களை யழைத்துக்கொண்டு தீர்த்த யாத்திரை போகும் வழியில், கோதளேசுவரம் என்னும் மலை, சிங்கணாபூர் என்னும் ஊர், இவற்றை யடுத்த ஓரூரில், சரோவரம் என்னும் தடாகத்தில் மூழ்கி, கூடவந்தவர்களை நோக்கி, நால்வர்க்குதவும்படியாகப் போஜநம் அமைக்கவேண்டுமென்றார். அப்படியே அவர்களும் சித்தப்படுத்தினார்கள்.

அப்போது அந்த மலையிலுள்ள ஹரோபவன் என்னும் சம்புவானவன் நிகம்பரனைய் வந்து, தாசரை நோக்கி, நெடு நாளாய் உம்மைக் காண வேண்டுமென்று விரும்பி யெதிர்பார்த்திருந்தேன். அன்றியும் உபவாசமா யிருக்கிறேன், என் எண்ணம் நிறைவேறுங் காலம் நேரிட்டதனால் நீர் வந்தீர், என்பசி தீரும்படியாய், உணவளிக்கக்கடவீரென்று பலிபாத்திரத்தைக் கையிலேந்தி யெதிரே நிற்க, தாசரும் அவரை உபசரித்து ஆசநத்திலிருத்தி வணங்கி, கங்காஜி மவாளையை நோக்கி, இங்கு நாம் வந்திருப்பதையறிந்து வந்த அதிதிக்கு அமுதளித்த பிறகு நாம் அமுது செய்வோமென்று சொல்ல, கங்காஜியும் ஒருகலத்தில் அமுதுபடைக்க, சம்புவானவர் இவர்கள் நால்வருக்கென்று சித்தப்படுத்தின உணவு முழுது முண்டு, தாசரிடத்தில் விடைபெற்றுப் போய்விட்டார். பிறகு கங்காஜி, தாசரை நோக்கி, நீர் சொன்னதே சரி, நாம் முன்னே யுண்டிருந்தால் வந்த அதிதிக்குப் பசி தணியாது என்று பாத்திரங்களை மூடிவைத்து ஊருக்குள்ளேபோய், சமையலுக்கு வேண்டும் பொருள்களைச் சேகரித்துக் கொண்டு வந்து, பாத்திரங்களைத் திறந்துபார்த்து, அவைகளில் போஜநம், பதார்த்தங்கள் எல்லாம் நிறைந்திருக்கக் கண்டு வியந்து, சிவபெருமானே அதிதியாய் வந்தாரென்றும், பகவத்தாசருடைய ஆசிரயத்தால் நமக்குச் சிவதரிசநம் கிடைத்ததென்றும் பெருங் களிப்படைந்து, அந்த வுணவை மூவரு முண்டு, பல தீர்த்தயாத்திரை செய்து, தேகு வென்னும் ஊரை யடைந்து, பகவந்நாம ஸங்கீர்த்தநம் செய்துகொண்டிருந்தார்.

இப்படி யிருக்குங் காலத்தில், ஒருநாள் இவர் கதை செய்யும் போது, பகவந்நாம மாஹாத்மியத்தைச் சொல்லத் தொடங்கி, யாராயினும் நடந்துகொண்டே பகவந்நாம ஸ்மரணை செய்தால், அவர்கள் ஒரு அடிபெயர்ப்புக்கு ஒரு யாக பலத்தை யடைவார்களென்று விசேஷமா யெடுத்து உபந்யாஸம் செய்தார். இதைக்கேட்டவர் யாவரும் இவர் சொன்னபடியே நடக்கும் போதும் ஹரிநாமத்தை யுச்சரித்து, கையில் ஒரு கயிற்றை வைத்துக் கொண்டு, ஒவ்வொரு அடிபெயர்க்குந்தோறும் ஒவ்வொரு முடிபோடும் வழக்கம் ஏற்பட்டிருந்தது. இப்படி யிருக்குங் காலத்தில் ப்ரஹ்மரக்ஷஸினால் பற்றப்பட்ட ஒருவன் ஹரி ஹரேசுவரத்தை யடைந்து, தன் பீடை தொலையும் பொருட்டு அங்குள்ள ஹரி ஹரேசுவரரை நாள்தோறும் நியமமாய்ச் சேவித்து வந்தான். ஒரு நாள், ப்ரஹ்ம ரக்ஷஸு அவனுக் கெதிரே வந்து நின்று, நீ ஒரு யாகபலத்தை யெனக்குக் கொடுத்தால் உன்னை விட்டு நீங்கி முத்தியை யடைவேன் என்று சொல்ல, அவன் இதுவரையில் நான் யாகம் செய்யவில்லை, இனிமேலும் செய்யவலியில்லேன், ஆதலால் என்னால் இயலாதென்றான். அதைக் கேட்ட ப்ரஹ்மரக்ஷஸு, பல இடங்களிலும் திரிந்து, முடிவில், லோகமென்னும் ஊரையடைந்து அங்குள்ளாரைக் கேட்க, அவர்களில் ஒருவன், நான் கொடுக்கிறேன் என்று சொல்லித் தன் கயிற்று முடிகளில் ஒன்றை யறுத்து, அதின்மேல் நீர்வார்த்து, அந்த நீரை

வேதியன் சிரத்தின்மேல் தெளித்த வுடனே, பிரம ரக்ஷஸு அவனை விட்டு நீங்கி முத்தி யடைந்தது. இதைக் கண்டவ ரெல்லாரும் ஹரிநாம மஹிமையைப் போதித்த துக்காராமரை மிகவும் புகழ்ந்தார்கள்.

பிறகு ஆடி, கார்த்திகை என்னும் இரண்டு மாசங்களின் ஏகாதசிகாட்களில் நியமமாய்ப் பண்டரி யாத்திரைசெய்பவராகிய துக்காராமருக்குக் குளிர்சுரம்கண்டு, அதனல் யாத்திரைக்கு விரோதம் நேரிட்டதனுல், இவர் மிகவும் மனம்வருந்தி, பாண்டுரங்க பகவானை இப்படிப்பட்ட புண்யகாலத்தில் சேவிக்கப் பெற்றிலோமே என்று பரிதபித்திருந்தார். அந்தச் சமயத்தில் ஆயிரத்து நானூறு சாதுக்கள் கருடக் கொடி யேந்திவரக் கண்டு, அவர்களுக்குச் செய்யவேண்டிய உபசாரங்களெல்லாம் செய்து, ஓ பாண்டுரங்கா! எல்லாரும் வந்து உன்னைக் கண்டானந்திக்க, அடியே னொருவன் மாத்திரம் இங்கிருக்கவோ சங்கற்பித்தாய், என்னை ஆரோக்யமாயிருக்கும்படி செய்தால் இவர்களோடு கூடிவந்து, உன் சந்நிதியில் ஆடல் பாடல்களைச் செய்ய மாட்டேனே என்னும் பொருளை இருபத்து நான்கு கவிகளில் அமைத்துப் பாடி, ஒரு கடிதத்திலெழுதி, விட்டலனுக்குக் கொடுக்கும்படி சாதுக்களிடத்தில் கொடுத்து என் குறையைப் பகவானிடத்தில் விண்ணப்பஞ்செய்யுங்கள் என்றார். அந்தச் சாதுக்கள் அப்படியே பண்டரிபுர மடைந்து புண்டரீகரை வணங்கி, விட்டலனைக் கண்களிகூரக்கண்டு சேவித்துத் தோத்திரம் செய்து,பிறகு துக்காராமர்கொடுத்த விண்ணப்பபத்திரிகையைக்கொடுக்க, பகவானனவர் அதைப் பார்த்தும் சாதுக்கள் சொல்லக் கேட்டும் துக்காராமரைக்குறித்து மிகவும் திருவுளம்வருந்தி, பிராட்டியை நோக்கி, என் அன்பனுகிய துக்காராமன் வருவதற்கு அசக்தனுய் எழுதி யனுப்பின கவிகளைக் கண்டு என் மனம் மிகவும் வருந்துகின்றது! நாம போய் அவனை விசாரித்து வரவேண்டும் என்றார். அதற்குப் பிராட்டி, ஓ பகவானே! உம்மைச் சேவிக்கும்பொருட்டு, அநேகம சாதுக்கள் வருகிற காலத்தில், நீர் சந்நிதியில் இல்லாமலிருப்பது நன்றல்ல, உமமைக்காணுமல் வருவோரெல்லாரும வருந்துவார்கள் என்று சொல்ல, விட்டலப் பெருமானனவர் கருடனை நோக்கி, நீ போய், துக்காராமனை உன் முதுகின்மேலேற்றிக்கொண்டு வாவென்று சொல்லி, உடனே இந்தக் கருடன்மேலேறிவாவென்று துக்காராமருக்கு ஒரு கடிதமும் எழுதித் தந்து அனுப்ப, கருடனும அப்படியே துக்காராமரிடம்போய்க் கடிதத்தைக் கொடுத்து நிற்க, அந்தக் கடிதத்தை நோக்கின துக்காராமர் கருடனைநோக்கி, பகவானுக்கு வாஹநமாகிய உன்மீது நானேறி வருவதற்கு என் மனம் இசையவில்லை, ஆதலால் பகவானுக்கு என்மீது கருணையிருப்பது உண்மையானுல், உன்மேலேறிவந்து எனக்குச் சேவை சாதிக்கவேண்டும்,இந்தச்செய்தியைப்போய்ப் பகவானுக்குச் சொல்லவேண்டும் என்று பலதரம் வணங்க, கருடன் உடனேபோய், இங்கே நடந்தசெய்தியைப் பகவானுக்கு விண்ணப்பம பண்ண, பிராட்டியை நோக்கி, இதற்கு நாம் என்செய்வோமென்ன, பிராட்டி அப்படியானுல், உத்ஸவம் முடிந்த

பிறகு, அப்படியே போவோமென்று சொல்ல, பகவானும் அமர்ந்திருந்தார். நான்கு தினமான பின்பு உத்ஸவமுடிந்தது. வந்த சாதுக்களெல்லாரும் அவரவர்களுடைய வூருக்குப் போய் விட்டார்கள். அவர்களில் சிலர் துக்காராமரிடத்திற்கு வர, இவர் அவர்களை வணங்கி, பகவானும் பிராட்டியும் சுகமோவென்று வினவி, ஆமென்று அவர்கள் சொல்ல, மகிழ்ந்து, பண்டரிபுரத்தை நோக்கி ஒரே நிலையாய் நின்று, பகவந்நாம ஸ்மரணை செய்துகொண் டிருந்தார். இப்படியிருக்க, பகவானானவர், பிராட்டியாரோடு கருட வாஹனத்திலேறி இவருக்கு ப்ரத்யக்ஷமானார். துக்காராமரும் ஸ்ரீலக்ஷ்மீ நாதனை வணங்கித் தமது வீட்டுக்கழைத்துப்போய்ப் பலவகையாய்த் தோத்திரஞ்செய்ய, பகவானானவர் திருவுள முவந்து, எமக்குப் பசி அதிகரித்திருக்கின்றது என்றார்! உடனே தாசர் விரைவில் சமையலாகட்டுமென்று நியமிக்க, அதைக் கேட்டிருந்த மகள், அப்பழம்பிணையும் அப்படியே சித்தப்படுத்தினவுடனே முற்காலத்தில் தேவர்களெல்லாருக்கும் அமிர்தம் பகிர்ந்த பகவானுக்குச் சமர்ப்பிக்க, பக்தவத்ஸலர் மிகவும் மனமகிழ்வோடு அமுதுசெய்து, பண்டரிபுரத்துக்கு எழுந்தருளினார்.

பிறகு, ஒரு வேதியன், விவேகசிந்து என்னும் கிரந்தத்தைப் படித்துப் பொருளறிந்து, துக்காராமரிடத்துக்கு வந்து, ஸ்ரீ முகுந்தராஜனால் செய்யப்பட்ட விவேகசிந்து என்னும் கிரந்தத்தைப் படிக்கிறேன், நீர் பிரியத்தோடு கேட்கக்கடவீர் என்றான். அதைக்கேட்ட துக்காராமர் அப்படியேயாகட்டும், கண் முதலிய பொறிகள் விஷயங்களின்மேற் செல்லுமானால, நீர் படிக்கிற கிரந்தார்த்தத்தை மனம் பற்றாது, ஆதலால் கம்பளம் போர்த்துக்கொண்டு கேட்கிறேன் என்று ஒரு கம்பளத்தால் கேசாதிபாதமாக மறைத்துக்கொண்டார். பிறகு வேதியன் ஒரு ஜாமநேரம் படித்துக்கொண்டிருந்து அயர்ந்து கம்பளத்தை நீக்கி பார்க்க, இவர் இருகண்களையும் இருசெவியையும் மூடிக்கொண்டு ஸ்ரீமந் நாராயண த்யானபரராயிருந்ததைக் கண்டு, ஐயோ! கெடுந்தூரத்திலிருந்து வந்து ஒரு ஜாமநேரம் படித்து அயர்ந்தேன் என்று வருந்தக்கண்டு தாசர் அவனை நோக்கி, ஸ்ரீ கண்ண பிரானுடைய சகுண ரூபத்தில் அழுந்தின மனம் வேறொன்றிலும் செல்லாது, நீர் ஏன் எனக்காகப் பிரயாசைப்படுத்துக்கொள்ளுகிறீர்? தயைசெய்து ஊருக்குப் போய்விடும் என்றார். அதைக்கேட்ட வேதியன் இவரைவணங்கி, ஸ்வாமீ! அடியேன்செய்த பிழையைப் பொறுத்து, ஸ்ரீ ஹரிசரணஸமாகமம் அடியேனுக்கு உண்டாகும்படி அநுக்ரஹிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். அவன் பிரார்த்தனைக் கிரங்கின தாசர் அவனை அருகேயழைத்து, அவன் சிரமீதுகையமைத்து, ஸ்ரீலக்ஷ்மீ நாதருடைய திருநாம மந்திரத்தை உபதேசித்து, நீ உன்னூருக்குப்போய் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருக்கக்கடவாயென்று விடைதந்தனுப்பிவிட்டுத் தாம் தமது மனையை யடைந்து பகவந்நாம ஸ்மரணைசெய்துகொண்டிருந்தார்.

அதின்பிறகு, ஒருநாள், லோகம் என்னும் ஊரிலுள்ளார் இவர் செய்யுங் கதையைக் கேட்க விரும்பி, இவரைக் கோஷ்டியோடும் வரவழைத்து அமுதளித்து, அன்றிரவில் இவர் செய்யும் ஹரிகதா காலக்ஷேபத்தைக் கேட்டு மகிழ்ந்தார். மறுநாள் உதயத்தில் அவ்வூரார் ஒருவரும் மூழ்காத உவர்ப் பொய்கையில் இவர் ஸ்நாநம்செய்து ஸ்ரீஹரிபூஜை செய்தார். இவருடைய திருமேனி ஸ்பரிசத்தால் அந்தத் தடாக நீர் உவர் நீங்கி மதுரச்சுவையையடைந்தது; அதைக்கண்ட எல்லாரும வியந்து இவரது பெருமையைக் கொண்டாடினார்கள். பிறகு ஒருநாள் இரவில் இவர் கதை செய்யும்போது இரண்டு துறவிகள்வந்து, இவர் ஸ்ரீமந் நாராயணனே உயர்ந்ததெய்வம், இவனுக்கு நிகரான தெய்வம் வேறொன்றுமில்லையென்று விசேஷமாயெடுத்துச் சொல்லுவதைக்கேட்டுக்கோவங்கொண்டு, அவ்வூராளியினிடத்துக்குப்போய், தாதுகோடென்னும் பெயரையுடைய ஓ அரசனே! இந்தத்துக்காராமன் வேதியர் முதலான எல்லாரையும் மயக்கி, கர்மஜ்ஞாநங்களைத் திரஸ்கரித்து, பக்தியே பெரிதென்றும், அந்தப் பக்தியை எல்லாரும ஸ்ரீஹரியினிடத்திலேயே செய்யவேண்டுமென்றும் சொல்லி, எல்லாருமவந்து தன்னை வணங்கும்படி செய்துகொண்டிருக்கிறான்; அவனை யழைத்துத் தண்டிக்கவேண்டும், அப்படி செய்யாதபக்ஷத்தில நாங்கள் உயிரை விடுவோமென்று, தம் கையிலிருந்த தண்ட கமண்டலங்களை நிலத்தின்மேலெறிந்து நின்றார்கள். அதைக் கண்ட அரசன அந்தத் துறவிகளை நோக்கி, நல்லது ஆகட்டும், சற்றுநேரம் பொறுத்திருங்கள், அந்தத் துக்காராமரை யிங்கே வரவழைக்கிறேன், அவரோடு நீங்கள் வாது செய்யுங்கள், உங்களில் தோற்பவர்களை நான் தண்டிப்பேன் என்று சொல்லி, அவர்களும சம்மதித்தவுடனே, துக்காராமருக்கு ஒருபத்திரமெழுதிவிடுத்தான். அதைக்கண்டதுக்காராமர் தமது சாதுகோஷ்டியோடு புறப்பட்டுப் பூனாவின் அருகே யிருக்கிற ஒரு சோலையை யடைந்து நீராடி, ஸ்ரீஹரிபூஜையை நிறைவேற்றி, ஹரிநாமஸங்கீர்த்தநம்செய்துகொண்டிருந்தார். அதை யறிந்த அவ்வூரார் யாவரும அளவற்ற பொருளைக் கொண்டுவந்து ஸ்ரீபாதகாணிக்கையாகச் சமர்ப்பித்து, இவர் கீர்த்தநத்தைக் கேட்டு மகிழ்ந்தார்கள். இந்தச் செய்தியைத் தாதுகோடு என்னும் அரசனறிந்து, இவரை எதிர்கொள்ள வேண்டுமென்றெண்ணி வருமவழியில், அந்தத்துறவிகளிருவரும் எதிர்ப்பட்டு, ஓ அரசனே! அந்தத் துக்காராமனுடைய நடக்கைகளை நாங்கள் முன்பே தெரிவித்திருந்க, அதை மறந்து அவனையெதிர் கொள்ளப் போகிறீரே! இதுவென்ன விபரீதம என்றார்கள். அதைக் கேட்ட அரசன், உலகத்தாரெல்லாரும் அவரை வணங்குவதுபோல நானும் வணங்கப்போகிறேன், அதைக்குறித்து உங்களுக்கு வருத்தம் வேண்டாம், நீங்களும் அவரும் செய்கிற வாதத்தில் யார்தோற்றாலும் அப்படித் தோற்பவர்களைப் பக்ஷபாத மில்லாமல் தண்டிப்பேன் என்று சொல்லி, தாசரிடத்துக்குப்போய் வணங்கி, அவர் செய்யுங் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தான். அப்படியிருக்கும்போது, ஒருஜடாமுனி, சுந்தரதிகம்பரனும்வந்து, தாசனை

வணங்கி, உம்மைக் காணவேண்டுமென்று நெடு நாளாய் ஆவலோடு எதிர் பார்த்திருந்தேன், என் எண்ணம் இன்று நிறைவேறிற்று என்று சொல்லித் தழுவிக்கொண்டு, மகிழ்ந்திருந்தான். அப்போது வேந்தனானவன் தாசரை வணங்கி, எமது ஊருக்கு எழுந்தருளி என்னைப் புநிதனாக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க, இவரும் அப்படியே சம்மதித்து அரசனோடு கூடப்போய், அவனால் கொடுக்கப்பட்ட ஆசநத்திலிருந்தார். வேந்தனும் துறவினராகிய இருவரையும் நோக்கி, துக்காராமர் செய்யுங் கதையைக் கேட்டு, அதில் ஆக்ஷேபிக்கத் தகுந்த இடத்தில் ஆக்ஷேபித்து வாதித்து அவரைவென்றீர்களானால் அவரைத் தண்டிக்கிறேன், நீங்கள் தோற்றால் உங்களைத் தண்டிக்கிறேன் என்றான். அப்படியே யாகட்டுமென்று இருவரும் துக்காராமர் செய்யுங் கதையில் ஆக்ஷேபத்துக்குச் சமயம் பார்த்திருந்து ஆக்ஷேபம் தோன்றாமல் அன்பு தோன்றினமையால் துக்காராமருடைய திருவடிகளை வணங்கினார்கள். அரசன் அவர்களை நோக்கி, அவரை வெல்லவந்த நீங்கள் அவரை வழிபடுதல் அதிசயமாயிருக்கின்றது! நீங்கள் பொய் வேஷக்காரரென்றாகின்றது! இனி உங்களைத் தண்டிக்காமல் விடமாட்டேன் என்றான். துறவிகளிருவரும், ஓ அரசனே! துக்காராமர் ஸ்ரீசங்க சக்ராதிகளோடு ஸ்ரீமந் நாரயணன் போலவே யெங்கள் கண்ணுக்குத் தோன்றுகின்றதனால் அவரை வணங்கினோம் என்றார்கள். அதைக் கேட்ட அரசன், இவர்கள் ஹரி பஜனைக்காகாதவர்களாகையால், இவர்களைச்சிறைப்படுத்திச் சிக்ஷைசெய்யவேண்டுமென்று கோவித்துக்கொள்ளுவதைக் கண்ட துக்காராமர் அரசனுக்கு ஹித வசநங்களைச் சொல்லிக் கோவத்தைத் தணித்து, பகவானுக்கு மங்களாரதி செய்து யாவருக்கும் ப்ரஸாத விநியோகம் செய்து முடிந்த பிறகு, இவரது அருள் பெற்றவனாகிய கோடோபா வென்பவன், பிராடீா என்னும் ஊரையடைந்து அவ்வூரில் புராணம படிப்பதற்காக வந்து கூடியிருந்த மஹா பண்டிதர்கள் ஒரு சுலோகத்துக்கு அர்த்தம் சொல்ல, அது பிசகா யிருக்கக்கண்ட கோடோபா அதைத் திருத்திச் சரியான அர்த்தத்தைச் சொல்ல, அந்தப் பண்டிதர் யாவரும் வியந்து, கோடோபாவை நோக்கி, உனக்கு இப்படிப்பட்ட அர்த்த விசேஷத்தை யெடுத்துச் சொல்லுகிற சாமர்த்தியம் எப்படி யுண்டாயிற்று என்று கேட்டார்கள். அதைக் கேட்ட கோடோபா, எனக்குத் துக்காராமர் அருளினால் இந்த வல்லமை யுண்டாயிற்று என்றான். பண்டிதர் முதலானவர்கள், பகவத்தாசராகிய துக்காராமருடைய அருளுக்குப் பாத்திரரானால், எவர்களுக்கும் எல்லா நன்மையும் உண்டாகுமென்று பேசிக்கொண்டார்கள். இந்தக் கோடோபா, துக்காராமரது அநுக்ரஹத்தால் அடைந்த ஜ்ஞாநத்தை, சிஞ்சுவடி யென்னும் ஊரிலுள்ள வேதியர்கள் கேள்விப்பட்டு, இவனை யழைத்து வரும்படி ஒருவனை யனுப்பினார்கள். அனுப்பப்பட்டவன் வந்து இவர் செய்யும் ஹரிபஜனையில் ஆநந்தபரவசனாய் இவ்விடத்திலேயே இருந்துவிட்டான். இவருடைய பஜனையைக் கேட்டு, யாவரும் மெய்மறந்து நிற்கையில், அவர்களில் ஒருவராகிய ஷேக்கு மஹம்மது என்னும் சக்கிலியர்

எழுந்து போய்ச் சற்று நேரம் பொறுத்து வந்தார். அங்கிருந்தவர் யாவரும் அவரைநோக்கி, நீர் சடுதியில் எழுந்துபோய்ச் செய்துவந்தகாரியம் என்னென்று கேட்டார்கள். அதற்கு அவர் தேகுவென்னும் ஊரில் ஹரிகதா காலக்ஷேபம் நடக்கும்போது, பகவானது விதாநம் தீப்பற்றி யெரிவதையறிந்து, அதை யவித்துவரப் போனேன் என்றார். அதைக் கேட்டவர் யாவரும், அப்படி பற்றிக்கொண்டபோது அங்கே ஒருவருமில்லையோ வென்றார்கள். அதற்கு அவர், எல்லாருமிருந்தார்களாயினும், ஹரி கதையில் மனம் பதிந்தவர்களாய் மெய்மறந்திருந்தார்களாதலால் இதை யறியவில்லை யென்றார். மறுபடியும் அவர்கள், பகவானுகிலும் அவிக்கலாகாதோ வென்றார்கள் அதற்கு அவர் பகவானும் தாசரது மனத்தில் எழுந்தருளி யிருந்தமையால் அவரும அறிய வில்லை யென்றார். அதைக் கேட்டவர்கள், இந்தச் செய்தியின் உண்மையை யறிவோமென்று, தேகுவுக்கு ஒரு ஆளை யனுப்பி மெய்யென்பதைத்தெரிந்துகொண்டு, ஷேக் மஹம்மது தாசருடைய ஞானத்தைக் குறித்துப் புகழ்ந்து கொண்டாடினார்கள். முன்னே சிருசுவடியி லிருந்து வந்தவன் தாசர் செய்யுங் காலக்ஷேபத்தைக் கேட்டு ஆநந்தித்து இவ்விடத்திலேயே யிருந்து விட்டான். அவனை யனுப்பினவர்கள், போனவன் ஏன் வர வில்லை யென்பதை யறிந்துவா வென்று மற்றொருவனை யனுபபினார்கள். அவனும் அப்படியே யாய்விட்டான். பிறகு, அனுப்பினவர்கள் இது என்ன ஆச்சரியமென்றும், 'தாசரை நாமெல்லாரும் போய்க் கண்டு வருவோமென்றும ஆலோசித்துப் புறப்பட்டு வருவதை தாசர் அறிந்து, எதிர்கொண்டு வர, வந்தவரெல்லாரும் தாசரை வணங்கி, உம்மைக் காணவேண்டு மென்று வந்த எங்களுக்கெதிரே வந்து தரிசநம் கொடுத்தீர் என்றார்கள். தாசரும் அவர்களைத் தழுவிக்கொண்ட பிறகு, அவர்கள் தாசரை நோக்கி, இந்தக் கலிகாலத்தில் இப்படிப்பட்ட அற்புதமான செயல்கள் உமமிடத்தில் காணப்படுகின்றனவாதலால், என்ன ஆதாரத்தைக் கொண்டு நீர் இந்த அருமையான செயல்களைச் செய்கிறீர் என்றார்கள். அதைக்கேட்ட தாசர், இவர்களுக்கு ஒரு சோதனை காட்டவேண்டு மென்றெண்ணி, தமது தொடையைக் கீறி, ஓ வேதியரே பாருங்கள் என்றார். அவர்கள், அந்தக் கீறின இடத்தில் பஞ்சு நிறைந்திருக்கக்கண்டு இது என்னென்று வினவ, தாசர், பிருகு என்னும் பிராமணன் காலுதைப்பட்ட பகவானுடைய ஸ்ரீவத்ஸலாஞ்சநம் இது வென்றார். அப்போது அவர்களெல்லாரும் வியந்து, ஜகதீசனே இந்த ரூபமாய் வந்திருக்கிறாரென்று, தாசரைப் பலவாறு புகழ்ந்து, தமதூருக் கழைத்துக்கொண்டுபோய், இவர் செய்யும் ஹரிகதா காலக்ஷேபத்தைக் கேட்டு ஆநந்தித்துக்கொண் டிருந்தார்கள். இப்படி யிருக்குங் காலத்தில், ஒரு குடியானவன் ஒருநாள் ஒரு குதிரைமேலேறி உறங்கிக்கொண்டே போவதை, பண்டரிபுரத்தி லிருந்து வருகிற ஒரு பாகவதர் கண்டு, இப்படித் தூங்கிக் கொண்டு போகிறதற்குக் காரணமென்ன வென்று கேட்க, குடியானவன், ஸ்வாமீ, தேகு வென்னும் ஊரில் துக்காராமர் என்கிற பரமபாகவதர் ஹரி

கதாகாலக்ஷேபம்செய்கிறார், அக்தக்காலக்ஷேபத்தை ஒருமாதகாலமாகத்தினந் தோறும் இரவில் கண்விழித்திருந்து கேட்டேன், அதனால், அதிக நித்திரை வந்து என்னை மயக்குகின்றது என்றான். அதைக் கேட்ட பாகவதர், அப்படிப்பட்ட பரம பாகவதர் வாழ்கின்ற வூரில் நாம் போய் யாசித்தால், யார் நம்மை மதித்துச் சன்மானிக்கப்போகிறார்கள்? அவருக்கு எதிரே நாம்போவது சூரியனுக் கெதிரே மின்மினி போவதுபோலாகும் என்று அவ்வூருக்குள்ளே பிரவேசிக்காமல், ஊருக்குப் புறமாகப் போனார். இப்படி இவர் போவதைத் துக்காராமர் அறிந்து, விரைந்துபோய் அவரைக் கண்டு தழுவிக்கொண்டார். அவரும் இவரைத் தழுவிக் கொண்டார். பிறகு அந்தப் பாகவதர் துக்காராமரை நோக்கி, ஸ்வாமீ, வையாசி மாசத்தில் என் மகனுக்குக் கலியாணம் செய்ய வெண்ணியிருக்கிறேன், அதற்குப் பொருளுதவிவேண்டும், அந்தச் சுபகாரியத்தைத் தேவரீர் நிறைவேற்றி யருளவேண்டுமென்று ப்ரார்த்திக்க, தாசரும் அப்படியே யாகட்டுமென்று அவரை யழைத்து வந்து, ஒரு விடுதி யமைத்து, நாள்தோறும் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண் டிருக்கும் படி நியமித்தார். அப்படியே அவர் ஒரு மாச கால மிருந்து, பிறகு, என் னூர்க்குப்போக விடைதரவேண்டுமென்றுகேட்க, துக்காராமர் அவ்வூரானை நோக்கி, இந்தச் சாதுவுக்கு நீங்க ளெல்லாரும் கொஞ்சம் பொருளுதவி செய்தால், அவர் பிள்ளைக்கு மணமுடித்து விடுவார், உங்களுக்குப் புண்ணிய முண்டு என்று சொல்ல, அப்படியே அவர்களும் தங்கள் தங்களுக்கு இசைந்த பொருளைக் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த தொகையை நோக்கின பாகவதர், இந்தப் பொருள் பற்றாதென்றார். அப்போது துக்காராமர், வேதியரை நோக்கி, உம்மூராருக்குள்ளே பொருள் கொடாதவர்கள் யார் என்று கேட்க, அவர், ஸ்வாமீ, எல்லாரும் கொடுத்தார்கள், ஒரு பட்டுநூற்காரன் மாத்திரம் கொடுக்கவில்லை யென்றார். அது கேட்ட துக்காராமர், நீர் போய் நான் சொன்னதாகச் சொல்லிக் கேளும் என்றார். அப்படியே அவர் போய்க் கேட்க, அவன் மிகவுங் கோவித்து, நீர் வேலை யில்லாமல் திரிகிறீர், போமென்றான். அதைக் கேட்ட அவன் மனைவியானவள், தன் கணவனை நோக்கி, பரம பாகவதராகிய துக்கா ராமரால் அனுப்பப்பட்ட வேதியரைக் கடிந்து பேசுதல் தகுதி யல்லவென்று சொல்லி, தாகச்செம்பு ஒன்றை யெடுத்துக் கொடுத்தனுப்பினாள். அதை அவர் துக்காராமருக் கெதிரே கொண்டுவந்து வைத்தார். அதைத் துக்காராமர் கையா லெடுத்து, பட்டு நூற்காரன் பொற்செம்பு கொடுத்தான் என்றார். அதைக் கேட்ட வேதியர், பித்தளைச் செம்பென்றார். தாசர், நெருப்புக் கொண்டுவரச் செய்து, அந்தச் செம்பை அதிலிட்டுக் காய்ச்சி யெடுத்து அந்தணர்கையிற் கொடுத்தார். அது பொன்னாயிருக்கக் கண்டு அவ்வேதியர் முதலான எல்லாரும் வியந்து கொண்டாடினார்கள்! துக்காராமரும் அதை ஹரிதாசர் கையிற் கொடுக்க, அவர் வந்தனத்தோடு ஏற்றுக்கொண்டு தமதூருக்குப் போய் விட்டார். தாசரும அவ்வூராரிடத்தில் விடைபெற்று, லோகம் என்னும் ஊருக்குப்போய் ஹரிநாமஸங்கீர்த்தம் செய்துகொண்டிருந்தார்.

இப்படி யிருக்குங் காலத்தில், இவர்க்குப் பின்னின்று பாடுவோராகிய கோடோபா வென்பவர், தாசரை வணங்கி, ஸ்வாமீ, எனக்குத் தீர்த்தயாத்திரைமே லிச்சையுண்டா யிருக்கின்றது, கொஞ்சம் செலவுக்குக் கிருபை செய்யவேண்டு மென்று கேட்க, தாசர் தமது மடித்திலிருந்த ஒரு வராகனை யெடுத்துக் கொடுத்தார். கோடோபா, இது பற்றாதென்று சொல்ல, தாசர் அவரை நோக்கி, ஒவ்வொருநாளும சாதுக்கள் முதலானவர்களுக்கு அமுதளித்து நீயு முண்டு ஒருகாசு மாத்திரம் முன்றானையில் முடிந்து வைத்துக் கொண்டு, உனக்கு வேண்டியபோ தெல்லாம அந்த முடிச்சையவிழ்த்துப் பார்த்தால் அந்த ஒரு வராகன் அப்படியே யிருக்கும, அதை மாற்றிச் செலவு செய்து ஒரு காசு முடிந்து கொள்ளக்கடவாய், இப்படியே தினந்தோறும் செய்து, தீர்த்த யாத்திரை செய்து வந்தபிறகு, நான் கொடுத்த வராகனை என்னிடத்தில் கொடுத்து விடும் என்றார். அப்படியே செய்கிறேனென்று, கோடோபா, தன் வீட்டுக்குப் போய், அந்த வராகனைமாற்றிச் செலவு செய்து, சாதுக்களுக்கு அநாம இட்டுத் தானும உண்டு, ஒரு காசைத் துணியில் முடிந்து வைத்துப் பிறகு அவிழ்த்துப் பார்த்து, வராகனிருக்கக் கண்டு அதிசயித்துத் துக்காராமரிடத்தில் வந்து, தேயரீர் சொன்னது உண்மையே யென்று புகழ்ந்தார். அப்போது தாசர், மூன்று அபங்கக் கவிகள்பாடிக் கோடோபாவின் கையிற்கொடுத்து, இந்த மூன்றில் ஒன்றைக் காசி விசுவநாதருக்கும், ஒன்றைக் கங்காதேவிக்கும், ஒன்றைத் திருமாலுக்கும் சமர்ப்பித்துவாரும் என்று நியமிக்க, கோடோபாவும அப்படியே புறப்பட்டு, முன்னே காசிக்குப்போய்க் கங்கையில் நீராடி, துக்காராமர் உனக்கு இந்தக் கவியைத் தரும்படி நியமித்தார் என்று சொல்லுதலும, கங்காதேவியின் கையானது வெளிப்பட்டு, அந்தக் கவி யெழுதப்பட்டிருந்த பத்திரத்தை யேற்று நீரி லழுந்தி விட்டது. பிறகு விசுவநாதர்க்கு எதிரே நின்று கவி பாடுதலும் பெருமான் மகிழ்ந்து தலை யசைத்தார். பிறகு கயைக்குப் போய்த் திருமாலுக்கு ஒரு கவியைச் சமர்ப்பித்து மற்றத் தீர்த்தயாத்திரை முழுதுஞ் செய்து மீண்டு வருமபோது, இந்த வராகனை நாம வைத்துக் கொள்வோமென் றெண்ணிக்கொண்டே வந்து, துக்காராமரை வணங்கி நின்றார். தாசர் அவரை நோக்கி, நாம் கொடுத்த வராகன் எங்கே யென்று கேட்க, கோடோபா, அது கை தப்பிப் போயிற் றென்றார். தாசர் நகைத்து, அப்படியானால் போகட்டுமென்று சொல்லிச் சும்மா இருந்து விட்டார். பிறகு கோடோபா, வீட்டுக்கு வந்து முன்றானையி லிருந்த முடியை யவிழ்த்துப் பார்த்து, வராகனைக் காணுமல், நான் சொன்ன பொய் எனக்கே பலித்ததென்றும், குருத்ரோஹம் செய்த பாவம் உண்டானதே யன்றி, குடும்ப ஸம்ரக்ஷணத்துக்கும் பங்கம் வந்ததேயென்றும் மனம் வருந்தினர்.

பிறகு ஒருநாள், துக்காராமர் காலக்ஷேபஞ் செய்யுஞ் சமயத்தில், இவர் மனம் பகவானுடைய திருவுருவத்தில் பதிந்திருந்ததனுலும், கதை கேட்போரெல்லாரும் மெய்மறந் திருந்ததனுலும், விளக்கைத் தூண்டுவோரில்லாமல்

ஒளி மழுங்கி இருள் பரவிற்று. அப்போது தாசரது திருமேனியொளியானது இருளை நீக்கி விளங்கிற்று. விடியற் காலத்தில் பகவானுக்கு ஹாரதி சமர்ப்பித்த பிறகு, அந்த ஒளியானது இவர் திருமேனியில் வந்தடங்கினதை யாவரும் கண்டு, இவர் திருமேனி முழுதும் ஒளிப்பிழம்பேயென்று வியந்தார்கள்!

பிறகு துக்காராமர் தமதூருக்கு வந்து, பகவானை வணங்கி, ஸ்வாமீ! அடியேனிடத்தில் சில மகிமைகள் விளங்கச் செய்து, எல்லாரும் அன்போடு உண்பிக்கும் உணவையுண்டு, உறக்கம் முதலியவற்றால் மயங்குகின்ற அடியேன், உன் ஸ்ரீபாதகமலங்களை மறக்கக்கூடுமென்று அஞ்சுகிறேன், ஆதலால் என் வினையை யொழித்து உன் திருவடியை யடையும்படி கிருபை செய்யவேண்டுமென்றார். அப்போது விட்டலபகவான் கரைந்து, நீ விசனம் வேண்டாம், உன் விருப்பத்தின்படி செய்கிறேனென்றார். அதின் பின்பு தாசர் ஞானதேவர் இருக்கும் இடத்துக்குப்போய், அவரைத் தாழ்ந்து வணங்கி, தோத்திரம் செய்து, நிஷ்டையி லிருக்கலாமென்று வரும்போது, வழியிலிருந்த பறவைகளெல்லாம் இவரைக் கண்டு வெருண்டோட, இவர் அவ்விடத்தில் நின்று, நான் இவைகளுக்கு ஒரு தீமையுஞ் செய்யாதவனாயிருக்க, இவைகள் என்னைக் கண்டு ஓடுவதைப் பார்த்தால் என்னிடத்தில் நல்ல எண்ணமில்லை யென்பது விளங்குகின்றது; ஆதலால், எனக்கு நல்ல எண்ணமும், இவை யென்னைக் கண்டு அஞ்சாமையும் உண்டாகிற வரைக்கும் இங்கே நிற்பேனென்று, பாண்டுரங்கனை ஸ்மரித்துக்கொண்டு நான்கு நாழிகை நேரம் அசைவற நின்றார். பிறகும், விட்டலபகவானவர் மனங்கனிந்து, இவரிடத்தில் எல்லா வுயிர்களும் அன்பாயிருக்கும்படி திருவுளம் பற்றினார். உடனே, முன்பு இவரைக் கண்டு வெருண்டோடின பறவைகளெல்லாம் வந்து, இவர் தோளின்மேலும் தலையின்மேலும் நிறைய வுட்கார்ந்தன. அப்போது இவர் அசைந்து நடக்கத் தொடங்கினார். அப்போது பறவைகளோடாமல் நிற்பயமாயிருப்பதை நோக்கி, தாசர், இப்போதுதான் எனக்குச் சம்பூர்த்தி யுண்டாகும்படி பகவான் கிருபை செய்தார் என்று மகிழ்ந்து, ஞானதேவர் சந்நிதியை யடைந்து தோத்திரம் செய்துகொண்டிருந்தார். இப்படி யிருக்குங் காலத்தில், இவர்க்குப் பின்னே நின்று பாடவும், தாளம் போடவும், வீணை வாசிக்கவும், மிருதங்கம் வாசிக்கவும் விரும்பி, நான்கு பேர் வந்து இவரைக் கண்டு, இவர் உடம்பு முழுதும் பறவைகள் நிறைந்திருப்பதைக் கண்டு, வியந்து, இவர்க்குப் பின்னிருந்து பாடுதல் முதலியவற்றைச் செய்துகொண்டிருந்தார்கள்; பிறகு தாசர் மங்களாரதி சமர்ப்பித்து, ஞானதேவரை வணங்கி விடைபெற்றுத் தேகுவுக்குப் போய், ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார்; இப்படி யிருக்கும்போது, இவரது வைபவங்களெல்லாம் பலராலும் கேள்விப்பட்ட சிருசுவடி யென்னும் ஊரிலுள்ளார் இவரைத் தமதூருக்கு வரவழைக்க நினைத்து, ஒரு ஆளை யிவரிடத்துக் கனுப்பினார்கள். அவன் இவரிடத்துக்கு வந்து இவர் செய்யும் காலக்ஷேபத்தி லீடுபட்டு, இவ்விடத்திலேயே தங்கியிருந்துவிட்டான். அது

ப்பின அந்தணர்கள் மூன்று நாள் வரைக்கும் இவன் வாராமையைப் பற்றித் தாமே புறப்பட்டுத் தேகுவி னெல்லையை யடைந்தார்கள். இவர்கள் வரவை யறிந்த தாசர், தாம் எதிர்கொண்டு போய், வேதியரைத் தரிசிக்க வேண்டு மென்றெண்ணி, வேதியர் வரும் வழியில் போய் நிற்க, அவர்கள் வந்து, இவருடம்பு முழுதும் பறவைகளால் நிறைந்திருப்பதைக் கண்டு, இது அதிசயமென்று சொல்லிக்கொண்டு சமீபத்தில் வருதலும், இவர் அவர்களை வணங்கினர். அவர்களும் இவரை வணங்கித் தழுவிக்கொண்டார்கள். பிறகு இவரைத் தமது ஊருக்கு அழைத்துக்கொண்டு போய் உபசரித்து மூன்று நாள் இவரைக் கொண்டு ஹரி கதை செய்வித்து ஆநந்தித் திருந்தார்கள்! பிறகு தாசரானவர் விடை பெற்றுத் தமதூரை யடைந்து, விட்டலப்பெருமானை வணங்கி, ஓ பகவானே! கலி மாஹாத்ம்யத்தால் உலகத்தில் பாவமும் பொய்யும் அதிகரித்தன. ஆதலால் அடியேனை இந்த லீலா விபூதியில் வைக்காமல் நித்திய விபூதியாகிய பரமபதத்தில எழுந்தருளியிருக்கிற உன் திருவடியை யடையும்படி கருணை செய்ய வேண்டும் என்று ப்ரார்த்தித்து வணங்கினர். அப்போது விட்டலப் பெருமான், துக்காராமா! நீ அவசரப்பட வேண்டாம், நாளை சோமவாரம் காலையில் உன் அபீஷ்டத்தை நிறைவேற்றுகிறேன் என்று சொல்ல, பிராட்டியார், பகவானை நோக்கி, ஸ்வாமீ! இந்திராயணி நதிக்கரையில் உனது பரமபதத்துக்கு நிகராக ஒரு வீடமைத்து, அவ்விடத்தில் உன் அடியா ரெல்லாரையும் வரவழைத்து, அவர்களோடு இந்தத் துக்காராமருக்கும் இனிய வுணவை யுண்பித்து, பிறகு இவனை உன்பதத்தில் சேர்க்கவேண்டும், இது என் விருப்பம என்றார். அதைக் கேட்ட பகவானும் அப்படியே யாகட்டுமென்று, விசுவகர்மனை யழைத்து, இந்த இந்திராயணி நதிக்கரையில், பரமபதத்துக்கு நிகராக ஒரு வீட்டை யமைக்கக் கடவாயென்று நியமிக்க, அவனும் அப்படியே யமைத்துத்தர, உடனே நித்யர், முக்தர், வித்தியாதரர், நாரதர், சநகர், சுகர், உத்தவர், அமபரீடர், ப்ரஹ்லாதர், அக்ரூரர் முதலானவர் யாவரும் வந்து அவ்விடத்தில் சேர்ந்தார்கள். அப்போது விட்டலன், துக்காராமர், மற்றும் வந்தவர்கள் ஆகிய எல்லாருக்கும் பெரிய பிராட்டியார் தமது திருக்கரத்தால் உணவு பரிமாறினர். இதைக்கண்ட தேவராஜன் முதலானவர் புஷ்ப மாரி பொழிந்தார்கள். அன்றியும் இந்தத் துக்காராமர்போலப் பரமபாகவதர் எங்குங் கண்டதில்லை யென்று புகழ்ந்தார்கள். விட்டலன் முதலானோர் உண்டு முடிந்த பிறகு, துக்காராமரை ஹரி கதா காலக்ஷேபம்செய்யச் சொல்லி யாவரும் கேட்டு மகிழ்ந்தார்கள். அன்றுமுதலாக (அதாவது, பால்குநசுத்த ஏகாதசிமுதலாக) ப்பௌர்ணமி வரைக்கும் நாள்தோறும் இப்படியே ஐந்துநாளும் நடத்தி முடிந்தபின்பு, அடுத்த பிரதமையில், மாலைக் காலத்தில், விட்டலப் பெருமானானவர் அன்போடு துக்காராமரை நோக்கி, ஓ துக்காராமா! நீ இன்றிராமுழுதும் ஸங்கீர்த்தநம்செய்து கொண்டிருந்து, சூரியோதயத்தில், இந்தச் சரீரத்தோடும் வைகுந்தத்தை யடையக்கடவாய் என்று சொல்லித் தழுவிக்கொண்டார். துக்காராமரும்

விட்டலப் பெருமானை வணங்கி, இரா முழுதும் கீர்த்தனம் பாடிக்கொண்டிருந்து, சூரியோதயத்தில் பகவானுக்கு மங்களாரதி சமர்ப்பித்து நிற்கையில் பெருமானானவர் இவரை நோக்கி, நீ இந்த வுலகத்தில் தோன்றி அநேகம் ஆத்மாக்களைத் திருத்தி என்னடியார்களாக்கினதுமன்றி, என்னையே யிடையறாமல் பஜித்துக்கொண்டிருந்தாய், உன்புண்ணிய விசேஷத்தால் விமானம் வந்திருக்கின்றது, அதில் ஏறி வைகுந்தத்தை யடையக்கடவாயென்று நியமிக்க, துக்காராமர் பகவானை வணங்கி, அறிவிலியாகிய தமது மனையாளுக்குத் தாம் முன்னே சொல்லியிருந்தபடியே தம்மோடு வைகுந்த மடையும்படி ஒரு ஆளிடத்தில் சொல்லியனுப்பினார். அதைக் கேட்ட ஜிஜாயியார், நான் இந்தமாதம் கர்ப்பவதியாயிருக்கிறேனே, அன்றியும் கறவையெருமையையும் பிள்ளைகளையும் விட்டு எப்படி வருவேன்? இந்தச் சமயம் நான் வரமாட்டேனென்று வந்த ஆளிடத்தில் சொல்லியனுப்ப, அவன் போய்த் தாசரிடத்தில் சொன்னான். அதைக்கேட்ட தாசர் தமது மனைவியாருடைய விதியை நினைந்து, சற்று மனம் வருந்தி, பிறகு தெளிவடைந்து, தம்மைச் சூழ்ந்திருந்த அடியாரெல்லாரையும் நோக்கி, நீங்கள் உங்களுடைய குடும்பங்களிலிருந்துகொண்டே, எப்பொழுதும் விட்டலப்பெருமானைப் பஜித்துக்கொண்டிருப்பீர்களானால், இந்தக் கலிதோஷம் உங்களைத் தொடர்ந்து வருத்தாது, இம்மையில் நல்ல சுகபோகங்களை யனுபவித்து, மறுமையில் நித்தியமாகிய வைகுந்த பதவியையும் அடைவீர்கள் என்று சொல்லி, அங்கிருந்த பெரியோரெல்லாருக்கும் வந்தனம்செய்து, மற்ற ஜனங்களுக்கு மங்களாசாசனம்செய்து, எல்லாரிடத்திலும் விடை பெற்று வெளியே வந்தார். அப்போது அங்கே யிருந்தவரெல்லாரும் கண்ணீர் பெருக்கி, இவரைப் பிரிந்து நாம் வாழ்ந்திருப்பதைப் பார்க்கிலும் இறப்பதே நன்மையென்றும், இல்வாழ்க்கையை விட்டு நீங்கிக் காட்டிற் சஞ்சரிப்போமென்றும், இவர் செய்யும் ஹரிகதையை இனி யெக்காலத்தில் கேட்கப்போகிறோமென்றும், இவரை இனி யெப்போது தரிசிக்கப் போகிறோமென்றும் பலவாறு பேசிக்கொண்டார்கள். அதின் பிறகு துக்காராமர் இந்திராயணி நதிக்கரையில் போய் நின்று, இருபத்தேழு கவிகளைச் சொல்ல, ஆகாசவீதியில் ஒளியுருவாகிய ஒரு விமானம் காணப்பட்டது. அதனோடு நித்திய முக்தர்களும் பிரமாதிதேவர்களும் மலர்மாரி பொழிந்து ஜயஜயகோஷம் செய்துகொண்டு வருவதைக் கண்ட துக்காராமர், சக வருஷம் ஆயிரத்தைந்நூற்றெழுபத்தொன்றாவதாகிய விரோதி வருஷம், பங்குனி மாசம், பகுள த்விதியை, சோமவாரம் காலை, நான்கு நாழிகைப் பொழுதில் அந்த விமானத்தின்மேலேறி வைகுந்த லோகத்தை நோக்கிச் செல்வாராயினர். இந்தச் செய்தியை யறிந்த ஜிஜாயியார், வயிற்றி லறைந்துகொண்டு, தன் மக்களோடும் இந்திராயணி நதிக்கரையை யடைந்து, ஆகாயத்தில் விமானத்தின்மேல் தமது கணவர் ஏறிப்போவதைக்கண்டு, இவர் பைத்தியங்கொண்டவர் என்று நினைத்திருந்தேன், அறிவிலிகள் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு நான் கெட்டேன், உண்மையாகவே வைகுந்த பதவியையடைந்தார்,

இவர் நிலைமையை முன்பே அறிந்திருப்பேனானால் இவரோடு கூடவே போவேன், இனி யென் செய்வேன் என்று கதறியழுதாள். இந்தப் பிரகாரமாகச் சூரியன் அஸ்தமிக்கிற வரைக்கும் புலம்பி யழுதுகொண்டிருந்து, பிறகு வீட்டுக்குப் போய்விட்டாள். மற்றவர்களெல்லாரும் அவரவர் வீடுகளை யடைந்தார்கள். அதின் பிறகு, தாசருடைய தம்பியாராகிய கான்ஹையா முதலியோரும், கூடவிருந்து பாடுவோராகிய பதினான்கு பேரும், இவரை யின்னம் ஒருதரம் காணவேண்டுமென்றும், அப்படிக் காணப்பெறாவிடின் இறப்போமென்றும் பேசிக்கொண்டு, மூன்று நாள் அங்கே தங்கியிருந்தார்கள். அப்போது தம்பியார் தமது தமையனாகிய துக்காராமரை நினைத்து, ஒவியென்னும் கவியினாலே துதிக்கும்போது, ஆகாயவீதியில் விமானத்தின்மேலேறிச் செல்லாநின்ற தாசரானவர் தமது திருமேனியின்மீதிருந்த சட்டையையும், கையிலிருந்த தாளத்தையும் பூமியின்மேல் விழத்தினார். அவற்றைக்கண்டவர் யாவரும் வியந்து நமக்கு வேண்டியவற்றைக் கிருபைசெய்தார் என்று பட்டாது அநுமதியைக்கொண்டு, இவர்க்குச் செய்ய வேண்டிய உற்சவாதிகளைக் குறைவற முடித்து மகிழ்ந்திருந்தார்கள். அதின் பிறகு ஐந்துமாதம் கழிந்ததும் ஜிஜாயியார் ஒரு சற்புத்திரனைப் பெற்று, அவனுக்கு நாராயணன் என்று பெயரிட்டு வளர்க்க, அவன் வளர்ந்து பருவம் வாய்ந்தவுடனே, தன் தந்தையாரைப்போலவே தானும் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்யத் தலைப்பட்டான். இப்படியிருக்க, தம்பியாராகிய கான்ஹையாவின் கனவில் துக்காராமர் வந்து உபதேசித்துப் போனார். இதற்கு முன்பு, செந்தூர்வாடி யென்னும் ஊரில் வசிக்கின்றவராகிய, [illegible] என்பவன், ஆசாபாசங்களை நீக்கினவனாய்த் துக்காராமரைச் சேவித்துக்கொண்டிருக்குங்காலத்தில், இவரை நோக்கி என் அந்தியகாலத்தில் உம்மைக் காண விரும்பினேன், எனக்கு இந்த வரம் தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, இவரும் அப்படியே வரம் தந்திருந்தார். அந்தக் கவர்சேட் என்பவனுக்கு இப்பொழுது அந்தியகாலம் நேரிட்டதனால், அவன் துக்காராமரிடத்துக்கு ஆளனுப்பினான். அவன் வந்து பார்த்துத் துக்காராமர் இல்லாமையால் அவர் தம்பியாரை யழைக்க, தம்பியாரும், பட்டரும், துக்காராமர் புதல்வனும் முதலானவர்கள், கவர்சேட் என்பவனது வீட்டுக்கு வந்தார்கள். அப்போது துக்காராமரும் தாம் தந்த வரம் பிழைக்காமல் வந்து சேர்ந்தார். இவரைக் கண்டு வணங்கின கவர்சேட்டுக்கு அநுக்ரஹித்து, தம்பி முதலான மூவருக்கும் மங்களாசாஸனம் செய்து நீங்கின பிறகு, மூவரும் [illegible]யடைந்து ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தார்கள். அதின் பிறகு பகிணா, கங்காதரர், நீளோபாகோசாமி என்பவர்களுடைய கனவில் துக்காராம சுவாமிகள் எழுந்தருளி அநுக்ரஹம் செய்தருளினார். இன்னமும் இவ்வுலகத்தில் தம்மை நாடித் துதிப்பவர்களுக்குக் கனவில் தோன்றி அநுக்ரஹித்து வருகின்றார்.

**துக்காராம்சுவாமிகள்சரித்திரம் முற்றிற்று.**

---

## ஸ்ரீ பக்தலீலாம்ருத வசநம்

**முற்றிற்று.**